# ஸ்ரீமத்பாகவதபுராணம்.

புலவர் திலகராகிய

## ஆரியப்பப்புலவர்

அருளிச்செய்தது.



இஃது,

(ம-ா-ா-ஸ்ரீ) இட்டா

## பார்த்தசாரதிநாயுடவர்கள்

வேண்டுகோளால்

ப்ரபந்த வித்வான் காஞ்சீபுரம்,

## ராமஸ்வாமிநாயுடவர்களால்

செய்யப்பட்ட அரும்பதவுரையோடு

மேற்படியாரது,

ஸ்ரீபத்மநாபவிலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1908.

இதன் விலை ரூபா ௩ ௨.

ஸ்ரீ

ஸ்ரீகிருஷ்ணாயநம:

# கந்தாத்தியாய முறையும்

திருவிருத்தத்தொகையும்.

---

## முதற்கந்தம்.



## உ-ஆங்கந்தம்.



## ங-ஆங்கந்தம்.



## ச-ஆங்கந்தம்.

ஸ்கந்தம்.



## ௧௨ - ஸ்கந்தம்.

    

நன்றாக குருவாழ்க குருவே துணை.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீமத்பாகவதபுராணம்

## முதற்கந்தம்.

சிறப்புப்பாயிரம்

தரவுகொச்சகக்கலிப்பா

சீர்பூத்தபரஞ்சுடராய்ச்சித்தாகிக்கானலிடை
நீர்பூத்தவெனவுலகநிறைந்தொளிர்தன்பாற்றோன்ற
ஏர்பூத்தமுத்தொழிலுமினிதியற்றித்தனிநின்ற
கார்பூத்ததிருமேனிக்கடவுண்மலரடிநினைவாம்.

பரஞ்சுடர் - பேரொளி, சித்து - ஞானம், கானல் - பேய்த்தேர், ஏர் - அழகு, முத்தொழில் - மூன்றுதொழில், அவை சிருஷ்டி ஸ்திதி சம்மாரங்கள். கார்பூத்ததிருமேனி - கரியதிருமேனி (க)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சிந்தகத்துக்கிழைந்ததிருமதுரகவியடிகளிந்நிசையுடன்
சிந்தகத்துப்பேரின்பக்கடல்கோப்பத்திரைப்புணரிதிவலையென்னமூச்சுச்
இந்தகத்துமன்னுயிர்களொருங்குபெருவீடடையநெறிதெருண்டுசூழ்வி
சிந்தகத்துமலமறச்செந்தமிழ்மறைசொல்லியகுருமுனிதாள்சிந்தித்துயவாம்.

சிந்தகம் - புளியமரம், திரை - அலை, புணரி - கடல், சிந்து ... - சிந்து... ாகியபூமி, வீடு - முத்தி, அகத்துமலம் - அஞ்ஞானம் (௨)

...ந்தபொழுதேதுறந்துபிறைக்குழவிபோனடிப்பப்பின்போய்த்தொன்னூல்
...ந்தபுகழ்வியாதமுனியாதரத்தான்மதலாயென்றழைப்பச்செவ்வாய்
...நகைபொழியுன்னவுமலர்ச்செழுந்தருவுமேனெயிர்கள்யாவும்
...ந்துறையுஞ்சுகமுனிவனிணையிதழ்த்தாமரைமலர்த்தாளிணைதல்செய்வாம்

# முதற்கந்தம்.

துறந்து - சங்யசித்து, பிறைக்குழவி - இளம்பிறை, ஆதரம் - அன்பு, நறை தேன், நிரை - வரிசை. (௨)

கலிநிலைத்துறை

சுழித்துநல்லமுதொழுகியஞ்சுகமுகஞ்சேர்ந்து
தழைத்தநான்மறைத்தடஞ்சினைக்கற்பகத்தருவின்
பழுத்துதிர்ந்ததுபாமபாகவதமென்றிசைக்கும்
விழுப்பெருங்கனிநுகர்ச்சியேவிரும்புவார்மேலோர்

சுகம் - கிளி, சினை - கிளை, நுகர்ச்சி - அநுபவம் [௩]

கலிவிருத்தம்

பூமடந்தைபுணர்ந்தவன்மாக்கதை
நாமடந்தைநவின்றனளாகலான்
காமடந்தையென்றோர்கவியான்சொலின்
பாமடந்தையள்பாடியதாகுமே

பூமடந்தை - திருமகள், பூதேவி நாமடந்தை - சரஸ்வதி, பாமடந்தை - சரஸ்வதி.

வேறு

உறைபடுமங்குல்வானுருவவோர்திறம்
சிறைபடுபுள்ளெலாஞ்செல்வதல்லவோ
இறைவனூலறிவினரெடுத்திசைத்தமென்
அறிவினதளவுமேயறைவன்யானுமே

உறை - நீர், மங்குல் - மேகம், வான் - ஆகாயம், சிறை - சிறகு, புள் - பறவை ()

சிறப்புப்பாயிரம்-முற்றிற்று

ஸ்ரீகிருஷ்ணசகாயம்



முதலாவது

## மாயவனமிசாவதாரமுரைத்தவத்தியாயம்.

கலிநிலைத்துறை

தாமரைத்தவிசுறைதருசதுர்மறைக்கிழவன்
நேமியுய்த்தலானைமிசமெனநிலநிகழ்த்தும்
நாமமுற்றநல்வனத்திடைநவில்சவுனகரே
ஆமுதற்றவர்சத்திரவேள்வியாற்றினரால்.

தவிசு - ஆசநம், நேமி, (தர்ப்பையால் செய்யப்பட்ட) சக்கரம். நைமிசவநநைமிசாரணியம், நிலம் - பூமியிலுள்ளார், சத்திரவேள்வி-சத்திரயாகம்.

அரியமாமகம்புரிதருசாலையிலடைந்த
உரியமாதவச்சூதனுக்குயர்தவிசளித்துப்

# மாயவனமிசாவதாரமுரைத்தவத்தியாயம்.

பெரியமாலகதைகேட்குறுபெட்பினராகித்
தெரியுநான்மறையந்தணர்செப்பலுற்றனரால்.

மகம்-யாகம், பெட்பினர்-விருப்பமுடையவர். (உ)

வந்துவெங்கலிவளர்தலிற்றருமங்கடவங்கள்
சிந்தைபுற்றொருகுறைவறச்செய்குவதரிதால்
நந்தலின்றியானந்தமாய்நண்ணியஞானம்
எந்தவாற்றினலிவையிங்கிடுமெனமொழிதிருந்தேம்.

கலி-கலியுகம், கெடுதி. நந்தல் - குறைதல் (௩)

வேதநான்கெனவிதித்தவன்விளம்புறுபுராணம்
ஓதுமொன்பதிற்றிரட்டியுமுணர்தருமுரவோய்
காதலோடுனைக்கண்ணனேகாட்டிடக்கண்டேம்
ஏதநீங்கினேமுத்தியுமெமக்கெளிதாமால்

வேதநான்கென விதித்தவன் - வியாசமுனி. ஒன்பதிற்றிரட்டி-பதினெட்டு, உர
வோய்-அறிவனே, ஏதம் - குற்றம் (௪)

தரையின்மேற்பொறைதவிர்தரத்தண்ணளிசுரந்து
விரியுமன்பினிற்றன்பதம்வேட்டவர்தமக்கும்
பரிவினிற்கொலைபற்றியவுளத்தொடுபகைத்துக்
கருகினோருக்கும்வீடருடன்மைபகருதி.

பொறை-பாரம், தண்ணளி - கருணை, பதம்-திருவடி. (௫)

உலகெலாந்தனதகல்வயிற்றொருபுடைகிடப்ப
கலையரும்புறுகதிர்ளமதியெழில்கவற்றும்
திலகவாணுதற்றேவகிதிருவயிற்றுதித்தோன்
குலவுமாககதைகூறுவாயென்றுகூறினரால்.

ஒருபுடை-ஒருபக்கம், எழில்-அழகு, கவற்றும்-வருத்துகிற. (௬)

முனிவரித்திறமுரைத்தலுமுழுதுணர்சூதன்
அனகன்மாக்கதைகேட்பவுள்ளன்புமிக்கதுதான்
வினையினீங்கியமெய்த்தவப்பயனெனக்குருவைப்
புனிதமாலைநாமடந்தையைப்போற்றினன்புகல்வான்.

அனகன் - பரிசுத்தன். (௭)

அலர்பொலம்பொகுட்டரசுகிதழ்முளரியம்போதில்
குலவுசேயிழைகுவிமுகிழிளமுலைமணந்தோன்
கலையின்மன்னியகலைகளேகனைகடல்வேலி
உலகெலாநிறைந்தவன்றிறமெங்ஙனமுரைக்கேன்.

# முதற்கந்தம்.

பொலம்-பொன்மயமாகிய, பொகுட்டு-கர்ணிகை, அரக்கு-செந்நிறம், போதில்-மலரில், முளரியம்போதில் குலவுசேயிழை - திருமகள், கனை - ஒலிக்கின்ற, வேலி-எல்லை. (௮)

கரைக்குறும்பெறிகனைகடற்றுயிலிறைதொன்னூல்
விரிக்கநாண்மடல்விரிமலரவற்குமற்றரிதால்
தெரிக்கநான்மறைத்திருமுனியருளினுற்சிறிதிங்
குரைப்பலென்றுணர்ந்தமாமுனியெடுத்துரைப்பான்.

கனைகடற்றுயிலிறை-திருமால், மலரவற்கும்-பிரமனுக்கும், திருமுனி-வியாசமுனி.

உரைசெய்வெங்கலியுததியைக்கடந்திடற்கோடம்
பொருவிறன்பதந்தோற்றியகங்கையிற்புனிதம்
தெரிதரச்சொலக்கேட்கநற்றெவிட்டிடாவமுதம்
அரியவெம்பவநோய்க்கருமருந்தரிகதைதான்

உததி - கடல் (௧௦)

புரியம்பாதகம்போகக்கடப்புனிதநீர்படிந்தால்
உரியமாதவருறவுவந்தாற்றிடுமுற்றால்
மருவுவெம்பவந்தீர்ந்திடுமால்கதைகேட்பப்
பெருகுமன்புபின்பிறப்பறுஞானமெய்திடுமால்

புனிதம் - பரிசுத்தம் (௧௧)

மன்னுமாயுளுமதிகளும்புகலொக்கமில்லா
தன்னையோர்முறைசாற்றியதவத்தினர்தமக்கும்
பன்னுசொல்கதைபத்தியிற்கேட்குநர்தமக்கும்
துன்னுவெம்பவந்தீர்த்துவீடருளுவன்றொல்லோன்

மதிகளும்-அறிவுகளும், தொல்லோன்-திருமால் (௧௨)

பவமெலாந்தொலைத்தருள்கதைபத்தியிற்கேளான்
புவியின்மேற்பிறந்தென்பயன்புனிதனற்கதையை
நவிலுநாவினோர்நண்ணியவன்பொடுகேட்கும்
செவியினோர்தவத்தால்வருஞ்சென்மமேசென்மம்.

நவிலும் - சொல்லுகிற. (௧௩)

துளவினன்பதத்தன்பிலராய்நனிதுணிந்தே
அளவிலாதநற்கருமங்களாற்றினுமறிவின்
வளமிலாதவராயுடல்வருந்துநராமக்
கிளரும்வான்கதியடைந்திடக்கிடைப்பதொன்றிலையால்.

துளவினன் - துளவமாலையைத்தரித்த திருமால், ஆற்றினும்-செய்தாலும். (௧௪)

நலத்தினிற்றிகழ்நான்கெனும்வருணவாச்சிரமப்
புலத்தினிற்றமகருமங்கள்பத்தியிற்புரியின்

வலத்தின்மிக்குயர்மாயவன்மகிழ்தரமருவும்
பலத்தைஇச்சியாதாற்றுவோர்பரஞ்சுடராவார

நான்கெனும் வருணவாச்சிரமம் - பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரர் என்னும் நான்குவருணமும், பிரமசரியம், கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என்னும் நான்கு ஆசிரமங்களும் (கரு)

ஆற்றுமோர்வினையுருப்பெயரடைந்திடாவமலன்
சாற்றுதாமதத்தாலரனுருவெனச்சார்ந்தான்
போற்றிராசதத்தாலயன்புரமெனப்பொலிந்தான்
சத்துசாத்துவத்தாலரியுருவெனவியைந்தான்

அமலன்-பரிசுத்தன், புரம்-சரீரம். (கசு)

தாமதத்தனுத்தாவருந்தாவரஞ்சாரந்த
தூமமற்றிராசதத்தனுச்சொல்லுசத்துவத்தின்
ஆமுதற்றனுவாங்கெழுமங்கினியதுதான்
வாமமூர்த்தியைத்தரிசனமாக்கிடும்வகையால.

தனு - சரீரம் (கஎ)

முத்தரானவர்பிரமமொன்றெனத்தனிமொழிவார்
வித்தைசேர்தருமுளத்திடனோர்விராட்டினைநயப்பார்
சுத்தரானவர்பரமவான்மாவெனச்சொல்வார்
பத்தியோர்பகவானெனவேதனிபகர்வார

நயப்பார் - விரும்புவார். (கஅ)

கேடில்வேதமுமகங்களுநலெழுமியதவமும்
நீடியோகமுந்தானமுநிகழ்த்தியகதியுர்
கூடுமாயைபுந்தருமமுங்குலவியவீடும்
நாடுஞானமுநீவிலினாராயணனெனுமால்

மகங்களும் - யாகங்களும் (கக)

பின்னபின்னமாத்தருககளிற்பிறங்கியதழலின்
உன்னுகூத்தினிற்பற்பலவேடமுற்றவரின்
மன்னுமெவ்வுலகத்தினுமருவியேழ்பிறப்பாத்
துன்னுநல்லுருவாகவுந்துலங்குவன்றொல்லோன்.

தழலின் - நெருப்புப்போல, எழ்பிறப்பு-தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன நீர்வாழ்வன, தாவரம். (உ0)

ஆயிரந்தலையாயிரங்கண்மலரணிசேர்
ஆயிரம்புயமாயிரஞ்சேவடிதழைப்ப

ஆயிரந்தலையரவினின்றி துயிலமர்ந்த
ஆயிரம்பெயரிறைகலையளப்பிலவுளவால்.

ஆயிரந்தலையரவு - ஆதிசேடன். (௨௧)

இலகுமேழ்பிறப்பினில்வருசராசரத்தொடும்
உலகெலாந்தனியுதிப்பதுமொழிந்தடங்குவதும்
அலகிலாதவன்பாலலகிலாவவயவமாம்
கலையலாதுவேறலகெனக்காட்டவும்லையால்.

சராசரம் - சஞ்சரிப்பனவும் சஞ்சரியாதனவு மாகிய வுயிர்கள். (௨௨)

உரியமாயையாலுலகெலாம் படைத்திடவுவந்து
விரியுமண்டமாய்விளங்கியவிராட்டெனும்புருடன்
மருவுதன்கலையாற்கவு மாரமாய்வயங்கவ்
வரியராஞ்சனகாதியராயவதரித்தான்.

உவந்து-விரும்பி, கலை-அம்சம் (௨௩)

ஆதியாமவதாரமாப்புருடனையறைவோர்
கோதிலாதவன்கலைவிரண்டேமுதலாக
ஏதங்கவதாரங்களெடுத்தமையினினான்
ஓதுகேனெனச்சூதமாமுனியெடுத்துரைப்பான்.

ஏதம் - குற்றம் (௨௪)

இறைவனனையாமேனமாயிருநிலமெடுத்தான்
மறைசொனாரதனாய்ப்பஞ்சராத்திரம்வகுத்தான்
விறல்செய்மாநரநாரணராய்த்தவம்விரித்தான்
உறையுந்தாய்க்குநற்கபிலனாய்த்தத்துவமுரைத்தான்.

ஏனம் - பன்றி, பஞ்சராத்திரம்-வைஷ்ணவாகமம். (௨௫)

வித்தைசேர்தத்தாத்திரயனாய்விண்ணவர்போற்ற
அத்திரிக்குநன்மகனெனவுதித்தலர்க்கனுக்கும்
புத்தியாலரிதூண்வரப்போற்றுவோன்றனக்கும்
தத்துவந்தெரித்துரைத்தனன்றரணிமேன்முதல்வன்.

தத்தாத்திரயன் - அத்திரிமுனிவனுக்கு அநசூயையினிடத்துத் திருமாலம்ச
மாகப்பிறந்த புதல்வன். அலர்க்கன் - குவலயாசுவன் என்னும் அரசன்மகன். (௨௬)

ஓதுநான்மறைருசியெனவுரைதருமுரவோன்
மாதவத்தினன்மாமகப்புருடனையுதித்தே
ஆதியாகியமனுவினையடைந்தனனுபி
காதலாற்றரவிடபனாய்க்கருதுவீடுற்றான்.

ருசி-ஒரு பிரசாபதி, இவன்மனைவி ஆகூதி, இவன் மகன் யஜ்ஞன்-நாபி, ஆக்நீத்ரன்மகன், இவன்மனைவி மேருதேவி, மகன் இடபன். (உஎ)

பிருதுமன்னவனுகியேபெருவளஞ்சுரப்பக்
கருதுபூமியைக்கறந்தனன்மீனுருவெடுத்தே
மருவுசீர்த்திவைவச்சுதனெனும்பெயர்மனுவாம்
அரசர்கோனைமன்வந்தரத்தடைகெடக்கேடுத்தான்.

பிருதுமன்னவன்-பிருதுசக்கரவர்த்தி, இவன் பூமியைப் பசுவாகவும் மனுவைக் கன்றாகவுஞ் செய்துகொண்டு எல்லாவளங்களையுங் கறந்தான். இவன் சுவாயம்புமனுவின் வமிசத்தான். வேநன்மகன். இவன் மனைவி அர்ச்சி, மக்கள் அந்தர்த்தாநன் தூம்ரகேது முதலியோர், இவன் சநத்குமாரரால் ஞானோபதேசம் செய்யப்பெற்றவன். (உஅ)

அந்தரத்துறையமாருமசுராருங்கடையும்
மந்தரத்தினைமறுகுமவ்வாரிதிமருவிச்
சுந்தரப்பெருங்கமடமாய்முதுகினிற்சுமந்தான்
கந்தரத்தினிற்கவுத்துவங்கவினியகண்ணன்.

அந்தரம் - விண்ணுலகு, மந்தரம்-ஓர்மலை, வாரிதி-கடல், கமடம்-ஆமை, கந்தரம்-கழுத்து, கவுத்துவம்-கௌஸ்துபமணி (உகூ)

மருவுவேலையின்வயங்குதன்வந்திரிபகவான்
உருவமாகிநல்லமுதுறைகடத்தொடுமுதித்தான்
பொருவின்மோகினிவடிவமாய்ப்புத்தமுதத்தை
இருவிசும்பின்வாழிமையவர்க்கீந்தனனிறைவன்

வேலை - கடல், தன்வந்திரிபகவான் - ஆயுர்வேதகர்த்தா, இவன் பாற்கடலைகடையப்பட்டகாலத்தில் அதினின்றும் அமிர்தகலசத்தோடும் பிறந்தவன். அமுதுறைகடம்-அமிர்தகலசம். (௩0)

சனகாதியரேத்துறத்தயங்குதம்பதின்
அனகமாநரமடங்கலாயவதரித்திகலும்
கனகனுகியகடுந்திறலோனெஞ்சுகதழ்ந்த
சினகவாளினன்மாய்தரச்சினந்துடன்கீண்டான்.

தயங்கு-விளங்குகின்ற, தம்பம் - தூண், நரமடங்கல் - நரசிங்கம், கனகன் - இரணியன், சினகவாள் - சில்நகம்வாள், (சிறுநகமாகியவாள்.) (௩௧)

சினக்கும்வாள்வலியவுணர்செய்தீமைசொல்லதிதி
தனக்குவாமனனுகிநற்றனிமுதலுதித்தே
உனக்குநீள்புகழுற்றிடவுவந்துமாவலிநீ
எனக்குமூவடியிடமருளென்றுமுனிரந்தான்.

அதிதி - காசிபன்மனைவி, தக்கன்மகள் [illegible] த்தில் மூவடிமண் யாசிக்கவெடுத்த குறள்வடிவன். (௩௨)

பரசுராமனுய்ப்பாரினிற்றலைமுறையேழுவேழ்
அரசர்மாமுடி துணித்தனன்வியாதனுயிறைவன்
விரவுமாமறைநான்கெனவகுத்தீமேன்முறையால்
உரைசெய்வேதத்தின்முன்மறைபயிலனுக்குரைத்தான்.

பரசுராமன் - ஜமதக்கினி மகன், இவன்தாய் இரேணுகை. பயிலன் - ஓர்இருடி, முன்மறை - இருக்குவேதம் (௧௩)

வழுத்துசீரிரண்டாமறைவைசம்பாயனற்கும்
முழுத்தசாமத்தைச்சயிமினியாமுதல்வற்கும்
தழைத்துமேவுநான்காமறைதனைச்சுமந்துவுக்கும்
தொழுத்தகும்படிபுராணமென்றங்கதனுக்குஞ் சொற்றான்

இரண்டாமறை - யஜுர்வேதம், வைசம்பாயனன் - விசம்பன்என்னும் ஒரிருடி மகன், வியாசமுனி மாணாக்கருளொருவன், இவன்பாரதத்தை ஜநமேஜயனுக்குஉரைத்தவன், சாமம் - சாமவேதம், சயிமினி - வியாசசீடரிலொருவன், நான்காமறை - அதர்வணவேதம், சுமந்து - வியாசசீடரிலொருவன் (௧௪)

அணிசெய்காவுசூழயோத்தியிலிராமனென்றடைந்து
பணிசெய்வானரப்படைகளாற்பரவையையடைத்து
மணிசெய்மாமதிளிலங்கையின்மருவிராவணனைத்
துணிசெய்தான்வந்துபதத்துணைவாம்வாதொழுவோன்

பரவை - கடல், பதத்துணை - இரண்டுதிருவடி. (௧௫)

தெண்ணிலாநகையுரோகிணிதேவகிவயிற்பால்
வண்ணனாகியவிராமனுமலர்ந்தசெங்கமலக்
கண்ணனாகியகண்ணனுமெனவந்துகடல்சூழ்
பெண்ணினீடலைப்பெரும்பொறைதீர்த்தனன்பெரியோன்.

உரோகிணி - வசுதேவன்மனைவி, பலராமன்தாய் - தேவகி. வசுதேவன்மனைவி, ஸ்ரீகிருஷ்ணன்தாய் கடல்சூழ்பெண் - பூமிதேவி. (௧௬)

புனிதன்கீகடதேயத்திற்புத்தனென்றுதித்தும்
துனிசெய்வெங்கலியிறுதியிற்றுரகமாயெழுந்தும்
பனிசெய்தெண்டிரைப்பபாரினிற்பகைஞரைத்துணித்தே
இனிதுநல்லறனிலையினிறுத்துவனினியால்.

கலியிறுதி - கலியுகமுடிவு, துரகம் - குதிரை (கற்கியவதாரம்) (௧௭)

இருபதோடிரண்டெனுமவதாரங்கண்முறையே
மருவுமிங்ஙனமாயவன்கலைகளாலின்னும்
கருதுசீரவதாரங்கள்கணக்கிலையெண்ணின்
அரியவாரிதிமணலினுமநேகமென்றறைவார்.

கலைகள் - அம்சங்கள். (௧௮)

போற்றுதேவர்கண்மனுக்கண்மற்றவரெழிற்புதல்வர்
சாற்றுமாந்தர்கண்மரீசியேமுதலியதவத்தோர்
ஆற்றாநீர்ப்பிறிவெனவவன்கலையினிற்பிரிவாய்த்
தோற்றவாரிதையேத்துவார்தொல்லீனயுறுப்பார்.

ஏத்துவார் - துதிப்பவர். (௩௯)

திருந்துநல்லறிவாயவன்குணத்தொடுசேர்ந்து
வருந்துமுத்தொழிலியற்றுமாமாயையைமணந்தே
இருந்தனன்னெனத்தோன்றினுமிலையுளத்தறிவு
பொருந்திநோக்கின்வெங்கானலிற்புனலெனப்போமால்.

மணத்தல் - கலத்தல் - புனல் - நீர் (௪0)

பற்றுநீக்கியபராசரற்குதித்தநற்பாலன்
கொற்றமால்கதைவகுத்தவன்குமாரனுக்கிசைப்ப
வெற்றிமாதவமைந்தனும்விண்டுராதனுக்குச்
சொற்றவாறியான்சொல்குவன்கேண்மினென்றுரைத்தான்.

பராசரற்குதித்தநற்பாலன் - வியாசமுனிவன், அவன்குமரன் - சுகமுனி. (௪௧)

மாயவனம்சாவதாரமுறைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௪௧

ஸ்ரீகிருஷ்ணசாயம்



இரண்டாவது

## ஸ்ரீநாரதர் தோற்றமுறைத்தவத்தியாயம்.



உரைத்தவாசகங்கேட்டலுமுனிவருவந்து
வரத்தின்மிக்கவவ்வியாதமாமுனிவன்மால்கதையை
விரித்தவாறெவன்காரணம்விளம்பயார்சொன்னார்
அருத்திமாதவசொல்கெனச்சூதனங்கறைவான்,

உவந்து - மகிழ்ந்து, அருத்தி - ஆசை. (௧)

கடல்வயிற்றெழுகற்றைவெண்கதிர்மதிகடுப்ப
நெடுநிலாப்பொழிநிரையிதழ்முளரிவீற்றிருப்பாள்
வடமொழிப்பெயர்வயங்குநல்வளந்திகழ்பேர்யாற்
றடைகரைத்தலைவியாதமாமுனிவரனடைந்தான்.

கடுப்ப - நிகர்க்க, முளரிவீற்றிருப்பாள்-தாமரைமலரில் வீற்றிருப்பவளாகியசரசுவதி, நெடுநிலாப்பொழி நிரையிதழ்முளரி வீற்றிருப்பாள் வடமொழிப்பெயர்-சரசுவதி.

நிலவரைப்பினிலுறைபவர்நெஞ்சகந்தெருளப்
பலவுரைத்தனம்புராணநூல்பாரதந்தெரித்தேம்

மலைவறப்பழமறை வகுத்துரைத்தனமென்னே.
இளகியெம்முளந்தெருடரப்பெற்றிலமின்னும்.

தெருடர - தெளிய. (௩)

வரிச்சுரும்பிமிர்வண்டுழாய்முகில்கதையினிது
விரித்திலேமினிவிளங்கயாம்விரிக்குவமென்றுக்
கருத்திணெண்ணினனிருந்துழிக்கனிந்ததெள்ளமுதைச்
சிரித்தவின்னிசையாழ்முனியவ்வழிச்சேர்ந்தான்.

சுரும்பு - வண்டு, இமிர் - ஒலிக்கின்ற, துழாய்முகில் - திருமால், சிரித்த - பரிகசித்த, யாழ்முனி - நாரதன். (௪)

சேர்ந்தயாழ்முனிசெழுமறைக்கிழவனைநோக்கி
ஆர்ந்தநூல்பலவுரைத்தனையாயினுமன்பால்
ஓர்ந்துமால்கதையுரைத்திலைபோலுமுட்டெளிய
வார்ந்துதெள்ளமுதொழுகமற்றவன்கதைவகுப்பாய்,

மறைக்கிழவன் - வியாசமுனி (௫)

களிக்குமஞ்சிறைவண்டுணக்கலுழியந்தேறல்
துளிக்குந்தாமரைக்கிழவனேடுலகெலாந்தோற்றி
அளிக்குமாயவன்கதையலாலாருணெஞ்சம்
தெளிக்கவல்லதுபிறிதுமொன்றுளதுகொறெரியின்

கலுழி - கலங்கனீர், தேறல் - தேன், தாமரைக்கிழவன் - பிரமன் (௬)

மானதப்பெருந்தடத்தினின்மருவியவன்னம்
கானகச்சிறுகாக்கைசேர்தடங்கருதாதால்
நீனிறச்செழுமுகில்கதைநிகழ்த்திடக்கேட்போர்
ஞானமிக்கவராய்ப்பிறிதொன்றையுநாடார்.

மானதப்பெருந்தடம்-ஒருபெரும்பொய்கை, இதுகைலாசத்தில் குபேரன்வீட்டில் பிரமனல்நிருமிக்கப்பட்டிருப்பது, நீனிறச்செழுமுகில் - திருமால். (௭)

கன்னியந்துழாய்க்கரியவன்கதைகளேயன்றிப்
பின்னைமற்றெருகதையும்வெம்பிறவிநோய்போக்கா
முன்னமால்கதைகேட்டதான்முடிந்ததென்பவநோய்
அன்னவாறுகேளென்முனிநாரதனறைவான்.

பவநோய் - பிறவிநோய். (௮)

## எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வழிந்துமட்டொழுகுமுளரியம்பசுந்தார்வனையுமோர் மறையவன்றனக்குத்
தொழும்புபட்டொழுகுமொருத்திதன்வயிற்றிற்றேன்றிமுற்பிறப்பினில்வளர்நாள்
பொழிந்திடுந்தண்கார்ப்பருவம்வந்திறுக்கப்புகன்றவம்மறைவலான்மனைவாய்த்
தழைந்தெழுமார்வம்வேர்முதறடிந்துதலைப்படுதுறவினரடைந்தார்.

மட்டு - தேன், தார் - மாலை, ஆர்வம் - ஆசை. (௯)

அடைந்திடுமெதிகடமக்கெனையேவலந்தணன்செய்திடப்பணித்தான்
கடந்தவர்மிகவுண்மகிழ்ந்திடும்படிசெய்கருத்தினனேவல்செய்தவர்சேர்
இடந்தனின்மருவிநுகர்ந்திடுசேடமிருந்தவர்சொல்லினுண்டதனால்
தொடர்ந்திடுபாவம்வேரொடுந்தொலையத்துலங்கியதுள்ளமுமாதோ.

எதிகள் - துறவிகள், நுகர்தல் - உண்ணல், சேடம் - மிச்சில் (எச்சில்) இருந்தவர்-பெருந்தவத்தினர். (க0)

சங்கொடுதிகிரிதாங்கியதடக்கைத்தாமரைக்கண்ணினுன்சரிதம்,
அங்கவரமுதமூற்றிருந்தொழுகவறைவதுகேட்டனனதனால்
கங்கைசூழ்கமலத்தாளினற்கன்புகனிந்திட்டவறிவொடுபொலிந்தேன்
பொங்கராததீண்டியின்றவளிறப்பப்பொன்வரைச்சாரல்வாய்ப்புக்கேன்.

திகிரி - சக்கரம், பொன்வரை - மேருமலை. (கக)

தற்பரமாகியமலமாய்நின்றதலைவனைக்காண்குதுமென்று
வெற்பினிற்றவஞ்செய்காலைப்பிறப்பின்விழியெதிர்காண்கிலையெனவோர்
சொற்பெருவிசும்பிலெழுந்ததுவினையாற்றேன்றுமவ்வுடலம்வீழ்ந்திடலும்
நற்பமொன்றொழியக்கண்படைபொருந்துங்கடிமலரவனிடத்துற்றேன்.

வெற்பு — மலை, விசும்பில் - ஆகாயத்தில், கண்படை - நித்திரை, கடி - வாசனை.

உடைக்குமவெண்டரங்கக்கருங்கடன்முகட்டிலுறங்குமவ்வுறக்கம்விட்டரும்பு
வெடித்தபூங்கமலமலர்புரைசெங்கண்விழித்தனன்விழித்துநான்மறைநூல்
வடித்துணர்மரீசியங்கிராவாதிமாமறைகிழவரைமுறையின்
படைத்தனன்படைக்குங்காலையில்யானும்பனிமலரவனிடத்துதித்தேன்.

தரங்கம்—அலை, புரை - நிகர்த்த. (கங)

விளக்கழற்கொழியாவெண்மதிக்ககலாவிரிதிரைக்கருங்கடன்முகட்டின்
முளைத்துயர்பசும்பொன்வரைவலந்திரியுமோட்டுவெங்கதிரவற்கேகா
உளத்திருள்கடியுமாயவன்றென்றாலுமைமறியென்றுபைந்தேறல்
துளக்கறவொழுகியன்னைநதொடையாழ்ததொன்முனிசொற்றனனகன்றான்.

அழல் - நெருப்பு, மதி - சந்திரன், வெங்கதிரவன் - சூரியன், உளத்திருள் - மனவிருள் (அஞ்ஞானம்) சொற்றனன் - சொல்லி. (முற்றெச்சம்.) (கச)

நாரதனகலநான்மறைக்கிழவனகுமணிச்சுடிகைநாகணையான்
பார்பொதிபசுந்தாட்டாமரைபரவிப்பழமறைபொருவுபாகவதம்
தேர்தொறுமமுதமூற்றிருந்தொழுகுதீஞ்சொலாற்றெள்ளிதிற்புனைந்தாங்
கார்வமொடிருந்துமுழுதுணர்சுகன்றனஞ்செவிநிறைத்தனனன்றே.

நகு - விளங்குகின்ற, மணி - மாணிக்கம், சுடிகை - உச்சி, நாகணையான் — சர்ப்பசயனன், பொருவு - நிகர்த்த, தீஞ்சொல் - இன்சொல். (கரு)

ஸ்ரீநாரதர் தோற்றமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆகததிருவிருத்தம்.—கஉ

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.



## மூன்றாவது

## தன்மபுத்திரன் அரசியலடைந்தவத்தியாயம்.

---

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அனையதூஉகேட்டவாறேயரும்பெறற்காட்சியெஃகின்
வினைவனமெறிந்துசாய்த்தவியாதமாமுனிவன்மைந்தன்
பனிமதிக்கவிகைநீழற்படுதிரைவையங்காக்கும்
குனிசிலைவிசயன்மைந்தன்குமரனுக்குரைசெய்தானால்.

எஃகின் - ஆயுதத்தால், எறிந்து - வெட்டி, வியாசமாமுனிவன்மைந்தன் - சுகன், விசயன்மைந்தன் - அபிமந்யன், குமரன் - அபிமந்யன்மகனாகிய பரிக்ஷித்து. (க)

என்னலுமுனிவர்சொல்வார்யாதினும்பற்றொன்றின்றித்
தன்னையேநோக்கிநின்றதபோதனன்றன்மைசாற்றின்
உன்னியவையங்கொள்வானேனர்பசுப்பீர்கொள்காலம்
துன்னுவன்மனைகளன்றித்தொன்னகர்மனையின்வைகான்.

ஐயம் - பிச்சை, பசுப்பீர் - பசும்பால்தாரை. (உ)

மத்தர்போன்மூகரேபோல்வனைதுகிலின்றிஞான
வித்தகனோர்நாட்சென்றான்வியாதமாமுனிபின்செல்ல
அத்திசையரம்பைமாதரணிதுகிலின்றிக்கூலம்
தத்திவெண்டரளஞ்சிந்துதடநதியாடுவாரால்,

துகில் - ஆடை, கூலம் - கரை. (௩)

நீடியநதியிலாடுநேரிழையரம்பைமாதர்
வீடறிசுகனைக்கண்டுமெய்த்துகில்வனைந்திலாராய்
நாடிநான்மறைகள்சொற்றநற்றவவியாதனைக்கண்
டோடினர்கரைசென்றுற்றுடுத்தனர்நாணித்தானை,

வனைந்திலாராய் — உடுக்காமல், தானை - ஆடை. (௪)

வரம்பிலாமறையைநான்காய்வகுத்தவன்வனப்புவாய்ந்த
அரம்பையர்தம்மைநோக்கியனைக்கொருதுகிலிலாதான்
நிரம்பியவறிவன்சென்றுநீங்கியபின்னர்யாழின்
நரம்பைவெல்சொல்லீர்சொன்மினற்றுகிலுடுத்ததென்றான்.

வனப்பு - அழகு. (௫)

ஏடலர்கூந்தன்மாதரிசைத்தவம்முனியைநோக்கி
ஆடவரிவர்கண்மற்றையரிவையரிவர்களென்ன

நாடுதனினக்குண்டாந்தநற்றவன்றனக்கதில்லை
பீடுசான்முனிவவென்றேபேசினாரகன்றுபோனார்.

ஏடு - பூவிதழ், ஆடவர் - புருடர், அரிவையர் – மாதர், பீடுசால் – பெருமைநிறைந்த. (சு)

இவ்வண்ணமறிவுதானேயிலங்கியசுகன்றான்யாண்டு
மைவண்ணத்தடக்கையானைமருவினன்கண்டுசொன்னான்
கைவண்ணக்களிற்றான்கேட்டதென்னைகொல்கருதியென்றா
ஐவண்ணப்புலன்செற்றோருக்கன்மொழிசுகன்சொல்லும்.

யாண்டு – எவ்விடத்தில், மைவண்ணத்தடக்கையான் - பரிக்ஷிந்நரேந்திரன், கைவண்ணக்களிற்றான் - அரசன், ஐவண்ணப்புலன்செற்றோர் - ஐம்புலன்களை வென்றவர். (எ)

துன்னுவாளரவுதீண்டித்தொலைந்திடவுயிர்தானென்று
முன்னமோர்மறையோன்மைந்தன்மொழிதருசாபமேவி
மன்னவன்வெறுத்தியாவுமவரநதிக்கரையினுற்றான்
அன்னவன்றன்னையங்கேயருந்தவன்கண்டுசொன்னான்.

வரநதி - கங்காநதி. (அ)

என்றலும்பரவைசூழ்ந்தவிருநிலங்காக்குமேந்தல்
ஒன்றியசெல்வமெல்லாமுடலெலாம்வெறுத்தானென்றாய்
நன்றவன்செய்தியெல்லாநவிலுதியென்றுமோகம்
வென்றவர்கூறச்சூதன்விழுந்தவர்க்கியம்பலுற்றான்.

பரவை - கடல், ஏந்தல் - அரசன், விழுத்தவர் - பெருந்தவத்தினர். (கூ)

கருமுகிற்குலஙகள்பெய்யக்கடையுகக்கடனீர்வான்போய்ப்
பெருகுதல்போலவந்தபெய்முகிற்குலஙகளாகக்
குருகுலத்தரசர்சேனைக்குரைகடலிகலித்தம்முள்
பொருதுடைந்தரசவெள்ளம்பொன்றுலகடைந்தபின்னர்,

கடையுகம் – யுகாந்தம், குரை – ஒலிக்கின்ற, இகலி - பகைத்து, பொருது - போரிட்டு. (கo)

வேறு

காற்றின்மாமகன்கடுங்கதைப்புடைப்பிறைற்கவின்பெறுகவானற்றுச்
சீற்றவாளராவுயரியமன்னவன்செருக்களத்திடைவீழப்
பாற்றினஞ்சுழல்பரிதிவேற்றுருபதன்பாவைபாலகரைவர்
மாற்றருந்துயில்புரிவுழிமுருக்கினன்வன்றிறற்பரித்தாமா.

காற்றின்மாமகன் - வீமன், கவின் - அழகு, கவான் - தொடை, அராவுயரியமன்னவன் - துரியோதனன், செருக்களம் - போர்க்களம், பாற்றினம் - பருந்தின்கூட்டம், பரிதி - ஒளி, துருபதன்பாவை - துரௌபதி, பாலகரைவர் - இளம்பஞ்சபாண்டவர், பரித்தாமா - அசுவத்தாமா. (கக)

மஞ்சர்மாய்தலுமஞ்சகங்கீண்டெழுமலர்கதிர்த்தடித்தன்ன
அஞ்சொலாயிழையழுதலுமழற்கநின்னரும்பெறன்மகாரவி
துஞ்சவாளுறைகழித்தவன்கருந்தலைதுணிக்குவன்யானென்னாச்
செஞ்சிலைத்தழும்பிருந்ததோட்டனஞ்சயன்றேரிவர்ந்தனன்சென்றான்.

மஞ்சர் - மைந்தர், மஞ்சகம் - மேகத்தினிடம், தடித்து - மின்னல், அழற்க, அழாதே, துணிக்குவன் - வெட்டுவேன், இவர்ந்தனன் - ஏறி. (முற்றெச்சம்.) (கஉ)

கண்ணன்றன்னொடுகட்கடைசிவந்தனன்கனன்றெழுகாண்டீவ
வண்ணவார்சிலைத்தனஞ்சயன்வெஞ்சினமடங்கல்போல்வானோக்கி
அண்ணல்வாம்பரிவிரவியபெயரினானஞ்சினனகன்றோடித்
தண்ணந்தாமரைத்தவிசுறைதனிமுதறழற்படைதொடுத்தெய்தான்.

காண்டீவம் - அருச்சுனன்வில், மடங்கல் - சிங்கம், பரிவிரவியபெயரினான் - அசுவத்தாமன், தாமரைத்தவிசுறைதனிமுதறழற்படை - பிரமாஸ்திரம். (கங)

எழொடேழுலகங்களுமெரிதரவெறிதிரைக்கடன்மேய்ந்த
ஊழியாரழல்கடுப்பவெங்கனற்றிரளுமிழ்ந்ததுவரலோடும்
ஆழியான்முகநோக்கினன்வரிமிடற்றஞ்சிறையளிகோடி
சூழுந்தண்டுணர்ச்சோலைவெந்தீயுணத்தொடுசிலைவளைத்தோய்கேள்

கடுப்ப - நிகர்க்க, ஆழியான் - கண்ணபிரான், சோலை - காண்டவவனம். (கச)

பாட்டுவண்டிமிர்மலரினான்படையிதுவிட்டனன்பரித்தாமா
மீட்டலாங்கவனறிகலனீயுமவ்விறற்படைதொடுகென்னாச்
சூட்டராவணைத்துயிலொழிபரம்பொருடுவரிதழ்மலர்விள்ளக்
கோட்டினான்சிலைதொட்டனனயன்படைகுலைந்ததுநிலமாதோ.

மலரினான்படை - பிரமாஸ்திரம், இதழ்மலர்விள்ள - திருவாய்மலர்ந்தருள, அயன்படை - பிரமாஸ்திரம். (கரு)

தொட்டவெங்கணையூழியினுலகெலாஞ்சுட்டவெங்கதிரேபோல்
முட்டிநின்றெதிர்படையொடுபொரவெளிமுகடுதீந்ததுகாணா
விட்டிலங்கியவயன்படையிரண்டையுமீட்டனன்விரைந்தெய்திக்
கட்டினான்மறைக்காளையையாயிரங்கண்ணினான்றருகாளை.

மீட்டனன் - மீட்டுக்கொண்டு, மறைக்காளை - அசுவத்தாமா, ஆயிரங்கண்ணினான்றருகாளை - அருச்சுனன். (கசு)

உருவப்பூணணியுயிர்புரைகாதலருறங்குழியுயிர்மாய்த்த
குருதிவாட்படைக்குரிசிலைக்கொல்லுதிகொல்லுதியெனப்பல்கால்
அரவவெண்டிரைப்பாற்கடன்முகட்டினினம்புயவிழிதுஞ்சும்
கருணைமாகடல்கூறினன்றனஞ்சயன்கருத்தினைத்தெரிகிற்பான்.

காதலர் - பாலகர், குரிசில் - அசுவத்தாமா, கருணைமாகடல்-கண்ணபிரான். (கஎ)

1.7.69

சூட்டுவண்டிமிர்தாரினும்மத்தரையஞ்சினரடைந்தோரைக்
கோட்டினிற்புரிகொடிஞ்சியந்தேரொடுகொல்படையிழந்தோரைத்
தோட்டபூங்குழன்மகளிரைமழவரைத்துயில்புரிகுநர்தம்மை
வீட்டினூர்தமைவீட்டனல்லறனெனவிரித்தனனுரைசெய்தான்.

அஞ்சினர் - அஞ்சி (முற்றெச்சம்) கோடு - மலை, தோட்ட - இதழ்களையுடைய, மழவர் - இளைஞர், வீட்டினூர் - கொன்றவர், வீட்டல் - கொல்லல். (கஅ)

அரவணைத்துயிலஞ்சனப்புயலனைய்னமெடுத்தோத
விரைவிற்கொண்டுபோய்த் துருபதன்மகள்முனம்விடுத்தனனவள்காணு
ஒருவனந்தணனுனக்குவிற்றொழில்புவிவியப்புறவுணர்த்திட்ட
குரவன்காதலன்கொல்லனீவிடுகெனக்குயிலெனக்கரைந்தாளால்.

துருபதன்மகள் - துரௌபதி, காணு - பார்த்து, குரவன்காதலன் - ஆசாரியபுத்திரன். (கக)

இறப்புவந்ததேயின்னெழிற்புதல்வனைக்கென்றிவன்றனையீன்ற
நறைக்கருங்குழனங்கையும்பொருமுதனன்றகொலெனத்தாழ்ந்து
மறுத்தவிர்ந்தொளிர்மதிபுரைதிருநுதன்மடக்கிளிமொழிகூற
அறத்தின்மாமகன்முதலவருவந்தனரழன்றனன்படைவீமன்.

பொருமுதல் — அழுதல், மறு - களங்கம், அறத்தின்மாமகன் - தருமபுத்திரன், அழன்றனன், கோபித்தான். (உ0)

அரிவைசொன்னதுமாசர்தமுள்ளமுமாழியானறிந்தேதான்
பெரியவெம்பிழைமறையவர்செய்திடிற்பிடித்தருஞ்சிகைபோக்கி
உரியசெல்வமாமிருநிதிமுதலியவொழித்துறைதரூர்விட்
டிரியமற்றவர்த்துரத்துதலேயவர்க்கிருங்கொலையெனச்சொன்னான்.

ஆழியான் - கண்ணபிரான், இரிய - ஓட. (உக)

மல்லலைத்ததோண்மாயவனுரைத்ததுமஞ்சரைக்கொன்றானைக்
கொல்வலென்றிதானுரைத்ததும்பிழைப்பறக்கோதில்சீர்க்குருநாடன்
பல்படைத்தொழில்விதியினிற்பயிற்றியபார்ப்பனச்சிறுவன்றன்
எல்லிலங்கியசிகாமணியிருஞ்சிகையீர்ந்துகொண்டனன்மன்றோ.

மல் - சாணூரன் முஷ்டிகனென்னும் மல்லர், பார்ப்பனச் சிறுவன் - வேதியச் சிறுவன். (உஉ)

பதுமைசேர்தருமாயவன்றன்னொடுபாண்டவர்முதலாயோர்
கதிர்செய்மாமதிக்கவின்பெறுதிருமுகக்கருங்குழற்பாஞ்சாலி
புதல்வராதியாய்ப்பொருகளத்திடையுயிர்போன்றினர்தமக்கெல்லாம்
விதியினீமநல்வினைபுரிந்துதகநீள்வினைமுடித்தனர்மாதோ.

பதுமை - திருமகள், ஈமநல்வினை - மயானச்சடங்கு, உதகநீள்வினை — நீர்க்கடன். (உங)

மலர்ந்தசெங்கதிர்மாமணியிழந்தவன்மலர்விழிசிவப்பூர
அலர்ந்ததாமரைப்பொருட்டுறையயன்படையபாண்டவமெனத்தூண்ட
உலங்கலந்ததோளவர்தமுயிர்பிழிந்துண்ணவந்துறல்பாரா
இலங்குமாழியைநோக்கினன்மறைமுதலிரிந்ததப்படைமாதோ.

மணியிழந்தவன் - அசுவத்தாமா, அபாண்டவம் - பாண்டவநாசம், உலம் - திரள் கல், பாரா - பார்த்து, மறைமுதல் - கண்ணபிரான், (உ௪)

மருவளைத்தளிகூட்டுணமலர்ந்ததண்மரைமலரயன்வாளி
அரவிளைத்திடவெகுளிமீக்கொண்டழன்றம்புயமலரோடச்
செருவிளைத்துவேல்பொருவிழிபுத்தரைதிருவயிற்றகஞ்சேர்ந்த
கருவளைத்ததுகனன்றவெம்புகையொடுகனற்றிரளுமிழ்ந்தன்றே.

மரு - வாசனை, அளி - வண்டு, கூட்டுண - கொள்ளைகொண்டுண்ண, மரைமலர்- தாமரைமலர், அர - பாம்பு; செரு - போர், கரு - கருப்பம். (உ௫)

தீத்திகழ்ந்தொளிர்சினப்படைகருவினைச்சேர்தலுந்தெருமந்தாள்
பார்த்தன்றேர்விடுபாமனையடைந்தனள்பங்கயநறும்போது
பூத்தகாவியந்துணைவிழிகலுழ்ந்துநீர்போற்றுவாயெனமாழ்கக்
காத்தளித்தனனருள்சுரந்தலையெறிகமலலோசநன்மாதோ.

தெருமந்தாள் - மயங்கினாள், காவி - நீலோற்பலம், கமலலோசநன் - கமலக்கண்ணன். (உ௬)

வேறு

ஆடெழுவனையதிண்டோளவரைப்புரந்தவண்ணம்
நாடிநானுரைக்கவற்றோநட்பொடுபகையிலாதாய்
ஏடவிழ்கமலக்கண்ணவென்றிருபனைக்கைவேழக்
கோடடியகழ்ந்திட்டானைக்குந்தியங்கேத்தினாளால்.

எழு - தூண், வேழக்கோடு - யானைக்கொம்பு, குந்தி - குந்திதேவி. (உ௭)

தளையவிழலங்கன்மாலைத்தண்குடைத்தருமனோடு
தெளிவுடைமுனிவர்நண்ணத்தெரிகணையணையின்மீதாக்
கிளர்புகழ்க்கங்கைமைந்தன்கிடந்துழியினிதுசென்றான்
அளியிளம்பிறைப்பற்பேழ்வாய்நச்சராவணையான்மன்னோ.

தளை - கட்டு, கணைஅணை - சரதல்பம் (அம்புப்படுக்கை) கங்கைமைந்தன் - காங்கேயன், (பீஷ்மன்) அராவணையான் - கண்ணபிரான். (உ௮)

கடம்பொழிகளிறுகாத்தகருணையங்கமலச்செங்கட்
டடஞ்சிறைக்கலுழப்பாகன்றலைவருந்தோற்றநோக்கி
விடம்பொழிதழல்வாய்வாளிவெவ்வணைக்கிடந்தவீரன்
உடம்பெலாங்குளிர்ந்துசெந்தேனூறவாய்விண்டுகூறும்.

கடம் - மதம், கலுழப்பாகன் - கருடவாகனன். (உ௯)

எழிற்படையெடுக்கிலேனென்றிசைத்தநின்மொழிவிட்டுன்னை
விழுப்படையெடுப்பித்தன்றிவிடுகலனெனயான்சொற்ற
மொழித்திறம்பிழையாவண்ணமுறுகிவெஞ்சினத்தவாழி
அழற்படையெடுத்தாயன்பர்க்களியைநீயெளிதுமன்றே.

ஆழி - திருவாழி (சக்கரம்.) (௩0)

சுரும்புசூழ்தொடையல்சோரச்சுரிகுழல்வீழமார்பின்
விரிந்தபொன்னுத்தரீயம்வீழ்ந்திடவிரைந்துதேர்விட்
டெரிந்தபொற்றிகிரிதாங்கியெறுழ்வலிமடங்கலேறு
கருங்களிறெதிரல்போலென்கண்ணுறல்கண்ணதாமால்.

சுரும்பு - வண்டு, தொடையல் - பூமாலை, திகிரி - சக்கரம், எறுழ்வலி - மிக்க வலி, மடங்கலேறு - ஆண்சிங்கம். (௩க)

எழில்விளையாடுமார்பத்தெழுதியகலவைச்செஞ்சே
றழிதரப்பொடித்தவேர்மாறுடலஞ்சிலைக்கைப்பார்த்தன்
கொழுமணிக்கொடிஞ்சித்திண்டேர்க்குரகதத்தூளிமூழ்கி
ஒழுகுசேருகவோடியுற்றதென்னுள்ளத்தாமால்.

வேர் - வேர்வை, குரகதம் - குதிரை. (௩உ)

சொரிகணைமாரிபாயத்துணிந்தபொற்கவசத்தோடு
மரகதகாந்திகான்றுவயங்குநின்பசுந்தார்மார்பும்
குரகதத்தூளிசேர்ந்துகுழல்விராய்க்குறுவேர்வார்ந்த
முருகவிழ்கமலச்செவ்விமுகமுமென்முகத்ததாமால்.

மாரி - மழை, துணித்த - அறுபட்ட, கான்று - வீசி. (௩௩)

நறைதளந்திகழ்பூமேவுநான்முகன்வழுத்தவெட்டாய்
மறைவளந்திகழுஞ்செய்யமாதவராசராய
நிறைவளந்திகழும்வேலைநெருக்குறுமிராசசூயத்
திறைவளந்திகழ்முற்பூசைக்கேற்றனையென்சொல்கேனே.

நறை - தேன், மணம். இராசசூயம் - ஓர் யாகவிசேடம், முற்பூசை - அக்ரபூஜை.

நச்சராவுச்சிமேயஞாலப்பொறைதீர்ப்பான்வந்
திச்சையாஞ்சூதென்றோதுமெரிசினத்தழலைமூட்டிக்
கச்சமார்களிற்றுவேந்தாங்கடுவனமெரித்தகண்ணு
பச்சைமாலேநின்மாயைபகருதற்கெளியதன்றால்.

நச்சரா - நஞ்சுள்ளபாம்பு, (ஆதிசேடன்) பொறை - பாரம், கச்சம் - யானைக்கழுத்திடுகயிறு. (௩௫)

மூட்டமர்க்களத்தினேற்றுமொய்த்தவென்றமரையெல்லாம்
வீட்டிலனெனமுன்சொற்றவிசயனுள்ளிழுதைநீக்கி

நாட்டினைஞானமுன்னே நானுடலொழிக்குமின்று
காட்டினைநின்பொற்கோலங்கடந்தனன்பிறவிவேலை.

தமர் - சுற்றத்தார், வீட்டிலன் - கொன்றிலன், இழுதை - பொய் (அஞ்ஞானம்.)

அருங்கதிரம்பொனுடையணிதராவந்ததோற்றம்
பொருந்தியமாயையாமீப்போர்வையாற்பொதியலுற்றுத்
திருந்துமேலோரால்வாசுதேவனென்றுரைக்கும்பேர்பெற்
றிருந்ததிவ்வண்ணமென்னுவெனக்குணர்வித்ததாமால்.

அணிதரா-அணிந்து, மீப்போர்வை-மேற்போர்வை, பொதியலுற்று-மூடப்பட்டு.

உண்மையானினக்குநாடினுருவிலையுரைக்கிற்பொய்க்கும்
பெண்மையாமாயையாலேபெருகுநல்லுருவென்றூலும்
திண்மைசேர்நின்னையன்றித்திகழ்சகமின்றேலென்னே
வண்மையால்வழுத்துவார்யார்வழுத்திடப்படுவோர்யாரே.

பொய்க்கும் - பொய்படும், சகம் - உலகம். (௩அ)

என்றிருங்கங்கைமைந்தனியற்றுநற்றவத்திற்றன்முன்
நின்றநம்மிறைவன்கோல நெஞ்சினிற்றெரியநாடி
ஒன்றியகுடம்பைநீத்துஞவங்தெழுபறவைபோல
அன்றுடற்சுமைநீத்தொல்காவழிவில்வீடடைந்தான்மன்னே.

குடம்பை - கூடு (உடம்பு) ஒல்கா - சலிக்காத. (௩௯)

அடைதருவேலைவானோரலர்மழைசொரிந்திட்டார்த்தார்
உடைதிரையுகளுங்கங்கையுயிர்த்தவன்றனக்கீமத்தின்
நடைதருகருமமெல்லாநாடினன்றருமன்செய்தான்
மிடைதருமுனிவர்மாலைமெய்ம்மனநிறுவிப்போனார்.

அலர்மழை - பூமழை, ஈமம் - மயானம். மாலை - கண்ணபிரானை. (௪0)

மலைதருதிணிதோண்மன்னர்மணிமுடிதுகளதாகச்
சிலைகடைகுழைத்தபார்த்தன்செழுமணித்தடந்தேர்ப்பாகன்
பலர்புகழ்தருமன்றன்னைப்பகர்பெருந்தாதைசொல்லால்
அலர்தலையவனிகாப்பவரியணையிருத்தினூல்.

மலைதரு - போர்செய்கிற, துகள் - பொடி, சிலை - வில், கடை - நுனி, குழைத்த - வளைத்த, அரியணை - சிங்காசநம். (௪௧)

### கலிவிருத்தம்.

மண்ணியமணிமுடிமன்னரைச்செகுத்
தெண்ணியவிருப்பொடிமிசைந்துளானலன்
கண்ணனுட்கருத்தினைக்கடக்கவஞ்சியே
நண்ணினனரசியனுமவேலினன்.

மண்ணிய - கழுவின (சாணைபிடித்த) செகுத்து - கொன்று, நாமம் - அச்சம்.

மழைவளஞ்சிறந்திடவளங்கண்மிக்கன
குழைவொடுபிணிகளுங்குலைந்துசாய்ந்தன
விழைவொடுநல்லறம் வேர்படைத்தன
தழைபுகழொடுபுவிதருமன்காக்கவே

குழைவு - மெலிவு, வேர்படைத்தன - வேரூன்றின. (௩௩)

நானிலத்தவர்களுநவையினீங்கினர்
வானகத்தமரருமகிழ்விலோங்கினர்
பானிறமதிக்குடைநிழற்றிப்பார்மகள்
தானுவப்புறப்புகழ்த்தருமன்காக்கவே.

நவை - குற்றம், (துன்பம்) நிழற்றி - நிழலைச்செய்து. (௩௪)

சுடர்தருநிதித்திறைசொரிந்துவாய்தலின்
அடையலரடிதொழவவனிகாத்தனன்
இடியுறழ்படையுடையிளைஞர்தன்னடி
மிடைதரமணிமுடிவேந்தர்வேந்தனே

திறை - இறைப்பொருள், வாய்தல் - முற்றம், அடையலர் - பகைவர், உறழ் - ஒ ந்த, இளைஞர் - தம்பிமார், மிடைதர - நெருங்க. (௩௫)

தன்மபுத்திரன் அரசியலடைந்தவத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—ரௌ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

நான்காவது.

## கண்ணபிரான் துவரையடைந்தவத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

உரவுநீரமுதின்சாயலுத்தரையொளிறுவெள்வேற்
றுருபதன்பாவைகாதற்சுபத்திரைகுந்திதம்மோ
டரசரோரைவர்வேண்டவருமறைமுதல்வன்வேழத்
திருநகர்சிறப்பத்திங்கள்சிலமகிழ்ந்துறைந்தானன்றே.

உத்தரை - விராடன்மகள், ஒளிறு - விளங்குகிற, சுபத்திரை-க்ருஷ்ணன் தங்கை, அருச்சுநன்மனைவி, அபிமந்யன்தாய், வேழத்திருநகர் - அத்திநபுரம். (க)

அரசியலடைந்தவாற்றலடைந்தவெம்மாவியாய
பிரசநாறுருவப்பைந்தார்ப்பெருந்தகைபிரிவானென்று
உரைசெறிபுகழ்சாலைவருளங்குழைந்துருகும்வேலை
முரசொடுமுழவம்விம்மமுகிலெனவெழுந்தான்கண்ணன்.

பிரசம் - தேன், புகழ்சால் - கீர்த்திமிக்க. (உ)

காத்துலகளிக்குங்கற்றைக்கதிர்மதிக்கவிகைபற்றிப்
பார்த்தனன்புடனிழற்றப்பகருமுன்னவன்றனோடு
சாத்தகிதடக்கையேந்திச்சாமரையிரட்டமிக்க
வேத்தவைதொடர்ந்துசெல்லவீதிவாயேகலுற்றான்.

மதிக்கவிகை - சந்திரவட்டக்குடை, பார்த்தன் - அருச்சுனன், சாத்தகி - சத்தியகன்மகன், யுயுதாநன்என்பது இவனுக்குநாமாந்தரம். (௩)

வஞ்சித்துறை.

வண்ணவீதிவாய், நண்ணுநல்லதேர்
கண்ணன்கார்கொலென், றெண்ணவேறினான்.

வண்ணம் - அழகு. கார்கொல், மேகமோ. (௪)

அலகிலானையாள், வலவர்வாசிகள்
இலகுதேர்களேழ், நிலநிறைந்தவே.

அலகில் - அளவில்லாத. வலவர் - பாகர், வாசிகள் - குதிரைகள். (௫)

ஏகன்றேர்த்துகள், மாகமன்னல்பார்
மோகனேகமுன், போகல்போலுமே.

ஏகன் - அத்விதீயன் (ஒப்பற்றவன்) தேர்த்துகள் - தேர்களாலெழும்பொடி, மாகம் - ஆகாயம். (௬)

கோதிறேர்க்கொடி, மீதுமேவன்மால்
பாதபங்கயப், போதுபோலுமே.

கோதிறேர்க்கொடி - குற்றமில்லாதஇரதத்துவசம், பங்கயப்போது - தாமரைமலர். (௭)

வெற்றிமேவியம், பெற்றபேரொலி
பொற்றபூவண்டம், உற்றுடைத்தவே.

வெற்றிமேவியம் - சயபேரிகை. (௮)

வஞ்சிவிருத்தம்.

வெண்டுகிற்பதாகைமேல், கொண்டதேரின்கூம்பினால்
அண்டகோளம்விண்டறல், மண்டிவீழ்தன்மானுமே.

வெண்டுகிற்பதாகை - வெண்கொடியாடை, கூம்பு - சிகரம், விண்டு - வெடித்து, அறல் - நீர், மானும் - நிகர்க்கும், (௯)

காரையொத்தகைக்கிரி, வீரையொத்தவெம்பரி
பாரின்மொய்த்தபைங்கிரிச், சீரையொத்ததேர்களே.

காரை - மேகத்தை, கைக்கிரி - கைம்மலை, (யானை) வீரை - கடல், சீரை-சிறப்பை. (௧0)

தோளையுற்றதூணிவில், வாளையுற்றவாளொடங்
காளியொத்தடைந்தனர், வேளையொத்தவீரரே.

தூணி - அம்புக்கூடு, ஆளி - சிங்கம், வேளை-மன்மதனை. (கக)

சுந்தரத்தனைத்தொழா, அந்தரத்திஞேசையால்
வந்துமொய்த்தவானவர், சிந்திஞர்பொற்றேமலர்.

சுந்தரத்தன்-அழகஞகியகண்ணன், தொழா-தொழுது, மொய்த்த - நெருங்கின.

கண்ணன்செவ்விகண்டுகண், எண்ணினின்னமாயிரம்
நண்ணினன்றுநன்றெஞ, விண்ணின்மன்விளம்பிஞன்.

செவ்வி - அழகு, நண்ணின் - பெற்றால், விண்ணின்மன் - சுவர்க்கலோகத்துக்க ரசஞகிய இந்திரன். (கங)

உற்றுநோக்குழும்பர்நம், வெற்றிவேந்துபோல்விழி
பெற்றிலம்மெனப்பெருஞ், சுற்றமோடுசொல்லுவார்.

உம்பர் - தேவர்கள், (கச)

தண்ணசெய்யதாமரைப், பெண்ணினல்லபேதையர்
வண்ணமாடமன்னியே, கண்ணன்செவ்விகண்டனர்.

தண்ண - குளிர்ச்சியையுடைய, செய்யதாமரைப்பெண் - திருமகள். (கரு)

வீரவாளிதூவவேள், சேருமாழிசெங்கையின்
சோருமாதர்தூவிநின், ஞர்வமோடழுங்குவார்.

வாளி - அம்பு. (கசு)

நாடுநல்லசாளரத், தூடுசெவ்விகண்டுவந்
தாடன்மாரனம்பிஞல், மாடமீதுமாழ்குவார்.

சாளரம் - பலகணி, (சன்னல்) மாழ்குவார் - மயங்குவார்கள். (கஎ)

எண்ணிலாதவேழைமார், கண்ணன்செவ்விகண்களால்
உண்ணவாவியுண்ணுமால், நணுவாடைநாடியே

ஏழைமார் - மாதர், வாடை - வடகாற்று. (கஅ)

குல்லேவேய்ந்தகொண்டலே, மெல்லவந்துவெம்முலே
புல்லியின்றுபோகெனச், சொல்லிநின்றுசோர்குவார்.

குல்லே - திருத்துழாய்மாலே. (கக)

கண்ணகண்ணவெம்மிதழ், உண்ணவாவென்றேதியே
வண்ணமேவுகைவளே, சுண்ணமோடுதூவுவார்.

இதழ் - அதரம். (உ0)

பண்டுவெண்ணெய்பாலொடும், அண்டர்மாதரார்நலம்
உண்டகாரெம்முண்ணிறை, கொண்டதென்றுகூறுவார்.

அண்டர்மாதரார் - இடைப்பெண்கள் (கோவியர்) நலம் - சுகம், உண்ட-அநுபவித்த, கார்-மேகம். (உக)

மஞ்சுபோலும்வண்ணனை, நெஞ்சிலேனுடனேர்கலா
அஞ்சொலாருஞ்சுதை, நஞ்சுபோலநாடுவார்.

மஞ்சு - மேகம், சுதை - அமிர்தம். (உஉ)

நாகமேனடித்தவன், மோகவாரிமூழ்கினோர்
கோகிலங்கள்கூவலால், சோகவாரிதுன்னுவார்

மோகவாரி - மோகக்கடல், கோகிலங்கள்-குயில்கள், சோகவாரி - துன்பக்கடல்.

துன்னியண்டர்தோகைமார், மன்னுகொண்டல்வண்புகழ்
இன்னரம்பின்யாழ்கொடு, பன்னிநின்றுபாடுவார்.

அண்டர் - இடையர், கொண்டல்-மேகம், (கண்ணன்) யாழ்- வீணை. (உச)

ஆணவாவுவானெழில், காணநூறுகோடிகண்
பாணியாற்படைத்திலன், வாணிமன்னுவானென்பார்.

பாணி - கை, வாணிமன் - பிரமன். (உரு)

ஈறிலாவிக்காதலால், கூறமாதர்தேர்கொடு
வேறொர்வீதிமேவினன், மாறிலாதமாயனே.

ஈறு - முடிவு. (உசு)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மாதர்கள்வீதியெய்திமதுவனமதுரையாயிப்
போதணிமார்பன்றன்னுற்பொலிந்ததுசாலவென்பார்
காதல்செய்துவரைநங்கள்கண்ணனுற்சிறந்ததென்பார்
ஓதுமிப்பிறவியங்கேயுதித்திலந்தவத்தானென்பார்.

துவரை - துவாரகை. (உஎ)

மதுகுலத்துடனிலங்கைமன்னவன்மலங்கவென்றோன்
விதுகுலத்தரசர்போற்றவீதிவாய்வருதனோக்கி
எதுகுலமாயதிநின்றேத்துறுகுலங்கட்கெல்லாம்
முதுகுலமாயதிந்தமுதல்வன்வந்ததனுலென்பார்.

விது - சந்திரன். (உஅ)

தெள்ளுதெண்டிரைசுலாம்செழும்புவிமுதலுலோகத்
துள்ளவர்மனங்கடோறுமொழிவிலாதுறைவானன்றே
மெள்ளவெம்முள்ளத்தூடேவிழிவழிபுகுந்துமேவும்
கள்ளனென்றுரைப்பப்புந்திகருதிலசிறிதுமென்பார்.

திரை அலை, இங்குச்சினையாகுபெயராய்க்கடலையுணர்த்திற்று, சுலாம்-சூழ்ந்த.

பொன்னியல்பழுத்துவானிற்பொலிதருமாடவீதி
துன்னியசாதகம்போற்சூழ்ந்துநோக்குநர்கட்கெல்லாம்

கன்னியந்துழாய்மிலைந்தகருமுகில்கடைக்கணோக்கால்
மன்னியகருணைவெள்ளமழைநனிவழங்குமென்பார்.

சாதகம் - ஓர்பறவை. (௩0)

தாமநன்மறுகிற்செல்வான்றாமரைபோலுங்கண்கள்
ஏமமொடுளத்துக்காண்போர்க்கிடரெலாமொழிக்குமென்ப
காமனல்வருந்துன்பத்தைக்காதலோடினிதுகண்ட
வாமமேகலையார்க்கென்னேவளர்க்குதல்புதுமைத்தென்பார்.

மறுகு - வீதி, வாமம் - அழகு, மேகலை - மாதரிடையணியிலொன்று, அதுவெழு கோவையுள்ளது. (௩க)

வண்ணமாமுகில்போல்வீதிவருபவன்றன்னைநோக்கி
எண்ணிடினேழிரண்டாயியம்புபேருலகத்தோடே
தண்ணறுமலரோன்றன்னைத்தந்தினிதளிக்குஞ்செய்ய
கண்ணனிக்கண்ணனேயாங்கருத்துறநாடினென்பார்

ஏழிரண்டாயியம்புபேருலகம் - பதினான்குலோகம் (௩உ)

காட்டுவாரணமுன்சொல்லக்காத்துவெங்கஞ்சன்வாய்தற்
கோட்டுவாரணத்தைக்கொன்றகுரிசிலைவீதிநோக்கி
வேட்டுநாண்மலரிற்றோன்றும்விரிஞ்சனுங்காணவண்ணம்
சூட்டுநாகணையிற்றுஞ்சுந்தோன்றலித்தோன்றலென்பார்.

காட்டுவாரணம் - வனகரி, (கஜேந்திராழ்வான்) கஞ்சன்வாய்தல்கோட்டுவாரணம்- குவலயபாபீடம், விரிஞ்சன் - பிரமன், சூட்டு - உச்சிக்கொண்டை. (௩௩)

கண்ணனைக்கண்கள்கண்டுகளிப்புறககருங்கார்போலும்
வண்ணனைமனங்கணீங்காவண்ணமாய்மகிழ்தலானே
நண்ணியயோகத்தாலிக்கண்ணனைநாடுமேலோர்
எண்ணிலாநந்தமாகியிருப்பதின்றறிந்தேமென்பார்.

வண்ணன் - நிறமுள்ளவன். (௩௪)

சுரும்பிமிர்கூந்தல்சோரத்தொடர்ந்தனளசோதைவீக்க
விரும்பினையுரலோடும்போய்வேரொடுமருதஞ்சாய்த்தாய்
பெரும்பணைதுணித்தாயன்றுபெண்பழிகொள்ளும்வேடன்
கரும்பினைமுறிக்ககில்லாயெனச்சிலர்கழறிச்சோர்வார்.

வீக்க - கட்ட, வேடன் - வேள்தன் - மன்மதனது, கரும்பினை - கருப்புவில்லை.

கலிவிருத்தம்.

தாரமாரிதரப்புலவோரெழுநாள்
காரமாரிவிலக்கினைகண்ணமதன்

போரமாரிமலர்க்கணைபோகவிழி
நீரமாரிநிறுத்திலையென்பர்சிலர்.

கார - மேகத்தின்கண்ணதாகிய, மாரி - மழை. புலவோர் - தேவர், போர - போரின்கண்ணதாகிய, நீரம் - நீர். (௩௬)

பழிகூறவைநின்றுபறிக்குதலும்
கழியாமலளித்தனைகண்ணதுகில்
அழியாமலுவந்துநெகிழ்ந்தறுவை
ஒழியாமலுசந்திலையென்பர்சிலர்.

அவை - சபை, (துரியோதனன் சபை) அறுவை - ஆடை. (௩௭)

வண்ணந்திகழ்வாயமுதூறலுணத்
தண்ணங்கழைவைத்தனைசாருமெமை
உண்ணும்படியுற்றிலையென்றுதினம்
எண்ணும்படிவைத்தனையென்பர்சிலர்.

கழை-மூங்கில் (புள்ளாங்குழல்) (௩௮)

வளையாழினரம்புறழ்சொன்மலராள்
வளையாழிதரித்தணிவாய்விழியால்
வளையாழிவளைந்தவளுக்கெளியேம்
வளையாழிவழங்கலெனென்பர்சிலர்.

உறழ்-ஒத்த, ஆழிவளைந்தவள்-பூமிதேவி, வளை, வளையல், ஆழி-மோதிரம். (௩௯)

விழைவோடுறிவெண்ணெய்நுகர்ந்ததென
உழைமேவியகானழலுண்டனையால்
நிழன்மேவியநித்திலமாலையென்
அழல்போலவமைத்தனையென்பர்சிலர்.

விழைவோடு - விருப்பத்துடன். உழை-மான், கானழல் - காட்டுத்தீ, (தாவாநலம்) நித்திலமாலை - முத்துவடம். (௪0)

கடியாதுகொல்காளியன்வெவ்விடமும்
படிமீதுதவிர்த்தல்செய்பைம்புயலே
விடமாமெனமெல்லியதென்றலினால்
இடர்நீசெயலெவ்வகையென்பர்சிலர்.

படி - பூமி, பைம்புயல் - பசியமேகம் (௪௧)

புள்ளின்பகுவாயதுபோலநனி
விள்ளுங்குயில்வெவ்வியவாய்கிழியாய்
தள்ளுந்தரமானதுதான்மொழியால்
எள்ளுந்தரம்வைத்தனையென்பர்சிலர்.

புள் - கொக்கு, பகு - பிளந்த. (௪௨)

அள்ளித்தழன் முன்னமயின் றதையெம்
உள்ளத்தினினின் றுமுமிழ்ந்தனைகொல்
துள்ளிச்சுடநெஞ்சு துடிக்குமெனை
வள்ளைக்குழைமங்கையர்சொல்வர்சிலர்.

அயின்றதை - உண்டதை. (சரு)

களியோடெதிர்கண்டவர்கண்களை நீ
அளியோடுமறித்தும்விடாயதனுல்
ஒளிசேர்பெயருற்றனைகண்ணனென
எளியேமதறிந்தனமென்பர்சிலர்.

அளி - கிருபை. (கூச)

மன்றற்செழுமாமதுரைப்பதியில்
குன்றத்தனுவீறழிகொற்றவனீ
ஒன்றித்தனுநாணையொழித்திடுதல்
இன்றைக்கரிதோபுகலென்பர்சிலர்.

குன்று - மலைபோன்ற, அத்தனுவீறு - அந்தத்தனுவின் பெருமையை, இத்தனுநாண் - இந்தத்தனுவின் நாணினை. (சரு)

வழியோடொருமங்கையைவாலனின்முன்
ஒழியாவுடலோடுமெடுத்தொழிவாய்
மொழிவேமுயிர்முற்றுமெடுத்தொழிதல்
எழில்சேருமுனக்கெளிதென்பர்சிலர்.

எழில் - அழகு. (சசு)

மைக்கார்நிகர்வோயிடைமாதர்துகில்
அக்காலமகற்றுபயிற்சிகொலோ
புக்கேமணிபொற்றுகில்பார்வையினுல்
இக்காலமகற்றினையென்பர்சிலர்.

மைக்கார் - கரியமேகம், பயிற்சி - பழக்கம் (சஎ)

செவ்வேறுடியதீயவனுகியகன்
றன்றேறுடியெறிந்தனையாசில்விழிக்
கன்றேறுடியோமணியாழிகழன்
மாழியினி ஏறுடவெறிந்தனையென்பர்சிலர்.

தீயவன் - வத்ஸாஸுரன், கன்று - வளையல், ஆழி-மோதிரம். (சஅ)

தகைகொண்டுறுதானவனுருமழல்
உருகின்றடர்சூறையொழித்தனையால்
புகுமெம்முடனெஞ்சுபுழுங்கவழன்
றிகழென்றலொழித்திலையென்பர்சிலர்.

சூறை - சுழற்காற்று, தானவன் - த்ருணுபர்த்தன். (சகூ)

துதிசேர்விசயன் றுயராவகைவெங்
கதிரோனைமறைத்தல்செய் காவலநற்
பதியாகவெம்பாலனையாயெனினும்
மதிபோகமறைத்திலையென்பர்சிலர்.

துயராவகை - துக்கியாதபடி (௫0)

மன்னிப்புலவோர்பொழி மாமலர்சூழ்
உன்னைப்புகழ்வோருனைநேர்வதுமெய்
துன்னிப்பொழிவேள்மலர்சூழ்தலினீ
என்னப்பொலிவேமிவணென்பர்சிலர்.

புலவோர் - தேவர், வேள் - மன்மதன். (௫க)

தேராம்வரைமீதுமெஞ்சிந்தையெனும்
நீரார்மலர்மீதுநெடுங்கணெனும்
ஆரார்கலிமீதுமம்மூவரென
ஏராகவிருந்தனையென்பர்சிலர்.

வரை - மலை, ஆர்கலி - கடல். (௫உ)

மைவண்ணமலாக்குழன்மாதரெலாம்
கைவண்ணமலர்க்கணைகாமன்விலால்
மைவண்ணமனத்தொடுநீடினராய்
இவ்வண்ணமிரங்கிடவேகினனே.

மைவண்ணம்-மேகநிறம். (௫ங)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

தூண்டுவாம்புரவிமேலுந் தூளிமுகில்கடுகிண்டு
நீண்டபொற்கொடித்தேர்மேலுநிழல்பொருகளிற்றின்மேலும்
பாண்டவர்குருநாடெல்லாம்படர்ந்தனர்பரிவிற்புல்லி
மீண்டனர்வாடுநெஞ்சமீள்கிலாத்தொடரமாதோ.

அகடு - வயிறு (நடு) (௫௪)

விண்ணகம்வணக்குமாற்றல்வெந்திறலவுணர்த்தேய்த்துக்
கண்ணகன்ஞாலங்காக்குங்காவலன்றன்னைக்காக்க
அண்ணல்வேற்றருமன்விட்டவாடலந்தானைவெள்ளம்
பண்ணமைபசும்பொற்றிண்டேர்ப்படையொடுநடந்ததே.

வணக்கும் - வணங்கச்செய்கிற, கண்அகல் - இடமகன்ற, அண்ணல்-பெருமை(). (௫௫)

வளங்கொள்பாஞ்சாலநாடுமலர்ப்புனல்யமுனைநாடும்
தெளிந்தவெண்முத்தஞ்சிந்துந்தீம்புனற்சிந்துநாடும்
இளங்களியானைமன்னரெதிர்கொளவிறுத்துமாநீர்
விளிம்படுத்துயரானத்தமெல்லெனச்சென்றுசேர்ந்தான்.

இறுத்து - தங்கி. (௫சு)

அதிர்கடல்வேலிமூதூரணித்தெனக்குறுகியண்ணல்
இதழொளிமுத்தினூடேயெறித்தலிற்செவ்வாயன்ன
மதுவிரிமுளரிசேர்ந்தவண்ணமொத்திலங்குகற்றைக்
கதிர்வளைதுவர்வாய்வைத்துக்கல்லெனமுழக்கினானால்.

குறுகி - கிட்டி, கதிர்வளை - ஒளியுள்ளசங்கு, துவர்வாய் - பவளம்போலும்வாய்.

குடவளைமுழக்கங்கேட்டுக்கொற்றவன்வந்தானென்னாக்
கடலுடைத்தெழுந்ததென்னக்கடாம்பொழிகளிற்றினோடும்
விடுகணைவிசையவாயவெம்பரிவெள்ளமீண்ட
இடிமுரசியம்பவெள்வேல்யாதவரெதிர்சென்றுற்றார்.

என்னா - என்று, கடாம் - மதநீர். (௫௮)

மண்ணவர்க்களப்பில்காலம்வைகுந்தமருவினோருக்
கெண்ணிடிற்கணமாம்போலவெங்களுக்கலப்பில்காலம்
கண்ணநிற்கலந்துவைகிற்கணமரைக்கணமேயேனும்
அண்ணனிற்பிரியினென்னோவாயிரமுகமாமென்றே.

அளப்பில் - அளவில்லாத. (௫௯)

நான்மறையாளர்வாழ்த்தநகுமுடியரசர்தாழ
மீனுயர்கொடியோனாதிவெந்திறற்குமரரெல்லாம்
தானையோடிறைஞ்சாநிற்பத்தாமரைமலரின்வாழும்
தேனவாந்தெரியன்மார்பன்றிருநகர்சென்றுபுக்கான்.

நகும் - பிரகாசிக்கிற, தாழ - வணங்க, தானையோடு - சேனையோடு. (௬0)

கண்ணனைக்கண்ணினாலுங்காதல்செய்மனத்தினாலும்
உண்ணெகிழ்ந்தன்பினாலேயுருகுறமழலைத்தீஞ்சொற்
றண்ணறுங்குமுதவாயாற் சாற்றியகிளவியாலும்
பெண்ணமுதனையநல்லார்பெட்பொடுதழீஇக்கொண்டாரால்

கிளவி - சொல், பெட்பொடு - விருப்பத்துடன். (௬௧)

எழில்வளர்செம்பொன்மார்பனிறைஞ்சியுந்தொழுவார்தம்மைத்
தழுவியுந்தடக்கைதொட்டுந்தண்ணகைமுகிழ்த்துநோக்கி
மொழியினிதுரைத்துஞ்செவ்விமுகமலர்ந்துவகைபொங்கச்
செழுநகர்மாந்தர்க்கெல்லாஞ்செய்தனன்சிறப்புமாதோ.

உவகை - மகிழ்ச்சி. (௬௨)

தந்தைதாடொழுதுதாயர்தளிரடிசென்னிசூடிச்
சிந்தரிமழைக்கட்செவ்வாய்த்தேவியர்திவலைசிந்தி
வந்தெழுகருங்கார்கண்டமடமயிற்குழாத்தின்மொய்ப்பக்
கொந்தழலாழியான்றன்குருமணிக்கோயில்புக்கான்.

சென்னி - தலை, அரி - இரேகை, மழை - குளிர்ச்சி, மடமயில் குழாத்தின் - இளமயிற்கூட்டம்போல, ஆழியான் - சக்கராயுதனாகியகண்ணபிரான், குருமணி - நிறமுள்ளமணி. (௬௩)

பண்ணெனப்பழுத்ததீஞ்சொற்பவளவாய்முளரிப்பாவை
கண்ணெனக்கிடந்தநீலக்கடலினுங்கறங்குதெண்ணீர்
மண்ணகமடந்தைகொங்கைவரையினுமுறைந்தமாயன்
விண்ணெனத்திகழ்ந்துவிண்ணோர்பரவவீற்றிருந்தானன்றே.

முளரிப்பாவை - திருமகள், கறங்கு - ஒலிக்கின்ற, மண்ணகமடந்தை - பூமிப்பிராட்டி. (௬௪)

கண்ணபிரான் துவரையடைந்த அத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் களக.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.



ஐந்தாவது

## பரிட்சித்துவின் றோற்றமுரைத்தவத்தியாயம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

என்னலுமுனிவரிகற்பரித்தாமாவெய்கணையுத்தரைவயிற்றின்
மன்னியகுழவிசெகுக்கலாவண்ணமாயவன்காத்தனனென்றாய்
கன்னியந்துளவோன்காத்ததும்பிறந்துகமலலோசனன்கதைகேட்ட
தன்மையும்புகலவேண்டுமென்றுரைப்பச்சாற்றினன்சூதமாமுனிவன்

செகுக்கலாவண்ணம் - கொல்லாவகை. (௧)

சூழ்தருபொலந்தண்முடியினன்வயிரத்தொடியினனிலகுபொற்றுகிலோன்
தாழ்மணிக்குழையன்கடுங்கதைசுழற்றுந்தாமரைக்கரத்தினனாகி
ஊழிவெந்தீப்போலுத்தரைவயிற்றினுறுகணைகுழவிமேலுறாமல்
ஆழியானங்கோர்பெருவிரலளவையாயதோருருக்கொடுபுரந்தான்.

தொடி - தோள்வளை, கதை - தண்டு, புரந்தான் - காத்தான் (௨)

கலிவிருத்தம்.

பரிவிளிற்றிங்களோர்பத்துஞ்சென்றபின்
குருவிளந்திங்களங்குழவிபோன்மென
உருவளர்குழவியையொசியுநுண்ணிடை
வருமுலையுத்தரைவயிறுவாய்த்தனள்.

திங்கள் - மாதம், சந்திரன். ஒசியும் - துவள்கின்ற, வயிறுவாய்த்தனள் - கருவுயிர்த்தாள். (௩)

போற்றிடுதவுமியன் முதலபுங்கவர்
தோற்றியபுதல்வனைச்சூழ்ந்துநான்மறை
சாற்றியவிதிமுறைச்சாதகல்வினை
ஆற்றினர்புவிமிசையறங்களிப்பவே

தௌமியன்-பாண்டவர்புரோகிதன், சாதகல்வினை - பிறவிச்சடங்கு(ஜாதகர்மம்)

மழைவளஞ்சிறந்திடமலர்ந்தபாரெலாம்
நிழன்மதித்தனிக்குடைநிழற்றுகாவலன்
பொழிவதுபுரிந்தனன்பொருவில்பொன்மழை
முழுமறையந்தணர்முகந்துகொள்ளவே.

பொழிவதுபுரிந்தனன் - பொழிந்தான். (ரு)

தள்ளருங்கொடையினற்சார்ந்தவஞ்சிறைப்
புள்ளினுக்குயர்துலைபுக்கவேந்திவன்
எள்ளலின்பினுலெறிந்ததூணெழு
வள்ளுகிர்மடங்கலைவழுத்துதோன்றலே.

புள்ளினுக்குயர்துலைபுக்கவேந்து - சிபிச்சக்ரவார்த்தி. (சு)

மேதகுதயரதராமன்மெய்ம்மையால்
நீதகல்விசயன்வெஞ்சிலையினுலிவன்
ஏதமில்பொறுமையாலினியபார்மகள்
ஓதியதாபுலகுயிர்புரத்தலான்.

சிலையினல் - வில்வித்தையால். (எ)

காட்கியாலிந்திரன்கநகமீட்டுநல்
மாட்சியால்வடதிசைத்தலைவன்மாதவத்
தாட்சியாலரும்புகழரசமாமுனி
பூட்சியோடுறைமதன்பொற்பினுலிவன்.

வடதிசைத்தலைவன் - குபேரன், பூட்சி - உடம்பு,பொற்பு-அழகு. (அ)

இருபொழுதுந்திகழ்ந்திடைவிடாமலே
மருவிளமதியெனவயங்குசீரினன்
பரதனின்மகன்செயும்பண்பினுனிகல்
செருவிடைப்பகைஞரைச்செகுக்குஞ்சிங்கமே.

இகல் - பகை, செரு - போர். (கூ)

காந்துநீள்விழிக்கலிகடிந்துதிண்புயத்
தேந்துபார்முழுவதுமினிதிறைண்டபின்
சாந்தமாதவரொடுசார்ந்துகங்கையின்
பாந்தளாலுடல்விழப்பரத்தினண்ணுவான்.

பாந்தள் - பாம்பு. (கூo)

கோதகல்கணிதநூல்குறித்தவாறெனு
மாதவராசன்முன்வழங்கியிவ்வகைச்
சாதகமெழுதினர்தாழ்தடக்கைவெம்
போதகமெனவளர்புதல்வற்காங்கரோ.

கோது - குற்றம், போதகம் - யானைக்கன்று. (௧௧)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தீத்திறனுமிழுமிந்தச்சினப்படையடாதுநம்மைக்
காத்துறையிவன்யாரென்றுகருவினிற்கண்ணன்றன்னைப்
பார்த்தலிற்பரிட்சித்தென்றம்பாஞ்சுடர்நல்கலாலே
ஏத்துசீர்விண்டுராதனென்றுநாமமுமுற்றான்.

அடாது - கொல்லாமல். (௧௨)

மறமலிநெடுவேன்மன்னன்மணிக்குறங்கிருந்தும்வீமன்
துறுமலாலங்கன்மாலைத்தோளின்மேற்றவழ்ந்தும்பார்த்தன்
எறிகதிர்ப்பரிதியன்னவேங்தெழிலாரமார்பின்
குறுகுறுநடந்துஞ்செவ்வாய்க்கோமகன்வளர்கின்றானல்.

மறமலி - கோவமிகுந்த, குறங்கு - தொடை. (௧௩)

துள்ளுவாம்புரவியூர்ந்துசுழித்துவெண்முத்தஞ்சிந்தும்
வெள்ளிவெண்டிரையிற்றோன்றும்விரிகதிர்த்திங்கள்காட்டும்
கொள்ளைமாமதத்தநால்வாய்க்குஞ்சரம்வர்ந்துபொற்கோட்
டொள்ளொளிநீலக்குன்றத்துதித்தசெங்கதிரைவெல்லும்.

நால்வாய்க்குஞ்சரம் - தொங்குகிறவாயையுடையயானை. (௧௪)

அலைக்கடற்பவளச்செவ்வாயஞ்சிறையன்னமேபோல்
கலைக்கடல்வடித்துப்பெற்றகாட்சியான்மாரிகாக்க
மலைக்குடையெடுத்துநின்றமௌவலந்தொடையினானே
இலக்கமற்றுயர்ந்தசோதியென்றுணரிளங்கோவேய்க்கும்.

மலைக்குடை - கோவர்த்தநகிரியாகியகுடை, மௌவல் - முல்லை. (௧௫)

நடைநவில்பரிக்குத்தங்கணகுலனைக்கடுக்குங்கூர்வாட்
படையினுக்குலகமெல்லாம்பழிச்சுநற்றாதைநேரும்
உடல்குழைவரிவிலாண்மைக்கோங்கெழில்விசயனொக்கும்
கொடையினுக்கிருள்கால்சீக்குங்கொழுஞ்சுடர்மகனையெள்ளும்.

கடுக்கும் - ஒக்கும், தாதை - தந்தை, சுடர்மகன் - கர்ணன். (௧௬)

முழுவலிக்கெழுகுன்றேடுமுனிந்ததோள்வீமன்மானும்
தழையுநல்லளிக்குத்தண்டார்த்தருமனைப்பொருவுந்தாழா
அழகினுக்கழகுவாய்ந்தவம்புயமடந்தைபுல்லும்
குழகன்முன்னுயிர்த்தசெல்வக்கோவிளங்குமரன்போலும்.

மானும் - ஒக்கும், அம்புயமடந்தை புல்லுங்குழகன் - திருமால், இளங்குமரன்-மன்மதன். (கஎ)

மங்குறேய்பசும்பொற்கோட்டுமால்வரையனைத்துந்தாங்கும்
துங்கவெண்டிரைப்பார்தாமேசுமந்திடப்பணைத்துவீங்கும்
குங்குமக்குவவுத்திண்டோட்குமரனல்வனப்புநோக்கித்
திங்களங்கவிகைமன்னன்செருக்கினன்றருக்கின்மிக்கான்.

மங்குல் - மேகம், கோட்டு - சிகரங்களையுடைய, மால் - பெரிய, பணைத்து-பருத்து, குவவு - திரட்சி, திங்களங்கவிகைமன்னன் - மன்மதன் (கஅ)

கண்ணனையழைத்துக்கண்ணன்காத்திடக்கறங்குதெண்ணீர்
மண்ணகம்புரக்குமாற்றன்மன்னவர்திறைகொடுப்ப
அண்ணலம்புரவிவேள்வியாற்றினனொருமூன்றென்ப
தண்ணளிதளிர்த்துப்பொன்னந்தருவெனத்திகழுநீரான்.

புரக்கும் - காக்கின்ற, புரவிவேள்வி - அசுவமேதம். (கசு)

எண்டிசைகடந்ததோளானியற்றியவேள்விகாத்து
வண்டுகொப்புளித்துமாந்தமதங்கலுழ்களிநல்யானை
ஒண்டிறல்விளங்குகூர்ங்கோடொசித்தவன்விசயனோடு
வெண்டலைப்புணரிவேலிவியனகரெய்திரைனால்.

மாந்த - குடிக்க, கலுழ் - ஒழுகுகின்ற, ஒசித்தவன் - ஒடித்தவன். (உ0)

பரிட்சித்துவின்றேற்ற முரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௱௬௰௧,

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.



ஆறாவது.

## தன்மன்முதலானவர்வீடுபெற்றவத்தியாயம்.

கலிவிருத்தம்.

அறநெறிகெழுமியவறத்தின்காதலன்
நிறைமதிக்குடைபுவிநிழற்றுநாளின்வாய்
விறல்கெழுதவர்புகழ்விதுரன்வீங்குநீர்த்
துறைபலபடிந்தனன்றுளைவிற்றேன்றினன்.

கெழுமிய - அடைந்த, அறத்தின்காதலின் - தருமபுத்திரன், தவர் - தபோதநர், ஏவின்-விரைவாக. (க)

விதுரனைக்குலத்தொடும்வேந்துகைதொழாச்
சதுரநீயெவ்வழிச்சார்ந்துவைகினை
துதிதருமவ்விடனன்றிச்சொல்லிய
கதிதருதீர்த்தந்தான்கருதின்வேறுண்டோ.

வேந்து - தருமன், கைதொழா - கைகுவித்துவணங்கி. (உ)

மேதகுமாயவனோடுமேவிய
யாதவரினிதிருக்குநகொலோவென
ஓதலன்பட்டமையுலகுநாவல்செய்
காதலனெஞ்சகங்கலுழுமென்னவே

பட்டமை - நடந்தசெய்தி. (ங)

வேற்றிறல்விதுரனவ்விழியின்மன்னனைக்
காற்றின்மாமகன்றருகவளமார்ந்துமெய்
போற்றுதியோவெனப்புகன்று நல்லறம்
சாற்றியும்புகுத்தனன்றவவனத்தரோ.

விழியின்மன்னன் - திருதராட்டிரன், காற்றின்மாமகன் - வீமன், கவளம்- பிடியுன்னம், ஆர்ந்து - உண்டு, (ச)

தந்தையைக்காலைபோய்த்தருமன்கண்டிலன்
எந்தைமற்றெவ்வழியேகினானென
அந்தளிரலங்கருழுரசன்மார்பிடைச்
சிந்தினன்கட்புனறெருமந்தானுளம்.

தெருமந்தான் - மயங்கினன். (ரு)

நிலையிலாச்செல்வமேநினைந்துமைந்தரைக்
கொலைபுரிந்தனனெனக்குறித்தென்பாலிரான்
கடிபுனற்கங்கையிற்கவிழ்ந்திட்டான்கொலோ
வலவவென்றனனவன்வலவற்கண்டரோ.

குறித்து - எண்ணி, வலவன் - தேர்ப்பாகன் (சு)

யாங்கிறந்தான்கொலோயானுங்காண்கிலன்
தேங்கமழ்தாரினோயென்றுதேர்விடும்
ஆங்கவனுரைப்பநின்றவலமெய்துழித்
தூங்கிசைநாரதன்றோன்றிச்சொல்லுமால்.

அவலம் - துன்பம். (எ)

கரமிலாப்பசுமுதற்கரங்கள்காலிலா
மரமெலாமுதலதாவரங்களாய்வரும்
புரமெலாநின்றுயிர்போற்றியூட்டுறும்
பரமெலாம்பூண்டவனொருவன்பார்க்கினே.

கரம் - கை, மிருகம். புரம் - சரீரம், பரம்-பரம்பொருள். (அ)

உடையவன் மூக்குறுங்கயிற்றினுய்க்குமேல்
விடையவன் கைவ்வழிமேவுமாறுபோல்
நடைபெறுமுயிர்களோர்நாதனுலென்றால்
படிமிசையொருவருக்கொருவர்பற்றெறவன்.

மூக்குறுங்கயிற்றின் - மூக்காங்கயிற்றினால், விடை - எருது, எவன் - யாது.

இனையனீமன்னன்றனேமைதன்னெடு
வினையறநோற்றநல்விதுரனுய்த்திடப்
பணிவரைச்சாரலிற்படர்ந்து கண்ணிலான்
நினைவருமாதவஞ்செய்யுகின்றனன்.

கண்ணிலான் - திருதராட்டிரன், படர்ந்து - சென்று (௧௦)

ஏகினுங்காண்கிலேயினியொரைந்துநாள்
போகுழிக்காட்டழல்பொத்திமெய்சுடத்
தோகையொடுயர்நெறிதுன்னுமென்றனன்
நாகணையானிசைநவிற்றுநாரதன்.

நாகணையான் - சர்ப்பசயநஞ்செய்த திருமால், உயர்நெறி- வைகுந்தம். (௧௧)

நற்றவனடந்தபினறியபூந்தொடை
வெற்றி . வல்வீமனேநோக்கிவெய்துயிர்த்
தெற்றுவெண்டிரைநிலனேழுமேத்தல்செய்
கொற்றவெண்கவிகையான்கூறலுற்றனன்.

வெய்துயிர்த்து - பெருமூச்செறிந்து. (௧௨)

மழைமதம்புலர்தருமத்தவாரணம்
அழுதரும்வாம்பரியாத்தமாமழை
பொழிதருநெய்பொழிகின்றபொங்கழல்
எழுதருகின்றிலவிடிக்கும்வானமே

மத்தவாரணம் - மதயானை, புலர்தரும் - வற்றும், அழுதரும் - அழும். (௧௩)

மண்ணகமதிர்தருமலைதுளக்குறும்
ஒண்ணிறக்கதிர்புகைந்தூர்வளைப்புறும்
அண்ணலங்கதிர்செய்கோளமர்விளைத்திடும்
கண்ணிடனுடமொற்கலங்குநெஞ்சமே.

துளக்குறும்-அசையும், ஊர்-பரிவேஷம்,கண்ணிடனுடும்-இடக்கண் துடிக்கும்.

ஆழியாற்காணியவாங்குச்சென்றனன்
பாழிசால்விறற்படைப்பார்த்தன்மீண்டிலன்
எழ்மதியிறந்தனவென்செய்தான்கொலோ
சூழ்கலன்விளைந்ததுதோன்றிற்றிலையால்.

ஆழியான் - கண்ணன், காணிய - பார்க்க, பாழி - பெருமை, எழ்மதி-எழுமாதம்,

எனமொழிந்திருந்துழியிறங்குசென்னியன்
பனிவருகண்ணினன்பார்த்தனெய்தினன்
தனிநெடுவெண்குடைத்தரணிகாவலன்
வனைகழற்சேவடிவந்துவீழ்ந்தனன்.

இறங்குசென்னியன் - தாழ்ந்தமுடியுடையான். (௧௭)

அடிமிசைவீழ்ந்தெழுமாடல்வெஞ்சிலைப்
படிபுகழ்பார்த்தனைநோக்கிப்பைம்பொனு
டுடையபுங்கவருமுள்ளுவக்குமெய்ம்மைசேர்
சுடர்விடுகுடுமிவேற்றருமன்சொல்லுவான்.

ஆடல் - வெற்றி, பைம்பொனுடு-சுவர்க்கலோகம், புங்கவர்-தேவர், குடுமி-நுனி.

மேவியதாயினைப்பயந்தவீரனும்
ஆவியின்வருமெழிலநுசர்தம்மொடும்
தேவகிமுதலெழுதேவிமாரொடும்
மாவுறைமார்பனைப்பயந்தமாமனும்.

அநுசர் - தம்பிமார், மா - இலக்குமி. (௧௮)

யாதவர்யாவருமிராமன்றன்னொடு
தாதவிழ்தண்டுழாய்த்தாமமார்பனும்
கோதையங்குடுமிவேற்கொற்றமைந்தரும்
தீதிலரேகொலென்றெடுத்துச்செப்புவான்.

இராமன் - பலராமன், தாமம் - மாலை. (௧௯)

ஒருபொருளொருவருக்குதவன்மாற்றினோர்
பொருவரும்பிறர்மனைவியரைப்புல்லினோர்
தருமெழிலன்புடைத்தாயைத்தந்தையை
அருமைகற்புதல்வரையளித்திலாரென.

மாற்றினோர் - தடுத்தவர். (௨௰)

வளரொளியிழந்தனைவதனம்வாடினை
அளியுளர்துளவினனகன்றுளான்கொலோ
கிளைஞருக்காயிடைக்கெழீஇயதுண்டுகொல்
துளிவருகண்ணினைசொல்லுகென்றனன்.

வதனம் - முகம், அளி - வண்டு, உளர் - கிண்டுகிற. (௨௧)

என்றலுங்காவகமெரிக்குநல்கிய
வன்றிறற்சிலையினன்மறுகிக்கூறுவான்
குன்றெனவுயரியகொற்றமாதவர்
துன்றிவந்தருளியசாபஞ்சுற்றலால்.

காவகம் - காண்டவவநம், எரிக்கு - அக்கினிதேவனுக்கு, நல்கிய - கொடுத்த, வன்றிறற்சிலையினன் - அருச்சுநன், மறுகி - மயங்கி. (௨௨)

வருணனுல்விளை தருமட்டுமொந்தினர்
பொருகளிவிளைந்தனர்புகையுங்கண்ணினர்
திருகுவெஞ்சினத்தினர்செறிந்தயாதவர்
ஒருவரொடொருவர்போருழந்துமாண்டனர்.

மட்டு - கள். (௨௩)

உடையநஞ்செயலெனவுணரக்கண்ணினுல்
முடிவறுபகைஞரைமுடித்துக்காத்தருள்
கடிமலர்த்துளவணிகண்ணனவ்வழி
நடலைசெய்திறத்தையாருடியென்சொல்கேன்.

நடலை - நடித்தல். (௨௪)

ஈரெணுயிரர்முதலேமைமார்களைச்
சீரிலாவேடுவர்சினத்திற்கைக்கொளப்
போரினுன்மிகுந்தகாண்டீவம்பூங்கணை
வீரமொடென்வலிவிசயங்கைக்கொடு.

ஈரெணுயிரர்-பதினுறுயிரவர், விசயம் - வெற்றி. (௨௫)

கன்னியந்துளவணிகண்ணன்கண்ணுறுமுன்
என்னையுமொளித்தனனேகினுனெனச்
சொன்னதுகேட்டலுந்துளங்கினுனுளம்
மன்னன்மெய்யுணர்வினுன்மனந்தெருண்டனன்.

தெருண்டனன் - தெளிந்தான். (௨௬)

எட்டிணர்க்காவகமெரிவளைத்துணக்
கோட்டியசிலையினுன்குமரன்மைந்தனுக
காட்டினன்பூம்புனலவனிகாக்கெனச்
சூட்டினன்மணிமுடிசுடரெறிப்பவே.

எட்டிணர் - இதழ்களோடுகூடிய பூங்கொத்துக்களையுடைய, காவகம் - காண்டவ வநம், கோட்டிய - வளைத்த, பூம்புனல் - அபிஷேகம். (௨௭)

உலங்கெழுதோளநிருத்தனேங்கிய
நலங்கெழுநற்றவப்பயத்தினல்கிய
அலங்கல்வேல்வச்சிரற்கரசுநல்கினுன்
மலர்ந்தபூங்காவுசூழ்மதுரைகாக்கவே.

வச்சிரற்கு - வயிரப்படையையுடைய இந்திரனுக்கு, (௨௮)

அங்கியைமனக்கணேயடைத்திலிங்கமாம்
துங்கவெந்தனுநனிதொலைந்துநீங்குறத்
தங்குமைம்பூதமேமுதலதத்துவம்
பொங்குமுன்னெழுமுறைமுறையிற்போக்கியே.

அங்கி - அக்கினி, இலிங்கமாந்துங்கவெந்தனு - சூக்குமசரீரம். (௨௯)

நாக்கடைபுரட்டுபைந்நாகத்தாடிய
கார்க்கடல்வண்ணனைக்கருத்துனாடினன்
மாக்கடற்றானைதன்மருங்குசூழ்வது
நோக்கலன்வடதிசைநோக்கியேகினான்.

பைந்நாகம் - படத்தையுடையபாம்பு, (காளியன்) கார்க்கடல்வண்ணன்-கண்ணபிரான். (௫௦)

விரிதருகுஞ்சியன்விரித்துடுத்ததோர்
மரவுரியுடையினன்மலர்ந்தகாட்சியன்
உரையிலனூணிகந்தொற்றவெண்குடை,
தருமனுங்கேகியதன்மையென்சொல்கேன்.

குஞ்சியன் - சிகையையுடையவன், மரவுரி - வற்கலை, ஊண்-உணவு. (௫௧)

தளையவிழ்நெஞ்சினன்றருமன்சென்றவா
றிளையருமேகினர்யாருமேத்துற
வளர்புகழ்த்துருபதன்வரதிற்றோன்றிய
அளியபூஞ்சீறடியணங்குமேகினாள்.

துருபதன்வரத்திற்றோன்றியஅளியபூஞ்சீறடியணங்கு - த்ரௌபதி. (௫௨)

பயில்புகழைவரும்படர்ந்தநங்கையும்
உயர்வுறுபரன்கழலொன்றுபட்டனர்
மயிலெருத்துறழ்தருமாயன்சேவடி
குயின்மொழிக்குந்தியுஞ்சென்றுகூடினாள்.

பயில் - மிகுதியாகிய, படர்ந்த - சென்ற, மயிலெருத்து - மயிற்பிடர், உறழ்தரு-ஒத்த. (௫௩)

பொய்தபுகாட்சியிற்புலனடக்கிய
செய்தவன்சபித்தலிற்சேர்தமெய்யினை
மெய்தலைமணந்தநல்விதுரன்விட்டனன்
எய்தினன்றென்புலக்கிறைமையென்பவே.

பொய்தபுகாட்சி - மெய்யுணர்வு, செய்தவன் - முனிவன், தலைமணந்த - கலந்த, இறைமை - தலைமை. (௫௪)

ஓதியகாதையையுவந்துகேட்பவர்
காதல்செய்மாயனைக்கலப்பரென்றுசீர்
மேதகுவிண்டுராதன்செய்மெய்த்திறம்
சூதமாமுனிவரனெடுத்துச்சொல்லுவான்.

காதை - சரித்திரம், உவந்து - விரும்பி, விண்டுராதன் - பரிக்ஷித்து. (௫௫)

முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௨௱௨௬.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## ஏழாவது.

## பரிட்சித்துக்கலிகடிந்தவத்தியாயம்.

வேறு.

மண்டலீகர்மகுடமலர்ந்ததாட்
புண்டரீகம்புனையமுடிபுனைந்
தண்டகோளமளந்தபெரும்புகழ்
விண்டுராதன்வியனிலங்காத்தனன்

புண்டரீகம் - தாமரைமலர், வியன் - பெரிய. (க)

வேந்தனுத்தரன்மெய்த்தவத்தின்றருள்
ஏந்துகொங்கையிராவதியென்னுமோர்
காந்தண்மெல்விரற்கன்னியிளநலம்
மாந்தினன்கமழ்மன்றலந்தாரினான்.

உத்தரன் - விராடராஜன்மகன், இளநலம் - இளம்பருவத்தின்பம், மாந்தினன்-அநுபவித்தான். (உ)

ஐயதார்ச்சனமேசயனுதியூர
வையம்போற்றிடுமைந்தரோர்நால்வரைச்
செய்யவாய்ப்பசுங்கிள்ளையந்தேன்மொழிப்
பெய்மலர்க்குழற்பெண்ணணங்கீன்றனள்.

ஐய - அழகாகிய, தார் - பூமாலை, பெண்ணணங்கு - இராவதி. (ங)

முரிதடந்திரைமுத்தெறிகங்கையங
கரையில்வானங்களிப்பக்கடவுள்வாம்
புரவிவேள்வியோர்மூன்றுபுரிந்தனன்
அருநிதித்திரளந்தணர்க்காக்கினான்.

முரி - மடங்குகிற, கடவுள் - தெய்வத்தன்மை, வாம்புரவி - தாவிச்செல்லுங்குதிரை, புரவிவேள்வி - அசுவமேதயாகம். (ச)

வேறு.

அடல்விளையயிலெயிற்றண்ணல்வாளரிக்
கொடிவலனுயரியகொற்றமன்னவன்
விடுசுடர்க்குடமிவேல்வெற்றிகாட்டுவான்
வடபுலத்தெழுந்தனன்வளைகலித்தவே.

அடல் - வெற்றி, அயில் - கூர்மை, எயிறு - பல், அண்ணல் - பெருமை, வாள் - ஒளி, அரிக்கொடி - சிங்கக்கொடி, சுடர் - ஒளி, குடமி - நுனி, வளை - சங்கு, கலித்த - முழங்கின. (ரு)

பாரிடைமிதிக்கிலபறக்கும்பக்ஷசமான்
தேரினனொற்றையந்திகிரிமன்னவன்
போர்கெழுதானையம்புணரியூடெழு
தேரிளங்கதிரெனுவெழில்சிறந்தனன்.

மான் - குதிரை, திகிரி - சக்கரம், தானையம்புணரி - சேனைசமுத்திரம். (சு)

தங்குலம்விளக்கியதரணிகாவலன்
வெங்கதிர்மரபின்வரிழ்வேந்தர்போர்தெறும்
பொங்கொளிகண்டொளிபொலியத்தோன்றிய
திங்களேபோன்றது திலகவெண்குடை.

வெங்கதிர்மரபு - சூரியகுலம், தெறும் - வெல்லுகிற. (எ)

வள்ளறன்றிருமகன்வழிவிளக்குறும்
அள்ளிலைவேலினுடனேக்கிய
வெள்ளநீர்க்கங்கையின்வெள்ளிவெண்டிரை
துள்ளல்போன்றன துணைக்கவரித்தோற்றமே.

அர் - கூர்மை, ஆடல் - வெற்றி, துணைக்கவரி - இரட்டைச்சாமரம். (அ)

அடும்படைமன்னவனளவிறுனையைப்
படுந்திரைக்கரையுறுபரவையென்பதென்
விடுஞ்சுடர்த்தேர்செலமிடைந்த தூளியால்
நெடுங்கடலேழுநன்னிலங்களாயவே.

அடும் - கொல்லுகிற, பரவை - கடல், மிடைந்த - நெருங்கின. (௯)

சூடியவாகைவேல்வேந்தைச்சுற்றியே
நாடியவாள்பரிநாகந்தேரெனும்
நீடியசேனையிந்நிலத்தடங்குதல்
ஆடியினடங்குமாகாயம்போலுமே.

ஆள் - காலாள், பரி - குதிரை, நாகம் - யானை, ஆடி - கண்ணாடி. (௧0)

நிலவரைப்பினினனிமிர்ந்தசேனையால்
உலவியநற்றுகளும்பரோங்குதல்
மலர்தலைப்புவிமகண்மருவித்தொட்டிடாப்
புலவரைத்தொடவட்போதல்போலுமே.

நிலவரைப்பு - நிலவுலகம், உம்பர் - ஆகாயம், தலை - இடம், புலவரை - தேவரை.

கவட்டொடுமுயர்மரங்கைக்கொள்யானைமேல்
குவட்டெழுமதியெனுங்குடைகள்கண்டுமெய்ச்
சுவட்டொடும்பொலிபடைசூழ்தறிங்கள்கண்
டுவட்டெடுத்தெறிதிரையுததியொக்குமே.

கவடு - கிளை, குவடு - மலை, சுவடு - தழும்பு, உததி - கடல், உவட்டெடுத்தல்-பெருக்கெடுத்தல். (௧௧.)

உரைபுகழ்மன்னவனோடுபோயின
நிரையணிவேழமாநெடியதானையை
வரையெனமொழிவதென்வளைகணுண்பொடித்
தரையெனநடந்தவத்தானையானையே.

வேழம் - யானை, தானை- சேனை நிரை - வரிசை. (௧௩)

வரங்களாலுயர்ந்தவன்வரம்பில்சேனைநீர்
உரங்கள்சேர்மனமெனவோடுமையங்கதித்
துரங்கமாப்படையினைச்செரல்வோர்காறகதித்
தரங்கமாய்மொழிவதுதக்கதன்றரோ.

உரம் - அறிவு, துரங்கம் - குதிரை, ஐங்கதி -ஐவகைநடை ,அவை - மல்லகதி, மயூரகதி - வியாக்கிரகதி, வாநரகதி, இடபகதியென்பன, தரங்கம் - அலை. (௧௪)

படையெனும்வரம்பிலாப்பாவைமேவிநல்
நடையொடுபொருதுடையாதநற்பரி
புடையகல்கரையினிற்பொருதுதத்தமில்
உடைதிரைநேர்சொல்வாருணர்விலோர்களே.

பொருது - போர்செய்து, மோதி. (௧௫)

மன்னவன்றேர்வடமேருமற்றதேர்
பன்னியவரைகள்சூழ்கடல்கள்பாய்பரி
துன்னியகரியிருள்சூழ்வரம்பென
உன்னியசேனையிவ்வுலகொடொக்குமே.

பன்னிய - சொல்லப்பட்ட, கரி - யானை. (௧௬)

வட்டவெண்கவிகையான்மல்லற்பாரதம்
கிட்டினன்கிம்புருடத்தைநண்ணினான்
முட்டினனரிவருடத்தைமூரித்தேர்
விட்டனன்கேதுமாலத்தின்மெல்லவே.

மல்லல் - வளம், பாரதம் - பரதவர்ஷம், கிம்புருடம் - கிம்புருஷவர்ஷம், அரிவருடம் - அரிவர்ஷம், கேதுமாலம் - கேதுமாலவர்ஷம். (௧௭)

எய்தினனிளாவிருதத்திலின்பமே
செய்தவிரமியகஞ்சென்றுசேர்ந்தபின்
மெய்திகழிரண்மயமேவிமெல்லெனப்
பொய்தபுமுத்தரகுருவிற்போயினான்.

இளாவிருதம் - இளாவ்ருதவர்ஷம், இரமியகம் - ரம்யகவர்ஷம், இரண்மயம்-ஹிரண்மயவர்ஷம், உத்தரகுரு - யோகபூமியாறனுளொன்று. (௧௮)

தடத்ததாமரைமலர்த்தடக்கைவில்லினால்
வடக்கொடுகுடக்கெலாம்வணக்கிமன்னவன்

சுடர்ப்பசுமேருவின்குணக்கிற்றோமிறேர்
விடுத்தனன்பத்திராச்சுவத்தைமேவினன்.

குடக்கு - மேற்றிசை, வணக்கி - தாழச்செய்து, குணக்கு - கிழக்கு, தோம்இல்-குற்றமற்ற, பத்திராச்சுவம் - நவகண்டத்தொன்று. (கக)

எள்ளுனர்க்கிடியனிறுத்ததிக்கெலாம்
உள்ளவர்பாண்டவரொழிவில்போர்த்திறல்
வெள்ளநீரமுதுகவிரித்திசைக்குமத்
தெள்ளிசையமுதமுஞ்செவிமடுத்தனன்.

எள்ளுனர் - இகழ்வோர், இறுத்த - தங்கின. (உ0)

வெருவரமறையவன்விடுத்தவெம்படை
கருவினில்வளைத்ததுங்கண்ணன்காத்ததும்
பெருவிறன்மரீஇயதான்பிறந்தவண்ணமும்
தெரிதரவிசைப்பதுஞ்செவியின்மாந்தினன்.

வெருவர - அஞ்ச, பெருவிறல் - பெருவலி, மரீஇய - பொருந்திய, மாந்தினன்-கேட்டான். (உக)

முடித்தலைவணக்குபுமுடிவிலாத்திறற்
கொடிப்படைமன்னவர்குவித்துநீணிதி
வடித்திசைபாடினர்வணங்கியின்புறக்
கடைக்கணித்தனன்றனிக் கவிகைவேந்தனே.

வணக்குபு - வளைத்து, கடைக்கணித்தனன் - கடைக்கண்ணாற்பார்த்தான். (உஉ)

அமைவருமொன்பதுவருடத்தார்களும்
நமையளிப்பவனெனநவிற்றநல்லிசை
கமைவருகுணத்தொடுகருணைசெய்தவன்
இமையநல்வரைகடந்தெய்துங்காலையே.

ஒன்பதுவருடத்தார் - நவவர்ஷங்களிலுள்ளவர், கமை - க்ஷமை. (பொறுமை)

தெளிபொருள்வடசொலாற்றிருந்துமாறவர்
ஒளிவருநாமகட்குரைத்தபேர்பெறும்
வளநதியினுக்குநல்வடாதுநண்ணிய
கிளர்புகழ்சேர்குருக்கேத்திரத்தினில்.

வடாது - வடதிசை, குருக்கேத்திரம் - குருக்ஷேத்திரம். (உச)

தூநிறப்பிறைபுரைதொளையெயிற்றதோர்
பானிறப்பஃறலைப்பாந்தளேந்திய
மாநிலக்கிழத்திதன்மல்லன்மாண்பொரீஇ
ஆனுருத்தாங்கியாங்கழுதுநின்றனள்.

தூநிறம் - வெண்ணிறம், பிறைபுரை - பிறையையொத்த, எயிற்றது - பல்லினை யுடையது, பானிறம் - வெண்ணிறம், பஃறலைப்பாந்தள் - பலதலைகளையுடையபாம்பு (ஆதிசேடன்) ஆன்-பசு. (உரு)

ஒடிவிலாவூழிதோறெவ்வொன்றாகநல்
அடியொருமூன்றிழந்தண்ணணலறம்
படிமிசையோர்பதம்பரவும்பாலதாய்
விடையுருத்தாங்குபுமெலிந்துநின்றதால்.

ஒடிவு - கெடுதி, அறம்-தருமதேவதை, ஓர்பதம் - ஒருபாதம், தாங்குபு-தாங்கி.()

பாணிறநல்விடைபாரிலூன்றிய
காணடிக்குறநெடுங்கதையினூற்புடைத்
தாணழக்கருங்கழலார்த்ததாளினன்
நீணிறக்கடுங்கலிநின்றுதைக்குமால்.

பாணிறம் - வெண்ணிறம் கதை - தடி. (உஎ)

குருதிமேவற்பின்னவர்கொற்றமால்களிற்
றரசராய்நம்மைவந்தாள்வரென்றுகொல்
புகரிலாவந்தணர்பொருவில்வேள்விகள்
இருவிசும்புறைத்திடாவெனநினைந்துகொல்.

குருதி - உதிரம், உறைத்திடா - பொருந்தா, (உஅ)

அடியொருமூன்றெனக்ககன்றவென்றுகொல்
உடல்சினக்கடுங்கலியுதைக்குமென்றுகொல
நெடிதுயிர்த்தழுவதேனிகழ்த்துவாயென
விடைவகுத்துரைப்பவான்விளம்பிற்றென்பவே.

உடல் - வருத்துகிற. (உகூ)

கன்னியந்துளவணிகமலலோசனன்
பொன்னடித்தாமரைபொருந்தப்பெற்றனன்
என்னெடும்புரையுமேயிமைப்பிலாட்டத்தோர்
மன்னுபொன்னுலகெனமகிழ்ச்சிகூர்ந்தனன்.

புரையுமே - நிகர்க்குமா, இமைப்பிலாட்டத்தோர் - தேவர்கள் (௩0)

கடிகமழ்தாமரைக்கண்ணற்காதலால்
நெடிதுநற்றவம்புரிந்தெய்துநேமியான்
கொடியொடுதாமரைக்குலிசரேகைசேர்
அடிமலரென்னைவிட்டகன்றுபோயதால்.

கடி - வாசனை, நேமியான் - சக்ராயுதத்தையுடையவன். (௩க)

சாற்றியவலிகளுஞ்சமதமங்களும்
போற்றியபுனிதமும்புகழுஞானமும்
தேற்றமுஞ்செல்வமுஞ்சிறந்தமாலெனக்
காற்றியவருட்பதமகன்றுபோயதால்.

சமதமங்கள் - சமமும்தமமும், சமமாவது அகக்கரணங்களைச்சிக்ஷித்தல், தமமாவதுபுறக்கரணங்களைச்சிக்ஷித்தல், தேற்றம் - தெளிவு. (௩உ)

தஞ்சமுங்கருணையுந்தவமுஞ்சாந்தமும்
வஞ்சமின்மேன்மையும்வணப்புமேமுதல்
எஞ்சலினற்குணம்யாவுமேவிய
அஞ்சனமுகில்பூதமகன்றுபோயதால்.

வணப்பு - அழகு, அஞ்சனமுகில் - கரியமேகம். (௩௩)

வாரமுமானமுங்கொண்டென்வன்றலைப்
பாரமும்பாவமும்பகையுநீத்தருள்
வீரமும்விசயமும்வீறுமேவிய
ஆரமுதவன்பதமகன்றுபோயதால்.

வாரம் - அன்பு. (௩௪)

ஒளித்தனனென்றடியுனக்குநம்மைவந்
தளிக்கலனருட்கடலகன்றுபோயினன்
களிக்கும்வெஞ்சினககலிகாயுமாலெனக
கிளக்கலுமன்னவன்கெழீஇயானரோ.

அளிக்கலன் - காத்திலன், காயும் - கோபிக்கும், கிளக்கலும் - சொல்லுதலும். ()

## அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பாணிறவிடையோர்காலினிற்பதும்பழுகணெய்தி
ஆனழுகின்றவாறுமானபழவுதைத்தவெய்ய
நீணிறவொருவனின்றநிலைமையுங்கண்ணிற்கண்டான்
கூனுடைவரிவிற்செங்கைக்குருகுலத்தரசரேறு.

விடை - இடபம், பழுகண் - துன்பம், ஆன் - பசு, கூன், வளைவு. (௩௬)

அழுகையென்னுலகத்தின்றுழுததென்னஞ்செஞ்சேதா
ஒழிவதென்னினகருத்தாண்மூன்றுடல்பவன்யாவனேடி
முழுதுநீதெரித்தியென்றுமுனனுறுவேந்துகூற
மழவிடையரசனுள்ளமகிழ்தரவழங்குமன்றே.

சேதா - நற்பசு, (சிவப்புப்பசு) உடல்பவன் - கோவிப்பவன். (௩௭)

எண்ணுமவ்வினைகள்சில்லோர்சனலியன்றவென்பார்
பண்ணியகருமம்வந்துபலித்ததென்றுரைப்பர்சில்லோர்
நண்ணியநவக்கோளாலேநடந்ததென்றுரைப்பரெண்ணோர்
நுண்ணியவறிவோர்செய்யுமனனெனநுவலுவாரே.

நவக்கோள் - நவக்கிரகம். (௩௮

எனவிடைமொழிதலோடுமகிழ்ந்தனனிறைவனென்பால்
நினைவரும்பிறர்தமேதநிகழ்த்திடிற்றனக்குமந்த
வினைவருமென்றுநாடிவிளம்பியதானுமோர்தாள்
தனைநனிநிலத்தினூன்றிமூன்றுதாடவிர்தலானும்.

ஏதம் - குற்றம், நிகழ்த்திடின் - சொன்னால், தாள் - பாதம், தவிர்தல் - ஒழிதல். (௩௯)

அறமெனப்படுமால்வெள்ளேறவனிமாதஞ்செஞ்சேதா
பொறைதவிர்த்தளித்தகண்ணன்போயினனென்றுமாழ்கும்
கறையணற்பாம்பிற்சீறிக்காய்பவன்கலியேயென்னு
மறுவறுமனத்தினடிவாளுறைகழித்திட்டானல்.

மால் - பெருமை, வெள்ளேறு - வெள்விடை, அவனிமாது - பூமிதேவி, மாழ்கும் - மயங்கும், கறை - விஷம், அணல் - கழுத்து, (௪0)

எண்டிசைக்களிற்றுப்பாகனெரியெழத்திருகிநோக்கி
மண்டமர்கடந்தகொற்றவாளுறைகழித்ததோற்றம்
கண்டனன்கலங்கிவெங்கட்கடுங்கலிகமழுந்தெய்வத்
தண்டுறைக்கங்கைநாடன்றண்மிசைவந்துவீழ்ந்தான்.

எரி-நெருப்பு, திருகி - மாறுபட்டு, மண்டுஅமர்கடந்த—நெருங்கினபோர்களைவென்ற, தோற்றம் - காட்சி, வெங்கண் - கொடுமை, கலி - கலிபுருடன். (௪க)

மூரிவாட்டடக்கைமன்னர்முடித்தழும்பிருந்தசெம்பொன்
வார்கழற்றளின்வீழ்ந்தான்மறக்கலியென்பதோர்ந்தும்
ஆருயிர்செகுத்திலானலபயமென்றடைந்தோர்க்கெல்லாம்
கூருண்மாரிபெய்தல்குருகுலத்தியற்கையன்றே.

மூரி - பலம், செகுத்திலான் - கொன்றிலன். (௪௨)

அறைகழற்றளின்வீழ்ந்தவடுகலிதன்னைக்கங்கைத்
துறைவனீயஞ்சல்போதிதுன்னலென்காப்பிலென்ன
எறிகடல்வையமெல்லாமிறைவநின்காப்புமற்றெங்
குறைவதுபணித்தியென்னவுறுகலியுரைத்தல்செய்தான்.

துன்னல் - இராதே, காப்பு - காவல், அஞ்சல் - அஞ்சாதை, உறைவது - வாழ்வது. பணித்தி - கட்டளையிடு, (௪௩)

சூதுயிர்கோறல்பானந்துவரெனத்துவர்த்தசெவ்வாய்
மாதர்செம்பொன்னிற்சொல்பொய்வருந்துனிமதம்வெங்காமம்
ஏதமாம்வயிரமாகியிருத்திநீபோதியென்று
கோதைவெண்குடையான்கூறக்கொடுங்கலிவணங்கிப்போயான்.

கோறல் - கொல்லுதல், பானம் - குடி, துவர் பவளம், துவர்த்த-செவந்த, துனி-அச்சம், வயிரம் - தீராக்கோவம். (௪௪)

மெய்யெனுமொருதாளுன்றிநின்றவெள்ளேறுமற்றைச்
செய்தவம்புனிதந்தீதிலளியெனத்தெரித்தமூன்று
மையறுதாளுமூன்றிமகிழ்ந்ததம்மாட்சித்தாய
மொய்திரைவேலிஞாலமுழுவளஞ்சுரந்ததம்மா.

தீதுஇல்அளி - தீமையில்லாதகிருபை, ஞாலம் - உலகம். (௪௫)

வஞ்சகக்கலிதான்போகமாய்ந்தனதீமையெல்லாம்
வெஞ்சினப்புலன்கள்செற்றோர்விழுத்தவர்ஞானமிக்கோர்

எஞ்சலின்மறையோர்வேள்வியாவையுமியற்றிவாழ்ந்தார்
நெஞ்சுவந்தமரரார்த்தார்நிலமகண்மகிழ்ந்தாளன்றே.

செற்றோர் - வென்றவர்கள், விழுத்தவர் - மேன்மையாகியதவத்தினர், (சசு)

கலியிருளிரியநூறிக்களிற்றுநன்னகரஞ்சேர்ந்தான்
நிலவுமிழ்திங்களன்னநித்திலக்கவிகைவேந்தன்
மலர்தலையுலகமெல்லாமறுவறவிளங்கும்வண்ணம்
அலர்கதிர்ப்பரிதிபோலவாழியொன்றுருட்டினானால்

இரிய - ஓட, நூறி - அதஞ்செயது, களிற்றுநன்னகரம் - ஹஸ்திநாபுரம், நித்திலக்கவிகை - முத்துக்குடை, மறு - குற்றம், பரிதி - சூரியன், ஆழியொன்றுஉருட்டினான் - ஏகசக்ராதிபத்தியஞ்செய்தான். (சஎ)

இக்கதைவிரைந்துகேட்பவெய்துநற்றவத்தோர்பார்மேல்
தக்கநற்புதல்வர்கல்விசாற்றிருநிதிசொற்கீர்த்தி
மிக்கெழிற்செல்வமெல்லாமேவிவீற்றிருந்தபின்னர்ச்
செக்கரக்கமலமார்பன்றிருந்துலகெய்துவாரே.

செக்கர்-செவந்த, அக்கமலமார்பன் - அந்தத்திருமகள்மார்பனாகியதிருமாலின், திருந்துஉலகு - திருத்தமாகியவுலகம், (பாமபதம்.) (சஅ)

முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—உளச

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---

## எட்டாவது

## பரிட்சித்துச் சாபமேற்றவத்தியாயம்

கலிவிருத்தம்.

என்றுகூறலுமேத்தியிக்கதை
நன்றுநன்றெனுநற்றவர்க்கெலாம்
வென்றிவேலவன்வேட்டமேற்செலல்
துன்றுமாதவச்சூதன்சொல்லுவான்

வேட்டம் - வேட்டை. (க)

காட்டின்வாளரிக்கணத்தினோடுபோர்
ஆட்டினுற்றெழுந்தன்னமாட்சிசால்
வாட்டிறற்படையவர்சூழ்தர
வேட்டமாடுவான்வேந்தனெய்தினான்.

அரிக்கணம் - சிங்கக்கூட்டம், வயவர் - வீரர், வேட்டமாடுவான்-வேட்டையாட.

அண்ணலூருமவ்வணிசெய்தேர்நடு
வண்ணமாமுகிலூர்ந்துசேர்வது

நண்ணுதாதைதன்றாதைநல்லதேர்
கண்ணனூர்ந்தவக்காடசிபோலுமே.

அண்ணல் - அரசன், (பரிக்ஷித்து) தாதைதன் காதை - பாட்டன், (அருச்சுநன்.)

நெடியதேர்நடுநீலமாமுகில்
படிதலுட்பயங்கொண்டுபாரின்மேல்
கொடையின்வென்றிடுகோன்வந்தானென
அடியின்வீழவந்தணுகல்போலுமே.

நீலமாமுகில் - நீலமேகம், கோன் - அரசன். (௪)

சிலைவளங்கொள்போர்ச்சேனையார்த்தெழப்
பொலமுகட்டினிற்பொங்குதூளிபோய்
அலர்வனத்திலைச்சூழ்தலாங்கெலாம்
வலைவளைத்ததோர்வண்ணமானுமே.

சிலை - வில், மானும் - ஒக்கும். (௫)

நெடுங்கிரித்தலைநின்றிழிந்தவெம்
மடங்கல்போன்மெனமன்னன்மாமணி
இடங்கொடேரினின்றிழிந்துதோகைநல்
நடங்கொள்கானகநண்ணினண்ணினன்.

தலை - உச்சி, மடங்கல் - சிங்கம், தோகை - மயில், நடம் - நடனம், (௬)

கல்வளைத்தவெங்கானநண்ணலும்
எல்வளைக்கரத்தெஃகநீக்கிவார்
வில்வளைத்துமாமேகமொத்தனன்
மல்வளைத்ததோண்மன்னர்மன்னனே.

கல் - மலை, கானம் - காடு, எல் - ஒளி, வளை-வாகுவலயம், எஃகம்-ஆயுதம், வார்-நீண்ட. (௭)

கடங்கவிழ்த்ததன்கரியின்றெவ்வினை
அடங்கமாய்த்ததற்காற்றுநன்றிபோல்
மடங்கலேற்றின்மேன்மன்னர்கோமகன்
விடங்கவிழ்த்தவெம்பகழிவீசினன்.

கடம் - மதநீர், கரியின்தெவ்வினை-யானைப்பகையாகியசிங்கத்தை, மடங்கவேறு-ஆண்சிங்கம், பகழி - அம்பு. (௮)

சிலைவணக்கிவெஞ்சினவயப்பெரும்
*புலிதுரத்தினன்பொருதுவாரிசூழ்
நிலவரைப்பினீடுவெம்பகை
வலனழித்தவாண்மன்னர்மன்னனே.

வணக்கி - வளைத்து, வயம் - வெற்றி, பகை - பகைவர், வலன் - வெற்றி. (௯)

மஞ்சதிர்ந்தெனப்பிளிறுமையலும்
குஞ்சரங்களின்கொலைமருப்பிறச்

செஞ்சரந்தொடுத்தெய்துசென்றனன்
அஞ்சமிக்கபேராளியென்னவே.

மஞ்சுஅதிர்ந்தென - மேகமுழங்கினாற்போல, பிளிறும் - கர்ஜ்ஜிக்கிற, மையல்-மதமயக்கம், இற- ஒடிய, செஞ்சரம் - செவ்வியபாணம், பேராளி - பெரியசிங்கம்,(௧௦)

வம்புசேர்மலர்வரையினுச்சியின்
அம்பினோடாரற்றானையோடுதல்
இம்பர்மன்னவனீதல்கண்டுகண்
உம்பர்மீதுகாரோடலொத்ததே.

வம்பு - வாசனை, அரற்றுஆனை - ஒலிக்கின்றயானை, உம்பர்மீது - ஆகாயத்தின்மேல். (௧௧)

வெம்மைசேர்கணைமீதுதைத்தலால்
தம்மைமூசுறத்தாவில்சோரிதான்
மும்மையாமதத்தானைமுன்செலல்
செம்மைசேர்முகில்சேறல்போலுமே.

மூசுற - மொய்க்க, சோரி - உதிரம், சேறல் - செல்லுதல், (௧௨)

விண்ணம்போழும்வாள்வெயிற்குவெம்புகால்
அண்ணலானையாடலாலிளைத்
துண்ணுநீர்நசையொருதவத்தினோன்
நண்ணுசாலைவாய்நடத்தனண்ணினன்.

ஆடலால் - வேட்டையாடலால், நீர்நசை - நீர்வேட்கை, (தாகம்) (௧௩)

அம்மென்கக்சினனுடுதாரினன்
வெம்மினன்னவார்கணையன்வில்லினன்
செம்மனண்ணியச்செய்தவன்றனைத்
தம்மினுண்ணுநீர்தம்மினென்றனன்.

வெம்மின்அன்ன - வெவ்விய மின்னலைநிகர்த்த - செய்தவன், தவத்தன் (தவசி) தம்மின் - தாரும். (௧௪)

தருகவுண்ணுநீர்தருகவென்றுவேல்
அரசனுங்கடைந்தறைதல்கேட்டிலன்
பரனைநெஞ்சினிற்பாவித்துள்ளநெக்
குருகியொன்றுபட்டுறையுமாதவன்.

அறைதல் - சொல்லுதல், பரனை - இறைவனை. (௧௫)

புலனெறிந்தமெய்ப்போதமாதவன்
நிலைநினைந்திலனீரிரத்தலும்
தலைமையந்தணனன்றிலானென
உலகுகாவலனுள்ளத்துள்ளினன்.

புலன்எறிந்த - ஐம்புலன்களை வென்ற, மெய்ப்போதம் - மெய்யுணர்வு, உள்ளினன் - நினைத்தான். (௧௬)

செத்தபாம்பினைச்செய்யதாமரைக்
கைத்தலத்துவிற்கடையினாற்கொளீஇ
மெய்த்தவத்தினோன்றோளின்வீழ்த்தனன்
மத்தயானையம்மன்னனேகினான்.

விற்கடை - வில்லினது நுனி, கொளீஇ - எடுத்து. (௧எ)

பழுத்தநான்மறைப்பாடறெள்ளிய
தழைத்தகாட்சியான்றவநினைந்திலேம்
இழைத்ததென்கொலென்றெண்ணியெண்ணியே
மழைத்தடக்கையான்மறுகினானரோ.

காட்சியான் - அறிவினையுடையவன், இழைத்தது - செய்தது. (௧அ)

வேறு.

ஐந்தவித்தருந்தவமாற்றுமந்தணன்
மைந்தன்மாட்டருந்தவர்மைந்தர்வல்லைபோய்
வெந்திறல்வேந்தனோர்வீந்தபாம்பினை
நுந்தைதோளிட்டனனென நுவன்றனர்.

ஐந்துஅவித்து - ஐம்புலன்களையடக்கி, ஆற்றும் - செய்கின்ற, வல்லை - விரைவாக, வீந்த - செத்த, நுந்தை - உன்தந்தை. (௧௯)

பகர்ந்ததுகேட்டலும்பாலன்மன்னெறி
இகந்ததுகண்டபாரொனதுமாதவம்
திகழ்ந்திடக்காண்கெனச்சிவந்தகட்கடை
புகைந்தவெந்தீயுகப்புழுங்கினானுளம்.

மன் - அரசன், நெறிஇகந்தது - நெறிகடந்தது. (௨0)

காழ்படுமிடற்றராக்கழிந்ததெந்தைதோள்
வீழ்படவிட்டவவ்வேந்துதக்ககன்
பாழிவாய்ப்பட்டெழுபகலின்மாய்கெனத்
தாழ்கிலாச்சினத்தினன்சபித்திட்டானரோ

காழ் - குற்றம், (நஞ்சு) மிடறு - கண்டம், கழிந்தது - இறந்தது, தககசன் - தக்ஷகன், (நாகராஜன்)எழுபகல் - ஏழுநாள். (௨௧)

எழுந்தனன்சிருங்கிபோயீன்றதாதைதாள்
விழுந்தனனழுதலும்விழித்துமைந்தமற்
றழுந்திறமென்னையோவுறைதிநீயென
மொழிந்தனன்விளைந்ததுமுழுதுமென்பவே.

சிருங்கி - சிருங்கிமுனிவன். (௨௨)

மகன்மொழிகேட்டலுமறுகிமாதவன்
இகலெறிந்திருநிலமேழும்போற்றுறு

தகைமலியரசனைச்சபிக்கத்தாழ்கிலா
வெகுளிமற்றெங்ஙனம்விளைந்ததென்றனன்.

இகல்எறிந்து - பகைவரைவென்று, தாழ்கிலாவெகுளி - தணியாக்கோபம். (உ௩)

தடம்புயத்தரசனைச்சபித்ததன்றுநீ
அடர்ந்துகொல்வெங்கலிக்கரசுநல்கினை
மிடைந்திடுதருமத்தின்வேரறுத்தனை
தொடர்ந்திடுவெம்பழிதுணிந்துசெய்தனை.

மிடைந்திடு - நெருங்கின, (மிகுந்த) (உ௪)

உன்னிடிற்சிறுபிழையுஞற்றும்வேந்தனைப்
பன்னினைசாபநீபாலனாகலான்
துன்னியபிழைபொறுத்தாடல்சொல்லுசீர்க்
கன்னியந்துளவினோன்கடனென்றோதினன்.

உஞற்றும் - செய்த, பன்னினை - சொல்லினை. (உ௫)

நிந்தனைபுரியினுநின்றுதைப்பினும்
சிந்தனைவெகுள்கிலார்சீதரற்றொழா
வந்தனைபுரிபவரென்றுமாமனம்
நொந்தனன்பலப்பலநுவன்றிட்டானரோ.

வெகுள்கிலார் - கோபியார், சீதரன் - திருமால். (உ௬)

முழுப்பெருங்காட்சியான்முனிவன்றன்மகன்
தழைத்தவெம்முனிவினிற்சபித்தவத்திறம்
அழற்படைமன்னனுக்கறியக்கூறென
விழுத்தவனொருவனைவிடுத்திட்டானரோ.

பெருங்காட்சியான் - பேரறிவுடையவன். (உ௭)

விடுத்தவவ்வேதியன்விரைவினேகினன்
கடற்புவிகாக்குமக்காவன்மன்னனை
அடுத்தனன்பைப்பையவறியக்கூறினன்
தடுப்பருந்திறலினான்சபித்தவண்ணமே

பைப்பைய - மெல்லமெல்ல. (உ௮)

உரைத்ததுகேட்டலுமுடல்கொண்டின்னமும்
திரைப்புவியிருந்துதீப்பழிசெய்யாமைநூல்
தரித்துரைநாவினான்சபித்தனன்றெனா
வரைத்தடந்தோளினான்மகிழ்ச்சிகூர்ந்தனன்.

திரைப்புவி - கடல்சூழ்ந்தவுலகு. (உ௯)

மண்டுநீர்க்கங்கையினடைந்துமாறிலாக்
கொண்டனேர்வண்ணனைக்குறித்துநெஞ்சகம்

புண்டரீகப்பதம்பொருந்துவேனென
விண்டோதப்பெயர்வேந்தனெண்ணினன்.

கொண்டல்நேர்வண்ணன், - மேகம்போலுமநிறமுள்ளவன். (௱)

தவச்சனமேசயனென்னுந்தண்முகை
துவைத்திளஞ்சுரும்புசூழ்தொடையன்மைந்தனைப்
புவிப்பொறைபொறுக்கெனப்பொன்னமாமுடி
கவித்தனன்கங்கையங்கரைவந்தெய்தினன்

முகை - அரும்பு, தொடையல் - மாலை, கவித்தனன் - சூட்டினன். (௱க)

ஒருமுதல்பொலமுகடுடையநீட்டிய
திருமலரடிபுனைதெய்வத்தண்டுழாய்
விரைகமழ்நதித்துறைவிரிந்தபுல்லின்மேல்
வரையெனக்கிடந்தனன்வரம்பில்கேள்வியான்.

ஒருமுதல் - ஒப்பற்றமுதற்பொருளாகியதிருமால், பொலமுகடு - அழகியஅண்டமுகடு, விரை - வாசனை. (௱உ)

வேறு.

பரத்துவாசன்சவுனன்பராசரன்
திருத்துமாதவஞ்சேருஙகவுதமன்
விரத்திமிக்கமேதாதிதியவுருவன்
வரத்தினுற்றபிருகுவண்முற்கலன்.

விரத்தி - பிரபஞ்சத்தில் வெறுப்பு. (௱௩)

வேறு.

மெய்த்தவநாரதன்வியாதன்காசிபன்
அத்திரிகோசிகன்வசிட்டனங்கிரா
முத்தமிழ்முனிமுதன்முனிவர்யாவரும்
தத்துநீர்க்கங்கையின்கரையிற்சார்ந்தனர்.

முத்தமிழ்முனி-அகத்தியர், முத்தமிழாவன, இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ்என்பன. (௱௪)

வந்தெதிர்முனிவரைவணங்கிமன்னவன்
இந்தவித்துயர்ந்தநீரடைந்தவாற்றினல்
சிந்தினன்வல்வினைச்சிமிழ்ப்புமாறினன்
உய்ந்தனனெனச்சிலவுரைக்குமெல்லையின்.

சிந்தினன் - ஒழிந்தேன், சிமிழ்ப்பு கட்டு (பிறவிக்கட்டு) எல்லை - பொழுது.()

புரியவிழ்தாமரைபுரையுங்கண்ணினன்
முரிதிரைமுத்தெனமுகிழ்க்குமூரலன்

7

மரதகநிறத்தினன்மலர்ந்தமார்பினன்.
சுருள்விரிகுஞ்சியன்சுகன்வந்தெய்தினான்.

புரி - முறுக்கு, புரையும் - நிகர்க்கின்ற, மூரலன் - பற்களையுடையவன். (ருசு)

செழுந்தவனெய்தலுஞ்செறிந்தமாதவர்
எழுந்தனரிளங்கதிரெழநெகிழ்ந்துதேன்
வழிந்ததாமரையுறழ்வாண்முகத்தினன்
விழுந்தனனிறைஞ்சினன்வேந்தர்வேந்தனே.

செறிந்த- நெருங்கின, இளங்கதிர் - இளஞ்சூரியன், எழ - உதிக்க, உறழ்- ஒத்த, வாள் - ஒளி. (ருஎ)

எண்ணியநல்லறிவியைந்துருக்கொடு
நண்ணியவெனுநினைநான்கண்டுய்யநம்
கண்ணனெம்மரபுளானென்றுகாட்டிய
வண்ணமென்றுரைத்தனன்மகிழ்ச்சிகூருவான்.

உய்ய - கடைத்தேற. (ருஅ)

ஒன்றினும்பற்றிலாதொழுகுகின்றநீ
இன்றுவந்தென்னுழையெய்தப்பெற்றனன்
வென்றனன்வினையெனவியந்துபோற்றினான்
மன்றலந்தாமரைமலர்க்கைகூப்பியே.

பற்றிலாது - பற்றற்று. (ருக)

இறப்புவந்தெய்துழியென்னினைப்பது
திறப்படக்கேட்பதென்செப்புகின்றதென்
அறத்துறையறிந்தநீயறைதியென்றனன
மறத்துறைகடிந்தவேன்மன்னர்மன்னனே.

இறப்பு - மரணம், அறத்துறை - தருமநெறி, அறைதி - சொல்வாயாக, மறத்துறை - பாவவழி. (சு0)

என்னலுமுனிவரனினிதுகூறினன்
மன்னியமாதவர்மகிழ்ச்சிகூர்தரப்
பன்னருஞ்சுகமுனிபணிந்தவேந்துக்குச்
சொன்னதுசொல்கெனச்சூதன்சொல்லுவான்.

கூர்தர - மிக, பன்னரு - சொல்லுதற்கரிய. (சுக)

பரிட்சித்துச் சாபமேற்றவத்தியாயம் முற்றிற்று.

முதற்கந்தம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ருாயரு.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.



# இரண்டாங்கந்தம்.

## முதலாவது

## மாயவனிலையுரைத்தவத்தியாயம்

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மன்னவனவ்வாறுரைசெயக்கேட்டமறைமுனிசுகன்வகுத்துரைப்பான்
கன்னியந்துளவப்பசுந்தொடைபுனைந்தகரியவன்றிருவுருக்கருதி
அன்னமாய்மறையன்றறைந்தவன்சரிதமஞ்செவிமடுத்துமாயவன்பேர்
பன்னியுமன்றிப்பழவினைத்தொடர்புப்பற்றினைப்பறியவேறுளதோ.

கரியவன் - கண்ணன், திருவுரு - திருவுருவம், செவிமடுத்து - கேட்டு. (க)

வார்திரைபுரட்டுதடங்கடல்பொடித்தமழகதிர்பொழிவெயிற்கற்றை
காரிருங்குன்றிற்றவழுமாகடுப்பக்கண்கவர்கவுத்துவஞ்சொரியும்
சீர்கெழுசெக்கரொளிபரந்திமைக்குந்திருமறுமார்பனையுள்ளத்
தோரிருகன்னலாயினுமுணரினுடைந்துவல்வினையிருளோடும்.

வார் - நீண்ட; மழகதிர் - இளஞ்சூரியன், கவுத்துவம்-கவுஸ்துபரத்நம், கன்னல் - கடிகை. (உ)

கழிபுகழ்க்கட்டுவாங்கனென்றுரைப்போன்கடவுளர்சொல்லினுள்ளாவி
ஒழிவதற்கிரண்டுகன்னலுண்டினியென்றுணர்ந்தனனனைத்தும்விட்டொருவி
அழலவிர்மணிச்சூட்டரவினின்றுயிலுமமலனைநினைந்துவீடுற்றான்
எழுபகல்கிடந்தநினக்குமற்றென்னினென்னைகொல்பெறுவதற்கரிதே.

ஆவியொழிவு - மரணம். (௩)

மனத்தினைக்கடந்துவாக்கினுக்கெட்டாமாட்சியதாகிமாமறையும்
இனைத்தெனவின்னுந்தெரிதரற்கொல்லாதெங்குமாயமலமாய்நின்ற
தனிப்பெருஞ்சுடரைநினைக்குமாறுனக்குச்சாற்றுவல்கேண்மதியென்று
வினைக்குறும்பெறிந்தவியாதனீன்றெடுத்தவிழுத்தவன்விரிக்கலுற்றனனால்,

வியாதனீன்றெடுத்தவிழுத்தவன் - சுகமுனி. (௪)

அதலமேமுதலசேவடிநடுவேயந்தரநாவியேழ்பரவை
உதரநீள்குடுமித்தடவரைக்குலமென்புயர்மரமயிர்நதிநரம்பு
மதிமனமுதுநல்லறமுலைகனல்வாய்மல்குநீர்நாவளியுயிர்ப்புக்
கதிருமிழ்பரிதிகண்மலர்படைப்புக்கருணையங்கட்கடைப்பிறழ்வே.

நாவி-உந்தி, உதரம்-வயிறு, என்பு-எலும்பு, உயிர்ப்பு-சுவாசம். (௫)

கேழ்கிளருடுவெண்பல்லிருங்கூற்றுக்கிளைத்தொளிதவழுநெட்டெயிறு
வாழிமாமாயைமுகிழிளமுறுவன்மாதிரஞ்செவிமறைகிளவி

தாழ்தவலோகநெற்றிமேலுலகுதலைபுயல்சரிகுழலாக
வேழிரண்டுலகுமுருவமாய்நின்றவிறைவனைச்சிலர்நினைந்திருப்பார்.

"எயிறு-பல், இளமுறுவல் - புன்சிரிப்பு, மாதிரம் - திக்கு, கிளவி - சொல், புயல்-மேகம். (௬)

கங்கையார்கழலுங்கதிர்செய்பொற்கலையுங்கடகமுமகுடமுங்குழையும்
சங்கொடுதிகிரிவெங்கதைதண்பூந்தாமரைமலரிவைதாங்கும்
அங்கையோர்நான்குந்திருமறுமார்புமருள்பொழிகமலலோசனமும்
திங்கள்வாண்முகமுமுறுவலுமாகச்சிலர்புயல்வண்ணனைநினைவார்.

கழலும் - திருவடியும், பொற்கலையும் - பொன்னுடையும், குழையும் - குண்டலமும். (எ)

காலினாற்கீழைவாயிலையடைத்துக்கலந்துலாமுயிர்ப்பினைவீக்கி
மூலமேமுதலாதாரமோராறுமுறைமுறையெழுப்பிமற்றதனால்
மேலதாம்பிரமத்தொளையதுவிண்டுவிண்ணெலாங்காணினுங்காண்பார்
சீலமேம்பட்டார்சிலர்பரந்தாமன்சேவடிபடரினும்படர்வார்.

காலினால் - மூலவாயுவினால், கீழைவாயிலை - அதோதுவாரத்தை, வீக்கி - பந்தித்து, பிரமத்தொளை - பிரமரந்திரம், விண்டு - வெடித்து. (அ)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அடைதருமிருநான்கங்கத்தணிபெறும்யோகம்வல்லார்
சுடர்விடுதெய்வயானஞ்சொல்லுபிங்கலைதானென்பர்
இடைபிதிர்யானமென்பரெழிற்சுழுமுனையைநாடி
நடைபெறுபிரமயானமாமெனநவில்வார்மன்னோ.

இருநான்குஅங்கம் - எண்வகையுறுப்புக்கள், அவைஇயமநியமாதிகள், தெய்வயானம் - தெய்வவிமானம், பிதிர்யானம் - பிதிர்விமானம், பிங்கலை, இடை-சுழுமுனை, இம்மூன்றும் மூன்றுநாடிகள் என்பர் யோகநூலார். (௯)

அத்தகையோகங்காமத்தன்றியேயாற்றுவோர்தாம்
முத்தியிற்பொருந்துவார்கண்மொழியணிமாதிவேட்ட
புத்தியால்யோகமுற்றும்புரிந்தவரிலிங்கமென்னும்
ஒத்திடுதனுவினாலெவ்வுலகினும்பயன்றுய்ப்பாரால்.

காமத்தன்றி - நிஷ்காமியமாக, அணிமாதி-அணிமாமுதலியன; அவை- அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிராகாமியம் ,ஈசத்துவம், வசித்துவம்என்பன, தநு-சரீரம், துய்ப்பார் - அநுபவிப்பார். (௧௦)

ஈங்கிதன்றீங்கிதன்றென்றெவையும்விட்டொழியநின்ற
ஆங்கதனுடைமைதானென்றறிவினாலறிந்துதன்னை
நீங்கலாவுணர்வினாலேநினைந்துகொண்டிருப்பானண்ணல்
ஓங்கியபரமாநந்தவுருவினைநினைந்தானுமால்.

அண்ணல் - கடவுள். (௧௧)

மஞ்சுசூழ்குடுமிவெள்ளிமலைக்கொழுந்திறைஞ்சினோர்க்கு
விஞ்சைதந்தருளுமின்பம்வெற்பிளங்கன்னிநல்கும்
செஞ்சுடர்வழங்குங்காந்திசெழுநிதியுதவுஞ்செம்பொற்
கஞ்சநாண்மலரின்வாழுங்கருங்கயனெடுங்கணுளே.

வெள்ளிமலைக்கொழுந்து-சிவபெருமான், வெற்புஇளங்கன்னி-பர்வதராஜகுமாரி, (உமாதேவி) செஞ்சுடர் - [redacted]. (கஉ)

கணந்திகழ்மருத்தென்போர்கள்கவின்பெறுவலிதந்தாளுவர்
வணங்கிடின்வருணனல்கும்வளர்புகழ்பிதிர்களென்போர்
குணம்பெறுபுதல்வர்நாளுங்குறைவறவருள்வர்வீரம்
இணங்குருத்திரர்தாமீவரியக்கர்காத்தருளுவாரால்

கவின் - அழகு. (கங)

வருமதிவயங்குங்காமம்வளருடல்புவிமானல்கும்
பொருவருமெழிறந்தாள்வர்போற்றுகந்திருவராயுள்
பெருகுமாறுதவிக்காப்பர்பிரிந்திடாப்புரவித்தேவர்
தருகுவர்தனம்வசுக்கடாளிணைவணங்குவோர்க்கே.

புவிமான் - பூமிதேவி, புரவித்தேவர் - அசுவினித்தேவர். (கச)

பாட்டளிமுரன்றுமூசுபணிமலர்ப்பாரிசாதத்
தோட்டதார்மார்பரெல்லாந்துறக்கமேயுதவுகிற்பர்
தாட்டுழாயலங்கன்மாலைத்தனிமுதலழியாமுத்தி
வீட்டினையளிக்குமன்றிவிழைவுறின்விழைந்தநல்கும்.

பாரிசாதத்தோட்டலர்மார்பர் - இந்திரர், துறக்கம்-சுவர்க்கலோகம், துழாயலங்கன்மாலைத்தனிமுதல் - திருமால். (கரு)

தழுவுறுகிளைஞர்தந்தைதாய்முதலெவருநாளில்
கழிவதுகண்டுங்கண்டுங்கண்டிலார்போலவாழ்வர்
ஒழிவறவுள்ளத்துள்ளேயுறைபராஞ்சுடரையோரார்
விழைவெனநின்றதுன்பவித்தினைவிளைப்பரம்மா.

ஓரார் - அறியார். (கசு)

விடங்கலுழெயிற்றுப்பேழ்வாய்வெயின்மணிச்சுட்டுநாகப்
படங்கெழுபரவைஞாலப்பாயலொன்றுண்டுசெய்ய
குடங்கைமெல்லணையுண்டெங்குங்குலவு * வற்கலைகளுண்டால்
அடங்கலாவாசைவேர்மற்றறிந்தவர்க்கிலதெனம்மா.

ஞாலப்பாயல் - நிலமாகியபடுக்கை, வற்கலை - மரவுரி. (கஎ)

பெற்றனவுவந்துமாந்திப்பிறந்தநல்லமுதமெல்லாம்
பொற்றருநிழலில்வைகும்புலவர்கூட்டுண்ணநல்கும்
கொற்றவன்றன்னைச்செய்யாள்கொண்கனையுலகங்காக்கும்
ஒற்றையந்திகிரியானையுளத்தினென்னுணர்கிலாரே.

புலவர் - தேவர், செய்யாள்கொண்கன் - திருமகள்நாயகன். (கஅ)

திருநதித்துறைகளெல்லாந்தீம்புனல்வறந்தவேயோ
விரிகடலமுதமூறும்விழுச்சுவைக்கனியவாய
மரனெலாமாண்டவேயோமாநிதிச்செருக்கிஞர்கண்
குருடெபட்டவர்போலென்ஞெகுறையிரந்துழல்கின்றூரால்.

வறந்தவேயோ-வற்றிப்போயினவோ. (கக)

வண்டிமிர்தெரியன்மார்வவண்டுழாயலங்கலானைக்
கண்டனையற்றைஞான்றேகளேந்தனையார்வமெல்லாம்
உண்டுகொனினக்குக்கிட்டாவொருபொருளென்றுசெவ்வாய்
விண்டனனென்னலோடும்விழுத்தவர்விளம்பலுற்றூர்.

தெரியல் - பூமாலே, வண்டுழாயலங்கலானை - வளவிய துளசிமாலையைத்தரித்தவனை, (கண்ணனை). (உ0)

மாயவனிலேயுரைத்தவத்தியாயம்—முற்றிற்று.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---

இரண்டாவது

## சௌனகாதியர் அன்பினிலேயுரைத்த வத்தியாயம்.

---

இறந்தொழிந்ததுவெங்கூற்றமென்றுளத்துணர்ந்தார்போலும்
அறந்தலைமணந்தசெங்கோலவர்பாரேழுங்காப்ப
நறுந்துழாய்ப்பகவன்றூதுநடந்ததாட்கமலப்போது
மறந்தனர்மாக்கள்வாளாவருபகல்கழிக்கின்றூரால்.

அறம் - தருமதேவதை, தலைமணந்த - கலந்த, துழாய்ப்பகவன் - கண்ணன். (க)

மழைதுளிமறுத்தகானின்வற்றனீண்மரமுமந்தண்
குழைதரவன்றிண்குன்றுங்குழைதரவமுதமூறும்
கழையிசைவடித்தான்செவ்விகாண்கிலாக்கண்கண்மஞ்ஞைத்
தொழுதியங்கலவமேயதுஞ்சலில்வறுங்கண்ன்றே.

குழைதர - தளிர்க்க, குழைதர - உருக, கழை - மூங்கில், (புள்ளாங்குழல்) மஞ்ஞை — மயில், கலவம் - கலாபம்(தோகை.) (உ)

காதமோர்நான்குதெய்வக்கடிகமழ்கமலேகொண்கன்
பாததாமரையிற்சார்த்தும்பசுந்துழாய்மோந்துமோந்து
தீதறவுயிர்த்திலானேற்செத்தவனுயிர்ப்பதெண்ணின்
ஊதுலேக்குருகுமற்றூங்குயிர்ப்பதுபோலுமாதோ.

கமலேகொண்கன் (திருமகள்நாயகன்) (ங)

இடிக்குரல்யானேவெண்கோடிறுத்தவனிணேப்பொற்றூளின்
கடித்துணர்புனேயாக்கைகள்கையறுகைகளாமால்

பொடித்தசெங்கதிர்போற்காந்திபொழிமணிச்சூட்டராவின்
நடித்தவனுமம்பாடாநாவழங்காதநாவே.

யானை - குவலயாபீடம் என்னும்யானை, இறுத்தவன் - ஒடித்தவன், கடி - வாசனை, பொடித்தசெங்கதிர் - உதிக்கின்றசெங்கதிர் (பாலசூரியன்.) (௪)

பணியிருவிசும்புதேடப்பழமறைமுடிவினின்ற
தனிமுதலடியிற்றாழாத்தலைதலையென்னலாகா
நினைதொறுமினியவாயநெடியவன்சரிதங்கேட்டுக்
கனிவுறுவுளமிரும்போகற்கொலோவறிகிலேமால்.

தாழா - வணங்காத, தனிமுதல் - திருமால். (௫)

தவப்பொழிமாரிகாப்பத்தடவரைக்கவிகையன்று
கவித்தவன்கோயில்செல்லாக்கான்மரத்தியன்றகாலே
உவப்பினினமுதமூறியொழுகுமால்சரிதங்கேளாச்
செவித்தொளைநச்சுநாகஞ்செறிவதோர்தொளைமற்றுமால்.

தவ-மிகுதியாக, வரைக்கவிகை-கோவர்த்தநகிரியாகியகுடை, கவித்தவன்-மறைத்தவன், மரத்தியன்றகாலே - மரக்காலே, தொளை - வளை, ~~மகதி - நாரதன் வீணைக்குப் பெயர்.~~ (௬)

மகதியாழ்முனிவனுதிமாதவரவையின்மாநீர்
அகனிலம்புரந்தகூர்வாளரசுளங்குழைந்துகேட்பச்
சுகமுனியுரைத்தவெல்லாஞ்சொல்லுவாயென்னலோடும்
வெகுளிவேரரிந்தசூதன்விழுத்தவர்க்கினிதுசொல்வான்.

மகதியாழ்முனிவன் - நாரதன். (௭)

சௌனகாதியரன்பினிலையுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௨௭.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---

## மூன்றாவது

## சுகமுனிதத்துவமுரைத்தவத்தியாயம்.

அலர்துழாயமலன்காதையமுதமூற்றெழுதலாலே
மலர்கதிர்த்திங்கள்போன்றுவயங்குவாண்முகத்தாய்மாநீர்
உலகெலாமுதித்தவண்ணமுரைத்திடவேண்டுமென்று
திலகவெண்குடையான்கூறச்சுகமுனிதெரிக்கலுற்றான்.

ஊற்றெழுதல் - சுரத்தல், வாள் - ஒளி. (க)

நன்னர்யாழ்முனிவன்பண்டுநான்முகன்றனைநோக்கி
முன்னவனீயேயின்றாய்முழங்குநீருலகமெல்லாம்

என்னைநீதவஞ்செய்வாயென்றேத்தினனிசைப்பச்செங்கால்
அன்னமீதுயர்த்தவண்ணலரிபதந்தெரித்தல்செய்வான்.

நன்னர் - நன்மை, இசைப்ப - சொல்ல, அன்னமீதுயர்த்தவண்ணல் - பிரமன்.

மரகதக்குன்றுபோலமாக்கடல்வளராநின்ற
முருகலர்துளவப்பைந்தார்முகுந்தனேமுதல்வனுமால்
அருள்பொழிகமலக்கண்ணலாங்கவனென்னைநோக்கித்
தருகெனவுலகமெல்லாந்தந்தனனென்றுசொற்றான்.

வளராநின்ற - கண்வளர்கின்ற, முருகு-வாசனை-தேன், தந்தனன்-படைத்தேன்.

ஆழியானயனுக்கோதவயனுநாரதற்குக்கூற
யாழுடைமுனிவியாதற்கிசைத்திடவியாதனன்பால்
சூழுமாறெனக்குச்சொற்றதொல்கதைநினக்குச்சொல்வேன்
வாழிவாளரசவென்றுமறைமுனிவழங்கலுற்றான்.

ஆழியான் — திருமால். (௪)

திகழ்பரந்தாமமாகிச்சின்மயமாகிநில
முகிலெனத்திகழ்ந்துதோன்றுமுழுமுதல்பார்க்கமூலப்
பகுதியின்மகானுண்டாகும்பகர்தருமகானினின்றும்
தகைமைசால்குணங்கண்மூன்றுந்தழுவகங்காரந்தோன்றும்.

முழுமுதல் -முழுமுதற்பொருள், மூலப்பகுதி-மூலப்பிரகிருதி, மகான்-மஹத்தத்துவம், குணங்கள்மூன்று — ரஜஸ்ஸத்வதமோகுணங்கள், தழுவகங்காரம் - ராஜஸாஹங்காரம், ஒலி - சத்ததன்மாத்திரை. (௫)

தலைமைசால்சிறப்புவாய்ந்ததாமதவகங்காரத்தின்
ஒலியெழுமொலியிற்றோன்றுமோங்குவான்வானிற்றோன்றும்
மலியுமூறாற்றிற்றோன்றும்வளியெறிவளியிற்றோன்றும்
நிலவொளியொளியினின்றுநிமிர்சுடர்க்கனலிதோன்றும்.

சால் - மிக்க, ஊறு - பரிசதன்மாத்திரை, வளி — வாயு, ஒளி-ரூபதன்மாத்திரை, கனலி-அக்கினி. (௬)

சுடர்விடுகனலிதன்னிற்சுவையெழுஞ்சுவையினின்றும்
படுபுனல்வந்துதோன்றும்பாய்திரைப்புனலினின்றும்
ஒடிவிலாநாற்றமுண்டாமோங்கியநாற்றந்தன்னின்
நெடுநிலந்தோன்றுமென்றுநிகழ்த்துநான்மறையுநின்றே.

சுவை—ரசதன்மாத்திரை, நாற்றம் - கந்ததன்மாத்திரை. (௭)

விண்ணொலிதழுவுங்காற்றுமேவுறுமொலியுமூறும்
நண்ணுமாலொலியுமூறுநலந்திகழுருவுஞ்செந்தீத்
தண்ணறலொலியுமூறுமுருவமுஞ்சுவையுஞ்சாரும்
மண்ணிதைநான்கினோடுமணத்தையும்புணர்ந்துமன்னும்.

அறல் - நீர். (௮)

ஒத்திராசதகுணத்தோடொன்றியவகங்காரத்தின்
பத்தெனுமிந்தியங்கள்படுமனந்தன்னோடம்மா
சத்துவகுணத்திேனாடுதழுவகங்காரத்துண்டாம்
அத்தகையிந்தியங்கடமக்கதிட்டானதெய்வம்.

பத்தெனுமிந்தியங்கள் - தசேந்திரியங்கள், அவை - ஞானேந்திரியகன்மேந்திரியங்கள், இவற்றுள்மெய்வாய்கண்மூக்குசெவியென்னுமைந்தும் ஞானேந்திரியங்கள், வாக்பாதபாணிபாயுருபஸ்தமென்னு மைந்தும் கன்மேந்திரியங்கள், அதிட்டானதெய்வம்-அதிதேவதை. (௯)

விரிதிசைகாற்றின்வெய்யோன்வெண்டிரைக்கடலஞ்செல்வன்
புரவியின்பெயரந்தேவர்பொஙகொளிவளருஞ்செந்தீ
உரைபெறுமமரர்வேந்தனுபேந்திரன்மறலிவேதாச
சொரிகதிர்த்திங்களென்பசொல்லுமத்தெய்வந்தாமே.

வெய்யோன் - சூரியன், கடலஞ்செல்வன் - வருணன், புரவியின்பெயரந்தேவர் - அசுவினிதேவர், உபேந்திரன் - திருமால், மறலி - யமன், வேதா - பிரமன். (௧0)

அறைந்ததத்துவத்தின்கூட்டத்தண்டமொன்றுண்டாமாங்குச்
சிறந்தபேரண்டந்தன்னிற்செப்புதற்கரியதாகி
நிறைந்தவெப்பொருளுந்தானாய்நிகரிலாதோங்கியெங்கும்
உறைந்துறையாதுநின்றவொருபெரும்புருடன்றோன்றும்.

அறைந்த - சொன்ன, அண்டம் - உலகு, (௧௧)

கலிநிலைத்துறை.

பாதம்பார்தலைபணியிருவிசும்புகண்பரிதி
வேதம்பாட்டுவெண்மதிமனந்திசைசெவியாக
ஓதுபேருலகனைத்துமோருருவமாம்புருடன்
ஆதியாமவதாரமென்றறைகுவரறிந்தோர்.

பார்-பூமி, விசும்பு - ஆகாயம், பரிதி - சூரியன். (௧௨)

உலகம்யாவுநல்லவயவமாகவினுரைக்கும்
அலகின்மாமறையந்தணராவுதிபசுசெய்
இலகியேயெழுமுத்தழலினிதவிநகர்வோர்
பொலியும்யூபமிம்முதலவப்புருடனேயாமால்.

அவயவம் - உறுப்பு, முத்தழல் - முத்தீ, அவை-ஆஹவநீயம், தக்ஷிணாக்நி, கார்ஹபத்யம்என்பன. (௧௩)

நீனிறக்கடல்வீழ்புவிநிமிர்ந்மருப்பெடுத்த
ஏனமாதியாவிலங்கொளிமரகதங்கடிக்கும்
தேனவாவுபைந்துளவினன்றிருவவதாரம்
வானமேத்திடநடந்தனவாம்பிலவுளவால்.

மருப்பு - கொம்பு, ஏனம் - வராஹம், கடிக்கும் - நிகர்க்கின்ற. (௧௪)

நான்முகத்திறேன்மனுவின்னநாரதன்றுருவன்
தேன்மிகுத்தநற்செழுந்தொடைவீடணன்விலங்கு
கான்மலர்க்குழற்கன்னியர்முதற்கதியடைய
மான்மலர்ப்பதத்தன்புசெய்தார்வரம்பிலரால்.

வீடணன் - விபீஷணன் கான் - வாசனை. (கரு)

கருந்துழாய்முகிலுந்தியங்கமலநாண்மலரின்
விரிஞ்சன்றோன்றினன்விதிக்குமாறறிகிலனாகி
இருந்தகாலையிற்றபவெனவெழுந்ததோர்மாற்றம்
தெரிந்துமற்றிதுசெப்பினர்யாரெனத்திகைத்தான்.

விதிக்குமாறு - படைக்குநெறி, தப - தவஞ்செய். (கசு)

விரிதடந்திசையாவையும்விழிமலர்பரப்பி
ஒருவர்தம்மையுங்காண்கிலனுளங்குழைந்தமரர்
பருவமாயிரம்பழுதிலாதற்றவம்புரிந்தான்
மருவிருந்ததண்மலர்ப்பொகுட்டுறைபழமறையோன்

அமரர்பருவம்ஆயிரம் - ஆயிரந்தேவவருடங்கள், மரு - வாசனை, (கஎ)

நீட்டுமாதவங்கண்டுமாலீறில்வைகுந்தம்
நாட்டியவ்வழிக்கார்முகிற்கொழுந்தெனத்தோன்ற
நாட்டநீருககண்டனனிறைஞ்சுநான்முகற்கு
வேட்டநல்வரங்கொடுத்தனன்படைத்தனன்விரிஞ்சன்.

நாட்டம் - கண். (கஅ)

பாரும்வானமும்பாதமுஞ்சென்னியுமாக
ஒருவுதண்டவுருவனுயர்வறவுபர்த்தோன்
நாரநாதியிற்றுநாராயணனென்னும்
பேரடைந்திடப்பெருகியநாரத்தினமர்ந்தான்.

நாரம் - நீர், நரஸமூகம் (க௯)

உறைந்தகாலையிற்றனியிராதுவந்தனனாகப்
பிறந்தவண்டமாம்விராட்டெனும்பிண்டத்தின்முகமேல்
சிறந்தவிந்தியஞ்சேர்குணஞ்செய்வநற்சித்தம்
நிறைந்தவாயுவிம்முதலெல்லாம்விளைமாதோ.

விராட்டெனும்பிண்டம் - விராட்டுருவம். (உ0)

விதுரனித்திறம்வீறுசான்மித்திரையுயிர்த்த
மதலையாகியமயித்திரேயன்வகுத்துரைப்ப
அதிசயத்தொடுமன்பொடுங்கேட்டனனென்று
முதுமறைக்கொழுந்தெனத்திகழ்முனிவரனுரைத்தான்.

மித்திரை - மைத்ரேயன்தாய். (உக)

என்றுசூதமாமுனியெடுத்தியம்பலுமுனிவர்
வென்றிவேலவன்விதுரன்முன்கேட்டவாறரசுக்
கன்றுநற்றவச்சுகமுனியறைந்ததையெமக்கும்
நன்றுகூறெனநான்மறையவர்க்கவனவில்வான்.

அரசு - பரிக்ஷித்து. (௨௨)

சுகமுனிதத்துவமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௭௬.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

நான்காவது

## உத்தவர்விதுரனுக்குக்கண்ணன்சரித்திரமுறைத்தவத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வித்தகன்விதுரனென்போன்வேழநன்னகரநீங்கற்
கொத்திடுநிமித்தமென்கொலொழிந்தநெக்காலமன்னோன்
எத்தலத்திருந்துகேட்டானினிதுநீயுரைத்தியென்று
மத்தவெங்களிற்றுன்கூறமறைமுனிவகுத்துக்கூறும்.

வேழநன்னகரம் - அத்திநபுரம், நிமித்தம் - காரணம். (௧)

அன்னமென்னடையினுள்பாஞ்சாலியையவையினுய்த்து
மின்னென நுடங்கியேங்கமென்றுகில்கவரலுற்ற
மன்னிளங்குமரன்றன்மேல்வாரநீவிடுதியென்று
முன்னவன்றனக்குச்சென்றுமொழிந்தனன்விதுரன்மாதோ.

துகில்கவரல் - ஆடையுரிதல், வாரம் - அன்பு. (௨)

கழைசுளிகளிநல்யானைக்காவலற்குரைத்தமாற்றம்
அழன்மணிச்சுடிகைநெற்றியாடரவுயர்த்தோன்கேளாப்
பழிபடுசிலதிபெற்றபாலனீயுறுதிகூறல்
ஒழிதிவிட்டொழிதியென்னவுருமெனவுலம்பினுனல்.

கழை - கரும்பு, சுளி - முறிக்கிற, அரவுயர்த்தோன் - துரியோதநன், சிலதி—வேலைக்காரி, உருமென - இடிமுழக்கம்போல, உலம்பல் - அதட்டல். (௩)

மறங்கனிந்தொழுகுகூர்வேன்மன்னவன்சிறுவனிவ்வா
றறைந்திடக்கேட்டலோடுமறத்துறையொழுகாநின்ற
செறிந்ததார்விதுரனென்பான்செருமலிதடக்கைவல்வில்
எறிந்தனனிறுத்துமற்றுங்கெழுந்தனன்போயான்மன்னோ.

அறத்துறை - தருமமார்க்கம், செருமலி - போர்த்தொழில்மிகுந்த, இறுத்து - ஒடித்து. (௪)

புண்ணியவேள்விசெய்துபுகழ்மிகவறத்தின்மைந்தன்
கண்ணகன்ஞாலங்காக்குங்காலையிற்றுவரையாதி
எண்ணறுந்தலங்களேகியிருநதியாடிவெய்யோன்
பெண்ணெனவுலகுபோற்றப்பிறங்குகாளிந்திசேர்ந்தான்.

அறத்தின்மைந்தன் - தருமபுத்திரன் காளிந்தி - காளிந்திநதி. (ரு)

கலிபுனல்யமுனையாற்றங்கரையினுத்தவனைக்கண்ணுற்
றலமொளிகழுமுபூணார்யாதவர்தீதிலார்கொல்
இலைவிரிதுளவத்தாரானெழிற்றிறமுரைத்தியென்ன
நிலைபெறுகாதலன்பனெஞ்சகங்கலுழ்ந்துசொல்லும்.

கலி - ஒலிக்கின்ற, உத்தவன் - பிருகற்பதிசீடன், வசுதேவன் தம்பியாகியதேவபாகன்மகன். (சு)

கலிவிருத்தம்.

எண்ணிடினுருச்செயலிலாதமுன்னவன்
கண்ணனென்றுதித்ததுங்கஞ்சனுக்குளம்
துண்ணெனவஞ்சினன்போற்சொற்கோகுலம்
நண்ணினன்வளர்ந்ததுநன்செய்ததும்.

கோகுலம் - இடைக்குலம். (எ)

பூதனைக்கும்மருள்புரிந்துதாளொனும்
தாதுறுமலர்கொடுசகடுதைத்ததும்
ஓதுரன்மருதிறவுருளச்சென்றதும்
மேதகுகன்றினமேய்த்தவண்ணமும்.

பூதனை - ஒரரக்கி, சகடு - வண்டில். (அ)

கன்றெனுமசுரனுற்கனியுகுத்ததும்
வன்றிறற்புள்ளின்வெவ்வாய்கிழித்ததும்
சென்றிடுநீணெறிச்செழும்பொற்குன்றையும்
வென்றுயர்பாந்தளின்மிடறுகீண்டதும்.

புள் - கொக்கு, (பகாசுரன்) பாந்தள் - பாம்பு, மிடறு - கழுத்து, கன்றெனுமசுரன் - வத்ஸாஸுரன். (கூ)

மறையவன்கன்றொடுமழவர்தம்மையும்
கறைகெழுமாயையிற்கரந்தபோர்ந்தவண்
குறைவறவாயர்தங்குமரர்தம்மொடு
நிறைதருகன்றுமாய்நிறைந்துநின்றதும்.

மழவர் - இளைஞர், மறையவன் - பிரமன்.

மலரவனேத்துறமகிழ்ந்தவண்ணமும்
தொலைவறுதேனுகாசுரனென்றேசொலக்

குலவுறுவெங்கரங்கொடுகரத்தினால்
நிலமிசைப்பனைவிழநின்றெறிந்ததும்.

மலரவன் - பிரமன், கரம் - கழுதை (௧௧)

பச்சிளம்புல்லுணப்பசுக்கண்மேய்த்ததும்
நச்சரவுச்சியினடங்குயின்றதும்
அச்சமுற்றிடவருமடவித்தீயினை
இச்சைசெயளையெனவெடுத்துண்டதும்.

நச்சரவு - நஞ்சையுடையபாம்பு, (காளியன்) அடவித்தீ - காட்டுத்தீ, (தாவாநலம்) அளை - வெண்ணெய். (௧௨)

பட்டபாதவந்தளிர்படைப்பதன்றியும்
மட்டுவேய்ங்குழலுமாந்தளிர்படைத்தல்போல்
தொட்டுநீள்விரலினாற்றொளைகள்பொத்தியும்
விட்டுநல்லிசையினைவிரித்தவண்ணமும்.

பாதவம் - மரம், பட்ட - பட்டுப்போன, (அறவுலர்ந்த) மட்டு - தேன் (௧௩)

கோவியர்பூந்துகில்கொண்டவண்மையும்
நாவினல்வேள்விசெய்தவத்தினோர்கடம்
ஆவியினிகரணிமாதர்போனகம்
மேவினரளித்திடவிருப்பினுண்டதும்.

போனகம் - சோறு (௧௪)

தாதலர்தாமரைத்தடக்கையொன்றினால்
ஏதமில்வரைக்குடையெடுத்துநின்றதும்
காதல்செய்கழையிசைகாட்டியாயர்தம்
மாதர்கள்யாரையுமருவுவண்ணமும்.

வரை - கோவர்த்தநமலை, கழையிசை - புல்லாங்குழலோசை, மருவு - சேர்கின்ற

தீங்தொடையாழ்முனிசெப்பக்கேட்டபின்
காந்தினிபுதல்வனைக்கஞ்சன்விட்டதும்
போந்ததுமதுரையிற்போந்துசாலையில்
ஏந்தெழில்வரையின்வில்லிறுத்தவண்ணமும்.

வரையின்வில் - மலைபோலும்வில், காந்திநிபுதல்வன் - அக்குரூரன். (௧௫)

கொடியவெங்குவலயாபீடக்கோட்டினை
அடியொடுமகழ்ந்தவெந்திறனுமார்ப்பொடும்
இடியெனமுன்னம்வந்தெதிர்ந்தமல்லர்கள்
படிமிசைவீழ்ந்துடல்பதைப்பமாய்த்ததும்.

குவலயாபீடம் - கஞ்சன்யானை, கோடு - கொம்பு, மல்லர்கள் . சாணூரன்முஷ்டிகன்என்னுமிரண்டுமல்லர்கள், படி - பூமி. (௧௬)

கந்தநாண்மலர்முடிக்கஞ்சற்கொன்றதும்
தந்தைதாய்மலரடிதாழ்ந்தென்னுன்மிக
நொந்தனிர்போன்மெனநுவன்றவண்ணமும்
சிந்தையையுருக்குமென்றெடுத்துச்செப்பினான்.

கந்தம் - வாசனை. (௧௮)

செப்பியவுத்தவன்பின்னுஞ்செப்புவான்
இப்புவியுக்கிரசேனற்கீந்ததும்
முப்புரிநூல்கர்க்கமுனியிற்பெற்றதும்
தப்பில்சாந்தீவினிதன்னைச்சார்ந்தவன்.

உக்கிரசேநன் - மதுராபுரிக்கரசன், தேவகன்தமையன், கஞ்சன்தந்தை, சாந்தீவினி - கண்ணன்வித்யாகுரு. (௧௯)

விதியினிற்பழமறைவிளம்பக்கற்றதும்
அதிசயத்தொடுகுருவகமகிழ்ந்திட
முதலைவவ்விடவுயிர்முன்பிறந்தவம்
மதலைநீகொள்கெனவழங்கிவந்ததும்.

மதலை - சிசு. (௨0)

துன்னினைகோகுலந்துனைவிற்றுன்புறும்
அன்னையைத்தந்தையையாற்றியவ்வழி
மன்னியகோவியர்மனந்தெருட்டெனத்
தன்னைமுன்விடுத்ததுஞ்சார்ந்ததன்மையும்.

துனைவின் - விரைவாக, (௨௧)

இக்குவார்சிலைமதனெனச்சொலைவனை
மக்கள்போற்கண்ணிலான்மகிழ்ந்துளான்கொலோ
அக்குரூரன்றனையத்திநபுரம்
புக்குநீயறிகெனப்போக்குவண்ணமும்.

இக்கு - கரும்பு, சிலை - வில், கண்ணிலான் - திருதராட்டிரன், அக்ரூரன் - ஸ்வபலகன் மூத்தமகன், இவன்சாத்யகிக்குத்தாயாதி, (௨௨)

மிக்கவெம்பகைக்குளம்வெருவினானெனத்
தக்கசீர்மதுரையிற்சார்ந்துளார்களை
ஒக்கலோடுறைகெனத்துவரையுய்த்தடி
முக்குறும்பறுமுசிகுந்தற்கீந்ததும்.

ஒக்கல் - உறவினர், துவரை - துவாரகை, முக்குறும்பு-காமவெகுளிமயக்கங்கள், முசிகுந்தன் - மாந்தாதாவின் இளையமகன். (௨௩)

தாமநீண்மார்பகஞ்சார்ந்துநீங்கலா
தேமுறுகமலையையெடுத்துவேட்டதும்

காமனையுயிர்த்ததுங்கமுறுசத்திய
பாமையேமுதலெழுபாவைமார்களை.

தாமம்-மாலை. ஏமுறு-களிக்கின்ற, உயிர்த்தது-பெற்றது, காமன்-ப்ரத்யும்நன்,

சீர்மணம்புரிந்ததுஞ்சினத்தின்மிக்கெழும்
தாழ்நரகாசுரன்றன்னைச்செற்றதும்
பார்மிசைப்பதித்ததும்பாரிசாதத்தை
ஓர்தினத்தீரெண்ணுயிரவுருக்கொடு.

நரகாசுரன் - வராகவுருவெடுத்தவிஷ்ணுவுக்குப்பூமிதேவியினிடத்துப்பிறந்தவோரசுரன். (உரு)

எண்ணிரண்டாயிரரென்னுமாதரை
நண்ணிமுன்வேட்டதுநலந்துய்த்தொவ்வொரு
தண்ணறுங்குழலினார்தநயரீரைந்தும்
பெண்ணொன்றுமாகவேபெற்றவண்ணமும்

தநயர் - புதல்வர். (உசு)

உருகுகாதலின்முனைமுயிர்த்தமைந்தர்க்குப்
பொருவறுதிருமணம்புணர்த்தவண்ணமும்
மருவுவாணசுரன்வளக்கையீர்ந்ததும்
நிருதனுக்கருளினனின்றவண்ணமும்

உயிர்த்த - பெற்ற, பொருவறு - ஒப்பற்ற - வாணாசுரன், மாவலியின்மூத்தமகன்.

தழற்படைப்பவுண்டரன்றனைச்செறுத்ததும்
வழுத்திடநாரதன்வந்துகண்டுகண்
டெழிற்கதிர்ப்பூணினாரீரெண்ணாயிரர்
நிழற்பொலிமனைதொறுநிலவுவண்ணமும்.

பவுண்டரன் - மாவலியின்நான்காவதுபுதல்வன். (உஅ)

நெடிதவைக்களத்துளோர்காணநிந்தைசொல்
படைமிகுதிறற்சிசுபாலனென்னுமோர்
கொ யனும்படிமிசைக்குலவுகாந்தியாய்
அடிமலரடைந்திடவளித்தவண்ணமும்.

சிசுபாலன் - சேதிதேசத்தரசன், காந்தி - ஒளி. (உகூ)

அசைவறுநியமந்தணருக்கீந்ததும்
மிசைவருபரிதியைவிரைந்துதீண்டுற
விசைதருவெவ்வராவியைந்தகாலமெண்
டிசைபுகழ்சமந்தபஞ்சகத்திற்சென்றதும்.

பரிதியைவிரைந்துதீண்டுறவிசைதருவெவ்வராவியைந்தகாலம் - சூரியக்ரஹணகாலம், சமந்தபஞ்சகம் - குருக்ஷேத்திரத்தில், த்ரேதாத்வாபரயுகசந்தியில் பரசுராமன் க்ஷத்திரியர்களை யெல்லாங்கொன்று அவர்களுடைய ருதிரத்தால் ஐந்து மடுக்களுண்டாக்கி, அவ்வுதிரத்தால்பித்ருதர்ப்பணஞ்செய்த இடம். (௩௦)

கஞ்சனாலிறந்திடுகோதன்மைந்தரை
அஞ்சொலாடேவகியளித்தியென்றலும்
துஞ்சியேசுதலலோகத்திற்றுன்னிய
மஞ்சரோராறுவரைவருவித்தீந்ததும்.

தேவகி - வசுதேவன்மனைவி, துஞ்சி - இறந்து (௩௧)

எத்தெழிற்சுபத்திரையென்னுந்தங்கையைப்
பார்த்தனன்மணஞ்செயப்பணித்தவண்ணமும்.
நாத்தழும்பாகச்சிரநவிற்றுமன்பர்க்காப்
பூத்திரட்சோலைசூழ்மிதிலைபுக்கதும்.

சுபத்திரை - கண்ணன் தங்கை, அபிமந்யன்தாய். (௩௨)

கொடுமைசெயரவுயர்கொடியனேமுதல்
அடையுமீரொன்பதாமகுரோணியாய்
மிடைதருசேனையைவெஞ்சமத்திறனால்
மடிதரப்புணர்த்தருமகிழ்ந்துநின்றதும்.

அரவுயர்கொடியன் - துரியோதனன், சமத்திறனல் - போரினல், (௩௩)

காதலோடைவரைக்காத்தவண்ணமும்
ஒதும்யாதவர்தமையொறுக்கும்வீரர்பார்
மீதிலையெனநினைந்தகற்றுமிகவுற்
பாதமென்றேபிரபாசத்துய்த்ததும்.

ஒறுக்கும் - வருத்துகிற, உற்பாதம் - துர்நிமித்தம். (௩௪)

கருமுகின்மாயையாற்கலந்துநான்மறை
மருவியமாதவர்வழங்குசாபத்தால்
பெருகியவேரகம்பிடுங்கிக்கைக்கொளாப்
பொருவருயாதவர்பொருதுமாண்டதும்

கருமுகில் - கண்ணன் (௩௫)

பன்னினனமுதனன்பதைபதைத்தனன்
தன்னையுமறந்தனன்சாற்றுமுத்தவன்
மன்னியவுணர்வினன்மனந்தெருண்டனன்
பின்னருஞ்சிலமொழிபேசுவானரோ

பன்னினன் - சொல்லினன், தெருண்டனன் - தெளிந்தான். (௩௬)

கடல்வருமதியினைக்கண்டுகண்டுபின்
இடைவருசெந்துவென்றெண்ணுமாறுபோல்
நெடியனைநரனெனநினைந்ததேயன்றி
அடிதொழயாதவரறிந்திலார்களால்.

செந்து - பிராணி, நெடியனை - திரிவிக்கிரமனை. (௩௭)

# மூன்றாங்கந்தம்.

## முதலாவது

## மைத்திரேயர்விதுரற்குத் தத்துவமுரைத்த வத்தியாயம்

என்னனுமுனிவர்சாபமெய்தியாதவர்களெல்லாம்
பொன்னுலகடைந்தார்தம்மிற்போர்புரிந்தென்றாயெங்ஙன்
அன்னவெந்திறல்கொள்சாபமுத்தவனடைதலின்றி
மன்னினனெனக்கடாவமன்னன்மாமுனிவன்கூறும்.

கடாவ - வினவ. (க)

சாற்றுதியுலகுக்கெல்லாந்தத்துவமென்றுசாபம்
மாற்றுபுகமலச்செங்கண்மாயவன்பணித்தவாற்றால்
ஊற்றெழுநறவப்பைந்தாருத்தவனுறுவர்போற்ற
வீற்றிருந்தனனன்மேவிவெதிரிகாச்சிரமத்தன்றே.

மாற்றுபு - மாற்றி, உறுவர் - தவசிகள். (உ)

காய்கதிர்ப்பரிதிபெற்றகடவுண்மாநதிநீராடி
ஆயிரமுகத்ததாகியலைகடலகடுகிண்டு
பாய்புனற்கங்கையாற்றின்பனிமலர்த்துறையினோர்சார்
மேயினன்மயித்திரேயனவனுழைவிதுரன்சென்றான்.

பரிதிபெற்ற கடவுண்மாநதி - காளிந்தி, அகடு - வயிறு (நடு), ஓர்சார்-ஒருபக்கம்.

கலிநிலைத்துறை.

பொறிசெறிக்குமம்முனிவனைவிதுரனும்போற்றி
முறைவகுத்துரைமூதுலகுதித்தவாறென்னே
மறைவகுத்தமெய்ம்மாதவன்மதலைநீதெருளாத்
துறைமற்றுண்டுகொலென்றனன்சோறலுற்றனனால்

பொறி - ஐம்பொறி, செறிக்கும் - அடக்குகிற, தெருளா - தெளியாத, சோற லுற்றனன் - சொல்லத்தொடங்கினன். (ஈ)

மறைகளென்பவைமருளறத்தெளிந்துமற்றின்னும்
அறைவதற்கரிதாயுயராநந்தமயமாய்
நிறைபரஞ்சுடர்நெடுமலர்க்கட்கடைசிறிது
பிறழமாயையிற்பிறந்தனனொருபெரும்புருடன்.

மருள் - மயக்கம், கட்கடை - கடைக்கண். (ச)

புருடன்றன்னுழைப்பொருவருஞ்சத்தியைவைத்தான்
உருவந்தோறுநற்சீவனென்றுரைப்பவனிவனே

மருவுசிவனும்புருடன்றன்மருங்கினின்மகானும்
பெருமகானிடைப்பிறங்ககங்காரமும்பிறந்த.

புருடன்றன்னுழை - புருடனிடத்தில், மருங்கினில் - இடத்தில், மகான் - மஹத்தத்வம், (ஃ)

சிறந்துதோன்றகங்காரமுன்செப்புமுக்குணத்தால்
நிறைந்துமூன்றகங்காரமாய்நிகழ்த்திடப்படுமால்
அறைந்ததாமதந்தழுவகங்காரத்திலைந்தாய்
உறைந்தமாத்திரைதம்மொடுபூதமைந்துதித்த.

நிகழ்த்திடப்படும் - சொல்லப்படும், ஐந்தாய் உறைந்தமாத்திரை - பஞ்சதன்மாத்திரைகள். (எ)

துதித்தராசதந்தழுவகங்காரத்திற்றுலங்கி
உதித்தவிந்தியம்பழுத்துமுன்னுரைத்தசத்துவத்தை
மதித்துமேவகங்காரத்தின்மனமொடுபொறிக்கு
விதித்தசிரதிட்டானமாம்விண்ணவருதித்தார்.

துலங்கி - விளங்கி. (அ)

உயர்மகானகங்காரமாமெலிமுதலைந்து
பயிலும்பூதமைந்திந்தியம்பத்தெனுமனமென்
றியலுந்தத்துவமோரிருபத்துமூன்றியற்றும்
செயறமக்கிலதனிமுதல்சேவடிபுனைந்த.

தனிமுதல் - ஒப்பற்ற முதற்பொருள். (கூ)

ஏங்குதத்துவமெமக்குநீயளித்திகணென்ன
நீங்கிநின்றனவழுத்தலுநிலவுபேரொளியாய்
ஒங்குமுன்னவனவற்றினைப்பொருந்தியொன்றாக்க
வீங்குநீரினிற்பிறந்ததுவிளங்குபேரண்டம்.

வழுத்தலும் - சொல்லுதலும். (கய)

எங்குமாய்நிறைதெய்வமோடியற்றுறுகருமம்
தங்குமிச்சையென்றுரைபெறுசத்திகளுடனே
அங்கெழாழுஞ்சுடரவிர்தருபொன்மயமாகிப்
பொங்குமண்டத்தின்விராட்டெனப்பொலிந்தனன்புருடன்.

அவிர்தரு - விளங்குகிற. (கக)

கலிவிருத்தம்.

தகைபெறுவிராட்டெனத்தயங்குபிண்டத்தின்
நகைபெறுநாடியுநவிற்றுபத்தென
இகலுறுவாயுவுமியையமுன்னமே
முகமிலங்கழலொடுமுளைத்தெழுந்தபின்.

நாடி - இடைபிங்கலை சுழுமுனைகள், பத்தென இகலுறுவாயு - தசவாயுக்கள், அவை - பிராணன். அபாநன், சமாநன், உதாநன், வியாநன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தநஞ்சயன் என்பன. (௧௨)

கண்ணுருவோடுவெங்கதிர்செய்பானுவும்
வண்ணநாச்சுவையொடுவருணதேவனும்
நண்ணியசெவியொலியொடுநற்றிக்குமேல்
எண்ணுதொக்கூற்றொடுமினியவாயுவும்.

பாநு - சூரியன், தொக்கு - மெய், ஊற்றொடும் - பரிசத்தோடும். (௧௩)

நாசிவாசத்தொடுநவையில்வாசிக்குப்
பேசியபெயர்பெறுபிறிவிறேவரும்
காசில்வாய்மொழியொடுகனலின்றேவனும்
வீசுகைதொடலொடுவிண்ணில்வேந்தனும்.

வாசத்தொடு - கந்தத்தோடு, வாசிக்குப்பேசிய பெயர்பெறு பிறிவிறேவர் - அசுவினிதேவர். (௧௪)

இதமுறுகோசநல்லெழில்செய்விந்துவை
விதியினில்விடலொடுவிரிஞ்சனும்மடி
துதிநடையொடுபேந்திரனுஞ்சொல்லிய
குதமலம்விடலொடுகூற்றுமாகவே.

கோசம் - குய்யம் (ஆண்குறி), உபேந்திரன் - விஷ்ணு, குதம் - அதஸ்த்தாநம், கூற்று - யமன். (௧௫)

கவ்வைசெய்புலன்களோர்பத்துங்காதலின்
செவ்வகைவிடயமாய்ச்சேர்குணங்களும்
அவ்வகைப்பொறிக்கதிட்டானதெய்வமும்
இவ்வகையுசித்தனவிராட்டுக்கென்பவே.

கவ்வை - துன்பம். (௧௬)

நடைபெறுமனத்தொடுநவிலுமையமும்
சுடர்தருதிங்களுந்தோன்றியானென
அடையகங்காரமுமறிவிலாமையும்
உடல்சினவுருத்திரனோடுமுற்றவே.

ஐயம் - சிலேஷ்மம், சந்தேகம். (௧௭)

புத்தியுந்துணிதரப்பொருந்துஞானமும்
ஒத்திறைவிரிஞ்சனுமுதிக்கவோங்குசீர்ச்
சித்தமுநினைப்பதுஞ்சிறந்தசீவனும்
அத்தகைவிராட்டுவுக்கடைந்தவென்பவே.

விரிஞ்சன் - பிரமன். (௧௮)

உரைதருசீவனையுற்றுமன்னுபு
பிரிதலிலாதநற்பிராணவாயுவும்
மருவுதனாற்செயல்வளர்புலன்களும்
அரசனுமணுக்கனும்போலுமாலரோ.

மன்னுபு - நிலைபெற்று. (கக)

முன்னுறுமுகத்தினந்தணர்முளைத்தனர்
மன்னவர்வாகுவில்வந்துமன்னினர்
பொன்னுறுவணிகர்பூந்தொடையிற்போந்தனர்
பின்னவர்தாளினிற்பின்னர்த்தோன்றினர்

வாகு - தோள். (௨0)

நால்வகைவருணமாநவின்றவோர்கடம்
பால்வருமுரியநற்கருமம்பார்மிசை
மேல்வளரன்பினால்விருப்பினாற்றிடின்
மால்பெரிதுவந்தவர்மகிழ்தருவனே.

ஆற்றிடின் - செய்தால், மால் - திருமால், மகிழ்ந்த - விரும்பினவற்றை. (உக)

தலையெனுமும்பரிற்சந்நதத்தினால்
மலைவுறுதேவர்கள்யாருவந்தனர்
நிலைபெறுதாளெனுநெடியபாரின்மேல்
உலவுராசதத்தினரர்வரதோன்றினர்

உம்பர் - மேலிடம், நரர் - மனிதர். (உஉ)

அணிதருநாபியாமந்தரத்தினில்
தணிவுறுதாமதகுணத்திற்சார்ந்தநால்
கணிதமில்பூதம்வேதாளங்கண்முதற்
பிணியுறுகுழிந்தகட்பேயின்கூட்டமே

நாபி - கொப்பூழ், அந்தரம் - இடம். (உ௩)

வீறுயர்விதியினால்விராட்டுத்தன்மையை
நூறியாண்டிறப்பினுநுவலொணுதெனின்
கூறுவார்யார்சிறிதேனுங்கூறினால்
தேறுமெய்யுணர்வுறுமென்றுசெப்பினன்

விதி - பிரமன், இறப்பினும்-கழிந்தாலும், நுவலொணுது -சொல்லவொண்ணுது.

என்னலும்விதுரனங்கியம்புவான்முனம்
மன்னுருக்குணமிலான்மருவுமாயையால்
துன்னுருக்குணத்தொடுதொழிலுற்றானென்றாய்
உன்னுறினென்கொலீதுரைத்தியாலென்றான்.

உன்னுறின் - நினைத்தால். (உ௫)

வேறு.

கனவிற்காணுங்கடுஞ்செயல்பொய்ப்பதும்
புனல்விகாரம்புனன்மதிக்குற்றதும்
நினையிற்பொய்ப்பதுபோனிகழ்மாயைசேர்
வினைகளொன்றும்விமலனுக்கில்லையால்

விகாரம் - வேறுபாடு (சலநம்). (உசு)

பற்றில்பண்ணவர்பற்றும்பரமனுக்
குற்றுநோக்கினுருக்குணமில்லையென்
றற்றநீங்குமருந்தவன்சொற்றலும்
வெற்றிவேற்கைவிதுரன்விளம்புவான்.

அற்றம் - குறைவு. (உஎ)

உந்திநாண்மலர்மேலயனுற்றதும்
சிந்தைகூர்தவஞ்செய்துபடைத்ததும்
பந்தநீங்குகாலத்தின்பருதியும்
வந்துதீங்கறமாயவன்காத்ததும்

உந்தி - கொப்பூழ், பந்தம் - கட்டு. (உஅ)

துதிசெயுஞ்சுராதியர்தோற்றமும்
மதியின்மிக்கமரீசிமுதலியர்
பதின்மர்வந்துபடைத்தபகுதியும்
விதியளித்தமனுச்செய்விழுப்பமும்.

சுரர் - தேவர், தோற்றம் - உற்பத்தி, விழுப்பம் - மேன்மை. (உகூ)

மனுவினன்னர்மரபும்வெம்மாயையும்
நினைவரும்பெருநித்தியஞானமும்
முனிவில்வண்மைமுனிவமொழியுமென்
வினையறவிளம்பென்னவிளம்புவான்.

நன்னர்மரபு - நன்மையாகிய சந்ததி. (ங0)

மைத்திரேயர் விதுரற்குத் தத்துவமுரைத்தவத்தியாயம்.

முற்றிற்று.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.



## இரண்டாவது

# மலரவன்சேற்றமுரைத்தவத்தியாயம்.

கலிநிலைத்துறை.

சாந்தமால்பதத்தன்பொடுதயங்குதென்றிசைக்கு
வேந்தனும்விறல்விதுரனிவ்வாறெலாம்வினவப்
பாந்தளோங்குபார்விசும்புபாதலஞ்சொல்பாகவதம்
ஓர்ந்ததன்மைகேளென்றுமித்திரைமகனுரைக்கும்.

பாந்தள் - பாம்பு, (ஆதிசேடன்) மித்திரைமகன் - மைத்திரேயன். (க)

ஊழிசென்றழியுலகெலாமுருகவெள்ளெயிற்றுப்
பாழிவாயழலூட்டுமெப்பஃறலைச்சேடன்
தாழுநன்பிலனுற்றுநற்சனகனேமுதலாச்
சூழுமாதவர்க்குரைத்தனன்றாயவத்தவத்தோர்.

வெள்ளெயிற்றுப் பாழிவாயழல் - நஞ்சு, (விஷாக்கினி) பஃறலை - பலதலைகள், பிலன் - பாதாளலோகம். (உ)

புலத்தியற்குமுன்புகன்றனர்புலத்தியன்புரிவின்
நலத்தநான்மறைப்பராசரனுளங்கொளநவின்றான்
நிலத்தினீள்கதைபராசரனிகழ்ந்தினனெனக்கு
வலத்தின்மிக்கசீர்நினக்குநான்வகுப்பலென்றுரைப்பான்.

புரிவின் - அன்பினால். (ங)

வெண்டிரைக்கனைகடலெனுமேவலிமூதுலகம்
உண்டுபைத்தலைநாகபோகத்தினிலுறங்கும்
தண்டுழாய்முகிலுந்தியந்தடத்தினிற்செலளத்தாட்
புண்டரீகமொன்றலர்ந்ததுபுவியெலாம்பூப்ப.

கனைகடல் - ஒலிக்கின்றகடல், பைத்தலை - படத்தோடு கூடியதலை, நாகபோகம் - சர்ப்பசயனம், (போகம் - பாம்பினுடல்).

நீலமால்வரைநெற்றியிற்பொடித்தசெங்கதிரே
போலவர்ன்சுடர்பொழிதருமுளரியம்பொகுட்டின்
மேலதாகவந்தெழுந்ததுவெயில்விரிபசும்பொற்
கோலமேவியகுலமறைமழலைவாய்க்குழவி.

- உச்சி. செங்கதிர் - சூரியன், மறைமழலை வாய்க்குழவி - பிரமன். (ரு)

கொங்குவிம்மியகொழுமடற்றாமரைக்குழவி
எங்குவந்தனமெவ்வழியிருந்தனமென்று
அங்கண்மாதிரமனைத்தையும்பார்த்ததுபார்ப்பத்
திங்கள்போற்றிகழ்திருமுகநான்கெனச்சிறந்த.

கொங்கு - வாசனை, மாதிரம் - திக்கு.

ஒன்றுங்காண்கலனுறைந்தசெந்தாமரைகண்டான்
பொன்றயங்குமிப்போதுவந்தெழுந்ததெங்கென்று
மன்றலம்புயமாமலர்நாளத்தின்றொளையில்
சென்றுதேடலுற்றனன்றனிச்செங்கணெட்டுடையான்.

நாளம் - தாள், செங்கணெட்டுடையான் - பிரமன். (எ)

சேயதாமரைமுதலவன்றேவர்தம்பருவம்
ஆயிரந்தனித்தேடியுங்காண்கிலனலந்து
மீயெழுந்தனன்விரிமலர்ப்பொருட்டுவீற்றிருந்தான்
தூயமாதவந்துணிந்தனன்புரிந்தனன்றொழுதே.

சேயதாமரை - செந்தாமரை. (அ)

காயும்வெஞ்சினக்கட்செவியரசுமேற்கவிப்ப
ஆயிரம்பணமணிபொழியலர்கதிர்க்கற்றைப்
பாயலந்தில்வானுருவினன்கிடந்தபைந்துளவ
மாயவன்றனைமலர்விழிமகிழ்வுறக்கண்டான்.

கட்செவி - பாம்பு, கட்செவியரசு - பாம்பரசனாகிய ஆதிசேடன், பணமணி - சிரோரத்நம், பாயல் - சயநம், அநதில் - அவ்விடம். (கூ)

கண்டுநெஞ்சகங்கனிந்துசெங்கைம்மலர்கூப்பி
அண்டகோடிகளனைத்தையும்படைத்தளித்தழிக்கும்
கொண்டல்வண்ணனைக்குறித்தலொல்லாத்தனிமுதலைப்
பண்டைநான்மறைப்பரமனைப்பரவினன்பணிந்தான்.

குறித்தலொல்லா - நினைக்கவொண்ணாத. (க0)

அருள்சுரந்தலையெறிசெழுந்தாமரையன்ன
திருநெடுங்கணுநோக்கியத்திருமறுமார்பன்
உரைசெய்ஞானம்வந்துறமுலகியாவையுநன்கு
தருதிநீயிருந்தவம்புரிந்தென்றனன்கரந்தான்.

திருமறு - உத்தமலட்சணமாகிய மறு, இது - திருமாலின் மார்பிலுள்ளது, இதற்கு ஸ்ரீவத்ஸம் என்றுபெயர். (கக)

பெருகுதண்புனலலையினூற்பெரிதலைமலர்மேல்
பொருவருந்தவமீட்டுநூறாண்டயன்புரிந்தான்
மருவிஞானம்வந்துறககடுவளியெறிபுனலைப்
பருகியோங்குலகியாவுமம்மலர்வயிற்படைத்தான்.

கரந்தனன் - மறைந்தான், கடுவளி - பெருங்காற்று. (கஉ)

உரைசெய்மானகங்காரமொண்பூதமிந்திரியங்கள்
மருவுதெய்வமன்னவிச்சைதாவரம்விலங்காதி
நரர்கடேவர்கண்முதலினோரெண்முறைநவின்ற
விரியுமோர்பத்துவிதம்பெறுபடைப்பினைவிளம்பின்.

அவிச்சை - அஞ்ஞானம், தாவரம் - மரமுதலிய நிலைபேறுடைய வுயிர்கள், விலங்கு - மிருகம். (கங)

முந்துவந்தமான்மொழியகங்காரமொண்பூதம்
இந்தியங்களவ்விந்தியமியைந்துறுதேவர்
அந்தில்வாய்தமத்தவிச்சையென்றறுவகைப்படைப்பு
நந்தலில்பிராகிருதம்வைகிருதத்தைநவில்வாம்.

மான் - மஹத்தத்வம், பிராகிருதம் - இயற்கையாயிருந்தது, வைகிருதம் - விகாரப்பட்டது. (கச)

எத்திநான்முகனேழெனப்படைக்குறுபடைப்புப்
பூத்துக்காய்ப்பவும்பூவின்றிக்காய்ப்பவுமொருகால்
காய்த்துப்போவவுங்காழ்புறம்படைப்பவுங்கஞலித்
தேத்துளித்தபூங்கொடிகளுமுதலவாந்தெரிக்கின்.

காழ் - வயிரம், கஞலி - பொலிந்து, தேத்துளித்த - தேனைத் துளித்த. (கரு)

இயங்குநற்பசுமுதலியவிருகுளம்பினவும்
வயங்குமொட்டகமாமுதலொருகுளம்பினவும்
நயங்கொளைந்நகம்பெறுமரிநரிகரிபறவை
பயங்கொளுஞ்சுருமுதலியபலவுமெண்படைப்பே.

ஐந்நகம் - ஐந்துநகம், அரி - சிங்கம், பயம் - நீர், உஞ்சுரு - நீர்வாழ் சிறுசெந்து.

நவப்படைப்பெனநவிலுபநரர்களைநலஞ்சேர்
புவித்தலத்தினிற்படைத்திடுமொளிடர்பொற்பும்
உவப்புறுந்திருத்தேவர்கள்பொற்புமங்கொழியாத்
தவத்தின்மிக்குயர்சனகனாதியர்பெறுகுவால்.

நவிலும் - சொல்லுகிற, பொற்பு - அழகு (கள)

பத்தென்றோதிடமலரவன்படைத்திடுபடைப்புச்
சத்துவத்திலுற்றேவர்கள்பிதிரர்சாற்றசுரர்
சித்தர்சாரணர்சிறந்தகந்தருவர்களியக்கர்
மொய்த்தபூதங்கள்கின்னராதியாமொழிவார்.

மலரவன் - பிரமன், மொய்த்த - நெருங்கிய. (கஅ)

உணர்த்துநால்வகைப்படைப்பும்வைகிருதமாவுரைப்பார்
குணத்திலாகியபடைப்பினைக்கூறிடினிறைமுன்
புணர்த்துபின்னிவையெனப்புகன்முறையின்றிப்புகுந்து
தணத்தல்சேர்தருநீர்ச்சுழிபோற்றயங்குறுமால்.

தணத்தல் - நீங்கல். (க௯)

படைக்குமிப்பெரும்படைப்பெலாப்பண்ணவராலும்
கடக்கருந்திறற்காலத்தைவிளக்குறும்படைப்புத்

துடைக்கக்காரணமாகியகாலத்தைச்சொல்வல்
அடைக்குமைம்பொறிவிதுரவென்றருந்தவனறைவான்.

பண்ணவர் - தேவர், கடக்கருந்திறல் - கடத்தற்கரிதாகிய வலியுள்ள, துடைச்க-சங்கரிக்க. (உ0)

மலரவன்றோற்றமுறைத்தவத்தியாயம் முற்றிற்று.
ஆகத் திருவிருத்தம் உஎ.
ஸ்ரீ கிருஷ்ணசகாயம்

மூன்றாவது
காலமுறைத்தவத்தியாயம்.

உருவமற்றவுரைநிகழ்காலமாம்
பொருளினுக்குப்பொருந்தெழிலுண்மையாக்
கருதுமாக்கைகொலென்றுகற்பித்திட
மருவுமோர்பரமாவணுமன்னனே.

உருவமற்ற - வடிவில்லாத, ஆக்கை - உடம்பு, பரமாவணு - பரமாணு. (க)

காலமாயபொருட்குக்கருதிய
தூலமாயவுருவமுஞ்சொல்குவேன்
ஏலுநுண்பரமாணுவிரண்டுறின்
கோலமாரணுவொன்றெனக்கூறுவார்.

தூலமாயவுருவம் - ஸ்த்தூலசரீரம். (உ)

பொருவிலாவணுமும்மைபொருந்துறின்
மருவுசாளரத்தூடுவயங்குமெவ்
விரவிதன்கதிராலிவங்குற்றிடும்
திரிசரேணுவெனும்பெயர்சேருமால்.

மும்மை - மூன்று, சாளரம் - பல்கணி, இரவி - சூரியன். (ந)

சொல்லுமன்னதுமூன்றுதுடியதாம்
புல்லுமூன்றுதுடியும்புகாற
ஒல்லும்வேதையாம்வேதையுமூன்ற
எல்லுடல்லவமாகவிசைப்பவே.

புகர் - குற்றம். (ச)

ஓதுகின்றலவமொருமூன்றுறின்
நீதிவந்தநிமிடநிமிடமும்
கோதகன்றொருமும்மைகுலவிடின்
தீதெறிந்தகணமெனச்செப்புவார்.

கோது - குற்றம். (ரு)

வட்டவெண்குடையாய்துவாபரத்தெல்லைவருக்கிணீராயிரமாமால்
கட்டுரைகடக்குஞ்சடுங்கலியெல்லையாயிரமாண்டெனக்கரைவர்
எட்டுநூறறுநூறீரிருநூறாங்கியலிருநூறெனுமாண்டு
பட்டநாலூழிமுறைமுறைபொருந்தும்பாற்படுசந்தியாப்பகர்வர்.

கட்டுரை - உறுதிச்சொல், கடக்கும்-அதிக்கிரமிக்கிற. (௧௩)

நால்வகையூழியாயிரநடக்கினுன்முகற்கோர்பகல்பகல்போம்
காலையீரேழுமனுவுமிந்திரனுங்கழிவர்மண்ணுலகொடுவிசும்பின்
மேலிரண்டுலகுந்தீப்படச்சேடன்விளங்குவாண்முகத்தழல்பரகும்
சாலுமவ்வழலாற்றவர்மகாலோகத்தவர்சனலோகமேசார்வார்.

நான்முகன் - பிரமன், தழல் - விஷாக்கிநி. (௧௪)

ஓரிருபாரத்தங்கழியுமேன்மலர்வீட்டுறைதருநான்முகனுலக்கும்
ஏர்கெழுபாரத்தமிரண்டுவெண்டரங்கமெடுத்தெறிதடங்கடன்முகட்டின்
கார்முகில்கமலக்காடுபூத்துறங்குகாட்சிபோற்கண்வளர்துளவத
தாரவன்றனக்கோரிமையெனவுரைப்பர்சாற்றுமவ்வுரையுபசாரம்.

உலக்கும் - இறப்பன், தரங்கம் - அலை, கண்வளர் - நித்திரைசெய்கிற, துளவத்தாரவன் - துளசிமாலையைத் தரித்த திருமால். (௧௫)

எற்படுகதிர்முத்தெறிதிரைப்பிறந்தவின்னிளங்கற்பகக்கொழுந்து
வெற்பினில்வளருந்தன்மையேபோலவேரியங்கமலைவீற்றிருக்கும்
பொற்புலாமார்பனுந்தியங்கமலப்போதிடையெண்கணன்பிறந்த
கற்பமாங்கதனைவீறுசால்பாற்பகற்பமென்றெடுத்தனரிசைப்பார்.

எல் - ஒளி, திரை - அலை, வேரி - வாசனை, கமலை - திருமகள். (௧௬)

வளமலிந்தநேகவண்டகோடிகடாமணிவயிற்றொருபுடைகிடப்ப
அளவிகந்தொன்றாய்நித்தியமாகியாநந்தவுருவமாயமர்வான்
துளவணிந்தருளுமாயவனென்றுசொல்லியமுனிவரன்விதுர
உளமுவந்தயன்றன்படைப்பவையின்னமுணர்ந்துவென்கேளெனவுரைப்பான்.

அளவிகந்து - அளவுகடந்து. (௧௭)

காலமுரைத்த அத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௬௭.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.



நான்காவது

## சனகாதியர்தோற்றமுரைத்த வத்தியாயம்.

கலிநிலைத்துறை.

மாற்றுதற்கரிதாயதாமிச்சிரம்வருத்துச்
சாற்றுமந்ததாமிச்சிரமோகமாமோகம்

போற்றருந்தமமெனப்புகலேலந்தையும்பசுந்தேன்
ஊற்றிருந்தொழுகம்புயத்தவன்முனமுயிர்த்தான்,

அம்புயத்தவன் - பிரமன், உயிர்த்தான் - படைத்தான். (௧)

இனையவீன்றதென்னென்றுதன்னறிவினையெள்ளிப்
புனைபசுந்துழாய்ப்பூந்தொடையமலனைப்போற்றி
நினைதல்செய்தனனினைக்குறுமனமலர்மிசையின்
சனகனாதிநற்றவத்தினர்நால்வர்வந்தெழுந்தார்.

மனமலர்மிசை - மனமாகிய தாமரைமலரின்மேல். (௨)

எழுந்தமாதவரின்னகைவாண்முகநோக்கி
மொழிந்தனான்மறைமுதல்வனீர்படைதிரென்றிசைப்ப
ஒழிந்தநெஞ்சினருவந்திலரவ்வுரைபசுந்தேன்
பொழிந்ததண்டுழாய்ப்புனிதனைநினைந்தனர்போயார்.

வாள் - ஒளி, உவந்திலர் - மகிழ்ந்திலர், போயார் - போயினர். (௩)

படைத்திலாரிவர்படைக்கெனப்பணித்தநவென்மாற்றம்
கடப்பதென்னெனச்சீறினன்கனன்றவச்சீற்றம்
அடக்கமற்றடங்காதவனணிமணிப்புருவத்
திடைப்பிறந்தனனீலலோகிதனெனவிசைப்ப.

சீறினன் - கோவித்தான், சீற்றம் - கோவம். (௪)

நீலலோகிதனெனநிலனிகழ்ந்திடப்பிறந்த
பாலலோசனனழுதலாற்பங்கயப்பொருட்டு
மேலமர்ந்துறைவிமலனைநோக்கினனெனக்குத
சாலுநாமமென்னிடனெதுசாற்றுகென்றனனால்.

நிலன் - நிலத்திலுள்ளார், பாலலோசநன் - நெற்றிக்கண்ணன். (௫)

பெருமநீயழலாற்பெயருருத்திரனாகும்
விரியும்வான்வளிவெங்கனலபுனல்புவிநெஞ்சு
தெரியுமிந்தியஞ்சீர்கெழுதுறக்கம்வெண்டிங்கள்
பரிதியோர்திகழ்பிராணனென்றிவைபகரிடனால்

அழலால் - அழுதலால், துறக்கம் - சுவர்க்கம். (௬)

உவவுவெண்மதிவாண்முகத்துமைமுதலாகப்
புவிவழுத்துபல்பேருடைப்பூவையைப்புணர்வாய்
பவன்முதற்பலநாமமும்படைத்தியாற்படைத்தி
அவிருந்திங்களங்கொழுந்தணியமலவென்றறைந்தான்.

உவவு - நிறைவாகிய, வாள்முகம் - ஒளி பொருந்திய முகம். (௭)

கடைக்கண்மேயுகுமுருத்திரகணத்தையக்கடவுள்
படைக்கநோக்கியிப்படைப்புநீதவிர்கநீடுலகம்

துடைக்குமிவ்வெனத்தோடவிழ்மலரிறைசொல்ல
விடைக்கொடிப்பிரான்விதிக்குமத்தொழில்விடுத்தனனால்.

தவிர்க - ஒழிக, துடைக்கும் - அழிக்கும், இவ்வென - இவையென்று, தோடவிழ்மலரிறை - பிரமன், விடைக்கொடிப்பிரான் - உருத்திரன். (௮)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அத்திரிமரீசியங்கிராவசிட்டனகத்தியன்புலத்தியன்புலகன்
மெய்த்தவப்பிருகுநாரதன்கிருதுமேதக்குதக்கனென்பவர்கள்
சித்தநெஞ்சுயிர்ப்புச்செவிதிருநாவிதிகழுமெய்குறங்குவெண்டிங்கள்
ஒத்தொளிர்வதனம்பெருவிரற்றலையென்றரைபெறுமிடனில்வந்துதித்தார்.

உயிர்ப்பு - சுவாசம், குறங்கு - தொடை, விரற்றலை - விரல்நுனி. (௯)

மலரவனிழலிற்கருத்தமனென்னுமாதவன்றோற்றினன்வலப்பால்
முலையினிற்றருமம்பிறந்ததுபாவமுதுகினிற்பிறந்ததுமனத்தில்
இலகெழிற்காமம்பிறந்ததுபுருவத்திடைப்பிறந்ததுதழற்சீற்றம்
ஒலிகடற்பவளமனையகீழிதழினுலோபம்வந்துதித்ததுமாதோ.

நிழல் - சாயை, தழல்சீற்றம் - நெருப்புப்போலுங்கோவம். (௰)

முழுக்கவின்கலுழுமுளரிவாண்முகங்கணான்கினுமுதுமறைபிறந்த
எழுத்தொடுசெஞ்சொலியலெலாம்பிறந்தவேழிசைபிறந்தவெண்பிறந்த
பழுதறுதொன்னூல்கள்யாவையும்பிறந்தபாடல்சான்றொழுகுலப்பான்மை
தழைத்தநல்வேள்வியொழுக்கொடுவழக்குத்தண்டமென்றுரைப்பனபிறந்த,

முழுக்கவின் - பேரழகு, இயல் - இலக்கணம், ஏழிசை - குரல்முதலாயின. (௧௧)

பொற்றருநிழல்வாழமரரைப்பயந்தான்பொறிமுதலடக்கியமுனிவர்ப்
பெற்றனன்பெருகாதிப்படைப்பென்னைபெருகுமாறெனநினைந்திருப்ப
உற்றதண்மலரோன்மெய்யிரண்டோர்கூற்றினுதித்தனளெழிற்சதரூபை
மற்றொருகூற்றினுயர்சுவாயம்புமனுவெனுமன்னவன்பிறந்தான்.

பயந்தான் - பெற்றான், மெய் - உடம்பு, கூறு - பங்கு. (௧௨)

தோற்றியமனுவின்வாண்முகனோக்கிச்சுடர்த்தொடியிவட்புணர்ந்தீங்குப்
போற்றுதிஞாலமென்றுசெங்கமலப்பூம்பொகுட்டுறைபிரான்புகல
மாற்றரும்பசும்பொன்மால்வரைமருளப்பணைத்ததோண்மனுமடக்கிளியின்
சாற்றுமென்மழலையெழிற்சதரூபைதடமுலைமணந்தனன்மாதோ.

கமலப்பூம்பொகுட்டுறை பிரான் - பிரமன், பசும்பொன் மால்வரை - மேருமலை, பணைத்த - பருத்த, கிளியின் - கிளிபோல, மணந்தனன் - சேர்ந்தான். (௧௩)

உயர்புகழ்ப்பிரியவிரதனுத்தானபாதனென்றுலகெடுத்துரைக்கும்
புயலுறழ்தடக்கைப்பூநறுந்தொடையற்புதல்வரோரிருவர்தோன்றினரால்

வெயின்முகந்தவழவிரிந்துமட்டுயிர்த்துவிரைகமழ்தாமரைமணந்த
கயலெனப்பிறழ்ந்துகளித்தசேயரிக்கட்கன்னியர்மூவர்வந்துதித்தார்.

புயல்உறழ் - மேகம்போன்ற, மட்டுஉயிர்த்து - தேனைச்சிந்தி, விரை - வாசனை.

ஆவெனுமெழுத்தைமுதலுறுநாமத்தரிமதர்மழைக்கண்ணாடன்னை
ஓவறுகாட்சிருசியெனவுலகமுரைக்குமாதவற்குதவினளால்
தேவிணைக்குறித்தபெயர்புணர்நாமச்செல்வியைக்கருத்தமற்களித்தான்
பூவைநேர்பிரசூதியைப்பசுந்தேறல்பொழிந்ததார்த்தக்கனுக்கீந்தான்.

ஆவெனுமெழுத்தை முதலுறு நாமத்தரி மதர்மழைக்கணாள் - ஆகூதி, தேவிணைக் குறித்த பெயர்புணர் நாமச்செல்வி - தேவகூதி. (கா)

இசைக்குமிம்மூவர்மாபிறனுலகமெங்கணுநிறைந்தனவென்னந்
திசைக்கொருதிலகமன்னவராகக்கற்பமென்றெடுத்தனர்செப்பத்
தசைக்குவெம்பறைவொடர்தருநேமித்தனிமுதலேனமாய்த்தடலுள்
அசைத்திடுமருப்பினவனியையெடுத்ததறைகுவமெனாமுனிபரைக்கும்.

தசைக்கு - மாமிசத்தின் பொருட்டு, நேமி - சக்கரம், ஏனம் - வாரகம், மருப்பின் - கொம்பினால். (கக)

சனகாதியர் தோற்ற முறைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—அரு.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

ஐந்தாவது
## ஆதிவாாக நிலையுரைத்தவத்தியாயம்

கலிநிலைத்துறை.

மருககமழ்ந்ததண்மலரவன்முகமனுநோக்கிப்
புரத்தியென்றனைபுவியகன்புவியெலாம்பொங்கிக்
கரைக்குறும்பெறிகருங்கடல்கலந்ததாலென்றே
உரைக்கமாயனையுன்னினனோதிமமுயர்த்தோன்.

புரத்தி - காக்கக்கடவை, ஓதிமமுயர்த்தோன் - பிரமன். (க)

மாக்கண்வெம்முளைமலர்மகளமர்ந்துறைமார்பன்
போக்கில்பொன்னிறம்பொதியிதழ்ப்பூநதவிசுறைவோன்
மூக்கினின்றுமாண்கேழலாய்மூரிவானளவக்
கோக்குந்தெண்டிரைககருங்கடலளறெழக்குளித்தான்.

போக்கு - குற்றம், ஆண்கேழல் - ஆண்பன்றி, அளறு - சேறு, குளித்தான் - முழுகினான். (உ)

குளித்ததெண்டிரைக்குரைகடலெழுந்துளிதெறிப்ப
முளைத்தகோடுடைமுழுமுதல்வாாகமாமேனி

திளைத்ததண்புனறுளியிலைவயெனமகிழ்சிறந்தார்
அளிக்குலஞ்செறிமலரவனுலகின்வாழமரர்.

குரை - ஒலிக்கிற, கோடுடை - கொம்பையுடைய, மலரவனுலகம் - பிரமலோகம்.

படும்பனிக்கயத்தரும்புமோர்பங்கயம்பிடுங்கிக்
கடந்திரைத்தெழுகருங்கவுட்களிறெழுந்தென்னத்
தடங்கொள்வெண்மலையெனவலைதவழ்கடல்கவிழ்ந்த
நெடுந்திண்பார்கொடுநிவந்ததுநீண்மருப்பேனம்.

பனிக்கயம் - குளிர்ச்சியாகிய தடாகம், கடம் - மதநீர், கவுள் - கபோலம், நிவந்தது - எழுந்தது. (ச)

அவிர்பொலங்கிரியனுவெனவளர்ந்தவான்கேழல்
தவளவார்பிறைமருப்பிடைத்தரணிகொண்டெழலும்
புவியெனுதுநீகவரலென்றுரைபலபுகன்றான்
கவனமால்களிறென்னவநெதிர்ந்தபொற்கண்ணன்,

பொலங்கிரி - பொன்மலை, (மேருமலை) எனுது - என்னது, நீகவரல் - நீகவராதை, பொற்கண்ணன் - இரணியாக்ஷன். (ரு)

மற்கண்டோங்கியமல்லலந்தடம்புயம்வான்றோய்
கற்கண்டாலெனப்பணைப்பவெங்கடுங்கதைதாங்கி
நிற்கண்டாயினிநீரிடையொளித்திடலென்னுப்
பொற்கண்டீயுகப்புணரிவாய்நடந்தனன்புடைத்தான்.

பணைப்ப - பருக்க, தீயுக - நெருப்புச்சிந்த, புணரிவாய் - கடலில். (சு)

விண்டதேகொலோவிரிகதிர்பரப்புபொன்விசும்போ
டண்டகோளமென்றங்கண்வானவர்கிடந்ததிரக்
கொண்டலாமெனவதிர்ந்துவெங்கூற்றனுன்புடைத்த
தண்டம்வல்லையிற்பறித்ததுதனிமுதல்வராகம்.

விண்டதேகொலோ - வெடித்ததோ, கொண்டல் - மேகம், தண்டம்-கதாயுதம்.

பாழிவாய்ப்பெரும்பாந்தள்போற்சீறுமவ்வவுணன்
ஊழியாரழலொழுகுவெஞ்சூலமொன்றெறிந்தான்
வாழிவானவர்மலர்பொழிந்தேத்தவெந்தழல்வாய்
ஆழியம்படையாங்கஃதழிவுகண்டதுவே.

ஆழியம்படை - சக்ராயுதம். (அ)

அலையின்மீதுமாவராவணைமீதுநல்லாலின்
இலையின்மீதும்வாழிறையவனுகியவேனம்
மலையின்மீதுவீழிடியெனமருவுபொற்கண்ணன்
தலையின்மீதும்வாண்முகத்தும்வந்தடித்திடத்தளர்ந்தான்.

மாவராவணை - சேஷசயனம். (கூ)

குருதிமாமழைகள்மழைமண்மழைகுலவப்
பரிதிபோல்வெயில்பரப்புமுச்சிகைப்படைபற்றாஉ
நிருதமாதர்கடுகிலொழிந்தமேகர்மேநாவெகுளக்
கருதிமாயைகள் புரிந்தனன்கனல்செய்பொற்கண்ணன்.

குருதி - உதிரம், முச்சிகைப்படை - முக்கலைக்குலம், பற்றாஉ - பற்றி, துகிலொழிந்து - ஆடையின்றி, (கo)

பையராவணைமேற்றுயில்பரகயச்செங்கண்
ஐயரேருமானேனை முன்னவுணர்கோனென்றும்
பொய்யின்வாழ்க்கையான்வெருண்டனன்புரிந்தவம்மாயை
வெய்யபானுமுன்மின்மினிபோல்விளங்கினவால்

பை - படம். (கக)

என்னைநீவிளையாடவீங்கிவணுடைனின்னே
மன்னுகின்டிறலவுணனைமாய்த்தியெற்போகிலர்
தன்னும்வானர்வலியென்றுசொலாதியேனத்தைப்
பொன்னக்காமரைப்போதுறைநான்முகன்புகழ்ந்தான்

வாய்த்தி - சொல்லக்கடவை, ஆதியேனம் - ஆதிவராகம் (கஉ)

ஏற்றவெண்ணிறங்கேழ்லோரிளங்கதிர்திங்கட்
கீற்றெனத்திகழ்மருப்பினுற்கேழ்கிளாகலம்
ஊற்றிருந்துசெங்குருதியாறொழுகிடப்பிளப்ப
மாற்றருந்திறற்பொற்கணனுருயிர்மாய்ந்தான்.

அகலம் - மார்பு. (கங)

நீட்டலின்றியேதிகழ்தருபழமறைதெரிந்தோர்
வேட்டல்செய்யுமவ்வேள்வியினுருவவாண்கேழல்
கோட்டினேந்தியநெடுநிலந்கோளராவரசின்
சூட்டின்வைத்ததுசூடரடியிமையவர்துதிப்ப.

நீட்டல் - எழுதுதல், அராவரசு - ஆதிசேடன். (கச)

எனவுமெண்டிசைகடந்துவீங்கெழும்வலித்திணிதோட்
கனகக்கண்ணனையார்கண்ணனேடிகளுமாறவன்கொல்
வினைமுருக்கியமெய்த்தவவிளம்பெனவிதுரன்
மனமுவப்புறவுரைத்தனனுயர்மயித்திரேயன்.

கனகக்கண்ணன் - இரணியாக்ஷன். (கரு)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பூசன்மேலெழுந்துகாமன்பொருசிலைகுழையவாங்க
மாசிலாக்குழவித்திங்கள்வந்தெழுமாலைப்போதில்

பாசிழைப்பரவையல்குற்படர்முலைத்திதிகாமுற்றுக்
காசிபன்றன்னைநோக்கிக்கலவியிற்களிப்பேமென்றாள்.

பூசல் - போர், வாங்க, வளைக்க. (கசு)

பேய்பலதொடரச்செந்தீப்பிறங்குவார்சடிலத்தண்ணல்
பாய்சினவிடைமேற்கொண்டுபடர்ந்துலாம்பதமீதாமால்
சாயுநுண்மருங்குறேய்க்குந்தடமுலைப்பவளச்செவ்வாய்
ஆயிழைகலத்தற்காலமன்றெனக்கூறினனால்.

பிறங்கு - பிரகாசிக்கிற, வார்சடிலத்தண்ணல் - நீண்டசடையையுடைய சிவபிரான், பதம் - சமயம். (கஎ)

காலமன்றெனலுங்காமங்கைம்மிகக்கலங்கியாற்றாள்
சேலமாந்தளிர்க்கைபற்றிச்சேயிழைகுழைந்தாளாகக்
கோலம்வீற்றிருந்தகொம்மைக்குவிமுலைகுழையப்புல்லிப்
பால்வளைகாமநோயைப்பண்ணவன்றீர்த்தான்மன்றே

கைம்மிக - அதிகரிக்க, சேவம் - ஆடை, பால்வளை - வெள்வளையையுடையவளாகிய திதி, பண்ணவன் - காசிபமுனிவன். (கஅ)

மதிநனிமயங்கியிந்தமாலையின்மணந்தகுற்றம்
நதியரவணியும்வேணிநம்பனேபொறாதியென்னத்
திதியுளங்குழைந்துமுன்னேசிறந்துதன்றேடுமேதான்மாம்
சதியெனுமடந்தைசேருந்தலைவனைவணங்கினாளால்

மணந்த - கூடின, வேணி - சடை. (கக)

செந்தளிருருவப்பேதைசெய்தவம்பாவலுற்ற
அந்தியின்மணந்தவாற்றாலழலுமிழ்ந்திலங்குகூர்வாய்
வெந்திறலாழியாற்குவிழுப்பகையாகிவீயும்
மைந்தரைப்பெறுவாயென்றுமறையவன்வழங்கநொந்தாள்.

ஆழியாற்கு - சக்ராயுதத்தையுடைய திருமாலுக்கு, விழுப்பகை - பெரும்பகை. வீயும் - இறக்கின்ற. (௨0)

சிறகர்வண்டுழுபூங்கூந்தற்றெரிவைநீயுயிர்க்குமைந்தன்
எறிதிரையுலகமுண்டவிறைவனுக்கன்பனாகி
மறைநெறியொழுகிவாழுமகப்பெறுமறுகலென்னாக்
கறையறுமதிமுகத்தாய்காசிபன்கூறினனால்.

உயிர்க்கும் — பெறுகிற, உலகமுண்டவிறைவனுக்கு - திருமாலுக்கு, மறுகல் என்னா - மயங்காதேயென்று. (௨க)

**கலி விருத்தம்.**

கிளந்ததுகேட்டலுங்கிளைத்துவண்டினம்
உளர்ந்தபூங்குழலிதனுளமகிழ்ந்ததால்

இளந்தளிர்புரைதருமெழில்வயிற்றிடை
வளர்ந்ததுகருப்பநீள்வானமஞ்சவே.

கிளந்தது - சொன்னது, உளர்ந்த - கோதின, புரைதரும் - நிகர்த்த. (௨௨)

வயிறுவாய்க்குறினுயர்வலத்தவைம்படைக்
குயின்மருண்மேனியான்கொல்லுமேமயெனு
வியலுறுபருவநூறெதிர்ந்தவெங்களிக்
கயல்புரைகண்ணவள்கருப்பந்தாங்கினள்.

வயிறுவாய்க்குறின் - கருவுயிர்த்தால், ஐம்படை - பஞ்சாயுதங்களையுடைய, குயில் மருள் மேனியான் - திருமால், பருவநூறு - நூறுவருடம், கயல்புரை - கெண்டைமீன் போன்ற. (௨௩)

காழுவிர்கதிர்செயக்கதித்தவெம்முலைத்
தாழ்குழலங்கனகருப்பந்தாங்கலால்
சூழ்விசும்பிருண்டனசும்மைவெண்டிரை
ஏழ்புவியிருண்டனவிருண்டமாதிரம்.

காழ் - மணிவடம், மாதிரம் - திசைகள். (௨௪)

விரிகதிராயிரம்பரப்பும்வீங்கெழிற்
பரிதிசூழ்விசும்பிருட்படலமுற்றலும்
அருமணிநெடுமுடியமராயாவரும்
உருவநாண்மலரவனுலகநண்ணினர்.

பரிதிசூழ்விசும்பு - சூரியனுலாவுகின்ற ஆகாயம். (௨௫)

செருக்கியகயல்விழித்திதிவயிற்றினில்
கருப்பம்வந்துற்றதுகண்ணகன்றவான்
இருட்டுறலென்கொலாய்விளையுமீதென
விரித்தனர்விண்ணவர்விரிஞ்சற்போற்றியே.

கண் அகன்ற - இடமகன்ற. (௨௬)

திகழ்ந்தபொன்னாட்டவர்செஞ்சொற்கேட்டலும்
மகிழ்ந்துவண்டாற்றுதார்மாயனுந்திமேல்
முகிழ்ந்ததாமரைமலர்முளைத்தமுன்னவன்
நிகழ்ந்ததுநெஞ்சகநினைந்துகூறுமால்

பொன்னாட்டவர் - சுவர்க்கலோகத்தார். (௨௭)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கனைகடல்வயிறுகிளவீழ்ந்தொழுகுகங்கையம்பெரும்புனல்பூத்த
தனிமுதல்பசுந்தாட்டாமரைப்போதுதாழ்தருவிருப்பமீதூர

விளையறுசனகன்முதலியமுனிவர்விரியிருள்பருகுவான்போழ்ந்த
பனியிருவிசும்புகீண்டுவெண்டூவிப்பவளவாயெகினமொத்தெழுந்தார்.

கீள - கிழிபட, முனிவர் - முனிவர், வெண்டூவி - வெண்மையாகியசிறகு, எகினம்- அன்னம். (உஅ)

நிலவொளிகதுவிநிகர்தனக்கிகந்துநீடருட்பசுந்தளிர்பரப்பி
உலகெலாம்பூத்தமலர்க்கொடிபடரவுயர்வறவுயர்நலங்கனிந்து
விலைவரம்பறியாமணிபலகிளைத்துவிரிந்தபொற்கோட்டுமந்தார
மலர்கமழ்முத்திமணந்தலைமணந்துயயங்குவைகுந்தமெய்தினரால்.

கதுவி - நெருங்கி, கோடு - கிளை, தலைமணந்து - கலந்து. (உகூ)

எய்தியமுனிவராயிரகோடியிரவியின்வெயிலுமிழ்மணிமேசந்
பைதிகழரவினறிதுயிலமர்ந்தபங்கயச்செங்கணன்சரிதம்
மொய்கதிர்பரப்பியெழுவிமானத்தின்மொழிதருமனைவியரோடு
செய்தவத்தடைந்தோரமுதுகுமாறுசெப்புதல்செவியகமடுத்தார்.

பைதிகழரவு - ஆதிசேடன். (ஙO)

கிஞ்சுகவதரநிலமகள்புணருங்கிளர்வரைப்புயதிறுஞன்சரிதம்
எஞ்சலிலன்பின்வண்டொடுசுரும்பரிடையறாதிசைப்பதுகேளா
அஞ்சுகமன்னம்புறவெழினேமியன்றிலங்குயின்மயில்பூவை
நெஞ்சுகந்துருகியாற்றிடாதொன்றிநெருங்குதல்கண்டனர்களித்தார்.

கிஞ்சுகம் - முருக்கம்பூ, அஞ்சுகம் - அழகியகிளி, நேமி - சக்ரவாகம், பூவை- நாகணவாய்ப்புள் (ஙக)

சந்தனம்வகுளஞ்சண்பகம்பூகந்தாமரையுற்பலநாகம்
குந்தமஙகுரவங்கற்பகமுதலாக்கொழுநறைவாய்மலர்நிறந்து
செந்திருவுறையுந்திருமறுமார்பந்திளைத்திடக்கிடைத்ததெத்தவமே
நந்தலிறளவுக்கெனவதன்சீர்த்திநவிற்றுதல்செவியின்மாந்தினரால்.

வகுளம் - மகிழ்மரம், பூகம் - கமுகு, குந்தம் - முல்லை. (ஙஉ)

உரைதருபருவநாளுமோரைந்தேயுடையராய்த்திகம்பரராகிப்
பெருகுமோர்தவநான்குருவெடுத்தென்னப்பிறங்குவாலுணர்வினின்முதிர்ந்தோர்
பொருவருமாயன்கதைகளிவ்வாறுபுகல்வதுகேட்டுளமகிழ்ந்தார்
மருவருதுளவோனமர்ந்தருள்கோயில்வாயில்சென்றெய்தினர்யாதோ.

வாலுணர்வு - மெய்யுணர்வு, பொருவரு - ஒப்பற்ற. மரு - வாசனை. (ஙங)

மின்னெனமிளிருமிமையவர்மகுடகோடிகண்மிடைந்தொளிவிரிக்கும்
பொன்னெடுவாயிலாறிறந்தேகிப்பொலநிறத்தாமரைப்பொகுட்டில்
அன்னம்வீற்றிருக்குந்தடவரைமார்பனமர்வுழிக்குறுகலுநின்மின்
நின்மினென்றுரைத்தார்விறற்சயவிசயரென்னுமங்கீள்கடைகாப்பேர்.

தாமரைப்பொகுட்டிலன்னம் - திருமகள், தடவரைமார்பன் - திருமால். (ஙச)

தண்ணளிபெருகியலையெறிசெய்யதாமரைக்கண்ணினன்பரவை
மண்ணகம்பொதிதாடொழவெழுசெலவுமாற்றுமற்றவர்தமைமுனிந்து
கண்ணன்மேலுள்ளங்கனியுமன்பொழிந்துகாய்ந்திகல்பிறவியோர்மூன்று
நண்ணுகவென்னச்சபித்தனரெழுந்தார்நான்மறையுருவெடுத்தனையார்.

தண்ணளி - கிருபைக்கடல், செலவு - செல்லுதல். (௩௫)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தடுத்தவவ்வாயில்காப்போர்சபித்ததுங்கேட்டலோடும்
விடுத்தநல்லுணர்வினஞ்செய்வெம்பிழைபொறுத்திரங்கி
அடுத்தமாதவதிரெம்மையளித்திராலென்றன்னோர்சீர்
எடுத்தனரிசைத்தார்தாள்வீழ்ந்திறைஞ்சினரிறைஞ்சுங்காலை.

விடுத்தநல்லுணர்வினம் - நல்லறிவிழந்தயாம், வெம்பிழை - பெருங்குற்றம். ()

ஒற்றைவெண்கவிகையோங்கவுலகெலாமளந்ததாளும்
பொற்றபொற்றொடிசூழ்கையும்புரியவிழ்கமலமென்றே
உற்றுலாவன்னமெய்ப்பவொள்ளொளிநிலவுகாலும்
கற்றைவெண்கவரிவீசக்கமழ்துழாய்முருகுவிம்ம

பொற்ற - அழகாகிய, புரி - முறுக்கு, முருகு - வாசனை. (௩௭)

குண்டலந்திருவில்வீசக்குறுநகைநிலவுத்திங்கள்
மண்டிலஞ்சுடரவொண்கேழ்மணிமுடிவெயிலெறிப்ப
வெண்டிரைசிவப்பதோன்றுவிழுமணியாரமின்ன
அண்டர்கண்மௌலிதேய்க்குமறைகழலிலகியாப்ப.

வில் - ஒளி, திங்கள் மண்டிலம்-சந்திரமண்டலம், கேழ் - நிறம், மௌலி-கிரீடம்:

வாள்விரிபசும்பொற்குன்றின்வயங்குபுள்ளரசின்மல்லற்
றோளினினிலவுவீசுந்தொடிக்கரமொன்றுசேர்த்தித்
தாளதாமரைமென்போதார்தாமரைக்கரத்தின்வீசிக
காளமேகத்தையொப்பத்தோன்றினன்கமலக்கண்ணன்.

வாள் - ஒளி, புள்ளரசு - கருடன். (௩௯)

முழுதுணர்சனகனாதிமுனிவரர்நெஞ்சினாடிப்
பழமறைமுடிவிற்கண்டபசுந்துழாயலங்கலானை
விழியெதிர்காண்டலோடுமெய்ம்மயிர்சிலிர்ப்பவிம்மும்
கழிபெருமகிழ்சிறப்பக்கைதொழுதிறைஞ்சினரால்.

மறைமுடிவு - வேதாந்தம். (௪0)

கொண்டனீள்கோலவண்ணன்குறித்துளத்துணர்வுதன்னால்
கண்டவர்பிறவிவேலைக்கரைநனிகாண்பரென்றால்
உண்டுகொலெதிர்கண்டோருக்கொருபிறப்பிருதாட்போதில்
வண்டெனமனஞ்சேரன்புவழங்கெனவழுத்தல்செய்தார்.

உளத்துணர்வு தன்னால் கண்டவர் - மனநினைவாற் கண்டவர். (௪௧)

வழுத்தியமுனிவர்தம்மைமறைமுதலினிதுநோக்கித்
தழைத்தவிவ்வாயிலோரைச்சபித்தனன்றடிமையானோர்
இழைத்தனவிறைவன்பாலாயிருப்பதுபோலிக்குற்றம்
முழுத்தவத்தீரெம்பாலாம்போன்மெனமொழிதலோடும்.

மறைமுதல் - வேதமுதற்பொருள், இழைத்தன - செய்தன. (௪௨)

நாயகன்மொழிதல்கேளாநற்றவர்மகிழ்ந்துநின்பால்
நேயமுற்றவர்களுள்ளநெகிழ்தரவுரைத்தும்பார்த்தும்
தூயைநீகாக்கும்வண்ணஞ்சொல்லுதற்கெளிதன்றென்று
மாயனைவணங்கியாங்குவழுத்தினர்பலவுமாதோ.

நேயமுற்றவர்கள் - பத்தியுடையோர். (௪௩)

மகிழ்தருமளியவாகிமன்றலங்கமலமென்ன
நெகிழ்தருசெய்யகண்ணனெஞ்சகநெகிழநோக்கித்
திகழ்வெயிற்கற்றைகாலுஞ்சேட்டிளம்பரிதியேய்ப்ப
நகைமணிகிடக்குமார்பனகைவிருந்தருளினானால்.

அளிய - கிருபையுள்ளன, மன்றல் - வாசனை, நகைவிருந்தருளினான் - நகைதருளினன். (௪௪)

வேகவம்புள்ளிற்கன்றிவெஞ்சிலைவிசயன்றோர்க்கும்
பாகனென்றிசைப்பநின்றபைம்புயல்வண்ணன்செய்ய
போகிதழ்க்கமலமன்னபொன்னடிதொழுதுபோற்றி
ஏகினர்வலங்கொண்டுள்ளத்தின்புறுமுனிவர்மன்னோ.

வேகவம்புள் - கருடன். (௪௫)

தூவுதண்டுவலைக்காருந்தோடுவாயவிழுமன்றற்
பூவையும்போலத்தோன்றும்புராதனன்கங்கைபூத்த
சேவடிக்கமலப்போதுசென்னியிற்றொழுதவாயில்
காவலர்வதனநோக்கிக்கட்டுரைகிளக்கலுற்றான்.

புராதநன் - பழையோன். (௪௬)

மாற்றிலமுனிவர்சாபமதிக்கின்மற்றதுவேயன்றிக்
கோற்றொடிக்கமலைவாயிற்குறுகுழிததடுப்பச்சிறிச்
சாற்றியதழலின்வெய்யசாபமும்விளைந்ததாங்கண்
தோற்றுகவென்னத்தண்ணந்துழாய்முகில்கூறினானால்.

கமலை - திருமகள், தழலின்வெய்ய - நெருப்பினுங்கொடிதாகிய. (௪௭)

அன்னவாவவனிவீழாவமர்ந்தனர்திதிவயிற்றின்
கன்னியந்துழாயலங்கற்கருமுகிலவரைவீட்டும்
என்னுநீரிரங்கல்வேண்டாவேகுமினென்னத்தாழ்ந்து
பொன்னிணர்த்தருப்புத்தேளிர்போயினர்பொருமதீர்ந்தார்.

அன்னவா - அந்தப்பிரகாரம், அவனிவீழா - பூமியில் விழுந்து, கருமுகில் - திருமால்; வீட்டும் - கொல்லுவன். (௪௮)

### கலிவிருத்தம்.

தமரவண்டிமிர்குழற்றையலாள்வயிற்
றமரர்தம்பருவநூறமர்ந்துதோன்றினர்
இமையவரேங்குறவிரட்டைச்சேயெனா
உமிழ்கதிர்ப்பரிதிபோலொளிருமாங்கவர்.

தமரம் - ஒலி, இரட்டைச்சேய் - இரட்டைப்பிள்ளைகள் (சகூ)

அறங்குடிவாங்கினவாற்றன்மேவிய
மறந்தலையெடுத்தணமண்ணுதிக்கதால்
உறங்கினதகல்விசும்புருவநூருறு
பிறந்துழிப்பிறந்தனபேசற்பாலவோ.

மறம் - பாவவழிகள், உருவம் - வடிவம். (௬0)

எழுவயிரணியனிரணியாக்கனென்
றுறுபெயர்படைத்தனருறமும்மதச்
சிறுகண்மால்களிறடச்செருக்குமிக்கெழு
மறம்கெழுமடங்கலெனக்குருளைமாண்பினர்

மடங்கல் - சிங்கம், குருளை - குட்டி. (௬க)

எல்வளரிந்திரன்சாபங்கோட்டியும்
கொல்சினக்கூற்றுவன்கொற்றவெங்கதை
வில்லுமிழ்தொடிக்கரம்பற்றிவீசியும்
பல்படைபயின்றனர்பருஉத்தடக்கையார்.

சாபம் - வில் கோட்டியும் - வளைத்தும் (௬௨)

அண்டர்கோனலங்குளைப்புரவியூர்ந்துமாங்
கெண்டிசைக்கடாக்களிற்றெருத்தமேறியும்
திண்டிறற்பரிதிபொற்றேர்கடாவியும்
வண்டுளர்தாரினர்வளர்ந்திட்டாரோ.

அண்டர்கோன் - இந்திரன், அலங்குளைப்புரவி - உச்சைசிரவம், பரிதி-சூரியன்.

கலிகெழுகருங்கழற்கால்பெயர்க்குறின்
நிலமுதுகுளுக்குநீணிலவுசெஞ்சூடர்ப்
பொலனெடுமணிமுடிபொரவுடைந்திடும்
அலகதிர்க்ககனமுகண்டகோளமே.

கலிகெழு - ஒலியையுடைய, கருங்கழல் - பெரியவீரக்கழல், பொர - மோத. ()

நெருக்குவதிசைகளைநிகரில்பொன்னெடும்
பொருப்பெதிர்ந்திரிதரப்பொருதடம்புயம்
கருக்குவகற்பகக்காடுவெம்படைச்
செருக்கினர்விழிக்கடைசிந்துதீத்திரள்.

பொன்னெடும்பொருப்பு - மேருமலை (௬௫).

அடலுடைவானவரஞ்சவங்கெழு
விடமெனத்திகழ்பவர்வெகுளிவெங்கனல்
சுடுதொறுஞ்சுடுதொறுஞ்சூடுண்டேகொலோ
கடலிடைக்கிடந்ததுகாலவெங்கனல்.

அடல் - வலி, காலவெங்கனல் - காலாக்நி. (நிசு)

கமழலந்தார்முடிக்கனகனின்றியே
தமரவெண்டிரைக்கடற்றானைசூழ்தர
அமரர்மேலெழுந்தனனமர்விளைத்திட
இமைசுடவிழித்திடுமிரணியாக்கனே

தமரம் - ஒலி, தானை - படை, அமர் - போர். (நிஎ)

வெந்திறலவுணர்கோன்வெகுண்டுதோன்றலும்
இந்திரன்முதலியவிமைப்பிலாட்டத்தோர்
வந்தமர்விளைத்தனர்மண்டுவெங்கனல்
சிந்தியபல்படைசிதறியோடினார்.

இமைப்பிலாட்டத்தோர் - இமைத்தலில்லாத கண்களையுடைய தேவர்கள். ()

கைச்சிலைசோரவிண்காக்குமன்னவன்
பச்சிரத்தம்பொழிபரிதிவெஞ்சுடர்
வச்சிரப்படையெறிந்தோடிவாய்கனல்
நச்சிலைவேலினைகைத்துமீண்டனன்.

சோர - நழுவ, நச்சு - நஞ்சு. (நிகூ)

காற்றினைக்கடந்துவெங்கனலைக்காய்ந்துவெங்
கூற்றினைவென்றுசெங்குருதிகாலும்வெவ்
வேற்றிறனிருதியைவெருட்டிவல்லைபோய்
எற்றனன்வருணனொடிகலுக்கென்பவே.

காலும் - கக்குகிற, நிருதி - தென்மேற்றிசைப்பாலகன், இகல் - போர். (சுo)

அஞ்சினன்வருணன்வாளமர்புரிந்திலன்
நெஞ்சகமறுகினனின்றுநின்னெடும்
செஞ்சமமாற்றுவன்றிகிரிவெம்படைக்
கஞ்சநாண்மலர்க்கையங்கடவுளென்றனன்.

செஞ்சமம் - செவ்வியபோர், ஆற்றுவன் - செய்வான். (சுக)

தொடையமையாழ்முனிதோன்றுற்றாயிடைக்
கடலின்வீழிருநிலங்கவர்ந்துமாயவன்
பிடிபுணர்களிறெனப்பிறங்குகின்றனன்
நடவவண்வெஞ்சமநயக்கினென்றனன்.

இரு - பெரிய, பிடி - பெண்யானை, நயக்கின் - விரும்பினால். (சுஉ)

குனிறுதெண்டிரைநிலங்கொண்டுதோன்றிய
ஒளியிலங்காழியான்றன்னொடோங்குநீர்

அளறெழுநடந்துசென்றருவிமாமதக்
களிறெனப்பொருதனன்களப்பட்டானரோ.

குளிறு - ஒலிக்கிற, ஓங்குநீர் - கடல், களப்பட்டான் - போர்க்களத்தில் இறந்தொழிந்தான். — (௧௨)

வானவர்மலர்மழைபொழிந்துவாழ்த்தவே
தானவர்க்கிசம்புரிதலைவற்கொன்றெழில்
ஆனசீர்சேர்பரந்தாமத்தாதியாண்
ஏனமாகியமுதற்கடவுளெய்தினான்.

பரந்தாமம் - மேலானஇடம், (பரமபதம்) ஆதியாண் ஏனம் - ஆதிவராகம் ()

ஆதியாகியவராகத்தருங்கதை
ஓதினோரினிதெனவுவந்துகேளார்கள்பார்
மீதுதாம்விழைந்தனமேவித்தன்னடிச்
சோதிவானவர்தொழுத்துன்னுவாரென்றான்

விழைந்தன - விரும்பினவற்றை, தன்னடிச்சோதி - பரமபதம் (௧௪)

என்னலும்விதுரனுமெரிபொற்றாமரை
முன்னயன்படைப்பெலாமுன்னியின்னமும்
பன்னுதிநீயெனப்பகர்தன்மேயினான்
மன்னியமாதவமயித்திரேயனே

எரி - பிரகாசிக்கிற, பொற்றாமரைமுன் - அழகியதாமரையில் வாழ்கின்ற, (முன்-னுருபு) (௧௫)

ஆதிவராக நிலையுரைத்தவத்தியாயம்—முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௧௪௯

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.



## தேவர்முதலியோர்பிறப்புரைத்தவத்தியாயம்

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தழைந்திடுதாமிச்சிரமுதலாகச்சாற்றியவவிச்சையிற்பிறந்தார்
எழுந்துநான்முகனைவளைத்தனரலைப்பவென்னைநீர்புரத்திரென்றெடுத்து
வழங்கிடப்பட்டோர்யாவருங்குருதிவாட்படையிராக்கதரானார்
விழுங்கன்மினென்னமொழிந்திடப்பட்டோர்வெந்திறலியக்கராயினரால்.

வளைத்தனர்-வளைத்து (முற்றெச்சம்), அலைப்ப-வருத்த, புரத்திர்-காக்கக்கடவீர்.

படைத்தல்செய்யனத்தமத்தனுவிடுப்பப்பகிரவாகியததனை
அடற்படையன்னோர்பயிறருமிடனுமடைந்தனரலரவன்முகனில்

# மூன்றாங் கந்தம்.

சுடர்த்திருமேனிச்சூரரெவருந்தாங்தோன்றினர்தோன்றவக்காந்தி
விடுத்தனனதுதான்புகலெனவிண்ணோர்விரும்பிடன்மிகவிளங்கியதால்.

தமத்தநு - தமோசரீரம், காந்தி - சோதி (உ)

பனிமலரண்ணறிருவரைம்ருங்கிற்பட்டனரசுரர்களவர்தாம்
நனிபுணர்காமத்தயன்றனைத்தொடரநான்முகனரணற்சார்ந்து
புனிதநின்னருளாற்படைத்தனனிவர்தாம்புணர்ச்சியின்வேட்கைமேற்கொள்ளா
எனையிவண்டொடர்ந்தாரருளுதியெனவவ்விறைவன்வெவ்வுடல்விடுகென்றான்.

பனி - குளிர்ச்சி, மலரண்ணல் - பிரமன், அரைமருங்கில் - இடையில், மேற்கொள்ளா - மேற்கொண்டு, பட்டனர் - உண்டானார்கள் (ங)

புனைபசுந்துளவோன்புகன்றவாறுந்திப்பூவருமயனுடல்விடுத்தான்
அனையதோர்யாக்கையையரிசிதறியம்பலேத்தகனறவைதகடங்கட்
குனிசிலைப்புருவக்கொடிபுரைநுசுப்புக்குமுதவாய்க்குவட்டுயர்கொங்கைக்
கனிவருகிளவிச்சந்தியாதேவியாயதுகண்டவர்மருள.

அரி - இரேகை, ஐ - அழகு, வை - கூர்மை, குமுதம் - செவ்வல்லியலர், குவடு—மலை, கிளவி - சொல், சந்தியாதேவி - காலைமாலைகளின் சந்திப்பாகிய பெண். (ச)

கலி விருத்தம்

போற்றியாரணமுகன்மருங்கிற்போந்தவர்
சாற்றியசந்தியாதேவிதன்னைநீ
மாற்றருங்காமநோய்வழங்குகின்றனை
ஆற்றுதியெனவவணலம்வந்தாரரோ.

போந்தவர் — தோன்றினவர், அலம்வந்தார் - மயங்கினார்கள் (ரு)

பூந்தவிசகத்தினிதமர்ந்தபுங்கவன்
காந்தியின்வந்துகந்திருவர்தோன்றினர்
கூந்தலம்பிடிநடைக்குமுதச்செய்யவாய்
ஏந்தெழிலரம்பையரெழில்விற்றோன்றினர்.

காந்தி - ஒளி (சு)

பொருந்தியகாந்தியைப்புனிதன்விட்டிடத்
திருந்தியநிலவெனச்சேர்ந்ததாங்கதை
விரும்பினர்விச்சுவாவசுவைமேவிய
இருந்திறல்வேந்தெனவிருந்துளோர்களே.

நிலவு - சந்திரிகை, விச்சுவாவசு - ஒருகந்தர்வராஜன். (எ)

வெடித்தநாண்மலரவன்வெய்யசோம்பொடும்
அடுத்தவாவித்தலினளவில்பூதம்பேய்
பொடித்தனவவைதலைவிரித்தபொற்பொடு
நடித்தனதானைநல்லாசையாகவே.

ஆவித்தல் - கொட்டாவிவிடுதல், ஆசை - திசை, தானை - ஆடை. (அ)

மலரவன்கண்டுகண்முகிழ்த்துமன்னுசோம்
புலவுமத்தனுவினையொழிப்பவாங்கது
குலவுசோம்பந்துயிலாகக்கொண்டன
அலகைகடம்மொடுமயர்வில்பூதமே.

கண்முகிழ்த்து - கண்மூடி. (௯)

சாத்தியர்பிதிரர்தம்மோடும்விஞ்சையர்
தேத்துளித்தாரணிசித்தர்தம்மொடும்
ஏத்துசீரயன்மறைந்தியற்றத்தோன்றினர்
பூத்தவன்விட்டவப்புரமுநண்ணினர்.

பூத்து - உண்டாக்கி, புரம் - சரீரம். (௧௦)

கின்னரரோடுகிம்புருடரென்பவர்
பொன்னவிர்தாமரைப்புனிதனீர்வயின்
தன்னிழலொருகுழிச்சார்ந்துதித்தவர்
அன்னதோர்சாயையையடைந்திட்டார்களோ.

நீர்வயின் - நீரினிடத்தில். (௧௧)

கிளர்ந்தகின்னரர்கள்கிம்புருடரென்பவர்
வளர்ந்திகழெழிலொடுமருவியேழிசை
உளங்குழைந்துருகுவான்பாடியோகையின்
விசும்புழிமிதுனமாய்விளங்கினார்களால்.

ஓகையின் - மகிழ்வினால், மிதுனம் - இரட்டை (சேர்த்தி). (௧௨)

படந்திகழ்பாழிவாய்ப்பாந்தளுந்தியந்
தடந்திகழ்தாமரைத்தலைவன்வெஞ்சினத்
திடந்திகழ்நுதித்தவனினிதின்விட்டவவ்
விடந்திகழ்வெஞ்சினம்விரைவின்மேயவே.

பாழிவாய் - பெரியவாய், பாந்தள் - பாம்புகள். (௧௩)

இன்னணம்பலபடத்தவையினிதுநோக்கியுள்
உன்னியவுவப்பொடுமுறையுங்காலையில்
மூன்றுபடைப்பெலாமேத்தமுன்னவன்
மன்னியமனத்திடைமனுக்கள்வந்தனர்.

முன்னவன் - பிரமன். (௧௪)

மனத்திடைத்தோன்றியமனுவென்போருக்கு
நினைத்துறுதவங்கணீள்யோகம்விஞ்சைகள்
வினைத்திறங்கடக்குறும்விருத்தியாகவே
அனைத்தையும்படைத்தவனுக்கைநல்கினன்.

விஞ்சைகள் - வித்தைகள். (௧௫)

என்றவன்விதுரனுக்கியம்பினனென
நன்றறிசுகமுனிநவிற்றமன்னவன்
அன்றருந்தவனவற்கறைந்ததின்னமும்
ஒன்றுமாறுரைதிநீயென்னவோதுவான்.

நவிற்ற - சொல்ல, மன்னவன் - பரிக்ஷிந்நரேந்திரன். (கசு)

தேவர் முதலியோர் பிறப்புரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகதிருவிருத்தம். ௱எக.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---

## கருத்தமன்மணம்புணர்ந்து கபிலரைப் பெற்றவத்தியாயம்.

கலி நிலைத்துறை.

புனையுமோர்குடைநிழலிலேழிரும்பொழில்புரக்கும்
மனுவின்மைந்தநன்மடவரல்வனமுலைமணந்து
கனியுமெய்த்தவக்கருத்தமனீன்றுளார்தம்மை
முனிவகூறெனவிதுரனுக்கருந்தவன்மொழியும்

புனையும் - அலங்கரிக்கப்பட்ட, பொழில் - உலகம் (க)

இல்லறத்தினைநடாவுநன்கெழில்கனிந்தொழுகு
முல்லையங்குழன்முகிணைகையெய்துகவென்றோர்
கல்லென்கௌவையாற்றடைகரைகருத்தமன்கதுவிச்
சொல்லருந்தவந்தொடங்கினனரிந்தமற்றொழுதே.

கருத்தமன் - பிரமன்சாயையிற் பிறந்தவன், அரிந்தமன் - விட்டுணு. (உ)

குண்டலத்திளவெயிலெழக்குளிர்மதிவதன
மண்டலத்திளவாணகைவெண்ணிலாமலர
விண்டலத்தெழுவிரிசிறைக்கருளன்மீதிவர்ந்து
கொண்டலிற்றிகழ்பரனவன்முனங்குறுகினனால்.

வதநமண்டலம் - முகமண்டலம், கருளன் - கருடன், கொண்டலிற்றிகழ்பரன் - திருமால். (ங)

போதுசேர்விந்துசரசுபுக்காயிரம்பருவம்
காதலோடுநற்றவம்புரிகருத்தமன்காணு
ஆதிமால்பதத்தன்பொடுவணங்கினன்வழுத்தச்
சோதிமாயவனவனுளமுவப்புறச்சொல்லும்.

விந்துசரசு - ஓர்தீர்த்தவிசேடம், வணங்கினன் - வணங்கி, (முற்றெச்சம்) (ச)

தெய்வஞ்சுட்டியபெயர்விராய்வரும்பெயர்சேர்ந்த
மவ்வலங்குழன்மடந்தையைமனுவினுக்குதித்த
கொவ்வைவாய்மலர்க்கோதையைக்குழைபொருதலைக்கும்
நவ்விநோக்கியைநாளைநீமணத்திநற்றவத்தோய்.

தெய்வஞ்சுட்டியபெயர் - தேவஹூதி. (௫)

சிந்துநுண்டுளித்தேறல்வாய்மடுத்தளிசிலம்பும்
அந்தண்கோதையாலிளந்தளிர்புரையுமவ்வயிறு
வந்துதோன்றுவமென்றுசெவ்வாய்மலர்ந்தருளிப்
பைந்துழாய்புனைபரம்பொருளாயவன்படர்ந்தான்.

சிலம்பும் - சத்திக்கிற, புரையும் - நிகர்த்த, படர்ந்தான் - சென்றான். (௬)

வாவுபச்சைமான்றேர்கொடுவால்வளையலறக
கோவைநித்திலக்கொற்றவெண்குடைமனுவேந்தன்
பூவளத்தொடும்புள்ளொடும்பன்மரம்பொதுளும்
காவினுற்றனன்கருத்தமன்றனைக்கண்டுதொழுதான்

பச்சைமான் - பசுமைக்குதிரை, வால்வளை - வெண்சங்கு, நித்திலம் - முத்து, பொதுளும் - தழைக்கின்ற (௭)

வணங்கநன்மொழிவழங்கியகருத்தமன்றனைக்கருமன்
குணங்களாதன்கூறமுன்கேட்டுனைவேட்குற
அணங்கைநல்லெழிலரிவையைவேட்டருளென்றுங்
கணங்கொள்வண்டிமிர்தார்ப்புயன்கன்னியையளித்தான்

வேட்கும் - விரும்புகின்ற, வேட்டருள் - மணஞ்செய்தருள, என்று - என்று சொல்லி, வண்டிமிர்தார்ப்புயன் - மனு. (௮)

கலி விருத்தம்.

அசும்புபொன்னாரமுமாரமாலையும்
விசும்பெலாம்விலைகொள்வெண்டுகிலுஞ்சாந்தமும்
ஒசிந்தநுண்ணிடைச்சதரூபையொள்ளிணர்ப்
பசுந்தொடைபுனைகுழற்பாவைக்கீந்தனள்.

ஆரமாலை - முத்துவடம், சதரூபை - ஸ்வாயம்புவ மநுவின்மனைவி. (௯)

அங்கிருந்தவனொடுமரிவைவைகுறப்
பொங்கெழின்மாடமார்பொருவிறன்னகர்
சங்கவெள்வளைச்சதரூபையோடுவெண்
டிங்களங்குடைமனுச்சென்றுமேயினான்.

இருந்தவன் - பெருந்தவத்தினன். (௧௦)

அழிவில்பல்வேள்விகளாற்றுமூழிநான்
கெழுபதோடொன்றெனவிளைந்தவெல்லையுந்

செழுமலர்த் துளவினான்சீர்நவின்றுபார்
முழுவதும்புரந்தனன்மொழிந்தவேந்தனே.

ஆற்றுபு - செய்து. (கக)

அருந்தவன்மொழிந்தவம்மனுவின்கன்னியைச்
சுரும்பிமிர்பைங்தொடைசூட்டிவேட்டபின்
கருங்கயனெடுங்கணாள்கலவிவேட்கிலன்
பெருந்தவமீட்டுவான்பெட்பினென்பவே.

வேட்டபின் - மணஞ்செய்தபின்பு, கலவி-புணர்ச்சி, வேட்கிலன்–விரும்பிலன்.

தகைமலிபாசடைத்தண்ணநதாமரை
முகிழெனமுகிழ்ந்துமுத்துரிஞ்சுமென்முலை
அகிலுணவிரிகுழலணங்குமாதவன்
நுகர்வனகாதலினுகர்ந்துநோற்பளால்.

பாசடை – பசுமையாகிய இலை, முகிழ் - அரும்பு, முகிழ்ந்து - குவிந்து, நுகர்வன - உண்பன. (கஉ)

ஒழுகரித்தடங்கணொளொழுக்கங்கண்டுவந்
தெழுதருஞ்செவ்விவீற்றிருந்தவீர்ங்கதிர்
முழுமதிமுகத்தினைமுனிவனோக்கிநீ
விழைவதென்றருகுவல்விளம்புகென்றனன்

செவ்வி-அழகு, ஈர்ங்கதிர்-குளிர்ந்தகிரணம், விழைவது-விரும்புவது. (கச)

புனையும்மாரில்லினிற்புனிதநின்னொடு
நனிபுணர்ந்தன்புசெய்நலஞ்சிறந்தெழில்
கனிமொழிமகப்பெறுகாதலேனென
மனையவள்கூறலுங்கேட்டமாதவன்.

புனித - பரிசுத்தனே, மகப்பெறுகாதலேன் - குழந்தையைப் பெறவேண்டுமென்கிற விருப்பமுடையேன். (கரு)

ஓட்டறுபசும்பொனலுருவுவாய்ந்தது
சேட்டிளங்கதிருறழ்செக்கர்மாமணிச
சூட்டதுநிதநிலத்தோரணத்தது
வேட்டதுவிளைவதோர்விமானஞ்செய்தனன்.

இளங்கதிர் - பாலசூரியன், செக்கர்மாமணி - மாணிக்கம், சூட்டது - சிகரத்தையுடையது. (கசு)

திருமணிதெளித்தெனத்திகழுநீரவாம்
விரைமலர்வாவிகள்விளிம்படுத்தது
மரவமுங்குருந்தமுமகிழுஞ்சாந்தமும்
குரவமுங்கமழுஞ்செய்குன்றுஞ்சேர்ந்ததால்.

நீர - நீர்களையுடையன, செய்குன்று - செயற்கைக்குன்று.

அன்னமும்பூவையுங்கிளியுமார்ப்பது
மின்னிடையரம்பையரீட்டமேயது
பன்னுதுப்புரவுகள்பலவும்பட்டது
பொன்னுலகத்தினும்பொலிவுபெற்றதால்.

ஆர்ப்பறு - சத்திப்பது, மேயது - பொருந்தியது, துப்புரவுகள் - நுகர்தற்குரியன, பட்டது - உண்டானது. (௧௮)

தீவியமலர்களுந்தெய்வச்சாந்தமும்
நாவியும்யோசனைநாறுகின்றது
பூவிரியமணியும்பொன்செய்பூண்களும்
ஆவியந்துகில்களுங்கழுமியார்ந்ததால்.

திவ்வியம் - தீவியம் என்றாயிற்று, (அற்புதமான) நாவி - கஸ்தூரி, அமணி-படிக்கக, கழுமி - பொருந்தி. (௧௯)

எழுவுறழ்தோளிமையோர்கடம்மொடும்
எழுநிலத்தவர்களுமேத்துஞ்சால்பீ
தெழுமினவெனவெழிலிலங்கவான்மிசை
எழுதிர்மணிசெயேழ்நிலைபொலிந்ததால்,

சால்பு - மேன்மை. (௨0)

இத்திறந்திகழுமானத்திலேறினீ
ர்த்துதெண்டிரைவிந்துசரசுமூழ்கென
மெய்த்தவக்கருத்தமன்விளம்பமெல்லியல்
அத்தகைமடுவினீராடினளரோ.

மானம் - விமானம், விந்துசரசு - ஓர்மடு (௨௧)

ஆங்குவந்தரம்பையரளவிலாதவர்
தேங்கமழ்மாலையுஞ்சார்ந்துஞ்செல்வமும்
பூங்கதிர்க்கலன்களும்புனையச்செல்விபோல்
வாங்குநுண்ணிடையவள்வயங்கினளரோ.

செல்வி - திருமகள், வாங்கும் - வளைந்த. (௨௨)

அன்னதோர்விமானமேலலர்ந்தபூந்தொடை
இன்னிளவேனிலான்கொலோவென
நன்னலங்கனியுருக்கொண்டுநற்றவன்
மன்னினன்மனைவியுண்மகிழ்ச்சிகூரவே.

இளவேனிலான் - வசந்தகால மன்மதன். (௨௩)

வேறு.

விரைமலர்ப்பகழிவென்றிகொள்காமன்
உருவநற்றவனொடுற்றொருகோடி

அரமடந்தையரடைந்தனர்போற்ற
மருவிரிந்தகுழன்மாதுமகிழ்ந்தாள்.

மலர்ப்பகழி - புஷ்பபாணம், அடைந்தனர் - அடைந்து, (முற்றெச்சம்). (உச)

பொன்றயங்குபுளிநங்கள்பொலிந்து
துன்றுகன்னிநதிதுன்னியிளந்தண்
தென்றலங்குழவிசென்றெதிர்கொள்ள
மன்றல்கூர்மலயமால்வரைசாரும்.

புளிநங்கள் - மணற்குன்றுகள், மன்றல்கூர் - வாசனைமிகுந்த, மலயமால்வரை - பொதியமலை. (உரு)

கங்கையாற்றடைகரைத்தலைசேரும்
மங்குறோய்கனகமால்வரையெய்தும்
வெங்கதிர்ப்பரிதிமண்டிலமேவும்
திங்கண்மண்டிலமணந்துசிறக்கும்.

கநகமால்வரை - மேருமலை, பரிதிமண்டிலம்-சூரியமண்டிலம், திங்கள்மண்டிலம்-சந்திரமண்டிலம், மணந்து - பொருந்தி (உசு)

வண்ணமாமலர்கொண்மானதவாவி
நண்ணுநந்தனவனத்துநடக்கும்
கண்ணெகிழ்ந்துதுளிகற்பகநீழல்
விண்ணின்மாதரொடளாய்விளையாடும்.

மாநதவாவி - மாநஸஸரோவரம், கண்ணெகிழ்ந்து - தேன்சொரிந்து, அளாய் - கூடி.

எண்டவிர்ந்தபகலித்திறனுக
வண்டுகோடிசெறிவாரொலிகூந்தற்
றெண்டைவாய்வனிதைதோணலமாரு
துண்டுமாதவனுவந்தனனம்மா.

எண்டவிர்ந்தபகல் - அளவிறந்தநாட்கள். (உஅ)

காதல்கூர்தருகருத்தமனிவ்வா
றூதுவண்டுநறவுண்டுசெறிந்த
கோதைநங்கைவளர்கொங்கைமுயங்கா
மாதரொன்பதின்மர்வந்துபிறந்தார்.

முயங்கா - தழுவினதனல். (உகூ)

வந்துமங்கையர்வளர்ந்திடுநாளின்
கொந்துலாவுவனமேசெலவுட்கொள்
அந்தமாதவனுளத்தையறிந்து
சிந்துநீர்விழிமடந்தைதெரிப்பாள்.

கொந்து - பூங்கொத்து. (௩0)

துன்னுகானடைவுநீதுணிவுற்றால்
கன்னிமார்கள்கணவர்க்குரியாரால்

என்னையீங்கினி தளிப்பவர்யாரே
பன்னுமா தவவெனப்பரிவுற்றாள்.

கானடைவு - காடடைதல், அளிப்பவர் - காப்பவர். (௩க)

மனைவிசொற்றதனைமாதவன்கேளா
இனையலுன்னெழில்வயிற்றிலுதித்துப்
புனிதமாலனிபுரந்திடுமென்னுக்
கனிபடுங்கிளவியோடுகலந்தான்.

கேளா - கேட்டு, இனையல் - வருந்தாதே. புனிதமால் - பரிசுத்தனாகிய திருமால், கனிபடுங்கிளவி - கனிபோலுமின்சொல்லையுடையவள். (௩௨)

படர்ந்தவாலினதுபாசிலைமீதே
கிடந்தபைங்குழவிகேழ்கிளர்செந்தீத்
தடஞ்சினைத்தருவிலுற்றதுபோல
மடந்தையரல்வயிறுமன்னியுதித்த.

பாசிலை - பச்சிலை; கேழ் - நிறம். (௩௩)

கலிநிலைத்துறை.

தபனன்போலொளிதகைந்த நல்விமானமேலிவர்ந்து
விபுதரோத்திடவிரைமலர்க்கிழவனுங்கெய்தி
உபயவெண்மதியுண்டுகொலெனவுதித்தவற்குக்
கபிலனென்றுபேர்கழறினன்பயந்தவர்களிப்ப.

தபனன் - சூரியன், இவர்ந்து - ஏறி, விபுதர் - தேவர், மலர்க்கிழவன் - பிரமன், உபயம் - இரண்டு, பயந்தவர் - பெற்றவர். (௩௪)

மறைவடித்துணர்மரீசியேமுதலியதவத்தோர்க்
கிறைவளைக்கைநின்புதல்வியர்தமைவழங்கென்று
நறைமலர்ப்பொகுட்டுறைபவனுரைத்தனனடந்தான்
அறிவினிற்றிகழ்கருத்தமனத்திறம்புரிந்தான்.

மறைவடித்துணர்—வேதங்களைத்தெளிந்துணர்ந்த, வழங்குஎன்று—கொடுஎன்று, உரைத்தனன் - சொல்லி, (முற்றெச்சம்.) (௩௫)

கத்திகைக்குழற்கலையினைவழங்கினன்மரீசிக்
கத்திரிக்கநசூயையைக்கொடுத்தனனலங்கல்
முத்துரிஞ்சியமுகிண்முலையருந்ததிதன்னை
மெய்த்தவத்தினின்மேம்படுவசிட்டனுக்களித்தான்.

கத்திகை - பூமாலை. (௩௬)

இங்கிராதினியிட்டிடையெனப்பணைத்தெழுந்து
மங்குறோய்வடவரையெனவளரிளங்கொங்கைத்
திங்கள்வாணுதற்சிரத்தையைத்தேங்கொள்பூங்கண்ணி
அங்கிராவெனுமருமறையந்தணற்களித்தான்.

இட்டிடை - சிற்றிடை. (௩௭)

அவி நுகர்ந்தவனெனப்பெயர்பெற்றவோரணங்கைப்
புவிவழுத்தியுபுலத்தியற்களித்தனன்புலகற்
குவரியின்னமுதூறுசொற்குரும்பையேபோலும்
குலவுவெம்முலைக்கூனியெனுமடந்தையைக்கொடுத்தான்.

உவரி - கடல். (௩அ)

பள்ளவாரிதிபட்டசெம்பவளவாய்ப்பச்சைக்
கிள்ளைமென்மொழிக்கிரியையைக்கிருதுவுக்களித்தான்
அள்ளியாரிருளயிலும்வெள்ளலர்கதிர்த்திங்கட்
பிள்ளைவாணுதற்கியாதியைப்பிருகுவுக்கீந்தான்.

பள்ளம் - ஆழ்ந்த, அயிலும் - உண்ணுகிற. (௩௯)

சிறுமருங்கினியிறுமிறுமென்பபோற்றேனுண்
பறவையார்ப்புறப்பாயிருளொழுகுவார்குழன்மேல்
நறைவிரிந்ததண்மலர்புனைசாந்தியைநான்காம்
மறையின்பேர்பெறுமறையவற்களித்தனன்மாதோ.

தேனுண்பறவை - வண்டு, நான்காமறையின்பேர் பெறுமறையவன் - அதர்வணு சாரியன். (௪0)

## கலிவிருத்தம்.

உந்துதெண்டிரையிளைத்துருகவொண்சுடர்
சிந்துசெங்கதிர்புரைதெய்வத்தாமரை
அந்தணனிழல்வருமண்ணன்மாதவன்
மைந்தனைவணங்கினன்வழுத்தளமேயினன்.

செங்கதிர் - சூரியன், தாமரையந்தணன் - பிரமன், நிழல் -சாயை, வணங்கினன் வணங்கி, (முற்றெச்சம்) மாதவன்மைந்தன் - கபிலன். (௪௧)

சீரிளம்பரிதிசெம்முளரிசேர்ந்தென
ஆரழலாழியுற்றலங்குசெங்கையாய்
கூருமன்பினர்மனங்குறித்ததல்லதை
ஒருருவுண்டுகொலுனக்குநாடினே.

செம்முளரி - செந்தாமரைமலர். (௪௨)

உமிழுநூல்சிலம்பியாங் குண்ணுமாறுபோல்
இமிழ்கடலுலகெலாமெழில்கொளுந்தியம்
கமலநாண்மலரிடைக்காட்டியுண்ணுதி
அமலநின்னிலையையாரறியவல்லரே.

சிலம்பி - சிலந்திப்பூச்சி, இமிழ் - ஒலிக்கின்ற. (௪௩)

ஒருருக்கொடுநிலம்படைத்தியொள்ளிதின்
சீருருக்கொடுதனிப்புரத்திசெந்தழற்

பேருருக்கொடுனெனி துடைத்திபேதையேன்
நாருருக்கொடுநினைநவிற்றற்பாலனே.

புரத்தி - காக்கிறாய், துடைத்தி - அழிக்கிறாய், நார் - அன்பு. (சச)

என்றுபற்பலபுகழ்ந்தேத்தவான்மழக்
கன்றெனத்திகழ்தருகபிலன்கூறுவான்
துன்றுவெண்டிரைக்கடல்சூழும்பூமிசை
நன்றறிகருத்தமநானுதித்தது.

பூ - பூமி. (சரு)

மல்கியதீயபொய்ம்மதங்களாற்பல
அல்லனீளார்கலியழுந்துவார்களை
ஒல்லையிற்சாங்கியயோகவோடத்தால்
எல்லையில்வீடெனுங் கரையிலேற்றுவான்.

அல்லல் - துன்பம், ஆர்கலி - கடல். (சசு)

அன்னையுமுத்திசென்றடையநன்னெறி
பன்னுவன்மாதவநீயும்பற்றுவிட்
டென்னுருமனத்தினிலினிதுநாடியே
துன்னுதிவீடெனச்சொல்லினனரோ.

நன்னெறிபன்னுவன் - தத்துவோபதேசம்செய்வேன் (சஎ)

சொல்லியகபிலனைச்சூழ்ந்துதாடொழாக்
கல்லலைவனத்தினிற்கருத்தமன்னடந்
தில்லறந்துறந்தெதழிற்றவமியற்றுபு
நல்லதோர்முத்தியினண்ணினனரோ.

தொழா - வணங்கி, கல்லலை - மலைகளடர்ந்த, இயற்றுபு - செய்து. (சஅ)

அகங்குழைந்தன்னையுமாங்குக்கைதொழா
நுகர்ந்தனமீளவுநுகர்ந்துபல்பகல்
இகந்தனவீறில்வீடெய்துமாறினிப்
புகன்றருள்வாயெனப்புதல்வற்போற்றினள்.

நுகர்ந்தன - அநுபவித்தவற்றை, இகந்தன - கழிந்தன. (சகூ)

பார்முதிர்பனிக்கடல்பருகுநுண்டுளிக்
கார்முகிலெனத்திகழ்கபிலன்கட்கடை
ஆர்தருமின்னருளலையெறிந்திட
மூரல்வாண்முகத்தினன்மொழிதன்மேயினன்.

பார் - கற்பாறை, மூரல் - சிரிப்பு. (ருo)

பனிபடுதிரையெழுபரிதிகண்டுசூழ்
கனியிருளிரிவதுகடுப்பக்கட்டமை

வினையிருளிரிதரவிளங்குமென்னைநீ
நினைதரின்மேவுறுநிகரின்முத்தியே.

பனிபடு - குளிர்ச்சிபொருந்திய, கனியிருள் - மிக்கவிருள், இரிவதுகடுப்ப - ஓடுவதைநிகர்ப்ப. (௫௧)

கலைபயின்றுயிர்க்கெலாங்கருணைசெய்துறை.
அலகிலாவறிஞர்பாலன்பினோடுபோய்க்
குலவுதன்முத்தியிற்குறுகக்கோதகன்
றிலகுநன்னெறியதாமிவையுமென்பவே.

அறிஞர் - ஞானிகள், குறுக - சேர. (௫௨)

ஈசனும்வேறியங்குயிரும்வேறெனு
நேசமுற்றெனைநினைப்பவற்குமீசற்கும்
பேசுபல்லுயிர்க்குமோர்பேதமில்லெனும்
மாசிலாதவற்கும்வந்தொன்றுமுத்தியே.

எனு - என்று. (௫௩)

தந்தைநற்றாய்தம்பிதம்முன்றானென்
மைந்தர்கண்முதலினோரென்னவைகுவேன்
சிந்துசெங்கதிர்ச்செழும்பொன்னிற்செய்தசீர்
நந்தலிலாதநற்பணிகள்போலவே.

தம்முன் - தமையன், பணிகள் - ஆபரணங்கள். (௫௪)

என்னுருப்படிமிசையினிதினாடுவோன்
துன்னியசெல்வங்கடிப்பன்றுய்த்தபின்
பன்னுவெங்கூற்றினாற்பயமுறானவன்
மன்னுமென்மலரடிமருவிவைகுவான்.

படி - பூமி, நாடுவோன் - தியானிப்பவன். (௫௫)

கூடெரியிற்றாடலங்கூற்றங்கொல்வதும்
கார்மழைபொழிவதுங்கதிரெறிப்பதும்
மாருதமுளர்வதும்வாரிநிற்பதும்
ஆரழல்சுடலுமென்னாணையாகுமால்.

ஆடல் - வெற்றி, உளர்வதும் - சஞ்சரிப்பதும். (௫௬)

எத்திறத்தாயினுமென்னையேமனம்
வைத்திடின்வல்வினைமாயுமாறிலர்
முத்திவந்தெய்துமான்முறையிற்றோன்றிய
தத்துவந்தெருளினுஞ்சாருமுத்தியே.

எத்திறத்தாயினும் - எவ்வகையாலாயினும். (௫௭)

என்னலுந்தத்துவமியம்பல்வேண்டுமென்
றன்னநேர்மென்னடையன்னைகூறலும்
பன்னுவல்கேளெனப்பகர்தன்மேயினன்
கன்னியந்துளவணிகபிலனென்பவே.

பன்னுவல் - சொல்வேன். (ருஅ]

கருத்தமன்மணம்புணர்ந்து கபிலர்ப்பெற்றவத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—உ உகூ.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.



எட்டாவது

கபிலர் தத்துவ முரைத்தவத்தியாயம்.



அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஒலிமுதலாயவைந்துமோங்கியபூதமைந்தும்
மலியுமிந்தியங்கள்பத்துமனமுதனன்குமாக
நலமிகுநான்காறுநவையறுகாலத்தோடும்
இலகியதத்துவங்களியைந்திடுமையைந்தென்றே.

நான்காறு - இருபத்துநான்கு, ஐயைந்து - இருபத்தைந்து. (க)

மதியொடுவாக்குக்கெட்டாமாயவனருளினாலே
துதியுறுமாயைதன்னிற்றோன்றியமகானினின்று
விதியுறுகுணங்கண்மூன்றுமேவிமூன்றென்னச்சேர்ந்து
கதியுறுமகங்காரந்தான்கவினவந்துதித்ததன்றே.

மதி - மனம், மகான் - மகத்தத்துவம், கவின - அழகாக, (உ)

புகன்றராசதத்தினோடுபொருந்தகங்காரந்தன்னில்
பகர்ந்தவிந்தியங்கள்பத்தும்புந்தியும்பிராணன்றானும்
திகழ்ந்தசத்துவத்தினோடுசேரகங்காரத்தாசை
அகன்றமாமனமும்வந்தங்கன்பொடுமுதித்தவன்றே.

பகர்ந்த - சொல்லப்பட்ட, அகன்ற - நீங்கின. (௩)

உரைதருசிறப்புவாய்ந்தமனமுதலாகவோங்கு
கரணநான்கினுக்குப்பாசநேசர்நற்காமதேவன்
அருமணிபுரைவண்ணத்தவநிருத்தனநந்தன்செய்ய
மரைமலர்ச்செங்கண்வாசுதேவனுமரபின்மன்னோ-

உரைதரு - சொல்லப்பட்ட, மணி - நீலமணி, புரை-நிகர்த்த, செய்யமரை மலர்-செந்தாமரைமலர். (௪)

மனமெழிற்புந்திநற்சீர்மருவகங்காரஞ்சித்தம்
எனுமிவற்றியைந்துநாளுமிலங்கதிட்டானதேவர்
பனிவருகதிரோன்வேந்தன்பவர்சடையுருத்திரன்றன்
நினைவுறுசீவனென்றேநிகழ்த்துவர்மரபின்மாதோ,

பவர் - நெருங்கின. (ரு).

சொற்றதாமதத்தினோடுதோய்ந்துறுமகங்காரந்தான்
பெற்றநல்லொலியின்வந்துபிறந்தனசெவியும்வானும்
உற்றவானெழுந்தவூற்றினுதித்தனவளியுந்தொக்கும்
குற்றமில்வளியின்வந்துகுலாவியதுருவமாதோ.

ஊற்றின் - பரிசத்தில், தொக்கு - மெய், வளி - வாயு. (சு)

உருவினிற்கனலுங்கண்ணுமுதித்தனகனலின்வந்து
மருவியசுவையிற்றோன்றிவயங்கினபுனலுநாவும்
பெருகியபுனலினின்றும்பிறந்தநன்னாற்றந்தன்னின்
இருநிலமூக்குத்தன்னோடிலங்குறவுதித்ததன்றே.

கனல் - தீ, நாற்றம் - கந்தம். (எ)

ஒலியினையோங்குவானுமூற்றினைவளியுமொன்றிப்
பொலிதருமுருவைத்தீயும்புகல்வருசுவையைநீரும்
நிலைபெறுநெஞ்சைமண்ணுநீங்கலாவண்மையோடு
குலவுநல்லுரிமையாயகுணமெனப்பொலிந்துதோன்றும்.

உரிமை - உரித்தாந்தன்மை. (அ)

செவியொலிகளுநற்றொக்குச்சேர்பலவூறுஞ்செங்கண்
நவையறுமுருவம்யாவுநாவருஞ்சுவைகளாறும்
கவினநீண்மூக்கிதென்னக்கருதுமிந்தியத்தினுளும்
புவியுறுகுணங்களென்னுமணங்களும்பொருந்துமன்றே.

நவை - குற்றம். (கூ)

கருதுகண்செவிநாமூக்குக்கதுவுறுதொக்குவாக்கு
வருசெங்கைகாலிலிங்கங்குதமிவைமருவுந்தெய்வம்
பரிதிநற்றிசைநீர்வேந்தன்பரிப்பெயர்த்தேவர்திண்கால்
விரிதழல்விண்ணின்வேந்தனுபேந்திரன்விரிஞ்சன்கூற்றே.

கதுவுறு - பற்றுகிற, இலிங்கம் - கோசம், (ஆண்குறி) பரிப்பெயர்த்தேவர்-அசுவினிதேவர், உபேந்திரன் - விஷ்ணு. (க0)

பண்டைநான்மறைக்குமெட்டாப்பராற்பரனருளினானன்
கெண்டகுதத்துவங்களிலங்குபொன்னுருவமாகி
வெண்டிரைநீரிலண்டமாகவேவிளங்கவந்த
அண்டத்துள்விராட்டுவந்துற்றடல்கொடுவளர்ந்ததன்றே.

அண்டம் - முட்டை. (கக)

புலன்கள்பத்தகங்காரஞ்சேர்புந்திநன்மனமிவற்றோ
டிலங்கதிட்டானதேவரியைந்துறவெழுந்ததில்லை
துலங்கெழுவிராட்டுமற்றைச்சொல்லியசித்தத்தோடு
நலங்கிளர்சீவன்வந்துநண்ணவாங்கெழுந்ததன்றே.

நண்ண - பொருந்த. (௧௪)

உடம்பெனப்படுவதம்மவொன்றினுக்கொன்றுதோன்றி
மிடைந்துறுதத்துவத்தின்குழுவினுல்விளைந்ததாகும்
அடைந்ததத்துவங்களெல்லாமன்றியேபிறப்பதேது
தொடர்ந்துமற்றதனைத்தானேயுயிரெனத்துணிவர்மாதோ.

மிடைந்துறு - நெருங்கின (௧௫)

பொய்வகையாகுமாயைப்புணர்ப்பினுற்பட்டதன்றி
மெய்வகைதெரியநாடின்மேவருகுணனுமில்லை
செய்வினையொன்றுமில்லைசெலவில்லைவரவுமில்லை
உய்வதோருணர்வாயந்தவுள்ளுயிர்க்கோரின்மாதோ.

உய்வது - பிழைப்பது, ஓரின் - ஆராயின். (௧௬)

புனலுறுவிதிர்ப்புத்தண்ணம்புனல்வயிற்றோன்றுநின்ற
பனிமதிமேலதாக்கிப்பகர்வதோர்பான்மைபோல
மனமுதலாகிநின்றமாட்சிசால்காணத்துற்ற
வினையினையுயிர்மேலேற்றிவிளம்புவர்புனைந்துமன்றே.

விதிர்ப்பு - அசைவு, (சலநம்). (௧௭)

உரைதரிடுகனவுபோலவுபாதிபொய்யாகுமென்றும்
விரித்தமூன்றவத்தையுள்ளும்விளங்குவன்புருடனென்றும்
திருத்தியவறிவிற்றேறித்தேர்ந்துகொண்டிருப்பான்முத்தி
தரித்திடுமும்மையாயதனுவொரீஇயடைவானென்றான்.

உபாதி - அவஸ்தை, புருடன் - ஆன்மா, மும்மையாயதநு - ஸ்தூலசூக்ஷ்மகாரணங்களாகியமூன்றுசரீரங்கள். (௧௮)

உண்ணெகிழ்ந்துருகவிங்ஙனுரைத்ததுகேட்டவன்னை
மண்ணினின்மணமுநீரின்மருவுறுசுவையும்போல
நண்ணியமாயையோடுநெனிகலந்தோனைத்தேர்ந்திங்
கெண்ணுவதெங்ஙன்மாயையெப்பரிசொருவுமென்றாள்.

நனி - மிகுதியாக, ஒருவும் - நீங்கும். (௧௯)

என்றலுங்கபிலன்சொல்லும்யாதினுமியைபுநீத்து
நின்றமாதவத்திஞேர்பானீங்கலாதுறைந்தென்சீர்த்தி
நன்றவர்மொழிதல்கேட்டானவிற்றரும்பத்தியோகம்
ஒன்றுறுமொன்றுங்காலத்துற்றிடுஞானமாதோ.

இயைபு - சம்பந்தம், (பற்று), ஒன்றுறும் - அடையும். (௨0)

அரணியிலனல்வந்துற்றவ்வரணியையழிப்பதேய்ப்பக்
கருதியஞானம்வந்துகலந்துறுமுபாதிநீக்கும்
புரிதுயினீத்தோன்றன்பாற்பொருந்திடாக்கனவுபோற்பின்
உரைசெயுமாயைசேராதுண்மையையுணரலாமால்.

அரணி - தீக்கடைகோல். (௧௯)

விழுச்சிறப்புடையவூழின்வினைவகையறியமாட்டான்
அழுக்திடுமாசைப்பௌவத்தளறெழவிழுந்துமூழ்கி
இழைத்தனன்யானேயென்னவெண்ணியதிறத்தினாலே
தழைத்திடுவினைகளெல்லாந்தன்னைவந்தடையாநிற்கும்.

விழுச்சிறப்பு - மேலானசிறப்பு, பௌவம் - கடல். (௨0)

அந்தரமீதுகாற்றாலருங்கதியடையாநின்ற
கந்தரங்காற்றினாலிக்கதியெனக்கருதாதேபோல்
இந்திரன்வேதனாதியிமையவரானும்வெல்லா
வெந்திறற்காலந்தன்னால்விளைந்தனவினையென்றோரான்.

கந்தரம் - மேகம். (௨௧)

இருவினைக்குறும்புதீர்ப்பானெனதுநானவிற்றல்வேண்டும்
வருவவந்துறுமென்றெண்ணூஉவைகுறல்வேண்டும்பெற்ற
ஒருவலனுவப்பவேண்டுமுயிர்க்கெலாமிரங்கல்வேண்டும்
தருமலிகானந்தன்னிற்றனித்தினிதுறையல்வேண்டும்

எண்ணூஉ - எண்ணி. (௨௨)

கலைமதிமுகமுஞ்செய்யகமலலோசனமுங்காமன்
சிலைபொருநுதலுஞ்செக்கர்சிறந்தவொண்பவளவாயும்
மலர்துழாயலங்கன்மார்பும்வலம்புரிபொறுத்தகையும்
இலகுபொற்றாளுமாகவென்னுருக்கருதல்வேண்டும்.

செக்கர் - செந்நிறம், துழாயலங்கல் - துளசிமாலை, வலம்புரி - வலம்புரிச்சங்கு, (பாஞ்சஜந்யம்). (௨௩)

இழைத்திடல்வேண்டும்யோகம்யோகநன்றிழைத்தானாயின்
பழுத்திடத்தழலிற்சுட்டபசுஞ்சுடர்க்கனகம்போலத்
தழைத்தெழுகின்றவுள்ளந்தன்னுழைப்பற்றிநின்ற
அழுக்கறுமற்றகாலத்தமலனையறியலாகும்.

இழைத்திடல்வேண்டும் - செய்தல்வேண்டும். (௨௪)

புல்லெறும்பாதியாகப்புகல்சராசரங்களெல்லாம்
சொல்லிடினொன்றினொன்றுதுலங்கதிசயத்தவாகும்
எல்லையிலவைகடம்மினிலங்கதிசயத்தனவான்
நல்லநூற்பொருள்கடேர்ந்தொண்ஞானமிக்குயர்ந்தநல்லோன்.

அதிசயத்த - உயர்ந்தன. (௨௫)

தன்னைத்தானறியாஞ்பிற்றலைத்தலைத்துன்பஞ்சாரா
மின்னெனத்தோன்றிவீயும்யாக்கைகள்பலவுமேவும்
என்னதோர்யாக்கைதன்னையெடுப்பினுமெடுத்துநின்ற
அன்னதோர்யாக்கைநீங்கலாற்றலனுசைகூடும்.

தலைத்தலை - இடந்தோறும், சாரா - அடைந்து, வீயும் - அழிகின்ற. (௨௬)

கலிவிருத்தம்.

விழைவெனப்படுகின்றதுமென்மெல
அழலவிர்க்கசனனத்தரும்பிமெல்
மழலைமாதர்மருங்கிற்படர்ந்துபைங்
குழவிமீதுகொழுந்துவிட்டோங்குமால்.

விழைவெனப்படுகின்றது - ஆசையெனப்படுவது. (௨௭)

குழனரைப்பவெண்கோந்தமுந்தாமென
எழில்படைத்தவெயிறிடைவீழ்ந்தாப்
பழிபடைத்துடனிற்பழுக்கவும்
விழைவினுக்குவிளையுமிளமைபோம்.

எயிறு - பல். (௨௮)

உழுதுபகவளமுய்த்தமழவிடை
கிழவுபட்டிடிற்போற்றல்கெழீஇயதே
விழுமெய்யாங்குமுதிர்ந்திடின்வேட்டதன்
மழலைமாதருமைந்தரும்போற்றிலார்.

மழவிடை - இளவேறு, கிழவுபட்டிடின் - கிழத்தன்மையடைந்தால் (௨௯)

இம்பர்வாழ்வுழியீறிலதாகிய
உம்பர்வாழ்வதற்கொன்றுமியற்றிலன்
ஐம்பொறிக்கிரைதேடியலமந்து
வெம்புகின்றவெரிவிருந்தாவனல்.

எரிவிருந்து - நெருப்புக்கு விருந்து. (௩0)

சீக்கண்சிந்துறச்சீறியமபடர்
வீக்கவந்துவிழியெதிர்பபட்டிடின்
ஆக்கைசோர்தரவாங்குப்படுந்துயர்
வாக்கினெங்ஙன்வகுத்துமொழிவதே.

யமபடர் - யமகிங்கரர், வீக்க - கட்ட. (௩௧)

மண்ணில்யோசனையெண்பதத்தாருயிர்
நண்ணுகின்றவருநெறிநஞ்சுகால்
கண்ணநாய்க்குலங்கவ்வியுடற்றசை
உண்ணச்செல்வுழியூறுமற்றென்சொல்கேன்.

கால் - உமிழ்கின்ற. (௩௨)

பாறுகோடிபடரக்குருதிநீர்
ஊறுகின்றதன் னூனரிந்துண்டுபோய்
ஆறுகன்னலிற்செல்லுமழுலெனச்
சீறுகூற்றமுறுகின்றதென்புலம்.

பாறு - பருந்து, ஊன் - தசை. (௯௯)

சீந்துகின்றதெறுசினப்பாழிவாய்ப்
பாந்தளன்னவர்பற்றியலைக்குறக்
காந்துதீநரகாழ்ந்துகழிந்தபின்
மாந்தர்மீளவும்வந்துபிறப்பரால்.

தெறு - கொல்லுகின்ற, பாந்தளன்னவர் - பாம்புபோன்றவர், அலைக்குற-வருத்த.

ஒளிகொணித்திலமொண்பவளச்செறு
விளையவித்தியதென்னநல்வீரியம்
தளிர்நிறத்தெழுதாய்கருவிற்பனிந்
துளியிற்சென்றுபொருந்தித்துளக்குறும்.

செறு - வயல், வீரியம் - விந்து, பனித்துளியின் - பனித்துளிபோல. (௯௫)

ஓருமைந்துபகலினுடைதிரை
நீரின்வந்தெழுமொக்குணிகர்த்திடும்
ஏருலாய்வளர்ந்தீரைந்துவைகலின்
ஆருந்தூநிறவண்டம்பொருவுமால்.

மொக்குள் - குமிழி, அண்டம் - முட்டை. (௯௬)

ஒன்றுதிங்களினுற்றிடும்புன்றலை
சென்றதிங்களிரண்டினிற்றெண்டிரை
துன்றுகின்றசுடர்ப்பவளக்கிளை
வென்றசெங்கையுங்கால்களுமேவுறும்.

ஒன்றுதிங்கள் - ஒருமாதம். (௯௭)

மயிர்நகங்கண்மரீஇத்திங்கண்மூன்றினில்
செயிரில்கண்செவிமூக்குச்செறிவுறும்
இயலுமீரிருதிங்களினெல்லையின்
பயிலவாய்க்கும்பலவகைத்தாதுவே.

செயிர்இல் - குற்றமில்லாத, பலவகைத்தாது - சத்ததாதுக்கள், அவை - இரதம், இரத்தம், எலும்பு, சுக்கிலம், தசை, தோல், மூளையென்பன. நரம்புமாம். (௯௮)

அஞ்செனப்படுந்திங்களடைந்துழித்
துஞ்சலின்றிச்சுடுபசிதோன்றுறும்
எஞ்சலின்றியியன்மதியாறினில்
பஞ்சிபோலுமொர்பையினகப்படும்.

துஞ்சல் - தூக்கம், எஞ்சல் - குறைதல். (௯௯)

திங்களேழினறிவுசிறந்தெழத்
தங்குதொல்லைப்பிறவிகடானுணர்ந்
திங்குத்தோன்றுமிடரினித்தீர்க்கெனு
அங்கைகூப்பியமலனையேத்துமால்

இங்கு - இந்தக்கருப்பத்தில், (இடர் - துன்பம்.) (௪0)

குவிந்திருந்தமலத்திற்றளித்தெழாத்
தவழ்ந்துபல்புழுத்தன்னையரித்திடக்
கவிழ்ந்துசென்னிகிடப்பக்கவைஇவளைத்
தவிழ்ந்தபைங்குடரார்த்திடவார்ப்புறும்.

எழா - எழுந்து, கவைஇ - பற்றி, குடர் - குடல். (௪௧)

காய்தலுற்றகரிப்பிற்புளிப்பினில்
மேயதாயவுவர்ப்பின்மெலிவுறும்
ஏயதாய்ப்பசித்தீயினெரிந்திடும்
தாயருந்துவகொண்டுதளிர்ப்புறும்.

கரிப்பின் - உறைப்பினால், தளிர்ப்புறும் - வளரும். (௪௨)

உற்றதிங்களொருபதுசென்றிடின்
மற்றொர்மாருதம்வந்தலைப்படாச்
சுற்றிச்சென்னியழாக்கிடத்தோன்றுமால்
அற்றைத்துன்பமறைவதற்கொன்றுமோ.

மாருதம் - காற்று, (பிரசூதவாயு) தலைப்படா - கலந்து. (௪௩)

தோற்றஞ்செய்துழித்தொன்னிலமீதுளர்
காற்றுமேவக்கருவினிறந்தொன்றிய
மாற்றிலாதமதிமறைந்தோவுற
ஆற்றில்யாவதுமின்றியழுங்குமால்

தோற்றஞ்செய்துழி - பிறந்தபோது, உளர் - வீசுகிற, மதிமறைந்து - அறிவழிந்து, ஓவுற - நீங்க, அழுங்கும் - வருந்தும். (௪௪)

அறப்பெருய்முன்னருத்தவருந்துழித்
துறப்பவாடித்துயர்வுறவூர்வன
பறப்பவற்றிற்படருறமென்மெல
உறப்பெருதனவுள்ளிக்கலுழுமால்.

அருத்த - உண்பிக்க, படர் - துன்பம். (௪௫)

ஆண்டுபத்துடனைந்துகழிவுறின்
ஈண்டகுந்திறற்காளையெனவெழீஇ
மாண்டநல்லெழின்மாதர்மணிவடம்
பூண்டுவிம்மும்புணர்முலைகாமுறும்.

மாண்ட - மாட்சிமைப்பட்ட, விம்மும் - பருத்த, புணர் - நெருங்கின, காமுறும் - விரும்பும். (௪௬)

அம்பொற்றாதுகோதஞ்சிலைறவண்டிமிர்
வம்புலாங்குழன்மாதரெனப்படும்
பைம்புன்மூசியபாழ்ம்பெருங்கூவலின்
நம்பிவீழுமவனிநகைப்பவே,

தாது - மகரந்தம், கோது - கிண்டுகிற, இமிர் - ஒலிக்கின்ற, வம்பு - வாசனை, கூவல் - கிணறு. (௪௭)

வேதன்பெற்றதன்பெண்ணைவிரும்பியப்
பேதைமானுருக்கொண்டுபெயர்வுழிக்
காதல்கூர்கலையாய்த்தொடர்ந்தானெனின்
மாதர்வேட்கைமறுப்பவர்யாவரே.

வேதன் - பிரமன், பெயர்வுழி - போம்பொழுது, கலை - ஆண்மான். (௪௮)

பாற்கடற்றலைப்பட்டகொடுவிடம்
தோற்பவெங்கொலைசூழ்ந்துகுழைபொரு
வேற்கணார்விளையாட்டுவிலங்கினைப்
போற்றலாய்முதுமூப்புறப்பொன்றுமால்.

கடற்றலை - கடலில், பட்ட - உண்டாகிய, குழை - காதணி, பொரு-போரிடுகிற, பொன்றும் - இறக்கும். (௪௯)

பிறந்திறந்துநனிபடும்பேரிடர்
சிறந்தசங்கொடுபங்கயரேகைசேர்
நறுந்துழாய்புனைநம்பனறுங்கழல்
மறந்திடாமைமனக்கொளிற்றீருமே.

நனி - மிகுதியாக. (௫0)

புவியளந்தவன்பொன்னடித்தாமரை.
தவழுங்கங்கையந்தண்புனல்போன்மென
அவிர்சடாமுடிமீதுவைத்தன்றுகொல்
சிவனுமோர்சிவனாகித்திகழ்ந்தனன்.

புவியளந்தவன் - திரிவிக்கிரமன், சிவனாகி - மங்களகரனாகி. (௫௧)

ஆய்ந்துவேள்வியரிறபவாற்றிடின்
ஏந்துகொங்கையரம்பையரின்னலம்
மாந்தியின்புற்றுவைகியதன்பயன்
வீந்தகாலையின்விண்வழுக்குற்றிடும்.

அரிறப - அரில்தப=குற்றமற, வீந்தகாலையில் - முடிந்தகாலத்தில், விண்வழுக்குற்றிடும் - சுவர்க்கத்தினின்றும் இழிவான். (௫௨)

கற்பமொன்றுகழியக்கழிந்திடும்
பொற்புவாய்ந்தபொன்னாடுபொற்றாமரை
நற்பெருந்தவனாடுநில்லாதென்றும்
நிற்பதாழியனீள்பதமொன்றுமே.

பொற்பு - அழகு, பொற்றாமரை-நற்பெருந்தவன்நாடு - பிரமலோகம். (௫௩)

விளைவதோர்பயன்வெஃகலன்மாயவற்
களியினல்கியருமகமாற்றின்மீக்
கிளருஞ்செங்கதிர்மண்டிலங்கீண்டுபோய்
ஒளிகஞலுமுயருலகெய்துமால்.

வெஃகலன் - விரும்பாதவனாய், மகம் ஆற்றின்-யாகஞ்செய்தால், செங்கதிர்மண்டிலம் - சூரியமண்டலம், கீண்டு - பிளந்து, கஞலும் - மிகுந்த. (௫௪)

காதல்விட்டுக்கருதியபேதமாம்
ஏதநீங்கினரெய்துவர்முத்தியின்
பேதமாகுமுபாசனைபெற்றிடின்
வேதனாயினுமீளவுந்தோற்றமால்.

உபாசனை - உபாசித்தல், தோற்றம் - பிறப்பாம். (௫௫)

ஆவிவேறெனப்பேதமறைந்திடும்
தேவர்மாதவர்சேர்சனகாதியர்
பூவினானொடும்போயடைந்தனனவன்
மேவுஞான்றிவண்மீட்டுமுறிப்பரால்.

பூவினான் - பிரமன், மேவுஞான்று - உதிக்குநாளில். (௫௬)

மலத்திடைப்புழுப்போல்வளையாழிசூழ்
நிலத்துதித்துநிரயமுறுந்தொழில்
நலத்ததென்னநயப்பவர்ஞானமாம்
உலப்பிலாண்மையையோர்ந்துணரார்களே.

வளை ஆழி - வளைந்தகடல், நிரயம் - நரகம், உலப்புஇல் - கெடுதியில்லாத. (௫௭)

சூட்டுநாகஞ்சுமப்பநிலத்தவர்
வேட்டவாறுநடப்பவிளங்கிழாய்
பாட்டுவண்டிமிர்பைந்துளவோன்பதம்
நாட்டமுற்றுநீநற்றவஞ்செய்தியால்.

சூட்டு - உச்சிக்கொண்டை, நாகம் - ஆதிசேடன், வேட்டவாறு - விரும்பினவண்ணம். (௫௮)

மோகநீங்கிமுயல்வுறின்மாதவம்
ஆகமொன்றுதலின்றியபேதமாய்
மாகநாடர்வழுத்தவருசித்தோ
டேகமாகியிசைகுதிநீயென்றான்.

ஆகம் ஒன்றுதல் இன்றி - உடம்பெடுத்தலில்லாமல், மாகநாடர் - விண்ணாடர்.

என்றுகூறலுமேரிளமுல்லையை
வென்றமென்னகைமெல்லியறன்னுளம்
நன்றுதேறிநலங்கொளமிழ்தினைக்
கொன்றதீஞ்சொற்குமரனையேத்தினான்

முல்லை - முல்லையரும்பு, நகை - பல், கொன்ற - வென்ற. (௬0)

'அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வந்துசெம்பவளநீலமால்கடல்கிளைத்ததேய்ப்பச்
சிந்துமொண்சுடரவாகித்திசைத்திசைவிரிந்தசெந்தோட்
டுந்தியங்கமலப்போதினுதித்துலகனைத்துமீன்றான்
தந்தைநீநுன்னைமற்றோர்தநயனென்றுரைக்கலாமே.

செந்தோடு-செவந்த|இதழ், உலகனைத்தும் ஈன்றான்-பிரமன், தநயன்-புத்திரன்.

மின்வயிற்பிறந்தசோதிவெருவரவெயில்சூழ்குன்றப்
பொன்வயிற்பிறந்தகாந்திபொருந்தசெங்கமலைகேள்வ
உன்வயிற்றோர்பாலெல்லாவுலகமுமிருப்பநீவந்
தென்வயிற்றிருந்தாயென்னவேழையேனெண்ணலாமே.

வெருவர - அஞ்ச, எண்ணலாமே - நினைக்கலாமோ. (கஉ)

பொலமுகடுடையக்கொற்றப்புனனெடுங்கடலினாலத்
திலைமிசைக்கங்கைவெள்ளமெடுத்ததுவார்ந்தொழுகுபொற்றாள்
மலரடிக்கமலம்பற்றிமணிநகைத்துவர்வாய்வைத்துக்
குலவுபைங்குழவிநீயென்குழவியென்றுணரலாமே.

ஆலத்திலை - ஆலிலை. (கங)

முளைத்தனையுலகுக்கெல்லாமுன்னநீநிலக்குஞாலம்
விளைத்தலுங்காத்தருமுழித்தலும்விளையாட்டாமால்
அளிக்கடனினதுதன்மையறிகுநர்யாரேயென்று
வளைத்தளிர்ச்செங்கைகூப்பிவாணுதல்வழுத்தினாளால்.

அளிக்கடல் - கருணைக்கடல். (கச)

பவளநற்றுலாத்ததாகப்பானுலாமுத்திற்செய்த
தவளமநளிகைவிண்ணோங்கித்தயங்கியமனையுநெஞ்சம்
கவர்தருகடவுட்செம்பொன்விமானமுங்கமழ்பூங்காவும்
துவரவிட்டொருவித்தண்ணந்துறைநதியொன்றுசார்ந்தாள்.

துலர்த்தது - கைமர்த்தது,' துவர - முழுதும். (கரு)

மின்றிகழ்பசும்பொன்னாரம்வெண்டுகின்மாலைசாந்தம்
குன்றெனக்குவிந்தகோலக்குலமணியிவைகளுடாள்
கன்றுதேர்கறவையென்னக்கபிலன்மேல்வைத்தகாதல்
ஒன்றுமாங்ககன்றிலாளவ்வோரடரித்தடங்கணாளே.

கறவை - கறவைப்பசு. (கசு)

மர்வுரியுடையளாகிவார்ந்துநெய்த்திருண்டமன்றற்
புரிகுழல்சடையதாகப்புகர்றத்தவநன்காற்றிப்
பரண்டிக்கமலஞ்சேர்ந்தாள்பனிமொழிப்பவளச்செவ்வாய்த்
தெரிவைநல்யாக்கைதெய்வத்திருநதியாயிற்றம்மா.

வார்ந்து - நீண்டு, புகர்அற - குற்றமற. (கஎ

அடலுடையிலங்கைவேந்தனசைத்தனனெடுத்தகாலை
விடுசுடரொழுகுவெள்ளிவெண்டிரள்வீழ்ந்தாலாங்குச்
சுடர்மணியருவிக்குன்றந்தோன்றுறுதிசையின்வீங்கு
கடலிடன்கொடுப்பச்சென்றுகபிலன்வீற்றிருக்கின்றானல்.

அசைத்தனன் - அசைத்து, (முற்றெச்சம்). (௬அ)

இல்லையேமறுமையென்போரறிவிலாரிவர்கட்கிந்நூல்
சொல்லுதலாகாதுள்ளந்தூயவர்க்கியம்பல்வேண்டும்
நல்லுணர்வோடுகேட்டோர்நண்ணுவர்துறக்கமென்று
ஒல்லையிற்கூறிமீட்டுமுறைப்பனம்மயித்திரேயன்.

உள்ளம்தூயர் - மனந்தூயர், ஒல்லை - விரைவு. (௬௯)

இருநிலம்புகழுமன்னவென்றனனென்னலோடும்
அரசனும்விதுரன்கேட்டதென்னைகொலன்பினோடு
திருமுனிதெரித்ததென்கொறெரிதரவெனக்குநாடி
உரைசெயல்வேண்டுமென்றான்சுகமுனியுரைக்கலுற்றான்.

இருநிலம் - பெரிய உலகம், மண்ணுலகு விண்ணுலகு என்றலுமாம். (௭0)

கோதவாம்புலன்கள்வென்றகுலவுநான்மறையீரென்று
சூதமாமுனிவன்சொல்லக்கேட்டலுந்துகளிலாத
தாதலர்வனத்திலுற்றுச்சவுனகாதியாக
மாதவம்புரிவோரெல்லாமகிழ்ந்தனர்பெரிதுமன்றே.

கோதவாம் - குற்றத்தைவிரும்புகிற, (குற்றமுடையனவாகிய), குலவு - விளங்குகிற, துகள் - குற்றம். (௭௧)

கபிலர் தத்துவமுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—உ௬௪.

மூன்றாங்கந்தம் முற்றிற்று.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.



# நாலாங்கந்தம்.

## முதலாவது.

## மரீசிமுதலியோர்படைப்புரைத்தவத்தியாயம்.

—oo❊oo—

கருத்தமன்மகிழ்வினீன்றகருங்குழலியரைவேட்டோர்
திருத்தகுமரபுமுன்னஞ் செப்பியருசியென்பான்றன்
அருத்திசெய்மரபுந்தக்கனணிதிகழ்மரபுஞ்செப்பென்
றுரைத்தலும்விதுரற்கன்போடுரைத்தனன்மயித்திரேயன்.

அருத்தி - ஆசை. (௧)

கலைமதியிரியவெல்வெண்கதிர்வளையேந்தியம்பொற்
கலையணிமாயனுந்திக்கமலநாண்மலரிற்றோன்றும்
கலைமகள்கொழுனனல்குங்காட்சிசான்மரீசிவேட்ட
கலையெனுமடந்தையீன்றாள்காசிபன்றன்னைமன்னோ.

வளை - சங்கு, பொற்கலை - பொன்னுடை, வேட்ட - மணஞ்செய்த. (௨)

பொன்னணிகுழையாண்மீட்டும்பூரணவானையீன்றாள்
அன்னவன்விரசனென்னுமருந்தவன்றனையுங்கங்கை
என்னுநன்னதியேயாகவியைதுவனினிதினென்று
பன்னுவிச்சுவகையானபைந்தொடிதனையும்பெற்றாள்.

பைந்தொடி - பெண். (௩)

அத்திரியாகந்தோய்ந்தவருளநசூயையென்பாள்
தத்தொளிகிளைக்குந்திங்கடகைகொடத்தாத்திரேயன்
தொத்துறுகனலிற்சீற்றந்துறுதுருவாசனென்னும்
மெய்த்தவர்க்கருவுயிர்த்தாள்விரைமலர்பொழிந்தார்விண்ணோர்

ஆகம் - மார்பு, சீற்றம்துறு - கோவமிகுந்த, கருவுயிர்த்தாள் - பெற்றாள். (௪)

விடுசுடரெறிக்குந்திங்கள்விரைமலர்விரிஞ்சனுகும்
படிசொறத்தாத்திரேயன்பாற்கடற்சேர்ப்பனுமால்
சுடர்விடுபரிதியன்னதூய்த்துருவாசனென்போன்
மடல்விழ்கடுக்கைவேய்ந்தமணிமிடற்றீசனுமால்.

திங்கள் - சந்திரன், பாற்கடற்சேர்ப்பன் - வருணன், கடுக்கை-கொன்றைமாலை, மணி - நீலரத்நம், மிடறு - கண்டம். (௫)

என்னவுமுலகுக்கெல்லாமிறையவராகிநின்ற
முன்னவரிவற்குவந்துமுளைத்தவாறென்கொலீது
பன்னிடல்வேண்டுமென்னப்பாடல்சால்விதுரன்கேட்ப
நன்னர்நெஞ்சுவக்குமாறுநவிலுமான்மயித்திரேயன்

நவிலும் - சொல்லுவான். (௬)

மேவருமக்கட்பேறுவேண்டியோர்குன்றுநண்ணி
ஆவயின்மலரோற்போற்றியத்திரிதவஞ்செய்தானால்
பூவொடுபுணரிவெள்ளிப்பொருப்பெனும்டங்கணீங்கி
மூவருந்தோன்றினாம்முழுத்தவன்முன்னர்மாதோ.

மக்கட்பேறு - மக்களைப்பெறுதல், ஆவயின் - அவ்விடத்தில், வெள்ளிப்பொருப்பு - கைலாயமலை. (எ)

பரவியம்முனிவன்றூழ்த்துபங்கயத்தொருவன்றன்னைக்
கருதிநற்றவஞ்செய்தேனீர்கண்ணுறுமெவன்கொலென்றே
அருமறைக்கிழவநீரின்னகத்திடைநினைக்கலுற்ற
ஒருவனேயாங்கள்வேறென்றுள்ளலெலாறுரைத்தானன்றோர்

பங்கயத்தொருவன் - பிரமன். (அ)

இத்திறமியம்பியாங்களின்னுமையுதித்துமென்றார்
அத்திறமுரைத்தலானேயத்திரிதனக்குவந்து
முத்தொழிலியற்றுகிற்குமூவருமுதித்தாரென்றே
மெய்த்தவமயித்திரேயன்மீளவும்விரிக்கலுற்றான்.

முத்தொழில் - படைத்தல், காத்தல், அழித்தல், என்பன. (கூ)

அல்லியங்கமலம்புத்தவாயிதழ்க்குவளைபோலும்
சில்லரிபரந்தவுண்கட்சிரத்தைநேர்பங்கிராவைப்
புல்லினனுசத்தியன்சீர்பொருந்தியவியாபுந்தம்போ
டல்லுறழ்குழலிராதையாநியாநாலவர்ப்பெற்றாள்.

அல்லி - அகவிதழ், சில்அரிபரந்த - சிலரேகைகள் படர்ந்த, உண் - மையுண்ட, புல்லினன் - தழுவினன். (க0)

புலத்தியன்பொற்றார்மார்புபுணரவிபுக்குவென்னும்
அலத்தகமணியுமஞ்செஞ்சீறடியன்னமன்னாள்
குலத்தமிழ்பயந்துதென்றற்கொழுந்துலாந்தண்ணஞ்சாரல்
மலைத்தலையமர்ந்தவண்ணன்மாதவன்றன்னையீன்றாள்.

அலத்தகம் - செம்பஞ்சுக்குழம்பு, தென்றற்கொழுந்துலாந்தண்ணஞ்சாரல் மலைத்தலையமர்ந்தவண்ணல் மாதவன் - அகஸ்தியன். (கக)

பின்னுமோர்பிறப்பினந்தப்பெரும்புகழ்ப்புலத்தியன்சீர்
மன்னுவிச்சிரவாவென்னுமாதவன்றன்னையீன்றான்
அன்னவனளகைவேந்தையளித்தனனளித்தபின்னர்
இந்நிலம்வெருளப்பெற்றானிராவணன்முதலியோரை.

அளகைவேந்து - குபேரன். (கஉ)

புலகனைமணந்தநீலப்புயல்புரைகரியகூந்தற்
கலவமாமயிலஞ்சாயற்கதிர்முலைக்கதியென்றோதும்
இலகவாணுதலாள்கன்மசிரேட்டனையாதியாக
உலகறிசிறப்புவாய்ந்தமூவரையுயிர்த்தாண்மன்றே.

உயிர்த்தாள் - பெற்றாள். (கங)

முருகுவாய்மடுத்துவண்டுமூசுபூந்தாமம்வேய்ந்து
பிருகுமாமுனிவன்வேட்டபிறைநுதற்கியாதியென்பாள்
இருவிசும்பேந்துதாதாவின்னருள்விதாதாவென்னும்
அருமறையவரொடம்பொற்றாமரையணங்கையீன்றாள்

முருகு - தேன், மூசு - மொய்க்கின்ற, பூந்தாமம் - பூமாலை, வேய்ந்து - சூடி. ()

கலிவிருத்தம்.

முனிவிகுதிருதமாமுனியளித்தருள்
தநயர்களொருவிருதநுத்திநேர்கடாம்
வினையறவிளங்குபொன்மேருவீன்றருள்
வனிதையரிருவரைமணஞ்செய்தாரரோ

முனிவிகு - முனிவுஒழித்தகோவத்தைவென்ற. (கரு)

மாதராள்கியாதியைமகிழ்புவேட்டவவ்
வோதுதாதாவினிதுயிர்த்தமைந்தனும்
வேதனுலுணர்மிருகண்டுமெய்த்தவன்
காதலார்மகவுமார்க்கண்டனென்பவே.

மகிழ்புவேட்ட - விரும்பிமணஞ்செய்த. (கசு)

அறைந்திடுபுகழ்விதாதாவணைந்தசீர்
நிறைந்தபேரழகிறுணியதிக்கன்பொடு
பிறந்தனன்பிராணனப்பிராணன்பெற்றனன்
சிறந்தநற்றவமறைச்சிரசென்போனையே.

மறைச்சிரசு - வேதசிரன். (கஎ)

உறுபுகழ்க்கிருதுவைமணந்தவொண்டொடி
நறுநுதற்கிரியைநல்வயிற்றினன்னிறார்
அறுபதினுபிரவருந்தவத்தினர்
மறுவறுசிறப்புடைவாலகில்லியர்.

மறுவற - குற்றமற்ற, வாலகில்லியர் - பிரமாவின் மாநசபுத்திரருளொருவனாகிய கிரதுவுக்குப் பிறந்த அங்குஷ்டப் பிரமாணமுள்ள அறுபதினாயிரவர், இவர்சிறந்த தபோதநர். (கஅ)

வரம்பிலாமாதவவசிட்டன்வேட்டருள்
அருந்ததியென்னுமவ்வணங்குபெற்றனள்
திருந்தெழிற்சித்திரகேதுவாதியாம்
இருந்தவமுனிவரோரெழுவர்சம்மையே.

அணங்கு - பெண். (க௯)

அதர்வணன்வரைமருளகலம்புல்கிய
ததைமலர்க்கருங்குழற்சாந்தியீன்றனள்
முதுமறைமுழுதுணர்ததிசியமுதற்
புதல்வரோர்மூவரைப்புவிவழுத்தவே.

அகலம் - மார்பு, புல்கிய - தழுவிய. (உ0)

ஆதியின்மனுவினிற்றோன்றியாய்மறை
ஓதியருசியினைமணந்தவொண்டொடி
மேதகுவேள்வியம்புருடன்றன்னொடு
பேதைதக்கிணையெனுமணமகப்பெற்றனள்.

வேள்வியம்புருடன் - யஜ்ஞன் (உக)

நேரிழை மகட்கொடை சேர்ந்தநாளினில்
ஏரெழின்மகற்பெறினெனக்குநல்கென
ஓருரைநடந்ததலினுற்றசமைந்தனைக
கூரயில் வன்மனுவொடுசென்றனரோ.

மகட்கொடை - மகளைக்கொடுத்தல், சேர்ந்த - சம்மதித்த. (உஉ)

நக்கபூந்தாமரைநகையாகிய
தக்கிணைவலம்புரித்தடக்கைமாயனும்
மிக்கவவ்வேள்வியம்புருடனைத்தழீஇ
மக்கள்பன்னிருவரைவயிறுவாய்த்தனள்.

நக்க - விளங்குகிற, வலம்புரி - பாஞ்சஜந்யம் என்னுஞ்சங்கு. (உ௩)

தோடவிழ்பசுந்தொடைசந்தோடஞாதியாம்
பாடல்சால்வன்னவாபரவைவெண்டிரை
ஊடெழுகதிரவரொப்பத்தோன்றினர்
மோடுகொள்காந்திமூவுலகுமொய்ப்பவே

தோடு - இதழ், பசுந்தொடை - பசியபூமாலை, பாடல்சால் - பாடற்றொழிலிற்சிறந்த, மோடு - பெருமை (உ௪)

அன்னபன்னிருவருமாதியாமவை
மன்னவன்காலம்பெயரவாகளாயினர்
சொன்னவக்காலம்மனுவிற்றோன்றினர்
பன்னகஞ்சுமந்தெழுபானவராயினர்.

வானவர்கள் - தேவர்கள் (உ௫)

தரையுகப்புனைமனுவேந்திரதாரணி
விரைவொடுகாக்குநாள்விளங்குமாதவர்
எழுவரென்றிசைகுறுமுனிவர்யாரெனின்
மொழிதருமரீசிமுதலினோர்களே.

தாரணி - பூமி. (உ௬)

கருதுமந்நாளரிகலையின்றோற்றமாம்
பொருவநுவேள்வியம்புருடனன்னவன்
சுரபதியாகவுந்துன்னினனிந்த
உரைபெறுமறுவகையோருமாயனே.

அரிகலை - விஷ்ணுகலை. (உ௭)

கலிநிலைத்துறை.

தக்கன்மேவியபசூதிசெந்தாமரைமுகந்துச்
செக்கர்வானெழுதிங்களஞ்சிறுநுதற்றெண்ணீர்
மொக்குள்போலெழுமுகிண்முலைமுத்தவெண்மூரல்
மக்களோரறுபதின்மரைப்பெற்றனண்மாதோ.

பசூதி - பிரசூதி, இவள்சுவாயம்புவ மநுவின்மகள். (௨௮)

அன்பினுற்பதின்மூவரையறத்திறுக்களித்தான்
இன்புறத்தழற்கடவுளுக்கொருத்தியையீந்தான்
தென்புலத்தவற்கொருத்தியைவழங்கினன்சிறந்த
கொன்பிறங்குபூங்கொன்றையாற்கொருத்தியைக்கொடுத்தான்.

கொன் - பெருமை, பூங்கொன்றையான் - சிவன், அறம் - தருமதேவதை. (௨௯)

உரைத்தநல்லறக்கடவுள்சேரொள்ளிழையவரில்
சிரத்தைசயீன்றனள்சவணவெற்பிணையெனத்திரண்டு
பெருத்தவெம்முலைமைத்திரிபசாதனைப்பெற்றாள்
அரத்தவேல்விழித்தயைவிளங்கபயனையுயிர்த்தாள்.

ஒள்ளிழையவர் - மாதர், (௩௦)

சாந்திதந்தனள்சுகனையந்தளிர்புரைமேனி
ஏந்துவெம்முலைத்துட்டிசந்தோடனையீன்றாள்
வாய்ந்தநல்லெழிற்புட்டிபெற்றனண்மயன்றன்னைப்
பூந்துணர்க்குழற்கிரியையோகத்தினைப்பூத்தாள்.

தந்தனள் - பெற்றாள், பூந்துணர் - பூங்கொத்து. (௩௧)

கத்திகைக்குழலுன்னதிகருப்பனைப்பெற்றாள்
புத்திபொங்கெழிலருத்தனைப்பயந்தனள்பொன்னேர்
உத்திதோய்முலைமேதையோர்மிருதியையுயிர்த்தாள்
தத்தைமென்மொழித்திதிக்கைநற்கேமனைத்தந்தாள்.

கத்திகை - பூமாலை, உத்தி - தேமல். (௩௨)

இருள்கனிந்துவார்ந்தொழுகுபூங்குழலிரீயென்பாள்
பெருநிலம்புகழ்குழைவொடுகல்வியைப்பெற்றாள்
முருகுவிம்மியமுளரிவாண்முகத்தெழின்மூர்த்தி
நரனொடோங்குநாராயணன்றனையுயிர்த்தனளால்.

கனிந்து - முதிர்ந்து. (௩௩)

இரண்டுமாதவத்தோர்களுமியைந்துவந்துதிப்ப
வெருண்டுதீயனவிடைகொளவிளங்கியதிசைகள்
சுருண்டுநெய்த்தபூங்கருங்குழற்றோகையரோடும்
திரண்டுவான்மிசைத்தேமலர்பொழிந்தனர்தேவர்.

வெருண்டு - பயந்து, தீயன - தீமைகள் (௩௪)

நவையினற்றவம்புரிதருநரனெனுநாமன்
புவிவழுத்துசீரருச்சுனனெனப்புகுந்துதித்தான்
எவரும்போற்றுநாராயணனெனும்பெயருறுவோன்
கவின்விளங்கியகண்ணனென்றுதித்தனன்மாதோ.

நவையில் - குற்றமற்ற, வழுத்து - புகழ்கின்ற. (௩௫)

மேவுமாரழல்விபுதன்வேட்டனன்சுவாகாப்பேர்த்
தேவியாங்கவளகட்டினிற்றிகழொளிசிறந்த
பாவகன்பவமானனொண்சுசியெனப்பகரும்
மூவர்தோன்றினர்மூவகையுலகமுங்களிப்ப

அழல்விபுதன் - அக்கினிதேவன், அகட்டினில் - வயிற்றில். (௩௬)

சீலமுற்றவம்மூவருந்திகழுமொவ்வொருவர்
வேலைசுற்றுபார்விசும்பிடம்விளங்குமுன்வந்த
கோலமுற்றமாண்டழுவிபெற்றனரெனக்கூறச்
சாலுநாற்பதோடைந்தெனண்டநயரைத்தந்தார்.

வேலை - கடல், (௩௭)

வானம்போற்றுதென்புலத்தவரமிழ்தெனமாந்தும்
தூநிலாமதிவாண்முகச்சுதையெனும்பிணவும்
வேனிலங்குயின்மென்மொழிமேனையைத்தரணி
ஆனநல்லெழிலரிவையரிருவரையளித்தாள்.

தென்புலத்தவர் - பிதிரர், பிணா - பெண். (௩௮)

மரீசிமுதலியோர் படைப்புரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---

## இரண்டாவது

## தக்கன் வேள்வியழித்தவத்தியாயம்.



வேறு.

ஒளிகால்பசும்பொன்முடித்தக்கனுயிர்த்தவம்மென்
றளிர்போலுமேனிச்சதிதேவிமணம்புணர்ந்த
முளைநாண்மதியம்மிலைசெஞ்சடைமுக்கணான்மேல்
விளையாதசீற்றம்விளைவித்துவெறுத்தல்செய்தான்.

ஒளிகால் - ஒளிவீசுகிற, சீற்றம்—கோபம். (௧)

எனவோடுமுக்கணிறைமேன்முறைதீர்ந்துதக்கன்
முனிவாயதென்னைமுனிவேந்தமொழிந்திடென்ன

மனமாசிகந்துமறைதேர்ந்தமயித்திரேயன்
வினைவேர்கடிந்தவிதுரற்குவிளம்பலுற்றான்.

மனமாசு இகந்து - மனக்குற்றங்கடிந்து. (உ)

பைந்தாதுசிந்திப்பனிநுண்டுளித்தேறல்வாக்கு
மந்தாரநீழன்மருவானவர்வந்துசேரச்
செந்தாமரைக்கட்டிருமாலைவழுத்திஞாலம்
தந்தார்குழுமித்தனிவேள்வியியற்றினரால்.

தேறல் - தேன். (௩)

புரிகின்றவேள்விக்குயிர்யாவையும்பூத்ததக்கன்
வருகின்றகாலைமலர்வீட்டுறைவள்ளலன்றி
விரிகின்றவொள்வாள்வயிரப்படைவேந்தனோடும்
எரிகின்றசெம்பொன்முடிவானவர்கண்டெழுந்தார்.

மலர்வீடுறைவள்ளல் - பிரமன். (௪)

துளங்குஞ்சுடர்கால்சுடுபொன்னெனத்தோடவிழ்ந்து
விளங்குங்கடுக்கைவிரைநாண்மலர்தொத்தெறிந்து
வளங்கொண்டகங்கைப்புறத்தன்னமணந்ததொப்ப
இளந்திங்களையுஞ்சடையண்ணலெழுந்திலானால்.

துளங்கும் - அசைகின்ற, சுடர்கால் - ஒளிவீசுகிற, கடுக்கை - கொன்றை. அன்னம் - அன்னப்பறவை. (௫)

குருக்கும்பிறைக்கீற்றயல்சேரும்வெங்கோளராவின்
விரிக்குங்கடுக்கைமுகிண்மென்றொடைவேய்ந்தநம்பன்
இருக்குஞ்செயல்கண்டிமைதீயவெரிந்தழன்று
கருக்குங்கனற்கண்மலரோன்மகன்காய்ந்துநின்றான்.

குருக்கும் - ஒளிர்கின்ற, கடுக்கைமுகிழ் - கொன்றையரும்பு, நம்பன் - சிவன், மலரோன்மகன் - தக்கன், (௬)

மறைகொண்டநாவின்மறையோரொடுவானநீங்குற்
றிறைகொண்டவும்பரெழக்கண்டுமெழுந்திலானல்
சிறைவண்டுவீழ்கூந்தலென்சின்மொழிமாதைவேட்ட
நறைகொண்டசாரான்செயனன்றானென்றெனநக்கான்,

இறைகொண்ட - தங்கின. (௭)

இருகூறுசெய்தமதிவாணுதலேலைவாழ
ஒருகூறுநல்குமரவோனையுருத்துநோக்கி
முருகூறுபைந்தாரிமையோர்கண்முகக்கும்வேள்வி
தருகூறுனக்கொன்றிலதாகவெனச்சபித்தான்.

ஏழை - பெண், (உமாதேவி) உருத்து - கோவித்து. (௮)

எரிமொய்த்தசெங்கண்மறையோனுரைகேட்டெழுந்து
மருமொய்த்தபைந்தார்விறனந்திமடங்கல்வெந்தீ

உருமொத்தழன்றமறையந்தணரோமவேள்வி
புரிவித்திரந்துபுகன்ஞானமொழிகவென்றான்.

மடங்கல்வெந்தீ - ஊழித்தீ. (கூ)

குழைக்குங்கடுக்கைத்துணர்ச்செஞ்சடைக்கூத்தனன்பு
பழுக்கின்றபாகபதர்யாவரும்பண்டைவேள்வி
ஒழுக்கந்தவிர்ந்துமறைநீர்கெனவோங்குசீற்றம்
தழைக்கும்பிருகுமுனியாங்குச்சபித்தல்செய்தான்.

சீற்றம் - கோபம். (க0)

இத்தன்மையெய்தவழல்வேள்வியிழைக்குங்காலை
முத்தென்றமூரற்கொடிபங்கர்மறைமுக்கணுறவும்
வித்தின்றியாவும்விளைக்குந்தாளுடையவர் தாமேக
தத்தம்பதியினடைந்தார்தலையந்தயாரோர்.

இழைத்தல் - செய்தல், மூரல் - பல்.  (கக)

கலிவிருத்தம்.

உலகமுண்டவனுந்தியந்தாமரை
மலரின்மேயமறைமுதலாயவன்
தலைவனாகியதக்கனுக்காய்கதிர்
நிலவுகாலுநெடுமுடிசூட்டினான்.

மறைமுதலாயவன் - பிரமன். (கஉ)

பழுத்தநான்மறைப்பண்ணவர்தம்மொடு
தழைத்தசீற்றந்தலைக்கொண்டுதக்கன்விண்
கிழிதததிங்களங்கீற்றணிநம்பனை
அழைத்தவின்றியருமகமாற்றமால்.

தலைக்கொண்டு - மிகுந்து. (கந)

ஒற்றையாழியஞ்செல்வருமொண்ணிலாக்
கற்றைகாலுங்கடவுளுங்கற்பகப்
பொற்றமாலைப்புரந்தரனாதியாச்
சொற்றவெண்மருந்தொக்கனரென்பவே

பொற்ற - பொன்னிறத்தையுடைய. (கச)

முறையில்வேள்விமுடிவுபெறுமெனெ
அறிவிலாடியவாய்மலரண்ணலும்
மறைமுடித்தலைநின்றமணிநிறத்
திறையுமல்லதையாவரங்குற்றிலார்.

மலரண்ணல் - பிரமன், மணிநிறத்திறை - விட்டுணு. (கரு)

ஆற்றும்வேள்விக்கரம்பையர்மின்னெனத்
தோற்றிவிண்ணிடைத்துன்னினர்சேறல்கண்

டேற்றினனடியேத்தினள்கிள்ளையின்
சாற்றுதீஞ்சொற்சதிநின்றிறைஞ்சினள்.

சேறல்:- செல்லுதல், ஏற்றினன் - இடபவாகநனாகியசிவன், சதி-பார்வதி. (கசு)

மாறிலெந்தைமகம்புரிவானதற்
கேறில்வாளிடையாவருமேகுவார்
சேறுநாமுமெனவிளைதெள்ளமு
தூறுமத்தண்கிளவியுரைசெய்தாள்.

சேறும் - செல்வோம். (கஎ)

கொந்தவார்குழல்கூறுதல்கேட்டலும்
அந்தணாளரமாரவையின்கண்
தந்தையாகியதக்கன்வினந்துரை
நிந்தையாநிகழ்த்தினனன்றரோ.

வினந்துரை - சாபவார்த்தை. (கஅ)

அருப்புவெம்முலைநங்கையழைக்கிலன்
செருக்கினாலவன்செல்லினுமென்னுமால்
விருப்பமின்னதுவிட்டிடல்வேண்டுமென்
றுரைத்தனன்புரமொள்ளழலூட்டினான்.

எள்ளும் - அவமதிப்பான். (ககூ)

அழைத்திலன்னவனாயினுமன்னையும்
தழைத்தகாதற்றுணைவியர்தாமுமோர்
உழைச்செறிந்தனர்காண்பலங்குற்றென
மழைக்கருங்கண்மலர்சிவந்தாளரோ.

காண்பல் - பார்ப்பேன். (உ0)

போகலென்னினும்பொன்றுமற்றவ்வழி
ஏகுமேனுமிறந்துபடுமெனா
நாகஞ்சூடியநம்பனிருத்தலும்
தோகைபல்கணஞ்சூழவெழுந்தனள்.

போகல் – போகாதே, பொன்றும் - இறப்பாள் (உக)

கிள்ளைகொண்டும்வெண்கேழ்கிளரன்னமென்
பிள்ளைகொண்டுஞ்சிலர்பின்பெயர்ந்தனர்
வள்ளைகொள்ளிளமான்மருணோக்கெலாம்
கொள்ளைகொண்டகுவளையங்கண்ணினார்.

பிள்ளை - குஞ்சு, கேழ் - நிறம், (உஉ)

ஒலிக்கவெண்சங்குருமெனப்பல்லியம்
கலிக்கவண்டகடாகமுடைபடச்

சிலைக்கவுந்தாதுந்துபிசென்றனள்
மலைக்கும்வென்றிமழவிடையூர்ந்தரோ.

மலைக்கும் - போர்செய்கிற, வென்றி - வெற்றி, மழவிடை - இளவெருது ()

எழுந்தொர்பானிலமோங்கவெறித்திருள்
விழுங்குகற்றைவெயிலொருபாலெழ
முழங்குதெண்கடலார்ப்பின்முதுமறை
தழங்குவேள்வியின்சாலைசென்றெய்தினள்.

தெண்கடல் ஆர்ப்பின் - தெளிந்தகடலொலிபோல, தழங்கு - முழங்குகிற. ()

மாக்கண்வெம்முலைமாதினைக்காணநெஞ்
சேக்கற்றேக்கற்றிருந்ததுணைவியர்
நோக்கிநோக்கித்தந்நோக்கங்களிகொள
மீக்கொள்காதலின்மேவினர்புல்லினார்.

மாக்கண் - மான்கண்போலுங்கண், மாதினை - உமாதேவியை, புல்லினார் - தழுவினார். (உ௫)

மன்னுமின்னகைமாதரம்பாவையர்
பொன்னந்தாமரைப்போதுறைசெய்யவாய்க்
கன்னியன்னக்கணமெனச்சூழ்தர
அன்னைபாற்சென்றகங்குளிர்ந்தாளரோ

பாவையர் - பிரதிமைபோலும் பெண்கள். (உ௬)

கூற்றைவென்றகுரைகழற்றாளினான்
கூற்றைமாற்றிக்குலமறைக்கூற்றினால்.
ஆற்றுகின்றவருமகங்காண்டலும்
ஆற்றகிற்றிலளங்கழன்றாளரோ.

கூற்றைவென்ற குரைகழற்றாளினான் கூற்றை - சிவபெருமான்சொல்லை, மறைக் கூற்றினால் - வேதவிதியால், அழன்றாள் - கோவித்தாள். (உ௭)

வீடுநாண்மிளிர்வெண்மதிமாலைமின்
ஓடமின்னியுலறியசெஞ்சடை
சூடிவெய்யசுடலைப்பரப்பினின்
றாடுதேவையறிகிலைபோலுமால்.

வீடுநாள் - சர்வசங்காரகாலம், உலறிய - காய்ந்த, சுடலைப்பரப்பு - மயானபூமி.

பொன்னிற்றோன்றிறைபூங்கழல்போற்றிலை
நின்னிற்றோன்றுடனோர்கலன்யானென்றுத்
தன்னிற்றோன்றுந்தழல்கொடுமெய்சுடர்
மின்னிற்றோன்றினள்வெற்பகத்தென்பவே.

பொன்னிற்றோன்றிறை - சிவபெருமான், நோர்கலன் - சுமக்கிலேன். (உ௯)

கண்டுகண்ணழல்காலக்கணமெழுந்
தண்டகோடியழிகுறுநாளெனக்
கொண்டசூலந்திரித்தடுகூற்றென
மண்டுவெஞ்சமமாடவிளைத்தவே

அழல்கால - நெருப்பைக்கக்க, கணம் - பூதகணம், சமமாட - போர்செய்ய ()

வேதவேள்வியின்வெம்புபிருகுவென்
றோதுமந்தணனேமமொன்றுற்றலும்
காதநான்குகனலுகனல்விழிப்
பூதமொன்றுபொடித்தமர்செய்ததால்

பொடித்து - தோன்றி. (௩௧)

புகையும்வெம்படைப்பூதத்தினாற்கணம்
இகலழிந்திடல்காண்டலுமேகினன்
மகதியாழ்முனிகூறினன்வாண்மதி
முகிழணிந்தமுதல்வற்குமுற்றுமே

இகலழிந்திடல் - வலியழிதலை (௩௨)

சந்தக்கலிநிலைத்துறை.

வடித்தயாழ்முனிவழங்குமுரைவந்துசெவிவாய்
நடத்தலோடுநகைநாணிலவுவந்துசுடரத்
தடித்துநேருமொருசெஞ்சடைபிடுங்கிநிலமேல்
அடித்தனன்கடலளித்தவிடமுண்டவமலன்.

தடித்து - மின்னல் (௩௩)

மணிதயங்குமுடிவான்முகடுமுட்டவரைநேர்
திணிபுயந்திசைகளெட்டையுநெருக்கவெழுதீ
அணிநிறங்கிளரும்வீரனவணின்றுமுளையாப்
பணியென்னென்றுபவன்வார்கழல்பணிந்தனனரோ.

முளையா - தோன்றி, பவன் - சிவன், பணி - கட்டளை. (௩௪)

மிக்கவேள்வியையழித்துநெடுவேள்விபுரியத்
தொக்கவானவர்தொலைந்திரியமோதிநெறிதீர்
தக்கன்வன்றலைதடிந்திடுதியென்றுரைசெய்தான்
செக்கர்வானெனுஞ்சிவந்துபொருசெஞ்சடையினன்.

தடிந்திடுதி - துணிக்கக்கடவை. (௩௫)

ஒன்றொடொன்றுபலவண்டமுமுடைந்திடுவதற்
கன்றுவாளவுணர்வேர்தெறவுமன்றிறைவநீ
சென்றுதக்கனதுசென்னிதுணியென்றுரைசெய்தான்
நன்றுநன்றெனதுவீரமெனநக்கனனரோ.

வேர்தெறவும் - வேர்பறிக்கவும். (௩௬

கலி விருத்தம்.

வெடிக்குநகையார்ப்பினைவெரீஇயிறுதிநாணின்
றிடிக்குமிடியென்றெறிமணிக்குலமிமைக்கும்
முடித்தலைபரப்புபுமுழங்குகடல்வேலிப்
படிப்பொறைசுமக்குமரவும்பதைபதைப்ப.

ஆர்ப்பினை - ஒலியை, வெரீஇ - பயந்து, பரப்புபு - பரப்பி, கடல்வேலி - கடலெ
ல்லை, படிப்பொறை - பூபாரம். (௩௭)

உரைக்குநெய்மணந்துநிணமுண்டொளிருமொள்வாள்
விரிக்குமழலுங்கடைவிழிக்கனலுமொன்றாய்க்
குரைக்குநெடுவாரிதிகுடித்துலகமேழும்
எரிக்கும்வடவைக்கனலெரிந்திடவெரிப்ப.

வாள் - ஒளி, குரைக்கும் - ஒலிக்கின்ற, வாரிதி - கடல். (௩௮)

மீயுயர்பொலங்குடுமிமேருவைவெருட்டும்
ஆயிரமணிப்புயமுமஞ்சுடரெறிப்ப
மாயுறலிறும்பைநறுமாலைகள்வயங்கக்
காயுமழலைச்சரவகங்கணமிரைப்ப.

மாயுறலிறும்பை - மாயுறல்=இல்தும்பை - கெடுதியில்லாததும்பை, அரவகங்க
ணம் - சர்ப்பகங்கணம் (௩௯)

நெய்ம்முகமணிந்தவெயினேமிகதைவெந்தீத்
தும்முமழுவாளிலருதோமரமுலக்கை
கைம்மலர்தொறுங்கனலமண்முழவுகார்போல்
விம்மவதிர்தெண்கடலின்வெள்வளைமுழங்க.

நேமி - சக்ராயுதம், தும்மும் - வீசுகிற, கனல - எரிய, மண்முழவு - மார்ஜனை
யமைந்த மத்தளம், கடலின் - கடல்போல. (௪0)

முக்கணடல்வீரன்வெம்முனைத்திறம்விரும்பித்
தக்கனுறைகின்றவொருசாலையிவணென்னக்
கக்கவழல்கட்கடைகனன்றிதழ்துடிப்ப
நக்கபிறைவாளெயிறதுக்கினனடந்தான்.

வெம்முனைத்திறம் - வெவ்வியபோர்த்தொழில். (௪க)

வாளிபொழிவெஞ்சிலைவணக்குமடனந்தி
ஆளிபுரைசண்டன்மணிமானழல்கருங்கட்
காளியொடெழுந்தனர்கணங்கள்பலசென்ற
தூளிபடலம்பரிதிசூழ்வெளிபுதைப்ப.

ஆளிபுரை - சிங்கத்தையொத்த. (௪உ)

மும்மையுலகந்தருமுதற்கடவுள்செங்கண்
செம்மவெழுதூளிகடிசார்முகமறைப்ப

அம்மவிஃதென்கொலெனவாருமவிவிட்டுக்
கொம்மெனவெழுந்தனர்குலைந்துநெடுவானோர்.

மும்மையுலகந்தருமுதற்கடவுள் - பிரமன், செம்ம - மறைக்க. (சங)

பொன்விளையுமேனிமயில்பொன்றலின்வெகுண்டு
கொன்விளையெயிற்றபலகூளிபுடைசூழ
மின்விளையும்வாளுருவிவீரன்வருமந்தோ
என்விளையுமோவெனவியம்பினரிரிந்தார்

பொன்விளையுமேனிமயில் - உமாதேவி, பொன்றலின் - இறத்தலால், கொன்- அச்சம். (சச)

அலைக்கடல்கலக்கவெழுமாலமெனவெம்பிச்
சிலைக்கடைகுழைத்துவிழிசெங்கனல்கொழிப்பக்
கொலைத்தொழில்குறித்தெழுகொடிப்படையின்முன்னம்
தலைப்படுசினத்தலைகைசாலையினிறுத்த.

ஆலமென - ஆலாகலவிடம்போல, சிலைக்கடை - வில்லின்நுனி, குழைத்து-வளைத்து, இறுத்த - தங்கின. (சரு)

இறுத்தனமகத்தறியெடுத்தவியைவாயின்
நிறைத்தனமடுத்தனநெருப்பிலகுசாலை
மறத்தினிலறத்துறைவழுக்குமறையோனைக்
கருத்தவழல்கட்கடைசிவந்தனகணங்கள்.

மகத்தறி – யாகத்தம்பம், இறுத்தன - ஒடித்தன. (சசு)

வெடித்ததுயரண்டமெனவிண்ணவரைவாரி
அடித்தனவுதைத்தனவரைததனவெருட்டிப்
பிடித்தனசுழற்றினபிசைந்தனபிழிந்த
கடைக்கனலிலிட்டனகனற்றினகனன்ற

பிசைந்தன - பிசைந்தன. (சஎ)

விண்ணிடையெறிந்தசிலவிண்ணவரைவாரி
மண்ணிடையெறிந்தசிலமால்வரைமுகட்டும்
தண்ணலையகட்டினுமெறிந்தசிலசாலக்
கண்ணிடைகடைக்கனல்கதழ்ந்தொழுகுபூதம்.

அலையகடு - கடனடுவே. (சஅ)

அந்தரமறுத்தொளிரருக்கனுமொளிப்பச்
சிந்துமதமற்றனதிசைக்கரிகளோட
மந்தரமுதற்குடுமிமால்வரைகுலுங்க
வெந்திறல்பழுத்தசிலவீரனுமடைந்தான்.

அந்தரம் - ஆகாயம், மறுத்து - விட்டு. (சக)

வென்றிகெழுவீரனெடுவேள்விமறைவல்லோர்
வன்றகர்படுத்ததிறமானவுயர்தக்கற்

கொன்றுதலையங்கைமலர்கொண்டுதிருகாவத்
தென்றலையழற்றிரண்மடுத்துாணிதீர்ந்தான்.

தகர் - ஆடு, மான - நிகர்க்க, திருகா - திருகி. (௫0)

கலிநிலைத் துறை.

உளகளங்கெழுந்துயர்ந்ததோளொருகுழையொருவன்
கலிங்கமன்னவன்கதிர்கெழுபல்லுகுத்தென்ன
இலங்குவேள்வியிலினகைமுகிழ்த்தசெங்கதிரின்
அலங்குபல்லினையுகுத்தனனலங்கல்வேற்சண்டன்.

ஒருகுழையொருவன் - பலராமன், கலிங்கமன்னவன் — கலிங்கதேசத்தரசன், உகுத்தென்ன - உதிர்த்தாற்போல, செங்கதிர் - சூரியன். (௫க)

பிருகுமாதவன்முகத்தெழுமயிரெலாம்பிறங்கு
வரையின்வீங்குதிண்டோண்மணிமான்பறித்தனனால்
அரியவேள்வியிற்சபிததியென்றவன்முகம்பார்த்த
பரிதிகண்களைப்பிடுங்கினன்பரிதிவேனந்தி

வரையின் - மலைபோல, பரிதிவேல் - ஒளியுள்ளவேல், (௫௨)

ஆற்றுவெஞ்சமம்வேட்டுவாயுபூன்றுபோர்வீரன்
சீற்றவாளுமிழ்தீப்படநிறமெலாந்தீந்த
கூற்றந்தன்னெடுகொலைதொழில்காட்டிலதோடிக்
காற்றினுக்கிறைகாட்டினன்றன்னுடைககடுப்பு.

ஆற்று - செய்யப்பட்ட, வெஞ்சமம் - கடும்போர், வேட்டு - விரும்பி, நிறம் - மார்பு, காற்றினுக்கிறை - வாயுதேவன், கடுப்பு - வேகம். (௫௩)

சினக்கடுந்திறல்வீரன்றன்செய்யகட்கடைகால்
அனற்குவெம்பினனதிர்கடல்படர்ந்தனன்வருணன்
கனைக்கும்வண்டிமிர்கற்பகக்காட்டகங்கலந்தான்
பனைத்தடக்கைவெம்பகட்டயிராவதப்பாகன்.

கட்கடை - கடைக்கண், கால் - உமிழ்கின்ற, அயிராவதப்பாகன் - இந்திரன். ()

இரிந்துவானவர்யாவருமெறழ்வலியழிந்து
விரிந்ததாமரைமீமிசையிருந்தவனுலகம்
பொருந்தியுற்றதுபுகறலுமவர்முகநோக்கித்
தெரிந்தநான்மறைத்திசைமுகன்செப்பலுற்றனனால்.

இரிந்து - ஓடி. (௫௫)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வலிகெழுமொருவனேடுமெறலுதல்மாட்சித்தன்றால்
கொலைகெழுசூலத்தண்ணல்கூறவன்கொடுத்திலானேல்
அலர்பசுந்தாரீர்நீவிரவியுணவிருந்ததென்னே
நிலவணிசடையோன்பொற்றாணிழலினியடைமின்சென்றே.

மறலுதல் - பகைத்தல். (௫௬)

என்றுசெங்கமலத்தண்ணலிந்திரனுதியாய
மன்றலம்பாரிசாதமாமலர்த்தெரியல்விண்ணோர்
துன்றினர்மருங்குசூழச்சுடர்விடுபசும்பொற்கோட்டுக்
கொன்றையந்தெரியலீசன்குளிர்வரையெய்தினரால்.

துன்றினர் - நெருங்கினர், பொற்கோட்டு - பொற்சிகரங்களையுடைய. (ருள)

நாகமும்புலியும்போற்றநவையின்றிவிளங்கும்வெள்ளி
நாகமொண்கடுக்கைதிங்களன்னதிதலையிற்பெற்று
நாகமும்புலியுஞ்சூழநலங்கொண்டேருழையும்பையார்
நாகமுமேந்திநின்றநம்பனைப்போன்றதன்றே.

நாகம் - பதஞ்சலிமுனி, புலி - வியாக்கிரபாதர், நாகம் - மலை, நாகம் - யானை, பையார் நாகம், படமுள்ள பாம்பு. (ருஅ)

விமலமுற்றொளிருமோர்பால்விளங்குசெம்மணிவில்வீச
அமைவுறுஞ்சிகரமோர்பாலணிமரகதத்தேர்பெற்ற
திமையவர்தொழுதுவாழ்த்துமிளநகைப்பவளச்செவ்வாய்
உமையொருபாகத்துற்றவொருவனைநிகர்த்தமாதோ

செம்மணி - மாணிக்கம், மரகதத்தேர்=மரகதத்துவர் - மரகதத்தினழகு, ஒருவனை - சிவபெருமானை. (ருகூ)

அவ்வரைமீதுவேழமணிதிகழ்வான்செல்கோட்டு
மைவரைகால்கள்பெற்றுவருவபோல்வருமங்கோர்பால்
எவ்வமின்மகளிர்போலவிலங்குறுமயில்களோர்பால்
கொவ்வையங்கனிவாயார்போற்குயிலிருந்திசைக்குமோர்பால்.

வேழம் - மூங்கில், கோட்டு - சிகரங்களையுடைய, மைவரை - கரியமலைகள், எவ்வம் - குறைவு. (சுo)

ஒள்ளிணர்க்கற்பகங்களுழ்த்தபொற்போதுபோர்த்து
வெள்ளியங்கிரிசெம்பொன்னின்வெற்பெனவிளங்குமோர்பால்
புள்ளினமுரலுஞ்சோலையிருள்ப ப்பொதுளியோங்க
எள்ளலின்மணிகளந்தவிருளொழித்திலங்குமோர்பால்.

இணர் - பூங்கொத்து, உழ்த்த - உதிர்த்த, பொற்போது - பொன்மலர், முரலும் - சத்திக்கிற. (சுக)

களியொடுமெங்குமேவிக்கலந்துறையரம்பைமாதர்
ஒளிவளர்முகமுங்கண்ணுமொண்டுவர்வாயுமென்ன
நளினமுங்குவளைக்காடுநலங்கிளர்குமுதத்தோடும்
அளியுளர்வாவிதோறுமரும்பவிழ்ந்திலங்குமோர்பால்

அளிஉளர் - வண்டுகள் சஞ்சரிக்கிற, துவர் - பவளம். (சுஉ)

அரும்பிளந்திங்கள்சூடிமண்ணல்செங்கமலக்கையில்
திருக்தெழின்மடமான்பிள்ளைசேர்ந்துவீற்றிருத்தல்காணுப்

பொருந்துதுநாமுமென்னுப்பொங்கிமேலெழுதல்போலக்
கருங்கலைதுள்ளுமந்தக்கைகலையஞ்சாரலோர்பாலல்.

காணு - கண்டு, கருங்கலை - கரியகலைமான், மான்பிள்ளை - மான்கன்று. (௬௩)

விரிசினையாலநீழன்மெய்த்தவச்சனகனாதி
அருமறைக்கிழவர்சூழவமர்ந்தவானந்தரூபத்
தொருமுதலவனைக்காணவுவந்தனரமரர்தாழுந்தார்
மரைமலர்ப்பொருட்டுவாழுமறையவன்வழுத்தினானல்.

ஆநந்தரூபத்தொருவனை - சிவபெருமானை. (௬௪)

வெண்டிரைகடையவந்துவிளைந்தவெஞ்சீற்றநஞ்சம்
உண்டுமுப்புரங்கள்வெந்தீயூட்டிமூவுலகுங்காத்தோய்
அண்டனீருக்கியாடுமமலநீயருள்செய்கென்னப்
புண்டரிகத்துவாழும்புராதனன்புகழ்ந்துசொல்வான்.

புண்டரிகத்துவாழும் புராதனன் - பிரமன். (௬௫)

மொழிந்தவாறமரர்வந்துமுகந்தனயாவும்போக
ஒழிந்திடுமவைமற்றுன்கூறுவந்தருளுய்க்கத்தக்கன்
கழிந்திடுதலையுங்கண்ணுமிலங்குவாயெயிறுங்கையும்
வழங்குவாயென்னமுக்கண்வானவன்வழங்கலுற்றான்.

உன்கூறு - உன்பங்கு, எயிறு - பல், முக்கண்வானவன் - சிவபெருமான். (௬௬)

தகரின்வன்றலையேதக்கன்பெறுநதலைதடங்கணற்ற
பகனொருபரிதிக்கண்ணாற்பார்க்கபல்லுக்கவெய்யோன்
நகரவேள்வியின்கண்மாவேநுஙகவியஙகணுற்றோர்
திகழ்பரிப்பெயர்சேர்தேவர்செஙகையாற்கொள்கவென்றான்.

தகரின் - ஆட்டினது, பகன் - த்வாதசாதித்தரிலொருவன், பல்உக்க - பல்லுதிர்ந்த, வெய்யோன் - சூரியன், பரிப்பெயர் சேர்தேவர் - அசுவினிதேவர். (௬௭)

இறைவனவ்வாறுகூறவிமையவர்குழாத்தொடாதி
மறையவன்பரவியீசன்றன்னொடுமருவிவீந்த
செறிமயிர்த்தகரின்சென்னிசேர்த்திடலோடுந்தக்கன்
உறுதுயினீத்தவன்போலுய்ந்தனனெழுந்தான்மன்னோ.

தகரின்சென்னி - ஆட்டுத்தலை, துயினீத்தவன்போல்—துயிலொழிந்தவன்போல, உய்ந்தன னெழுந்தான் - பிழைத்தெழுந்தான். (௬௮)

எழுந்துதன்மாதையுள்ளியிருகணீர்மார்பினூடு
விழுந்துறக்கொன்றைவேணிவிமலனையேத்திவாழ்த்தித்
தொழுந்தகைவேள்விசெய்வான்றுளவணிந்திலகுபைங்கார்க்
கொழுந்தினைமறையாற்கூறிக்குறித்தனன்மனத்தின்மாதோ.

செய்வான் - செய்ய, குறித்தனன் - நினைத்தான், பைங்கார்க்கொழுந்தினை - திருமாலை. (௬௯)

இழைக்குமவ்வேள்வியாயினிரும்பனைத்தடக்கையானை
அழைக்கவந்தன்றுகாத்தவருமறைமுதலாநின்ற
குழைத்தபைந்துளவஞானக்கொழுஞ்சுடர்வந்துதோன்ற
வழுத்தினரீசனீறக்கண்மலரவன்வணங்கினுரால்,

இழைக்கும் – செய்கின்ற, யானை - கஜேந்திராழ்வான், பைந்துளவஞானக்கொழுஞ்சுடர் - திருமால். (எ0)

இந்திரன்முதலவானோரிருந்தவர்யோகர்சித்தர்
மந்திரமறைகளாதிமருவினருறைவோர்யாரும்
சுந்தரமாயன்பாதந்துதித்தனர்வணங்கிசசூழக்
கொந்தழல்வேள்விதக்கன்குறைவறவாற்றினுனல்.

இருந்தவர் - பெரியதவசிகள், கொந்து - சுவாலை. (எக)

மேனையைமணந்துதெய்வவெற்பினுக்குதித்துமாமழை
மானின்மென்னேக்கங்கொண்டுமடமயிற்சாயல்வெளவும்
தேனவாமழலையாளைத்திருமணம்புரிந்தான்சென்று
கானுலாங்கைதைவேலிக்கைலையம்பொருப்பன்மன்னே.

மாழை - மாவடுவகிர், வெளவும் - கவர்கின்ற. (எஉ)

காந்தண்மென்முகிழினன்னகதிர்மணிக்கடகச்செங்கை
வந்திழையின்பம்விண்ணேர்யாண்டிருநூறுகாறும்
மாந்தினன்கலுழிநஞ்சமடைதிறந்தொழுகும்பேழ்வாய்ப்
பாந்தளுமதியுஞ்சூடும்பவளவார்சடையான்மாதோ.

. முகிழினன்ன - அரும்பையொத்த, விண்ணேர் யாண்டிருநூறு - தேவவருடம் இருநூறு, மாந்தினன் - நுகர்ந்தான். (எங)

விரிபுனற்கங்கைகொண்கன்வீரியமாற்றலாற்று
உருகெழுதோற்றமேயவொள்ளழற்கடவுளோங்கு
சரவணத்துய்த்தானுகச்சரவணத்துதித்தல்செய்தான்
முருகவிழ்கமலச்செவ்வாய்முகிணகைமுருகன்மாதோ.

கங்கைகொண்கன் - சிவபெருமான் (எச)

ஆவயினூரன்மீனேராறுவர்வந்தன்புமுற்றித்
தீவியமுலைப்பாலூட்டத்திருமுகமாறுகொண்டு
மேவியமடவார்கொம்மைவெம்முலையொருங்குமாந்தி
மூவிருமுகனென்றெல்லாவுலகமுமொழியநின்றான்.

ஆவயின் - அவ்விடத்தில், தீவியம் - திவ்வியம், மாந்தி - குடித்து, ஆரல்மீன்-கார்த்திகைநாள். (எரு)

கோடுயாருவிக்குன்றங்கொன்றவக்குருதிவேலான்
ஆடகப்பசும்பொற்குன்றமாமெனப்பணைத்துவீங்கும்

பீடுசொல்குலவுத்திண்டோட்பெருவிறலவுணர்த்தேய்த்துப்
பாடல்சாலமரர்சேனைபதியெனவிளங்கினானால்.

குன்றம் - கிரவுஞ்சமலை, வேலான் - முருகன், ஆடகப்பசும்பொற்குன்றம் - மேருமலை. (எசு)

வேதியன்முதுகில்வந்துவிளங்கியபாவன்பொய்யாம்
பேதையைமகிழ்ந்துபுல்லிப்பெற்றனனிடம்பமாயை
மாதிரநிருதிதன்பான்மகவெனவடைந்திரண்டும்
ஓதுலோபத்தினோடுநிந்தையையுயிர்த்தவன்றே.

மாதிரம் - திசை, உயிர்த்த - பெற்றன. (எஎ)

மாறிலாலோபம்வந்துமருவுநிந்தனையைப்புல்லக்
கூறியகோபத்தோடுகொலைத்தொழிலுதித்ததம்மா
ஏறில்வெங்கோபமந்தவிருங்கொலைத்தொழிலைச்சேர
வீறிதீமொழியினோடுவெங்கலிபிறந்ததன்றே.

புல்ல - தழுவ, தீமொழி - கடுஞ்சொல். (எஅ)

உரைத்தவெங்கலிதான்பொல்லாவுரையெனுமாதைச்சேர
மருந்துவும்பயமுந்தோன்றிவிளங்கினமிருத்துமாதைச்
கருத்துறநடுக்குகின்றகடும்பயமகிழ்ந்துபுல்ல
வருத்தும்யாதனைகளோடுவந்ததுநிரயமாதோ.

மிருத்து - மரணம், யாதனை - துன்பம், நிரயம் - நரகம். (எகூ)

வெய்யதோர்தோற்றங்கூறின்விரியுமால்விதுரவின்றும்
மையலங்களிநல்யானைமனுவினுக்குதித்தமைந்தன்
செய்யகோல்வேந்தனென்னச்செப்புமுத்தானபாதன்
பொய்யறுமாபுசொல்வலெனமுனிபுகலலுற்றான்.

தோற்றம் - உற்பத்தி, செய்யகோல் - செங்கோல். (அ0)

இலங்குவாளரசரேறையிக்கதைசொல்வோர்கேட்போர்
துளங்குவர்நலம்பெற்றென்னச்சுகமுனியுரைத்தானென்று
மலங்கெடத்தவஞ்செய்தோங்குமறைமுனிக்குழாத்துக்கைந்தாம்
புலன்களுமொறுத்தசூதன்புகர்தபவுணர்த்தினானால்.

முனிக்குழாத்துக்கு - முனிவர்கூட்டத்துக்கு, ஐந்தாம்புலன்களும் ஒறுத்த—ஐம்புலன்களையும் வென்ற, புகர் - குற்றம் - தப - கெட. (அக)

தக்கன்வேள்வியழித்த அத்தியாயம் முற்றிற்று

ஆகத்திருவிருத்தம்—கககூ

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.



## மூன்றாவது
## துருவன்பதபபெற்றவத்தியாயம்.

கலிநிலைத்துறை.

முத்தாரமார்பன்முடிமன்னவர்வந்திறைஞ்சப்
பைத்தாடரவஞ்சுமைகூர்கடற்பார்பரித்தான்
கொத்தாரலங்கற்குளிர்வெண்குடைக்கோதைவெள்வேல்
உத்தானபாதனெனவோதுமுலங்கொடோளான்.

பைத்தாடு - படம்விரித்தாடுகின்ற, அரவம் - ஆதிசேடன், பரித்தான் - தாங்கினன், உலம் - திரள்கல் (க)

வெடிக்கும்புதுநாண்மலர்வேய்ந்தகில்விம்மிவேலை
குடிக்குங்கமஞ்சூற்குலமாமுகில்வென்றகூந்தற்
றொடிக்கைச்சுநீதிசுடர்பொற்குழைமேலடர்க்கும்
வடிக்கட்சுருதியெனுமங்கையர்தோண்மணந்தான்.

வேலை - கடல், கமம் - நிறைவு, அடர்க்கும் - போர்செய்கிற, வடி - மாவடு. ()

வளையுற்றசாயன்மயிலன்னசுநீதியென்னும்
தெரிவைக்குதித்தான்றுருவன்செருவென்றசெவ்வேல்
அரசற்குமுதாயலர்தாமரையன்னமொத்த
சுருதிக்குமன்றற்றொடையுத்தமன்றோன்றினனால்.

தெரிவை - மாது, செரு - போர் (௩)

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

மத்தமாக்களிற்றுமன்னன்மாமணித்தவிசின்மீது
சுத்திகைக்கருமென்கூந்தற்கன்னியர்கவரிவீசத்
தித்தியாநின்றதெய்வத்தெள்ளமுதனையதீஞ்சொல்
உத்தமன்குறங்கின்வைகவுவந்துவீற்றிருந்தானன்றே.

சுத்திகை - பூமாலை, குறங்கு - தொடை. (௪)

வண்டுளர்தெரியல்வேந்தன் மாமணிக்குறங்கினேறி
ஒண்டொடியுடுத்தசெங்கையுத்தமனுறைந்தசெவ்வி
கண்டனன்றுருவன்றானுமேறுவான்கருதிநண்ணத்
தொண்டையங்கனிவாய்வேற்கட்சுருதியாங்கியம்புவாளால்.

செவ்வி - சமயம், ஏறுவான் - ஏற. (௫)

கோற்றொடிப்புதல்வநீயெங்கோவிளங்குமரனென்று
மாற்றவள்வயிற்றின்வந்தாய்வாரத்தினென்வயிற்றின்வந்து
தோற்றுதல்புரிநோன்பில்லாய்சொரிமதக்களிறுசாய்க்கும்
ஏற்றிளஞ்சிங்கமன்னன்குறங்கினென்னேறுமாறே.

மாற்றவள் - சக்களத்தி. தோற்றுதல் - பிறத்தல். (௬)

காதலவுலகமெல்லாங்கவிக்கும்வெண்கவிகைச்செங்கோற்
கோதைவேற்றடக்கைவேந்தன்குறங்கினீயேறவேண்டின்
தாதலர்கமலச்செல்விதலைவனைநோக்கிநின்று
மாதவம்புரிந்துவந்தென்வயிற்றிடைப்பிறத்திபென்றாள்.

காதல - மகனே, கமலச்செல்விதலைவனை - விஷ்ணுவை. (எ)

இழைபுரைமருங்குறேய்க்குமிளமுலைமடந்தைமாற்றம்
அழல்விடமுகுத்தாலென்னவஞ்செவிநுழைதலோடும்
விழிமலர்சிவப்பநெஞ்சின்வெகுளிவந்தரும்பமைந்தன்
மழைமதக்களிற்றுமன்னன்வாண்முகநோக்கலுற்றான்.

இழை - நூலிழை, புரை - நிகர்த்த, மாற்றம் - சொல். (அ)

செஞ்சிலைத்தடக்கைவேந்தன்றிருமுகத்தருளுங்காணான்
அஞ்செவிவெதும்பநங்கையறைந்தசொற்காற்றானாகிக்
கஞ்சநாண்மலரைவெல்செங்கண்ணிணைமாரிகால
மஞ்சனுங்கன்னைபாற்போய்மணியிதழதுடிப்பநின்றான்.

மாரிகால - மழைபெய்ய, மணியிதழ் - பவளம்போலும்இதழ். (கூ)

தன்னிளங்குழவிசெங்கட்டாமரைதழைத்தமுத்தம்
பொன்னணிந்திலங்குமார்பிற்பொழிதரநிற்றனோக்கி
என்னுயிரென்கணேநந்தாலென்னைநீயழுங்கலென்று
மின்னுயிர்த்தொளிரும்பைம்பூண்மெல்லியல்விளவினாள்.

செங்கட்டாமரை தழைத்தமுத்தம் - கண்ணீர், அழுங்கல் - வருந்தல். (க0)

பட்டமைகண்டோர்கூறப்பசுஞ்சிறைகிள்ளையன்னாள்
விட்டெரிகின்றகாட்டுவெங்கனல்படர்ந்துமுற்றிச்
சுட்டவெப்புண்டபொன்னந்துணர்க்கொடிபோலவாடி
நெட்டுயிர்ப்பெறிந்துசெங்கணித்திலஞ்சிந்திநின்றாள்.

பட்டமை - நடந்தசெய்தி. (கக)

குதலைதெள்ளமுதிற்றேனிற்கொண்டமென்பவளச்செவ்வாய்
மதலைநல்வினையிலேன்புல்வயிற்றகம்பொருந்திவந்தாய்
விதலையுற்றிரங்கல்வேண்டாவிளைந்ததண்ணளியிற்காக்கும்
முதலைவாயும்பல்காத்தமுழுமுதற்கடவுண்மாதோ.

மதலை - மதலாய், விதலை - நடுக்கம், காக்கும் - காந்தருள்வன், உம்பல் - யானை (கஜேந்திராழ்வான்) முழுமுதற்கடவுள் - திருமால். (கஉ)

ஐதெழிலமுதின்சாயலாயிழையுளைத்தவாறே
மைதபமனத்திஞேர்ந்துவழுத்தினர்விழைந்தநல்கும்
நெய்தவழ்நேமியானைநினைத்தனைதவஞ்ஞற்றி
எய்தரும்பதமேமைந்தவெய்துதிகலங்கலென்றாள்.

ஐதெழில் - பேரழகு, மை - குற்றம், தப - கெட, விழைந்த - விரும்பினவற்றை, நேமியானை - சக்ராயுதத்தையுடைய திருமாலை, நினைத்தனை-நினைந்து, (முற்றெச்சம்) கலங்கல் — கலங்காதை. (கந)

பனிமலரண்ணலோங்குபதத்தினையடைந்தவாறும்
மனுமிகச்சிறந்தவாறுமாயனைக்கருதியன்றே
தனையநீகங்கைபூத்ததாமரைத்தாளினானை
நினையினென்னெய்தாதென்னுநெஞ்சகந்தெருட்டினாளால்

மலரண்ணலோங்குபதம் - பிரமபதம், கங்கைபூத்த தாமரைத்தாளினான் - திருமால், 'என்னு - என்றுசொல்லி. (கச)

கிளிக்குலங்கடந்துதேனிற்கிளைத்ததீங்குதலையன்னை
தெளிக்கவம்மைந்தனெஞ்சுதெள்ளிதிற்றெளிந்தானாகி
நளிச்சினைக்குரவங்கோங்குநாகமுமகருயோங்கிக்
களிச்சுரும்பிமிர்பூங்கானங்கலந்தனன்றவஞ்செய்கிற்பான்.

கடந்து - வென்று, தெளிக்க - தெளிவிக்க, சுரும்பு - வண்டு, இமிர் - ஒலிக்கிற, தவஞ்செய்கிற்பான் - தவஞ்செய்ய. (கரு)

விடம்பொழிவென்றிவேற்கண்விளங்கிழைமடந்தைமாற்றம்
கிடந்துளங்கனற்றவம்பொற்கிங்கிணிகவைஇயதாளான்
நடந்தனன்சென்றகாலையாரதன்வந்துநண்ணித்
தடங்கையங்கமலமைந்தன்றலைமிசைச்சார்த்திச்சாற்றும்.

மாற்றம் - சொல், நடந்தனன் - நடந்து, (முற்றெச்சம்.) (கசு)

பருவமைந்திறந்ததில்லைபாலனீதவமெவ்வாறு
புரிதிமாதவத்தோரின்னம்புலப்படக்காணமாட்டாக்
கரியவன்றன்னையாங்குக்காணுதிகதழுஞ்சீற்றத்
திருகுமாவழங்குகானஞ்செல்வதுசெவ்விதன்றால்.

கரியவன் - திருமால், கதழ்தல் - உக்கிரமாதல், திருகு - மாறுபாடு, மா - மிருகம், செவ்விதன்று - அழகிதன்று: (கஎ)

தாழ்பவர்தம்மைக்காணிற்றலைநிவந்திருத்தல்வேண்டும்
ஊழ்வினைவிளைவிற்செல்வமுயர்குநர்தம்மைக்காணின்
வாழ்கலம்யாமுமென்னுவலித்தலோர்மாட்சித்தன்றால்
ஏழுயர்களிநல்யானையின்னிளங்கன்றுபோல்வாய்.

தலைநிவந்திருத்தல் - தலைநிமிர்ந்திருத்தல், என்னு - என்று, வலித்தல் - மனவுறுதிகொள்ளல், மாட்சித்தன்று - பெருமைத்தன்று. (கஅ)

எனப்பலமுனைவன்கூறவிளநிலாக்கற்றைதூற்றும்
பனிப்பிறைக்கொழுந்துபோலும்பச்சிளங்குழவிகேட்டு
வினைக்குறும்பெறிந்தோய்நின்சொல்விழுமிதேயெனினுமின்றென்
மனக்கினிதாயிற்றில்லைமற்றெவன்செய்யுமாறே.

முனைவன் - முனிவன் (நாரதன்) குறும்பு - தீங்கு, எறிந்தோய் - வென்றவரே, விழுமிதேயெனினும் - மேன்மைத்தேயாயினும், மனக்கு - மனத்துக்கு, எவன்-யாது'

சேயுயர்பதத்தினேறவேட்டனனதற்கென்செய்கோ
தூயமாதவத்தோயென்றுதொழுதலுமகிழ்ந்துபுல்லித்

கண்ணனைக்கண்ணுள்வைத்துக்களியளிசிலம்பவிள்ளும்
தண்ணனைகமழ்பூங்காவிற்றவஞ்செயத்தொடங்கினானல்.

பரிதியீன்றவிரிதிக்ரைநதி - காளிந்திநதி, அளிசிலம்ப - வண்டுகள்சத்திக்க, தண்ணனை - குளிர்ந்த அரும்புகள். (உசு)

ஒருமதியிரண்டுவைகலொழிந்துதீங்கனிநுகர்ந்தான்
ஒருமதியாறுவைகலொழிந்துவீழ்சருகுதின்றான்
ஒருமதிவைகலொன்பானொழிந்துதண்டுறைநீருண்டான்
ஒருமதிவைகலீராறொழிந்துகால்பருகினானல்.

வைகல் - நாள், கால்பருகினான் - காற்றையுண்டான். (உஎ)

திங்களொன்கிவ்வாறேகத்திங்களிற்றிகழாநின்ற
அங்கலுழ்முகத்தானென்றுமருந்தலனைந்தாந்திங்கள்
பொங்குமூச்சடக்கிமென்பூப்பொருவுதாள்விரலொன்றூன்றிக்
கங்கைசூழ்கழற்பெம்மானைக்கருதினன்றவம்புரிந்தான்.

அம்கலுழ் முகத்தான் - அழகொழுகுகிற முகத்தையுடையவனாகிய துருவன், கங்கைசூழ்கழற்பெம்மான் - திருமால். (உஅ)

திருவயிற்றுலகெலாமாழ்செல்வனெஞ்சுறலான்மைந்தன்
ஒருவிரலூன்றிநின்றானயினுமுரவுத்தெண்ணீர்
இருநிலம்பொறுக்கலாற்றாதெறிகதிர்முத்தஞ்சிந்து
பொருதிரைப்புனலிற்பட்டபுணையெனவலைந்தன்றம்மா.

உரவுத்தெண்ணீர் - கடல், பொறுக்கலாற்றாது - சுமக்கலாற்றாமல். (உகூ)

ஊழிவெம்பரிதியுட்கவொளிசெய்செங்கதிராலொற்றை
ஆழியந்தடங்கையம்மானகமிசையமர்ந்தவாற்றால்
தாழிருந்தடக்கைநம்பிதவக்கனறவாதுபொங்கி
எழிரும்பரவைவேலியிருநிலங்கனன்றதாமால்.

ஆழியந்தடக்கையம்மான் - திருமால், நம்பி - துருவன், தவக்கனல் - தவமாகிய நெருப்பு. (௩0)

ஆவயிற்றுருவன்றன்மூச்சடக்கியதிறத்தினலெத்
தேவருமுயிர்க்கலாற்றார்தெருமந்தார்தெருண்டுமொய்த்துக்
காவலகாத்தியென்றுகண்ணனையடைந்துகூறப்
பூவுறைவிரிஞ்சன்றன்னைப்பூத்தவன்புகலலுற்றான்.

ஆவயின் - அப்பொழுது, உயிர்க்கலாற்றார் - மூச்சுவிடமாட்டாதவர்களாகி. ()

விட்டிலன்றுருவன்மூச்சுவிழுத்தவம்புரிதலாலே
முட்டியதுமக்குமாங்கேமூச்சுநாங்காத்துமென்று
மட்டீறுவேதமேனிவரிச்சிறைப்புள்ளின்மேற்றிக்
கெட்டுநல்லுருவக்காந்தியெறிதரவேகினானல்.

வேதமேனி - வேதரூபமாகிய, எறிதர - வீச, வரிச்சிறைப்புள் - கருடன். ()

நெடியவன் முன்னம்வந்துநிற்ப துநிகழ்த்தலாக
ஒடிவருதவத்தின்மைந்தன்காண்கலனுகவுள்ளம்
சுடர்தனதுருவுத்தண்ணந்துளவினன்கரத்தலோடும்
கடிகமழ்கமலமன்னகண்மலர்விழித்தான்மன்னே.

கரத்தலோடும் - மறைத்தவுடனே. (௩௩)

மண்டலநிறைந்ததிங்கள்வதனமுங்கமலக்கண்ணும்
குண்டலஞ்சுடருங்காதுங்குறுநகைப்பவளவாயும்
தண்டுழாயலங்கன்மார்புந்தடக்கையொர்நான்குமாகக்
கண்டனன்மறையுங்காணக்கரியவனுருவமம்மா.

சுடரும் - ஒளிவீசுகிற, கரியவனுருவம் - திருமாலுருவம். (௩௪)

பருகுவான்போலநோக்கும்பங்கயக்கண்ணெம்மானை
இருகையநற்புல்லுவான்போலெய்திடுமிறைஞ்சாநிற்கும்
உருகுநெஞ்சுவக்குங்கண்ணீருகுக்குமுளமுங்குந்துள்ளும்
முருகனனுவகைவேலைமூழ்கினன்றுளைவான்மன்னே.

பருகுவான்போல - உண்பவன்போல, புல்லுவான்போல் - தழுவுவான்போல, முருகுஅனன் - முருகனை நிகர்த்தவனுகிய துருவன். (௩௫)

அவர்பணிச்சுடிகைநெற்றியண்ணல்வாளரவமேந்தும்
குவலயம்போற்றும்வேந்துக்குழவிதன்மணிக்கபோலம்
பவளவாய்ப்பச்சைமேகம்பங்கயச்செங்கைதாங்கும்
தவளவெண்சங்கினுலேதகைபெறத்தடவாநிற்கும்.

அரவம் - ஆதிசேடன், குழவி - துருவன், கபோலம் - கன்னம், பச்சைமேகம்- திருமால். (௩௬)

பொழிகதிர்மதியைவென்றபுரிவளைகொண்டுபொங்கித்
தழையுநல்லெழிற்கபோலந்தைவருதிறத்தினுலே.
மழலைவாய்ச்சிறுவன்வாக்குமலிந்தெழமகிழ்ச்சிகூர்ந்து
பழமறைபழிச்சமாட்டாப்பரமனைப்பரவலுற்றான்.

வளைகொண்டு - சங்கினால், பழிச்சமாட்டா - துதிக்கமாட்டாத. (௩௭)

தாமரைப்பொருட்டுவாழுந்தையசிறையன்னமன்ன
தாமரைத்தலைவிகொண்கதரைமகள்கொழுநவுந்தித்
தாமரைப்பெற்றெடுத்ததனிமுதனினதுசெங்கட்
டாமரையருள்பெற்றன்றேதந்தனனுலகந்தானே.

உந்தித்தாமரைபெற்றெடுத்த தனிமுதல் - பிரமன். (௩௮)

தண்டுழாய்மாலைமார்பதாமரைக்காடுபூத்த
கொண்டலேவிளங்குநீலக்குன்றமேநுனதுபாத
புண்டரிகங்களல்லாற்போதுதூயிறைஞ்சப்பெற்றார்க்
குண்டுகொலுயர்வீட்டின்பமுறுதிதுமெய்ம்மைத்தாமால்.

நுனது - உனது, போதுதூய் - மலர்தூவி. (௩௯)

பொற்றபூந்தருவைக்கண்டும்பொற்பிலதொன்றுவேட்டுப்
பெற்றதேபோலுமன்றேபெறலருமுத்திநல்கும்
ஒற்றையந்திகிரிச்செங்கையொருமுதானின்னைக்காணூஉ
மற்றொருபொருளைவேட்டுப்பெறுவதுமதிக்கினம்மா.

பொற்ற - அழகாகிய, ஒருமுதால் - ஒப்பற்றமுதற்பொருளே, காணூஉ - கண்டு, வேட்டுப்பெறுவது - விரும்பிப்பெறுவது (சுO)

வேறு.

வானேவளியேவயங்கெரியேவனமேமண்ணேயிவ்வைந்தின்
ஊனேயுயிரேயுயிர்க்குயிரேயுன்னுமுறவருளக்தாறும்
தேனேநங்கள்பெருவாழ்வேசிவினையாயனேயிருவருக்கும்
கோனேநின்னைக்குணமில்லேனென்றுசொல்லிப்பழிச்சுகோ.

வளி - வாயு, எரி - அக்நி, வனம் - நீர், உறுவர் - தபோதநர்; பழிச்சுகோ - துதிப்பேனோ. (சுக)

மூவாமுதலேமுத்தொழிலுமூவராகியினிதியற்றும்
தேவாதேவர்சிகாமணியேசிந்தாமணியேதெள்ளமுதே
நாவானின்சீரெங்ஙனம்யானவில்கோவென்னநகைமுகிழ்த்துப்
பூவாற்பொழில்புத்தருளுந்திப்புவைவண்ணன்புகலுகிற்பான்.

நவில்கோவென்ன — சொல்வேனோவென்றுசொல்ல, பொழில் - உலகம். (சுஉ)

மின்னுஞ்சுடர்கான்றழல்குடுமிவெள்வேலரசகுமரவுணர்ந்
தின்னும்பொலந்தார்முடிமமரெய்தற்கேக்கற்றிருப்பதுயர்
பொன்னங்கிரியினுச்சிமிசைப்பொலிவதுலகின்மேலதென்றும்
மன்னப்படுவதொருபதம்யாந்தருதும்வாழிமற்றுனக்கே.

எய்தற்கு - அடைவதற்கு, ஏக்கற்றிருப்பது - ஏமாந்திருப்பது, பொன்னங்கிரி— பொன்மலை. (சுங)

காடங்கவிழ்க்குங்கலுழிமதக்கடவுட்களிறுமொளிறுகதிர்
சொரியுமருமாமணிச்சூட்டுத்துத்தியாவுஞ்சுமந்தநிலம்
இருபத்தாறுயிரம்பருவமெழில்வெண்கவிகைதனிநிழற்றித்
துருவப்பதநீயடைதியெனத்தொன்மைமுதல்வனகன்றனனால்.

கடவுட்களிறு - திக்கயங்கள், அரவு - ஆதிசேடன், பருவம் - வருடம். (சுச)

நஞ்சுசூழுமியெழுவேற்கணங்கையுளைத்தவுளைகிடந்து
நெஞ்சுசுடநீள்பதம்வேட்டுநின்றேனெகிழ்ந்ததாமரைக்கண்
மஞ்சைக்கண்டுங்கேட்டிலமான்முத்தியென்றுமகிழ்கூரான்
துஞ்சலில்லாச்சுடர்மணிப்பூட்டொடிக்கைத்துருவனகர்சார்ந்தான்.

தாமரைக்கண்மஞ்சு - திருமால். (சுரு)

வந்தான்றுருவனெனவோடும்வாராமகிழ்ச்சிவந்தெழத்தேன்
சிந்தாநின்றதென்மழலைச்சிறுவன்வரவுசாற்றினர்க்கு

மந்தாகினிபொன்வரைதவழுமாட்சிபோலமருவுயிர்க்கும்
அந்தாரகலத்துயல்வருபூணாரங்கொடுத்தானரசெழுந்தான்.

மந்தாகினி - ஆகாயகங்கை, கொடுத்தான் - கொடுத்து, (முற்றெச்சம்.) (சசு)

கதலிநிரைத்துமுத்தணிந்துகனகமணித்தோரணம்புனைந்து
மதியந்தொடவானெழுந்துயர்ந்தமாடம்புதுக்கிமருக்கமழ்ந்து
புதுமட்டொழுகுங்கற்பகப்பூம்புனையல்வனைந்துபுரந்தான்றன்
பதியென்றணாநகர்துலக்கிப்பரவையெனயாவருந்தொடர

மட்டு - தேன், புனையல் - மாலை, பரவையென - கடல்போல. (சஎ)

வேந்தர்வணங்கமுழவதிரவெண்சங்கலறவுத்தமனும்
சேந்தமலர்த்தாட்டேவியருஞ்செம்பொற்சிவிகைமேலெய்திக்
கூந்தற்பரித்தேர்கடிதோட்டிக்குழவிஞாயிறொளிமழுங்கக்
காந்திதழைத்துவருகின்றகாமப்புதல்வன்றனைக்கண்டான்.

சேந்தமலர் - செந்தாமரைமலர், குழவிஞாயிறு - பாலசூரியன். (சஅ)

உருகுகாதலுளந்தளிர்ப்பவுவகைபெருகுற்றலையெறிய
இருகைகூப்பித்தொழுதிறைஞ்சுமிளவாண்முறுவற்காதலனைப்
பருகுவான்போனோக்கியொளிபரப்புதொடித்தாமரைக்கரத்தால்
முருகுகமழுமுகந்துச்சிமோந்தான்விழிநீராட்டினான்.

உவகை - பெருங்களிப்பு. (சகூ)

கள்ளக்கருங்கட்சுருதியைச்செங்கையாற்றுருவன்றொழுதிறைஞ்சப்
பள்ளத்தொழுகுதண்புனல்போற்பழுக்குமன்புதலைமணப்ப
உள்ளத்துவகைகூர்ந்தனளவ்வொழுகுகொடிநுண்ணிடைமாது
வள்ளற்கமலைகொண்கனருள்வாய்த்தாலாரேயுவவாதார்.

பழுக்குமன்பு - முதிர்ந்தஅன்பு, தலைமணப்ப - கூட, கமலைகொண்கன் - திருமால், உவவாதார் - விரும்பாதவர். (நூ0)

இலைப்பூங்கண்ணியெழிற்றுருவனீன்றவன்னைசெங்கமல
மலர்த்தாள்பின்னர்த்தொழுதிறைஞ்சவாரியணைத்துக்குறங்கிருத்திக்
கலைப்பான்மதிவாண்முகமலர்ந்தாள்கலுழ்ந்ததுவகைத்தடங்கண்ணீர்
முலைப்பாலூறிவழிந்ததிளமுல்லைமுகைவாணகையாட்கோ.

குறங்கு - தொடை, கலைப்பால்மதி - கலைகளோடு கூடியவெள்ளியசந்திரன், முல்லைமுகை - முல்லையரும்பு. (நூக)

காலக்கதிர்வேலுத்தமன்பொற்கடகக்கையாற்றழீஇக்கொள்ள
நீலக்களிற்றுநிலவேந்தர்நின்றுபணியவளைமுழங்கக்
கோலக்கடிமாநகருவப்பக்கூந்தற்பிடிமேலினிதேகி
மாலைக்குழவிமதிபோலமன்னன்குழகன்வந்தனனால்.

வளைமுழங்க - சங்குகள்சத்திக்க, குழவிமதிபோல - இளம்பிறைபோல, மன்னன் குழகன் - ராஜகுமாரன். (நூஉ)

காளைப்பருவங்கனிந்திடலுங்கதிர்வேற்றடக்கைத்துருவனுக்கு
வாளக்கிரிசூழுலகேழுமதிவெண்கவிகைதனிநிழற்றி
ஆளக்கதிர்மாமுடிசூட்டியழற்கானடைந்துதவம்புரிந்தான்
பாளைக்கமுகம்படப்பைசெறிபழனத்திருநாடுடையோனே.

கனிந்திடலும், முதிர்தலும், வாளக்கிரி - சக்கிரவாளகிரி, கமுகம்படப்பை - கமுகந்தோட்டம். (ருங)

## கலி விருத்தம்.

எழிரும்பொழில்வாழுமிலங்குவேற்
பாழிமன்னர்பணிந்துதிறையிடச்
சூழியானைத்துருவன்விரிதிரை
ஆழிசூழ்நிலமாழியொன்றுய்த்தனன்.

பொழில் - உலகம், சூழி — முகபடாம், ஆழியொன்று - ஏகசக்கரம். (ருச)

தேமலர்க்கணைசிந்துவரிச்சிலை
காமனன்னவக்காளைமுதலையின்
நாமமேயவிதிதருநல்லெழிற்
பூமியென்னுமொர்பூவையைவேட்டனன்.

சிந்து - சிந்துகிற, அக்காளை - அந்தத்துருவன். (ருரு)

அன்னமென்னடையந்நுண்மருங்குலாள்
பொன்னங்குன்றுறழ்பூண்முலைபுல்லிய
மன்னன்கற்பன்வயங்கியவற்சரன்
என்னுமைந்தரிருவரையீன்றனன்.

புல்லிய - தழுவிய. (ருசா)

எறிவளிக்கிறையீன்றவிடையெனும்
நறுமலர்க்குழனங்கைமணம்புணர்ந்
துறுவனப்புடையுற்கலனென்னுமோர்
சிறுவற்பெற்றனன்றேங்கமழ்தாரினன்.

வளிக்கிறை - வாயுதேவன், உறுவனப்பு - மிக்கஅழகு. (ருஎ)

## வஞ்சிவிருத்தம்.

ஓடையானையுத்தமன், ஆடல்வாளரக்கரால்
வீடினன்விரிந்தபூங், காடகங்கலந்தரோ.

ஓடை - முகபடாம், ஆடல் - வெற்றி, வீடினன் — இறந்தான். (ருஅ)

வேட்டமாடவேகிவெங், காட்டிறத்தல்காணவோர்
நாட்டமாய்நடந்துதாய், ஊட்டழற்குலந்தனள்.

வேட்டமாட - வேட்டையாட, அழற்கு உலந்தனள் - தீப்பாய்ந்திறந்தாள். ()

நிருதராணிலச்செய்பூண், உருவமார்பினுத்தமன்
இருவிசும்பினேறவேற், றுருவனன்றுசூழ்ந்தனன்.

நிலச்செய் - நிலவைவீசுகிற, பூண் - ஆபரணமணிந்த, உருவம் - அழகாகிய. ()

தாரரக்கர்தன்மையான், வேரறுத்துமீள்வனென்
றூரமர்க்கெழுந்தனன், தூரியந்துவைப்பவே.

அமர்க்கு எழுந்தனன் - போர்க்கெழுந்தனன், தூரியம் - வாத்தியம், துவைக்க-முழங்க. (சுக)

ஏழுயர்ந்தவீர்ங்கவுள், வேழம்வெற்பினீண்டன
பாழியுற்றபச்சைமா, ஆழியொத்தடைந்தவே.

வேழம் - யானை, பச்சைமா - பச்சைக்குதிரை. (சுஉ)

போர்வயப்புலிக்குழாம், பாரின்மேற்பரந்தன
வீரர்மொய்ப்பவெய்யபொற், றேரிவர்ந்துசென்றனன்.

புலிக்குழாம் - புலிக்கூட்டம், தேரிவர்ந்து - தேரேறி. (சுங)

எழிற்குபேரனின்னகர்க், குழைப்படர்ந்துருத்திட
முழக்கினுன்முரண்கொள்போர், தழைக்கநின்றுசங்கமே.

இன்னகர்க்குழை - இனியநகரத்தில், படர்ந்து - சென்று, உருத்திட—கோவிக்க, சங்கம் - சங்கு. (சுச)

வில்லெடுத்தவீங்குதோள், கல்லெனககவின்பெறச்
செல்லெனத்திரண்டனர், வல்லரக்கர்வந்தரோ.

செல்என - மேகம்போல. (சுரு)

பாறுலாவுபல்படை, வேறுவேறுவீசிவந்
தேறிறுைவெய்துபோர், நூறிநூழிலாட்டினுன்.

பாறு - பருந்து, உலாவு - சுற்றுகிற, நூறி - பொடியாக்கி, நூழிலாட்டினுன்—நூழிலாட்டுச்செய்தான். (சுசு)

வாரிவந்தலைத்திடச், சோரிவிண்சொரிந்திடப்
போரினிற்புணர்ந்தனர், நேரிலாநிசாசரர்.

வாரி - கடல், சோரி - உதிரம், நிசாசரர் - அரக்கர். (சுஎ)

மாயவல்லரக்கர்தம், மாயமல்கிடாதுபோய்
மாயமன்னர்மன்னவன், மாயன்வாளிசிந்தினுன்

மல்கிடாது - பெருகாமல், போய்மாய - போய்மடிய, மாயன்வாளி :- விஷ்ணு பாணம். (சுஅ)

## எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கிரியோடெதிர்ந்தகரிமத்தகங்கள்கிழியப்பிளக்குமிகல்வாள்
அரியேறுபோலவிருகண்கிவப்பவடல்கொண்டசாபம்வளையா

விரிதாராக்கர்நுதல்கீறவெய்யவிசிகந்தெரிந்துசொரியும்
மருமானைநம்பிபொரலென்றுகொற்றமனுவந்துநின்றுபுகல்வான்.

கரிமத்தகங்கள் - யானைத்தலைகள், அரிபேறு - ஆண்சிங்கம், சாபம்வளையா - வில் வளைத்து, விசிகம் - பாணம், பொரல் - போர்செய்யாதை. (சுக)

சிலர்காலமென்பர்சிலர்கன்மமென்பர்சிலரீசனென்பர்சிலர்தாம்
நிலையாதகானலுறுநீரதென்னநிகழ்மாயையென்பர்மதுவார்
மலர்வாளிகொண்டமதனுருமென்பர்வாற்சாயனாதிசிலர்தாம்
நலனோடுதீயபலனுமவற்றைநனிகொண்டுவந்துவிடலே.

மதுவார் - தேனொழுகுகின்ற, மலர்வாளி — புஷ்பபாணம். (எ0)

விளையாதவொன்றும்விளையாதுவந்தவினையூழின்வந்தவிளைவே
உளைமாநடத்துதிறலுத்தமன்றனுயிரோராக்கனுணநீ
வளையாழிவேலிவலயத்தரக்கருயிர்யாவும்வெளவலறனே
அளிகோடிபாடுதொடைமார்பவென்னவமர்விட்டுநின்றுதொழுதான்.

உளை—புறமயிரையுடைய, மா - குதிரை, அறனே - தர்மமா, தொடை - பூமாலை, அமர்விட்டு - போர்விட்டு. (எக)

மன்னற்குமன்னனெதிர்சென்றிறைஞ்சமனுவிட்டகன்றபொழுதே
மின்னிற்றிகழ்ந்துசுடர்கால்விமானமிசையேகுபோனணுகாக்
கொன்னுற்றகொற்றவடிவேலரக்கர்கொலைசெய்ததில்லையதுதான்
முன்னுற்றுநின்றவினையாகுமண்ணன்முனியற்கவென்றுமொழிவான்

அணுகா - அணுகி, முனியற்க - கோவியாதை. (எஉ)

விழைவுற்றுநின்றவரம்யாவதேனும்விரிதாமமார்பதருகேன்
மொழிகிற்றியென்னமுருகுற்றலர்ந்தமுளரிக்கரங்கள்குவியா
அழலுற்றவாழிதிகழ்செங்கையண்ணலருளல்லதென்கொல்பெறுமா
றெழில்பெற்றசெல்வவெனவன்னதாகவெனவேகினனுண்மகிழ்வான்

விழைவுற்று - விரும்பி, மொழிகிற்றி - சொல்வாயாக, ஆழிதிகழ் செங்கையண்ணல் - திருமால். (எங)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

முருகவிழ்கோதைமாதர்முலையுழநெகிழ்ந்தபைந்தார்த
துருவன்மீண்டாழியானைத்தொழுதுபல்வேள்விமுற்றிப்
பருவமோரிருபத்தாறுயிரமெழிற்பரிதியன்ன
ஒருதனித்திகிரியெல்லாவுலகமுமோச்சினனால்.

தனித்திகிரி - ஏகசக்ரம், ஒச்சினன் - செலுத்தினன். (எச)

வாங்கியவரிவிற்செங்கைமைந்தனையவனிகாப்பத்
தேங்கமழ்தெரியன்மாலைச்செழுங்கதிர்மௌலிசூட்டி
வீங்குசீர்விசாலையெய்திவிழுத்தவம்புரிதல்செய்தான்
ஓங்குவான்மாரிகாத்தவொருவனையுளத்தின்வைத்தே.

வாங்கிய - வளைத்த, மௌலி - முடி, மாரிகாத்த வொருவன் - திருமால். (எரு)

உருளுறப்பசும்பொற்றிண்டேருர்ந்தெழுகதிர்களெல்லாம்
வெருளவிட்டொளிசெயொண்கேழ்விழுமணிகிடந்தமார்பன்
அருள்பெறுசுரந்தநந்தரவ்வழிக்குறுகினால்
இருளயிறிங்கள்போலவிமைக்குமோர்விமானங்கொண்டே.

கேழ் - நிறம், இருள் அயில் - இருளையுண்ணுகிற, இமைக்கும் - பிரகாசிக்கிற. ()

ஒருதனித்திகிரிமாயனொளிவிசும்படையல்வேண்டும்
வருகநீவருகவென்றுவழுத்தினர்கூறலோடும்
எரிகதிர்ப்பசும்பொன்போலவெவ்வெலாத்திசையுங்காந்தி
விரியுமோருருவுகொண்டுவிமானமீதிவர்ந்தான்மன்னே

ஒளிவிசும்பு - பரமபதம், இவர்ந்தான் - ஏறினன். (எஎ)

மன்னனுங்கின்றதாயைமனத்தினினினைப்பமன்னன்
உன்னியதுணராவன்னேறொருமுதலன்பருய்க்கப்
பொன்னெடுவிமானமூர்ந்துபோகுழிவிசும்பின்மேலுன்
அன்னையுஞ்சேறல்காண்டியரசவென்றியம்பினால்.

உணரா - உணர்ந்து. (எஅ)

புயல்கிழிதெழுமந்தாரப்பூந்துணர்முருகுவீசும்
வியலிருவிசும்புவிட்டுவெய்யவன்பதத்தைநீங்கி
உயர்மதிமண்டிலத்தையுவப்புறக்கண்டுவிண்ணோர்
வயின்வயினலர்தூய்வாழ்த்தவான்பதங்குறுகினுனல்.

முருகு - வாசனை, வெய்யவன்பதம் - சூரியமண்டலம், வயின்வயின் - இடந்தோறும் இடந்தோறும். (எகூ)

உகாதொருளுான்றும்விண்ணத்தோங்கியமதங்கடம்மை
நகாவொளிகிடைத்துநின்றநணந்தலையுலகுக்கெல்லாம்
சிகாமணியென்னச்சேணிற்சேயுயர்பதத்திற்சென்று
புகாவிளங்கினனவ்வேந்தன்புகழெழுவர்புகலற்பாலார்.

உகாது - அழியாமல், நகா — பரிகசித்து, சிகாமணி - சிரோரத்நம். (அ0)

துளிமதுக்கமழ்பூங்கண்ணித்துருவன்வானிலவுதூற்றும்
ஒளிமுடிகவித்தமைந்தனுற்கலனுழியான்மேல்
விளைவுறுமனனுமெல்லாம்வெறுத்தனனுகவன்னேன்
இளவல்வற்சரன்றன்காத்தானேழிருபொழிலுமாதோ.

வானிலவு - வால்நிலவு=வெள்ளியநிலவு, ஆழியான் - திருமால், ஏழிருபொழிலும் - பதினுலோகங்களும். (அக)

ஒழிவிலாவூழியூழியுலைவிலாப்பதஞ்சென்றுற்ற
அழிவில்சீர்த்துருவன்காதையஞ்செவிநிரப்பப்பெற்றோர்
விழுநிதிக்குப்பையெய்திவெண்ணகைக்கனிவாய்மைந்தர்
மழலையந்தேறன்மாந்திமகிழ்ந்துவீடெய்துவாரால்.

விழுநிதிக்குப்பை - பெரும்பொருட்குவியல், தேறல் - தேன், மாந்தி - பருகி. ()

தீதறநோற்றுநின்றசெஞ்சிலைவிதுரவென்ன
மாதவன்மயித்திரேயன்வழங்கியவாறுதண்ணந்
தாதலர்கமலச்செங்கட்சதுமறைவியாதன்மைந்தன்
மேதகுவிண்டுராதன்வியப்புறவிளம்பினுனல்.

வியாதன்மகன் - சுகன், விண்டுராதன் - பரிக்ஷித்து. (அரு)

ஆகதிருவிருத்தம். உ0உ.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---

நான்காவது

## பிருதுமன்னன்கதையுரைத்தவத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

மதுமணக்குமலர்ந்துளவோனெனும்
அதிர்கடற்புவியாண்டபிருதுமன்
கதையுனக்கிவட்கட்டுரைப்பேனென
விதுரனுக்குமுனிவன்விளம்புமால்.

மதுமணக்கும் - தேன்கமழ்கின்ற, அதிர் - ஒலிக்கின்ற. (க)

துகளிலாததுருவனளித்திடு
மகவுவற்சரன்மார்பகம்புல்லிய
திகழுநல்லெழிற்சேட்டையெனுந்திரு
இகலிலாவிருமூவரையீன்றனள்.

துகள் - குற்றம், புல்லிய - தழுவிய. (உ)

மருவுவற்சரன்மைந்தராறுவருள்
பொருவிலாதபுட்பாருணனென்பவன்
பிரபைதோடையெனப்பெயர்பெற்றிடும்
இருவர்காதலிளநலமாந்தினுள்.

பொருவிலாத - ஒப்பற்ற, இளநலம் - இளமையின்பம். (ங)

விரைசெய்தாரணிமென்குழன்மேனறை
பெருகுகாதற்பிரபையளித்தனள்
கருதுகாலைகவின்செயுமுச்சியோ
டுரைசெய்மாலையின்பேருறுவோரையே.

நறை - தேன். (ச)

நேசமார்பிரதோடணிசிமணம்
வீசுதர்மவியுட்டியெனப்புவி

பேசுபோரொருமூவரைப்பெற்றனள்
தூசுலாமிடையாளெனுந்தோடையே.

தாமம் - பூமாலை. (௬)

இகல்வியுட்டியென்பான்வடசொல்லினுட்
சகலகாந்திக்குறும்பெயர்சார்ந்திடும்
மகவையீன்றனன்மற்றவன்மைந்தனும்
புகலும்வேற்கைப்புகழ்மனுவேந்தனே.

இகல் - வலி, சகலகாந்தி - சர்வதேஜஸ், மநு - சக்ஷுர்மநு. (௬)

மனுவெனும்பெயர்பெற்றவன்மைந்தராம்
புனிதமார்புருகுச்சர்முதலினோர்
அனையபன்னிருவோரிலரசனும்
முனிவிலானருண்முற்றியவுன்முகன்.

புனிதம் - பரிசுத்தம். (எ)

வாழியுன்முகன்மாதவத்தாற்பெறும்
ஆழிமைந்தராறுவரம்மைந்தரின்
ஆழிசூழுமகனிலமேழினும்
ஆழியொன்றுசெலுத்தினனங்ஙனே.

ஆழியொன்று - ஒற்றைச்சக்கரம். (அ)

வந்தவாதிமனுமுதலாகவீ
ரைந்தென்றோதுதலைமுறையானங்ஙன்
விந்தைசேர்புயன்வேட்டனன்வாண்முகம்
இந்துநேருஞ்சுநீதையையென்பவே.

விந்தை - விஜயமங்கை, வாள் - ஒளி, இந்து - சந்திரன். (௯)

கொங்குதேர்ந்தளிகூட்டுணுநாண்மலர்த்
தொங்கன்மாலைத்துருவன்வழிவரும்
திங்கள்வெண்குடையான்செய்யகோலினன்
அங்கனென்பவனாற்றினன்வேள்வியே.

கொங்கு - தேன். (௧0)

ஆற்றும்வேள்விச்சொரியவியங்கையால்
ஏற்றிலார்வந்திமையவரென்றலும்
மாற்றருந்திறன்மன்னவன்காரணம்
சாற்றுவீரெனவந்தணர்சாற்றுவார்.

அவி - ஓமதிரவியங்கள். (௧௧)

பிள்ளையில்லவர்பெய்யவிவானவர்
கொள்ளலார்பைங்குழவிபிறந்திட

உள்ளவாறினிதோமம்புரிகெனப
புள்ளுயர்த்தவற்போற்றிப்புரிந்தனன்.

புள்ளுயர்த்தவன் - திருமால். (கஉ)

மின்னிலங்குதொடியன்வெண்டுசினன்
பொன்னந்தாரினன்பொற்கலன்மீதுபால்
அன்னமேந்தியொருவனழலிடைத்
துன்னுசோதிதுவன்றுறத்தோன்றினன்.

வெண்டுசினன் - வெள்ளைவஸ்திரத்தையுடையவன், பால்அன்னம் - பாற்சோறு.

பரவைவெண்டிரைப்பட்டவமுதினைப்
புரையுமன்னதுபொற்றொடித்தேவிபால்
அரசுநல்கவருந்தினள்சூற்கொளா
விரைசெய்பூங்குழல்வேனனையீன்றனள்.

பட்ட - தோன்றின. (கச)

காதன்மைந்தன்வளர்ந்துகலைபல
ஓதவோதவுணர்வுகுறைந்தனன்
வேதநீதியொழுக்கம்விடுத்தனன்
ஆதியாயவறம்பிழைத்தானரோ.

உணர்வு - அறிவு. (கரு)

அன்னைகூற்றின்மடமகளாதலால்
இன்னதன்மையனுயினனேழ்புவி
துன்னுகீர்த்தித்துருவனெனப்படும்
மன்னன்மன்னன்மரபினிற்றேன்றினன்.

கூறு - அமிசம். (கசு)

மழகளிற்றுமருவலர்போர்கடந்
தழலும்வேற்படையங்கனூறநெறி
ஒழுகுசேயையுயிர்த்திலமென்றிரும்
பொழிலிரங்கப்புகுந்தனன்கானகம்.

மருவலர் - பகைவர், கடந்து - வென்று, இரும்பொழில் - பெரியவுலகத்தார். ()

வரிச்சுரும்புவழிமதுமாந்தவாய்
விரிக்கும்பூந்தொடைவேந்தர்திறையிடக்
குரைக்கும்வேலைமண்கொண்டுகொழுநிதிச்
செருக்குமிக்கனன்செஞ்சிலைவேனனே.

வழிமது - ஒழுகுகின்றதேன், குரைக்கும் - ஒலிக்கின்ற, வேலை - கடல். (கஅ)

உறைந்துதேவரவியுணநான்மறை
அறந்தெரிந்தவராற்றுநல்வேள்வியைத்

துறந்துபோமெனச்சொன்முரசெற்றியே
மறந்தவாதவன்மாற்றுவித்தானரோ.

மறந்தவாதவன் - கோவம் நீங்காதவன், (கக)

வீங்குமாதவர்வேள்விசெய்தானனி
ஓங்குவேந்தருயர்வர்திருவென
ஆங்குமேவியறிஞரறைதர
வாங்குவார்சிலைமன்னவன்கூறுவான்.

நனி - மிகுதியாக, வாங்கு - வளைந்த, வார்சிலை - நீண்டவில். (உ0)

சீயமன்னசெழுநிலவேந்தலால்
போயொர்தெய்வமுளதெனப்போற்றுவார்
தூயகேள்வர்ப்பிழைத்துறுசோரர்பால்
சேயம்வைத்தமகளிரைநேர்குவார்.

சீயம் - சிங்கம், கேள்வர்ப்பிழைத்து - கணவரைவஞ்சித்து. (உக)

துன்றுவெண்ணிலநூற்றுவலம்புரி
மன்றுசெங்கைமணிநிறவண்ணன்யான்
என்னையல்லதுதெய்வமின்றேயெனப்
பன்னியென்னைப்பரவுமினென்றனன்.

வெண்ணில - வெள்ளியசந்திரன், மணிநிறவண்ணன் - திருமால். (உஉ)

ஆற்றன்மேயவமைச்சர்கழறிடும்
கூற்றைக்கொண்டுகொடுநெறிமேற்படர்
வேற்றிறற்படைவேனனைவேதியர்
சீற்றத்தீயிற்செகுத்தனரென்பவே.

கூற்றை - சொல்லை, சீற்றத்தீ - கோவத்தீ. (உங)

விண்ணடைந்திடும்வேனனுடம்பினை
எண்ணெய்பெய்ததோர்தோணியிலிட்டனள்
மண்ணகன்புவிக்குநர்யாரெனத்
தன்னந்தாரலன்றாய்புரந்தாளரோ.

எண்ணெய்பெய்ததோர் தோணியிலிட்டனள் - தைலமாட்டினாள், புரந்தாள் - காத்தனள். (உச)

இலையடுத்தவினமலர்ப்பூந்தொடை
மலையடுத்ததோண்மன்னனிறத்தலும்
அலையடுத்தவகன்புவியெங்கணும்
தலையெடுத்தகுறும்புதலைத்தலை.

அலையடுத்த - கடல்சூழ்ந்த, தலைத்தலை - இடந்தோறும். (உடு)

நிலங்கரந்ததுநீள்வளங்கள்ளர்தம்
குலம்பரந்ததுகூட்டுணவவ்வழிக்

கலந்தவேதியர்தம்மிற்கடைந்தனர்
உவந்தவேனனுடலமெடுத்தரோ.

காந்தது - மறுத்தது, கடைந்தனர் மதித்தார்கள். (உசு)

நீலமேனியனீளொளிவெஞ்சுடர்
போலிலங்குசெங்குஞ்சியன்பொங்கழல்
ஆலமென்னவொருவனதிர்கழற்
காலின்வந்துபிறந்தனன்காண்டக.

குஞ்சியன் - சிகையையுடையவன். (உஎ)

வேறு.

அல்லினுல்வகுத்தெனவாங்குத்தோன்றிய
வில்லுடைத்தடக்கையான்விளைப்பதென்கொலோ
சொல்லுமினீரெனத்தொழுகுலத்தவர்
நில்லெனவுரைத்தலினிடாதனுயினன்.

அல்லினல் - இருட்டைக்கொண்டு, நிடாதன் - வேடன். (உஅ)

வேட்டுவரெனப்பெயர்மேவிவிண்டொடு
கோட்டுமால்வரையினுங்கொங்குவிம்முபூங்
காட்டினும்வாழ்பவர்காய்சினத்தகூர்
வாட்டிறலன்னவன்வழியிற்றேன்றினர்.

கொங்கு - வாசனை. (உகூ)

வேறு.

தேன்றதும்புசெந்தாமரைசெற்றெளி
கான்றதிங்கள்வதனங்கவினமுன்
வான்றழைத்திடவந்தவமுதெனத்
தோன்றினளிடக்கையிறேர்தோகையே.

செற்று - வென்று. (௩0)

இருளைநுங்குமெரிமணிப்பொற்றுடி
சொரியுநீள்சுடர்தோன்றுவலக்கையின்
பிருதுவென்னும்பெருநிலமன்னவன்
உருவஞாயிறுபோலவுதித்தனன்.

நுங்கும் - விழுங்குகிற, உருவம் - ஒளியையுடைய. (௩க)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அலர்ப்பொலம்பொகுட்டின்வாழுமந்தணனுங்குநண்ணி
விலக்கருங்களிநல்யானைவெந்திறல்விளங்குவேனன்
வலக்கரங்கடையவந்துதோன்றியமன்னர்மன்னன்
இலக்கணக்கிடக்கைநோக்கியீங்கிவன்மாலேயென்றான்.

அலர்ப்பொலம் பொகுட்டின்வாழும் அந்தணன் - பிரமன், மாலே - திருமாலே.

எங்கெழில்வாய்ந்தவேனனிடக்கரங்கிடையத்தோன்று
மாந்தளிரனையமேனிமழைமதர்நெடுங்கணங்கை
காந்தியுங்கவினிநோக்கிக்கவியிளஞ்சுரும்பர்பாடித்
தேந்துளிபிலிற்றுந்தண்பூந்திருமகளிவளேயென்றான்.

பிலிற்றும் - துளிக்கிற. (௩௩)

பில்குதேன்கமழலங்கற்பிருதுவென்றுரைக்கப்பெற்ற
கொல்களிற்றபூவர்கந்தவருச்சியைக்குவளைதாழ
வில்லுமிழ்கணையையென்றுயேவிலுக்கோலவிட்ட
சில்லரித்தடங்கணாளைத்திருமணம்புணர்த்தினால்.

பில்கு - சிந்துகிற. (௩௪)

கலிவிருத்தம்.

அரியணைவழங்கினனளகைகாவலன்
திருமுடிநல்கினன்றேவர்கோமகன்
வருணன்வந்தளித்தனன்வட்டவெண்குடை
விரிநிலாக்கவரிகால்வேந்தன்வீசினான்.

அரியணை - சிங்காதனம், கால்வேந்தன் - வாயுதேவன். (௩௫)

கலைமகளங்கடிங்கலையெனக்குலாய்
அலர்கதிர்விரிக்குமுத்தாரமீந்தனள்
பலர்புகழ்வியாவியாம்பரிதிபோற்றிகழ்
மலர்மகணிதித்திருமணப்பநல்கினாள்.

வியாவி=வியாபி - சர்வவியாபகன். (௩௬)

பார்மகள்வழங்கினள்பசும்பொற்பாதுகை
வார்கடல்குளிறுவெள்வளையளித்ததால்
கார்தவழ்குன்றொடுகல்லென்மாநதி
கூர்நிதிக்குப்பைகள்கொடுவந்துற்றன.

பாதுகை - திருவடிநிலை, குளிறு - சத்திக்கிற. (௩௭)

கள்ளவிழ்மலரினான்கவயநல்கினான்
அள்ளிலைத்துளவினானாழிநல்கினான்
வெள்ளியம்பொருப்புறைவிமலனீந்தனன்
தெள்ளொளிபொதுளியசெம்பொன்வாளரோ.

கவயம் - காட்டா. (௩௮)

கலைமதிசதமெனக்கதிர்செய்கேடகம்
மலைமகளுதவினண்மறலிநல்கினான்
உலைவறுவெங்கதையுருற்றுமாதவர்
நிலைபெறவழங்கினர்நிகழ்த்துவாழ்த்தரோ

சதம் - நூறு. (௩௯)

வலம்படுசிலையழற்கிறைவழங்கினன்
இலங்குசெங்கதிர்களையிரவியீந்தனன்
அலங்குளைவெண்பரியளித்ததம்புலி
பொலங்கொடிதேர்மயன்புரிந்துநல்கினன்.

அழற்கிறை - அக்கினிதேவன், அம்புலி - சந்திரன். (ச0)

மருவிரிமலரினனன்னமாதவர்
விரைகமழ்பூம்புனலாட்டிவேந்தனை
அரியணையிருத்தினரலங்குசெஙகதிர்
சொரிதருமணிமுடிசூட்டினாரோ.

மருவிரிமலரினன் - பிரமன். (சக)

அந்தரதுந்துபியதிர்ந்ததாய்பிழி
சிந்துபொற்றருமலர்தேவர்சிந்தினர்
வந்தனராடினர்வானமங்கையர்
பைந்தொடையாழினோர்பாடன்மேயினர்

பிழி - தேன். (சஉ)

சந்திரனுயிர்க்கெலாந்தாபநீக்கலான்
இந்திரனுலகினிதளிக்கலானெனச்
சுந்தரவாசனைமுனிவர்சொற்கொடு
வந்தியர்முதலினோர்வழுத்தன்மேயினர்.

தாபம் - வெப்பம். (சங)

மாற்றலர்க்கணுகுருமாட்சியானனல்
கூற்றுவனறம்பிழைத்தோரைக்கோறலான்
ஏற்றநற்றாதரானெங்குநாடலான்
காற்றினுக்கிறையெனக்கருதலாகுமே.

மாற்றலர்க்கு - பகைவருக்கு, கோறலான் - கொல்லுதலால். (சச)

அளவிடற்கரியநல்லாற்றன்மேவலான்
வளமலிவாரிதிவருணனீகையான்
ஒளிதருமிருநிதிக்குறையுளாகையான்
களிசெயுமளகையர்காவலாளனே.

வாரிதி - கடல். (சரு)

அணிசராசரஞ்சமனுகப்பார்த்தலான்
தணிவில்வெங்கதிர்க்குழாந்தழைக்கும்வேந்தனல்
உணர்வுறுநோன்மையினுயிரளித்தலான்
மணிதிகழ்வாரிசூழ்வையமங்கையே.

சமனுக - ஒப்பாக, வையமங்கை - பூமிதேவி. (சசு)

பார்மகள்பசுவெனக்கறந்துபல்வளம்
ஆர்தரவேள்விகளாற்றியாண்டபின்

தேர்சனகாதியர்மேவவுட்டெளிந்
தோர்பதம்பெறுமிவனென்னவோதினார்.

பார்மகள் - பூமிதேவி. (சஎ)

என்றுசொற்றனர்கடாமினிதுவப்புற
மன்றலம்பூந்தொடைமாசிலாத்துகில்
குன்றெனவருநிதிக்குவைவழங்கினான்
வென்றியங்குடுமிவேல்வேந்தர்வேந்தனே.

உவப்புற - களிக்கும்படி, துகில் - ஆடை. (சஅ)

செறிந்தசெங்கதிரவன்றிசைப்பத்தெள்ளிதின்
மறிந்ததெண்டிரையிருநிலம்வளங்கொளா
எறிந்ததுகுறும்பிருளேழிசைச்சுரும்
புறைந்தபூந்தாரினானொற்றையாழியே.

திசைப்ப - திகைக்க. (சகூ)

வருந்தினம்பசிக்கனல்வருத்தப்பல்வளம்
கரந்ததுநெடுநிலங்காந்திநீயெனப்
பொருந்துபுமன்பதைபுகலக்கேட்டலும்
விரிந்தபூந்தாரவன்வில்லெடுத்தனன்.

பொருந்துபு - பொருந்தி, மன்பதை - மக்கட்டொகுதி. (ருO)

திண்டிறன்மன்னவன்சிலையெடுத்தலு
கண்டனணெஞ்சகங்கலங்கியானுருக்
கொண்டனளோடினள்குரைக்கும்வெண்டிரை
மண்டிணிமாநிலமடந்தையென்பவே.

ஆனுரு - பசுரூபம். (ருக)

கோடியசிலையினன்கொற்றவம்பினன்
ஆடெழுவனையதோளரசனண்டெழுந்
தோடியதிசையெலாமோடியொல்குபு
வாடினனின்றனள்வழுததினாளரோ

கோடிய - வளைந்த. (ருஉ)

கல்லெனும்புயத்தெனைக்காப்பத்தோன்றிநீ
கொல்லின்யார்காக்குநர்கொற்றமன்னவர்
மெல்லியலார்பழிவிரும்பிலாரென
மல்லலம்புவிமகள்வழங்கினாளரோ.

கல்லெனும்புயம் - மலைபோலும்புயம். (ருங)

ஆடவராயினுமலியராயினும்
வாடியநுண்ணிடைமகளிராயினும்

நீடுயிர்க்கருந்துயர்நினைக்கின்வீட்டுதல்
ஆடுடையரசர்நல்லறமதாயினும்.

அலியர் - பேடியர். (ருச)

என்னைநீகொல்கலாதினிதிறோம்புதி
மின்னகுபரிதிவேல்வேந்தர்வேந்தநீ
சொன்னனமருதியான்சுரப்பலென்றனள்
அன்னவனருள்சுரந்தறைதன்மேயினன்.

ஓம்புதி - காக்கக்கடவை. (ருரு)

கொல்கலனஞ்சலைகொடுக்கல்வேண்டுமால்
பல்வளமென்றிரும்பனைக்கையானையான்
மெல்லெனக்கூறலும்வேலைசூழ்தரு
தொல்புகழ்நிலமகடொழுதுசொல்லுமால்.

நிலமகள் - பூமிதேவி. (ருசு)

என்னைமுன்பாதலத்தேனமாகியே
துன்னிவந்தெடுத்தருதுயரம்போக்கிய
கன்னியந்துளவணிகண்ணனுநிநீ
உன்னிருட்கெல்லையாருரைக்கவல்லரே.

ஏனமாகி - வராகமாகி. (ருஎ)

அறந்தமைந்திடவருளரசிலாமையால்
உறைந்தநல்வளனெலாமொலிப்பநின்றனன்
கறந்துகொள்கன்றினுலென்றுகாதல்செய்
நிறைந்தபல்வளனிலமங்கைநல்கினள்.

தழைந்திட - செழிக்க. (ருஅ)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மனுவிளங்கன்றாமானவேற்பிருதுமன்னவன்கறந்தனன்பைங்கூழ்
முனிவரர்வியாழமொருகுழக்கன்றாமுதுமறைகறந்தனரமரர்
பனியிருவிசும்புகாப்பவன்கன்றாப்பாற்படக்கறந்தனர்சோமம்
கனகன்மாமதலைவளரிளங்கன்றாய்க்களிநறாக்கறந்தனரவுணர்.

மானவேல் - பெருமையுள்ள வேற்படை, விசும்பு காப்பவன் - இந்திரன், சோமம் - கள். (ருகூ)

தென்புலத்தவரங்கௌவியங்கறந்தார்செஞ்சுடரரியமாக்கன்றா
மின்பிறழ்மணிசேர்தக்ககன்கன்றாவிடங்கறந்தனகொடும்பாந்தள்
இன்புறவரக்கரியக்கர்பேய்முதலோரிலங்குகண்ணுதலரன்கன்றாய்க்
கொன்பெறுகபாலந்தனிநனிகறந்தார்குருதியோடருந்தசைமாதோ.

கௌவியம் - பஞ்சகவ்வியம், (பால்முதலியன.) (கூ௦)

கஞ்சநாண்மலர்க்கட்கபிலனேகன்றுக்கறந்தனர்சித்தர்தங்கலையாழ்
விஞ்சைகந்திருவர்கறந்தனரெழில்சேர்விளங்குதங்காவலன்கன்று
அஞ்சிறைப்பறவைகலுழனேர்கன்றுவடர்சினைப்பழுமரங்கறந்த
மஞ்சுசூழிமயமால்வரைகன்றுமணிக்குலங்கறந்தனவரைகள்.

அடர்சினை - நெருங்கினகிளைகளையுடைய, பழுமரம் - ஆலமரம். (சுக)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இத்திறமுலகமெல்லாமேற்றனகறந்துகொள்ள
அத்தகுசிறப்புவாய்ந்தவானுருக்கொண்டுநின்று
மொய்த்தவல்லிருள்கால்சீக்குமுழுமணிச்சுடிகைநெற்றிப்
பைத்தலையரவமேந்துபார்வளஞ்சுரந்ததன்றே.

கால்சீக்கும் - வேர்பறிக்கிற, பைத்தலையரவம் - ஆதிசேடன். (சுஉ)

நிவப்பொடுதாழ்வின்றுகநெடுநிலங்கவர்ந்துகொண்ட
குவட்டிருங்குன்றவல்விற்கோடியாலெறிந்துசாய்ந்து
கவித்தனன்கவிகையொன்றுகளியிளஞ்சுரும்பர்பாய்ந்த
தெவிட்டநண்டேறன்மாந்திச்செறிநறுந்தெரியல்வேந்தே.

நிவப்பொடுதாழ்வு - உயர்வுதாழ்வு. (சுஙு)

நாடெழிற்புரங்களென்றுநகரென்றுமகரமென்றும்
கேடகம்பாடியென்றுங்கிளர்குடிசேரியென்றும்
நீடியவரண்களென்றுநிகழ்த்திடப்பட்டவின்றும்
ஆடலஞ்சிலையானிப்பாரளித்தநாள்பெற்றபேரே.

ஆடல் - வெற்றி. (சுச)

பிருதிவியெனும்பேர்பெற்றப்பெண்ணெனவிளங்கவிப்பார்
ஒருகுடைநிழற்றுசெங்கோலுறுபுகழ்ப்பிருதுமன்னன்
வரைபுரைமார்பம்புல்லிவரிவிழிவருச்சியென்பாள்
பொருவருமெழில்சேர்ந்தந்தண்புதல்வரையுதவினுளல்.

நிழற்றும் - நிழலைச்செய்கிற, உறு - மிகுந்த. (சுரு)

•விலங்கிவில்லுமிழுமொண்கேழ்விழுமணிவேலைவீச
நலங்கெழுநதிகளெல்லாநறுநெய்யும்பாலுநல்க
மலர்ந்தபூந்தருக்களெல்லாமதுமழைபொழியாநிற்ப
அலங்குளைப்புரவிவேள்வியாற்றினனரசர்கோமான்

•உமிழும் - ஒளியைக்கக்குகிற. (சுசு)

ஒன்றொழிநூறுவேள்வியாற்றிமற்றொன்றுமாற்று
நின்றுழிபொறுக்கலாற்றுனிரையுளைப்புரவிவெளவி
மின்றிகழ்சடிலந்தாழ்த்துவெண்டலைக்கரத்தனுகிக்
குன்றெறிவயிரவொள்வாட்கொற்றவன்போயினுனல்.

ஒன்றொழிநூறு - தொண்ணூற்றொன்பது, வேள்வி - யாகம். (சுஎ)

ஏப்
புரவிநீவல்லைமீட்பாய்போயதென் றுரைத்தானாக
வரிசிலைத்தடக்கைமைந்தன்வானவர்க்கிறைவன் றன்னை
விரிசடையுடையானென் றுவெங்கணைதொடுக்கிலானே.
ஏ - கட்டமைந்தவில். (௬அ)

இந்திரனுமின்னோனீங்கிவன் றன்னையேந்தால்
கொந்தழல்வாளிதூற்றிக்கொல்லெனமுனிவன்கூற
மந்தரம்வெள்குதோளான்வரிசிலைகுழையவாங்க
அந்தரங்கரந்துநின்றனமரர்கோன்புரவிவிட்டான்
ஏந்தால் - ஏந்தலே, மந்தரம் - ஓர்மலை. (௬௧)

நொறில்வயப்புரவிமீட்டுநதியழல்வடிவேன்மன்னன்
சிறுவன்வந்தெய்தலோடுஞ்செழுந்தவக்கிழவர்நோக்கி
அறைகழலரவத்தானையரசிளங்கோமாற்கோர்பேர்
விறல்விசிதாச்சுவன்றனிவனெனவிளம்பினரால்.
நொறில் - விரைவு. (௭௦)

வல்லிருள்விளைத்துவல்லேவானவர்க்கிறைவன்மீட்டும்
வில்லுமிழ்கணையிற்செல்லும்வெம்பரிகவர்ந்துபோகக்
கொல்வலீங்கிவனையென் றுகுங்குமக்குவட்டின் வீங்கு
மல்லடுகுவவுத்திண்டோண்மன்னவன்சீறிநின்றன்.
கணையின் - அம்புபோல. (௭௧)

சீறினனெழுந்துவேந்தன்செஞ்சிலைதருகவென்ன
வீறுசால்வேள்விதன்னின்வெங்கொலைவிளைத்தலாகா
கோறுநாமிவனையின்னேகொந்தழல்நெய்பெய்தென்ன
ஆறறிமுனிவர்கூறவடைந்தனன்விரிஞ்சனங்கே.
கோறும் - கொல்வோம். (௭௨)

மல்லலஞ்சிறப்புவாய்ந்தவானகம்புரக்கும்வேந்தன்
அல்லியங்கமலச்செங்கணழியானல்லனேகொல்
கொல்லுதலடுப்பதன்றற்கொற்றவாளரசவென்னச்
சொல்லலுற்றனனலம்பொற்றேடவிழ்மலரினனே.
என்ன - என்று, மலரினன் - பிரமன். (௭௩)

மன்னநீபுரியும்வேள்விவருபயன்விழைந்திலாயால்
துன்னருந்தனிவீட்டின்பந்துய்ப்பதேவிழைந்துநின்றய்
இன்னதோர்வேள்வியொன்றுமியற்றுதலொழிதியென்று
பொன்னுலகளிப்பான்றன்மேற்பொருபகைபோக்கல்செய்தான்
விழைந்திலாய் - விரும்பிலாய். (௭௪)

விரைசெலவிவுளிவேள்விவேட்டவம்மன்னன்றன்பால்
மரகதவண்ணத்தண்ணல்வானவர்க்கிறையோடெய்திப்

பொருதிறற்குலிசபாணிபுரிந்ததுபொறுக்கல்வேண்டும்
அரசநீவெகுளியுற்றாலருளெவர்கண்ணதென்றான்.

விரைசெலவு - விரைநடை, இவுளி - குதிரை, குலிசபாணி - இந்திரன். (எடு)

விழைவதுதருதும்வேந்தேவிளம்புதியென்னவீழ்ந்து
தொழுதனன்வழுத்திச்செய்யதோடவிழ்கமலம்பூத்த
மழைமுகில்வண்ணமுத்திவழங்குறுநின்னைக்கண்டும்
அழிவதோர்பொருள்கொள்வார்கொலறிவினரென்றுசொல்வான்.

தருதும் - தருவோம். (எசு)

அள்ளிலைத்துளவப்பைந்தாரமலநின்சரிதமென்னும்
தெள்ளமுதினிதின்மாந்தச்செவிபலவேண்டுமென்னாப்
புள்ளவாம்புலவுவேலான்போற்றலும்பரமன்றானும்
வெள்ளிவெண்குடையானன்புவியந்தனன்போயினானால்.

மாந்த - நுகர. (எஎ)

திங்களங்கவிகைவேந்தன்செழுங்கதிர்ச்செல்வன்போல
அங்கதிராழியோன்றேயாழிசூழுலகமுய்த்துக்
கங்கைகாளிந்தியென்னக்கரைபொருநதியினுப்பண்
மங்குறோய்குடுமிமாடமாநகர்வைகுநாளில்.

மங்குல் - மேகம், குடுமி - உச்சி. (எஅ)

மாதவர்முனிவர்சித்தர்வானவர்முதலோர்மொய்பத்
தாதலர்தெரியன்மார்பன்சத்திரவேள்வியாற்றி
மீதுறுமுடுவினுப்பண்வெண்மதியெனவேநின்று
சோதிசேரவையுள்ளோரைத்துதித்தனனோக்கிச்சொல்லும்.

மொய்ப்ப - நெருங்க, உடுவினுப்பண் - நாண்மீன்களுக்கு நடுவே. (எகூ)

காவலர்க்கறஞ்செய்வோரைக்காத்தலுமறஞ்செய்வோரைப்
பூவினிற்கடிதறுனும்பொருந்துதங்கருமமென்பர்
தாவிலாக்கருமஞ்செய்தேயிருமையுந்தயங்கினார்வெங்
கோவெனும்வேனனன்றிமனுமுதற்குலத்தினோரே.

காவலர்க்கு - அரசர்க்கு, பூவினில் - பூமியில், மறம் - பாவம், இருமை - இம்மை மமைகள். (அ0)

திருமகள்கொழுனன்செய்யசேவடிவணங்கிநீரும்
மருவுநுங்கருமஞ்செய்யின்வயங்குநாற்பயனும்பெற்றே
இருமையும்விளங்குவீராலிப்புவிகாவல்யானும்
ஒருவிடாதின்பமெய்தியுறுவன்மால்பதமுமன்னே.

நாற்பயனும் - சதுர்விதபுருஷார்த்தங்களும். (அக)

நிறைசுடரிமையோர்தாமுநெஞ்சமுற்றிலங்காநின்ற
அறைதழற்கடவுடன்னையன்பொடும்விளக்கும்வேதத்

துறையறிமுனிவர்ப்போற்றிற்றுளவினோன்மகிழுமென்றால்
மறையவர்பெருமையென்னால்வழுத்துதற்கெளிதன்றென்றான்.

தழற்கடவுடன்னை - அக்கினிதேவனை. (௮௨)

என்னலுமவையோர்சொல்வாரிரணியன்மகவினாலே
துன்னியசீரினோடுதுலங்கினான்போலநின்னால்
நன்னெறிநீங்குவேனனவையறவிளங்கினானால்
இன்னெழின்மகப்பெற்றோர்தாமிலங்குவரெனுஞ்சொன்மெய்த்தே.

அவையோர் - சபையோர். (௮௩)

தேனிமிர்துளவோன்றாளிற்செறிந்திடுமன்பைநீயிம்
மாநிலத்தரசனாகிமருவியதிறத்தினாங்கள்
ஈனமொன்றின்றியின்பமிருமையுமெய்தாநின்றேம்
கோனிவணெடிதுவாழ்தியெனநனிகூறிப்போயார்.

தேன் - வண்டு. (௮௪)

பெண்ணெனத்தனதுதொல்லைப்பெயரினால்விளங்கும்வண்ணம்
கண்ணகன்ஞாலங்காக்குங்காவலன்றன்பால்வந்து
நண்ணினர்சனகனாதிநற்றவக்கிழவர்நால்வர்
அண்ணனான்மறையேபோலவரும்பெறற்காட்சிமிக்கார்.

அண்ணல் - பெருமை. (௮௫)

கௌவைநீர்வேலிமன்னன்கதுமெனவெழுந்துதாழ்ந்து
தெய்வமாதவத்தோரம்பொற்சேவடிக்கமலம்போற்றி
எவ்வகைகடக்கலாகுமேழ்பெரும்பிறவிவேலை
அவ்வகைமொழிமினென்னவருந்தவருரைக்கலுற்றார்.

கௌவைநீர் - கடலாகிய, வேலி - எல்லை. (௮௬)

பொறிகளையடக்கித்தன்னைப்புலப்படவறிந்தானாயின்
உறுதுயிற்கனவுதன்னினுற்றிடுபடைகளெல்லாம்
செறிதுயினீங்கிற்பொய்யாந்திகழ்பவனொருவன்றான்போல்
நெறியுறுமுபாதிநீங்குநிறைந்ததோரறிவாய்நிற்பான்.

புலப்பட - பிரத்தியக்ஷமாக, உபாதி - அவஸ்தை. (௮௭)

ஐயதாமறிவோடிவ்வாறமர்வதற்கெளிதாமேது
மையறுமாலைவந்துமயக்குமோரரவுபோலும்
பொய்யுமாய்மெய்யுமாகிப்பொலிதருமாயன்றாளாம்
செய்யதாமரைக்கணன்புசெய்வதென்றுரைசெய்வாரே.

ஐயது - அழகியது, மாலைவந்துமயக்குமோரரவு - பழுதையிற் பாம்பு. (௮௮)

உரவுநீருலகமெல்லாமுண்டொளிகிளைக்குஞ்செஞ்சூட்
டரவணைதுயிலுமண்ணலடிப்புணைபற்றியன்றிக்

கரையழிபிறவிவேலைகடப்பரிதென்றுகூறி
மருவிரிதெரியன்மன்னன்மனந்தெளித்தேகினால்.

உரவுநீர் - கடல், தெளித்து - தெளிவித்து. (அக)

உடம்பறப்பழுத்தலோடொருதனித்திகிரிமன்னன்
விடம்பொழிகுடும்மைவேல்வேந்தெலாம்வந்துதாழ
மடங்கலேறனையகொற்றமைந்தனைமௌலிசூட்டி
நடந்தனன்றேவியோடுநறுமலர்க்கானத்தன்றே.

மடங்கலேறு - ஆண்சிங்கம். (கூ0)

காருறழ்கவிகைமன்னன்கனியொடுகிழங்குதின்று
நீருணுச்சருகருந்தாநிறைந்துலாங்காற்றுமாந்தா
மாரியிற்புனலிற்றாழ்ந்துமாறிலாதிருந்தும்வேனில்
ஆரழலிடையேநின்றுமருந்தவமயராதாற்றும்.

தின்று - தின்று, நீருண - நீரபருகி, அருந்தா - உண்டு, மாந்தா - குடித்து. (கூக)

கலிநிலைத்துறை.

பூதமைந்தொடும்பொறிகளைப்புகலகங்காரத்
தாதிநாளினிற்றோற்றியமுறையதினடக்கி
ஏதமில்லகங்காரத்தைமகத்தினிலிருத்தி
ஓதுசீர்திகழ்மகதினைமாயையினொடுக்கி.

மகத்தினில் - மகத்தத்துவத்தில். (கூஉ)

இருளுயிர்க்கறவிருந்துலாமுயிர்ப்பினையடக்கி
உரைசெய்கின்றவாதாரமோராறுமுய்த்ததனால்
பிரமரந்திரம்பிளந்துயர்பிரமமாயொன்றாய்ப்
பரமமாகியபசுந்துழாய்முகில்பதமடைந்தான்.

உயிர்ப்பினை - மூச்சை, ஆதாரமோராறு - ஷடாதாரங்கள், அவை - மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆஜ்ஞேயம், என்பன. (கூஙு)

தொடப்பெறாததூமலர்புரைமேனியன்பூமேல்
நடக்கலாற்றலாளினமென்சீறடிநங்கை
தடத்தகங்கையாந்தண்டுறையாடினள்கொழுநன்
உடற்றழற்கொளீஇயொள்ளழன்மூழ்கிவீடுற்றாள்.

உடற்றழற்கொளீஇ - உடம்பெரிந்த நெருப்பைக்கொண்டு. (கூச)

பிருதுமன்னவன்பெருங்கதைபெட்பொடுகேட்போர்
விரியுநான்மறையோரெனின்விழைந்தனபெறுவார்
அரசராயினேழ்புவியுமோராழியுய்த்தாள்வர்
மருவுசீர்திகழ்வணிகரேல்வளர்திருவுறுவர்.

பெட்பொடு - அன்போடு. (கூரு)

தள்ளரும்புகழ்ப்பின்னவர்தயங்குமிக்கதையை
உள்ளுவப்பொடுகேட்கினல்லுத்தமராவர்
பிள்ளையில்லவர்வினவுறிற்பிள்ளைகள்பெறுவார்
எள்ளருந்திறல்விதுரவென்றிசைத்தனன்முனிவன்.

பின்னவர் - சூததிரர். (கசு)

குருகுலத்தினிலுதித்தவேற்கொற்றவவென்று
பெருகுமாதவச்சுகமுனிபேசினனென்ன
உருகுகாதலோடந்தணருவப்புறவுரைத்தான்
சொரியுந்தேன்கமழ்துளவினேன்பதந்தொழுசூதன்.

என்ன - என்று. (கஎ)

பிருதுமன்னன் கதையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—உககூ.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்



ஐந்தாவது

## பிராசீனபரிகி அவிர்த்தானன் கதையுரைத்தவத்தியாயம்.

பாய்ந்துவண்டிமிர்பசுந்தொடைப்பிருதுமுன்பயந்த
வாய்ந்தசீர்விசிதாச்சுவன்மதலைதன்மதலை
ஆய்ந்துமுத்தழல்வேள்விகளளப்பிலபுரியும்
ஏந்தல்காதைகேளெனமுனிவிதுரனுக்கிசைப்பான்.

வண்டுஇமிர் - வண்டுகளொலிக்கின்ற, மதலைதன்மதலை - பேரன் (க)

பிளிறுமும்மதக்களிற்றினன்பிருதுமன்மதலை
வளையும்விற்கொடுவானவர்க்கிறைகவர்ந்தேகும்
உளைவயப்பரிமீட்டவனுலகெலாமளித்தான்
இளையநால்வர்க்குநாற்றிசையினிதினிற்கொடுத்தே.

பிளிறும் - சத்திக்கிற, உளை - புறமயிர். (உ)

வாசவன்றனைப்பரிகவர்ந்தேகுநாண்மறையப்
பூசல்வேட்டுறவிற்கொடுபோய்வெருட்டுதலால்
பேசுபேரந்தர்த்தானனென்றடைந்திடுபெயரோன்
மாசிலாவெழிற்சிகண்டினிதனைமணம்புரிந்தான்.

பூசல் - போர். (௩)

திசையெலாம்புகழ்நல்லெழிற்சிகண்டினியென்னும்
பசியகோதையைமணந்துபாவகன்பவமானன்

சுகியெனப்படுமைந்தரையீன்றுதோல்வேள்வி
இசைகொளப்பலபுரிந்தனனிசைக்குமவ்வேந்தன்.

நல்லெழில் - மிக்க அழகு. (ச)

மைந்தர்மூவரும்வளர்தழற்கிறையவர்வசிட்டன்
வெந்திறற்கொடுஞ்சாபத்தால்வேந்தனுக்குதித்தார்
அந்தமூவருமீட்டுமவ்வழற்கிறையானோர்
சுந்தரத்தவன்பெயர்த்துமோர்தோகையைவேட்டான்.

தோகை - பெண். (ரு)

அடல்செய்வேலந்தர்த்தானன்பினன்பொடுவேட்ட
தொடையல்வேய்நபசச்சுவதியென்றுரைபெறுந்தோகை
உடைதிரைப்புவிபோற்றவிர்த்தானனையுயிர்ததாள்
விடலருந்திறல்வேந்தனுமறுவனையளித்தான்.

அடல் - போர், வேட்ட - மணஞ்செய்த. (சு)

மேவிப்போர்செயுநகண்ணியர்வேளவிர்த்தானன்
பூவிற்றன்றரும்புதல்வரோராறுவராற்பொற்பூவ
காவிற்சேர்ந்தவர்கூட்டுணக்கணக்கில்பல்வேள்வி
ஆவிர்த்தானனுமாங்கவனாற்றினனன்றே.

கண்ணியர் - மாதர், வேள் - மன்மதன், பூவில் - பூமியில். (எ)

மருந்தழைந்ததார்மன்னவர்புகழுமம்மன்னன்
விருப்பின்வெள்ளிடையின்றியேகிட்டிசைமுகமாய்த
தருப்பைபாரெலாம்பரப்பியத்தருப்பையின்பெயர்பெற்
றுருத்திகழ்ந்திடும்வேள்விகளுலப்பிலபுரிந்தான்

மரு - வாசனை. (அ)

மறைவடித்தவம்மன்னவன்வயங்கியசெந்தீ
இறையுங்கண்டனனோக்கறவின்னெழில்கனிந்த
நிறைபுனற்கிறையுயிர்த்தநேரிழைதனைவேட்டான்
பிறையெனத்திகழ்மைந்தரோர்பதின்மரைப்பெற்றான்.

புனற்கிறை - வருணன். (க)

காதன்மைந்தரோர்பதின்மருங்கலைக்கடல்கடந்து
தாதலர்ந்தசெந்தாமரைக்கண்ணனைவழுத்தி
மாதர்மென்மொழிமடவரல்பங்கினன்றெளிய
ஓதுகீதைகேட்டுயர்வனமடைந்தனரன்றே.

மடவரல்பங்கினன் - சிவபிரான். (கய)

மருப்பரந்தபூங்கானகமைந்தர்சென்றடைய
விருப்பின்மீளவும்வேள்விகள்பற்பலபுரியும்

தருப்பையின்பெயர்படைத்தவத்தரணிபன்றன்பால்
நரப்புநல்லிசைபயின்முனிநண்ணினனவில்வான்.

தரணிபன் - அரசன், நரப்பு - நரம்பு (கக)

அயமகத்தினிலரசநீபடுத்தவம்மறிகள்
செயிர்கதழ்ந்துகண்டீயுகவரவுபார்த்திருக்கும்
பயில்விசும்புசெல்காலையில்வெருவரப்பாய்ந்து
வயிறுபோழும்வல்லிருப்பினெண்மருப்பினின்மாதோ.

அயமகத்தினில் - அஜமேதயாகத்தில், படுத்த - கொன்ற, மறிகள் - ஆடுகள், செயிர்கதழ்ந்து - கோபமிகுந்து, போழும் - கிழிக்கும். (கஉ)

படுத்திடுமறிகள்வேள்விபுரிந்தவன்பனிவிசும்பின்
அடுத்திடுங்காலநோக்கியழல்விழியொழுகப்பாய்ந்து
வடித்தகாரிருப்பிற்செய்தமருப்பினால்வயிறுபோழ்ந்த
தெடுத்துநாமுரைக்குங்கேட்டியிறைவவென்றுரைக்கலுற்றான்.

படுத்திடும் - கொல்லப்படுகிற, இருப்பின் - இரும்பினால், மருப்பு - கொம்பு ()

விரித்தபூங்கதிர்கள்பொங்குவிழுமணியணிவிளங்கி
அரைத்தசெம்மலயச்சாந்துமகிலும்மார்காதநாறி
உரைத்திடப்பட்டவாயிலொன்பதுபொருந்தித்தோன்றும்
புரத்தினுளொருவனுண்டுபுரஞ்சனனென்னும்வேந்தே.

மலயச்சாந்து - பொதியச்சந்தநம் (கச)

தோழனுங்கொருவனோடுசுடரும்ழ்மணியிற்செய்த
ஆழியந்தடந்தேரேறியதிரிமிழருவிமாலை
தாழ்தருமிமயச்சாரல்சார்ந்தனன்சார்ந்துமற்றோர்
மாமைழமானன்னவண்கண்மடநதையைக்கண்ணுற்றான்.

மாலை - வரிசை, மாழை - மாவடு. (கரு)

கொண்டலிற்றாழ்ந்தநீலக்குழலுநல்லெழில்சேர்திங்கள்
மண்டலமென்னத்தோன்றுவதனமுமதர்த்தகண்ணும்
ஒண்டொடிக்கரமுந்தண்முத்துரிஞ்சுவெம்முலையுங்காணூத்
தெண்டிரையமுதிற்றோன்றுந்திருவெனத்தெருமந்தானல்.

கொண்டலின் - மேகம்போல, காணு - கண்டு, அமுது - பாற்கடல், தெருமந்தான் - திகைத்தான். (கசு)

தாமரையின்றுசெங்கைத்தாமரைமலரிற்றெய்வத்
தேமலரன்னவஞ்செஞ்சீறடிநிலத்திற்றோயும்
பூமகளல்லளம்மபுவிமகளாகுமற்றிக்
காமருகோதையென்றுகருதினன்களிப்புமிக்கான்.

தோயும் - படுகின்றது. (கஎ)

ஐந்தலையரவொன்றுலேயணிபெறக்காவல்பூண்டு
மைந்துடைப்பதிஃமரென்னவரும்படைத்தலைவரோடும்
வெந்திறல்வயவரோடும்டைந்தகோர்புறத்தினின்ற
சுந்தரமாதையன்றேன்றதித்தனன்சொல்லலுற்றான்.

மைந்து - பலம். (கஅ)

கலிவிருத்தம்.

ஏர்செயல்குலிடைமுலைகண்ணுதல்
தேர்செய்கின்றகாடியிருசிந்துரம்
கூர்செயம்புகொடுமரமாகநீர்
போர்செய்யாறென்புகல்புருவேவெறேட.

சிந்துரம் - யானை, கொடுமரம் - வில் (கக)

மண்ணுங்கொங்கைமதம்படுவேழமே
எண்ணுமுள்ளமினிதுண்ணுமன்றியோர்
நண்ணுங்காளைவேழமுநல்லுயிர்
உண்ணுமாறென்னுமைய்னைக்கரோ.

மண்ணும் - அலங்கரிக்கப்பட்ட, வேழம் - யானை, கரும்பு. (உ0)

பூட்டும்பூண்வெயிற்பூங்கதிர்க்காமத்தி
மூட்டுமன்றிமொழிதருசிந்துரம்
நீட்டும்வாண்முகச்செவ்விமதியமும்
வாட்டுமாறென்னையிளைவழங்குமே

பூண்வெயில் - ஆபரணகாந்தி (உக)

அருள்விளக்குமமுதமன்னீர்குழல்
மருளவிளக்குமதன்றிமதிநிலாத்
தெருள்விளக்குஞ்சிறுநகைமையலாம்
இருள்விளக்கும்தென்கொல்விளம்புமே

குழல் - கூந்தல், தெருள் - தெளிவு. (உஉ)

முருக்கும்வண்ணமுகத்தில்விழியென
இருக்கும்வெவ்விடமன்றியெழினுதற்
குருக்குந்திங்கட்குழவியுமுள்ளுயிர்
உருக்குமாறென்னைக்கிங்குமைம்னே.

குருக்கும் - ஒளிசெய்கிற. (உங)

பாட்டுவண்டிமிர்பைங்குழற்பொன்வரைக்
கோட்டின்வீங்குருவிமுலைக்கொல்லுலைத்
தீட்டும்வேள்விழிச்சேயிழையீரிதழ்
ஊட்டுநாளென்றெனக்குரைசெய்ம்மினே.

பொன்வரைக்கோட்டின் - பொன்மலைச்சிகரம்போல, இதழ் - அதராமிர்தம். ()

தரித்ததாமரைதன்னைமுகமெனத்
திருப்பெண்மானுந்தரித்தனள்சேர்ந்தெனும்
உருத்திகழ்ந்தவொளிர்வதனத்துநீர்
இருக்கவேர்பெற்றிருப்பதெவ்வூரரோ.

ஏர்பெற்றிருப்பது - அழகுபெற்றிருப்பது. (உ௫)

துன்றுமேகஞ்சுமந்ததுமுன்னென
அன்னதேந்திமின்றற்றுகைம்மாறுபோல்
மன்னுகூந்தறரித்தவணங்கிடைக்
கன்னியீர்கடைக்கண்ணருள்செய்ம்மினே.

கைம்மாறுபோல் - பிரதியுபகாரம்போல (உசு)

அமுதநேர்மனையாரையம்மூவரும்
விமலயாக்கையின்மீதுவைத்தாரென
இமகரன்றனிடத்தின்வைத்தானெனும்
குமுதவாய்திறவாததென்கூறுமே.

மூவரும் - மும்மூர்த்திகளும், இமகரன் - சந்திரன். (உஎ)

என்றுகூறியிடருறுமேந்தலை
நன்றுநீயெழிறுயகனுமென
வென்றிமேவடல்வேல்விழிமெல்லியல்
மன்றலாகமணந்தனளென்பவே.

ஏந்தலை - அரசனை, ஆகம் - மார்பு, மணந்தனள் - கூடினாள். (உஅ)

திங்களொன்றுமுடிதிகழ்மாளிகை
தஙருகின்றதனிநகர்சார்ந்துறும்
கங்குலென்றும்பகலென்றுங்காண்கிலான்
மங்கைநன்னலமாந்தினன்மன்னனே.

முடி - சிகரம். (உகூ)

ஆர்க்கும்வண்டிணவாய்பிழிசிந்துபூங்
கார்க்கருங்குழற்காரிகைசெய்வதே
தார்ப்புயத்தவன்றனுயங்காற்றுமால்
பார்க்குமாடியம்பாவையைப்போலவே.

ஆர்க்கும் - சத்திக்கிற, பிழி - தேன். (௩0)

இன்னவண்ணமியைந்தபுரஞ்சனன்
மன்னவாய்ந்தகருமவலியினால்
உன்னுவேட்டமுவந்தனனுகவே
பொன்னன்தேர்மிசைப்போந்ததையோதுவாம்.

வேட்டம் - வேட்டையாடல். (௩௧)

சகடிரண்டிற்றருங்கதிபெற்றது
விகடமாரைந்துவெம்பரிபூண்டது

பகடுசேருமைந்தாணிபடைத்தது
முகடுசேர்கொடிமூன்றுசெறிந்தகால்.

சகடு - உருள், பகடு - பெருமை.

சாற்றுகின்றவேரச்சிற்றதைத்ததோர்
ஆற்றல்சேருமேழாவரணத்ததால்
ஏற்றபாகனியைந்தபிரசேர்மிசைப்
போற்றும்வேற்கைப்புரஞ்சனனேறினான்

ஆவரணம் - மறைவு.

காட்டின்மேவிக்கணமணித்தேரொடு
வாட்டசிங்கிவயமாசிரண்டம்பிறந்து
ஈட்டமாகவியைந்தவெம்மாக்களை
வேட்டமாடிமெலிவுறும்வேளையில்

மாக்களை - மிருகங்களை.

முத்தமூரன்மனைவிமுனிந்தநின்
சித்தமொடுங்குமொழுகுதிருக்கியும்
வித்துருமதசிதப்புவிளங்கனவுண்மை
இதசிறம்மகிழ்வெய்தியிருக்குமால்

வித்துருமம் - பவளம்.

ஆயிரத்தொருநூறென்றறைகரு
சேயனையுஞ்செப்பொருநூறொடு
மேயபதின்றுமெல்லியலாரையும்
நேயமாகவுயிர்த்தனனேரிலான்

.சேயனையும் - முருகனைநிகர்த்த மைந்தரையும், [illegible] களையும்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

அள்ளலஞ்சேற்றிற்றோன்றுமாடகப்பசும்பொற்றாமரை
வள்ளவாய்முளரித்தேறல்வரிசசிறைவண்டுவீழ்
கொள்ளைகொண்டெண்ணுமாபோற்கோரமுடிவு [illegible]
தெள்ளமுதினிதுமாந்தித்தெவிட்டலுற்றிருந்தான்.

அள்ளலஞ்சேற்றில் - குழைசேற்றில். ([illegible])

கண்கவருருவுங்கண்டுங்கயன்மலைப்பன்னகண்ணாள்
பண்கவர்மழலைகேட்டும்படாமுலைத்தடத்திற்றோய்ந்தும்
விண்கவர்பவளச்செவ்வாய்விளையமுதூறலுண்டும்
மண்கவர்குவவுத்தோளான்வருபகல்கழிப்பான்மன்னோ.

கயன்மலைப்பன்னகண்ணாள் - கயல்மீன்கள் ஒன்றோடொன்று சண்டைசெய்தாற்போன்ற கண்களை உடையவள் (௩௨)

வழிமதுக்கலுழிபோலமதுரம்வீற்றிருந்தமென்சொல்
எழில்வளர்மகளிரோடுமிலங்கியகுமரர்க்கெல்லாம்
விழவெலாமியற்றுவித்தான்விழுமியமறிகள்வீட்டிங்
பழமறைமுடிவால்வேள்விபற்பலவாற்றிஞனல்.

மதுக்கலுழிபோல - தேன்பெருக்குப்போல, மறிகள்வீட்டி—ஆடுகளைக்கொன்று.

மைந்தரொவ்வொருவர்நூறுமைந்தரையுயிர்த்தார்சொல்லும்
அந்தமிலழகுவாய்ந்தவரிமதர்நெடுங்கணூரும்
செந்துவர்மழலைச்செவ்வாய்ச்சிறுவரையுயிர்த்தார்மன்னன்
இந்திரனிவன்கொலென்னவினிதுவீற்றிருந்தானன்றே.

உயிர்த்தார் - பெற்றார். (சுo)

மின்னனூளாகமெல்லாங்கவர்ந்துவிண்கிழியவோங்கு
பொன்னெடுங்குன்றமென்னப்புணர்முலைபெருதமார்பன்
இன்னெழிலிளமையெல்லாமிறந்துபாடுறலுங்கால
கன்னியென்றொருத்திவந்துகாதலின்மரீஇயினளால்.

இறந்துபாடுறலும் - மரணகாலம் நேரிடுதலும், காலகன்னி—மிருத்யுவாகியபெண்.

அடையலர்பரவுமன்னனடைந்தவக்கன்னிமுன்னம்
தொடையணிகொழுநற்றேடிச்சொல்லுமூவுலகுஞ்செல்லக்
கடலெனுந்தானையாதிக்காதலன்பூருவன்றி
விடலருவெற்றியாளர்வெறுத்தனர்விரும்பிலாரால்.

அடையலர் - பகைவர், கொழுநற்றேடி - கணவனைத்தேடி. (சுஉ)

ஒருவரும்விரும்பிலாரென்றுற்றனனென்னைநீதான்
மருவுதல்வேண்டுமென்றாண்மகளிதைத்தீண்டேன்யானென்
றுரைசெயவொருபால்வைகாதுழலுகவெங்குமென்ன
விரைவொடுபயத்தின்மாட்டுமேவினளுரைக்கலுற்றாள்.

ஒருபால்வைகாது - ஓரிடத்தில் தங்காமல். (சுஙு)

என்னைநீமணஞ்செய்கென்னவென்னுடன்பிறந்தாய்நீயென்
றன்னவனநுசராகுமருஞ்சுரன்முதலினோரை
மன்னுமுன்றனக்குநாளுமருவுபகாரமாகப்
பன்னுவன்படர்தியென்னப்பயமவட்குரைத்ததன்றே.

அநுசர் - தம்பிமார். (சுச)

அன்றுவெம்பயஞ்சொல்வண்ணமருஞ்சுரன்றாபனூதி
துன்றிரும்பிணிகளென்னத்துலங்குறுவோர்தம்மோடும்
ஒன்றியவுலகுளோர்பாலுவந்தனளுற்றாளுற்று
நின்றனள்புரஞ்சனன்றனெடும்புரத்திருந்தாளன்றே.

உவந்தனள் உற்றாள் - மகிழ்ந்திருந்தாள். (சுரு)

## கலி விருத்தம்.

தாவாதவென்றிகெழுசண்டவேகத்தனென்னும்
மூவாத்திறல்வேந்தன்முந்நூற்றறுபதின்மர்
ஓவாவயவருடன்சென்றுடல்சிதைக்கப்
பூவார்வடிவேற்புரஞ்சனன்மேற்போர்விளைத்தார்.

தாவாதவென்றி - கெடாதவெற்றி. (௪௬)

கவ்வையகன்றுதங்கள்காவலன்கண்டிருப்ப
எவ்வமில்லாவண்ணமிருண்டமனையாரொடுவந்
தவ்வாவரொவ்வொருவராகியமாவிளைத்தார்
செவ்வியுறுவேலான்சிறிதுமறியாவகையே.

கவ்வை - குற்றம், எவ்வம் - குறை. (௪௭)

முந்நூற்றறுபதின்மர்முற்றியமராடப்
பொன்னூர்புரமழிந்துபோகப்புரஞ்சனனும்
தன்னூற்றல்விட்டிறக்குங்காலத்தன்காதலியை
உன்னுவிழிநீருகுப்பப்புலம்பினனால்.

காதலியை - மனைவியை, உன்னு - நினைத்து. (௪௮)

வேறு.

உண்ணினல்லனவுண்ணலள்சாந்தும்
தண்ணந்தாருந்தணக்கிற்புனையலள்
கண்ணகன்றிடிற்காமருசாயலம்
பெண்ணணங்குயிர்பெற்றிடவல்லளோ.

சாந்தம் - சந்தநம் (௪௯)

பாடுகிள்ளைப்பனிமொழிகேட்கிலள்
ஆடுதோகையினுடலுங்காண்கிலள்
வாடின்வாடுமகிழின்மகிழுநான்
வீடினெங்ஙனமெல்லியலுய்வளே.

தோகையின் - மயிலினது (௫0)

நெஞ்சுநொந்துக ... ரநீங்குறின்
அஞ்சுவெண்பிறைத்தீச்சுடலாற்றலள்
துஞ்சின்யான்மதிச்சூடுபொறுத்திவண்
வஞ்சியெங்ஙனுயிரொடுவாழ்வளே.

ஆற்றலள் - சகியாள். (௫௧)

என்றுவேட்டவிளங்கிளிமென்மொழிக்
குன்றின்வீங்கியகொம்மைவருமுலை
மன்றலார்குழலாளைமனக்கொளாப்
பொன்றினன்புவிபோற்றுபுரஞ்சனன்.

மனக்கொளா - நினைத்துக்கொண்டே. (௫௨)

துறைத்தலத்துறுந்தாவரம்பற்றிநின்
றெரித்திடுந்தழல்காண்டலுமேற்றவம்
மரத்தைவிட்டெழும்வான்சிறைப்புள்ளெனப்
புரத்தைவிட்டனன்பொன்னுலகெய்தினான்.

புரத்தை - சரீரத்தை. (ருங)

மகமியற்றுழிமாய்த்தமறியெலாம்
நிகழிருப்பினிற்செய்தமருப்பினால்
நகுபொன்னாட்டகநண்ணுபுரஞ்சனன்
அகங்கொண்டவுடன்றெதிர்குத்தியே.

மறியெலாம் - ஆடுகளெல்லாம், இருப்பு - இரும்பு. (ருச)

மாய்வுழித்தன்மனைவியையுள்ளலால்
சேயுயர்ந்தவிண்ணடைந்துபுரஞ்சனன்
வேயபொங்கர்விதேகத்தரசனுக்
காய்நலத்தபெண்ணாகவுதித்தனன்.

மாய்வுழி - இறந்தகாலத்தில், பொங்கர் - சோலை. (ருரு)

கன்னலங்கனிவுற்றநறுநுதல்
அன்னபேதையலர்முலைபுல்லினன்
பொன்னனங்குன்றிற்பொருகயறீட்டிய
மன்னர்மன்னன்மலயத்துவசனே.

பொன்னனகுன்றில் - இமயமலையில், கயல் - மீனக்கொடி. (ருசு)

நிழலுஞ்செய்யகோணித்திலவெண்குடைச்
செழியன்வேட்டசிறுநுதற்சேயிழை
எழுவர்மைந்தரோடெழில்வாய்ந்தவோர்
மழலைமென்மொழிமாதையுயிர்த்தனள்.

நித்திலவெண்குடை - வெண்மையாகிய முத்துக்குடை. (ருஎ)

அலையரும்புமமுதுபொதிந்துமெல்
முலையரும்புமமுதினைமுத்தமிழ்க்
கலையரும்புதண்காந்தளஞ்சாரன்மா
மலையருந்தவன்வந்துமணந்தனன்.

அருந்தவன் - அகத்தியன். (ருஅ)

கார்தழைந்தகடலைவயிற்றின்வைத்
தார்தழைந்தவகத்தியனன்பொடும்
ஏர்தழைந்தநல்லிந்துமவாகனென்
சீர்தழைந்தமுனிவனைப்பெற்றனன்.

கார்தழைந்த - கருமைமிகுந்த. (ருகூ)

உந்துநீர்நிலனோர்குடைநீழலின்
மைந்தனுளவழுதிவழங்கினன்

செந்தமிழ்ப்பசுந்தேறலுவட்டெழும்
சந்தவெற்பிற்றவம்புரிந்தானரோ.

உந்துநீர் - கடல், கந்தவெற்பு - கந்தகிரி. (சு0)

பொன்னந்தாமரைப்போதுபுரியவிழ்
கன்னியந்துறையாடிக்கனிநுகர்ந்
தன்னமென்னடைத்தேவியுமாற்றினள
மன்னுசந்தவரையினின்மாதவம்.

கன்னியந்துறை - தாம்ரபர்ணி. (சுக)

மத்தயானைமலயத்துவசனீள்
முத்தியெய்தமுழுங்கழன்மூழ்குவான்
கொத்துலாமர்க்கோதைகுறுகலும்
மெய்த்தவஞ்செயொருவன்விளம்புமால்.

மூழ்குவான் - மூழ்க. (சுஉ)

மன்றன்மாமலர்மானதவாவியின்
அன்றிருந்தனமஞ்சிறையன்னமாய்
இன்றுமேவினமிவ்வுடலித்திறன்
ஒன்றலாதவுடலமெடுத்தனம்

மானதவாவி - மாநஸஸரோவரம், மன்றல் - வாசனை, (சுங)

முல்லையன்னமுகிழ்நகைநீயுடம்
பல்லையென்னவறிந்தனடன்னையவ்
வில்லைவென்றதிருநுதன்மெய்யொரீஇ
எல்லையற்றவீடெய்தினளொன்றனன்.

மெய்யொரீஇ - உடம்பைவிட்டு. (சுச)

என்றுகூறலுமேழுயர்யானையான்
ஒன்றநீயுரையாடறெளிந்திலன்
மன்றமற்றுவகுத்துரையாயென
நன்றுரைத்தனனாதனென்பவே

ஏழுயர்யானையான் - அரசன். (சுரு)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

மின்பொழிந்திலகுகின்றவிழுமணியணியதாகித்
தென்புலமலயச்சாந்துந்தேங்கமழகிலுநாறி
ஒன்பதுவாயில்சேர்ந்தவொருபுரமென்னப்பட்ட
தின்புறவெடுத்துநின்றயாக்கையென்றறிதிவேந்தே.

மலயச்சாந்து - பொதியச்சந்தனம், நாறி - பரிமளித்து. (சுசு)

எய்துவதன்றியெய்தாதென்பதையறியான்யானே
செய்தனனென்றுட்கொண்டுசெறுவினைச்சிமிழ்ப்பிற்பட்டுப்

பொய்திகழ்புரமுண்டாக்கிப்புரஞ்சனனெனப்பட்டான்
மைதிகழ்மாயைமாதைமணந்தவப்புருடனுமால்.

செறு - வருத்துகின்ற; வினைச்சிமிழ்ப்பு - வினையாகியகட்டு. (௬௭)

அடைதருதோழன்சொல்லுமணிமனம்புரமோராக்கை
மிடையுமைந்தலைசேர்நாகமேவியபிராணன்மிக்க
படையெனும்வயவரோடுபதின்மரென்றுரைக்கப்பட்டோர்
விடயமொடுற்றுநின்றுவிளங்குமிந்தியங்கள்பத்தே.

புரம் - பட்டணம், பிராணன் - பிராணவாயு (௬௮)

புகலிருசகடுசெய்யும்புண்ணியபாவமாகும்
இகல்பரியைந்துஞானவிந்தியமாகுமைந்து
தகைமைசேராணியாகுஞ்சாற்றியவாயுவைந்தே
நிகழ்தருகொடிமூன்றாகுஞ்செப்புமுக்குணங்களாமே.

சகடு - சக்கரம், வாயுவைந்து - பஞ்சவாயுக்கள். (௬௯)

பரித்திடுமோரச்சென்றல்பகுதியாவரணமேழு
பொருத்தியதாதுபாகன்புந்திதேராக்கைகாடு
தரைத்தலமிரண்டாமம்புசார்விருப்பொடுவெறுப்பாங்
குருத்திகழ்வேட்டைமாக்களுரைமுதலாயவைந்தே.

அச்சு - உயிர், ஆவரணமேழு - சத்தாவரணம், குரு - ஒளி. (௭0)

வண்ணமார்காலகன்னிவளர்சணாசண்டவேகம்
எண்ணுறுகாலமேனியிருடருமனையாரோடும்
அண்ணல்பாலமர்செய்முந்நூற்றறுபதென்றுரைசெய்வீரர்
நண்ணிருபொழுதென்றேதுநாள்களென்றறிதிவேந்தே.

சண்டவேகம் - யமன்கொடுமை. (௭௧)

விடுத்திடல்வேண்டும்வேந்தேமேவருகின்றபோகத்
திடைப்படுதருமமெல்லாமிருள்படப்பொருளுங்கானில்
படுப்பவனிசையிற்சென்றுபடுவதோர்விலங்குபோலும்
அடுப்பருந்துறக்கத்தின்பவவாவினைவிளைக்கின்றாரல்.

துறக்கத்தின்பம் - சுவர்க்கலோகசுகம். (௭௨)

ஆற்றியவாக்கைவீயுமாயினுமதனுணின்று
தோற்றியவிலிங்கமென்றுசொல்லுமத்தனுவீயாதால்
மாற்றருங்கருமமெல்லாமனச்செயலாகலானே
ஏற்றிடுமின்பதுன்பமிலிங்கநற்றனுவுக்காமே.

வீயுமாயினும்-நீங்குமாயினும், வீயாது—அழியாது, இலிங்கநற்றனு—சூக்குமசரீரம்

அமைதனின்மறைந்துநின்றவணிமதிபோலவென்றும்
சுமையுறுதூலமென்னத்தோற்றியவுடலினின்றும்

இமையவரானும்வெல்லா திலங்குறுமிலிங்கமென்னச்
சமைவுறுதனுவின்றன்மைசாற்றுதுங்கேட்டிவேந்தே.

அமை - அமாவாசை (எச)

ஐவகைவாயுவீரைந்தாகியபுலன்கள்புந்தி
மைவகையையஞ்சேருமனத்தொடுமெருவிலிங்க
மெய்வகைப்பதினேழாகும்விளங்கியதநுவின்செய்கை
பொய்வகையாகுஞ்சீவன்பொருந்தினன்போலுமாதோ.

தனுவின்செய்கை - சரீரத்தின்தன்மை. (எரு)

மனத்தினுக்குற்றசெய்கைசீவனை மருவிநிற்றல்
கனத்துறுகதியவ்வானிற்கநிர்மதிக்கணுகல்போலும்
புனத்துறுசலூகையென்னப்பொருந்தியலிங்கம்வேறோர்
நினைத்துறுமாக்கைபற்றிநீங்கிடுநின்றயாக்கை.

கனம் - மேகம், சலூகை - அட்டை. (எசு)

ஆதலாலுக்கைசேராதறிவொடுபொருந்தவெண்ணின்
கோதுறும்லிங்கமென்றுகூறுடன்மாய்க்கல்வேண்டும்
ஓதுடல்பொய்யதேனுமுறுமுணர்வின்றிநீங்கும்
ஏதமின்ஞானம்வந்துற்றிலங்குமந்நாளின்மாதோ.

ஏதம்இல் - குற்றமில்லாத. (எஎ)

அயர்தருவேள்வியின்பமழிவுறுமதனைவெஃகல்
புயலுறழ்மேனிநம்பன்பொன்னடிக்கமலம்போற்றி
உயர்வறவுயர்வீட்டின்பம்பெறுதிநன்றுணர்ந்தோயென்றுப்
பயிலுறுதிவவினல்யாழ்ப்பண்ணவன்போயான்மன்றே.

வெஃகல் - விரும்பாதை, புயலுறழ்மேனி நம்பன் - திருமால் (எஅ)

பண்ணவனகலவொன்றும்பற்றிலானுகிச்சொகட்
கண்ணனையுளத்துநாடிக்கபிலனதிருக்கைசார்ந்து
விண்ணவர்வழுத்தும்வண்ணம்விழுத்தவம்பலவுமாற்றி
அண்ணலந்தனிவீட்டின்பமண்மினனரசரேறே.

இருக்கை - ஆசிரமம், அண்மினன் - அடைந்தான் (எகூ)

பெறலருவீடுபெற்றபிராசீனபரிகியென்று
அறவர்சொல்லவிர்த்தானன்னென்றைநினன்றுமமுற்றுன்
நிறைபுகழ்ச்சரிதங்கேட்போர்நினைத்தவைபெறுவரென்று
விறலுறுமயித்திரேயன்விதுரற்குவிளம்பினுனல்.

என்று - என்று. (அ0)

பிராசீனபரிகி அவிர்த்தானன் கதையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௩எகூ.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.



## ஆறாவது
## பிரசேதசாக்கியர் பதின்மர் கதையுரைத்த வத்தியாயம்.

### தரவுங்கொச்சகக்கலிப்பா.

மழலையிளஞ்சுரும்பர்முரன்மலர்த்துளவோன்றனைவழுத்திக்
குழவிமதிபுனைசடையோன்கூறியகாதையைக்கேட்டு
விழைவினொடுமேற்றிசையின்விழுத்தவஞ்செய்பதின்மர்கதை
மொழிதியெனும்விதுரனுக்குமொழிந்தனன்மித்திரைமகனே.

சுரும்பர்முரல்-வண்டுகள்சத்திக்கிற, குழவிமதிபுனைசடையோன்-சிவபெருமான்.

பரவரியதனிவீடுபடர்தருபார்வேந்தனருள்
ஒருபதின்மர்தவம்புரிந்தாரொருபதினாயிரம்பருவம்
அருமணிச்செஞ்சுடர்விரிக்குமனந்தபணாடவிக்கிடந்த
இருநிலமோரடிக்கரந்தவிறையவனைமனத்துணர்ந்தே.

அநந்தபணாடவி - ஆதிசேடனது படக்காடு. (உ)

பாய்புனலிற்றவம்புரியும்பதின்மரெதிர்முதியமுகை
வாய்விரிபைந்துளவமலர்மாலைமதுத்துளிதூற்றக்
காய்கதிர்சூழ்குன்றிவர்ந்தகருமுகில்போற்கலுழன்மிசை
ஆயிரம்வாய்ப்பாம்பணையானநந்தன்றோன்றுற்றான்.

மதுத்துளி - தேன்றுளி, கருமுகில்போல் - கரியமேகம்போல. (௩)

உந்திவிரிசெங்கமலத்தூடெழுந்தபொலந்தாது
சிந்தினபோற்பொற்காஞ்சிதிகழாகைநிலவுமுக
சந்திரமண்டலத்தரும்பத்தாமரைக்கணருள்பொழிய
வந்தெதிரேநின்றபழமறைமுதலைநனிவியந்தார்.

பழமறைமுதலை — திருமாலை (௪)

எழுதாதமறைமுடிவினிருந்ததனிச்சுடர்நமக்கு
விழிகாணவந்ததெனவெள்ளநீர்நின்றெழுந்து
தொழுதார்கண்ணீர்மாரிசொரிதரநெஞ்சகமுருகி
அழுதார்மீண்டானந்தவெள்ளத்தினாழ்ந்தனரால்.

மறைமுடிவு - வேதாந்தம், மாரி - மழை. (௫)

குளிர்ப்புறுதெண்ணீரினிடைக்குளித்தரியதவம்பலநாள்
விளைத்தவருட்டண்ணென்னவிழிக்கருணைமாரிசொரிந்
தளித்திடுதும்விழைந்தவரமறைமின்களென்னநறுந்
துளித்ததுழாய்முகிலுரைப்பத்துதித்தனர்மாதவருரைப்பார்.

நறு - தேன். (௬)

## அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கள்ளுடைந்தொழுகுதண்பூங்கற்பகமெதிர்ந்தவண்டு
விள்ளுபூந்தருவேறொன்றுவிழையுமோகமலச்செங்கண்
வள்ளனிற்காண்டலொன்றேவரனெனவணங்கிவாழ்த்தப்
புள்ளரசுயர்த்தபெம்மான்புகன்றனன்மகிழ்வுகூர்ந்தே.

விழையுமோ - விரும்புமோ, வரன் - வரம். (எ)

வானகமடவாள்பாரில்வந்தனளொருத்திமன்றற்
கானிடைத்தவஞ்செய்கின்றகண்டுமொழுனிவற்புல்லி
நீனிறவிசும்பைவென்றநெறிந்துநெய்த்திருண்டுவார்ந்து
தேனொடுசுரும்புழு சுஞ்செறிகுழனங்கையீன்றாள்.

சுரும்பு - வண்டு. (அ)

உழையுழையொதுங்கிநீண்டவோடரித்தடங்கண்வண்டா
மழலைபைந்தேனுச்செவ்வாய்மன்னுதண்டளிராவாய்ந்த
குழைதிகழ்கொடியிற்றோன்றுங்கோதையைநெகிழ்ந்துபூந்தேன்
பொழிதருநிழல்வைத்தீன்றாள்போகுயர்விசும்புபுக்காள்.

உழையுழை - இடந்தோறும், மழலை - குதலைச்சொல், குழை - தளிர். (கூ)

வைத்திடுநெறியகோதைமாரிடையெனும்பேர்பெற்றுத்
தத்தொளிகிளைக்குந்தண்ணந்தடங்கதிர்மதியங்காப்பக்
கொத்துறுதருக்கட்கெல்லாங்கூறுமோர்பெண்ணென்றாகிப்
புத்தமுதோடுதோன்றும்பொன்னெனப்பொலிகின்றாளால்.

நெறிய - நெறித்தலையுடைய, கோதைமார் - கூந்தலையுடைய பெண்கள், பொன்
என - திருமகள்போல. (௧0)

ததைமலர்செறிந்துதாழ்ந்ததடஞ்சினைத்தருக்கடாமே
மதாரிபாந்தவுண்கண்வல்லியைவழங்குநீவிர்
பதின்மரும்பவளச்செவ்வாய்ப்பாசிழையாளைவேட்டோர்
புதல்வனையீன்றவேலைப்புவியெலாம்புரக்கல்வேண்டும்.

ததை - நெருங்கின, பாசிழையாள் - பசும்பொன்னாலாகிய ஆபரணங்களையணிந்தவள், வேட்டு - மணம்புரிந்து. (௧௧)

எண்ணுபத்திலக்கயாண்டவ்வேழையோடின்பந்துய்த்து
மண்ணகம்புரந்துவீடுமருவுதிர்நீவிரென்று
அண்ணலம்பசும்புட்பாகனருளினிற்புகன்றுபோகப்
பண்ணவற்பரவிநீங்கிப்பதின்மருநகரஞ்சார்ந்தார்.

ஏழை - பெண், துய்த்து - அநுபவித்து, பசும்புட்பாகன் - திருமால். (௧௨)

கருங்கடல்வேலிஞாலங்காடுகொண்டிருத்தல்காணுப்
பரந்திடுகனலுங்காலும்படைத்தனர்விடுத்துவல்லே

சுரும்புசூழ்மரங்களெல்லாஞ்சுட்டனர்சுடலுநின்ற
மரஞ்சுடலொழிமினென்றுமலரவன்மறுத்தான்மன்னோ.

காணூ - பார்த்து; கால் - காற்று, சுரும்பு - வண்டு, மலரவன் - பிரமன். (கரு)

அளிக்குலம்பரந்துபாடவரும்பவிழ்வல்லிபுல்லும்
எளிச்சினைத்தருக்கடம்மைநான்முகன்சென்றுநண்ணி
விளைத்தெரியூட்டுகின்றவெர்திறல்வேந்தர்க்கன்பால்
வளர்த்தபொன்கொடியைநீவிர்வழங்குமினென்றுசொற்றான்.

அளிக்குலம் - வண்டுக்கூட்டம், வல்லி - கொடி. (கச)

அரககிதழ்முளரிமேலானரசர்பானண்ணிஞாலப்
பரப்பெலாம்புரப்பீர்நீயிர்பதின்மருங்கோடலாரும்
தருக்குலம்வளர்த்ததெய்வத்தாமரைமுகத்திஞளை
விருப்புறமணத்திரொன்னவேட்டனரென்பமன்னே.

அரக்கு - செந்நிறம், முளரி - தாமரை. (கரு)

கலிவிருத்தம்.

மயிருமன்னவராடுபாந்தளின்
பையினைவென்றகல்பருமவல்குலாள்
வெய்யபூணிளமுலைவிருப்பிற்புல்லினர்
வையகநிழற்றினர்மாலைவெண்குடை.

பாந்தளின்பையினை - பாம்பின்படத்தை, பருமம் - மாதரிடையணிகளிலொன்று

கொத்தலர்துளவணிகொண்டல்கூறிய
அத்திறமாதொடுமமராண்டினில்
பத்துநூறாயிரம்பருவம்வேலையின்
நத்துநீர்சூழ்மித்தரணிதாங்கினர்.

துளவணிகொண்டல் - திருமால், வேலை - கடல். (கஎ)

மன்னவன்சாக்குடமனுவின்காலத்துப்
பன்னுபல்லுயிரெலாம்படைத்ததக்கன்முன்
உன்னுமுழ்வினையினுலுடலநீத்தனன்
துன்னுசீர்ப்பதின்மர்தந்தோன்றலாயினன்.

சாக்குடமனு - சாக்ஷுஷமநு. (கஅ)

ஈன்றவத்தக்கனையினிதுநோக்கினர்
ஆன்றவிவ்வுலகநீயரசுசெய்கெனக்
கான்றபொற்சுடர்முடிகவித்துக்கானகம்
தேன்றருதாரவர்சென்றுமேயினர்.

முடிகவித்து - முடிசூட்டி. (கக)

இல்லறஞ்சில்பகலியற்றிவைகலால்
தொல்லைநல்லறிவெலாந்தொலையப்பெற்றனம்

வல்லையின்முத்திசேர்வழியுரைக்கென
நல்லிசைநாரதனண்ணிக்கூறுவான்.

வல்லை - விரைவில். (உ௧)

கார்முகில்வண்ணனைக்கருதிலார்களை
ஓரிருகால்விலங்கென்னவோதுவர்
கூரும்வாலறிவினரென்றுகோதிலா
நாரதமாமுனிநவிலுமீட்டுமே.

கார்முகில்வண்ணனை - திருமாலை, வாலறிவினர் - மெய்யறிவினையுடையவர் ()

விரிதருதண்புனல்வேரிற்பெய்திடின்
மரனெலாந்தழையுமாமானமாய்விலா
முருகுலாந்தண்டுழாய்முகல்வற்போற்றிடின்
உரவுநீருலகெலாமுவக்குமென்பவே.

மானை - நிகர்க்க, முருகு - வாசனை, உரவுநீர் - கடல். (உஉ)

கந்தரம்வான்மிசைக்கவினவொல்லையின்
வந்தின்மறைவதுபோலமாலுழைச்
சந்தரவுலகெலாந்தோன்றிநின்றபின்
அந்தமுமவனுழையடையுமென்பவே.

கந்தரம் - மேகம், கவின - அழகாக, ஒல்லை - விரைவு. (உங)

வெய்யவன்கதிரினால்வீழுந்தண்புனல்
செய்யவக்கதிரினாற்சேருநாசம்போல்
கையுறுமுலகெலாங்கருணைமாலுழை
ஓய்யெனத்தோன்றிப்பின்னொன்றுநாசமே.

ஒய்யென - விரைவாக. (உச)

பாடுமின்பசுந்துழாய்ப்பரமன்பல்புகழ்
சூடுமின்மாயவன்றாயதாண்மலர்
நாடுமின்றுகணையானைநன்கெனப்
பீடுசானாரதன்பெயர்ந்துபோயினான்.

பீடு - பெருமை. (உரு)

பதின்மருமாதவம்பலபுரிந்துவான்
நதிதருமால்பதநண்ணினாரென
விதுரனுக்கியம்பினன்வெளிறுநீங்கிய
மதியினிற்சிறந்தவம்மயித்திரேயனே.

வெளிறு - அறியாமை. (உசு)

எனவுயர்சுகமுனியெடுத்தியம்புவான்
வினைமுதறடிந்தவவ்விதுரன்வல்லைபோய்

நனைகவுட்புழைக்கைமாநகரநண்ணினன்
தனிவனம்புகுத்தினான்றம்முனானையே.

புழைக்கைமாநகரம் - அத்திநபுரம். (௨௭)

பெரும்புகழ்சேர்பிரசேதசப்பெயர்
பொருந்தியபதின்மர்தம்பொருவின்மாக்கதை
தெரிந்துறமொழிபவர்செவியின்மாந்துவோர்
அரும்பெறனலநுகர்ந்தடைவர்முத்தியே-

அரும்பெறனலன் - பெறுதற்கரிய இன்பம். (௨௮)

ஒன்னலர்வணங்குமுத்தானபாதனும்
மன்னவன்மரபினைவழங்கினேனவன்
முன்னவன்மரபினிமொழிவல்கேளெனப்
பன்னினன்முனிவரன்பார்த்திபற்கரோ.

ஒன்னலர் - பகைவர். (௨௯)

போதினான்முகன்றொழும்புனிதமால்கதை
காதலானிச்சலுங்கருததுறுமோ
மாதவம்புரிதருமறைவல்லீரெனச்
சூதமாமுனிவரன்சொல்லன்மேயினான்.

போதினான்முகன் - தாமரைப்பூவிலிவீற்றிருக்கிற பிரமன், நிச்சலும் - நாள்தோறும் (௩௦)

பிரசேதசாக்கியர் பதின்மர் கதையுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௪௦௯.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.



# ஐந்தாங்கந்தம்.

## முதலாவது.

## பிரியவிரதன் மரபுரைத்த வத்தியாயம்.



எழுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

கேட்டிவாளரசமகதியாழ்முனிபாற்கேட்டனன்றன்னிலையறிந்த
வாட்டிறற்பிரியவிரதன்வண்டறைதார்மன்னவர்மணிமுடிவணங்கச்
சேட்டிளம்பரிதியினொளிவெயில்கிளைக்குந்திருமணிநெடுமுடிபுனைந்து
சூட்டுவாளரவஞ்சுமந்தபார்புரந்துதூயமுகில்பதமடைந்தனனால்.

கேட்டி - கேட்பாயாக, மகதியாழ்முனி-நாரதன், சூட்டுவாளரவம்-ஆதிசேடன். ()

என்னலுமிறைவன்முழுதுணர்சுகன்றனைநிகரும்வாள்மதிமுகநோக்கித்
தன்னிலையறிந்ததாமமேலவ்வேந்தனயநவொளிபொழிமணிச்சுடிகைப்
பன்னகஞ்சுமந்தநெடுநிலம்பரித்தபான்மையென்பரவைமண்பரித்தும்
கன்னியந்துளவோனுயர்பதம்யாங்குக்கலந்தவாறுறைக்கவையான்.

மணிச்சுடிகைப்பன்னகம் - ஆதிசேடன், பரித்தல் - சுமத்தல். (௨)

குளிறுவெண்டரங்கக்கருங்கடன்முகந்தகொண்டல்வாய்பொழிந்தவெண்முத்
தும், ஒளிறுசெம்மணியுமருவிகொண்டிறங்குமோதைபெற்றெழுகுழுமதகத்
துக், களிறுகண்படுக்குங்காந்தளஞ்சாரற்கந்தமாதனநெடுங்குன்றம்
வெளிறிலாக்கேள்விமன்னவனடைந்துவிழுத்தவமியைந்தனன்விழைந்தே.

குளிறு - ஒலிக்கின்ற, ஒளிறு - பிரகாசிக்கிற, கண்படுக்கும் - நித்திரைசெய்கிற, வெளிறு - அறியாமை. (௩)

வியலிருவிசும்பினிமையவரெரிபொன்விமானமெண்ணிறந்தனதொடர்ந்து
வயின்வயின்மிடையவுயிரெலாம்பூத்தவானவன்கதிர்மணிவிமானம்
உயர்வெளியளக்கும்பரிதிபல்கோடியுதித்தெனவொள்ளொளிதழைந்து
புயன்முகங்கிழித்துமன்னவன்றவஞ்செய்பொலங்கிரிப்புறத்திறுத்தன்றே.

வயின்வயின் - இடந்தோறும். (௪)

கோத்தவெண்டிரையில்வளர்தருபச்சைக்குழவிதன்னெழில்வருமுந்தி
பூத்தசெம்முளரிமலரினோன்வருதல்புரவலன்கண்டெழுந்திறைஞ்சி
ஏத்தினனேத்தவாட்டிறற்குரிசிலென்னைநீயருந்தவம்புரிதி
காத்தியாலொருவெண்குடைநிழல்பரப்பிக்கண்ணகன்புவியெனப்பகர்வான்.

வளர்தரு-கண்வளர்கின்ற, பச்சைக்குழவி-பச்சைக்குழந்தை, மலரினோன்-பிரமன்.

எண்ணுறுகாமமுதற்பகையடக்காரிருள்படுகானகத்தேகி
நண்ணினுமாயைவலையினைக்கடவார்நவிற்றுவெம்பகைநலிந்தறிந்தோர்
மண்ணகம்புரந்துமகவொடுமகிழ்ந்துவைகினுமாயையைமருவார்
பண்ணுறுகருமங்களுவெனப்பார்த்துப்பார்புரந்தருளெனப்பணித்தான்.

காமமுதற்பகை - காமமுதலாகிய அறுபகை, அவை - காமம் குரோதம் லோபம் மோகம் மதம் மத்ஸரம், என்பன. இவற்றை அரிஷட்வர்க்கம் என்பர் வடநூலார். ()

மோட்டுநீருலகமுழுவதும்பூத்தமுழுமுதல்பணிக்கவுண்மகிழ்கூர்ந்
தூட்டரக்கெறிசெந்தாமரையனையவொண்மலர்க்கரத்தினூற்றந்தை
சூட்டியபசும்பொற்சுடர்முடிபுனைந்துசூட்டராச்சுமந்தபாரேழும்
பாட்டுவண்டிமிருநறுமலர்த்தெரியற்பணிமதிக்குடைகவித்தளித்தான்.

பணிக்க - கட்டளையிட, சூட்டரா - உச்சிகொண்டையையுடைய பாம்பு, (ஆதிசேடன்.) (எ)

ஒருதனியாழிவெஞ்சுடர்மறைந்தவோர்புறத்திருட்குறும்பெறிவான்
விரைசெலமான்றேர்ப்பரிதியிற்கடாவிமேருவைவலங்கொளத்தடந்தேர்
எரிமணியாழியிருநிலங்கிழிபடவெவ்வுலகையுமேயெனக்கிடந்த
பொருதிரையாழியாயமற்றவன்றன்புகழினையெங்ஙனம்புகல்கேன்.

மான்றேர் - குதிரைகட்டியதேர், கடாவி - செலுத்தி. (அ)

எழுதினமாறியெழுமுறைபுகுந்தருமிடைவெளியிமயழுதிவென்ன
விழைவொடுகடந்தேர்ந்தடந்தமய்மேவுதகவின்விசயவசகருமமெனன்றுரைக்கும்
தழைபுகழ்ப்பிரிமுன்னுயிர்த்தநல்லனங்கைத்தழுவியோர்தயங்கெழிற்பெண்ணோ
டழகுசெயாகசினிப்பிரன்முதலாமையிருபதல்வரையளித்தான்.

விழைவொடு - விருப்பத்தோடு, உயிர்த்த - படைத்த. (கூ)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆரழுறுமந்சான்றவாங்கவாதம்பன்மூவர்
கூரழல்சாய்ந்துநின்றதறிப்பருந்தவதரார்
ஓரெழுதீவமோரேழ்புதல்வருமுவப்பவீந்தான்
காரெழுமின்னினன்னகாய்கதிர்ப்புலவுவேலான்.

தீவம் - தீவு. (க0)

காவலனுயிர்த்தமாதைக்காவியற்களித்தானன்றேன்
கோவைவெண்முத்தசலூரற்குவிமுலையணங்கைப்புல்லி
ஆவியந்துகிலாடைப்பவயானையையின்றுணர்ந்த
மாவகிர்நெடுங்கண்ணாளையாதிமாமணஞ்செய்தானால்

உயிர்த்த - பெற்ற, காவியற்கு - சுக்கிரனுக்கு, ஆவி - புகை. (கக)

மத்தவெங்களிநல்யானைமனுமகன்பின்னும்வேறோர்
புத்தமுதனையமாதைப்புணர்ந்தனன்புணரவன்றோட்
குத்தமன்றாமதன்பாருரைகரும்பரைவதனிம்மூவர்
வித்தகர்மனுக்களாவோர்விளங்கவந்துதித்தாரன்றே.

புத்தமுது - புதியஅமிர்தம். (கஉ)

துதிதருதீவோரேழுந்தொடுகடலேழுமாக
முதுநிலவரம்புகண்டமுதல்வனென்றெவரும்போற்றப்
பதினொருபத்தினோடேபடாந்துறுகோடியாண்டு
விதிமுறையுலகங்காததுமேவினன்மீட்டுங்கானம்.

தொடு - தோண்டப்பட்ட. (கங)

மேவருந்தவத்தோர்கூறுமெய்ம்மறைகேட்டுநாளும்
பூவையுங்கிளியும்பேசும்பொதும்பர்சூழிமயச்சாரற்
றீவியமழலைச்செவ்வாய்ச்சிறுவரைப்பெறுதல்வேண்டி
நாவலந்தீவுகாப்போனற்றவமியற்றினானால்.

பொதும்பர் - சோலை, தீவியம் - திவ்வியம். (கச)

அற்றமில்புகழ்சேர்வைவேலாக்கினித்திரனென்றோதும்
வெற்றிநாவலந்தீவாளும்வேந்துசெய்தவமுட்கொண்டான்
பொற்றருநிழல்வாழும்பூருவசித்தியாதி
உற்றநாகளிர்பாடவுவந்தனன்மலரின்மேலான்

மலரின்மேலான் - பிரமன் (கரு).

ஏடவிழ்கமலத்தண்ணலின்சுவையமுதமூறப்
பாடினனின்றசெவ்வாய்ப்பவளவாயமைநோக்கி
நாடினன்றவஞ்செய்கின்றநாவலந்தீவினர்க்குத்
தோடவிழலங்கன்மாலைசூட்டெனவருளினானால்

பாடினன் - பாடி (முற்றெச்சம்). (கசு)

அன்னமுமயிலும்போலவராசினாங்குமரர்க்கெல்லாம்
முன்னவனாகிநின்றமுரிவேற்நாகோமுன்னாப்
பொன்னிணர்வல்லியென்னப்பூருவசித்தியென்பாள்
மின்னெனவமுதமென்னவிண்கிழித்தெய்தலுற்றாள்

பொன்னிணர்வல்லி - பொற்கொடி (கஎ)

அளைபுரையரியேறன்னானைப்புகுவீற்றிருந்தமார்பும்
வளைகடலவனிதாங்கிவரையெனப்பணைத்ததோளும்
தளையவிழ்ந்தலருஞ்செய்யதாமரைக்கண்ணுமுள்ளாள்
களிகொளநோக்கிநெஞ்சங்கலுழ்ந்தனளியாநின்றாள்

அளை - குகை, பணைத்த - பருத்த (க.அ)

மழைகிழித்தெழுந்தமின்போல்வந்தனணின்றமாதின்
குழைகிழித்தொழுகுங்கண்ணுங்குறுநகைப்பவளவாயும்
இழைகிழித்தெழுந்தகொம்மையிளமுலைத்தடமுநோக்கி
அழலுயிர்த்தொளிறும்வேலாளுற்றலனுயிர்தேறல்.

வந்தனள் - வந்து, (முற்றெச்சம்) கொம்மை - திரட்சி. (ககூ)

ஏந்தெழிற்பிறைவெண்கோட்டவிளங்களியானையன்னான்
கூந்தலம்பிடியினின்றகுறுநகைக்குமுதச்செவ்வாய்
மாந்தளிரன்னமேனிமழைமதர்நெடுங்கட்பேதை
சாந்தணிந்தேந்துகொம்மைத்தடமுலைதழுவினுனல்.

கோட்ட - கொம்பினையுடைய, பிடி - பெண்யானை. (உ0)

கொந்தழற்குருதிவேலான்கொய்ம்மலரகலந்தோய்ந்த
அந்தளிரனையசெவ்வாயணியிழைவயிறுவாய்த்த

நந்தலில்சிறப்புமேயநாபியேமுதல்வராய
மைந்தரொன்பதின்மர்மாலைமதியெனவளர்ந்தார்மன்னோ.

அகலம் – மார்பு, வயிறுவாய்த்த - பெற்ற. (உக)

உரைசெயுநாபிவைவேலுற்றகிம்புருடன்வண்மை
அரிதிகழ்சேதுமாலனணியிளாவிரதனன்மை
மருவுபத்திராச்சுவன்னேர்வாய்ந்திடுமிரம்மிகன்வெங்
குருதிமேவிரண்மயன்சீர்க்குருவெனுமவர்கள்பேரே.

அரி - ஒளி. (உஉ)

மேவலர்க்கடந்தவொள்வேல்வேந்தழனுமத்தோன்றல்
ஓவவில்சிறப்புவாய்ந்தவொன்பதுவருடமாக்கி
நாவலந்தீவுதன்னைநாபியேமுதலினோர்க்குக்
கோவடுகுருதிவைவேற்குமரர்பேராகவீந்தான்.

மேவலர் – பகைவர், கடந்த - வென்ற. (உங)

நவில்கருங்கடல்சூழ்கின்றநாவலந்தீவென்றோதும்
புவிமிசைமனையாளாயபுருவசித்தியோடும்
கவினொடுபத்தினோடுகலந்தறுகோடியாண்டு
குவைபெறுமின்பந்துய்த்தே தான்குறுகினன்வானத்தன்றே,

கவினொடு - அழகோடு. (உச)

அழிவில்சீர்நாபியாதியாகுமொன்பதின்மர்செம்பொன்
எழிறிகழ்மேருவீன்றவிளநகைப்பவளச்செவ்வாய்
விழைவுறுமேருத்தேவிமுதலமென்கொடியனாரோர்
தழையுமொன்பதின்மர்தம்மைத்தனிமணமியற்றினால்.

விழைவுறு - விருப்பத்தையுண்டாக்குகிற. (உரு)

ஆற்றல்வேனாபிவேள்வியாற்றலுங்கருணைகூர்ந்து
காற்றெறிசிறைப்புட்பாகன்கருமுகிலென்னத்தோன்ற
மாற்றருநின்போன்மைந்தன்வழங்கெனயாமேவந்து
தோற்றுதுமென்றுவேதத்தொன்முதலருளினால்.

ஆற்றல் - வலி, புட்பாகன் - திருமால். (உசு)

மடவரன்மேருத்தேவிவனமுலைபொருதுவிண்ட
தொடையலங்கோதைதாழ்ந்துதுயல்வரப்பணைத்துவீங்கும்
அடல்கெழுதிணிதோணபிக்காழியந்தடக்கையானே
இடபனென்றுலகமெல்லாமேத்துறத்தோற்றஞ்செய்தான்.

மடவரல் - இளமைபொருந்திய, துயல்வர - அசைய, ஆழியந்தடக்கையானே- திருமாலே. (உஎ)

பயந்தநன்மகவென்றோதும்பசுந்துழாயிடபனென்போன்
சயந்தியென்றுரைக்குமாதைச்சதமகனளிப்பவேட்டு

வயந்தருவளஞ்செறிந்தமாநிலமகிழ்ந்துகாப்ப
நயந்துநற்றவஞ்செய்வான்கானண்ணினனுபிமாதோ.

பயந்த - பெற்ற, சதமகன் - இந்திரன், கான் - காடு. (உ அ)

மழைவளஞ்சிறப்பமுந்நீர்மாநிலவளாகங்காத்து
விழைவெறிந்துலகமெல்லாமெய்ந்நெறிபடரும்வண்ணம்
பழமறைமுடிவுகூறும்பாடல்சாலிடபற்காங்கு
நுழைபுலன்வாய்ந்தமைந்தர்நூற்றுவர்தோற்றஞ்செய்தார்.

முந்நீர் - கடல், வளாகம் - இடம். (உகூ)

மருவருந்துறவுபூண்டமைந்தரொன்பதின்மர்செல்ல
உரைசெய்வேதியராயெண்பத்தொருநிறக்குமரர்செல்லப்
பரதனென்றுலகமேத்தும்பரிதிவேன்மைந்தனேனை
அரசிளங்குமரர்தம்மோடகனிலம்புரவுபூண்டான்.

புரவு - காத்தற்றொழில். (ஙய)

மன்னியதுறவறங்கள்வழங்கியும்வங்ரமாதி
உன்னியதேயத்தூமருணர்விலாப்பெயரேபோலத்
துன்னிபுமுலகுளோர்க்குத்தொலைவில்பேர்வீடுசேரும்
நன்னெறிதெரித்துமுந்திநண்ணினனிடபன்மாதோ.

தெரித்தும் - தெரிவித்தும். (ஙக)

புனைதலடப்பரதனென்போன்போற்றுதன்பெயரேபெற்றுப்
பனிவரையெல்லையாமிப்பாரகம்பொலியக்காத்துத்
தனியெழில்சேரும்பஞ்சசனியிளமுலையிற்புல்லி
வனைகழற்சுமதியாதிமைந்தரைவரைப்பெற்றானல்.

புனை - அலங்கரிக்கப்பட்ட, புல்லி - தழுவி. (ஙஉ)

எவ்வளைக்குலமுமஞ்சவேந்தெழிற்றிணிதோண்மைந்தர்
ஐவருமவனிகாப்பவைவரையகத்துள்வென்றோன்
கைவரையழைப்பவந்தகாரணற்கன்புபூண்டு
மைவரையருவிச்சாரன்மருவினன்மன்னவென்றான்.

ஐவரை - பஞ்சேந்திரியங்களை, கைவரை - யானை, (கஜேந்திராழ்வான்). (ஙங)

பிரியவிரதன் மரபுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—சசஉ.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---

## இரண்டாவது

## பரதன் சரித்திர முரைத்தவத்தியாயம்.



### கலிவிருத்தம்

வரதன்மாயன்மலரடிக்கன்புசெய்
பரதன்செய்திறம்பன்னுதிநீயென
விரதமேவியவேந்துவினாதலும்
சரதமாதவத்தோனதுசாற்றுமால்.

பன்னுதி - சொல்லக்கடவை. (க)

பந்தநீக்கும்பரதன்பருப்பதத்
தெந்தவண்ணமாலெய்தநினைக்கினும்
அந்தவண்ணமாலாங்குறவன்புசெய்
புந்தியான்புலகன்னுழைப்போயினான்.

பந்தம் - பிறவித்தளை. (உ)

புக்குறைந்துபொருவருமாதவம்
மிக்கியற்றிவீடெய்துறவைகுநாள்
தக்கயோகத்தின்றன்மைதகர்வுற
அக்கணுற்றதறைவனென்றோதுவான்.

பொருவரு - ஒப்பற்ற. (ங)

### அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

கொண்டலிற்பிளிறும்யானைக்கூர்நுதிமருப்பிற்றோன்றி
வண்டொடுசுரும்பர்மூசமன்றலம்பொதிவாய்விண்டு
கண்டனுண்மடற்றேன்சிந்துங்கண்டகியென்னும்யாற்றுத்
தண்டுறையொழுகுநன்னீராடுவான்றலைச்சென்றானால்.

கொண்டலின் - மேகம்போல, மருப்பின் - கொம்புபோல, மூச - மொய்க்க
கண்டல் - தாழை. (ச)

நிரையுளையரிமாவென்று நிழல்சுளிகளிறுநாடி
உருமெனவுரறியார்க்குமொலிசெவிபடுதற்கஞ்சிக்
கருநனிகலங்கியங்கட்கவையடியிளமானீன்ற
ஒருபசுங்கன்றுநீரோடொழுகியாங்குற்றதன்றே.

நிரை - வரிசை, உளை - புறமயிர், அரிமான் - சிங்கம், சுளி - கோவிக்கிற, உரு
மென - இடிபோல, கவையடி - பிளவாகிய அடி. (ரு)

கைம்முகந்தெடுத்துமென்மான்கன்றுயர்கரையினுய்த்து
*மெய்ம்முகந்தெளிந்ததூயோன்விரிபுனனெறியினாடி

நெய்ம்முகங்கமழுஞ்சூலநிழற்படைநக்கன்போல
அம்மறியேந்தியேகியன்பொடுவளர்த்திட்டானால்.

நக்கன் - சிவபிரான், மறி - மான்கன்று. (௬)

குன்றின்வானருவிவீழ்ந்துகுழித்திடுமறையிலாமான்
கன்றுள்ளிப்பொழிந்ததீம்பால்காதலிற்பருகவூட்டும்
இன்றிதுகறிக்குமென்னாவெழுந்துதன்கையாற்கொய்தா
துன்றியபசியபச்சைத்தோட்டுமெல்லறுகுநீட்டும்.

தீம்பால் - இன்சுவையுள்ளபால், கறிக்கும் - கடிக்கும். (௭)

தெறித்தெழுந்தொழுகுதெய்வத்தீம்புனலாற்றுத்தண்ணந்
துறைத்தலைக்கிடந்தபச்சைமரகதஞ்சுடர்வமென்மேல்
எறித்தவஞ்சுடரைப்பைம்புல்லென்றுதன்னெருத்தங்கோட்டிக்
கறிப்பநாவளைத்தமானுக்கிக்கதிரிளமுறுவல்காட்டும்.

துறைத்தலை - துறையில், சுடர்வ - ஒளிர்வன. (௮)

மன்னவுபூந்துறையிற்றண்ணீர்மாந்துவான்படருங்காலும்
கொன்னயுற்சிற்றப்பேழ்வாய்க்கோட்புலிகவருமென்னாப்
பின்னெழுந்தேகுமாலைப்பிறைநுதன்மடந்தைவேட்ட
பொன்னுழைதொடர்ந்துசென்றபுயனிறக்கடவுள்போன்றே.

மாந்துவான் - குடிக்க, என்னா - என்று, பிறைநுதல் மடந்தை - சீதை, பொன்னுழை - பொன்மான், புயனிறக்கடவுள் - ஸ்ரீராமன். (௯)

துளிக்கருங்கமஞ்சூற்கொண்டலுயல்குளிர்சோலைதாழ்ந்த
நளிச்சினைமறையின்யாருநண்ணியதென்றுநேடும்
ஒளிக்கறைமதியிற்றுஞ்சுமோர்கெழிலிளமானென்னப்
பளிக்கறைமுகட்டினேறித்துஞ்சுதல்பரிந்துபார்க்கும்.

கமம் - நிறைவு, சினை - கிளை, நேடும் - தேடுவான். (௧0)

பாந்தளஞ்சேக்கையானைப்பரவுறுபொழுதுநாடும்
வாய்ந்தபூங்கமலக்கையால்வருகவென்றழைக்கும்வந்து
மோந்துதன்மேனிநக்கமுகமலர்மலர்ச்சிகூரும்
ஏந்தினனெடுக்கும்புல்லுமெழின்மணித்தோளினேந்தும்.

பாந்தளஞ்சேக்கையானை - திருமாலை, வந்தினன் - எந்து, (முற்றெச்சம்.) (௧௧)

மின்னுழைமருங்குலார்போல்விழித்திடுமிளமான்கன்று
தன்னுழைவளரமாலைத்தண்மதிபுரையுந்தக்கோன்
இன்னவாறொழுகியாவியிறந்திடுபொழுதுமான்மேல்
மன்னியநினைவுதன்னான்மானுருவாயினானால்.

தன்னுழைவளர - தன்னிடத்தில்வளராநிற்க. (௧௨)

தெறிநடைமடமானாகப்பிறந்துமுற்பிறந்தைசேர்ந்த
அறிவுவிட்டகலாதாகவருவியஞ்சாரற்குன்றும்

எறிதிரைநதியுமாடிச்சில்பகலிறப்பத்துஞ்சி
மறைபயிலங்கிராவின்வழியினிற்றேன்றலுற்றான்.

பிறந்தை - பிறப்பு. (கங)

முற்றுணர்வுடைமையாலேமுனிவரர்கிளந்தவாறு
கற்றிலன்செய்யாமுன்னூல்கலைத்திறங்கேட்டிலானல்
பற்றிலன்மனத்தில்யாதும்படுபகைநட்போடில்லான்
பெற்றிலன்வருந்தியொன்றும்பேசிலனெழுகினுனல்.

முற்றுணர்வு - சர்வஜ்ஞத்வம், செய்யாமுன்னூல் - வேதம். (கச)

நங்குலத்துதித்தோன்றனவில்கிலன்மறைமற்றென்னுத்
திங்களிற்கலைகள்வாய்ந்ததெய்வதக்கிழவரெல்லாம்
தங்களிற்புலம்பிநைந்துதாற்றிளங்கமுகுசூழ்ந்த
பைங்கழைக்கரும்புவேலிப்பழனகாத்தியென்றார்.

பழனம் - வயல் (கரு)

வினைவிளைவின்றிநின்றேன்வேதியர்பணித்தவண்ணம்
நனைவிளைபொங்கர்வேலிசுளிபுனற்பழனங்காத்தும்
பனைவளைத்தடக்கைவேழம்படர்வரையருவிச்சாரற்
றினைவிளைபுனங்கள்காத்துந்தெள்ளிதினெழுகுநாளின்.

நனை - பூவரும்பு, பொங்கர் - சோலை, வேழம் - யானை, படர் - சஞ்சரிக்கிற. ()

அழற்கதிர்ப்பரிதிவெம்மையரசுவீற்றிருக்கும்பாலைக்
கிழத்திகொள்பலிக்குவந்துகிடைத்தனனிவனென்றெண்ணூஉத்
தழைத்தெழுமுவகையாலோர்வேட்டுவத்தலைவன்பற்றி
வழித்தனன்குருதிச்சாந்தமலர்த்தொடைசூட்டினுனல்.

பரிதிவெம்மை - சூரியவெப்பம், பாலைக்கிழத்தி - காளி, எண்ணூஉ - எண்ணி, குருதிச்சாந்தம் - செஞ்சந்தனம். (கஎ)

இன்னமுதொழுகுமாலையிளம்பிறைசடிலத்தேந்து
கன்னிமுன்னெய்தக்கன்னிகட்கடைகனலநோக்கி
அன்னவன்றன்னைக்கொல்வானமைந்தவர்சென்னிசிந்த
மின்னுமிழ்ந்திலங்குவாளால்வெய்தினிற்றுணித்துவீழ்த்தாள்.

சடிலத்து - சடையில், கனல - எரிய, கொல்வான் - கொல்ல, சென்னி - தலை, துணித்து - வெட்டி. (கஅ)

நிறைந்தபேரொளியைநெஞ்சினிறீஇயுணர்தூயோன்றன்னை
எறிந்திடவுற்றோரொள்வாளேறுபட்டிறந்துளாரால்
அறந்தலைமணந்துநின்றவறிவினர்க்கிறுதியெண்ணும்
மறந்தலைமணந்தார்வாழ்தலுண்டுகொன்மதிக்குங்காலே.

நிறீஇ - நிறுத்தி; வாளேறுபட்டு - வாளாலெறியப்பட்டு, தலைமணந்து - கூடி.

உரனுடையொருவனிவ்வாறொழுகுநாளொலிநீர்வேலி
இருநிலவலயங்காக்குமரசுகணனென்னுமேந்தல்

மருளறுஞானமெய்தமாமணிச்சிவிகையூர்ந்து
கருணைபாய்கமலச்செங்கட்கபிலனதிருக்கைசெல்வான்

உரனுடையொருவன் - பரதன்; நிலவலயம் - பூமண்டலம். (௨௦)

முனிவொடுவிழைவிலானைமுழுமக்கள்வலிதிற்பற்றிப்
புனைமணிச்சிவிகையாங்குப்பொறுக்கெனப்பொறுத்தலோடும்
இனிதினிற்பொறுத்தியென்னையிதோத்திருந்தாய்கொலென்னக்
கனியிதழ்விண்டுகூறுக்கட்டுரைகழறலுற்றான்.

முழுமக்கள் - கீழ்மக்கள், பொறுத்தலோடும் - சுமத்தலோடும். (௨௧)

இளைத்தலும்பெருத்தலுறும்யாக்கையின்குணமற்றன்றே
கிளத்திடிலுயிர்க்குமுண்டேயென்னலுங்கேட்டவேந்தன்
உளத்தினினடுக்கமெய்தியூர்தினின்றிழிந்துவல்லே
அளித்திடல்வேண்டுமென்றுயமலனைத்தொழுதுசொல்வான்.

கிளத்திடின் - சொல்லின், உண்டே - உண்டோ, ஊர்தி - சிவிகை. (௨௨)

இந்தனத்தழலின்வெம்மையியைதவெம்பதலைநீருள்
வெந்திடுமரிசிபோலவிடையும்வெய்யிடும்பையாலே
நொந்திடுமாக்கையுற்றநவலருந்தாபமெல்லாம்
நந்தலிலுயிர்க்குண்டென்றேநாடுமென்னுள்ளமையா.

இந்தனம் - விறகு, பதலை - பாத்திரம். (௨௩)

ஆரைநீபொறுத்தல்வேண்டுமறிந்திலனெளியேன்மையல்
வேரறிந்தகற்றிமெய்ம்மைவிரித்திடல்வேண்டுமென்ன
ஊரல்கொணமுகத்தனாகிமுழுவதுமுணர்ந்ததூயோன்
தேருமறைகளெல்லாந்தெள்ளிதிற்றெரிக்கலுற்றான்.

மையல் - மயக்கம், வேரறிந்து - வேர்களைந்து. (௨௪)

தாளிணைபொறுத்துநின்றதனைத்ததோர்மார்புமார்பு
தோளிணைபொறுத்ததேந்துதோளிணைதடர்ந்துபின்னலும்
வாளுடையரசனென்னவருபொருள்பொறுத்தமற்றென்
கோளுறுமீங்கிவ்வெல்லாங்குறிக்கின்மண்ணுருமன்றே.

தாளிணை - இரண்டுகால்கள், கோள் - துன்பம். (௨௫)

கலிவிருத்தம்.

வியப்புறுமனலினுல்வெதுப்புநீருறும்
செயிர்ப்பறுவானையத்தீச்சுடாதுபோல்
நயப்புறுமனத்தினைநண்ணுதாபத்தீ
உயிர்க்கிலையறிந்தவருணருங்காலையே.

தாபத்தீ - முத்தாபநெருப்பு. (௨௬)

திரியொடுநெய்செறிவுற்றசெஞ்சுடர்
எரிதருங்கிருதுவுற்றிலங்குமாறுபோல்.

விரியுமுக்குணத்தொடுமேவின்மாமனம்
உரைதருபிறவியையொழிப்பதில்லையே.

கிருது - செய். (உஎ)

பன்னுமுற்பிறந்தையிற்பரதனென்னயான்
இந்நிலம்புரந்திடாகற்றியாவும்விட்
டுன்னியதவத்தொடுமொழுகுநாளிலோர்
கன்னிமானுழைமனங்கலந்திறத்தலான்.

முற்பிறந்தை - முற்பிறப்பு, கன்னிமான் - மான்கன்று. (உஅ)

அவ்வுழையுருவுமடைந்துவிட்டபின்
இவ்வுருவெடுத்தனனின்னமொன்றிலும்
கவ்வைசெய்மனங்கதுவாதுநின்றனன்
செவ்வியோய்பவக்கடற்செலவுமாற்றியே.

உழையுருவம் - மானுருவம், கதுவாது - பற்றாது. (உகூ)

சீலமுற்றுயர்ந்தவர்ச்சேரின்வீடுறும்
மாலையுற்றறிவிலார்மருங்கடைந்திடின்
வேலைபுற்றலைதரும்பென்னவெம்பவக்
கோலமுற்றிறந்திறந்துழல்கூடுமால்.

சீலம் - நல்லொழுக்கம், மாலை - மயக்கத்தை. (௩0)

இடையுறுமென்பிணைநரம்பினார்த்திடாப்
புடையுறுமிறைச்சியாற்பொதிந்துபோக்கற
மிடைதருதோலினன்வேயப்பட்டதோர்
உடலினையானெனவுரைக்கலொண்ணுமோ.

நரம்பின் — நரம்பினால், ஆர்த்திடா - கட்டி, வேயப்பட்டது - மூடப்பட்டது. ()

பண்ணுறுகருமத்தாற்பவக்கடற்கரை
நண்ணுவனெனநயந்திருத்தல்வாழ்
எண்ணறுபுலிமிடைந்தியல்வெங்கானகம்
கண்ணிலான்கடக்குதல்கருதல்போலுமே.

மிடைந்து - நெருங்கி. (௩உ)

காட்டினிற்கலந்துறைவிலங்குகானலை
ஆட்டுதெண்டிரையருநீரதாமென
வேட்டுறுமாறுபோல்விடயவின்பமே.
நாட்டமுற்றறிவிலார்நலிவருள்ளமே.

விலங்கு — மிருகம், கானலை - கானற்சலத்தை, வேட்டு - விரும்பி. (௩௩.)

பொன்னினைவிழைந்துழைப்புகுந்துவாடுவார்
மன்னியகுளிர்நனிமாற்றுவோமெனத்

துன்னுவெங்கானமுறுலங்குவாய்நரி
தன்னைவெங்கனலெனச்சார்தல்போலுமே.

நனி - மிகுதியாக, மாற்றுவோம் - ஒழித்துக்கொள்வோம். (௩௪)

வருஞ்சுரந்தனின்வழிவழுவியேகுழிப்
பொருந்திவெங்கரிவரப்புலம்புவாரென
அரும்பிணிக்குழிவிழுந்தழுந்திக்கூற்றுவன்
விரைந்துகண்ணெதிருறவெருவுவாரரோ.

சுரம் - பாலைநிலம், கரி - யானை. (௩௫)

பறவைவெம்பசியினிற்பழுத்தகாட்டகத்
துறையுமுள்ளிலவையுற்றுணங்குமாறுபோல்
நெறிதவிருலுதர்நீர்கடைத்தலை
அறிவிலரடைந்தடைந்தழுங்குவார்களால்.

முள்ளிலவை - முள்ளிலவமரத்தை. (௩௬)

நீட்டரும்பழமறைச்சென்னிமேலுறச்
சூட்டியமால்பதத்துணைநினைக்கிலார்
வீட்டருமடரிருள்விரிந்தவெம்பவக்
காட்டினையெந்நாளுங்கடக்கவல்லரோ.

மறைச்சென்னி - வேதமுடி. (௩௭)

கருதுசேயன்னைகாதலியிப்பாருளோர்
பொருவருந்தானைநற்புதல்வரையகன்
அரசனென்றறையநீயடைதல்போலொரு
பிரமமேமாயையிற்பேர்கள்பெற்றதே.

சேய் - குழந்தை, காதலி - மனைவி. (௩௮)

ஈனுலகிடரறவினிதுகொண்டநீ
யானெனுஞ்செருக்கினோராகமாதியாம்
கானுறைகரும்புகள்கடிந்துநீங்கற
ஊனமின்ஞானமாமுலகுங்கோடியால்.

இராகம் - விருப்பு. (௩௯)

என்றனனுரைத்தலுமிறைஞ்சிவேந்தனும்
சென்றனன்பாற்கடற்சேர்ப்பன்பூங்கழல்
மன்றலந்தாமரைமனத்துணுடினன்
வென்றனன்வல்வினைவீடுற்றானரோ.

பாற்கடற்சேர்ப்பன் - பாற்கடற்றுறைவன், (திருமால்). (௪0)

பரவைமாநிலம்புகழ்பரதன்காதலன்
உரைதருமிடபனைத்தொழுதுசீலவான்

சொரிமதுமலர்த்தொடைச்சுமதிபெற்றசேய்
தெரிபுகழ்புனைதருதேவதாசித்தே.

பரவை - கடல். (சக)

அன்னவனளித்தசேயடையலார்தினம்
சென்னியின்வணங்குதாட்டேவத்தியும்மனன்
என்னுமம்மன்னவனீன்றமைந்தனும்
பன்னுசீர்சேர்பரமேட்டியென்பவே.

அடையலார் - பகைவர். (சஉ)

ஆங்கவன்பிரதிகனுகுமைந்தனைத்
தீங்கறவுயர்த்தனன்செப்புமின்னவன்
பூங்கழற்பிரதிகத்தாவைப்பூத்தனன்
ஈங்கிவன்மகனைபூமன்னென்றேத்துவார்.

உயிர்த்தனன் - பெற்றான், ஏத்துவார் - புகழ்வார். (சங.)

உரைத்தவம்மன்னவனுத்துகீதனும்
வரைத்தடம்புயனருண்மரபின்வாரிசூழ்
தரைத்தலத்துயிர்கடன்னுயிரென்றெண்ணுபு
நிரைத்ததார்க்கயனெனநிகழ்த்தும்வேந்தனே.

வாரி - கடல், எண்ணுபு - எண்ணி. (சச)

யானெனதெனுஞ்செருக்ககற்றியாவையும்
தானெனக்கருதியித்தரணிகாத்துயர்
வானவர்மகிழ்தரமகங்களாற்றினன்
ஊனமிலவன்புகழ்யாவரோதுவார்.

செருக்கு - மயக்கம், தரணி - பூமி. (சரு)

இத்திறம்புரிகயனினிதினீன்றசேய்
சைத்திராதனெனச்சாற்றுமானவேல்
வித்தகனளித்தனன்விளங்குபைங்கதிர்
தத்தெழிற்பூணணிசாமுராட்டுவே.

மானவேல் - பெருமையுள்ளவேல், வித்தகன் - ஞானி. (சசு)

அடையலர்வணங்குமவ்வரசனல்கிய
மடலவிழ்பூந்தொடைமரீசிபெற்றனன்
விடலருமன்புடைவிந்துமானெனும்
கடலெனுந்தானையக்கலைவல்லானையே.

அடையலர் - பகைவர். (சஎ)

**அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.**

சாற்றியவிந்துமான்றான்றந்தனன்மதுவென்போனை

வேற்றிறல்படைத்தவீரவிரதனும்வேந்தனன்றோன்
ஏற்றமன்னியுவென்றோ துமிறைவனையினிதிலீன்றான்.

தந்தனன் - பெற்றான். (சஅ)

உரைகொண்மன்னியுவாம்வேந்தனுயிர்த்தமாண்சிறுவன்வெள்வேல்
மருவியபசுந்தார்வேயும்புவனைனுமன்னன்றோன்றல்
தரைபுகழ்துவட்டாவென்பான்சாற்றுந்துவட்டாமைந்தன்
விரசனென்றெவரும்போற்றவிளங்கியவேந்தன்மாதோ.

மாண் - பெருமை. (சக)

வரமிகுபுதல்வர்ப்பெற்றுமனுமகன்மரபைநாளும்
விரசனென் றுரைக்கும்வேந்தன்விளக்கினன்விரும்பும்நப்
பரதனற்காதைகேட்போர்பகருவோர்படர்வார்முத்தி
அரசவென்றுரைத்தான்மிக்கவருந்தவமுனிவனம்மா.

படர்வார் - செல்லுவார். (ரு0)

பரதன் சரித்திர முரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-சகஉ.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்



மூன்றாவது.

## நாவலந்தீவின்வளனுரைத்தவத்தியாயம்



கலிவிருத்தம்.

ஆழியொன்றுருட்டிவாளரசர்போற்றவல
கேழிரும்பொழின்முதலேழிரண்டையும்
குழிவெங்களிறனன்சொன்மியாவென
வாழுநற்றவமுனிவழங்குவானரோ.

ஆழியொன்றுருட்டி — ஒற்றைச்சக்கரஞ்செலுத்தி, பொழில் - உலகம், குழி-முகபடாம், சொன்மியா - சொல்லும். (க)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

குடகனமுதலாக்குணகடல்காறுங்குலவுமோரிலக்கம்யோசனையா
வடகடன்முதலாத்தெண்கடல்வரையும்வகுக்குமவ்விலக்கம்யோசனையாக்
கடல்புடைசூழும்வட்டமாயொன்பான்கண்டமக்கமலமென்பொருட்டின்
நடுவுறைமேருவெனும்வரையுடைத்தாய்நாவலந்தீவுவாய்த்திடுமே.

குடகன் - குடகமலை, குணகடல் - கீழ்கடல், ஒன்பான்கண்டம் - நவகண்டம், பொருட்டு - கர்ணிகை. (உ)

பொன்னெடுவரையின்றெற்கிடைவிட்டுப்பொலிதருநிடதவெற்பிலகும்
மின்னெழிலேமகூடவெற்பிமயமெனும்வரைமூன்றுமாலிகைபோல்
பன்னியமேல்கீழ்கடலுறநீண்டுபகர்வரையொன்றினுக்கொன்று
மன்னியநீளம்வரவரக்குறைந்துவருடநல்வரம்பெனப்படுமால்.

மாலிகை - மாலை. (௩)

சாற்றியமேருவரையினில்வடக்கட்டயங்குறுநீலமொண்சுவேதம்
போற்றுறுசிருங்கமென்னுமோர்வெற்பும்புகலிருட்கடலுறநீண்டு
தோற்றியநீளமொன்றினுக்கொன்றுசொன்முறைகுறைந்துறுமிருமூன்
றூற்றல்சேர்வரையும்யோசனையிரண்டாமாயிரமுயர்ந்தகன்றிடுமே.

வடக்கண் - வடதிசையில், இருட்கடல் - பெரும்புறக்கடல். (௪)

மேருவின்கீழ்பான்மாலியவானுமேற்றிசைகந்தமாதனமும்
சேருமுப்பானாலாயிரமெனவேதிகழும்யோசனைகடென்வடக்கா
ஏரொடுநீண்டுநிடதநீலத்தையினிதுறமுட்டியேகிடக்கும்
ஓரிருவரையும்யோசனையிரண்டாமாயிரமுயர்ந்தகன்றிடுமால்.

முப்பானால் - முப்பத்துநான்கு, இருவரையும் - இரண்டுமலைகளும். (௫)

நீலநீணிடதமாலியவான்முன்னிகழ்க்குநற்கந்தமாதனமாம்
நாலெனும்வரைக்குமுட்படநிரவிநவில்வடவரையினூற்றிகைக்கும்
கோலமாரொவ்வோர்திசையினுக்கொன்பானுயிரங்கூறும்யோசனையாய்
ஏலுமவ்வரைசூழ்ந்திலங்கிளாவிரதமெனும்பெயர்வருடமொன்றுறுமே.

நீலம் - நீலகிரி, நவில் - சொல்லப்பட்ட. (௬)

பொன்னிறமாயகந்தமாதனமாப்புகல்வரைதனக்குமேற்காகிப்
பன்னுமேல்கடற்குக்கீழ்த்திசையாகிப்பளகறுநீலமால்வரைக்கு
மன்னியதெனுநிடதமால்வரைக்குமருவியவடாதெனலாகித்
துன்னியகேதுமாலமென்றெவருஞ்சொலத்தகுவருடம்வாய்த்திடுமே.

பளகு - குற்றம். (௭)

பகர்வுறுகேதுமாலமாம்வருடம்பளகறக்கிழக்குமேற்காக
அகலுமுப்பானோராயிரமென்னவறைதருயோசனையைதாத்
திகழுமுப்பானாலாயிரமென்னச்செப்பும்யோசனைகடென்வடக்காத்
தகைபெறஞான்றும்விளங்குமென்றுரைப்பர்சாற்றுநன்னூற்பொருடெரிப்பார்.

ஏதா - அழகாக, தகைபெற - அழகாக. (௮)

கூறுமாலியவான்வரைக்குநேர்க்கிழக்காக்குணகடறனக்குமேக்காகி
வீறுயர்நீலவரைக்குநற்றெற்காவிளங்கியநிடதத்தின்வடக்கா
ஈறிலாவளஞ்சேர்கேதுமாலம்போலிசைக்குறுமளவினதாகிப்
பாறுசேர்வேலாய்பாக்குமவ்வருடம்பத்திராச்சுவமெனப்படுமே.

மேக்கு - மேற்கு, பாறு - பருந்து. (௯)

விண்ணுயர்நீலவரைக்குநல்வடக்குவிளங்கியசுவேதமால்வரைக்கு
நண்ணுதெற்கொன்பானுயிரமென்னநவின்றிடும்யோசனையகன்றே
எண்ணுறுமேல்கீழ்ப்பரவைநீர்நீண்டங்கியங்குமவ்வருடத்தைச்செய்வரும்
புண்ணியம்புரிந்தோர்பொருந்திரம்மிகமாப்புகலுவரினிதெடுத்தன்றே.

பரவை - கடல். (க0)

நிகரிலாச்சுவேதவரைக்குநேர்வடக்காநிகழ்த்தியசிருங்கத்தின்றெற்காந்
தகைபெறுமொன்பானுயிரமென்னச்சாற்றியயோசனையகன்று
புகலுமேல்கீழ்பாற்புணரிநீண்டங்கட்பொருந்துறும்புகழ்வருடத்தை
இகலிலாவளஞ்சேரிரண்மயவருடமெனப்பெயரியம்புவரன்றே.

புணரி - கடல். (கக)

வானுயர்சிருங்கவரைக்குநேர்வடக்காவாரிதிக்கிரைக்குந்தெற்காங்
கூனுடைப்பிறையின்வடிவமதொத்துக்கூறிருட்கடலினீண்டவ்
கூனமினடுவொன்பான்சகத்திரமாமோசனையகன்றுறுவருடம்
தேனிமிர்தொடையாயுத்தரகுருவாந்தகவுறுவருடமென்றுரைப்பார்

வாரிதி - கடல், கூன் - வளைவு, தேன் - வண்டு. (க௨)

கெடலருமேருவரைக்கிடைவிட்டுக்கிளர்ந்தொளிபரந்ததென்றிசைசேர்
நிடதவெற்பினுக்குத்தெனுதெனலாகிநிகழ்த்தியவேமகூடத்தின்
வடதிசைத்தாகியோசனையொன்பான்மருவியவாயிரமகன்று
கடலிருகரையும்வரம்பெனநீண்டுகருதரிவருடம்வாய்த்திடுமே.

கெடலரு - அழிவற்ற, நிகழ்த்திய - சொல்லப்பட்ட. (க௩)

எமகூடத்தின்றென்றிசைத்தாகியிமயத்தின்வடக்கணவ்வருடம்
தாமமேபோலக்கடலுறநீண்டுசாற்றரிவருடத்திற்கன்று
நாமமுமெழில்சேர்கிம்புருடப்போனண்ணுறுமதனதுதெற்குத்
தேமலர்த்தொடையாய்பாரதவருடஞ்சிறக்குமாங்கதனியல்புரைப்பாம்.

தாமமேபோல - மாலைபோல. (க௪)

இமையநற்றெற்காயோசனையொன்பானென்றுமாயிரநடுவகன்று
சுமைதருமுவரிமுத்திசைசூழத்துலங்கியவிலைவடிவாகி
அமைவுறும்இமயவடதிசைநாண்போலமையவப்பாரதவருடம்
சமைவுறுகருமபூமியென்றெவருஞ்சாற்றநன்கிலங்குவதன்றே.

உவரி - கடல். (க௫)

கலிநிலைத்துறை.

சீரினுயர்கதிர்சுழல்வடதிசையெனவே
பாரினற்றிசையிடத்துறைபவர்களும்பகர
ஏருலாவிளாவிரதத்தினடுவியைந்திருக்கும்
மேருமால்வரையியனளவிற்றெனவிரிக்கின்.

இற்றென - இத்தன்மைத்தென்று. (க௬)

ஈரெண்ணுயிரம்யோசனைபுவியகத்தாழ்ந்தே
ஒருமவ்வடிமேற்பருத்தும்பர்களாலும்
சேருமெண்பதிணுயிரம்யோசனைதிகழ்ந்தே
ஆருமுச்சியவ்வடியினுக்கிரட்டியாயகலும்.

உம்பர்கள் - தேவர்கள். (கஎ)

சுற்றுறும்மளவுரைக்குறினடிபுறஞ்சுற்றுக்
குற்றமின்றியாறெட்டெனுமாயிரங்குலவ
உற்றயோசனையுறுமிதனிரட்டியாயொளிரும்
வெற்றிவேலவவிளங்கியவிரிதலைச்சுற்றே.

குலவ - விளங்க. (கஅ)

வயங்குமேருவின்கீட்டிசைமைந்தரமலையும்
தயங்குமம்மலைமேனுறைதனிக்கொடியெனவே
பயங்கொண்மாவெனப்பகர்தருபராரைமாமரனும்
நயங்கொணந்தனவனமுநன்பாலெனுமடுவும்.

வயங்கும் - தயங்கும் - விளங்குகிற (ககூ)

விளங்குமேருவின்றென்றிசைமேருமந்தரமும்
கிளர்ந்ததீவுதன்வண்பெயரேபெறக்கெழுமி
வளங்கொணாவலுஞ்சயித்திரரதமெனும்வனமும்
துளங்குநீடலைமதுவெனச்சொலப்படுஞ்சுனையும்.

கெழுமி - பொருந்தி. (உ0)

சொன்னமேருவின்மேற்றிசைசுபாரிசமலையும்
அன்னவெற்பின்மேலமர்தருமலர்ச்சினைக்கடம்பும்
மன்னுநல்வளஞ்சேர்வயிப்பிரசமாவனமும்
கன்னலின்சுவைச்சாறுநேர்கடிகமழ்சுனையும்.

சினை - கிளை, கன்னலின்சுவை - கரும்பின்சுவை. (உக)

வனைபொலங்கிரிவடக்கினிற்குமுதமென்வரையும்
பனிவரும்பலபலந்தருபணைப்பழுமரனும்
கனிபடுந்திருச்சருவதோபத்திரக்காவும்
புனிதநீர்நிறைவாவியும்பொருந்தியங்கிருக்கும்.

பொலங்கிரி - பொன்மலை, பலம் - கனி. *(உஉ)

உரைத்தநாற்றிசைமலைகளுமேருவென்றுரைக்கும்
வரைக்குவீறுசேரூன்றுகால்போன்றவானவரும்
அருத்திகூரிளாவிரதத்தினமர்ந்திடுமுயரம்
பொருத்துமோர்பதிணுயிரம்யோசனைபுகல.

அருத்தி - ஆசை, கூர் - மிகுந்த. (உங)

நாற்றிசைக்கணுநவின்றவம்மலைகளினண்ணும்
ஆற்றல்சேருநான்மரங்களுமாயிரத்தொருநூ
றேற்றயோசனையுயர்ந்துநூறோசனையென்னுந்
தோற்றுசீர்விடபங்களுஞ்சூழ்வுறத்தோன்றும்.

தோற்று - காணப்படுகிற. (உச)

காந்துபன்மணிமந்தரமலையின்மாங்கனிகள்
வேந்தவெற்புறைகுவடெனவீழ்பழச்சாறு
சேந்துவார்திரைச்சோணிதயாறெனவொழுகும்
மாந்துவோருயிர்ப்பையிரண்டோசனைமணப்ப.

காந்து - ஒளிசெய்கிற, மாந்துவோர் - குடிப்பவர். (உரு)

பட்டமார்தருமாகரியளவெனப்பருத்துக்
கொட்டைநுண்ணியநாவலின்கொழுங்கனிச்சாறு
பெட்டசம்புமாநதியெனவலங்கொடுபெருகி
உட்டெளிந்துபொன்மேருவைச்சுலாயினிப்பாயும்.

பட்டம் - முகபடாம், மாகரி - பெரியயானை, சுலாய் - சூழ்ந்து. (உசு)

அதிருமப்புனலருந்தினரருங்கரையசும்பு
தகையும்வெங்கதிரகாற்றுறவலர்ந்துநற்சாம்பு
நதமெனும்பொனுமாங்கதினணிபுனைநலத்தோர்
இதமில்வெம்பிணிநரைதிரையற்றினிதிருப்பார்.

இதமில் - இன்பமில்லாத. (உஎ)

திகழுமேருவின்மேற்கிளாவிரதந்திற்சேர்ந்த
தகைசெய்நீள்கடம்புறம்புழைசார்ந்ததண்டேறல்
அகலுமாறெனவழிந்திடுமாங்கருந்தினர்கள்
பகருயிர்ப்புநூறோசனையிடம்பரிமளிப்பர்.

தேறல் - தேன், தகை - அழகு. (உஅ)

வழங்குமேருவின்வடதிசைவழுத்திடுவடத்தின்
பழங்கொணீள்பெரும்பணைதொறும்பாறயிர்மதுநெய்
மொழிந்தபூண்டுகில்சயனமேமுதலியகொளற்குத்
தழங்குவார்திரையாறெனச்சார்ந்திழிந்திடுமால்.

வடத்தின் - ஆலமரத்தின், பணை - கிளை, தழங்கு - சத்திக்கிற. (உகூ)

புலங்கொள்சங்கம்வைகங்கதம்பொருந்தியநாகம்
நலங்கொளூரதமுதலியநல்வரைக்குலங்கள்
துலங்குமேருவின்சுற்றிலுங்கழுமுமாற்றுகடீர்ந்
திலங்குநற்பொகுட்டருகுசூழ்கேசரமெனவே.

கழுமும் - பொருந்தும், துகள் - குற்றம், கேசரம் - பூந்தாது. (௩0)

தேவகூடமேமுதலியவெண்வரைதிகழ்ந்து
தாவிலோர்திசைக்கிரண்டிரண்டாகவேசார்ந்து
பூவின்மேவியமேருவினாற்றிசைபொருந்தும்
பாவகன்றனைத்தருப்பைசூழ்ந்திடும்பரிசெனவே

எண்வரை - அஷ்டகுலபர்வதங்கள். பாவகன் - அக்கினிதேவன். (ரு௧)

தண்ணருங்கமலத்துறைதலைவனுள்விரும்பும்
எண்ணரும்புகழ்மாயனுமீசனுமிருப்பக்
கண்ணகன்றிருக்கடிநகரிரண்டெழில்கலந்து
விண்ணுயர்ந்தவம்மேருவின்முகட்டின்மீவிளங்கும்.

கமலத்துறைதலைவன் - பிரமன், மீ - மேல். (ரு௨)

உச்சியிற்பதினாயிரம்யோசனையுடைத்தாய்
வச்சிரப்படைவாசவன்முதற்றிசைப்பாலர்
இச்சைகூர்ந்துறையெண்பதிசூழவாங்கிருக்கும்
முச்சகந்தருமுளரிமேன்முதலுறைநகரம்.

முச்சகந்தரும் - மூவுலகங்களையும் படைக்கிற, முளரிமேல்முதல் - தாமரைமலரின்மேலுறைகின்ற முதற்பொருள். (ரு௩)

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

பாயகடனிலமளந்தபசும்புயனீள்விசும்புருவவெடுந்தபொற்றாள்
சேயுயருமுதண்டமுகடுடையப்பரந்தலைக்குந்தெய்வநன்னீர்
ஆயிரமாயிரம்பருவஞ்சென்றொழியவதிர்ந்தொழுகியலரின்மேலான்
மேயபொலங்கிரிநகரின்மிசைவீழ்ந்துநாற்றிசையும்விரியுமாதோ.

பாய - பரவிய, பசும்புயல் - திருமால், அலரின்மேலான் - பிரமன். (ரு௪)

சுடர்செய்நவமணிமுடிகொடுருவன்முதலோர்புகழத்துனைவினெய்தி
வடவரையின்மிசைக்கழுமிவந்தொழுகுமாநதிசக்குசையென்றோதக்
கெடலருஞ்சீர்வாய்ந்துறையுங்கேதுமாலத்தினிதுகெழுமிமுத்தீன்
குடவளைகண்மிகமுரலுங்குடகடலினீரொடும்போய்க்கூடுமன்றே.

துனைவின் - விரைவாக, கழுமி - பொருந்தி, குடவளை - குடம்போலும்சங்கு, முரலும் - சத்திக்கிற. (ரு௫)

விரிகதிர்சேர்பொலங்குடுமிமேருவில்வந்தப்புறம்போய்விளங்குநீலம்
சொரிகிரணநவமணிசேர்சுவேதமருஞ்சிருங்கமெனச்சொல்லுநல்ல
பருமுவரைகீண்டொழுகிப்பத்திரையென்பேர்படைத்தபழுதில்கங்கை
குருவருடந்தனைமேவிக்கோதில் வடகடல்கிழித்துக்குலவுமன்றே.

பொலங்குடுமி - பொற்சிகரம், கீண்டு - கிழித்து. (ரு௬)

மீதுயர்விண்ணவர்நாட்டின் விரைகமழுங்கற்பகத்தின்விளங்குசெம்பொன்
போதினொடுவடவரையிற்போந்திழிந்துமாலியுவான்பொருப்பைக்கீண்டு

சோதிநவமணிவரன்றித்துலங்குபத்திராச்சுவத்தைத்துன்னுங்கங்கை
சீதையெனும்பெயரினதாய்ச்சிறந்தகுணகடலொழுகித்திகழுநீர்த்தால்.

விரை - வாசனை, போதினொடு - மலர்களோடு, வரன்றி - வாரி, (௩௭)

கொன்னொழுகுநேமிமுகில்குரைகழற்பூந்துளவொடுபொற்குன்றின்வீழ்ந்து
பொன்னொழுகுநிடதவரைபுகலேமகூடவரையிமயமென்னும்
மின்னொழுகுமணிவரைகீண்டலகநந்தையெனும்பெயரின்மேவுங்கங்கை
தென்னொழுகுபாரதகண்டஞ்சேர்ந்துதிகழ்தென்கடல்போய்ச்சிறக்குமன்றே.

கொன்- அச்சம், நேமிமுகில் - திருமால். (௩௮)

கலிநிலைத்துறை.

சாற்றுங்கங்கையைமனத்திடைநினைக்கினுந்தனிப்பேர்
போற்றிநின்றுழிப்பராயினுங்காணினும்பொருந்தி
ஏற்றமாயவந்நீரிடைமூழ்கினுமியையும்
பேற்றையார்துணிப்பாரவர்முத்தியேபெறுவார்.

நின்றுழி - நின்றவிடத்தில், பராயினும் - துதித்தாலும். (௩௯)

கங்கையாற்றிடைத்தங்குலப்பிதிர்களைக்கருதி
அங்கையாற்றருப்பணமுவந்தொருமுறையாற்றின்
பங்கமாநரகத்துமுற்படினுமக்குலத்தோர்
செங்கண்மால்பதஞ்சேர்குவரென்னுதறிண்ணம்

ஆற்றின் - செய்தால், திண்ணம் - நிச்சயம். (௪0)

நீக்குகின்றநல்லறத்தினராய்ப்பழிநிரப்பும்
தீக்கொடுந்தொழில்செய்ஞ்ஞருமிறந்திடிற்சிறிதா
ஆக்கையென்பொருவகையினல்வருகங்கையடையின்
ஊக்கமுற்றவரும்பர்தமுலகுபுக்குறைவார்.

நீக்குகின்ற நல்லறத்தினர் - பாவிகள், செய்ஞ்ஞரும் - செய்வோரும், ஆக்கையென்பு - உடம்பெலும்பு. (௪௧)

இறந்துளோர்களுங்கங்கையினெலும்புறினிமையோர்
உறைந்தநாட்டுறைவாரெனினுயிரொழிவதன்முன்
நிறைந்தவன்பொடுகங்கையிற்சென்றுநீராடச்
சிறந்துளோரெனினவர்பெறும்பேற்றையார்தெரிப்பார்.

இமையோர் உறைந்தநாடு - சுவர்க்கலோகம். (௪௨)

உரைசெய்பாரதவருடம்விட்டொழிந்தநல்வருடம்
பொருவிலெட்டையும்போகமார்பூமியென்றுரைப்பார்
வருடமெட்டினும்வதிபவராயுளைவழங்கின்
பருவமோர்பதினாயிரம்பளகறப்பல்கும்.

பளகு - குற்றம். (௪௩)

தந்தியாயிரம்பத்துறுந்தருக்கினராகிக்
கந்தவார்குழலியரொடுகலவியிற்களித்து
மைந்தனேடொருவனிதையையமணந்திடப்பெறவர்
எந்நாளுமாங்கிரண்டெனுமூழிபோன்றிருக்கும்.

தந்தி - யானை. (௪௪)

ஒங்குசீர்பெறுமொன்பதுவருடத்துமுருவோ
டாங்குவாழ்குநர்வழுத்தவானருள்புரிந்துறையும்
தேங்கமழ்ந்ததார்ச்செப்பிளவனமுலைசுமந்து
வாங்குநுண்ணிடைமலர்மகண்மணந்துறைமார்பன்.

மலர்மகள் மணந்துறைமார்பன் - திருமால். (௪௫)

இலகுமேருவின்குணக்கிளாவிரதத்தினெழில்சேர்
அலர்செய்பூங்குழலரம்பையரளப்பிலர்சூழ
மலைமடந்தைசேர்மதியணிசடையினேன்வணங்க
உலகெலாந்தருமுந்தியானநந்தனென்றுறைவான்.

அளப்பிலர் - அளவற்றவர். (௪௬)

கமலைமேவுமால்கலையெனுமநந்தனைவணங்கி
அமலவீசன்வாழ்வுழியாடவரணுகின்
தமரவண்டுறைகருங்குழற்றையலராக
உமைவழங்கியசாபமுண்டுறைக்குதுமினியால்.

மால்கலை - விஷ்ணுவினமிசம், தமரம் - ஒலி. (௪௭)

இயக்கர்வானவர்முதலியயாவரும்வணங்கி
மயக்கநீக்கியாள்வாயெனமகிழ்ந்தருணாளும்
பயக்குமாயவன்பத்திராச்சுவத்தினிலுறைவோன்
அயக்கிரீவனென்றன்பொடுமேத்தவாங்கமர்வான்.

அருள்நாளும் பயக்கும் - நாள்தோறும் அருள்செய்வன். (௪அ)

ஏமமார்தருமேந்திளவனமுலையெழில்சேர்
தாமவார்குழன்மலர்மகளுவப்பொடுதழுவச்
சேமமார்தருகேதுமாலத்தினிற்றிருமால்
காமதேவனென்றேத்திடக்கருணைசெய்துறைவான்.

ஏமம் - இன்பம். (௪௯)

தேனுலாந்தொடைரம்மிகன்முதலினோர்சேர்ந்து
வானளாவியகடையுகவாரிதிநீரின்
பானிலாமருப்பேந்தினைபாரெனப்பரவ
மீனமாயிரம்மிகவருடத்தின்மால்விளங்கும்.

வாரிதி - நீடல். (௫௦)

முரணுடைச்சராசரங்களினிறைந்துறைமுதலென்
றுரனுடைத்திருவிரண்மயன்முதலிரேனுருணாப்பத்
திரண்மணிப்பெருவனைநிகர்கமடமாய்த்திருமால்
இரண்மயப்பெயரெய்தியவருடம்வீற்றிருப்பான்.

முரண் - வலி, கமடம் - ஆமை. (ருக)

பராகமொன்றெனப்பாதலத்தெனைமருப்பேந்தி
அராகமேல்கொளவைத்தனையெனப்புவியணங்காங்
கிராகமோடுறைபவரொடும்னிதுவந்தேத்த
வராகமூர்த்தியாயுத்தரகுருவின்மால்வதியும்.

பராகம் - துகள், மருப்பு - கொம்பு, அராகம் - அவா, ஒராகம் - அன்பு. (ருஉ)

ஒளிகொள்வச்சிரப்படைநிகருகிரவென்றொழியாக்
களிகொணெஞ்சொடுகனகன்மாமதலைநின்றேத்தத்
துளவுசூடுமால்சொல்லரிவருடத்திற்றலங்கும்
நளினமாதுசேர்நரசிங்கமாகவீற்றிருக்கும்.

உகிர - நகமுள்ளவனே, கனகன் மாமதலை - பிரகலாதாழ்வான். (ருங)

கேடில்கிம்புருடத்தினிற்கெழும்னரொடும்
ஆடன்மேவனுமானடிவணங்கிடவமர்வான்
வாடுநுண்ணிடைச்சீதையென்பாண்மருங்கிருப்ப
நீடுவெஞ்சிலையிராமனென்பெயரொடுநெடியோன்.

ஆடல் - வெற்றி (ருச)

வாரதட்கலைவனைதருமாதவர்க்கெழில்வீ
டாதரத்திறமுரைத்தளியீரெனவழுத்து
நாரதற்கருணரன்சொனுராயணனெனுமால்
பாரதப்பெயர்பகர்வருடத்தின்வீற்றிருக்கும்.

அதட்கலை - தோலாடை, வனைதரும் - உடுக்கின்ற, அளியீர் - காத்தருள்வீர், வழுத்தும் - துதிக்கிற. (ருரு)

கங்கைகாவிரிகன்னிதென்பொருநைகாளிந்தி
துங்கபத்திரைமுதலியமாநதிதுவன்றி
மங்குல்கண்படுமலயமால்வரைமுதல்வரைகள்
பொங்குபாரதவருடத்தின்றகைமையார்புகல்வார்.

துவன்றி - நெருங்கி, மங்குல் - மேகம், கண்படு - தூங்குகிற, மலயமால்வரை-பொதியமலை. (ருசா)

வருணநான்குநான்காச்சிரமத்திறமருவி
அரியபாவத்தினிரயத்துமறத்திறுற்பலவாம்
பொருவில்விண்ணினுஞானத்தால்வீட்டினும்புகுத்தும்
கருமபூமியிப்பாரதவருடமாங்கழறின்.

பாவத்தின் - பாவத்தினுல், அறத்தின் - புண்ணியத்தினுல், நிரயத்தும் - நரகத்திலும், வீட்டினும் - மோக்ஷத்திலும், கழறின் - சொல்லின். (ருஎ)

புரியுஞ்சத்துவகருமத்தோர்பொன்னுலகடைவார்
மருவிராசதகருமத்தோர்மாணிடராவார்
உரைசெய்தாமதகருமத்தோர்நரகங்களுறுவார்
விரவுமவ்வினைப்பயன்விழையார்கள்வீடடைவார்.

புரியும் - செய்கின்ற, விழையார்கள் - விரும்பாதவர்கள். (நஅ)

ஆற்றுநல்வினைப்பயன்பலவயின்றனராங்காங்
கூற்றிருந்துதேனெழுகுபொற்றருநிழலுறைவோர்
நோற்றுமாயவன்செய்யதாணிழலுறநொய்தின்
தோற்றுவேங்கொலோபரதகண்டத்தெனத்துணிவார்.

அயின்றனர் - அநுபவித்து, தோற்றுவேங்கொலோ - பிறப்போமா. (நகூ)

பொற்புவாய்ந்தபொன்னுட்டிடைப்புங்கவரிங்கே
கற்பவாயுள்சேர்ந்துறைதலிற்கருதுவீடடைய
நற்பதாம்புயநாடிமாலுமமுச்சரிப்ப
அற்பவாயுள்சேர்ந்தாங்குதித்திடலழகென்பார்.

பொற்பு - அழகு, புங்கவர் - தேவர், உறைதலின் - வாழ்தலினும். (சு0)

வாமமுற்றவிர்பாரதவருடம்வர்துதித்து
நாமமுத்தியினுய்க்குநன்ஞானம்வந்தடையக்
காமமற்றுமுன்செய்கிலம்வினையெனக்கரைவார்
போமதித்திடிற்பொன்னுலகெனவறிபுலவோர்.

வாமம் - அழகு, கரைவார் - சொல்லுவார். (சுக)

என்றுநாவலந்தீவினல்வளனெடுத்திசைத்தான்
துன்றுமாதவச்சுகமுனிவரனெனச்சூதன்
மன்றனுண்மலர்த்துளவணிமாயனைவழுத்தி
நின்றவேதியருவப்புறவஞ்செவிநிறைத்தான்.

இசைத்தான் - சொல்லினன் (சுஉ)

நாவலந்தீவின் வளனுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—நிநிச.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.



## நான்காவது

# ஏழுதீவொடு கடலினளவுரைத்தவத்தியாயம்.

கலிவிருத்தம்.

வளைவுகாட்டியதீவொடேழ்வாரிசேர்
அளவுகாட்டவரசனுக்காய்பிழித்
துளவுகூட்டுந்துளிமுகிலைத்தொழும்
தெளிவூட்டுந்திருமுனிசெப்புவான்.

ஏழ்வாரி - சப்தசமுத்திரம், பிழி - தேன் (௧)

கலிநிலைத்துறை.

வெம்புத்திக்கரைசகரர்தோட்டுண்டலின்மேவுறுப்
பம்பிச்சேர்தருரமணகம்பாஞ்சசன்னியஞ்சீர்
மொய்ம்புற்றோங்கியவரக்கர்வாழிலங்கையேமுதலாச்
சம்புத்திவினைச்சாற்றுபலதீவுசார்ந்துறுமால்.

மொய்ம்பு - வலி. (௨)

இலக்கம்யோசனையியையுமித்தீவினையினைத்தாய்
துலக்குசீர்நிலாவளத்ததாவுவர்க்கடல்சூழும்
விலக்கிலாவிதற்கிரட்டியாய்விளம்புவர்க்கடலைப்
பிலக்கமாமெனுந்தீவுசூழ்கிடந்திடும்பேசின்,

இனைத்தா - இத்தன்மைத்தாக. (௩)

சொன்னதீவினையத்துணையளவையாய்ச்சூழும்
கன்னலீர்ஞ்சுவைச்சாறுசேர்கடலருங்கடலை
மன்னும்யோசனையக்கடற்கிரட்டியாய்வளையும்
பன்னுசீர்வளர்சான்மலித்தீவெனப்பகர்வார்.

கன்னலீர்ஞ்சுவைச்சாறுசேர்கடல் - கருப்பஞ்சாற்றுக்கடல். (௪)

வீறுசேருமத்தீவையவ்வளவையின்மேவி
மாறிலாமதுக்கடல்வளைந்திடுமதுக்கடலைக்
கூறும்யோசனையிரட்டியாய்ச்சூழ்ந்திடுங்குசத்தீ
ஆறுநெய்க்கடலாங்கனைத்தாயதையுறுமால்.

மதுக்கடல் - தேன்கடல். (௫)

திகழுநெய்ப்பெருங்கடலினைச்செப்பதனிரட்டி
அகலுநற்பெருங்கிரவுஞ்சத்தீவுசூழ்ந்தமரும்
குகனெறிந்திடுங்கிரவுஞ்சக்குன்றுநின்றதனால்
பகர்செழும்பெயர்கிரவுஞ்சத்தீவெனப்படுமே.

திகழும் - விளங்குகிற, அகலும் - அகன்ற. (௬)

சேகிலாதநற்கிரவுஞ்சமெனப்படுதீவை
ஒகையேசெயும்பாற்கடலுடுக்குமவ்வளவாய்ச்
சாகத்தீவிதையிரட்டியாய்வளைந்திடுந்தனிப்பேர்
மாகமீதுயர்சாகமென்மாத்திஞன்மணந்தே.

சேகு - குற்றம், ஓகை - சந்தோஷம். மாகம் - ஆகாயம். (எ)

சீதவாரிஉயவளைந்திடும்பிலக்கமாந்தீவே
ஆதியாகுமிவ்வைந்தெனுந்தீவினுளமர்ந்த
ஓதுநால்வகைவருணமாயவர்தனியுரைக்கும்
ஏதநீங்குபேர்வேறுவேறியைகுவரியல்பால்.

சீதவாரி - குளிர்ந்தகடல், ஏதம் - குற்றம். (அ)

உந்துறேரினேழ்தீவெனவுளுற்றினற்குதித்திவ்
வைந்துதீவினுக்காசராமைவருக்கெவ்வேழ்
மைந்தர்தோன்றினர்வகுத்திடுந்தீவுகளவ்வேழ்
சந்தமார்தருவருடமாய்த்தனித்தனித்தயங்க.

தயங்க - விளங்க. (௯)

சொல்லுமவ்வொருதீவினுட்டோன்றிருகடையும்
ஒல்லெனப்படுதிரைக்கடலுறக்குறுககாகி
மல்லலுற்றவவ்வருடநல்வரம்பெனவழங்க
எல்லிலங்குமேழ்வரைகளேழ்நதியுடனிருக்கும்.

வரம்பு - எல்லை, எல் - ஒளி. (க0)

பன்னுமைவகைத்தீவுறைபவர்களும்பார்வை
மன்னுகின்றகாரணங்களாய்வந்துதித்தொளியும்
உன்னுபுந்தியுமுரனுமங்கொத்தனராகி
இன்னலின்றியோராயிரம்பருவமுமிருப்பார்.

ஒளியும் - தேஜசும், உரனும் - அறிவும், இன்னல் - துன்பம். (கக)

உரைத்தபேர்பெறுபிலக்ஷமத்தீவினிலுறைவோர்
விரித்தசெங்கதிர்வேந்தனைவணங்குவர்விருப்பால்
தருக்கிஞெடெழிற்சான்மலித்தீவுறைதக்கோர்
நிரைத்ததண்கதிர்த்திங்களைவழுத்தவர்நினைந்தே.

செங்கதிர்வேந்தன் - சூரியன். (கஉ)

வானிஞேங்குறவளர்குசத்தீவினில்வதிவோர்
ஈனநீங்கொளியங்கியின்பதம்மிறைஞ்சுவரால்
தேனவாம்பொழில்செறிதருகிரவுஞ்சத்தீவோர்
பேனநீர்க்கிறைதாட்டுணைவழுத்துவர்பெட்பால்,

அங்கி - அக்கினிதேவன், பேனம் - நுரை, நீர்க்கிறை - வருணன் (கங)

இயம்பெண்ணுன்கெனுமிலக்கம்யோசனையிடனகன்ற
தயங்குபன்மணிச்சாகத்தீவுறைதருதவத்தோர்

வயஞ்செய்கின்றநற்பிராணனும்வாயுவிண்ணவனை
நயஞ்செயன்பொடுவணங்குவர்நாடொறும்.

வாயுவிண்ணவனை - வாயுதேவனை. (கச)

கலிவிருத்தம்-

சேகிலாதமுனிவருஞ்சித்தரும்
நாகரும்புகழ்நாலெட்டிலக்கமே
ஆகுமோசனையென்னவகன்றெழிற்
சாகத்தீவைத்தயிர்க்கடல்சூழுமே.

சேகு - குற்றம். (கரு)

சாற்றுகின்றதயிரொரும்வேலையை
ஏற்றவவ்வளவுக்குமிரட்டியாய்
ஈற்றிசைக்கணுஞ்சூழ்ந்துநவையிலோர்
போற்றுபுட்கரத்தீவுபொருந்துமால்,

வேலை - கடல், நவை - குற்றம் (கசு)

விழைந்துநான்முகன்மேவுபொற்றாமரை
தழைந்துசார்தலிற்சாற்றமர்தீவுநாமன்
மொழிந்தபுட்கரப்பேர்முதனீலற்றனை
வழங்குமானமலரயனுங்கரோ

விழைந்து - விரும்பி. (கஎ)

ஏதநீங்கியிலங்குமத்தீவினுக்
காதிமாமனுவானவன்மைந்தனுக
கோதுசீர்மகவாகியுதித்திடும்
வீதிகோத்திரனென்பவன்வேந்தனே.

ஏதம் - குற்றம். (கஅ)

ஓதுவேந்தனுயிர்த்தரமணகன்
தாதகன்னெனச்சாற்றுமிருவர்தம்
கோதினுமங்குறிப்பவருடமோ
தீதிலோரிரண்டாகுமத்தீவமோ.

கோது - குற்றம். (ககூ)

ஈனநீங்குவருடமிரண்டென
ஆனதீவினடுவெயிலாமென
மானதோத்தரமாமலைசூழ்ந்திடும்
பானுமீதுவளைந்துபடரவே.

எயிலாமென - மதிலென்னும்படி, படர - செல்ல. (உ0)

அறைந்ததீவினையவ்வளவாகியே
நிறைந்துசேருந்தண்ணீர்க்கடல்சூழ்ந்திடும்

எறிந்தவார்திரையோதவவ்வாரியைச்
செறிந்துசூழுந்திகழ்பசும்பொன்னிலம்.

வாரி - கடல். (உக)

பன்னுதேவர்பயிலுறப்பத்தென
மன்னுகோடிமருவியயோசனை
என்னவேயகன்றெங்கணுஞ்சூழ்ந்தவப்
பொன்னின்பூமிக்கப்பாலும்புகலுவாம்.

பன்னு - சொல்லப்பட்ட, பயிலுற - சஞ்சரிக்க. (உஉ)

வில்லினுதலார்புத்தேளிர்விளையாட்டயரும்பொலநிலத்தை
மல்லினுயர்ந்ததடம்புயத்தாய்மருவிவளைந்திப்பார்முநன்மேல்
நல்லவுலகமூன்றினுக்குநவைதீர்புரிசையெனவுயர்ந்து
சொல்லுமுலோகாலோகமலைதுலங்குமெனவேவழங்குவரால்.

பொலநிலம் - பொன்னிலம், நவை - குற்றம், புரிசை - மதில். (உஙு)

அன்னவரையினுட்படும்பாரதனினெடுக்கோடுறங்குறுக்குப்
பன்னுஞ்சாசறகோடிப்பழுதிலாவோசனைப்பரப்பென்
றுன்னியுரைப்பரவ்வரையினொளியில்புறமாம்படமனைத்தும்
மன்னும்பரிதிகதிருலவாவுலகமெனவேவழங்குவரால்.

பரிதிகதிர் - சூரியகிரணம். (உச)

கழைசேர்நேமிவரையதனைக்கருப்போதகமார்கடல்சூழும்
அழிநீரலையாழியையவளைக்குமந்தகாரக்குழாமதனைப்
பழிதீரண்டச்சுவர்பொதியும்பநிறுவலதும்பொதிபசும்பொன்
எழில்சேரண்டச்சுவரதனையிலங்குமதனிற்பதின்மடங்காய்.

கழை — மூங்கில், நேமிவரை - சக்ரவாளகிரி. (உரு)

குலவுதெளிநீர்சூழுமதைக்குளிர்தண்புனலிற்பதின்மடங்காய்
இலகுமழல்சூழ்ந்திருக்குமதையிலங்குமழலிற்பதின்மடங்காய்
நிலையில்வளிசூழ்ந்துளருமதைநிகரில்வளியிற்பதின்மடங்காய்
அலகில்புகழ்சேர்வான்சூழுமதனையதற்குப்பதின்மடங்காய்.

அழல் - அக்கினி, வளி - வாயு, வான் - ஆகாயம். (உசு)

பொருந்துபுகழ்சேரகங்காரம்பொதியுமதனைப்பதின்மடங்காய்
விரிந்துமகான்சூழ்ந்திருக்குமதைவிளம்புமளவுகடந்ததாய்ப்
பரிந்துபரிதிசூழுமதிற்பலவாமண்டம்பநிந்திருக்கும்
திருந்துமலரின்மணம்போலத்திருமாலெங்கும்வதிந்திடுமே.

அகங்காரம் - அகங்காரதத்துவம், மகான் - மகத்தத்துவம், பரிதி - சூரியன். வதிந்திடும் - வியாபித்திருப்பன். (உஎ)

கலிநிலைத்துறை.

கூனத்தார்கடல்சூழுமித்தீவொடுங்குறித்த
ஏனைத்தீவுமற்றுள்ளவுமிசைத்தனமின்னாம்

வானத்தேயுயர்பரிதிவானவன்வருவளனும்
தேனைச்சேர்தொடையரசகேளனமுனிதெரிக்கும்.

கூனத்து - வளைவாகியசங்கு, தெரிக்கும் - அறிவிக்கிறான். (உஅ)

ஏழுதீவொடு கடலினளவுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—நுஅஉ.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்!

ஐந்தாவது

## சூரியமண்டல முரைத்த வத்தியாயம்.

பாரின்மேலுறவானமும்பாரினதளவாய்ச்
சேருமோரிருபாதியையொன்றெனச்செறித்த
எரின்மேம்படுமண்டலமிவ்வண்டத்தினடுவெ
ஆருமாயிரங்கதிரவன்சூழ்வருமன்றே.

எரின் - அழகினால், மேம்படு – மேம்பட்ட, சூழ்வரும் - சுற்றிவருவான். (க)

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

இடம்விரிந்திடுமிப்பார்மேலிலக்கம்யோசனையினப்பால்
வடபெருஞ்சிலையைநாளும்வலம்வருபரிதியென்னும்
சுடரின்மண்டிலமாமென்பர்சொல்லுமண்டிலத்தின்கீழே
அடன்மிகுந்துறமிராகுமண்டிலமாமென்பாரால்.

வடபெருஞ்சிலை - மேருமலை உ)

மதியொடும்ரவிதன்னைவழங்குமுற்பகைமைபற்றித்
துதியுறமிராகுவென்பான்சொல்லுமீருவாக்கள்சேரின்
அதிர்திரைஞாலமேத்தவவ்வழிமறைத்துமால்செங்
கதிருமிழாழியேவக்காண்டலுமகலுமாதோ.

ஈருவாக்கள் - அமாவாசை பூர்ணிமைகள், ஆழியேவ - சக்கரத்தையேவ, அகலும் - நீங்குவன். (ங)

மொழிந்தமண்டிலத்தினுக்குமுறைமுறையயுதமென்னும்
தழைந்தயோசனைகீழாகச்சார்ந்திடுஞ்சித்தர்விஞ்சை
விழைந்தவரியக்கர்சொல்லும்வெவ்வியவரக்கர்பூதம்
வழங்கியபிரேதங்கூளிமழைபுட்சேரிடங்களாமால்.

அயுதம் - பதினாயிரம். (ச)

பொய்யறுசமத்திஞேடுபொருந்துமாரோகாண்மை
செய்யவரோகமென்னுந்திருந்துமுக்கதிசெய்வெய்யோன்

மையறுகதிர்க்குழாத்தான்மருவியகிரகத்தோடும்
ஐயமினுள்களுக்குமணிசுடர்வழங்குமன்றே.

வெய்யோன் - சூரியன், கதிர்க்குழாம் - கிரணக்கூட்டம், நாள்கள் - நாள்மீன்கள்.

அலகிலாப்புகழ்சால்வெய்யோனுயிரங்கதிர்ப்பிழம்பில்
சிலசிலமேலேநோக்கச்சிலசிலகீழேநோக்கி
நிமமிசைமழையினோடுநெடும்பனிமிகவுண்டாக்கி
வலியுறுமெவர்க்குந்தாபம்வழங்குமென்றியம்புவாரே.

கதிர்ப்பிழம்பு - கிரணக்கற்றை, தாபம் - வெப்பம். (௬)

சித்திரைமதியினோடுசிறந்தவைப்பசியாந்திங்கள்
ஒத்திடும்பொழுதிரண்டுமுறைபெறுகடிகைபின்னர்
வைத்தவைகாசியாதிமருவியதிங்களாந்தும்
வித்தகபகலிற்கன்னல்விரிந்திடுநிசியிற்குன்றி.

நிசி - இராக்காலம். (௭)

விருச்சிகமாதியாகவிளம்பியதிங்களாந்தும்
உரைத்திடுபகலிற்கன்னலுறுமூறைறகுறைந்தேயல்லில்
தரைத்தலந்தோறுஞ்சோதிச்சக்கரத்தடிதான்மெல்லத்
திருத்தகச்சுழலவாங்குச்சேர்நுனிவிரைந்துசெல்லும்.

அல்லில் - இரவில். (௮)

படிபுகழ்நாள்கடம்மிற்பகர்ந்தசக்கரத்திற்பாதி
இடனெனமருவப்பாதிவலனெனவிருக்குமாற்றால்
வடதிசையயனமென்னவருருவன்மகரமாதி
நடைபெறுமதியோராறினிலம்புகழ்வெய்யோன்

படி - உலகம், வெய்யோன் - சூரியன், வடதிசையயநம் - உத்தராயணம். (௯)

தென்றிசையயனமென்னச்சேர்குவன்கடகமாதி
ஒன்றியமதியோராறினுறுமுறையுரைக்கும்வெய்யோன்
வன்றிறற்பரிதிமேவமானதோத்தரமென்றோது
வென்றிகொண்மலையின்மீதுவிளங்குநாற்பதிநாற்றிக்கில்.

தென்றிசையயநம் - தக்ஷிணயநம். (௧0)

கீழ்த்திசையமரர்கோமான்கெழுமியதெய்வயானம்
வாழ்த்திடமருவுந்தெற்கின்மறலிவாழ்நகரொன்றுண்டால்
தாழ்த்தலின்மேற்குமேவுந்தமனியத்தகடுபொற்கா
ஊழ்த்தகத்தொளிருங்முலோசனையுரைக்கின்மாதோ.

அமரர்கோமான் - இந்திரன், தெய்வயானம் - தெய்வவிமாநம். (௧௧)

வடதிசைதனதன்மேவிவளர்விபாவரியென்றோதும்
நெடுநகர்பொருந்துமிங்ஙனிகழ்த்தியநகர்கடம்மின்

சுடரவனுதிப்பவொன்றிற்சொன்முறைநகரமூன்றும்
படுநிசிநென்மாலேபமுதிலாவுச்சியாமால்.

தனதன் — குபேரன். (கஉ)

கருதுமூவைந்தென்றோதுங்கன்னலிற்கதிர்செய்வெய்யோன்
ஒருநகரிருந்துமற்றோர்நகருறினிரண்டுகோடி
விரவுமுப்பானேழ்முக்கால்விளம்பியவிலக்கமான
புரையிலோசனையாந்தூரம்பொருந்துறக்கழியுமன்றே.

முப்பானேழ் - முப்பத்தேழு, புரையில் - குற்றமில்லாத. (கங)

பானுவானவனோர்நாளிற்பமுதிலாவொன்பான்கோடி
ஊனமிலாதவெண்ணேடுற்றிடுமைம்பத்தொன்றே
ஆனசிலக்கமென்னவறைந்தயோசனையுஞ்செல்வான்
மானதோத்தரமென்றோதுமலைமிசைவலந்தமன்றே.

பானுவானவன் - சூரியன். (கச)

வெய்யவனுதயங்காணும்வீறுயர்நகர்க்குநேரா
மையறுதிக்கின்மேவுமாநகர்க்கிருள்செய்மாலை
பையவந்துறுதலாகும்பரிதிதான்மறைவதில்லை
செய்யபொன்மேருவென்னுஞ்சிலைநிழல்பரப்பமாதோ.

வெய்யவன் - சூரியன், பரிதி - சூரியன், மையறு - குற்றமற்ற (கரு)

செப்பியநியவெய்யோன்சேர்ந்திடுமொளிசெந்தீயின்
தப்பறவிருக்குஞ்செந்தீச்சார்ந்திடுமொளியுமெல்லின்
ஒப்பறுமிரவிதன்னினுறும்பகலொளியுமெல்லில்
அப்புவினிருக்குமப்பினல்லிருள்பகலும்வைக

வெய்யோன் - சூரியன், எல் - பகல், இரவி - சூரியன். (கசு)

அணிசெயுநாபிமூன்றோராறெனுநேமியீரா
றிணையறுமாரமாகியமைன்றவாண்டுருவமான
தணிவிலோராழிவேதச்சந்தசோரேழுமேழும்
பணிசெயப்பூண்டபச்சைப்பரிதினகரன்றேர்க்கன்றே.

அணி - அழகு, பச்சைப்பரி - பச்சைக்குதிரை, தினகரன் - சூரியன். (கஎ)

பேருறுசெக்கேபோலப்பிறங்குவானேங்குசெம்பொன்
மேருவினுச்சிமீதேதவிளங்கவோர்தலையைக்கோத்துச்
சேருமோர்தலையோராழிசெறிந்ததோரச்சினீளம்
ஏருறுநூற்றைம்பத்தேழரையெனுமிலக்கமாமே.

ஏர் - அழகு. (கஅ)

மன்னுமவ்வொற்றையாழிமானதோத்தரத்தின்மேலாய்த்
துன்னியவானின்மீதேசுழன்றுறுஞ்சுடரோன்றேர்க்குப்

பன்னியபாகனென்னும்பழுதிலாவருணனும்
அன்னதேரேறிவெய்யோற்கபிமுகமாகச்செல்லும்.

சுடரோன் - சூரியன், அருணன் - சூரியன் தேர்ப்பாகன், வெய்யோற்கு - சூரியனுக்கு, அபிமுகமாக - நேர்முகமாக. (கக)

ஆதபன்றேரினேறியாயிரங்கதிராயென்றென்
றோதியங்குட்டமென்னுமளவிற்றுமுருவுவாய்ந்த
மேதகுபன்னீரைந்தாயிரரென்றுவிளம்பமேவும்
மாதவமுயன்றவாலகில்லியர்வழுத்துவாரால்.

ஆதபன் — சூரியன், அர்குட்டம் - பெருவிரல் (உ0)

தாமரைத்தவிசின்மேலான்றருபுலத்தியனேயாதி
தோமறுமுனிவர்திங்கடொறுமுறைமறையினேத்தி
வாமமார்பரிதித்தேரின்வருகுவார்வடந்தொட்டீர்ப்பார்
ஏமமாமுறையின்மேவியெழிற்கிராமணியர்மாதோ.

தாமரைத்தவிசின்மேலான் - பிரமன், தோம் - குற்றம், வாமம் - அழகு. (உக)

வருகதிர்ப்பரிதித்தேரைவாசுகிமுதலினோர்கள்
ஒருமதிக்கொருவராகியுறுமுறைபரிப்பர்சேர்முன்
திரிகுவராக்கரென்பார்செப்புகந்திருவராயோர்
புரையறமமுதகீதம்புகழ்ந்தனர்பாடுவாரால்.

பரிதித்தேரை - சூரியரதத்தை, பரிப்பர் - தாங்குவர். (உஉ)

கலிவிருத்தம்.

தேனிமிர்குழலிளந்திங்கள்வாணுதல்
மேநகைமுதலியவிளங்கரம்பையர்
வானுயர்வடவரைவலங்கொடேகிய
பானுவின்றிருமுனம்பரடியாடுவோர்.

தேன் - வண்டு, இமிர் - ஒலிக்கின்ற. (உ௩)

ஆறறியாசவவ்வருக்கனோடிவண்
கூறியவெழுவகைக்குழுவினோர்களும்
வீறுயருலகுசீர்மேவநன்முறை
மாறகன்மதிதொறும்வலங்கொள்வார்களால்.

அருக்கன் - சூரியன், மாறு அகல் - மாறுபாடில்லாத. (உச)

வையகம்படைத்தல்செய்மலரிலண்ணலும்
பொய்யறுமாயனும்புகன்முக்கண்ணனும்
ஐயசெங்கதிர்களோராயிரந்திகழ்
வெய்யவனுமெனவிளம்புநூல்களே.

மலரிலண்ணல் - பிரமன். (உரு)

என்றலும்வேந்துமவ்வெழில்கொண்மேருவை
வன்றிறற்சூரியன்வலங்கொள்வானெனின்
ஒன்றியவிராசியினுறுவதெங்ஙனம்
நன்றுரையெனமுனிநவிற்றுமாலரோ.

வலங்கொள்வானெனின் — வலம்வருவானாயின். (உசு)

சூரியன்வலங்கொடுசுற்றுமென்றது
பேருருச்சக்கரம்பெற்றநற்கதி
கூரியமேலவைகொண்டதாமவன்
ஏருறவிடன்வரவிசைப்பக்கேட்டியால்

ஏருற - அழகாக, இடன்வர - இடம்வர. (உஎ)

வலன்வரக்குயமகன்வனைந்தசக்கரத்
திலங்கியாங்கிடன்வருமெறும்புபோன்மெனக்
குலவியநற்கதிக்கோள்களெல்லாமாங்
குலவிராசியிலெலாங்குற்றுமேவுமே.

குயமகன் - குலாலன், கோள்கள் - கிரகங்கள். (உஅ)

கலிநிலைத்துறை.

வெய்யவன்கவிமாலெனுமூவரும்விதியர்
மையறும்மதியொன்றொருராசியின்வதிவார்
பொய்யறிமகனோரிரண்டொன்காலொன்றிற்பொருந்தும்
செய்யவககிரனொன்றரைமதியொன்றிற்சேரும்.

கவி - சுக்கிரன், மதி - மாசம், வதிவார் - தங்குவார். (உகூ)

மன்னுராசியோவொன்றினின்மருவுமோராண்டு
துன்னுபேரெழிற்பொன்முனஞ்சொல்லியகாரி
உன்னிரண்டரையாண்டுமொன்றரையாண்டு
பன்னுகின்றசீரிராகுவுங்கேதுவும்படரும்.

பொன் - வியாழம், காரி - சனி. (௩0)

குற்றமற்றசேய்முதலியவைந்தெனுஞ்சேணும்
கற்றைவெங்கதிர்க்கடவுளையருகுறக்கலந்தின்
பெற்றறைந்திடுத்தமனப்பெயர்பேரும்
மற்றையப்பெயரக்கதிரசன்றுறின்மாதோ.

சேய் - செவ்வாய். (௩க)

சொன்னவைந்தெனுங்கோள்களுந்துனைவுநற்சமஞ்சீர்
மன்னுமந்தமென்றுரைத்தமுக்கதியொடுமருவும்
பன்னுவக்கிரக்கதியினைப்பகர்ந்தவக்கிரத்தை
அன்னசெங்கதிர்க்கருகுமால்புகரடைந்துறுமால்.

துனைவு - விரைவு, புகர் - சுக்கிரன். (௩உ)

குருவுமந்தனுஞ்சேயுமென்றிசைத்தகோண்மூன்றும்
மருவிராசிமுன்னாகியைந்தெனவருமிடத்தின்
பரிதிசென்றுறின்வக்கிரன்சேர்ந்ததைப்பரிதி
உரைசெயொன்பதென்றுறுமிடத்துற்றிடினொழிக்கும்.

பரிதி - சூரியன். (௩௩)

பன்னுதன்கலைதேய்ந்துறும்வளர்ந்துறும்பக்கம்
என்னிரண்டினிற்பிதிர்களுக்கிராப்பகலாக்கிச்
சொன்னதிங்கடோறும்பிதிர்கணத்தொடுஞ்சுரர்க்கும்
உன்னுநல்லமுதளிக்குபுமதியுயிரோம்பும்.

அளிக்குபு - அளித்து, (கொடுத்து). (௩௪)

வெள்ளிமாமழைபொழிதரமிகவிளைவிக்கும்
உள்ளுவப்புறினெழிற்புதன்காற்றையுண்டாக்கும்
தள்ளரும்பழிதழைத்திடச்செய்தருஞ்சனிதான்
தெள்ளுநான்மறையோர்க்குநன்றல்லனசெய்யும்.

நன்றல்லன - தீமைகள். (௩௫)

கலி விருத்தம்.

விரியுநீள்கதிர்சேரும்வியாழமாம்
பொருவிலாப்புலவோர்தொழும்புங்கவன்
தெரியுநான்மறையோர்கடிருவுற
உரைசெய்வானினுலாவியொளிக்குமே.

பொருவிலா - ஒப்பில்லாத, புங்கவன் - தேவன். (௩௬)

எனவிசைத்தவிருந்தவனேர்செய
வனைபொலங்கழன்மன்னனைநோக்கியேழ்
கனைகடற்புவிமேற்ககனத்திடை
தனிகிடந்தவுலகினைச்சாற்றுமால்.

இருந்தவன் - பெருந்தவத்தினன், ஏர் - அழகு. (௩௭)

சூரியமண்டல முரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்,— ௬௩௬.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.



# ஆறுவது
# மேலுலகுரைத்த வத்தியாயம்.

கலிநிலைத்துறை.

பரிதிவானவன்மண்டிலமேற்பகரிலக்கம்
உரைசெயோசனைகடந்தபினுடுபதியுறையும்
மருவுமண்டிலமாமிதன்மேல்வயாருடுசேர்
பொருவின்மண்டிலமத்துணையினைந்திடப்பொருந்தும்.

உடுபதி - சந்திரன். (௧)

உடுவின்மண்டிலமேலிரண்டிலக்கம்யோசனைவிட்
டிடனகன்றுறும்வெள்ளிதன்மண்டிலமிதன்மேல்
அடன்மிகுந்திறலரசவத்துணைகடந்தப்பால்
சுடர்விரிக்குறுமதிமகன்மண்டிலந்துலங்கும்.

அடல் — வெற்றி, திறல் - வலி, மதிமகன் - புதன். (௨)

சோமனல்கியபுந்திமண்டிலத்தின்மேற்சொற்ற
நாமயோசனையிரண்டிலக்கமுநடந்தொரீஇந்தால்
பூமகன்றிகழ்மண்டிலமிதன்மிசைப்பொன்சேர்
வாமமண்டிலமத்துணையிறந்தபின்வயங்கும்.

சோமன் - சந்திரன், வயங்கும் - பிரகாசிக்கும் (௩)

பொன்னின்மண்டிலத்திறுக்குமேற்புகலிரண்டிலக்கம்
மன்னுகின்றயோசனைகடந்திருஞ்சுடர்வயங்கத்
துன்னுமண்டிலஞ்சனியின்மண்டிலமெனச்சொல்வார்
இன்னமண்டிலமேல்வடக்காகவேழ்முனிவர்.

பொன் - குரு. (௪)

பொருந்துமண்டிலம்பத்தொடொன்றிலக்கமாப்புகல
விரிந்தயோசனைகடந்தபின்விண்ணிடைவிளங்கும்
இருந்தமண்டிலமேற்பதின்மூன்றெனுமிலக்கம்
வரைந்தயோசனைகடந்தபின்றுருவமண்டிலமே.

விண்ணிடை - ஆகாயத்தில். (௫)

உலவுகின்றவானுடுக்களையொளிசெயுங்கிரணன்
நிலவுநற்கிரணங்களைநிலைபெறநிறுவி
அலகிலன்புடைத்துருவனுங்கமர்ந்துறைபதத்தை
இலகுவண்புகழ்சேர்விண்டுபதமெனவிசைப்பார்.

நிறுவி - நிறுத்தி, அலகில் - அளவில்லாத. (௬)

கிளர்ந்தநற்கிரகங்களேமுதற்கிளர்வான்மேல்
விளங்கியாவையும்வாயுபாசத்தினால்வீக்கி

வளங்கொளஞ்சிஞ்சுமாரசக்கரத்தினில்வளைந்து
துளங்குசக்கரச்சிரமிசையுறைகுவன் றுருவன்.

கிளந்த - சொல்லப்பட்ட, கிளர் - விளங்குகிற, வீக்கி - கட்டி. (எ)

மன்னுகின்றகுண்டலினிபோல்வளைந்துவால்கீழாய்த்
துன்னுசிஞ்சுமாரத்தவயவந்தொறுஞ்சூழ்ந்து
மின்னுகின்றநாள்விதிமுதல்விண்ணவர்தருமம்
பன்னுகின்றவேழ்முனிவரருறைகுவர்பரிவால்.

அவயவம் - உறுப்பு, விதி - பிரமன். (அ)

மாலையேநிகர்த்திடுமெனவயங்கெழிற்றுளவ
மாலையேயணிமார்புடைமாலுருவென்ன
மாலைநீக்கினர்புகழ்சிஞ்சுமாரத்தைவணங்கி
மாலையாம்பொழுதேததுவர்மருவுவரறனே.

மாலை - மேகத்தை, மாலை - மயக்கத்தை, மால் - திருமால், மாலை - மாலைக்காலம்.

அவனிமேற்றிகழாதவன்மண்டிலத்தளவும்
புவவுலோகமென்றியம்புவர்புகன்றமண்டிலமேல்
எவருமேத்துமத்துருவன்வாழெழிற்பதங்காறும்
கவிஞர்தாஞ்சுவலோகமென்றுரைசெய்வர்கருதின்.

புவவுலோகம் - புவர்லோகம், சுவலோகம் - சுவர்லோகம். (க0)

துருவன்வாழ்தருபதத்தின்மேற்றுகளறத்துலங்கு
மருவுசீர்மகாலோகமிவ்வுலகின்மேல்விதியும்
பொருவிலாச்சனலோகமங்கதன்மிசைப்பொருந்தும்
தருமயோகியாசாரந்துறைதருதவலோகம்.

துகள் - குற்றம், உறைதரு - வாழ்கின்ற. (கக)

கண்ணகன்றவிவ்வுலகின்மேற்கவின்செயக்கிளரும்
பண்ணமைந்தசீருலகினின்முச்சகம்படைத்த
தண்ணறுங்கமலத்தவிசுகந்தவன்றயங்கும்
எண்ணிறந்தசீர்ச்சத்தியலோகமென்றிசைப்பார்.

கவின் - அழகு, தயங்கும் - விளங்கும். (கஉ)

என்றுகூறியிவ்வுலகெலாமிறையவர்வழுத்து
மன்றலார்பசுந்துளவினனுருவெனவழங்கி
வென்றிவேலவகீழுலகேழையும்விளங்க
நன்றுகூறுதுங்கேளெனச்சுகமுனிநவிற்றும்.

பசுந்துளவினன் - திருமால். (கந.)

மேலுலகுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—சாருஉ.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.



ஏழாவது

# கீழுலகுரைத்தவத்தியாயம்.



அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அணிதிகழவனியின்கீழதலநல்விதலமாக
மணிதிகழ் சுதலம்வண்மைமருவியதலாதலந்தான்
இணையறுமகாதலஞ்சீரிலகியரசாதலஞ்சேர்
பணிதிகழ்பாதலம்பேர்பகருலகேழுண்டன்றே.

அவனி - பூமி. (௧)

சாற்றியவுலகமேழுந்தயங்குவாறொன்றுக்கொன்றாங்
கேற்றிடுமயுதமென்றேயியம்பியோசனைவிட்பூதக்
தோற்றிடுமகலங்கீழ்மேற்றொன்முறையலிகிட்டமேவும்
. மாற்றருவளமவ்வானநாட்டினுமல்குமன்றே.

அயுதம் - பதினாயிரம், அல்கி - குறைந்து. (௨)

தழைவுறுபொழிலும்புள்ளுந்தயங்கியவுறையுமாங்கு
விழையுறுபகலிதென்றுமேவியவிரவிதென்றும்
மொழிவதவ்வுலகுக்கில்லைமொய்ம்மயுறிருளோச்சிக்கும்
புழையுறுமெயிற்றுப்பேழ்வாய்ப்புயங்கநன்மணிகளம்மா.

புழை - துவாரம், புயங்கம் — பாம்பு (௩.)

தேனினமுரலுங்கூந்தற்சிதரரிமழைக்கட்செவ்வாய்ப்
பானலங்கடந்தசிஞ்சொற்பணைமுலைமகளிரோடும்
தானவராக்கர்நாகர்சாற்றுமூவகையுள்ளோரும்
ஊனமில்லாதவிவ்வேழுலகினுமுறைவர்மாதோ.

தேனினம் - வண்டின்கூட்டம், முரலும் - சத்திக்கிற, பால்நலம் - பாலின்சுவை.

விரிதலையரவமேவும்விதலத்திருட்டிக்கீசன்
புரிகுழலுமையாள்கொங்கைபுல்லினன்பொலியுமன்னோன்
அரியவீரியந்தானுங்கோராடகநதியாயோடும்
கரையின்மீப்புலர்ந்தசேறுங்காஞ்சனமாகுமாதோ.

ஆடகநதி - சுவர்ணநதி. (௫)

மனுமுதலாயினோருமாயினுமாய்வுறாநல்
வினையுறுபுகழினோடுவிளங்குமாவலியென்றோதும்
புனைகழன்மேலோனின்னும்புகன்றிடுஞ்சுதலந்தன்னின்
கனைகடற்றுயின்மால்வாயில்காப்பவாங்கிருக்கின்றானால்.

மாயினும் - இறந்தாலும், கனைகடல் - ஒலிக்கின்றகடல். (௬)

பேசுமாவிருநூற்றைந்தெண்பெறுபெருந்தலையராய
வாசுகியாதிநாகர்வதிந்தபாதலத்தின்கீழா

ஒசனைபலபோம்பின்னருற்றொளிபொதுளுமாங்குத்
தேசுறுசேடனென்போன்சேர்ந்துலகளிப்பான்மன்னோ.

வதிந்த - வாழ்கின்ற, பொதுளும் - தழைக்கின்ற. (எ)

வேறு.

ஆயிரம்பகுவாய்முழைஞ்சுகொப்புளிக்குமாரழற்பிழம்பினுஞ்சேர்ந்து
காயும்வெஞ்சினக்கட்கனலினுங்காலக்கடையினிலுலகங்கள்யாவும்
தீயெழக்கனற்றியாவையுமொழியநிற்றலாற்சேடனென்றொருபேர்
மேயசெஞ்சுடிகைப்பஃறலையநந்தன்மெய்த்தவர்வழுத்தவீற்றிருக்கும்.

அழல்பிழம்பு - தீத்திரள், காலக்கடையினில்-கடைகாலத்தில், கனற்றி-எரித்து.

ஊழிவாயுலகமுழுவதுமுருக்குமுமையவள்கொழுநனுமொல்காப்
பாழிவாய்ச்சேடன்செழுமணிச்சூட்டுப்பணுடவிப்பரப்பிடைப்பரவை
ஆழிசூழுலகோரணுவெனத்தாங்குமென்னலுமுழுவதுமறைந்தாய்
தாழுனாகமெய்விடத்தனகொல்சாற்றெனமறையவன்சாற்றும்.

முருக்கும் - சங்கரிக்கின்ற, ஒல்கா - அழியாத, பணுடவி - படக்காடு. (அ)

கீழுலகுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருந்தம்—கூசக.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.



## எட்டாவது

## நரகவியலுரைத்தவத்தியாயம்.



கலிவிருத்தம்.

துன்பமுற்றறந்துன்னலர்தாழ்தரும்
கொன்பழுத்தநிரயங்குறிக்குறின்
மின்பழுத்தவைவேலவுலகின்கீழ்த்
தென்புலத்திற்செறியுமெனன்பவே.

அறந்துன்னலர் - பாவிகள், தாழ்தரும் - தங்குகின்ற, நிரயம் - நரகம். (க)

பழிபடைத்தபலநரகங்களின்
அழிவிலாத்துயராருமமர்வுற
மொழியுந்தாமிச்சிரமுதலாகநால்
எழுவகைத்திறையாகுநரகமே.

இறையாகுநரகம் - தலைமையாகிய நரகங்கள். (உ)

நெஞ்சம்வைத்துநிதிமுதலாகவே
வஞ்சமற்றபிறர்பொருள்வவ்வினோர்

நஞ்சமொத்தநமன்படர்தள்ளவோர்
தஞ்சமற்றதாமிச்சிரஞ்சார்குவார்.

நமன்படர் - யமகிங்கரர். (௩)

மைந்தரோடுமனைவியராதியோர்
சிந்தைகூர்துயர்சேர்ந்திடச்செய்தவர்
வெந்துநாப்புனலின்றிமெலியுமா
றந்ததாமிச்சிரத்தையடைவரால்.

நாபுனல் இன்றி - நாவில்நீரில்லாமல். (௪)

வாடிமாழ்கவுயிர்கள்வருத்துவோர்
கோடிகாலமுளங்கொடுத்தேயெழு
ஓடியோடிநமன்றமருற்றுடல்
நாடிமோதரவுரவநண்ணுவார்.

வாடிமாழ்க - வருந்திமயங்க. (௫)

நம்பினோர்பிதாநான்மறையோர்பசு
வெம்பிவாடமிகுந்துயரீட்டுவோர்
தும்பிபோற்கருந்தூதுவர்சூழ்ந்துறக்
கும்பிபாகநரகங்குடிகொள்வார்.

துயர்ஈட்டுவோர் - துன்பஞ்செய்வோர். (௬)

மறுக்கலாத்தம்மறைநெறிவிட்டுளோர்
வெறுக்கவந்துவிழியெதிர்த்தூதுவர்
கறுக்கயாக்கையைக்கன்னலின்றுண்டுபோல்
அறுக்கவீழ்வரசிபத்திரவனம்.

மறுக்கலா — விடவொண்ணாத, கன்னல் - கரும்பு. (௭)

சிந்தியாவபவாதந்தெரித்திரும்
புந்தியிற்றுயர்பூட்டுவெம்புன்மையோர்
அந்தராய்மசகாதிவருத்திட
அந்தகூபவருநரகாழ்வரால்.

சிந்தியா - நினைக்கவொண்ணாத, அபவாதம் - நிந்தை, அந்தர் - குருடர். (௮)

பெருக்குமாமுலைப்பேதையராடவர்
செருக்கினாற்பிறர்க்காமுறச்சேர்வரேல்
கருக்கயாக்கையைக்காந்தெரிசிந்துறும்
உருக்குதூண்டழுவுந்நரகொன்றுவார்.

ஆடவர் - புருடர், பேதையர் - மாதர், செருக்கினால் - அகங்காரத்தினால். (௯)

அரியநற்சவுசாதிகளற்றவர்
விரிமலத்தின்விளங்களறெய்துவார்

தருமசேதுவைத்தள்ளுமறிவிலோர்
மருவுவார்வைதரணியின்மன்னனே.

மலத்தின் - மல்த்திறல், அளறு - நரகம். (கO)

பத்தியின்றிப்படிற்றொழுக்கநெஞ்சின்
வைத்துநன்மறிமாய்க்குமகத்திஞேர்
முத்தியின்றிவாய்மூக்கொடுமூச்சறப்
பொச்கிமாய்க்கப்புகுவர்நரகமே.

படிற்றொழுக்கம் - வஞ்சகநடை, மறிமாய்க்கும் - ஆட்டைக்கொல்லுகின்ற. ()

விள்ளரும்பொய்விளம்பிவிருப்பொடு
கள்ளருந்துங்கசடர்தம்வாய்வயின்
ஒள்ளழல்வைத்துருக்குசெம்பூற்றிடத்
தள்ளுவெந்நரகத்திடைச்சார்வரால்.

வாய்வயின் - வாயினிடத்தில், ஊற்றிட - வார்க்க. (கஉ)

அருந்துமன்னமளித்தியென்றுற்றநல்
விருந்திஞேரைவிழிகொடுசுட்டவர்
பருந்துகோடிபறித்துணப்பாவையை
வருந்திமன்னரகத்திடைவாழ்குவார்.

விழிகொடுசுட்டவர் - கடுமையாய்ப்பார்த்தவர். (கங)

நேயமற்றநெடும்பகையாற்சுடு
தீயைவைத்துச்செழுமனைதீப்பவர்
காயமுற்றுங்கடித்துக்கணக்கிலா
நாயலைக்குநரகம்புகுவரால்.

நெடும்பகை - தீராப்பகை, மனைதீப்பவர் - வீட்டை எரியூட்டுவோர், அலைக்கும்-வருந்துகின்ற. (கச)

நேயத்தானனிநெஞ்சமழிந்துசொல்
தாயத்தார்மடவாரைத்தழுவிஞேர்
வீயுற்றேறம்குவீரியச்சேற்றினை
மாயத்தூதர்மடுக்கவுங்குண்பரால்.

வீயுற்று - இறந்து. (கடு)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மோகமுற்றொருவன்பூண்டமுழுமணிகளவிற்கொண்டோர்
ஆகநொந்துயங்கக்கற்போலாங்கனற்றிரளுண்பாரால்
சேகறுமறையோர்வாடத்தீமைமிக்கியற்றிஞேர்தாம்
சூகரமுகமென்றேறதுஞ்சுடுநரகெய்துவாரால்

உயங்க - வருந்த, சேகு - குற்றம், சூகரம் - பன்றி. (கசு)

நரபலிநயந்துசெய்தோர்நலிதரவுடலங்கீறிச்
சொரிதருமுதிரமுண்போர்சூழ்தருநரகஞ்சேர்வார்

உரைதருநடலையோர்தாமொளிவிசிமதியென்றேதும்
நிரையமேற்றலைகீழாகநெடுமலைநின்றுவீழ்வார்.

நலிதர—வருந்த, உதிரம் உண்போர்—ரத்தபானம்செய்வோர், நடலையோர்-பொய்யர்.

தன்னைத்தான்புகழ்வோர்சாராக்கருத்தமாரகஞ்சார்வார்
முன்னம்வெந்துயரந்தன்னுன்முனிவொடுமடைந்தோர்தம்மைத்
துன்னிவந்தலைப்போர்மிக்கதுயரொடுபுலம்பிவீழ்வார்
மன்னுமாரவுரவப்பேர்மருவியநரகமாதோ.

அலைப்போர் - வருத்துவோர். (கஅ)

வந்தோர்முறையிற்றம்பால்வழங்குவாருமவண்டேர்க்குப்
புந்தியோடுதவார்கீடபோசனநரகிற்போவார்
நைந்திடவுயிரைப்பாந்தளாதியானவிவித்தோர்தாம்
தந்தசூகரப்பேருற்றதனிநரகெய்துகிற்பார்.

கீடபோசனம் - புழுவுணவு, பாந்தள் - பாம்பு. (க௯)

குற்றமொன்றிழைத்திலாரைக்கொணர்ந்துமுன்கோறல்செய்தோர்
வெற்றிசேர்கொடியசூலமிடைநூறு நரகம்வீழ்வர்
உற்றிடுநிதியின்றுப்பையொழியுமென்றுநவாலுந்தர்
அற்றமில்துயர்செய்சூசிமுகநரகமுந்துவாரால்.

இழைத்திலாரை - செய்யாதவரை, கோறல்செய்தோர் - கொன்றவர், அற்றம் இல் - முடிவற்ற. (உ0)

புண்ணியம்புரிந்தோர்விண்ணிற்பொருந்தியசேடமார்ந்த
மண்ணிடைப்பிறத்தல்போலமருவும்பாவஞ்செய்தோர்
எண்ணுறுநரகமெய்தியியைந்தவச்சேடமார்ந்த
நண்ணுவார்நிலக்கண்யாருநலனறிந்தியம்பமாதோ.

சேடம் - மிச்சம், மார்ந்த - அநுபவிக்க, நிலக்கண் - நிலத்தின்கண். (உக)

எண்டிசைநரகமீரேழுலகமென்றிசைத்தவெல்லா
அண்டமவ்வண்டமேல்கீழ்ப்புறத்துள்ளயாவும்
ஒண்டுளவமலன்றாலவுருவமாமுணர்க்குங்காலை
வண்டிமிர்தொடையாயிவ்வாறறிகுநின்மருவும்வீடே.

ஒண்டுளவமலன் - திருமால். (உஉ)

என்றுவாளரசுகேட்பவியம்பினன்முனிவனீரும்
வன்றிறலுலகமெல்லாமனத்திடையறிந்துபார்க்கின்
ஒன்றியமாயன்றாயவுருவினையுணர்ந்ததாகும்
நன்றிருந்தவத்தீரென்னநவிற்றினன்சூதன்மாதோ.

இருந்தவத்தீர் - பெரியதவத்தினரே. (உ௩)

நரகவியலுரைத்த வத்தியாயம முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—கூகூச.

ஐந்தாங்கந்தம் முற்றிற்று.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

# ஆருங்கந்தம்.

## முதலாவது

## அசாமிளன் கதையுரைத்தவத்தியாயம்.



கலிவிருத்தம்.

பன்னுமோர்பதிஞன்குலகத்தொடு
கொன்னுலாவுகுணத்தநரகமும்
சொன்னவாறுதுகளறக்கேட்டலும்
மன்னர்தாழ்கழன்மன்னவன்கூறுவான்.

கொன் - அச்சம், துகள்அற - குற்றமற. (௧)

செய்யும்வல்வினையாற்சிமிழ்ப்புண்டவர்
வெய்யவாநரகத்திடைவீழ்வுரு
துய்யுமாறுமுளதுகொலென்னலும்
ஐயமோவவறவனறைகுவான்.

சிமிழ்ப்புண்டவர் - கட்டுண்டவர், ஐயம்ஓவ - சந்தேகம்நீங்க. (௨)

தீயவாநரகத்திடைச்சேர்பவர்
தூயநாண்மலர்தூவியளவிலா
ஆயபேரிஞென்றுயினுமோதியம்
மாயன்றுள்வணங்காமதிகேடரே.

நாள்மலர் - புதுப்பூ, தூவி - அர்ச்சித்து. (௩)

தீமையுற்றவச்செய்வினைநீக்குவான்
வாமமுற்றுவருநல்வினையிஞல்
ஓமமுற்றிவினைபுரிவோரரி
நாமமுற்றிலரேனன்மையுற்றிலார்.

வாமம் - அழகு, நல்வினை - புண்ணியம். (௪)

தாமமார்பதழல்வினையால்வினை
போமிங்கென்றல்பொருந்துவதன்றரோ
சேமமார்ந்தவத்தீவினைநீக்கிமால்
நாமகீர்த்தனமேநலஞ்செய்யுமே.

தாமம் - மாலை, தழல்வினையால் - அக்நிகாரியத்திஞல், சேமம் — இன்பம் (௫)

வேறு.

காராய்விசும்பாய்க்கதழ்வளியாய்வெங்கனலாய்
நீராய்நிலஞகிநின்றதனிநேமியான்
ஓராயிரநாமத்தொன்றொருகாலோதினர்மற்
றுராயினுமவ்வளறுபடியார்களே.

கார் - மேகம், வளி - காற்று, நேமியான் — சக்ராயுதத்தையுடைய திருமால். (௬)

கன்னியாகுச்சமெனக்கட்டுரைக்குநீர்வளஞ்சேர்
நன்னகரானுங்கொருநாரணாயனுவெனவே
சொன்னதனுற்பாவந்தொலைந்தேதுயக்கறுசீர்
பன்னுதுங்கேளென்றேபகரமுனிமேயினுல்.

நன்னகரான் — நல்லநகரத்தையுடையவன், துயக்கு - பந்தம், சீர் - பெருமை, பன்னுதும் - சொல்வோம். (எ)

வீழுமழலையளிவீழ்ந்துநறைபருகிச்
சூழுமுளரித்தொடைதாழ்தடமார்பன்
ஆழியுலகமசாமிளனென்றுரைப்ப
வாழுமொருவன்மறைநூல்வடித்துணர்வோன்

மழலைஅளி - வண்டுக்குஞ்சு, நறை - தேன், முளரித்தொடை - தாமரைமாலை, தாழ் - தொங்குகின்ற. (அ)

ஈன்றோனபணிப்பவிறைவழிபாடாற்றுதற்குத்
தேன்றோய்செழுங்கனியுந்தெனுடுபண்வண்டரற்றும்
கான்றோய்மலருங்கவர்ந்துதருவிக்குருவி
வான்றோயநீடுவளர்காவினின்றெழுந்தான்

ஈன்றோன் - பெற்றவன், வழிபாடு - வழிபடல், அரற்றும் - ஒலிக்கின்ற, கான் வாசனை. (கூ)

வேளான்மரபின்மெல்லியலாண்மட்டருந்தி
யாளார்மலர்க்காநறுநிழலினிற்கின்றுள்
நீள்வேல்பொருதுநெறிக்குவளைவென்றவிழி
வாளாலெறியக்கலங்கிமதிமாழ்கினனுல்.

மட்டு—கள், அருந்தி - குடித்து, மலர்க்கா - பூஞ்சோலை, மதிமாழ்கினன் - அறிவு மயங்கினுன். (கo)

கோதினெறியான்கோற்றொடிதன்பாலெகும்
பேதைமனத்தைப்பிடிக்கவுநில்லாதெழவே
தாதையொடுதன்மனையாடனைமறந்தே
காதலெனும்வாரிக்கரைகாணுதுற்றனனுல்.

கோதுஇல் - குற்றமில்லாத, பேதைமனம் - அறியாமையுள்ளமனம், தாதை- தந்தை, வாரி - கடல். (கக)

காந்திமதியிற்கதிர்செய்பருமுத்தணிந்
தேந்திவளருமிளமுலையாள்செவ்விநலம்
மாந்திமயங்கிமலைவுண்டுநல்லொழுக்கம்
நீந்தித்தனதுநிலையினிழிந்தொழிந்தான்.

காந்தி - ஒளி, மதியின் - சந்திரன்போல, கதிர்செய் - ஒளிசெய்கின்ற. (கஉ)

காமுறுசேயிழைபாற்காதலரொன்பதின்மர்
ஏமுறவந்துதிப்பவெண்பத்தெட்டியாண்டுறைந்தான்

# ஐந்தாங்கந்தம்

தேமழலைமென்சொற்சிறுவனொருவனுக்கு
நாமம்புனைந்தனனாராயணனெனவே.

ஏமுற - இன்பம் உண்டாக, உதிப்ப - பிறக்க. (கரு)

வேராவிதிர்விதிராமெய்தளராவுள்ளாவி
சோராவிறந்துதொலையுமமையத்தின்
ஓராமறையோனொருகாற்றன்காதலனை
நாராயணாவெனவேநாவாலழைத்தனனால்.

வேரா - வேர்த்து, விதிர்விதிரா - நடுநடுங்கி, மெய்தளரா - உடல்தளர்ந்து, ஆவி சோரா - உயிர்சோர்ந்து, அமயத்தின் - சமயத்தில், ஓரா - அறிந்து. (கச)

வேறு.

அழைத்தவனிறக்குமுன்னதிரும்வாளெனத்
தெழித்தனர்யமபடர்சென்றுதீப்பட
விழித்தனர்வைதனர்வெய்யவாளுறை
கழித்தனர்வீசினர்காலபாசமே.

தெழித்தனர் - அதட்டினார்கள், யமபடர் - யமகிங்கரர். (கரு)

மறுத்தலைமணக்கலாமதியமாமென
எறிக்கும்வெண்சங்கினரேந்துநேமியர்
நறைத்துழாய்ப்பரஞ்சுடரன்பர்நண்ணினர்
அறுத்தனர்பாசநல்லறமுணர்த்தினார்.

மறு - களங்கம், தலைமணக்கலா - சேராத, மதியம் - சந்திரன், எறிக்கும் - ஒளி வீசுகின்ற. (கசு)

பத்திசெய்தாயினும்பகைசெய்தாயினும்
வித்தகனொருவன்பேர்விளம்பற்காயினும்
ஒத்துநாராயணாவெனவுரைப்பரேல்
கொத்துவெம்பாதகங்குலைந்துசாம்புமால்

வித்தகன் - ஞானவுருவன், கொத்து - கூட்டமாகிய. (கஎ)

மெய்வினைநீக்குநாலெழுத்துவெங்கொலை
மைவினைப்பாதகமாற்றியங்கிநெய்
பெய்வினைமுதலியபிராயச்சித்தமாம்
செய்வினைக்குறையையுந்தீர்க்குமென்பவே.

அங்கி - நெருப்பு. (கஅ)

முத்தியிற்பொருந்துநாலெழுத்துமுன்னுவோர்ப்
புத்தியினழுக்கினைப்போக்கிப்பொய்யறச்
சுத்தமாம்படிமிகத்துலக்குஞ்சொல்லிய
சித்தமாம்வினைக்குமோர்சிவனாகுமே.

முன்னுவோர் - நினைப்பவர் (கக)

தும்மினுமிருமினுந்துயரமிக்குளம்
விம்மினும்வீழினும்வினைசெய்போதினும்
அம்மவிந்நாலெழுத்தறைவரேலவர்
செம்மலர்மால்கழல்சேர்தறிண்ணமே.

செம்மலர் - செந்தாமரைமலர்போன்ற. (உ0)

ஆதலானிந்தநாலெழுத்தசாமிளன்
ஓதினனொருமகவுரைக்குமேதுவாத்
தீதெலாமொழிந்தனன்செப்பினீதுநம்
நாதனேயுரைசெயுநடமிதேனென்றார்.

உரைக்குமேதுவா - அழைத்தல்காரணமாக. (உக)

ஆற்றலந்திகிரியானன்பர்வல்லையின்
ஏற்றனர்பாசநீக்கியம்பல்கேட்டலும்
காற்றெனநமன்றமர்கலங்கியோடினர்
கூற்றொருவிளைதிறங்கூறினாரரோ.

ஆற்றலந்திகிரியான் - திருமால்; வல்லையின் . விரைவாக (உஉ)

மற்றதுகேட்டலுமறலிநோக்கிநீர்
பற்றுதற்குரியனோபகவனாமமொன்
றிற்றிடுமமைதியினியம்பினனவன்
உற்றவெந்தீவினையொருங்குபோயதால்.

மறலி - யமன், இற்றிடும்அமைதியின் - இறக்குங்காலத்தில் (உ௩)

திருமறுமார்பனைச்சிந்தைசெய்யுபு
பரவுறுதொண்டரெம்பகவராகுவார்
அரவணையான்கழலடையப்பெற்றிலார்க்
குரியதெம்மாணையென்றுணர்ந்துகொள்ளிரால்.

சிந்தைசெய்யுபு - சிந்தித்து, பகவர் - சுவாமிகள். (உ௪)

பணியணைதுயில்வுறுபரமவிந்திரை
கணவசெந்தாமரைக்கண்ணவாகமா
மணிநிறவண்ணவென்பவர்மருங்குநீர்
அணுகன்மினென்றனனறத்தின்வேந்தனே.

பணியணை - சர்ப்பசயனம், இந்திரை - இலக்குமி, ஆகம் - திருமேனி, அறத்தின்வேந்தன் - யமன். (உ௫)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆழியானன்பராங்குரைத்தேதகவசாமிளனகங்குழைந்தன்றே
தாழிருங்கூந்தன்மனைவியைமறந்துதாதைசொல்கடந்தனனே

ஊழுறக்கொடியவினைபுரிந்தேற்குமுதவியதொருபெயரென்னின்
வாழிமாறுமகீர்த்தனமல்லால்வருகதியில்லெனமதித்தான்.

கொடியவினைபுரிந்தேற்கும் - கொடுந்தொழிலாகியபாவத்தைச்செய்த எனக்கும், மதித்தான் - மனவுறுதிகொண்டான். (உசு)

பெருகுமுள்ளன்பான்மாயவன்பெயரேபேசினனவன்றிருவுருவே
கருதினன்கங்காத்துவாரமுற்றுறைந்துகருத்தினையொருப்படுத்தடக்கி
அருளொடுமுன்னமடைந்தமாலன்பராங்குறக்கண்டவரோடும்
விரிகதிர்விமானமேறினன்ஞானந்தமான்மருங்குவீற்றிருந்தான்-

கருதினன் – நினைத்தான், ஒருப்படுத்து - ஒருமைப்படுத்தி, மான்மருங்கு - திருமாலின்பக்கத்தில். (உஎ)

நெறியினிற்பிழைத்தவசாமிளன்றனுநேமியந்தடக்கையாறுமம்
அறிவிலனொருகாற்கூறலாலுயர்வீடடைந்தனனம்மமற்றறிந்து
நறைவிரிதுளவப்படலையந்தாராறுமமேயுரைசெயப்பெற்றார்
உறுவினைத்துவக்குநீத்துவீடடைதலுரைப்பதென்னரசவென்றுரைத்தான்.

நெறியினிற்பிழைத்த - அறநெறியில்தவறின, நறை - தேன், துளவப்படலை- துளசிமாலை, வினைத்துவக்கு - வினைப்பிணிப்பு. (உஅ)

இயம்புமிக்காதைபொதியிலின்மேயவிருந்தவக்குறுமுனியெமக்கு
நயம்பெறவுரைத்தவாறுநிற்குரைத்தேநவிலுவோரீதுகேட்பவர்தாம்
பயந்தருபாவத்தொடர்புவிட்டொழிந்துபரமவீட்டுலகினைப்படர்வார்
வயங்குவாளரசவெனவழங்கினனுன்மாசறுசுகமுனிமாதோ.

குறுமுனி - அகத்தியமுனி, நவிலுவோர் - சொல்லுவோர், பாவத்தொடர்பு-பாபசம்பந்தம். (உகூ)

அசாமிளன் கதையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

## இரண்டாவது
## தக்கன்படைப்புரைத்த வத்தியாயம்.

அண்டரோடவுணர்முதலினர்படைப்பையாதியாமனுவுறைகாலத்
தெண்டகுமுறையீதெனத்தொகைபெறவேயியம்பினையின்னுநீவிரித்துப்
பண்டைநான்மறையினியல்புளிப்பகர்திபளகிலாநற்றவவெனவே
விண்டொரதப்பேர்வேந்துரைக்குதலுமேதகுசுகமுனிவிளம்பும்.

அண்டர் - தேவர், மறையினியல்புளி - வேதமுறையினால், பளகு - குற்றம், விண்டொரதப்பேர்வேந்து - பரீக்ஷிந்ரேந்திரன். (க)

கண்ணுதலரியபழமறையொருங்குகசடறத்தேர்ந்துமுன்வினையின்
மண்ணிடைப்பதின்மர்மகவெனவழங்கமாரிடையிடத்துவந்துதித்த

தண்ணறுந்தொடைதாழ்தக்கனும்வேந்தன்றயனைமிகப்பெறுபாக்கு
விண்ணவர்புகழும்விந்தியமலையின்வீறுயர்சாரன்மேயினனால்.

பெறுபாக்கு - பெறும்பொருட்டு. (உ)

கோட்டுமால்விந்தக்குலவரைச்சாரற்குலவகமருடணைபெனுமோர்
மோட்டுநீர்வாவிமுழுகியதக்கன்முருகவிழ்துளவினன்கமலத்
தாட்டுணைநினைந்துதவஞ்செயச்செய்யதாமரைத்தடங்கணெம்பெருமான்
வேட்டுநாரதனேமுதலினர்பரவவிண்ணிடைக்கலுழன்மீதெழுந்தான்.

கோட்டு - சிகரத்தையுடைய, மால் - பெரிய, மோட்டு - பெருமையுள்ள, தாட்டுணை - இரண்டுதிருவடி, செய்யதாமரை - செந்தாமரைமலர். (ங)

தண்டையுங்கடகமகுடமுங்கலையுந்தனியெழிற்கவுத்துவமணியும்
எண்டரும்புயமுமிலகமுன்னெழுந்தவியன்மறைமுதலியைவிழியால்
கண்டுளங்குளிரக்களிகொளுந்தக்கன்கமலநாண்மலர்ப்பதம்வணங்கிக்
கொண்டலேயடியேற்கருளெனவழுத்தக்குவலயமளந்தவன்கூறும்.

மறைமுதலி - திருமால், குவலயமளந்தவன் - திரிவிக்கிரமன். (ச)

புரிந்தநின்றவத்தாலுளநனிமகிழ்ந்தேம்புகலசிக்கினியெனும்பெயர்சேர்
விரும்பெழிற்பஞ்சசனன்றருமணங்கைவேட்டுநீ டைத்தியென்றுரைத்துக்
கருந்துழாய்ப்பரமனகன்றபின்றக்கன்கழறசிக்கினிதனைமணந்து
திருந்தெழிற்பதினாயிரமகவளித்தச்சிறுவரைப்பண்டைத்திரென்றுரைத்தான்.

நனி - மிகுதியாக, கருந்துழாய்ப்பரமன் - திருமால். (ரு)

மைந்தரவ்வுரைகேட்டொருப்படுமுளத்தர்மருவினர்விரைந்துபோய்க்குடக்கின்
சிந்துசாகரத்திற்கலந்திடுமாங்குச்செறியுநாராயணசரசின்
விந்தைசேர்மாலையுளமிசைப்பொறுத்துவிழுத்தவம்புரிதருகாலை
நந்தவிலறிவுநாரதன்கொளுத்தநடந்தனர்தாதைசொல்வெறுத்தே.

• விழுத்தவம் - மேலானதவம், நந்தவிலறிவு - கெடுதியில்லாத அறிவு, கொளுத்த - ஊட்ட. (சா)

நன்னர்யாழ்முனிசொனுடியமைந்தர்நடந்ததுகேட்டயர்தக்கன்
பின்னரும்பதினாயிரமகவின்றுபெருகநீர்படைமினென்றுரைப்ப
அன்னவர்தாமுமவ்விடனணுகியருந்தவம்புரிவுழியடைந்து
முன்னரேபோலம்முனியுரைத்தமையான்முன்னவர்போலவேகினரால்.

யாழ்முனி - நாரதன். (எ)

நாரதன்மீட்டுமுரைத்ததுகேட்டுநண்ணியம்முனிமுகநோக்கிச்
சீருறுகாமநுகர்ந்தபினல்லாற்சேருங்கொன்மனத்தொழிலறந்தான்
ஆரொழிற்சிறுவர்க்கொழிவறமுரைத்தாயம்மநன்றுனதறிவென்றும்
ஓரிடனன்றியுழல்கெனச்சபித்தானுருத்தெழுதக்கனெஞ்சுடன்றே.

ஒழிவறம் - துறவறம், உருத்து - கோபித்து. (அ)

அரிநெடுங்கண்ணியிளமுலைத்துவர்வாயசக்கினியணிநலந்துய்த்து
விரிபுகழ்தக்கன்மீட்டுமோராறுபான்மெல்லியலாரையீன்றவருள்

ஒருபதுமடவாரறக்கடவுளுக்குமொருபதின்மூவர்க்காசிபற்கும்
இருபதோடெழுவரிமகான்றனக்குமினிதுவப்புறவுதவினனால்.

துவர் - பவளம், இமகரன் - சந்திரன். (க)

பூதனென்போனுக்கிருவரைக்கொடுத்தான்புகழ்பெறுமங்கிராவினுக்குச்
சூதுறுமுலையாரிருவரையளித்தான்சொல்கிருசாச்சுவன்றனக்குத்
தாதவிழ்குழலாரிருவரைத்தந்தான்சாற்றியதாக்கியாயனுக்கு
மாதரோர்நால்வர்தமைவழங்கினனான்மறையுணர்தக்கனுண்மகிழ்ந்தே.

சூது - சொக்கட்டான்காய். (க0)

குழைகிழித்துலவுமதரநெடுங்கட்குமுதவாய்க்குறுநகைமடவார்
அழகுறுமகிணர்தடவரைமார்பமன்பொடுபுணர்ந்தினிதுயிர்ந்த
குழவிகடம்மாலுலகமோர்மூன்றநகோதறநிறைந்தவிம்மடவார்
விழைவுறுபெயருமுயிர்த்தவம்மைநசர்வீறுசால்பெயருமீங்கறைவாம்.

குழை - காதணி, மகிணர் - கணவர். (கக)

மதிநுதற்பானுவசுமருத்துவ் திவளரெழிற்சாமிவிச்சுவைசேர்
கதிர்முலைமுகூர்த்தைசாத்தியையிலம்பைககுபுசங்கற்பையாம்பதின்மர்
துதியுறுதருமன்விழைவுறமனையார்சொன்மனையார்களிற்பானு
இதமுறுவேதவிடபனையிவனல்லிநதிரசேனனையீன்றாள்.

மதிநுதல் - பிறைபோலுநெற்றி, விழைவுறு - விரும்புகிற (கஉ)

வசுவெனுமடந்தைவசுக்களையீன்றாண்மற்றவர்பெயரினைவகுக்கின்
இசையுறுதுரோணனிலங்கியபிராணனேதுசீர்த்துருவனல்லருக்கன்
வசையுறுதோடனக்கினிவத்துமன்னியவிபாவசுவென்பார்
நசையுறுமிந்தவெண்மருஞ்சாலநல்கினர்புதல்வரைமாதோ.

சால - மிகுதியாக, நசை - ஆசை (கங)

விளம்பெழின்மல்குவிச்சுவையென்பாள்விச்சுவதேவரையீன்றாள்
வளந்தருமணிப்பூட்சாத்தியைமகிழ்ந்துமன்னுசாத்தியர்தமையுயிர்த்தாள்
தளர்ந்தநுண்ணிடையாளெனுமருத்துவதிசாற்றியமருத்துவரோடும்
அளந்தறிவரியவரிந்தமன்கலையேயாகுநற்சயந்தனையளித்தாள்

மணிப்பூண் - ரத்நாபரணம், அரிந்தமன்கலை - விஷ்ணுவினமிசம். (கச)

முருந்துறழ்மூரன்முகூர்த்தையென்றுரைப்பாண்முகூர்த்தர்கடமையுவந்தீன்றாள்
சுரும்பிமிர்குழலாள்சாமியாமணங்குதுருக்கநற்றெய்வநல்கினளால்
மருந்தெனமொழியுமெழில்கொள்சங்கற்பைவயங்குசங்கற்பனையளித்தாள்
கருங்குழலிலம்பைமின்னிடியுயிர்த்தாள்ககுபுசங்குடுவனைத்தந்தாள்.

முருந்துறழ் - மயிலிறகினடிபோன்ற, மூரல் - பல், சுரும்புஇமிர் - வண்டுகளொலிக்கிற. (கரு)

ஆரலேமுதன்மூவொன்பதுநாளாமவிரெழிற்பிணுக்களைமணந்த
சீர்பெறுசோமன்மனைவியரிடத்திற்சிறுவரைப்பெற்றிலன்கயநோய்

பேர்பெறவழங்குசாபத்தாற்பெற்றுப்பெற்றனன்பின்னருந்தவத்தால்
ஏர்பெறுகலைகண்முறைமுறைவளருமியற்கையுமெய்தினனன்றே.

ஆரல் - கார்த்திகை, பிணைக்களை - பெண்களை, சோமன் - சந்திரன். (கசு)

பூதனென்றுரைப்போன்பூந்தொடைபுனைந்துபுலகியமகளிரைப்புகலின்
தாதடர்குழலாள்பஞ்சதாமோதைதன்னொடுசுரபியாமவரின்
ஏதமிலெழில்சேர்பஞ்சதாமோதையியம்புபூதங்களைமீன்றாள்
ஓதியசுரபிபற்பலகோடியுருத்திரர்ப்பொறையுயிர்த்தனளால்

பொறையுயிர்த்தனள் - பெற்றாள். (கஎ)

ஆரணமறைதேரங்கிராவென்போனணைந்தவம்மகளிரையறையின்
தாரணிகுழலார்சுதைசதியென்னச்சாற்றுபேரிருவராங்கவரின்
பேரணிவிளங்குஞ்சுதையெனும்பெயராள்பெற்றனள்பிதிர்களாசசதிதான்
காரணவேதமெனப்புவிபுகழ்ந்துகருத்தருவாணரைமீன்றாள்.

தார் - பூமாலை (கஅ)

பெரும்புகழ்க்கிருசாக்சுவனகலந்தோய்பேதையர்வாய்பெயர்ப்பெயரின்
திருநெதழிலருசிதநென்றுசொல்லணங்குதிடனையெனபாருமாந்திடனை
விரும்புநல்வேதசிரசனைமுதலாவிளம்பொருமுவரையளித்தாள்
சுரும்பிமிர்கூந்தலெனுமருசிதைதுதூம்பிராம்கணையீன்றாள்.

அகலம் - மார்பு. (க௯)

நான்கெனுமறைதேர்காசிபனென்போனன்மணம்புணர்ந்தநால்வர்கடாம்
தேன்கமழலங்கல்விநதைகத்துருபூசெறிகுழூப்பதங்கியாமினியாம்
வான்கொளும்புகழ்சாலிவர்களின்விநதைவணபுகழருணனொடுசுரர்
ஊன்கொளுந்திகிரிப்பரமனைப்பரிக்குமொண்டிறற்கருளனையுயிர்த்தாள்.

அலங்கல் - பூமாலை, ஊன் - தசை. (௨0)

ஒண்ணகைத்துவர்வாய்க்கத்துருவென்பாளுரகரையுயிர்த்தனளுவப்பின்
பண்ணெனுமொழியாள்பதங்கியூரமணங்குபதங்கமேமுதலியபயந்தாள்
தண்ணறுங்குழலாள்யாமினிவிரும்பிசசலபதமுதலியதந்தாள்
எண்ணருங்குணஞ்சால்காசிபன்மனையாரீன்றவரியல்பெடுத்துரைப்பாம்.

துவர் - பவளம், பதங்கம் - விட்டிற்பூச்சி. (௨க)

விதிமுதுமறைதேர்காசிபன்வேட்டமெல்லியலார்பெயர்விளம்பின்
அதிதிநற்பிரியைதிதிதனுக்காட்டையணிகெழுமரிட்டைவான்சுரசை
மதிபுரைவதனவினைமுனிகுரோதவசைமகிழ்தாம்பிரைசுரபி
புதுமலர்க்குழலாள்சரமையெவ்வுலகும்புகலுஞ்சீர்ததிமியெனப்படுமால்

மதிபுரைவதனம் - சந்திரன்போன்றமுகம். (௨௨)

உரைதருமடவார்தங்களிற்சரமையுயிர்த்தனள்சுவாகதக்குழுவைச்
சுரபியீன்றெடுத்தாள்பசுமுதலாகச்சொல்லிருகுளம்பவாம்விலங்கைத்

தரைபுகழெழில்சேர்தாம்பிரையென்பாடந்தனள்பறவையின்றெழுதி
அரிமதர்நெடுங்கண்முனிவியுனவிசைப்பாளரம்பையர்தமையளித்தனளால்.

சுவாகதம் - கிளி, குழு - கூட்டம். (உங)

இனமலர்க்குழலாடிமியெனுமேமைழயீன்றனணீரின்வாழுயிரை
நினைவுறும்வலிசேர்யாதுதானவரைநிகழ்த்தியசுரசையைப்பற்றனளால்
தனுவுவந்தீன்றூடானவர்தமையத்தானவர்சம்பரனொடுதார்
புனைவிடபருவாமுதலியவறுபான்பொருந்துமொன்றென்னுமெண்ணினரால்.

இனமலர்க்குழலாள் - கூட்டமாகிய மலரையணிந்த கூந்தலையுடையவள். (உச)

விரும்பெழிலதிதியுயிர்த்தநற்சிறுவர்விவாச்சுவானரியமாப்பூடா
வருகதிர்த்துவட்டாவயங்குசொற்சவிதாமன்னியபகன்வளர்தாதா
அருந்திறல்விதாதாமித்திரன்வருணனூர்ந்தசீர்ச்சக்கரனருஞ்சீர்
பொருந்துருக்கிரமனென்றுபன்னிருவர்போற்றுமாதித்தியராவார்.

எழில் - அழகு, வயங்கு - விளங்குகிற (உரு)

சாற்றுயர்குரோதவசையெனுமாதுதந்தசூகங்களைத்தந்தாள்
வேற்றடங்கண்ணளரிட்டையாமணங்குவிஞ்சையர்தமைவழங்கினளால்
ஏற்றசீரிளைதான்றருக்குழுவோடிமினர்க்கொடிதொடக்கத்தவீன்றூள்
கோற்றொடிக்காட்டையிருகுளம்பல்லாக்கோதறுவிலங்குயிர்த்தனளால்

தந்தசூகம் - பாம்பு. (உசு)

வெங்கதிர்விச்சுவானெனவுரைப்போன்விளங்குவைச்சுதமனுவை
அங்கண்மாஞாலம்புகழ்தருங்கூற்றையருந்திறல்யமுனையையளித்துப்
பொங்குநன்மனையாள்சாயையோருருவாம்பூவையைப்புணர்ந்தபின்சனியைத்
தங்குமோர்பெயர்ச்சாவன்னியாமனுவைத்தபதியென்பாளொடுமுயிர்த்தான்.

அங்கண்மாஞாலம் - அழகிய இடத்தையுடைய பெரியவுலகம். (உஎ)

வழங்கியகதிர்சேரரியமாவென்போன்மானிடர்தமைமகிழ்ந்தளித்தான்
விழைந்திடும்புதல்வர்ப்பெறுதவன்பூடாவிளம்பியதக்கன்முன்னியற்று
முழங்கழல்வேள்வியடைந்துபல்லிழந்தமுறைமையால்வேள்விகடொறுஞ்சீர்
தழைந்துநுண்மாவேயயிலுமென்றுரைத்துத்தவமுனிபின்னருஞ்சாற்றும்.

அயிலும் - உண்ணும், சாற்றும் - சொல்வான். (உஅ)

தக்கன்படைப்புரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—நிஎ.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.



# மூன்றாவது

## இந்திரன்விச்சுவரூபனைக்குருவாக்கொண்டவத்தியாயம்.

### கலிவிருத்தம்

வலிகெழுமசுரர்தங்குலத்துமங்கையைப்
பொலிதருமலர்த்தொடைபுனைந்துவேட்டிடும்
தொலைவறுபுகழ்த்துவட்டாவெனும்பெயர்
மிலைகதிர்க்குதித்தனன்விசுவருபனே.

மலர்த்தொடை - மலர்மாலை, கதிர் - சூரியன். (௧)

வெற்றிவேலவுணர்தங்குலத்துமெல்லியல்
முற்றிழையணிமுலைமுயங்கிச்செங்கதிர்
பெற்றவம்மதலையைப்பெட்பிற்கொண்டனன்
கொற்றவாளிந்திரன்குரவனாகவே.

குரவன் - குரு. (௨)

என்றலுமதிக்குடையிறைவனென்னைகொல்
துன்றுசெங்கதிரினுக்குதித்தோன்றலைக்
குன்றெறிகொற்றவன்குரவனுக்குநல்
மன்றநீயுரைக்கெனவழங்குமாதவன்

குன்றெறிகொற்றவன் - இந்திரன். (௩)

அண்ணல்வாளிந்திரனரும்பவிழ்ந்தபூந்
தண்ணறாப்பிலிற்றுபொற்றருவினீழலின்
எண்ணிலாவிஞ்சையரியக்கர்கின்னரர்
விண்ணவரடிதொழவீற்றிருந்தனன்.

நறா - தேன், பிலிற்றுதல் - சிந்துதல். (௪)

முழுமறையந்தணன்முன்னமெய்தலும்
செழுநிதிச்செருக்கினாற்றெரியகிற்றிலன்
எழுகலனிருந்தனனெரிபொற்றாதுண
மழலைவண்டரற்றுதார்வானவேந்தனே

முழுமறையந்தணன் - பிரமன், எழுகலனிருந்தனன் - எழாதிருந்தான். (௫)

அண்ணலங்குரவன்வந்தணுகலாயிரங்
கண்ணுடையிந்திரன்கண்டிலானெனின்
மண்ணிடைக்காண்பர்கொல்வந்துற்றார்தமை
எண்ணருநிதிச்செருக்கெய்தினாரரோ.

அண்ணல் - பெருமை. (௬)

பனியிருவிசும்பகம்பொலியப்பைந்தொடை
வளைமுகிலிந்திரன்வைகநோக்கினன்

இனிதிவனரசிருப்பென்றுபோயினன்
தனிமறை:யானெனச்சாற்றுமேன்மையான்.

விசும்பகம் - விண்ணுலகம். (எ)

ஏயதன்னரசிருப்பெழுந்துவல்லையே
போயினன்குரவனென்றறிந்துபோயுழி
ஆயிரங்கண்ணினனடையக்கண்டிலன்
மாயையின்மஸறந்தனன்மறைவல்லாளனே.

வல்லை - விரைவாக. (அ)

எள்ளினன்குரவனையிகலழிந்திடும்
அள்ளிலைத்தருநிழலமர்விண்வேந்தென
வெள்ளிதன்னருள்பெறுவெய்யதானவர்
ஒள்ளழல்வாளமருடற்றினரோ.

எள்ளினன் - இகழ்ந்தான். (கூ)

இந்திரனுடைந்துபோயேழிரும்பொழில்
தந்தவனடிமலர்தாழ்ந்துநிற்றலும்
அந்தணனருள்பெறாதடைந்ததித்திறம்
வந்ததென்செருக்கெனவழங்கன்மேயினன்.

பொழில் - உலகம். (கo)

அலர்கதிரருள்சுதன்விசுவருபனாய்
நிலவுமிழ்கவிகையாய்நினக்குநேரிலாக்
குலமறைதெரிக்குமோர்குரவனுமெனின்
இலகுவாளமர்விறலெய்தும்மன்றனன்.

சுதன் - புத்திரன். (கக)

விழுப்புகழிந்திரன்விரிஞ்சனொடோரீஇ
அழற்கதிர்மைந்தனையடைந்துபன்முறை
வழுத்தினனதியான்வந்துற்றேனருள்
கொழித்திடுகுரவனுகென்றுகூறுவான்.

விழுப்புகழ் - பெருங்கீர்த்தி, விரிஞ்சன் - பிரமன், ஓரீஇ - நீங்கி. (கஉ)

இளையவராயினுமினியகல்விமிக்
குளரெனின்மூப்பினர்க்குரித்திறைஞ்சுதல்
தளையவிழ்தாரிமையோர்கடம்மொடும்
வளர்புகழ்மறைவலோய்வணங்குவேனென்றான்.

இறைஞ்சுதல் - வணங்குதல், உரித்து - உரிமையுடைத்து. (கங)

மகபதிசொற்றலுஞ்செல்வம்வந்துறின்
அகமிகமகிழுபவசடராதலின்

நகவிலையெனக்கிஃதெனினுஞ்சாற்றிய
நிகரறுமுனதுரைநீக்கவல்லனே.

மகபதி - இந்திரன். (கச)

எனவுரைபற்பலவியம்பியின்னன
துனியறுகதிரவற்குதித்தசொல்புகழ்த்
தனிமறைதேர்ந்தவன்சார்ந்துவைகினன்
குனிசிலைவானவர்குரவனாகவே.

துனி - அச்சம், வானவர்குரவனாக - தேவர்குருவாக. (கரு)

போக்கறுபொன்னுலகளிக்கும்புங்கவன்
ஆக்கியநரவனுங்கறத்திறனுரியான்
காக்கவென்றுரைத்தசொற்கவயந்தாங்கினன்
தாக்கினவுணரைச்சமரின்வென்றனன்.

போக்கறு - குற்றமற்ற, கவயம் - கவசம். (கசு)

மழையுறழ்வண்கையாயெனவுமன்னனும்
விழைமகபதிக்குவன்விசுவரூபன்முன்
கழறுநாராயணகவயஞ்சொன்முறை
மொழிதியென்றுரைப்பமெய்ம்முனிவன்கூறுவான்.

மழைஉறழ் - மேகத்தைநிகர்த்த. (கஎ)

இந்திரன்விச்சுவரூபனைக் குருவாக்கொண்ட வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—மாச.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.



நான்காவது

## நாராயணகவசமுரைத்தவத்தியாயம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அரும்புனல்படிந்துபுனிதமுற்றங்கநியாசமாங்கடைவுடனியற்றித்
திருந்தியமறைசொல்கரநியாசமுந்தான்செய்ம்முறைதிருத்தகப்புரிந்து
வரந்தருமாயன்மலர்ப்பதத்துணையைமனத்திடைமருவுறக்கருதிப்
புரந்தரன்றனக்குவிச்சுவரூபன்புகலுமால்கவயத்தைப்புகல்வாம்.

மால்கவயம் - நாராயணகவசம். (க)

மலர்ந்தசெங்கமலமலர்மகண்மறுவார்மார்வமும்வாளிகேடகம்வாள்
இலங்கெழிலாழிவளைகதைபாசமிருஞ்சிலைதரித்தவொண்கரமும்
நலந்தருகலுழன்புயத்தினிதுறைந்தநளினமென்பாதமுமாக
வலந்தரமுன்வந்தெங்குமெப்பொழுதுமாயவன்கருணையிற்காக்க.

மறு - ஸ்ரீவத்ஸம், கேடகம் - பரிசை. (உ)

கலிவிருத்தம்.

புகழ்பெருமீனுருவெடுத்தபுங்கவன்
அகமகிழ்தந்துநீரடைந்துகாக்கவிச்
சகமிசைவாமனன்சார்ந்துகாக்கவேர்
மிகுநிலமளந்தமால்விசும்பிற்காக்கவே.

ஏர் - அழகு. (௩)

பன்னியவளைமுதற்பலவரண்களின்
துன்னுவெஞ்சமத்திடைத்தோன்றலுற்றுமுன்
மன்னுவெங்கனகனைமாய்த்தமைந்துடை
நன்னலஞ்சேர்நரமடங்கல்காக்கவே.

சமம் - போர், மைந்து - வலி. (௪)

வெற்றியாண்கேழலாய்விளங்குமேலவன்
பெற்றிடுவழிதொறும்பெரிதுகாக்கவே
நற்றவநரன்சொனாராயணன்னனி
உற்றவர்பற்றெலாமொழித்துக்காக்கவே.

ஆண்கேழல் - ஆண்பன்றி (௫)

தசரதன்மதலையாமிராமன்றன்றுணை
இசைதருமிளவலோடினிதியைந்திருந்
திசைதொறுந்திசைதொறுஞ்செப்புங்காலெலாம்
விசயம்வந்துறநனிவிரைந்துகாக்கவே.

விசயம் - வெற்றி. (௬)

கழைதிகழ்கார்வரைக்கவினுஞ்சாரலின்
மழைதவழ்குவட்டின்மீமருவுபோழ்தெலாம்
பழமறைமொழிதருபரசுராமனுள்
விழைவொடுகுறைவறவிரைந்துகாக்கவே.

கழை - மூங்கில், மழை - மேகம், குவடு - மலை. (௭)

சிந்தையுண்மகிழ்தத்தாத்திரையர்தீங்கற
மந்திரவில்வழிவந்துகாக்கவே
பந்தமிலிடபனும்பைந்துழாய்முகில்
சந்ததங்குளிரிற்றாபத்திற்காக்கவே.

குளிரில் தாபத்தில் - குளிர்வெப்பங்களில். (அ)

கருதருஞ்சீர்திகழ்கபிலனன்பொடும்
இருவினைக்கட்டறுத்தினிதுகாக்கவே
தரைபுகழ்மறைதெரிசனற்குமாரன்முன்
பொருமதன்றருதுயர்போக்கிக்காக்கவே.

மதன்தருதுயர் - காமத்துன்பம். (௯)

வெறுப்பொடுபகைக்குழுமிடையும்வெங்கொலை
மறத்தினிற்பொலிதருவழிகடோறும்வந்
தறத்தினைநிறுவியவயக்கிரீவனென்
மறைப்பொருளாயவன்வந்துகாக்கவே.

மிடையும் - நெருங்குகிற, அயக்கிரீவன் - குதிரைமுகமுடையவன். (௧௦)

காரதிர்கடலெனக்கவின்செய்வண்ணனைப்
பாரதசமர்த்தலைப்பாவவென்றிசெய்
சாரதிதனைத்தொழுஞ்சமயத்தின்னருள்
நாரதமுனிவரனயந்துகாக்கவே.

பாரதசமர்த்தலைப்பாவலென்றிசெய்சாரதி - பார்த்தசாரதி. (௧௧)

கொழுந்துளவணிந்தபைங்கூர்மமாயமால்
அழுந்தவெந்நரகுறாதருளிற்காக்கவே
வழங்குதன்வந்திரியாயமாயவன்
விழைந்தனாதியில்விளைந்துகாக்கவே.

கூர்மம் - ஆமை. (௧௨)

போற்றுசீர்வேள்வியம்புருடன்போந்தெனைக்
கூற்றடாதன்புளங்கொண்டுகாக்கவே
ஏற்றநற்பலமுனமேயும்ராமன்வெஞ்
சீற்றம்வந்துழிநனிசிறந்துகாக்கவே

கூற்று - யமன், அடாது - வருத்தாமல், பலமுனமேயும்ராமன் - பலராமன். ()

விடலருநான்மறைவியாதனென்பவன்
ஒடிவறுவிஞ்சைமக்குதவிக்காக்கவே
படிமிசையறந்தரப்பௌத்தனாநமால்
கொடியவர்மதங்குறுகாதுகாக்கவே.

விஞ்சை - வித்தை. (௧௩)

பரியுருவெடுத்தறம்புரிக்கும்பச்சைமால்
உரைகலித்தீமைவந்துறாதுகாக்கவே
வருபகலறுவகையாக்கிமுந்துகூ
றருளொடுகேசவனடைந்துகாக்கவே.

பரியுரு - கற்கியவதாரம். (௧௫)

வலஞ்செயவிரண்டெனவகுத்தகூற்றிலான்
குலம்புரந்தளித்தகோவிந்தன்காக்கவே
பலந்தரமூன்றெனப்பகுத்தகூற்றினில்
நலஞ்செய்நாராயணனயந்துகாக்கவே.

ஆன்குலம் - பசுக்கூட்டம், புரந்தளித்த - காத்துரக்ஷித்த. (௧௬)

பொருவிலாநான்கெனப்புகன்றகூற்றினில்
பரிதிநேர்சக்கரபாணிகாக்கவே

அரியசீராங்கெனவுறைந்தகூற்றினில்
வருமதுரூதனன்மகிழ்ந்துகாக்கவே.

பொருவிலா - நிகரில்லாத, பரிதி - சூரியன். (௧௭)

புரைதபவாறெனப்புகன்றகூற்றினில்
உரைதருமாதவனுவந்துகாக்கவே
இரசனிமுகதநினிலிந்தியங்களுக்
கரசனென்றுரைக்குமாலடைந்துகாக்கவே.

புரைதப - குற்றமொழிய, இரசனி - இராத்திரி, முகம் - தொடக்கம். (௧௮)

பன்னுமுச்சகந்தருபற்பநாபியான்
துன்னியநிசிநடுச்சூழ்ந்துகாக்கவே
உன்னுறுபரமமாநிசியிலொண்புகழ்
மன்னியதிருமறுமார்பன்காக்கவே.

நிசிநடு - நடுராத்திரி (௧௯)

களிகொள்சீர்வைகறைகதுவிவண்புகழ்
வளர்சநார்த்தனனுளமகிழ்ந்துகாக்கவே
விளையுநாற்சந்திகடோறமிக்குவந்
தளிசெய்தாமோதரனடைந்துகாக்கவே

வைகறை - விடியற்காலம், அளி - கருணை. (௨0)

கற்றையங்கதிரழற்கடவுள்காட்டகம்
முற்றுவெவ்வரில்களைமுருக்குமாறுபோல்
அற்றமிலயிற்படையரசெனுழிதான்
உற்றபல்பகைதுமித்துவந்துகாக்கவே.

அரில்களை - சிறுதூறுகளை - மூங்கில்களை. (௨௧)

ஆடகமணித்தொடியமலனங்கைசேர்
கேடகஞ்சமர்க்கெதிர்கெழுமிநேர்விழி
மாடகமறைப்பமாற்றலைமாய்த்திருங்
கூடகத்துறைந்தகூர்வாளுங்காக்கவே.

ஆடகம் - பொன், கூடகத்து - உறையில் (௨௨)

கொடியனபூதம்வெங்கூளியேமுதல்
இடிநிகர்தெவ்விளையிரியநூறிநுண்
பொடியெனப்பிதிர்த்துநம்புனிதன்பூங்கைசேர்
தடியொருகுறைவறச்சார்ந்துகாக்கவே.

தெவ்விளை - பகைவரை. (௨௩)

சூதுசெய்பகைக்குழுத்துணுக்கமெய்தியிப்
பூதலத்திரிதரவெருட்டிப்பூவுறை

மாதுள்ளம்விரும்புகார்வண்ணன்வாயில்வைத்
தூதுவெண்சங்கமுள்ளுவந்துகாக்கவே.

குழு - கூட்டம், துணுக்கம் - அச்சம். (உச)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பங்கயச்செங்கணனைப்பரிக்கும்வெம்பறவைவேந்து
பொங்குமின்னருளின்வந்தெப்பொழுதினுமுவந்துகாக்க
தங்ககம்புறம்புதிக்குக்சாற்றியவிதிக்குமேல்கீழ்
எங்குமெப்பொழுதும்வந்தற்றெறுழ்நரமடங்கல்காக்க.

பறவைவேந்து - கருடன், நரமடங்கல் - நரசிங்கம். (உ௫)

மாயவனுமருபம்வாகனம்வாளியாதி
ஆயவெம்படைகள்சேனைக்கணிதிகழ்தலைவனென்னும்
தூயவன்பிராணன்புந்திசொன்மனமாக்கையோடு
மேயவிந்தியங்கடம்மைவிருப்பொடுமிடைந்துகாக்க.

வாளி - அம்பு. (உசு)

என்றரியுருவமாகியிலகும்க்கவயந்தன்னை
வென்றிசெயமரர்வேந்தேவிருப்பொடுதாங்குவாயேல்
வன்றிறற்பகைஞர்தம்மைவல்லையின்வேறியென்று
ஒன்றுவிச்சுவரூபன்றானுரைத்தனனுவந்துமாதோ.

அரியுருவமாகி - விஷ்ணுரூபமாகி. (உஎ)

தழைந்தசீர்விண்டொாதசாற்றும்க்கவயந்தாங்கி
மொழிந்திடுகவுசிகப்பேர்முதுமறையோன்முன்காலன்போய்
விழைந்தயோகத்திலுக்கைவிடுத்தனன்வீடுசேர்ந்தான்
கழிந்தவவ்யாக்கையென்பைக்கடந்தனனுகிவான்மேல்.

விண்டொாத - பரிக்ஷித்துவேந்தே. (உஅ)

செஞ்சிலைநுதலாரோடுசித்திபரதனென்றேறுதும்
விஞ்சையன்போகலாலேவீழ்ந்தனன்றரையில்வீழ்ந்து
வஞ்சமிறவஞ்செய்வாலகில்லியர்மாற்றந்தன்னால்
எஞ்சுமவ்யாக்கையென்பையிருநதிமடுத்துப்போனான்.

மாற்றம் - சொல். (உகூ)

இணையிலிக்கவயந்தாங்குமிருந்தவன்யாக்கையென்பை
அணிதிகழ்வானின்மேலுங்கடப்பரிதாயதென்னின்
மணிநிறவண்ணத்தம்மான்வடிவமாங்கவயம்பெற்றோர்
தணிவறுபெருமையெம்மாற்சாற்றுதற்கெளிதொன்றன்றால்.

கடப்பரிதாயது - வெல்லுதற்கரிதானது. (௩0)

இனையநற்கவயங்கேட்போரியம்புவோர்யாவரேனும்
வினைசெய்வெம்பிணியினின்றார்வேண்டியபெறுபவென்றும்

குனிதிரைக்கடல்சூழ்பார்மேல்கொடும்பகையிலராய்க்கங்கைப்
புனைவழிபொலங்கழற்றாட்புனிதனைப்பொருந்துவாராம்.

பெறுப - பெறுவர். (௩௧)

குரவனைவணங்கிவிண்ணோர்குழுவொடுகுலிசத்தண்ணல்
உரைசெயுங்கவயந்தாங்கியுறுபகைகடந்துவானத்
தரசுசெய்திருந்தானென்னவருந்தவச்சுகனென்றோதும்
பொருவரும்புகழின்மிக்கான்புகன்றனன்மீட்டுஞ்சொல்லும்.

குலிசத்தண்ணல் - இந்திரன், கடந்து - வென்று. (௩௨)

நாராயணகவச முரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௧0௬

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---

ஐந்தாவது

## விச்சுவரூப விருத்திரர்களைக்கொன்ற வத்தியாயம்.

கலிவிருத்தம்.

திசைபுகழ்மன்னபுத்தேளிரிங்ஙனம்
நசையுறுகுரவனுநாமவேதியன்
அசுரர்தமருமகனுகலானவர்
இசையுறக்கரந்தவியீந்துவைகினான்.

புத்தேளிர் - தேவர், அவி - தேவருணவு. (௧)

விருலுடைவலாரிநல்வேள்வியாற்றுழி
மறைநவில்வேள்விநல்லவிமறைத்துமற்
றறைகழலவுணர்தேத்தளிப்பநோக்கினன்
பொறையிலன்குரவன்மேற்புழுங்கிவெட்டினான்.

வலாரி - இந்திரன், அவுணர்தேத்து - அவுணரிடத்தில். (௨)

நஞ்சுவாய்வழிபடநாகம்போன்மென
வெஞ்சினந்தலைக்கொளீஇவேந்தன்வெட்டலும்
செஞ்சுடர்வழங்கியசெம்மன்முத்தலை
அஞ்சிறைப்பறவையாயற்றுவீழ்ந்தவே.

வாய்வழி - வாயில்ஒழுகுகிற, போன்மென - போலுமென்றுசொல்லும்படி. (௩)

வைத்துறுசோமமுமதுவுமன்னமும்
முத்தலைவாயினின்முறையின்மாந்துவான்
அத்தலைகபிஞ்சலங்கலவிங்கம்மணித்
தித்திரியாகவுஞ்சேணிற்போயவால்.

மாந்துவான் - துகரும்பொருட்டு. (௪)

மலைத்தவாளிந்திரன்மறைவல்லானைக்
கொலைத்தொழில்புரிந்தவக்கொடியயாவருங்
தலைத்திடவஞ்சலியானகையொடு
நிலத்தலையளந்தாணினைத்துநீத்தனன்.

அலைத்திட - வருத்த. (௫)

மற்றதுமண்ணிடையுவரும்வார்திரை
எற்றுநீர்யாற்றிடைநுரைபுமின்றளிர்
உற்றமாமரத்தினிற்பிசினுமொள்ளொளிப்
பொற்றொடிமாதர்பாற்பூப்புமாயதே.

உவர் - உளைமண் (௬)

கருவுறுமகளிர்தங்கணவற்சேரவும்
வருகுழிபூமியின்மல்கித்தூரவும்
தருமிசைகுறைத்தலுந்தளிர்க்கவும்புனல்
பெருகவுமவன்வரம்பெட்பினீந்தனன்.

கரு - கருப்பம், குறைத்தல் - வெட்டல் (௭)

கந்தரமுடிச்சுரபதிதன்றோன்றலைக
கந்தரந்தடிந்திடல்காதற்றாதைகேட்
டிந்திரசத்துருவெழுந்துகொல்கென
மந்திரநவின்றுநெய்வழங்கினனழல்

கந்தரம் - கழுத்து, தடிந்திடல் - வெட்டல். (௮)

துய்யதாரணிதுவட்டாவெனும்பெயர்ச்
செய்யவெங்கதிரினாற்சிற்றமீக்கொளா
நெய்பொழிநீடழனின்றுதோன்றினன்
வெய்யதோர்விடமெனவிருத்திராசுரன்.

சிற்றம் - கோபம். (௯)

எற்கடையெழுசெவ்வானெனனுங்குருஞ்சியான்
சொற்கடைபுக்கநற்சுடர்செய்கண்ணினன்
பற்கடைவாயிதழ்நின்னும்பண்பினன்
விற்கடைநாடொறும்வீங்குமெய்யினன்.

எற்கடை - பசலின்முடிவு. (௧௦)

பல்கதிர்க்குழவிவெம்பரிதிகாண்டலும்
வல்லிருளுடைதல்போல்வானுளோரெலாம்
ஒல்லையினுடைதரவுருத்தெழுந்தனன்
மல்லலம்பொருப்பெனமருளுநதோற்றத்தான்.

உருத்து - கோபித்து. (௧௧)

வெஞ்சினவுருமெனவேலைவாயெழு
நஞ்செனநடந்தவந்நாமவேவுழைற்

## ஆறுங்கந்தம்

கஞ்சனைனிந்திரனலங்கலாழியான்
கஞ்சுநாண்மலரடிகண்ணுற்றேத்தினன்.

வேலைவாய் - கடலில். (கஉ)

தளிர்க்குநல்லருளுடைத்ததீசியென்பொளி
கிளைக்கும்வச்சிரப்படையாக்கிக்கேடற
விளைத்தனைவெஞ்சமர்வெல்கவென்றனன்
அளித்தழித்துலகெலாமாக்குமண்ணலே.

சமர் - போர். (கங)

சூட்டுவாளரவணைதுயிலுந்தொன்முதல்
தாட்டுணைதொழுதுயர்ததீசிபாலுரு
வேட்டதுமிகழ்த்தினன்விரைசெய்கற்பகக்
காட்டகங்காக்குமக்காவன்மன்னனே.

ததீசிபால் - ததீசியினிடத்தில், வேட்டது - விரும்பினது (கச)

ஆரழற்பட்டுமண்ணுகுமென்புமற்
றோர்பொருட்டாகவிண்ணுலகுகாவல்செய்
வேரியந்தாரினன்விழையப்பெற்றது
சீரிதென்றுளமகிழ்ந்திறந்திட்டானரோ.

விழையப்பெற்றது - விரும்பப்பெற்றது. (கரு)

நேயவென்பிந்திரனீகொள்வாயெனத்
தாயினுமன்புறுததீசியென்பவன்
ஏயவெங்கானலினீடுகீறொனும்
காயம்விட்டரிகழல்கலந்துமேயினன்.

காயம் - உடம்பு. (கசு)

மன்பெருஞ்சிறப்பினன்மாலைவெண்குடை
மின்பொழிமணிமுடிவேந்தனல்கெனு
என்புமாங்களித்தனனிருந்தவத்தினன்
அன்பினர்யாதுமற்றருளகலாததே-

என்பும் - எலும்பையும். (கஎ)

வெற்புகப்பணைத்ததோள்வேந்தன்மேதகு
கற்பகக்கத்திகைக்கடவுட்டச்சனால்
எற்பமுத்தொழுகுவெள்ளென்புமுன்புறக்
கொற்பழுத்தொழுகுவெங்குலிசமாக்கினன்.

வெற்புஉக - மலைகள்சிந்தும்படி, பணைத்த - பருத்த, கத்திகை - மாலை. (கஅ)

### அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உவவுவெண்மதியினுருவுகொண்டுதிகழொருதனிக்குடைநிழற்றவெண்,
கவரிகாலசையவெள்ளியங்கிரிகடுக்குமால்களிறுகைத்தெழூர்

தவழ்மதத்தெரியன்மார்பன்வெந்திறறழைத்தவச்சிரமெடுத்துவாவு
அவுணர்போர்வலமடங்கநின்றமரராடவெய்யசமராடினான்

கடுக்கும் - நிகர்க்கிற, உகைத்து - செலுத்தி. (௧௯)

கருத்தழிந்தமரினோடுகின்றசுடர்காலும்வேலவுணர்தம்முகம்
உருத்துநோக்கியுடல்கொண்டுநீவிர்களியோடினாலுமுடல்போதன்மெய்
திருத்துபோரிடைமெய்விடுபுவிண்ணடைதறிண்ணமென்றுபலசெப்பலும்
விருத்திராசுரனிறுத்தியிந்திரன்வெருக்கொள்வெவ்வுரைவிளம்புமால்.

உருத்துநோக்கி - கோபித்துப்பார்த்து, விடுபு - விட்டு. (உ0)

குரவனாகுமறையோனையன்றுடல்குறைந்துவெய்யபழிகொண்டவுன்
வரவுகாணினனிதிமைமன்னுமுயிர்மாய்வையிங்ஙனுயிர்மாயுமுன்
அரிதுபெற்றவொருகுலிசம்விட்டதுவுமடலழிந்திடுதலறியென
உரைசெய்தம்புவியளந்தமால்பதமுளத்தினுன்னினனுணர்ந்துவான்.

குறைத்து - வெட்டி, உயிர்மாய்தல் — உயிர்விடல் (உ௧)

அருந்தவன்செவியறைந்திடுங்கதையநந்தரிந்தையினொழிந்திட
வரந்தருந்திருமுகந்தவுந்தியின்மலர்ந்தபங்கயமணந்துபொன்
இருந்தபைந்துளவணிந்தமார்பகவெனாஞ்சொனாமமுளியைந்துநாப்
பொருந்தவென்றுரைநவின்றெழுந்துடல்புரந்தரன்னெதிர்நடந்தனன்.

பொன - திருமகள். (உஉ)

கடலெனக்கடல்கலக்கவெம்பியெழுகாளகூடமெனமன்றனை
மடலவிழ்த்தளிமிழற்றுதாரமரர்மறுகவெண்பிறைமருட்டுகோட்
டடல்விளைத்தவயிராவதப்பகடதிர்ந்திடக்கதைகொடெற்றிடா
உடல்சினத்தவுணனுடல்வெங்களமுழக்கினன்வளைமுழக்கினன்.

வெம்பி - கோபித்து, மறுக - மயங்க, வளை - சங்கு. (உ௩)

அச்சமுற்றமரர்பாறவெண்டிரையடங்கவுண்டெழுமடங்கல்போல்
நச்செயிற்றரவுபோல்வெகுண்டெதிர்நடந்துவேழநுதலெற்றலும்
பச்சிரத்தமுமிழ்கின்றவெய்யகதைபாரில்வீழவழல்காலுமோர்
வச்சிரப்படையின்மண்டுபோரவன்வலக்கரந்துணியவெட்டினான்.

பாற - ஓட, மடங்கல் - வடவைத்தீ, வேழநுதல் - யானைநெற்றி. (உ௪)

பொருகைநன்றெனவியந்துசெங்கணழல்பொழியவெங்கதையெடுத்துமேல்
வருங்ககண்டமரரோடவச்சிரமணிக்கைநின்றுவிழவெற்றிடா
முருகையுண்டளியலம்புமென்முகைமுறுக்கவிழ்ந்ததொடைமார்பினன்
ஒருகைகொண்டுகளிமதமெடுத்தொழுகுமோடைமாவெனவுடற்றினான்.

எற்றிடா - எறிந்து, முருகை - தேனை, அளி - வண்டு, அலம்பும் - சத்திக்கிற.

வச்சிரப்படைநிலத்தின்வீழ்வுறலும்வாசவன்படையெடுத்திலான்
கச்சையங்களிநல்யானைநின்றெதிர்கடாவுகின்றிலனிருத்தலால்

இச்செருக்கறவுவந்தீதென்படையெடுத்தியென்றுதிறலவுணர்கோன்
பச்சைமான்மறையினுச்சிவைத்தவடிபாவிநின்றிஃதுபகருவான்.

கச்சை - யானைகட்டுங்கயிறு, கடாவுகின்றிலன் - செலுத்திலன். (௧௬)

வெற்றியுற்றிடினும்வீரமற்றொழியவெய்யதோல்விநணிமேவினும்
கற்றமேலவர்மகிழ்ச்சியோடுறுகலக்கமோர்சிறிதுகாண்கலார்
கொற்றமாயவனளித்தமாயைசெய்குணங்களென்பருலகோர்கடாம்
பற்றிநின்றசெயலொன்றமன்மரப்பாவைபெற்றசெயல்போலுமே.

தோல்வி - தோற்றல், பாவை - பிரதிமை (௧௭)

நாகமீதுநடனவினுமாயனருள்நண்ணுவோர்கள்சமமாகவே
சோகமோடுநலநாடுவார்களெனிற்சொல்லுமாயனருளன்பனே
மாகநாடுடையமானவேலவமானமென்றுமனநாணலன்
போகவென்றுரைசெயாவுணர்ந்துடல்புழுங்கினைவிழுங்கினன்

நலம் - இன்பம், சோகம் - துன்பம் (௧௮)

வாள்விரிந்தொழுகுவச்சிரப்படையெடுத்துமன்னுதிறலவுணர்கோன்
தோளினோடுதொடிசேரிடக்கையுமொர்துண்டுபட்டுவிழவெட்டியே
காளமேகமொருவெள்ளியங்கிரிகலந்துதாமரைமலர்ந்தபோல்
தானுலாவுகரவெள்ளைமாவின்மிசைநங்குவானமர்தொடங்கினன்.

காளம் - கருமை, வெள்ளைமா - வெள்ளையானை (௧௯)

தருக்கும்வெஞ்சமருழந்தவாளவுணர்தலையழிந்திடவிளைத்தபோர்ச்
செருக்கும்விண்ணவர்செருக்களதிலெதிர்செயலுநோக்கியிமைநீதாக்
கருக்கும்வெங்கனல்கடைக்கணின்றொழுகுகாலவேலவுணனுமெலாம்
வெருக்கொளும்படியெடுத்துவேழமொடுமென்றிவேந்தனைவிழுங்கினன்.

வெஞ்சமருழந்த - கொடும்போர்செய்த, வேழமொடு - யானையோடு. (௨0)

கிளர்ந்தசெம்பொன்முடியண்டகோளகைகிழித்திடதிசைபுயங்களால்
அளந்தவெந்திறல்விருத்திராசுரனகட்டினோர்புடைபடைக்கையால்
பிளந்தெழுந்தனனிரட்டைவெண்பிறைபிறங்குகோட்டுமதமாவொடும்
விளைந்ததேறல்பொழிகற்பகத்தொடைமிலைந்தகொற்றவயவேந்தனே.

அகட்டின் - வயிற்றின் (௨௧)

கலிநிலைத்துறை

விருத்திராசுரன்வெந்தலைதுணியெனவிளம்பி
மருத்தழைந்ததார்வாசவன்வச்சிரம்விடுத்தான்
உருத்தவன்றலையொருபருவத்தினிலறுப்பத்
திருத்துழாய்முகில்பதத்தினிற்காந்தியாய்ச்சேர்ந்தான்.

மரு - வாசனை, உருத்து - கோபித்து. (௨௨)

உலகுளோரெலாங்காண்குறவவுணர்கோனொளியாய்
இலகுமால்பதமியைதலுமிமையவர்முதலோர்

அலகிலாவிடர்போயதென்றலர்மழைபொழிந்தார்
மலர்செய்பூந்தொடைவாசவன்மகிழ்ந்திலன்மாதோ -

அலகிலா - அளவில்லாத, (௩௩)

விசுவரூப விருத்திரர்களைக் கொன்றவத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௩௩௯.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்!



ஆறாவது

## விருத்திரகத்தியை இந்திரன்போக்கிய வத்தியாயம்.



என்றுகூறலும்யாவருமகிழ்ந்தினிதிருப்ப
வென்றிசேர்தவவிறற்படையிந்திரன்மகிழா
தன்றவைகியதென்கொலென்றரசர்கோன்வினவ
நன்றுநன்றுநின்வினவெனநற்றவனவில்வான்.

நவில்வான் - சொல்வான். (௧)

விறன்மிகுந்தெழுவிருத்திராசுரன்றனைவீட்டி
அறம்வளர்ந்திடவருளுதியாசவென்றுரைக்கும்
நிறைபெருந்தவமுனிவர்சொல்கேட்டலுநிணமார்
கறையுறும்படையாயிரங்கண்ணவன்கழறும்.

வீட்டி - கொன்று, ஆயிரங்கண்ணவன் - இந்திரன், கழறும் - சொல்லுவான். ()

முன்னமோர்மறையோன்றனைமுனிந்துமாய்த்தமையால்
துன்னும்வெம்பழிதொடர்தரநடந்துளேவுற்றேறன்
இன்னம்வெம்பழியீட்டுதற்கிசைகலேனென்னப்
பன்னுநான்மறையந்தணர்பழுதறப்பகர்வார்.

மாய்த்தமையால் - கொன்றமையால், ஈட்டுதற்கு - சம்பாதித்தற்கு. (௩)

மிக்கபாதகமியற்றினும்விறற்பரிவேள்வி
கைக்கடாசலத்தினுக்கருள்கண்ணன்மேலன்பால்
தக்கநான்மறைமரபுளியாற்றிடிற்றவிரும்
இக்கொடுந்தொழிலான்பழிதீர்ப்பதிங்கரிதோ.

பரிவேள்வி - அசுவமேதயாகம், கை - துதிக்கை, கடாசலத்தினுக்கு - மதமலைக்கு, (கஜேந்திராழ்வானுக்கு), மறைமரபுளி - வேதவிதியால். (௪)

எனவுரைத்திடுமுனிவர்சொற்கியைந்தனனாகி
வனைபொலங்கழல்வாசவனவுணனைமாய்த்தான்

துனியுறும்பழிபூரியர்தோகையினுருவாய்த்
தனிதொடர்ந்த துநில்லுநில்லெனுமுரைசாற்றி.

துனியுறும்பழி - அச்சத்தைத்தருகிற பாவமானது, பூரியர் - கீழ்மக்கள், தோகையினுருவாய் - பெண்ணுருவாகி. (௫)

சார்ந்துவெம்பழிதொடர்வுறத்தனித்தனியோடி
ஆர்ந்தநீருறுமானதவாவியம்புயத்தின்
பூந்தணுளமுள்ளொளித்தனன்பொன்னுலகளிப்பான்
வேந்தவாயிரம்பருவமும்வெளியுறுதென்றே.

நாளம் - தாள். (௬)

அந்தவாயிரம்பருவமுமமரர்நாடளித்து
வெந்திறற்படைநகுடனென்றுரைக்குறும்வேந்தன்
இந்திராணிபாற்காமமுற்றெழுந்தெழுமுனிவர்
தந்தசாபத்தான்மாசுணமாய்த்தரைவீழ்ந்தான்.

மாசுணம் - பெரும்பாம்பு. (௭)

அன்னகாலையினரும்பழியடாதுமாலடியை
உன்னிமானதவாவியிலொளித்தனனிறையும்
பொன்னின்வார்கழலிந்திரன்றனைப்புருந்தழைத்து
மன்னுசீர்பரிமகம்புரிவித்தனர்மறையோர்.

அடாது - வருத்தாமல், பரிமகம் - அசுவமேதயாகம். (௮)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கையும்வையகமளந்ததாளுமிருகண்ணுமென்முறுவல்வதனமும்
செய்யபங்கயநிகர்ப்புறுங்கரியசெம்மலைப்பரவியமரர்கோன்
கொய்யுளைப்புரவிவேள்வியாற்றிமறைகூறும்வேள்வியினுநித்தவம்
மையலங்களிறுபொருவுவானையமர்மாய்த்தவெம்பழியகற்றினான்.

கரியசெம்மல் - திருமால். (௯)

என்றலோடுமிகன்மன்னர்மன்னவனிறைஞ்சிமாமுனிவவெங்ஙனோர்
குன்றில்வீழசனியேறுபோலவளிகோடிமூசியிசைபாடநாள்
மன்றலுறுதொடைமார்பினெறியும்வச்சிரப்படையின்மாயுமவ்
வென்றிவாளவுணன்மெய்யுணர்ந்ததுவிளம்புகென்னமுனிவிள்ளுவான்.

அசனியேறு - இடியேறு, மூசி - மொய்த்து, மன்றல் - வாசனை, மாயும் - இறகின்ற. (௧0)

விருத்திரகத்தினை இந்திரன்போக்கிய வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௧௪௬௯.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.



## ஏழாவது

# சித்திரகேதுவின் கதையுரைத்த வத்தியாயம்.



கலிவிருத்தம்-

பொங்குசெங்கதிர்போற்றனதாழியம்
மங்குறேய்வடமேருவலங்கொள
அங்கண்ஞாலமளித்தனனையக்கதிர்த்
திங்கள்வெண்குடைச்சித்திரகேதுவே

செங்கதிர் - சூரியன் (௧)

உள்ளமின்புற்றொருபதினாயிரம்
கள்செய்கோதையர்காமரிளநலம்
விள்ளலின்றி நுகர்ந்துமழலைவாய்ப்
பிள்ளையின்றிப்பெரிதஞர்மேயினன்

காமர் - அழகிய, அஞர் - துன்பம் (௨)

அன்னவூர்தியுயிர்த்தருளங்கிரா
என்னைதன்புறமென்றடைந்தோதகவும்
மின்னுநக்குவிளங்குவைவேற்படை
மன்னர்மன்னன்மனத்தஞர்கூறுவான்.

அன்னவூர்தி - அன்னவாகனன், உயிர்த்தருள் - பெற்ற, வை - கூர்மை. (௩)

தாகமுற்றுநீர்பெற்றிலர்தம்மணி
போகமுற்றிலர்போன்மொழிதேனொடு
பாகுபெற்றவோர்பாலனைப்பெற்றிலேன்
உவகையுற்றிலனெண்ணிநியாவென்றான்.

உவகை - மகிழ்ச்சி. (௪)

தோற்றுமைந்தன்றுயருறலீங்கென
ஆற்றிவேள்வியவியவனல்கலும்
மாற்றருஞ்சிறப்பெய்தியமன்னவன்
கோற்றொடிக்குக்குழவிபிறந்ததால்

கோற்றொடிக்கு - மனைவிக்கு, (௫)

கூறுமேர்செய்குழவிபிறத்தலும்
வீறுசேர்நிதிமின்பொழிபூண்டுகில்
ஆறுகோடியரந்தணர்க்கீந்தனன்
மாறிலாதமணிமுடிமன்னனே.

பூண் - ஆபரணம். (௬)

குழவியீன்றகுருநகைச்செய்யவாய்
மழலைமென்மொழிமாதொடுமானவேல்

உழவனின்புற்றுறைந்தனனேனையோர்
அழலுயிர்த்துளத்தாற்றலராயினர்.

மானவேல் - பெருமையுள்ளவேல். (எ)

அஞ்சொலன்னையகலமலர்விழி
துஞ்சுகின்றசுடர்த்தொடித்தோன்றலை
நஞ்சமூட்டினர்வீட்டினர்நஞ்சுதோய்
வெஞ்சினக்கொலைவேலன்னகண்ணினர்.

வீட்டினர் - கொன்றார். (அ)

பெற்றதாயெழிற்பிள்ளைமுலையுண
உற்றுநீகொணர்வாயெனவோடினள்
இற்றவாவிமகவுகண்டேங்கினள்
சொற்றனள்வந்தழுதோர்தொழுத்தையே.

இற்றவாவிமகவு — உயிர்நீங்கினகுழவி, தொழுத்தை - அடிமைக்காரி. (கூ)

ஆவிமைந்தற்ககன்றதநதோவெனத்
தூவிமஞ்ஞையிற்றேக்கனர்மாதரார்
காவியுண்கண்கலுழ்தரக்காலவேற்
கோவுநெஞ்சங்குலைந்தழிந்தானரோ.

மஞ்ஞையின் - மயில்கள்போல. (௧0)

கரிப்பதாகினிக்காவலர்தாடொழப்
பரிப்பதாரினிப்பாரகம்பாலகன்
மரிப்பவிள்ளுமலரின்மழலைவாய்ச்
சிரிப்புமெங்ஙனஞ்சேர்ந்திடகொளித்ததே.

மரிப்ப - இறக்க. (கக)

இங்கிராதெவணேகினன்சேயென
மங்கைமாரொடுமன்னவன்மாழ்கலும்
பொங்கிராகயாழ்ப்புங்கவனோடுபேர்ந்
தங்கிராவெனுமந்தணனேறுவான்.

மாழ்கலும் - மயங்குதலும், யாழ்ப்புங்கவன் - நாரதன். (கஉ)

தந்தையென்றுந்தநயர்களென்றுநற்
சிந்தையன்பொடுசேர்தலுந்தீர்தலும்
நந்துறுந்திருநன்னதிமேலுற
வந்தநீருமணலுநிகர்க்குமால்.

தநயர்கள் - புதல்வர்கள். (கங)

ஒன்றினுற்படைத்தொன்றினளித்ததைத்
துன்றுமொன்றிற்றொலைத்திடுமொழியான்

வென்றிசேர்விளையாட்டெனுமாயைதான்
இன்றுநீயிதற்கென்கொலிரங்கலே.

அளித்ததை - காத்ததை, தொலைத்திடும் - அழிக்கின்ற. (௧௪)

மைந்தரின்மையின்மாழ்கினைமைந்தனுல்
சிந்தைமீதுறுந்திங்குநன்காதலால்
புந்தியிற்பொருந்தாதிவ்வுரையெனு
முந்தைநாண்மொழிந்தேனிலமன்னனே,

மாழ்கினை - மயங்கிறாய். (௧௫)

கனவைப்போலவுங்கானவினீருடன்
தனிசெயிந்திரசாலத்தைப்போலவும்
மன்னின்கற்பனையாய்வரும்யாக்கையை
வினையின்கட்டறமெய்யெனற்பாலதோ.

யாக்கை - உடம்பு. (௧௬)

சேயரும்பொருள்செல்வமனைவியென
நேயம்வைக்கினிகரில்வெருத்தரும்
ஆயுங்காலிவ்வருப்பறுத்தாழிசேர்
மாயன்றாளின்மனம்வைத்திமன்னனே.

வெருத்தரும் - அச்சத்தைத்தரும், அருப்பறுத்து - அரும்பறக்கொய்து. (௧௭)

மூலமாமுதற்றேவர்கடக்கிலாக்
காலம்யாவர்கடக்கவல்லாரெனச்
சிலநன்மொழிபற்பலசெப்பவும்
மாலைவெண்குடைமன்னன்மயங்கிறுன்.

கடக்கிலாக்காலம் - கடக்கவொண்ணுதகாலம், (௧௮)

ஆயகாலையருளுடைநாரதன்
போயவாவியையீர்த்துப்புவியர
சேயுமாறுடலெய்துநிசந்தையும்
தாயுமாழ்கித்தளர்ந்தனரென்றனன்.

மாழ்கி - மயங்கி. (௧௯)

[illegible]ச்சந்தக்கலிப்பா.

மைப்புயலைக்கிழித்தெழுநுண்மின்னுப்போன்மாய்பிறவி
உப்புறுவெண்டிரைப்பரவையுறுமணலிற்பலவாமால்
எப்பிறப்பிற்றந்தைதாயின்றிரங்கியழுகின்றார்
செப்புதியான்வறைவல்லோய்தெள்ளிதின்யானறிந்திலனே.

மைப்புயல் - கரியமேகம். (௨0)

தந்தையிவன்றநயனிவனெனச்சாற்றுமுறைதிறம்பி
வந்துதிப்பார்பிறவிதொறும்வழங்குபணிப்பொருள்போன்றே

அந்தமலாவாநந்தவறிவுருவாமச்சுதன்றாள்
நந்தலிலாதாமெனவேநாடியறியாதவரால்.
முறைதிறம்பி - முறைதவறி, நந்தலிலாது - நாசமில்லாதது (உக)

விட்டவுடலினிதுவந்துமேவகிலேன்யானென்று
கட்டுரைசெய்துள்ளாவிகண்ணிறநதுநடக்குதலும்
பட்டநுதற்களியானைப்படிமன்னன்படுந்துயர்தீர்ந
துட்டெளிவுவந்தெய்தியுரைத்தியறனெனத்தொழுதான்.
பட்டம் - நெற்றிப்பட்டம். (உஉ)

தொழுதுரைத்தவேந்தனுகருத்துகவீர்நாரதமுனிவன்
மழைநிகருந்திருமேனிவாசுதேவனைத்தொழுவல்
அழிவிலறிவாய்நிறைந்தவநந்தனையான்றொழுவலெனும்
விழுமியமந்திரமொன்றுவிருப்புடனங்குரைசெயதான்.
மழை - மேகம். ட)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருந்தம்.

மந்திரமீதுகூறின்மன்னவவைகலேழின்
வெந்திறலரவின்வேந்தின்விழியருள்பெறுதியென்ற
அந்தணனங்கிராவோடருந்தெர்டையாழின்வல்லோன்
பைந்துழாய்ப்பரமன்சீர்த்திபாடினன்படர்ந்தான்மன்ே
வைகலேழின் - எழுநாளில். ச)

செஞ்சுடர்ப்பரிதியன்னசித்திரகேதுவென்போன்
நெஞ்சுவந்தெழுநாள்காறுங்கரிலம்மறையையோதி
எஞ்சனல்மகதிநல்யாழிருந்தவனுரைத்தவாறு
நஞ்சுமிழ்பாந்தள்வேந்தைநலம்பெறக்கண்ணுற்றானல்.
பாந்தள்வேந்தை - நாகராஜனை. (உரு)

எண்ணுறும்யோகர்சித்தரிருந்தவரிமையோர்சூழ
நண்ணியவநந்தனீலநற்றுகின்மருங்குநகோல
வெண்ணிறவுருவுந்தாளுமேதருகருணைவெள்ளக்
கண்ணுமங்கரசன்கண்டுகளித்தனன்பரவலுற்றான்.
இருந்தவர் - பெருந்தவத்தினர். (உசு)

அளவிலாவண்டமெல்லாமணுவெனத்தாங்கியென்றும்
விளைதருமளவையென்றும்விளம்புபோநந்தனுகிக்
களைகணையொளியாய்ச்சித்தாய்க்கருதுமுத்தொழிலுஞ்செய்தே
தளர்விலாநந்தமானதற்பராபோற்றிபோற்றி.
களைகண் - ஆதாரம். (உஎ)

பல்பலவண்டம்யாவும்பவளவாய்வைத்துநுங்கும்
தொல்பழமறைகடம்மிற்றுணியுமெய்ப்பொருளாநின்ற

அல்கலிலாயிரந்தோளரும்பெறலடிகண்மேவிப்
புல்கிநீள்விழியுறங்கப்பொலியணையாவாய்போற்றி,

நுங்கும் - விழுங்குகிற. (௨௮)

அத்தன்மாலயனேயாயவாயிரந்தலையோய்போற்றி
தத்துவம்பலவாயொன்றாய்த்தயங்குவோய்போற்றியென்ன
வித்தியாதராகட்கெல்லாம்வேந்தெனவுறைதியென்று
முத்தியிற்புருடதுமுண்மைமொழியுநன்குணர்த்தினனால்.

அத்தன் - சிவன் (௨௯)

செப்புமவ்வரந்தன்றனைச்சித்திரகேதுவாழ்த்தி
ஒப்பில்விஞ்சையர்தம்வேந்தாயொளிகளுன்மானமூர்ந்து
துப்புறழ்கனிவாய்மாதர்தோணலமினிதுமாந்தி
மைப்புயறவழும்வெள்ளிமலையகங்காவல்பூண்டான்.

ஒளிகளுல் - ஒளிமிகுந்த, மானம் - விமானம். (௩0)

அவிர்ப்பொலங்குடைவேணியரனந்தண்சனகனாதி
தவமுதுமுனிவர்கேட்பத்தத்துவமுரைத்தனோக்கிக்
கவிரிதழ்மயிலையாருங்காணவோர்மருங்குவைத்து
நவில்வதெஞ்ஞானமென்னாநகைத்துரையாடினனால்.

கவிர் - முருக்கம்பூ. (௩௧)

நகைத்துரையாடனோக்கிநாமவேலவுணனாகென்
றகத்துறவெகுளிபொங்கியம்பிகைசபிக்கவன்னோன்
பகைத்தலால்வந்தவென்றம்பற்றினால்வந்தவென்றும்
சுகத்தொடுதுக்கமெண்ணார்துகளிலாரென்றுசொல்வான்

நாமவேல் - அச்சத்தைத்தருகிற வேலாயுதம் (௩௨)

அன்னைநீசபித்தலென்றனருவினைத்தொடர்ச்சியன்றோ
மன்னியவின்பதுன்பமாயையின்புணர்ச்சியாமே
தன்னைநன்குணர்ந்துபார்க்கிற்சார்வதோர்வினையுமுண்டோ
பன்னுதியெனத்தாள்வீழ்ந்துபரவினன்போயினனால்.

பன்னுதி - சொல்லக்கடவை. (௩௩)

வித்தியாதரர்கட்கெல்லாம்வேந்தனாய்விளங்கும்வைவேற்
சித்திரகேதுவென்பான்செப்பினன்சேறல்காணாப்
பைத்தபாம்பணியுமுக்கட்பரமனேமுதலினோர்கள்
முத்தனோகந்தையில்லானெனமொழிந்திறும்பூதுற்றார்.

வை – கூர்மை, சேறல் - செல்லுதல், இறும்பூது - ஆச்சரியம். (௩௪)

அறந்தருமிமயவல்லியவ்வழிச்சபித்தல்பற்றிப்
பிறந்தனனவுணனாகப்பிறந்துமுற்பிறப்பின்ஞானம்

மறங்கனிந்தொழுகும்வெவ்வாய்வச்சிரப்படையின்வேந்தன்
எறிந்துழியழிவில்வீட்டினெய்தினனினிதின்மாதோ.
வச்சிரப்படையின்வேந்தன் - இந்திரன். (௲௫)

இக்கதையியம்பினோருமினிதெனவியந்துளோரும்
மிக்கபேரன்புசான்றுமேதகவரைந்துளோரும்
துக்கமொன்றின்றிப்பார்மேற்சுகம்பலதுய்த்தபின்னர்
புக்கலாமீள்கலாதபொருவில்வீடெய்துவாரால்.
வரைந்துளோர் - எழுதினவர். (௲௬)

சித்திரகேதுவின் கதையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் — ௧அ௬.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்

---

எட்டாவது

## மருத்துக்கள்முதலியோர் பிறப்புரைத்த வத்தியாயம்.



கலிவிருத்தம்.

மன்னவவதிதிதன்மைந்தர்தங்களில்
உன்னியசிலர்மரபுரைசெய்தாமுறை
இன்னமற்றேனையோர்மரபுமிங்ஙனம்
பன்னுதுமெனமுனிபகர்தன்மேயினான்
பன்னுதும் - சொல்லுவோம். (௧)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அதிதிசேயென்னமுன்னமறைந்தநற்சவிதாவென்போன்
விதியுறுமும்மையாயவியாகிருதியையுநல்ல
கதிதருகின்றசாவித்திரியையுங்கருதிநான்கு
முதுமறைமொழியுமோமமுதன்மகங்களையுமீன்றான்.
சேய் - மகன். (௨)

பகனெனும்பெயரோனன்பாற்பகரொருபிணைவிளோடு
மகிமஞ்திியரையீன்றான்மலிபுகழ்த்தாதாவென்போன்
குகுமுதலாயநாற்பூங்கோதையர்தமைமணந்தான்
அகமகிழ்விதாதாவென்போனக்கினிமுதலோர்ப்பெற்றான்.
பிணா - பெண். (௩)

மித்திரன்வருணனெண்போன்விளங்கிருவோருமுன்னர்
ஒத்தெழுந்தோங்குகொங்கையுருப்பசிபொருட்டினாலே

வைத்தகோர்கும்பத்தன்னில்வசிட்டனைமலயத்துற்ற
முத்தமிழ்முனியென்பானைமுவுலகேத்தவீன்றார்.

கும்பம் - குடம். (௪)

வருணனென்றுரைப்போனீட்டும்வரிமுலைச்சரிடியின்பால்
பிருகுவான்மீகியீன்றான்பேசும்பத்திரனுள்ளான்பால்
கருதுசீரரிட்டநேமிகழுறுபிப்பலனையீன்றான்
பொருவருவிண்ணின்மேவுந்தன்புலோமசைநலந்துய்த்தானுல்.

துய்த்தான் - அநுபவித்தான், (௫)

வயங்கெழுகுலிசத்தண்ணன்மருவயிராணிபெற்றாள்
சயந்தனைமுதலாமூன்று தனயரைத்தரிமாது
புயங்களிற்றமுவும்வண்ணம்பொருந்துருக்கிரமனென்றும்
நயந்துசெய்வாமனனான்வெற்றிவிற்றம்பின்னர்மாதோ.

அயிராணி - இந்திராணி (௬)

திருந்திழைசுமந்துசெம்மாந்தெழுந்துறப்பணைத்தகொங்கைக்
கருங்குழற்றிலோத்தமைக்காசிபனகலம்புல்லி
இருந்திறலிரணியன்சீரியைந்தபொற்கண்ணனென்றும்
பொருந்திறலிருவராயபொறையுயிர்த்தனனைமகிழ்ந்தே.

இழை - ஆபரணம், செம்மாந்து - இறுமாந்து அகலம் - மார்பு. (௭)

தனைபுகழ்பிரகலாதன்றயநகெழிலநுகலாதன்
அரிதுணர்சநுகலாதனணிதிகழ்கலாதனென்ன
உரைதருபுதல்வரோடொருமகடனையீன்றான்
இரணியனென்னயாருமேத்தவாளவுணன்மாதோ

எத்து - துதிக்கிற (௮)

சமர்பழுத்தொழுகுவேலான்றயள்சிங்கிகையென்றோதும்
கமழ்மதுச்சொரிகார்க்கூந்தற்காரிகையுயிர்த்தமைந்தன்
அமுதுணவளிக்குமந்நாளமலனுக்குணர்ந்தெருக்க
இமையவர்தழாத்துவைதம்மராகுவென்பெயரோன்மாதோ.

சமர் - போர். (௯)

செருக்குறுசங்கலாதன்சேயிழைக்கதியைச்சேர்ந்து
தருக்குறுபடையான்பஞ்சசனனைத்தந்தான்கலாதன்
மருக்கமழ்சந்தவெற்பின்மாதவனதிதியாகி
முருக்குவாதாபியோடுமொழியும்வில்வலனைப்பெற்றான்.

சந்தவெற்பு - பொதியமலை. (௧௦)

பூதாம்பொருவுதோளான்புலவனையமரின்வென்ற
கோதைவேலவுணனென்னக்குவவுசீநுகலாதன்

மேதியினுருக்கொள்வான்சீர்விளங்குபாட்களனென்ருேதும்
தீதுலாங்குணத்தின்மிக்கோர்ச்சிறுவராமெனப்பெற்ருனல்

பூதரம் - மலை, மேதி - எருமை (கக)

பெற்றசீர்ப்பிரகலாதன்பெட்டுளமினிதினின்ருன்
வெற்றிசேர்குடுமிவைவேல்விரோசனன்றன்னையன்னேன்
உற்றமாவலியென்பானையுலகுளோரேத்தவீன்ருன்
மற்றவன்வயங்கொள்வாணசுரன்றனைவழங்கினுனல்.

பெட்டு - விரும்பி. (கஉ)

பின்னருந்திதியென்ருேதும்பிறைநுதற்குமுதச்செவ்வாய்க்
கன்னலிற்கனிந்தசொல்லாள்காசிபனகலம்புல்லி
மன்னுமேமேழெழன்ருேதுமருதவர்தம்மையீன்ருள்
அன்னவராமரர்கோனேடமாராயமர்வார்மன்னே.

அகலம் - மார்பு. (கங)

என்றலுந்திதிமுன்பெற்றவியனலமருத்தென்போர்கள்
குன்றெறிகுலிசனேடுகுலவிவீற்றிருந்ததென்கொல்
மன்றநீபுலராததியென்றமானவேலாசுகேட்பத்
துன்றுடற்பகைசெற்ருேங்குசுகமுனியுரைக்கலுற்ருன்.

குலிசன் - இந்திரன். (கச)

வரம்பெறுமைந்தர்தம்மைவாசவற்காகப்பெம்மான்
உரஞ்சிதைத்துயிரைநீப்பவொண்ணுதற்றிதியுண்மாழ்கிப்
புரந்தரன்றன்னைக்கொல்லும்புதல்வனைப்பெறுதல்வேண்டி
இருந்தவன்மகிழும்வண்ணமேவல்செய்தினிதினின்ருள்,

உரம்சிதைத்து - மார்பைப்பிளந்து, நீப்ப - நீக்க. (கரு)

காசிபனுளமுவப்பக்கருதினளேவல்செய்தும்
பூசலங்குடுமிவைவேல்புரைவிழிக்கடைநோக்குற்றும்
நேசநன்னிலவுகாலநின்றனணகைத்துமந்த
ஆசிலாதவனையன்னுடன்வயமாக்கினுளால்.

வைவேல்புரை - கூரியவேற்படையைநிகர்த்த, கால - கக்க. (கசு)

மாதவன்மகிழ்ச்சிகூர்ந்துமனையவள்வதனநோக்கிப்
பேதைநீவிழைந்ததென்கொல்பெறுதியென்றுரைத்தலோடும்
ஓதுவாசவனைக்காதுமொருமகவளித்தியென்று
தாதுறுகுழலாண்மங்கைசாற்றினள்கொடுஞ்சொலன்றே

வதநம் - முகம். (கஎ)

அவ்வுரைகேட்டலோடுமரும்பெறற்புதல்வற்கொல்லும்
வெவ்வரமளிப்பர்கொல்லோவிருப்பினேடுயிர்த்துளோரும்

நவ்வியின்விழிக்குநங்காய்நயந்ததுநன்று நன்றென்
றெவ்வமில்புகழ்சாலொப்பிலிருந்தவனுளத்தியம்பும்

நவ்வி - மான். (௧௮)

மடநகையர்வதனநல்லமதியெனமாற்றம்வாரேனோர்
கடைந்தவானமுதமென்னக்கவினுமென்றாலுமுள்ளம்
விடங்கொடுபுரிந்தவாள்போல்வெங்கொலைவிரும்புமந்த
அடங்கலாமனஞ்செல்வண்ணமாதறிந்தறையகிற்பார்.

மாற்றம் - சொல் (௧௯)

புல்லுறுகொழுநனேனுந்தம்புதல்வரேயெனுமென்பால்
சொல்லுமோரகட்டிற்றோன்றுந்துணைவரேயேயாயினுமா
கொல்லுவாசினந்தாராயிற்கூசிலர்சிறிதுமென்றே
அல்லலுறறமூகியன்றேட்கொருவரமளிக்கலுற்றான்.

ஓரகட்டில் - ஒருவயிற்றில (௨0)

அரிவைநீமுனிவுநீங்குற்றகாலந்தரிவைபுள்ளிட்டுப்
புரைதபப்புனிதையாகிப்புகழ்புஞ்சவனமென்றோதும்
விரதமொன்றியற்றினாளாம்விழைமகவுயிர்த்தியென்றே
ஒருவரமளித்தானன்னோருவந்தனள்கருக்கொண்டாளால்.

புரைதப - குற்றம்நீங்க, புனிதை - பரிசுத்தை. (௨௧)

கொண்டநல்விரதந்தோடுகுலவுதன்மனைக்கூட்டோர்நாள்
அண்டர்கோனடைந்தன்றோருக்கரும்பெறலேவல்செய்தே
எண்டருங்கருப்பங்கொள்வாளியைந்தனன்விலங்குமாய்ப்ப
விண்டொடுகானநண்ணிவேட்டுவனிருந்தசெல்போன்றே.

அண்டர்கோன் - இந்திரன், வேட்டுவன் - வேடன். (௨௨)

கலிவிருத்தம்

புனிதநீங்கியப்பூவைபொருந்துநல்
மனனிறுடிமருவினன்காண்கிலன்
நனிகலங்கியிருந்துழிநங்கைதான்
தனிதுயின்றனள்சாரந்தெழுமாலைவாய.

புனிதம் - பரிசுத்தத்தன்மை, பூவை - மாது. (௨௩)

பாதபங்கயமேற்பனிநீர்பெய்யா
தோதுமாலையுறங்குமன்றோள்வயிற்
றேதநீங்கியவிந்திரன்மாயையால்
சோதிவச்சிரத்தோடுந்துவன்றினான்.

பனிநீர்பெய்யாது - குளிர்நீர்வார்க்காமல். (௨௪)

வயிற்றினுற்றுவளரும்வயாவினைச்
செயிர்ப்பினேழுகூறாகச்சிதைத்தவை

# ஆறாங்கந்தம்.

உயிர்ப்புவிட்டழவொவ்வொருகூற்றையும்
வியர்ப்பினேழுகூறாகவும்வெட்டினான்.

வயா - கருப்பம். செயிர்ப்பின் - கோவத்தினால். (உ௫)

ஆங்குமாயனருளினில்வீந்திடா
தேங்கியேயங்கியழுதிவணங்களை
நீங்கிமுன்னவனீதெறலென்னென
வாங்குவார்சிலையான்புறன்வந்தனன்.

வீந்திடாது - இறவாமல், தெறல் - கொல்லல். (உ௬)

அரசநின்னையறவாழியந்தணன்
கருவிற்காத்ததுபோலவக்காரிகை
விரதமுற்றவன்மெல்லடிபோற்றலால்
மருவுமைந்தர்மாயாவகைகாத்தனன்.

அறவாழியந்தணன் - திருமால். (உ௭)

உருத்துவாசவனுற்றவணெற்றழிக
கருத்தழிந்தழலாலக்கருவினை
மருத்தெனும்பெயர்மன்னினர்தாய்வயி
றிருத்தல்விட்டெழுந்தாப்புறனெய்தினார்

உருத்து - கோவித்து. (உ௮)

தளர்ந்ததுநுண்ணிடைத்தையறிந்தயில்
தெளிந்துநோக்கியதென்னெனச்செப்பலும்
விளைந்தவண்ணம்விளம்பிவிண்ணேகினான்
வளைந்தவார்சிலைவாசவனென்பவே.

வாசவன் - இந்திரன். (உ௯)

விண்ணினின்வேந்தன்விரும்பிலேயோவென
மண்ணினின்றவானேகிமருத்துவர்
உண்ணுசோமமுடையநல்லும்பராய்
நண்ணினாரெனநற்றவன்கூறினான்.

உம்பர் - தேவர். (௩௦)

மருத்துக்கள் முதலியோர் பிறப்புரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—உ௧௫.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்

## ஒன்பதாவது

# புஞ்சவன் விரத முறைத்த வத்தியாயம்.



### கலிவிருத்தம்

கஞ்சன்வழிவந்துதிகழ்காசிபன்மனைக்குப்
புஞ்சவனமென்றுபுகல்கின்றவிரதந்தான்
எஞ்சலறவின்றுரைசெயென்றரசியம்ப
மஞ்சனையமாயனருண்மன்னுமுனிபன்னும்.

மஞ்சனைய - மேகம்போன்ற. (க)

வந்துமகிழ்செய்யுமொருமார்கழிமதிக்கண்
சந்திரன்வளர்பொழுதிறையாநவருபக்கம்
முந்தியுறுசற்றிதிமுதற்புனிதமாகி
அந்தமிலொருபரமாதுமனைமேயதி.

மதி - மாசம் (உ)

ஈர்பருவமுற்றுமொழியாதவகைபோடு
கார்நிறமுகுந்தனுருவைக்கருதியன்பால்
ஆசெயுபசாரமொடிரண்டொடும்புமியற்றிச்
சீர்தருமிராமமதிரியருநாமரின்.

உவகை - மகிழ்ச்சி. (௩)

### கலிநிலைத்துறை.

பாலினேடுமடிசிலைப்பன்னிரண்டென்றும்
சீலவாவுதியாதிருமந்திரஞ்செப்பிச்
கோலவாரழற்பெய்தபின்குலமறையவர்க்கு
வேலைசூழ்புவிவியப்புறவிருப்புணவருந்தி.

அடிசில் - சோறு (௪)

அருந்துமந்தணராசிநன்கறைந்ததற்பின்னர்ப்
பொருந்துமாவுதிச்சேடமதற்புதல்வரைப்பெறநீர்
இருநதருந்துதிரென்றுநம்பதிதாருநாங்கேநார்
மருந்தெனும்மொழிமைந்தரைப்பெறுகுவர்மாதோ.

ஆசி - வாழ்த்து. (௫)

இன்னநல்விரதத்தினைக்கன்னியரிழைக்கின்
பன்னுமின்னெழிற்கொழுநனைமணப்பராற்பார்மேல்
மன்னிவைகிடாதிறந்திடுமகப்பெறுமடவார்
உன்னிநின்றியற்றிடினிறவாமகவுயிர்ப்பார்.

மணப்பர் - மணம்புணர்வார். (௬)

கழறுமிவ்விரதத்தினைக்கலன்கழிமகளிர்
தழையுமன்பொடிங்கியற்றிடின்மறுமையிற்சாற்றும்

எழில்விளங்கியகொழுநனையெய்தியின்புறுவார்
விழைவொடீங்கிதுகேட்டனர்வேண்டியபெறுப,

கழறும் - சொல்லப்பட்ட, பெறுப - பெறுவர். (௭)

என்றுவேந்தனுக்கியம்பினன்சுகமுனியென்ன
ஒன்றுமாமறைச்செல்வருக்குரைத்தனன்மீட்டும்
மன்றலார்தொடைமன்னனுக்கன்னவன்வழங்கல்
துன்றுமாதவச்சூதமாமுனிவரன்சொல்லும்

மீட்டும் - மறுபடியும். (௮)

புஞ்சவனவிரதமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—உஉ௯.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---

# ஏழாங்கந்தம்.

## முதலாவது

## சிசுபாலன்வீடுபேறுரைத்தவத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

விருப்பொடுவெறுப்பொன்றில்லாமெய்ப்பொருளமரர்வாழ்த்தச்
செருக்களத்தவுணர்த்தேய்த்ததிறமெவன்றேவராலென்
உரைத்திடுமசுரராலென்னுறும்வையுரைத்தியென்ன
மருக்கமழலங்கலாற்குமறைமுனிவருக்கலுற்றான்.

செருக்களம் - போர்க்களம் (௧)

உலகெலாம்படைக்குங்காலையுரையிராசதத்தான்போன்றும்
நிலைபெறவளிக்குங்காலைநிகழ்த்துசத்துவத்தைமேவி
வலிகெழுதாமதத்தைமாய்த்தவன்போன்றுமெல்லாம்
தொலைவுறவொழிக்குங்காலைச்சொல்லுதாமசத்தான்போன்றுங்

தொலைவுற - அழிய. (௨)

தோற்றுவன்சத்தாய்ச்சித்தாய்ச்சுத்தமாய்ச்சுகமாய்த்தோன்றிப்
போற்றியநாமரூபம்புகல்குணமொன்றுமின்றி
ஆற்றுமோர்வினையுமின்றியமர்ந்தவன்விகாரமெல்லாம்
சாற்றியகுணங்களாலேசார்ந்திடுமுரைக்கின்மாதோ.

ஆற்றும் — செய்கிற. (௩)

தங்கியபுகழ்சேர்கின்றசத்துவகுணம்வெல்காலைப்
பொங்கியவவுணர்தேய்வார்புனைமுடியமரர்வெல்வார்

கொங்கவிழ்தாமமார்ப கூறுதாமதம்வெல்காலை
மங்குவரமரர்வெல்வார்வனைகழலவுணர்மாதோ
வெல்காலை - மேம்படும்போது, கொங்கு - வாசனை, தாமம - மாலை. (௪)

மாயையால்வகுத்தபோராய்வருத்திடப்படுவோராயின்
தாயுமாய்ச்சேயுமாகுந்தனிமுதற்குறைவதுண்டோ
நேயமாரிராசசூயநிகழ்ந்ததுழித்தருமனிவ்வா
றுயுநாரதனைக்கேட்டதறைகுதுமாழிவேந்தே.
சேய் - பிள்ளை (௫)

மறந்தொடுதோற்றரானென்றையனைப்பழித்தல்செய்த
சிறந்திசுபாலனெய்மான்சேவடிபடர்ந்ததென்னென்
றறத்தின்மாமதலைகேட்பவருந்தவையமுதலூறி
உறக்கிளர்தொடையநல்யாழ்முனிவரனுரைக்கலுற்றான்.
யாழ்முனி - நாரதன் (௬)

புகழுநும்பழித்தலானும்புகலுமிவ்வுடலுக்கல்லால்
நிகழ்தருகுணங்கண்மூன்றுநீங்கியொன்றாகிச்சித்தாய்த்
தகைபெறுசத்தாய்நின்றதயங்குமோர்பொருட்குமுண்டோ
இகல்செயானெனதென்பார்தம்மிழுதையினெண்டென்பாரால்
இகல் - பகை, இழுதை - அறியாமை. (௭)

பனிமலர்முருகுவிம்முபசுந்துழாய்ப்பரந்தாமன்சீர்
புனைமணிவாயில்காத்தபுகழ்ச்சயவிசயர்முன்னம்
சனகனையாதியாயதவத்தினர்சாபந்தாங்கிக்
கனகனுஞ்சுடர்செய்செம்பொற்கண்ணனுமாகிவந்தார்.
முருகு - வாசனை, செம்பொற்கண்ணன் - இரணியாக்கன். (௮)

மையணிமிடற்றோன்வெள்ளிமால்வரைபிடுங்கியார்த்த
ஐயிருதலையினானுமாரத்தமுண்டொளிறும்வைவேல்
வெய்யபோராற்றகும்பகருணனுமாகிமீட்டும்
பையராச்சுமந்தஞாலம்பருவரத்தோற்றஞ்செய்தார்
மையணிமிடற்றோன் - சிவன், ஐயிருதலையினான் - ராவணன். (௯)

தோன்றியவிருவர்தம்மைச்சுடர்விரிமணிச்செஞ்சூட்டுக்
கான்றநஞ்செயிற்றுப்பேழ்வாய்க்கட்செவியணையிற்றுஞ்சும்
தேன்றருந்துளவத்தெம்மான்செருத்தன்மார்க்கண்டனாலே
நான்றவாய்க்களிற்றுவேந்தநன்கினிதுணர்வைமாதோ.
கட்செவியணை - சர்ப்பசயனம். (௧௦)

கலிநிலைத்துறை

அழலும்வெஞ்சினவடவைபோயதிர்கடல்குளிப்பத்
தழலுந்தீப்பொறிததைசெங்கட்டந்தவக்கிரனும்

கழுகுங்காகமுங்கூட்டுணைக்கலுழ்மெவருருந்
ஒழுகுவேற்சிசுபாலனுமாகவீங்குதித்தார்.

கூட்டுணை - கொள்ளைகொண்டுண்ண. (கக)

ஊதுவண்டுணர்பேதைவான்புழுவெனவுடன்று
தாதலர்ந்தசெந்தாமரைப்பொகுட்டுவீற்றிருக்கும்
மாதுசேர்முழுமுதலையேமனநினைத்தவன்றன்
பாததாமரைபடர்ந்தனன்றிறற்சிசுபாலன்.

ஊதுவண்டு - குளவி, பேதை - அறியாமை (கஉ)

மருவகாமத்தாற்பயத்தினால்வஞ்சநெஞ்சகத்தால்
பொருவெறுப்பினால்விருப்பினுற்புனிதனைநினையின்
உரைசெய்முத்தியையர்நவர்காமமுற்றுணர்ந்தே
அரியமுத்திசென்றடைந்தனர்கோவியரன்றே.

பொரு - போர்செய்தற்குரிய, வெறுப்பினால் - உபேக்ஷையால். (கங)

கஞ்சன்வெம்பயத்தாற்றிகழ்கண்ணனைநினைவுற்
றெஞ்சலற்றவீடெய்தினனினிதுவந்தடைந்தார்
நெஞ்சுவப்புறுகேண்மையானினைந்துநின்போல்வார்
செஞ்சிலைச்சிசுபாலனேமுதலவெந்தீயோர்.

கேண்மை - சிநேகம். (கச)

வெறும்பினுனினைந்தடைந்தனர்வீட்டினைவிரும்பும்
திறத்தினுனினைந்தடைந்தனர்திருமறைதெளிந்தோர்
குறிப்புமுத்தொழில்குணங்களானடாத்தும்மார்கொண்டற்
கறத்தின்காதலவெறுப்பெவவிருப்பெவனம்மா.

முத்தொழில்-ஸ்ருஷ்டிஸ்திதிஸம்ஹாரங்கள், எவன்-யாது, கொண்டல்-திருமால்.

என்றுகூறலுமிளங்களிச்சுரும்பர்பாட்டிசைப்ப
மன்றல்விம்முதண்மலர்மகண்முலைமுகமணந்தோன்
வென்றிவாட்டிறற்கனகனைவெஞ்சமர்க்களத்தின்
கொன்றவாறுகூறெனநாரதன்கூறும்.

சுரும்பர் - வண்டு. (கரு)

சிசுபாலன் வீடுபேறடைந்த வந்தியாயர் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்.—உ௩௬

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---

# இரண்டாவது

## இரணியனைக்கொன்ற வத்தியாயம்.



கேழலாகிமால்கேழ்கிளர்பொற்கணனகலம்
போழ்படுத்ததுகேட்டலுமிரணியன்புழுங்கிச்
சூழுந்தானவர்முதலியோர்சுடுமுகநோக்கி
ஊழிவெங்கனல்கட்கடையுமிழநின்றுரைப்பான்.

கேழல் — வராஹம், பொற்கணன் - இரணியாக்ஷன், அகலம் - மார்பு, போழ்படுத்தது — பிளந்தது. (க)

ஊனநீங்குமாலுயிரொலாஞ்சமனெனநினையான்
வானநாடர்தங்குழுவொடுமரீஇயினனதனால்
ஏனமாமதியெய்தினனினியவனுயிர்வேல்
தானருந்துவான்வருகதுவனீர்தனிததனியே

மால் — திருமால், குழூ - கூட்டம், மரீஇனன் - பொருந்தினன் (உ)

கரையின்மீதுபோய்மாயவனுருவெனச்சாற்றும்
ஆரியவேள்வியேமுதலியவறங்களையழித்துப்
புரியுமந்தணர்ப்பொன்றுறப்புரிமினேபுரியின்
கரியவன்வலிகெடுமெனப்பார்கடவுளரோ

பொன்றுற - அழிய. (ங)

என்னவோதலுஞ்சம்பரன்முதலினோரேகித்
துன்னும்வேள்வியேமுதலியவறங்களைத்தொலைத்து
மன்னுயிர்க்குழுமாயநன்மனையெரியூட்டிப்
பொன்னினாட்டினும்புலவரைப்புடைத்தனர்புகுந்து

மாய - மடிய, புலவரை - தேவரை. (ச)

மாபுரங்களையழித்தனர்சிலர்பலமணிசேர்
கோபுரங்களைத்தகர்த்தனர்சிலர்சிலர்குழும
நூபுரங்கள்சூழ்பதத்தினர்நொவ்வுறவலைத்தார்
ஆபுரங்களைச்செகுத்தனர்சிலர்வெகுண்டடர்ந்தே

நூபுரங்கள் சூழ்பதத்தினர் - மாதர், நொவ்வுற - வருந்த (ரு)

மண்டலந்தனின்முதுமறைவாணரைவதைத்துத்
தண்டலைப்பெருந்தருக்களைத்தூளொடுசாய்த்துத்
தெண்டிரைப்பெருநீர்ச்சிறைசிதைத்தனாசிலர்வாய்
விண்டலக்கணுற்றழச்சிலர்தமைச்சிலர்வெருட்டினார்

மறைவாணர் - வேதியர், அலக்கண் - துன்பம் (சா)

இருட்டினேர்குழற்றம்பிதன்மனைவியையிப்பார்
சுருட்டிடேற்றன்வயிற்றேன்றிவானவர்தொலைத்தோட

வெருட்டினோர்களையிரணியன்வெந்துயர்களைவான்
வருட்டிமாழ்கியதாயையும்வருட்டிநின்றுரைப்பான்.

வருட்டி - வசப்படுத்தி, மாழ்கிய - மயங்கின. (௭)

நெறியிற்காண்குறாநித்தியமாகியொன்றாகும்
அறிவைவேறுவேறாய்விழியறியுமாபோல
உறையுமாலயசேர்குணத்தினுண்டாமுடலுடலம்
முறையிற்கூடலுநீங்கலுமூழதுலகியல்பே.

காண்குறா - காணவொண்ணாத. (௮)

கனவுபோல்வருமொருகுணம்வருத்திடக்கலங்கி
நனிவருந்திடுமொருகுணநன்கறிந்தியம்பின்
வினைகடந்தமெய்ப்பொருட்கொருவினைசெயலிலைநீ
இனையலோர்கதையியம்புவல்கேட்டியென்றிசைப்பான்,

இனையல் - வருந்தாதை. (௯)

ஓதுகீர்த்தியானுசிரதேயத்துறைவேந்தன்
தாதுசேர்தொடைத்தரியலராற்களத்திறப்ப
மாதரார்மனையாரொடுமைந்தர்கள்குழுமிப்
போதுநேர்விழிபுனறரப்புலம்பியங்கழுதார்.

தரியலர் - பகைவர் (௧௦)

வந்துவெய்யசெங்குருதிநீர்மல்குவெங்களத்தின்
சிந்தைநொந்துகண்ணீரெழுசிந்தெனச்சிந்திப்
பந்தமோடழுவார்துயர்பறைதரத்தெருட்டி
அந்தகன்சிறுகுழவியாயாங்கடைந்தறையும்.

எழுசிந்தென - எழுகடல்போல, அந்தகன் - யமன். (௧௧)

வெறுத்துவாரியினொருபொருள்வீழ்த்தினும்விரும்ப
மறுத்துவந்துதன்மருங்குறுமவற்குரித்தாயின்
நிறுத்தொர்செப்பினுள்வைத்துறைநின்றுதான்றனே
பொறுத்துக்காப்பினுமாய்ந்துபோம்போம்பொருண்மாதோ.

வாரியின் - கடலில். (௧௨)

பொய்ம்மையாமுடற்பொருளினிற்புகன்றவுண்மையையும்
மெய்ம்மையாம்விழுப்பொருளினில்விளம்புபொய்ம்மையையும்
பெய்ம்மைபோற்றுளிபிரசமார்குழலினர்ப்பேணி
ஐம்மையாம்பொறிக்கலமருமறிவிலோரறைவார்.

பெய்ம்மை - பெய்தல், பிரசம் - தேன். (௧௩)

தழுவுதாவரத்தெங்கணுந்தனித்துறைதழல்போல்
பழுதிலாமையெவ்வயினும்வான்பரம்பொருளுறையும்

எழுவெங்கானலினீரெனவிவ்வுடலிறக்கும்
அழுவதென்கொலோபொய்யைமெய்யாமெனவறிந்தீர்.

எவ்வயினும் - எவ்விடத்தும். (கச)

கண்ணிவீழ்ந்தநன்பெடையினைக்கலந்தழுகுலிங்கம்
மண்ணின்வீழ்தரமாய்த்தனன்வாங்குவில்வேடன்
எண்ணிமாய்ந்தவற்கிரங்கலேனிறக்குமிவ்வுடலென்
றண்ணனல்லறக்கடவுள்சொற்றனனவர்தெளிந்தார்.

குலிங்கம் - ஊர்க்குருவி (கரு)

அன்னோர் துயர்நீங்கெனவுறைதலுந்தீர்ந்தான்
முன்னர்நீர்ந்தனனிருந்தனனிரணியனேகி
மின்னின்மாயுடல்விளிவுறாவரம்பெறல்வேண்டி
மன்னுமாதவம்வளர்ப்பநன்மந்தரத்தடைந்தான்

இன்னல் - துன்பம், மின்னின் - மின்னல்போல (கசு)

புடைக்குதெண்டிரைமுழங்குறாததடங்கடல்வயிறு
கிடந்தெழக்கடையுகின்னமுதளித்தநீள்கிரியின்
மடங்கல்போலவேமருவியக்கனகனைம்பொறியும்
அடங்குமாறவித்தருந்தவம்புரிந்தனனன்றே.

கிடந்து - ஆழமாக. (கஎ)

அளப்பருமபகலருந்தவம்புரிந்தவனுச்சி
பிளப்பமண்டியபெரும்புகைப்படலம்விண்பரந்து
வளைப்பவாற்றலர்வானவர்மலரவற்குறுகி
உளத்துமேவட்டனதவஞ்செய்வாற்குதவுகென்றுரைத்தார

ஆற்றலர் - சகியாதவராய், மலரவற்குறுகி - பிரமனையடைந்து (கஅ)

பொன்னந்தாமரைப்பொகுட்டுறைபுங்கவன்றோன்றி
மன்னுபுற்றெழுபற்றவனுக்கையிற்றனது
கன்னநீரினிற்றெளித்தலுமெழுந்தகைகூப்ப
என்னைவேட்டனவென்றவன்விழைந்தனவீந்தான்.

பொன்னந்தாமரைப் பொகுட்டுறைபுங்கவன் - பிரமன், விழைந்தன - விரும்பினவற்றை (ககூ)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பங்கயப்பொகுட்டின்மேலான்படைத்தனதம்மின்மாளான்
அங்கண்வானுலகின்மண்ணினகத்தினிற்புறத்திற்றுஞ்சான்
கங்குலும்பகலுமாயான்கனலுமிழ்படையிற்பொன்றான்
வெங்கண்வாளவுணன்பெற்றவரனையென்விளம்புகேமால்.

மாளான் - இறவான், துஞ்சான் - இறவான், மாயான் - இறவான், பொன்றான்- இறவான். (உ0)

ஓதலின்றியேயுணர்வுகூரும்க்
காதலன்றனைக்கற்கவைத்தனன்
தாதலர்ந்தபொற்றருவின்மெல்லிணர்ப்
போதலர்ந்ததார்புரளுமார்பனே

இணர் — பூங்கொத்து, போது - பேரரும்பு. (௩௫)

பொற்றமாலையம்புதல்வன்றன்னைநெஞ்
சுற்றகாதலிற்கூவியோர்பகல்
வெற்றிவேலினன்வெள்ளிமைந்தர்பால்
கற்றதென்னெனக்கழறினனரோ.

பொற்ற - அழகாகிய (௩௬)

தண்ணம்போதுசேர்தலைவிகொண்கசூட்
டண்ணல்வாளராவணையிற்றுஞ்சுகார்
வண்ணபைந்துழாய்மார்பதாமரைக
கண்ணவென்னல்யான்கற்றதென்றனன்.

தண்ணம்போது சேர்தலைவிகொண்க - லக்ஷ்மீநாதனே, கார்வண்ண - மேகவண்ணனே. (௩௭)

என்றபோழ்தமன்னிளவலாவியைக
கொன்றவன்பெயர்கூறுவித்தனர்
மன்றவெள்ளிதன்மைந்தரித்திறம்
நன்றுநன்றெனாநகைவிளைத்தனன்

வெள்ளி - சுக்கிரன், இளவல் - தம்பி (௩௮)

வெள்ளிமைந்தர்தாம்வெருவிமுன்னுறா
உள்ளல்யாங்களிவ்வுரைபயிற்றிலேம்
வள்ளிதழ்ப்பொலந்தாமமார்பநின்
பிள்ளையிங்ஙனம்பிதற்றுமென்றனர்.

வெருவி - பயந்து, பயிற்றிலேம் - பழக்கிலேம் (௩௯)

அறம்வற்குநீரறிவுறுத்துமென்
றிறைபணித்தலாலிருபிறப்பிரோரா
முறைதெரித்தமுப்பாலுமோதிலான்
மறைவடித்தமென்மழலைமைந்தனே.

அறிவுறுத்தல் - தெரிவித்தல். (௪௦)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தென்றமிழ்மலயந்தந்ததேங்கமழ்சாந்தம்பூசி
மன்றன்மந்தாரப்போதுமதுத்துளிமாலைசூட்டிக்
குன்றிரண்டனையதோளாற்குறங்கின்மேற்றழீஇயிருத்தி
நன்றறிந்தனைகொலென்றான்மீட்டுமந்நாமவேலான்

சாந்தம் — சந்தனம், குறங்கு - தொடை. (௪௧)

தாதையங்ஙனம்விளுவத்தநயனங்குணப்பான்மாயன்
காதையஞ்செவியின்மாந்திரகாரணனுமங்கூறிப்
போதினன்முகனும்போற்றும்பொன்னடிதலையிற்சூடிச்
சீதரன்கோயில்சூழ்ந்துசெழுமலர்பதத்திற்றாவி.

காதை - சரித்திரம். (௬௨)

விழுந்திளஞ்சுரும்புமூசுமென்முகைவிண்டுதேறல்
பொழிந்தபூந்துளவமாலைப்பொருவுயர்விலானைநெஞ்சக்
குழைந்திடவறிதலன்றேகுறிக்கினன்கறிதலென்னச்
செழுந்தபுல்கடைநகண்சிகதிச்சிவப்புறச்சினந்தான்மன்னோ,

சுரும்பு - வண்டு, பொருவுயர்விலானை - எடுப்பிலானை. (௬௩)

அறங்கரைமழலைச்செவ்வாயரும்பெறற்புதல்வற்றிண்ணெண்ணன்
குறங்கினின்றகற்றிமண்டுங்குருதிவேலங்கைதாங்கி
இறைஞ்சிநிற்குநரைவல்லேயெறிந்திவனலங்கன்மாலை
நிறந்திறந்திடுமென்னறுனொருப்புருத்தனையநீரான்.

கரை - பேசுகிற, நிறம் – மார்பு (௬௪)

மூவுருத்தாங்கிநின்றுமுத்தொழினடாத்துமெம்மான்
சேவடிக்கமலப்போதுசென்னியிற்சூட்டப்பெற்ற
கோவிளங்குமரன்மார்பிற்கொலைவலாரெறிந்தகொற்றப்
பூவுடைக்குடுமிவெள்வேல்பூவெனப்பொலிந்ததன்றே

மூவுரு - பிரமவிஷ்ணுருத்திரர்வடிவு, முத்தொழில் - படைத்தல், காத்தல், அழித்தல் (௬௫)

திருகுவெஞ்சீற்றதருப்பிற்செய்யவேலுழுவர்வீசும்
எரிகுலாம்படைகள்யாவுமிற்றமைகணகனேகி
வருகமாநாகமெட்டுமாதிரக்களிநல்யானை
பொருகவென்றுழித்தீயிற்புழுங்கினனுரிறுனல்

இற்றமை - முறிந்தமை (௬௬)

படவராவரசின்செய்யபஃறுமணிபிதுங்கப்பற்றிக்
கடல்விளையமிழ்தமூறக்கடைந்தகாரவண்ணத்தண்ணல்
தொடுகழற்கன்பற்கொல்வான்சுடுசினங்கதுவிக்கவ்வும்
அடுகொலைப்பாந்தளெட்டுமழுதுவாயுகுத்தமாதோ.

கார்வண்ணத்தண்ணல் - திருமால் (௬௭)

கொண்டலிற்பிளிறுவேழக்கோடடிபிடுங்கிவென்ற
தெண்டிரைப்பெரும்பாலாழிச்சேர்ப்பன்மெய்த்தொண்டன்றன்னை
மண்டுவெஞ்சினத்திற்பாய்ந்தமழைமதப்புழைக்கைநால்வாய்
எண்டிசைக்களிறுகூடாங்கோடிற்றனசிதர்ந்தமாதோ.

வேழக்கோடு - யானைக்கொம்பு, பாலாழிச்சேர்ப்பன் - திருமால். (௬௮)

கடலொடுமலையும்பாருங்கருதுமற்றுலகுமுண்டு
புடையொருவுயிற்றாள்வைத்துப்பொறுத்தவனன்பன்றன்மேல்
தடவரையெறிந்தவெல்லாஞ்சாற்றணுவொத்தவாங்குக்
கொடியவர்வெற்பின்வீக்கிக்குரைதிரைப்புணரியுய்த்தார்.

வெற்பின்வீக்கி - மலையோடுசேர்த்துக்கட்டி. (சக)

நெடுவரைமுகந்துபொங்கிநீணிறவிசும்புபோர்த்த
உடைதிரைக்கடன்முகட்டோரொழுகொளிமணியிற்றோன்றிப்
படுசினைவிரித்தவாலம்பாசிலைகிடந்தோனன்பன்
கடலிடையாத்துவீழ்த்தகல்லொடுமிதந்தான்மன்றோ.

ஆலம்பாசிலைகிடந்தோன் - திருமால், யாத்து - கட்டி. (௫0)

இறுதியோர்திறத்தினுமிழைத்ததன்மற்றறிதென்றெண்ணி
அறமுதலாயமுப்பாலறிதியென்றவுணன்மீட்டும்
சிறுவனைவிடுப்பவாங்குச்சிறுவனூல்பயிற்றுகின்ற
மறைவல்லாரற்றநோக்கிமைந்தரோடுரைக்கலுற்றான்.

இறுதி - முடிவு. (௫க)

அல்லவைகுரவனோனுமறைந்தனகேட்கலாகா
நல்லவையாவரேனுநவிலுநிற்கேட்கற்பால
சொல்லுவனுமக்குமெய்ந்நூறொடையல்யாழ்முனிவன்சொற்ற
வல்லிதிற்கேண்மினென்னமருவுமம்மைந்தர்சொல்வார்.

யாழ்முனிவன் - நாரதன். (௫உ)

ஒத்தனநீயும்யாமுமுனக்குமற்றுரைத்ததெங்ஙன்
தத்துவம்விரிக்கசெம்பொற்றாமரையுறைவோன்மைந்தன்
இத்திறநவில்வாயென்னவெரிமணிச்சுடிகைநெற்றிப்
பைத்தபாம்பணையானன்பன்பாற்படப்பகரலுற்றான்

தத்துவம் - உண்மை. (௫ந)

இருந்தவம்புரிதற்கெந்தையேகியகாலைநோக்கிச்
சுரும்புணவிரிந்தபைந்தார்ச்சுடர்முடியமரரீண்டிக்
கருங்கழலவுணரெல்லாங்களப்படப்பொருதுகூறி
அருஞ்சிறைப்படுத்தினரென்னையையமரர்கோமான்

இருந்தவம் - பெரியதவம், ஈண்டி - நெருங்கி. (௫ச)

இடருறுசிறையென்வைப்பாயேந்திழைவிடுதியென்னத்
தொடையல்யாழ்முனிவன்வந்துசொற்றனன்சொற்றலோடும்
மடவரல்வயிற்றுமைந்தனுயிர்த்தபின்மகவைக்கொன்று
விடுவலென்றுரைத்தல்செய்தான்விண்ணவர்வேந்தனம்மா.

உயிர்த்தபின் - பெற்றபிறகு. (௫௫)

கோற்றொடிவயிற்றுமைந்தன்கொல்லுதற்குரியனல்லன்
ஆற்றலந்திகிரியம்மானன்பனென்றருளிற்கூறி

மாற்றினன்சிறையான்கேட்பமாழ்குமென்னனைநெஞ்சம்
தேற்றுவான்போலமெய்ந்நூறெள்ளிற்செப்பினனால்.

மாழ்கும் - மயங்குகிற. (௫௬)

ஆங்கவன்காட்சிமெய்ந்நூலறைதரவயிற்றினுற்றோன்
தீங்கறவுணர்ந்தவாறுசெப்புவல்கேண்மினென்னப்
பூங்கழலவுணர்பெற்றபுதல்வர்க்குப்புகறலுற்றான்
வாங்குவிற்கனகனீன்றவயங்கெழிற்சிறுவன்மன்னோ

காட்சி - அறிவு (௫௭)

கலிநிலைத்துறை

போக்கிடாமலைம்புலன்களுமிசையுநற்போகம்
காக்கையேமுதலுயிரெலாங்கலக்கமில்பெரியோர்
ஆக்கையாவியோடெவ்வளவுறைபுமவ்வளவு
நீக்கமின்றிமால்பதமுன்னிநிலமிசையுறவார்

நீக்கமின்றி — நீங்காமல், உன்னி - நினைத்து (௫௮)

அரிதுமானிடப்பிறவிவந்தடைவதிங்கடைந்தால்
உரைசெயாயுண்மைக்குறையிலானூற்றின்மேலுறைவார்
விரகிலாவினையோர்களாய்மெலியுமூப்பினராய்க்
கருதுநாளவங்கழிப்பர்கண்படையினாலன்றே

கண்படை - தூக்கம். (௫௯)

உறையுமாயுளிற்பாதியுமொழிப்பர்மற்றொழிந்து
குறையுநாட்களுமனைவியர்குமரரொன்றவர்மேல்
நிறையுங்காதலினீப்பாரநெடியனைமனத்துள்
இறையுமோர்கிலார்பிறப்பிறப்புக்கிடனாக.

நெடியனை - திரிவிக்கிரமனை (௬௦)

தோற்றுமேழ்வகைப்பிறவியும்பிசாசத்தொலைந்து
மாற்றுமானிடராயிவண்மருவியுமாயன்
ஆற்றல்சேர்பதமன்பொடுநினைந்துவீடடையார்
கூற்றினாற்றுயர்வாரவர்மடமையார்துணிப்பார்.

துயர்வார் - துன்பப்படுவார். (௬௧)

பாவத்தால்வரும்பொய்யுடல்யானெனப்பகரும்
நீவத்தால்வருமிருவினைக்கட்டொடுநிகழ்ந்தின்
கூவத்தேவிழுமறிவிலாக்குருடர்மூன்றுரு
தாவத்தீச்சுடவருந்துவார்மடமையார்தணிப்பார்

கூவம் - கிணறு. (௬௨)

பன்னுநூல்பலதேர்ந்துநற்பரம்பொருளறியார்
இன்னல்பார்த்திடாரழியுமோர்பிறன்பொருள்கோடற்

குன்னுவாரெனின்மைந்தர்காளுலகினிலொளிசேர்
பொன்னின்மேற்செலும்விழைவையார்போக்குவாரம்மா.

இன்னல் - துன்பம். (௬௫)

ஓதுநூல்பலவுலகியன்முழுவதுமுணர்ந்தும்
பேதநீங்குறுத்தம்மைநன்கறிந்திடார்பெரிதாம்
காதலாகியவிலங்குபூண்விலநகெனக்கருத
மாதர்பான்மயர்ந்தாடுவரெனினெவர்மறுப்பார்.

விலங்கு - மிருகம், மயர்ந்து - மயங்கி (௬௪)

கூறுமங்கியுந்தூமமும்போற்குணகுணியாய்
வேறுவேறுசேர்பொருளெலாமேவியொன்றாகி
ஈறிலாமுதலாயுடற்கிசைவிகாரங்கள்
ஆறுமெய்ப்பொருட்கில்லையென்றறிவதேயறிவால்.

அங்கி - நெருப்பு, தூமம் - புகை. (௬௫)

பாதவங்களின்றளிரொடுபூமுதற்பலவும்
ஓதின்வேறுவேறுருவெனவொளிருமாபோலக்
கோதுசேரறுவிகாரமாங்குணமுடற்கன்றிப்
பேதநீங்கியேபிறங்குமெய்ப்பொருட்கிலைபேசின்

பாதவங்கள் - மரங்கள். (௬௬)

காட்டின்மேவியகானலிற்புனலெனக்காதல்
பூட்டுமாயையின்முறைமுறைபோநதநத்துவத்தின்
கூட்டமேயுடலவ்வுடற்குலவுநன்மதியால்
நாட்டுபோதமேநவையிலாப்பொருளென்றுநவில்வார்.

போதம் - அறிவு. (௬௭)

பன்னுமாக்கைகொளவயவமுதலியபலவும்
உன்னியீங்கிதன்றீங்கிதன்றெனமுறையொழித்துச்
சொன்னபுந்தியிற்கரியெனத்தோற்றியவறிவை
இன்னதேபரம்பொருளெனவறிவதிங்கியல்பால்

கரி - சாக்ஷி. (௬அ)

புந்திமுக்குணம்பொருந்திமூன்றவத்தையும்பொருந்தும்
அந்தமின்றியவவத்தையிலறிவெனவமரும்
நந்தலின்றியபரம்பொருட்குடைமையாநாடிப்
பந்தமுற்றவெவ்வினையறப்பரத்தொடொன்றுவரால்.

நந்தல் - கெடுதல். (௬௯)

நிலவுமோர்வினையின்றியேகித்தியமாகி
உலகெலாநிறைந்துயிரெனவொருமுதலென்ன

இலகுசித்தெனவெண்ணறுசுத்தமாயிருக்கும்
அலகின்மாயனையறிவதற்கென்னரிதம்மா.

வினை - தொழில். (எ0)

கனவுதுஞ்சுதல்காரணமாய்வருமாபோல்
வினைசெய்வெவ்வுடலுற்றும்வெம்பேதைமையிளைவால்
மனனிறுற்றிருமாயவன்மலர்ப்பதத்துணையை
நினையின்வீடுறுநீங்குமவ்வினைப்பயன்விளவே.

துஞ்சுதல் - தூங்குதல், பேதைமை - அறியாமை. (எக)

வரும்பெரும்புகழ்க்குருவொடுமருவுறப்பெற்றால்
திரும்புமாயவனடிதொழத்தீங்குவிட்டுள்ளம்
நிரம்புமாலடிக்கன்புநன்னேசமார்புளகம்
அரும்புமாக்கைநெஞ்சாந்தவெள்ளமூற்றெழுமே.

குருவொடு - ஆசாரியனோடு, மருவுறப்பெற்றால் - கூடப்பெற்றால். (எஉ)

கர்மமாயதைத்தெவிட்டிடாப்பெருதவேகருது
நாமரூபத்தோடுறைபவர்நலனழிந்திறந்து
போமென்றாலும்பொய்ப்பொருளேயகாதலித்துழல்வார்
ஈமஞ்சேர்ந்துடலெரிவதுநகண்டிலரேகொல்.

ஈமம் - மயானம் (எ௩)

அயனரன்புரந்தராதியராக்கையும்பிறவி
நயந்தரும்வினையிழைத்திடினுழிந்திடார்நவின்ன
வயம்வளர்ந்தசீர்நேமிமாலுக்கிருவினையின்
பயன்விழைந்திடாதளிக்கினப்பரனுடொன்றுவரால்.

வயம் - வெற்றி (எச)

தேவராயினுமவுணர்களாயினுந்தெரிவில்
பாவைமார்களேயாயினும்பறவைமாநரரோ
டேவராயினுமாலுழையிருத்துமன்பினரேல்
தாவிலாதவீடடைந்துணர்வாரிதுசரதம்.

தாவிலாத - அழிவில்லாத, சரதம - உண்மை (எ௫)

அன்புசெய்வதிங்கரிநிலையன்புசெய்வதுதான்
பொன்பிறங்கியவணியெலாம்பொலிந்திருப்பதுபோல்
மன்புகழ்ச்சராசரங்களின்மாயனென்றுரைக்கும்
நன்பெரும்பொருளுறையுமென்றுளத்துநாடுவதே.

சராசரங்கள் — இயங்கியற்பொருள் நிலையியற்பொருள்கள். (எ௬)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பத்திசெய்தமலன்செய்யபதத்துணைசேர்மினென்றுத்
தத்துவஞ்சிறுவர்க்கெல்லாஞ்சாற்றினன்சாற்றவன்னோர்

அத்தலையறிவுமன்புமடைந்தனர்மறையோரஞ்சி
இத்திறமுரைத்துமென்னுவியம்பினர்கனகற்கம்மா.

கனகற்கு - இரணியனுக்கு (எஎ)

ஆட்டியதரங்கமுந்நீர்முகத்தெழுமமுதமள்ளி
ஊட்டியதென்னத்தீஞ்சொலுரைக்குநன்மதலைசெய்தி
கேட்டலும்பொருதுமேன்மேற்கிளரழற்சீற்றம்பொங்கி
நாட்டநஞ்சுமிழுவெய்யநச்சராவென்னலானான்.

நச்சரா - நஞ்சுள்ளபாம்பு (எஅ)

சீறினன்மதலைதன்னைச்சென்றுநீர்கொணர்மினென்று
வீறுசேரவுணரோடிமீண்டுவந்தவையினுய்க்க
ஆறறிபுதல்வன்செய்யவணிதிகழ்வதனநோக்கி
ஈறுநீயடைவைசீயோவெனவவனியம்பினானால்.

ஈறு - மரணம் (எகூ)

ஏறெனையிழைப்பலென்றாயிழுதையினியல்பதீதாம்
நாறுபைங்கமலகேள்வனன்மனுநவிலுநீரார்க
கூறுசெய்குறல்கூற்றுக்குமொல்லுமோவொல்லாதெந்தாய்
தேறுதிமறைகள்சான்றுதேற்றமீதையமின்றால்.

இழுதை - மூடன், மனு - மந்திரம், ஒல்லுமோ - கூடுமோ, சான்று - சாக்ஷி. ()

தண்டுளிநறவுகாலுந்தாமரைப்பொகுட்டின்மேய
வண்டுவீழோதிமின்னின்வயங்கவோர்மழைக்காரென்று
கண்டவர்மருளும்வண்ணங்கடலிடைக்கிடந்தமாயன்
உண்டுகொலுலகத்தென்னவுருமெனவுலம்பினானால்.

நறவு - தேன், காலும் - உமிழ்கின்ற. (அக)

கடலினுமுளனேவண்டுகஞலவாய்வீழுமந்தண்
மடலினுமுளனேயோங்குமலையினுமுளனேமன்னு
உடலினுள்ளுயிர்போலெல்லாவுலகினும்முளனேவெய்ய
அடலுடையாழிசாங்குமமலனென்றறைந்தானம்மா.

கஞல - நெருங்க, அடல் - வெற்றி. (அஉ)

அரும்பெறற்குழவிமாற்றமஞ்செவிவெதுப்பவாற்றான்
முரிந்திடப்புருவமுந்நீர்முளைத்தெழுபரிதிபோல
எரிந்தபொற்கடகஞ்சிந்தவிலங்குவாணிலவுக்கற்றை
சொரிந்திடுபரூஉத்தாட்செம்பொற்றூணிடையடித்தானன்றே.

மாற்றம் - சொல், பரூஉத்தாள் — பெரிய அடி. (அஙு)

இடித்ததோரசனியென்னவெறுழ்வலிக்கனகன்சீறி
அடித்ததூணத்துநின்றுமாடகப்பசும்பொனண்டம்

வெடிப்பமால்வரைபணிப்பவெடிபடநகைத்துவெய்தின்
வடித்தபூந்துளவமாலைவாளரிமுளைத்ததம்மா.

அசனி - இடி, தூணம் - தூண். (அச)

மருப்பிளந்திங்களன்னவாளுகிர்நுதியின்மாயன்
சிரிப்பின்மாமலர்க்கண்சேந்துதீப்படநோக்குநோக்கின்
நெருப்புவாயுமிழ்ந்தமின்னினிழன்றுநெய்ம்முகமணிந்த
அரத்தவேலவுணரெல்லாமாருயிர்தொலைந்துசாய்ந்தார்.

சிரிப்பின் - சிறிப்பினால், நோக்கின் - பார்வையினால். (அரு)

ஒளிறும்வாளொருகைபற்றியொண்சுடர்வயிரம்வேய்ந்த
கிளரொளிப்பசும்பொற்செய்யகேடகமொருகைதாங்கி
அளிபடுதொடையன்மார்பனண்ணலாளரியின்முன்னம்
களிமதஞ்செருக்கும்வென்றிக்களிறெனச்சினந்துசேர்ந்தான்.

ஆளரி - நரசிங்கம். (அசு)

கள்ளவிழ்துளவமார்பன்கதிர்விரிகமலச்செங்கை
வள்ளுகிர்நுதியான்மெல்லவெளவலும்வலியினீங்கிப்
புள்ளின்வாய்ப்பட்டுச்சோரும்புற்றரவென்னமாழ்கி
துள்ளழலுயிர்ப்புவீங்கியுழன்றனனவுணர்வேந்தன்.

வள் - கூர்மை, உகிர் - நகம், வெளவலும் - வகிர்தலும். (அஎ)

கழைசுளிகளிறன்னானைக்கவானிடைக்கிடத்திமாலைக்
குழவிவெண்டிங்களன்னகூருகிர்நுதியிற்பைந்தேன்
பொழிமலரலங்கன்மார்பம்போழ்ந்துசெங்குருதியூறி
வழிபசுங்குடர்மென்கண்ணியாளரிவனைந்ததன்றே.

கவான் - தொடை. (அஅ)

ஆழ்த்தனரமரரோடியரும்பவிழ்பசும்பொற்போது
தூர்த்தனருலகமுண்டசுடர்நகைப்பவளவாயும்
கூர்த்தவாளுகிருங்கையுங்கொழுங்குடரணிந்தமார்பும்
பார்த்தனர்வெறுவலுற்றார்பனியிருவிசும்புமொய்த்தார்.

வாள்உகிர் - ஒளியுள்ளநகம். (அகூ)

வெஞ்சினத்திகிரிமாயன்வெருவருதோற்றநோக்கிக்
கஞ்சநாண்மலரினானுங்கண்ணுதல்பிறருமஞ்சிச்
செஞ்சுடர்விரிக்கும்போதிற்றெரிவைநீசேறியென்ன
அஞ்சினளணங்குநண்ணவவ்வுருக்கண்டுமன்றே.

போதிற்றெரிவை - கமலையே. (கூ0)

மலரயனகிரீசன்றேவர்வாசவன்முனிவர்சித்தர்
இலகுதென்புலத்தோர்நாகரியக்கர்கந்திருவராதி

அலகிலோராணுகாராகியாளரியுருவத்தோனைப்
பலமுறைதொழுதுபாதபங்கயம்பரவினாரால்.

கிரீசன் - சிவன். (கூக)

தாளிணைவழுத்தியன்னோர்தமைமிசைவிழுந்துபோற்றி,
வாளுடைக்கனகன்றன்னைமாய்த்தெமைப்புரந்தோய்சிற்றம்
கோளராவணையிற்றுஞ்சுங்கொண்டலேதணிதியென்ன
ஆளரிகொண்டசீற்றமகன்றிலதலக்கணுற்றார்.

அலக்கண் - துன்பம். (கூஉ)

உவரிவாய்வந்துதோன்றுமூறுசுவையமிழ்தமென்னக்
கவிமதங்கடந்தவென்றிக்கனகனுக்குதித்ததோன்றல்
செவிமுதல்குளிர்ப்பத்தண்ணென்றெள்ளமுதுகுத்தாலென்னப்
புவிமகள்கொழுநன்பொற்றாள்புல்லினன்பரவினானல்.

உவரிவாய் - கடலில். (கூஙு)

அஞ்சனவண்ணத்தண்ணலகமகுழைபூர்துருகியாங்குக்
கஞ்சநாண்மலரினன்னகரிர்வனைச்செங்கைதன்னால்
செஞ்சுடர்க்குடியன்னுன்சிறுபுறந்தடவந்தென்கொல்
மஞ்சநீவிழைந்தாய்வேட்டவரநினக்களிப்பனென்றான்.

அஞ்சனவண்ணத்தண்ணல் - திருமால், சிறுபுறந்தடவந்து—சிறுமுதுகைத்தடவி,
மஞ்ச - மைந்தனே. (கூச)

விழைவறவெறிந்தார்நாடும்விழுப்பெருஞ்சுடரே தூய
பழமறைக்கொழுந்தேபச்சைப்பசும்புயல்வண்ணநின்னை
வழிபடுமன்பேயன்றிவரமெவன்பெறுவதென்றுத
தொழுதனன்வழுத்தலுற்றான்றூயபேரறிஞனம்மா.

விழைவு - ஆசை, அறவெறிந்தார் - முற்றுங்கடிந்தவர். (கூரு)

பூவுறைமணம்போலெல்லாப்பொருளினுமுறைவாய்நின்பொன்
சேவடிதொழுதுபோற்றார்தேவரேயெனுநீசர்
ஆவர்பொல்லாதநீசராயினும்வணங்கினின்சீர்
நாவினால்வழுத்திற்றேவாயகர்நாதராவார்

வழுத்தின் - துதிப்பாராயின் (கூசு)

எங்குநீயுறைவையேனும்பலருக்கண்டுநோக்கின்
அங்கவர்முகங்கடாமேயறிவர்போலன்பினோர்முன்
தங்கெழிலுருவதோடிசார்குவையறியுமாறுன்
பொங்குசீர்பிரமனாலும்புகழ்வதற்கடங்காதம்மா

உறைவையேனும் - வியாபித்திருப்பாயாயினும். (கூஎ)

உருடருஞ்சகடபோலவொழிவிலாப்பிறவியுற்றேன்
மருடரும்பிறவியின்னம்வருமகொலென்றஞ்சலல்லால்

தெருட்டருநின்னைக்கண்டதேவர்போலஞ்சகில்வேன்
அருட்டரல்வேண்டுமென்பாலாளரியுருவத்தையா.
ஆளரியுருவம் - நரசிங்கரூபம். (௯௮)

அஞ்செவியாயவண்டின்னருங்கதைத்தேறன்மாந்த
நெஞ்செனுமன்னமுன்றுணிரையிதழ்க்கமலம்வைக
தஞ்சமாநினதுநாமஞ்சாற்றுகவென்றுமென்றும்
எஞ்சிலிவ்வரந்தநிந்நனிடாக்கடலேற்றுவாயால்.
தேறல் - தேன், மாந்த - குடிக்க, வைக - தங்க. (௯௯)

ஆகியிலொருவையாகியந்தமொன்றுரைக்கும்போழ்தும்
ஏதமிலொருவையாகியிம்புயிற்கவிற்பேதம்
ஓதுயிர்பலவுமாகியுறைதல்போலுறைவாய்ஞான
சோதியுன்விளையாட்டெல்லாஞ்சொல்லவல்லார்யாரம்மா.
ஒருவையாகி - ஒருவனாகி (௧00)

ஆதிமாமாயையாகியசத்தகந்தாரமாகிப்
பூதமாய்ப்பொறியாயந்தப்பொறிக்குறுங்குணங்களாகிப்
பேதமாமுயிராயொன்றாய்ப்பிறங்குசிந்தாகிவைகும்
கோதிலாநின்னையன்றிக்குறிக்குமோரபொருளுமுண்டோ.
அகத்து - மனத்தில் (௧0௧)

வேட்டிமெளையார்போகம்விரும்பிடுவேறுவேறு
நாட்டுணைசிலர்கைப்பற்றநானையைச்சிலர்கைப்பற்ற
வாட்டமுற்றலைவார்போலவருத்துமைம்புலனும்போகம்
நாட்டமுற்றலைக்கப்பட்டோர்நலிவர்நுன்னருணைண்ணுறாரால்.
விரும்பிடு - விரும்பி, நுன் - உனது (௧0௨)

தோற்றிடின்வீயுங்காலைத்துயருறுவதற்குமஞ்சி
ஏற்றதாய்வயிற்றின்ீறத்துற்றிடருறுவதற்குமஞ்சி
மாற்றருஞ்சூழல்காலுற்றுமறுகுமோர்சருகுபோல்வார்
போற்றிடார்நின்னையன்றேனர்புலமையையென்சொல்கேனே
வயிற்றின்தேத்து - வயிற்றினிடத்தில். (௧0௩)

வெற்றிவேலவுணற்கொன்றுவிழுச்சிறப்பளித்தோயிங்ஙன்
உறறவெஞ்சீற்றநீங்கிவுவந்தருளென்றுபல்கால்
பற்றெறிந்துயர்ந்தவைந்தாம்பருவத்தோன்பரவலோடும்
அற்றமில்வெகுளிபோகவாளரிமகிழ்ந்ததன்றே.
பரவலோடும் - துதித்தலோடும். (௧0௪)

அரும்புகழ்ப்புதலவுன்றனன்பினுமகிழ்ந்தேமுள்ளம்
விரும்புடற்போகனெஞ்சின்விழைந்திலைநீயென்றாலும்
பொருந்துமோர்மனுவின்காலம்போற்றுசீர்வேந்தனாகி
இருந்தபின்னெனதுபாதமெய்துகவெனச்சொன்னனல்.
அன்பின் - அன்பினால். (௧0௫)

மானிடமடங்கலானோன்வழங்குதல்கேட்டமைந்தன்
நீனிறமுகிலேநின்னைநிந்தையேபுரிந்ததாதை
ஊனமாம்பாவமெல்லாமொழியநீயருள்செயென்னாத்
தேன்மலர்துளவத்தம்மான்சிறுவனைநோக்கிச்செப்பும்.

மானிடமடங்கல் - நரசிங்கம். (க0௬)

உன்னையிங்குயிர்த்தவாற்றா லுரைக்குநின்குலத்துமூவேழ்
என்னுநன்மரபுளோருமியைந்தனர்புனிதமென்றால்
அன்னவன்புனிதனாதற்கையமென்னவனுக்கீம
மன்னுநல்வினைசெய்கென்னமைந்தனவ்வினைசெய்தானால்.

ஈமமன்னுநல்வினை - மயானச்சடங்கு. (க0எ)

பெருகுசீர்ப்பிரகலாதன்பெட்பொடுவழுத்தலாலந்
நரகரியுருவத்தண்ணனன்குளமகிழ்ந்தானென்ன
விரிமலர்ப்பொகுட்டின்மேயவிண்ணவன்முதலினோர்தாய்
அருகிவந்தணுகியன்னோனடிதொழுதேத்திநின்றார்.

பெட்பொடு - அன்போடு. (க0அ)

விரிந்தசெங்கமலமன்னவிழிமலர்க்கருணைமாரி
சுரந்ததன்கமலப்பொற்றொடுதொழுதெழுந்திமையோர்தத்தம்
பெருந்திருவெய்தநல்கிப்பிறைநுதற்பிராட்டிபுல்ல
அரும்பவிழ்துளவத்தண்ணலாயிடைமறைந்தானன்றே.

புல்ல - தழுவ, துளவத்தண்ணல் - திருமால் (க0௯)

கற்றவராறியலாகாக்காட்சிநின்றறிந்ததோன்றல்
பொற்றசெங்கமலமேவும்புங்கவன்பணியினாலே
கொற்றநீண்மகுடஞ்சூடிக்குளிர்ந்தவெண்டிங்களென்ன
ஒற்றைவெண்கவிகைநீழலுலகெலாம்புரந்தானன்றே.

கமலமேவும்புங்கவன் - திருமால் (கக0)

கலிவிருத்தம்

பூட்சியோடரிபோந்திடப்போற்றுநற்
காட்சிமேயகனகன்மதலைதன்
மாட்சிநோக்கிமகிழ்ந்தயனாதியோர்
ஆட்சியாயபதத்தடைந்தாரரோ.

பூட்சி - உடல். (ககக)

முன்புபேசுகதைமொழிநாவினோர்
அன்பினோடுடன்கேட்குமறிவினோர்
துன்பவாரிகடந்துதுகளிலா
இன்பவாரியினெய்துவரென்பவே.

துகள் - குற்றம். (ககஉ)

இரணியனைக் கொன்ற வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—கஉஅ.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

## மூன்றாவது
## வருணாச்சிரம முறைத்தவத்தியாயம்.



கலிநிலைத்துறை.

வருணநான்குநான்காச்சிரமத்திறம்வகுத்துத்
தெரியுமாறுநீசெப்புதியென்றுதீங்கெறிந்த
தருமன்கேட்டலுந்தவஞ்செய்நாராயணனெனுமால்
உரைசெய்தானெனக்கென்றுநாரதமுனியுரைக்கும்

வருத்து - வகைப்படுத்தி, செப்புதி - சொல்வாய். (௧)

சமதமந்தவந்தண்ணளிபொறுமைமெய்தருமம்
விமலஞானமோடுயிர்க்கெலாம்விரும்புமன்பினராய்க்
கமலைகேள்வனைக்கண்ணனைக்கருதினராகி
அமர்தலெக்குலத்தவர்க்குநல்லறனெனவறைவார்.

சமதமம்-சமமும்தமமும், (சமம்-அகக்கரணதண்டம், தமம்-புறக்கரணதண்டம்)

ஓதலோதுவித்துறைதனன்மகமுவந்தாற்றல்
தீதிலாமகம்விரும்புவோர்செயப்புரிவித்தல்
ஈதலேற்றலென்றறுதொழிலியற்றுதீற்குரியார்
வேதநான்கையும்விளம்புமந்தணரெனவிதிப்பார்.

மகம் - யாகம். (௨)

அரசருக்கறனருமறையோதலம்மகங்கள்
புரிதன்மாநிலம்புரத்தல்வெம்போர்படைபயிற்றல்
வெருவலாதுவெஞ்சமத்தெதிர்வெற்றிமிக்கடைதல்
மருவியன்பொடுவழங்கலென்றறுவகைத்தென்ப.

வெஞ்சமத்து - கொடியபோரில் (௩)

வணிகருக்கறன்மறைபயின்றிடன்மகம்புரிதல்
தணிவில்வாணிபமுழவுசெய்திடல்பொருட்டருதல்
அணிசெயானிரைகாத்தலிங்கறைந்தமூவருக்கும்
பணிசெய்துற்றலேபின்னவர்க்கறனெனப்பகர்வார்.

ஆனிரைகாத்தல் - பசுமந்தையைக்காத்தல். (௪)

மடந்தைமார்க்கறன்மனைத்தொழில்பளகிலாதியற்றி
அடைந்ததெய்வநற்பதியெனவன்பொடுவணங்கிக்
கடந்திடாதவன்பணித்தவாபுரிந்தவன்காதல்
தொடர்ந்ததாதைதாயேவலுந்தொழுதுசெய்குவதே.

பளகிலாது — குற்றமில்லாமல், பதி - கணவன் (௫)

சொன்னவேதியர்முதற்சொலுந்துகளிலாவருணம்
மன்னுநால்வகைத்தவரல்லாமற்றையகுலத்தோர்க்

குன்றுநல்லறந்தத்தமகுலத்தொழிலுவந்து
பன்னுபாவநீத்தியற்றுதலெனப்பகருவரால்.

குலத்தொழில் - குலத்தார்செய்யுந்தொழில். (எ)

உழுதுவித்தியவிளைபயிர்க்குரியவரேகிப்
பழுதிலாதுகாத்திலரெனிற்பயன்பெறார்போல
வழுவிலாவுரிமைத்தெனவழங்கறமறப்போர்
அழிவிலாநலனடைகுறாருந்துயரடைவார்.

அறம் - தருமம். (அ)

கலிவிருத்தம்.

பிரமசாரியர்க்கறம்பேசினெந்தெனும்
பருவமேழுநற்பகராண்டுநாலினுள்
உரைசெய்சீரிருபிறப்புற்றதென்னமுப்
புரியிறுறான்முறைபூணல்வேண்டுமால்

பருவம் - வருடம். (௯)

குருகுலவாசமாய்க்குலவியையமேற்
றனைதருருரவனிவ்வுண்டிமாந்தென
இருபொழுதும்மயின்றெண்ணெய்தேன்முதல்
மருவலாகாவெனமாற்றல்வேண்டுமால்.

குருகுலவாசம் - பூசாரியரையடுத்துவழிபட்டு அவர் கட்டளையில் அவரை நீங்கா திருத்தல். (௧0)

சிலமோடுழைய தண்மவுஞ்சிசேர்ந்தலர்
காலையுமாலையுங்கதிர்வெய்யோனையும்
கோலநற்கனலையுங்குருவையுந்தினம்
மாலறவணங்குவர்மறைகளோதுவார்.

உழைஅதள் - மான்தோல், மவுஞ்சி-நாணற்புல்லாற் செய்யப்பட்ட அரைஞாண்.

வாசமார்கருங்குழன்மடந்தைமாரெழில்
நேசமோடுளத்திடைநினைந்தன்றார்திறம்
பேசிடாதுறைவதுபிரமசாரியர்க்
காசிலாவறனெனவறையுநூல்களே.

மடந்தைமார் - மாதர், எழில் - அழகு (௧௨)

இல்லறம்பூண்டவர்க்கெண்ணெயேமுதல்
நல்லனமருவுநவையின்றமரோ
சொல்லியநாட்களிற்றுணைவிமார்முலை
புல்லலுமுரிந்தெனப்புகலுநூல்களே.

நவை - குற்றம், துணைவிமார் - மனைவிமார் (௧௩)

வானக்த்தமரர்மாமுனிவர்தம்மொடும்
தனகத்திருந்ததார்த்தென்புலத்தவர்க்

கானமுக்கடன்கழித்தறததினின்றவர்
கானகத்தேகுதல்கருதுவார்களால்

தென்புலத்தவர் — பிதிரர். (கச)

மனைவியைமைந்தர்பால்வைத்தும்வைத்திடா
தனையவளொடுவனத்தடையலாமதில்
தனிவனமனைவியோடுறையிற்சாலைசெய்
தனல்வளர்த்தோமநன்காற்றல்வேண்டுமால்.

உறையின் - வசித்தால். (கரு)

மைந்தர்பான்மனைவியைவைத்துமன்னபூல்
சிந்தையினடக்கினர்செல்லிற்சாலைநீத்
தந்தழல்பனிவெயிலமர்ந்துமாமலைக்
கந்தரமுறைந்துமேகழிப்பர்வைகலே.

கந்தரம் - குகை. (கசா)

வாட்டமற்றறிவுவந்தடையின்வன்னியாய்க்
காட்டகத்தேகலுங்கடனங்கேருறின்
மீட்டமத்துறைவதைவிரும்பிவீறுசேர்
நாட்டகத்துறுவதுநவையென்பாரரோ.

வன்னி - பிரமசாரி, நவை - குற்றம். (கள)

உழுகுநர்விதைத்தநெல்லுண்டிமாந்திடாா
விழுசருகுவைநென்மெல்லடகுவேண்டுவார்
தழையுறுமயிருகிர்தவிர்ந்திடாரவர்
மொழிநறையெண்ணெய்தார்முதலநீக்குவார்.

அடகு - இலை, உவைநெல் - புல்லரிசி, உகிர் - நகம் (கஅ)

துறந்தநல்லெதிசெயல்சொல்வினவகியைச
சிறந்ததனுளத்திடைச்சேர்த்திச்செய்நுணம்
நிறைந்திடுபுலன்களுநிகழ்த்தைம்பூதமும்
பிறந்ததின்முறைமுறைபெரிதுநோக்கியே.

எதி - துறவி, அங்கி - நெருப்பு. (கக)

நிகழ்த்தியமனம்பொறிபூதநீங்கிடா
தகத்திடையடக்ககங்காரந்தன்னையும்
மகத்தினிலிருத்தியம்மகத்தைமாயையின்
புகுத்தியம்மாயையையறிவிற்போக்கியே.

மகத்தினில் - மகத்தத்துவத்தில். (உ0)

தத்துவமித்திறமடக்கிச்சத்தெனச்
சித்தெனக்குலவுவன்செப்புகின்றசிர்ப்

புத்தியினுசையும்பொருந்துமானமும்
வைத்திலகுகியேவயங்குவானரோ.

வயங்குவான் - விளங்குவான். (உக)

ஒருபதிக்கொருபகலாகவேயுறைந்
திருநிலத்தேயவனியன்முத்தண்டமும்
கரகமுந்தாங்குவன்கருதுசின்னமாய
தருகணவெனச்சகமனனிற்காண்பனுல்.

பதி - ஊர். (உஉ)

உன்னியமறைமுடிவோதுவானன்றிப்
பன்னியவேறுநூல்பகர்ந்திடானவன்
துன்னிகவுலயவர்சொன்னநல்லறம்
மன்னியநூற்குணாவனாந்திடானரோ.

மறைமுடிவு - வேதாந்தம். (உ௩)

முனிவுசெய்யானுடன்முதிர்நதுபோமென்றும்
இனிதுசெய்யானுடலென்றுபோமென்றும்
நினைதல்செய்யானிலைநிற்கவோர்மடம்
வனைதல்செய்யானுயிர்வருந்திடானரோ.

மடம் - தவச்சாலை. (உ௪)

திசைபுகழ்துறவறஞ்சேர்ந்துளார்களில்
இசைதருசின்னம்விட்டெவன்கொலோவென
வசைதருமூங்கையர்மத்தர்போலவும்
அசகரம்போலவுமாகுவானரோ.

சின்னம் - அடையாளம், அசகரம் - பெரும்பாம்பு. (உ௫)

உலகெலாந்தன்னிடத்துறைவதாயுந்தான்
அலகிலாவுலகெலாமாவதாகவும்
இலகுசீருளத்தொடும்மையுந்துநோக்குவான்
நிலவுமோர்பேதமாய்நினைந்திடான்ரோ.

உறைவதாய் - தங்குவதாய். (உ௬)

அறிவினின்முதிர்ந்தசகரங்கொலாமென
மறையவன்றுறவறம்பூண்டுமென்னுசீர்
நிறைதருசையமாநெடுங்கிரித்தலை
உறையுமோர்கதைநினக்குறைக்குங்கேட்டியால்.

அசகரங்கொல் - மலைப்பாம்போ. (உ௭)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மிக்கசீர்ப்பிரகலாதன்மேதினிமுழுதுநாடிப்
புக்குழியசகரம்போற்பொருந்துமோர்முனிவன்றன்னை

எக்குலத்துதித்தானென்றுமெந்தவாச்சிரமனென்றும்
தக்கநெஞ்சையங்கொள்வான்சையமால்வரைகண்டானே.

ஐயம் - சந்தேகம். (உஅ)

அருவரைச்சாரலெய்துமசகரன்றன்னைக்கண்டு
பெரிதுநீதவஞ்செய்கின்றாய்பெருத்தனையென்கொலென்ன
எரிகதிர்ப்பரிதிமார்பவிளைத்தலும்பெருத்தாலும்
ஒருவுறுமுடலுக்கன்றியுயிர்க்குமற்றில்லைமாதோ.

ஒருவுறும் - நீங்குகிற. (உகூ)

என்றருந்தவத்தின்மிக்காளிசைத்ததுமகடேலோடும்
நன்றுரைத்தனைநீயாரைநவையறவுரைக்கலாமேல்
ஒன்றியவிசைத்தியென்னவொளிறுவேற்கனகனின்ற
வென்றிகொண்மதலைக்கந்தமெய்ம்முனிவிளம்பலுற்றான்.

நவை - குற்றம். (௩0)

உரையொழிந்திறந்துளோருமுற்றனர்பெரியோரென்றால்
புரையறுசிலசொல்சொல்லிப்புனிதமேபொருத்துவார்நீ
அரிதிவணடைந்துகேட்டாலறைவதினமூகிதுண்டோ
கருதுடற்காமமுற்றேகணக்கில்பல்பிறவியுற்றேன்.

உரை - சொல். (௩க)

மறையவர்குலத்துட்டோன்றிமயக்குடற்காமம்விட்டே
அறிவறிந்திங்ஙன்வந்தேனம்மமாலுடராய்வந்து
நிறைவருகாமம்விட்டுநிறைந்திடார்தம்மையன்றோர்க்
குறுவதோர்சுகமுமுண்டேயொழிவிலாத்துயரமல்லால்.

உறுவது - கிடைப்பது, உண்டே - உண்டோ. (௩உ)

சைவலமறைக்குந்தண்ணீர்தம்மருங்கிருப்பதோரார்
பொய்வலம்பொருந்துகானற்புனலையேவிரும்புவார்போல்
மெய்வலந்திகழுந்தம்மைவிரும்பல்விட்டறியாருண்மை
கைவலமறப்பார்காமப்பொருளேபகருத்தின்வேட்பார்.

சைவலம் - நீர்ப்பாசி, கைவலம் - முத்தி. (௩௩)

ஆசையாலருந்தாராகியருதிதிவருந்திப்பெற்றோர்
நேசமாரரசர்கள்ளர்நெடும்பகைமுதலினோரால்
காசுலாம்வெருவுட்கொள்வார்கண்படைசிறிதுங்கொள்ளார்
நாசமேயடைவார்காமம்விட்டவர்நலன்றுய்ப்பாரால்

வெரு - பயம், கண்படை - தூக்கம். (௩௪)

உழப்பினலீட்டிவைத்தவுறுசுவைத்தேறலுண்ணு
திழப்புறுகாமர்தேனுமெழுகலவெதிர்ந்தமர்ந்தும்

விழுப்பெருமலையராவுமேதகுகுரவர்கண்டாய்
மழைப்புயலனையாயென்றுமறைமுடிவியம்பினனால்.

தேறல் - தேன், தேன் - வண்டு, எதிர்ந்த - நேர்ந்தவை, மாந்தும்-அநுபவிக்கிற.

உளநனியுவந்துகேட்டவொண்புகழ்ப்பிரகலாதன்
விளைவுறுவிருப்பினோடுவெறுப்புவிட்டுயர்ந்தோன்றன்னை
முளரியந்தடக்கைகூப்பிமுறைமுறைவணங்கினாளும்
வளமுறைநகரஞ்சேர்ந்தான்மானவேலரசமாதோ.

உவந்து - மகிழ்ந்து, கேட்ட - சிரவணஞ்செய்த. (௫௬)

வருணாசிரம முரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௩௬௪.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்

---

நாலாவது

## இல்லறத்தோர்கதியுரைத்தவத்தியாயம்.

தரவுக் கொச்சகக் கலிப்பா.

வாழிமுழுத்தவனுரைத்தமறைபுணர்ந்தந்நகரடைந்தோன்
ஆழிவலனுயர்கடவுளடிக்கமலமலர்சூடி
ஊழிதொறுமுயர்புகழ்சேர்ந்தோராழிதனையுருட்டி
ஏழுலகுமினிதளித்தானெனக்கிளந்தானிருந்தவத்தோன்.

ஓராழிதனையுருட்டி - ஒற்றைச்சக்கரஞ்செலுத்தி. (௧)

சொல்லுபெருந்தவனுரைத்த துகளிலறவறங்கேளா
இல்லறத்தினிருந்துதுயரென்போல்வாரிடரொருவிப்
புல்லுமொருகதியுளதோபுகலுதிநீயெனத்தருமன்
நல்லதுகேட்கின்றியெனநாரதமாமுனிநவில்வான்.

துகளில் - குற்றமில்லாத, இடர் ஒருவி - துன்பமொழிந்து. (௨)

நித்தியநைமித்திகஞ்சேர்நிகழ்தையில்காமியவினைகள்
பத்தியொடுபுரிந்துவரும்பயன்விழையார்பசுந்துளவோன்
சித்தமகிழ்தரவுதவித்திருமால்சீர்சொலக்கேட்கின்
முத்திநெறிபொருந்துதற்குமுந்துநெறிவேறின்றால்.

காமியவினைகள்-விருப்பத்தோடுகூடிச்செய்யும் வினைகள், விழையார்-விரும்பார்.

பாவகனைவழுத்திமறைபகர்ந்தினியவுண்டியினைத்
தேவர்நரர்பூதமொடுதென்புலத்தோர்தமக்குதவித்
தாவில்கிளைஞோர்களொடுசார்ந்துநுகர்ந்தாரளிசேர்
காவிமலர்புரைமேனிக்கடவுளுலகடைகுவரால்.

பாவகன் - அக்கினிதேவன்.

(௩)

அங்கிமுகத்தளித்தலினுமருமறையோர்முகத்தளிக்கின்
செங்கண்மலர்மான்மகிழுந்தென்புலத்தோர்தமைக்குறித்துத்
தங்குமமைமுதலாகச்சாற்றுதொண்ணூற்றாறினொடும்
பொங்குநைமித்திகதினத்தும்போனகமீந்திடலியல்பே.

அமை - அமாவாசை, போனகம் - சோறு. (௫)

காமர்நைமித்திகமெனுநாள்கமையுறுநற்பாத்திரர்கள்
ஏமுறவந்தெய்தியநாளிருகதிரைப்பணிதீண்டு
நாமநெடுநாள்பிறப்புநாமகரணம்முதலா
வாமமணவினைபுரியவயங்கியநாண்முதலாமால்.

நற்பாத்திரர் - நல்விருந்தினர், இருகதிர் - சந்திரசூரியர்கள், பணிதீண்டுநாள்-கிரகணநாள். (௬)

கங்கைமுதலாநதியிற்கயையிலருஞ்சேதுவினில்
பொங்கெழின்மாமலயமுதற்புனிதமுறுதலத்தினுற்றுத்
தங்கியவன்போடுவந்தநண்புனலின்கடனாற்றின்
வெங்கொடும்பாதகந்தொலைப்பர்வீடடைவர்தென்புலத்தோர்.

புனலின்கடன் - நீர்க்கடன். (௭)

தனக்குரியவறத்தைவனிதணக்கவொண்ணாதில்லறத்தோர்
அனற்கருமமுதலாயவறமொழித்துவிடலாகா
வனத்துறைவோர்மீண்டுமொருவண்பதிமேவுதலாகா
நினைத்தொழித்தமுப்பாலினேயம்வரலெதிக்காகா.

வனி - பிரமசாரி, தணக்கல் - நீக்கல், பதி - ஊர், எதி - சந்நியாசி. (௮)

இருவினையாஞ்சகடுபுலனெனும்புரவிபூண்டுதிகழ்
உடைமுதலைந்தெனும்வழிபோமுடற்றேரினுறையுயிராம்
அரசன்மதிப்பாகனொடுமறிவெனும்வாளாலெறிந்து
கருதியகாமாதிபகைகடந்திடின்வீட்டுலகுறுமே.

கடந்திடின் - வென்றிடின். (௯)

காதலெனுங்கொடுவயவைகலந்துலவிற்காமாதி
ஓதுபலகுணப்புளிஞருருஞற்றுவினைவிலங்கினொடும்
பேதமுறுவெம்பிறவிப்பெருங்கடல்வீழ்குறலுணரின்
சூதுலவுபயன்விழைந்துதொல்வினையார்புரிபவரே.

வயவை - வழி, புளிஞர் - வேடர். (௧௦)

விரவுறுநட்புப்பகையைவிட்டுமனையறத்திருந்து
மருவுசெயப்படுபொருளுமன்னுதொழில்செய்பவரும்
கருமமுமோர்பிரமமெனக்கண்டுவினைபுரிவோரும்
தெருளுறுசீரோதிசேருந்தெளிவிசும்பேசேர்குவரால்.

எதி - துறவி. (௧௧)

அரியதொழிலாடையுருவறியினொருநூற்றுன்போல்
மருவியதாம்பிரமமென்றேமதிப்பதுபாவாத்துவிதம்
கருமமெலாம்பிரமமெனக்காணல்கருமாத்துவிதம்
விரவியுலகவருளத்தின்மேவுபெருஞானமெலாம்.

நூற்றுன் - நூல்தான். (கஉ)

ஒன்றெனநன்குற்றறிதலொழிவுறுஞானத்துவிதம்
மன்றல்கமழ்மலர்த்தொடையோய்வகுத்தவிம்மூவத்துவிதம்
நன்றுளத்தினிடைதெளிந்துநவையறுதம்வினைபுரிவோர்
துன்றுவினையொழித்தமுனிதுன்னுகதிமன்னுவரால்.

நவையறு - குற்றமற்ற. (கங)

கந்திருவன்யான்பண்டுகெறங்குதிரைக்கடன்ஞாலம்
தந்தவன்றன்வேள்வியினிற்றளவினிளமுகைமுறுவற்
சிந்தரிக்கண்மடநல்லார்கிரளினொடுசெறிந்தெழில்யாழ்ப்
பைந்தொடையிற்றடவந்துபண்கனியப்பாடினனால்.

தளவின் - முல்லையின். (கச)

கன்னியர்தங்குழாத்தினொடுகலந்தனன்போய்ப்பாடுதலான்
பின்னவனுகச்சபித்தான்பிறந்தனன்மற்றவ்வண்ணம்
கொன்னெழுகுபடவரவிற்கூத்துநவில்பரனிசைகேட்
டன்னமுயர்த்தவன்மதலையாயினனீங்கடல்வேலோய்.

படவரவிற்கூத்து நவில்பரன் - திருமால். (கரு)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அருமறைமுடிவுகாண்டற்கரியபேரொளிநின்மாமன்
ஒருதனிமதலையாகவுவந்துடன்பயிலப்பெற்றுய்
பொருவிலோயென்றுபோற்றிப்போயினன்முனிவனென்னச்
சொரிமதுத்தொடையலாற்குச்சுகனினிதுரைசெய்தானால்.

பயிலப்பெற்றுய் - பழகப்பெற்றுய். (கசா)

இல்லறத்தோர் கதியுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—கஅ0.

ஏழாங்கந்தம்-முற்றிற்று.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்!



# எட்டாங்கந்தம்.



## முதலாவது

## மனுக்களை யுரைத்த வத்தியாயம்.

முறைவிளையாடநீதிமுடிபுனைமனுக்கடன்மை
இறைவிளையாடலெல்லாமியம்புதியென்னப்போற்றி
நறைவிளையாடுந்தார்வேனரபதியுரைப்பநான்கு
மறைவிளையாடுநன்னாமாதவன்வழங்குமாதோ.

நறை - தேன், நன்னா - நல்லநாக்கு. (௧)

ஆதிமாமனுவின்காலத்தமலனல்விளையாட்டெல்லாம்
ஓதினேமரசமற்றுமொழிந்தமாமனுவின்காலத்
தேதமின்முனிவர்விண்ணோரிந்திரனிவர்களென்று
சோதிமாறேற்றுமாறுசொல்லுதுங்கேட்டிமாதோ.

ஏதம் - குற்றம். (௨)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இயம்பிரண்டாஞ்சீர்மனுவினையுரைக்கினிலங்குமக்கினிமுனமீன்ற
நயன்றருசுவாரோசிடனவனுலகநவையறக்காக்குநாளமரர்
வயந்தருவேதசிரசினைமணந்தமதிநுதற்றுடிதையீன்றெடுத்த
பயன்றருதுடிதராதியரமரர்பரமனல்விபுவெனவுதித்தான்.

நவையற - குற்றமற (௩)

உரைத்தநாளமரர்வேந்துரோசனனுமூர்ச்சதம்பனாதியேழ்முனிவோர்
தெரித்திடுமூன்றாமனுவெனும்பெயரோன்செழுநறைபருகல்செயறுகால்
இரைத்ததார்ப்பிரியவிரதனீன்றெடுத்தவிலங்குவேலுத்தமனந்நாள்
வரைத்தடம்புயசத்தியசித்துமுதலாம்வானவர்க்கிறைவனாயினனால்.

நறை - தேன், அறுகால் - வண்டு. (௪)

சத்தியர்முதலோரமரராயுறைந்தார்சாற்றிவர்துணையெனத்தருமன்
புத்திரனாகிச்சத்தியசேனப்புகழ்ப்பெயரோடுமால்பொருந்திக்
குத்திரம்புரியுமரக்கருள்ளிட்டகொடியவர்க்கொன்றுலகளித்தான்
ஏததலந்தோருமேத்துசீர்வசிட்டனென்றுளோரெழுமுனிவராம்.

குத்திரம் - தீமை (௫)

நாற்றிசைபுகழ்நான்காமனுவென்போனவின்றவுத்தமமனுக்கிளையோன்
சாற்றுதாமதனும்வேந்தனக்காலத்தயங்குறுதிரிசிமுன்னுயிர்த்த
போற்றுதிரிசிகனிந்திரனாகும்புலவர்சத்தியசனாதியராம்
ஏற்றநற்சோதிவியோமரேமுதலோரெழுமுனிவரெனவிருந்தார்.

நவின்ற - சொல்லப்பட்ட. (௬)

அறைந்தநாணிருமேதசன்றனைமணந்தவரிவைவைதிருதியாள்வயிற்றின்
நிறைந்துலகுறைவோ!ரியெனவுதித்துநிகழ்த்துநான்மறைகொணர்ந்தளித்தார்
சிறந்தவக்காலமுயர்திரிகூடஞ்சேர்கரிக்கிடாகற்றினன்மால்
மறந்திகழ்வேலோயென்னலும்வேந்தன்வழங்கதுவெனமுனிவழங்கும்.

அறைந்த - சொல்லப்பட்ட. (எ)

மனுக்கனையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்

இரண்டாவது

கசேந்திர வத்தியாயம்.

கலிநிலைத்துறை,

உரைக்குமோசனையொன்பதினாயிரமுயர்ந்து
நரைக்குமேன்மையாய்வெள்ளிபொன்னிரும்பெனச்சாற்றும்
நிரைக்கும்பூந்தநிர்க்கொடுமுடிநிகரின்மூன்றுகி
வரைக்கெலாம்வரமாநதிரிகூடமால்வரைமேய

வரமாம் - மேன்மையாம். (க)

கந்தமாமலர்ச்சண்பகங்கற்பகஞ்செயலை
சந்தமேமுதலாமரத்தடம்பொழிறவழ்ந்து
மந்தமாருதம்வநதுவந்திழுகுறவயங்கும்
அந்தமால்வரைவளன்வழுத்துதற்கெளிதன்றால்

செயலை - அசோகு, இழுகுற - பின்போக. (உ)

தானயாற்றினைத்தருநகரியொருவழித்தார்வாய்த்
தேனையாறுகானுகர்ந்திடுமொருவழிச்சிறந்த
மானைமாறடுமாவிழிவாளநாண்குயமா
ஆனமாதரோடமரராங்கொருவழியமர்வார்

தானயாற்றினை - மதநதியை, ஆறுகால் - வண்டு, வாளம் - சக்கரவாளம். (ங)

நடங்கண்மங்கையர்முகமெனத்தாமரைமலரும்
கடங்களன்னவர்செங்கையிற்காந்தளங்கலரும்
நடங்கொடோகையன்னோர்குலநாடினவிகலும்
முடங்குமுல்லைகள்வாணகைமூரலின்முகைக்கும்

கடங்கள் - மலைச்சாரல்கள், தோகை - மயில். (ச)

எரும்வானவர்மகளிரினடந்திடுமெகினம்
சேகினேமியம்புள்ளவர்முலையெழில்சிறக்கும்

பூகம்வார்பொழிலவர்மிடற்றெழில்பொலிந்திலகும்
கோகிலம்மவர்மொழியெனக்காவெலாங்கூவும்.

எகினம் - அன்னம், நேமியம்புள் - சக்ரவாகப்புள். (௫)

சுரும்புபாண்செயசசுருள்விரிபூந்தடஞ்சுனைசோ
சுரும்புமீதிளங்கதிர்புரைதருசுடர்க்கற்றை
அரும்புகூட்டராவணையிறையெனவருங்காந்தள்
அரும்புகீழுறவணைந்துவந்துறங்குமம்மழைக்கார்

சுரும்பு - வண்டு, மலை (சு)

தாரணிக்கெழிறருந்துணையொடுவிஞ்சைதந்தலைவர்
தாரணிக்குரல்வளர்ந்தருந்தடம்பொருப்பொருபால்
வாரணத்திரங்கோடடிபிடுங்கியமதிநேர்
வாரணத்திருக்கரததனைப்பாடினர்வதிவார்

தாரணி - பூமி, தார்அணி - மாலைஆபரணம், வாரணம் - யானை, சங்கு (எ)

பன்னகத்துறுபடியவர்பயன்பெறுபாக்குப்
பன்னகத்துறும்வளனெலாந்திகழ்பருப்பதத்தின்
பன்னகத்துறுமருவியின்முல்லைபான்மிநிநேர்
பன்னகத்துறுமரம்பையர்நிச்சலும்படிவார.

பெறுபாக்கு - பெறும்பொருட்டு, நிச்சலும் - நாள்தோறும். (அ)

கோட்டுவான்மதிக்குழவியுஞ்சுனையருகுயர்ந்த
கோட்டுமீதெழுந்தன்னமென்பிள்ளையுங்குலவக
கோட்டுவார்சிலைக்குறவர்தங்குழவியுங்குனிகூர்ங்
கோட்டுவாரணக்குழவியுமொருவழிக்குலவும்.

குனி - வளைந்த. (கூ)

பூவைவேல்விழியரம்பையர்புகன்மொழிபுரையப்
பூவைசாற்றியபுகுமொருவழிப்பொலம்பூமேல்
பூவைமாமுலைபுணர்திருமாலெனப்பூத்த
பூவையோர்வழிப்பொலிமுகைக்கோங்கொடுபொருந்தும்

பூவை - நாகணவாய்ப்புள். (க0)

கண்ணயந்தளிமுரலுங்காச்சூழகல்வரைவாய்க்
கண்ணலர்ந்தசெங்கமலமாமாய்ச்சியர்கதழ்ந்த
கண்ணகன்றிடுமனையுறிவெண்ணெய்கையேந்தும்
கண்ணனென்னவெண்மதிதொடுநீள்சினைக்காயா.

கள் - தேன், கதழ்ந்த - சிறந்த, காயா - காசா. (கக)

அருச்சுனன்றடந்தேர்நடத்தண்ணல்வந்தயன்சேய்
அருச்சுனக்கினிதருளியகண்ணன்முன்னவனும்

அருச்சுனத்திருநிறத்தினனொடுமெமர்ந்தனன்போல்
அருச்சுனத்தருவிலாவுறுமவட்சிலகாயா.
அருச்சுநன்றடந்தேர் நடத்தண்ணல் - கண்ணபிரான். (கஉ

ஆடல்வாழி ௨டமைந்தரோடாணிரைபுரந்தங்
காடல்வாளராவுச்சியினடித்தவம்மான்போல்
கோடல்வாயயாவருஞ்செயும்வளந்திகழ்குவட்டில்
கோடல்வான்முகைமீதலர்ந்துறுங்கொழும்பூவை.
ஆனிரை - பசுக்கூட்டம், கோடல் - காந்தள். (கங)

கலிவிருத்தம்

நாகமேற்பணநாறுநவமணி
நாகமேற்பலநாயிறுபோலுமால்
நாகமீன்றநவையறுநாண்மலர்
நாகமீன்றயங்குநலனொக்குமே.
நாகம் - பாம்பு, மலை, புன்னை, ஆகாயம் (கச)

கன்னிமாவரிநாகங்கணங்கொளக்
கன்னிமாவரிநாகங்கவினுமால்
கன்னிகாரங்கலந்தவக்காவெலாம்
கன்னிகாரங்கதிர்மதிசேருமால்.
கன்னிகாரம் - கோங்கு. (கரு)

வாவிமான்விளையாடும்வரையின்மேல்
வாவிமானவலம்புரிவைகுமால்
ஆவியாருங்குவளையமருக்
காவியாருவர்நண்ணெனலாகுமால்.
மானம் - மேன்மை. (கசு)

அந்தரத்துயர்வாயமணிவரை
அந்தரத்துமேருவுக்காகுமால்
சந்தனத்தருவேதடங்காடெலாம்
சந்தனத்துருவேதடங்கோடெலாம்.
தனம் - முலை, கோடு - சிகரம். (கஎ)

தண்டலைக்குழுவெங்கணுஞ்சார்ந்துகோ
தண்டலைக்குறுகும்மருள்சாய்க்குமால்
வண்டிரைக்குமதுமலர்மாநதி
வண்டிரைக்குள்வருங்கதிர்முத்தமே.
தண்தலை - குளிர்ந்தஇடம், கோ - சூரியன், குறுகும் - சேர்ந்த. (கஅ)

நத்தகத்துறுமுத்தமுநற்கரி
மத்தகத்துறுமுத்தமுமன்னுமாங்

கொத்தகத்துறுகொற்றமொழித்திடுஞ்
சித்தகத்துறுவார்சென்றுசேர்குவார்.

முத்தம் - முத்து, கொற்றம் - வலி, சித்து - அறிவு. (௧௯)

இதழிநாண்மலர்சேர்வரையேழையர்
இதழிருகவிலவலர் தூற்றுமால்
கதலிமாகநகக்குவடோங்கியே
கதலிமாகநகர்க்கினங்காட்டுமே,

கதலி - வாழை, கதலி - அசைந்து. (௨0)

மாவிலம்பயின்மஞ்சரிவாழ்வரை
மாவிலம்பயின்மஞ்சரிவாள்விழித்
தேவரம்பையெல்லாருவிற்சேர்ந்தாபுந
தேவரம்பையெல்லாருவிற்சேணுறும்.

மா - சிங்கம், விலம் - குகை, தே - தேன், எல் - சூரியன், சேண் - ஆகாயம் ()

கோலமாவிளங்கோளரிகோட்டெழுங்
காலினேடுங்கனம்பிடியாமெனக்
காலினேடுங்கனம்பிடிக்குங்கரி
காலினேடுங்கலங்துவழங்குமே.

கால் - காற்று, கனம் - மேகம், கால் - வழி. (௨௨)

பூங்கலாமதிகாணப்புணருரும்
பூங்கலாமதித்தோதிற்பொறிதிகழ்
வேங்கைவேழம்டைந்திடக்காடெலாம்
வேங்கைவேழம்டைந்திடும்வெற்பிடம்.

கல்ாமதி - பூர்ணசந்திரன், பொறி - புள்ளி, வேங்கை - புலி, வேங்கைமரம், வேழம் - மூங்கில், யானே. (௨௩)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

இன்னனவளத்தினேங்கியிலகுறுதிரிகூடத்தின்
பின்னுமங்கிரும்பின்வண்ணப்பெருங்குவடுலவல்போலத்
துன்னியகரிகட்கெல்லாஞ்சொல்லுமோர்பெருவேந்தென்ன
மன்னியபிடிகள்சூழவயங்குமோர்களிறுமாதோ.

பிடிகள் - பெண்யானேகள். (௨௪)

மழலையஞ்சுரும்புபாய்ந்துமழைமதவருவியாட
விழையும்வெம்பிடிகளோடும்விண்ணிவர்திரிகூடத்தின்
கழைவளர்சாரலந்தண்கடிமலர்த்தடத்திற்சென்று
நிழல்சுளிகளிற்றுவேந்துநீர்விளையாடிற்றன்றே.

விண்ணிவர் - ஆகாயத்தையளாவிய, கழை - மூங்கில். (௨௫)

மருவிளையாடுமெந்தண்மரைமலர்பறித்துவீசி
விரிபுனலாடுமெல்லைவெஞ்சினவிடங்கர்கவ்விப்
பெரியபோர்க்களிற்றையீர்ப்பப்பிடிக்குலந்தடக்கைநீட்டிக்
கரையின்மீதீர்ப்பவும்போர்க்கரியிவர்ந்திலதுமாதோ.

மரைமலர் - தாமரைமலர், இடங்கர் - முதலை. (௨௬)

பிடிக்குலங்கலங்கியீர்க்கும்பெருவலிதொலைந்துமாழ்கத்
தடத்திடையிடங்கரீர்ப்பச்சார்கரைவேழமீர்த்து
விடற்கருவலத்திறேனும்வெந்திறற்சினத்திறேனும்
அடற்கருங்கொடியபோராண்டாயிரமடர்த்ததன்றே.

வேழம் - யானை, ஈர்க்கும் - இழுக்கிற (௨௭)

வாரணமாற்றலோய்ந்துவானுறத்தடக்கைநீட்டிப்
பூரணவுலகமெல்லாம்பூத்தளித்தழித்துநின்ற
காரணபரமானந்தக்கடலிடைக்குளிப்போர்நெஞ்சும்
ஆரணமுடிவுமேயவமலவோவென்றரற்றும்

வாரணம் - யானை, (௨அ)

வேதநூலெருங்குணர்ந்துவிரியுமெய்யறிஞருள்ளப்
போதுசேர்சோதிபொன்னிற்பொலியொளிமேலவெங்குமு
நீதுருதருளின்யார்கருங்கரிவுரு நுறைந்துநின்ற
ஆதிகாரணன்வந்தின்னேயளிக்கவென்றழைத்ததன்றே

உள்ளப்போது - இதயதாமரைமலர் (௨௯)

அழைத்ததுசெவியிற்கேட்டுமயனரனறியாயோர்
புழைக்கைவெங்கரிமுன்காப்பப்புகுதிவராரியாநிக
அழைத்தகாரணனேயென்றதனிப்பெயர்ப்பொருள்யாமல்லேம்
இழைத்தகாரியம்யாமாவேமென்செய்துமாலின்றென்றார்

புழைக்கை - துவாரமுள்ள துதிக்கை. (௩0)

கூப்பிடுகுரல்கேட்டோடிககொழுமணிச்சுடிகைநெற்றிப்
பாப்பணையகற்றிவெய்யபடர்சிறைககலுழுனூர்ந்து
தீப்பொழிந்திலங்குகூர்வாய்த்திகிரியைதநாங்கியாவும்
காப்பவன்பிறைவெண்கோட்டுக்களிற்றுமுன்னெய்துற்றுனல்

பாப்பணை - சர்ப்பசயநம் (௩௧)

எறிசுடர்விரிக்குநேமியெறிதனனெறிதமேலாடும்
பிறைபுரையெயிற்றுப்பேழ்வாய்பிளந்துவெவ்விடங்கர்துஞ்சி
அறைதருசாபந்தன்னலடைந்தவவ்வுருவுநீத்து
விறலுடையூகூவென்னும்விஞ்சையனுயிற்றன்றே.

நேமி - சக்கரம், துஞ்சி - இறந்து. (௩௨)

விழுமியவிசைநூறேர்ந்தவிஞ்சையனுயவன்றேனுன்
பழமறைமுதலிபாதம்பழிச்சினன்பதியிற்போயான்

அழிவறு தவத்தின்மிக்கவகத்தியன்சாபந்தீர்ந்து
மழைமதக்களிறுமாயன்வரம்பில்வீடுற்றதம்மா.

பழமறைமுதலி - பழையவேத முதல்வன், (திருமால்) பழிச்சினன் - துதித்து, (முற்றெச்சம்). (௩௩)

கரும்புயல்வண்ணத்தெம்மான்கமலைபார்மடந்தையென்னும்
மருந்துறழ்மொழியார்கொண்கன்மாய்வில்வைகுந்தமேயான்
அருந்தவமுனியன் சாபமடைந்தவேலரசனுங்கோர்
பெருங்களிறுயகாதைபேசுதுங்கேட்டிமாதோ.

மருந்து - அமிர்தம் (௩௪)

பைந்தமிழ்நாடுகாக்கும்பாண்டியன்பரிதிவைவேல்
இந்திரத்துய்மனென்போனிணைப்பொலஞ்சுண்ணந்தோய்ந்த
மந்தமாருதநின்றுமொலைவெள்ளருவிச்சாரற்
சந்தனப்பொருப்பின்மாயன்றுளிணைவழிபட்டானால்

பரிதி - ஒளி, மந்தமாருதம் - தென்றற்காற்று. (௩௫)

குடங்கையினிவந்தவண்டகோளமூடுருவுவிந்த
நெடுங்கிரியடக்கிநெஞ்சுநெருப்புறழவுணர்மாளந்
தடந்திரைச்சலதியுண்டசதுமறைமுனிவனெய்த
அடங்கலர்த்தெறுந்தகூர்வாளரசனுங்கெழுந்திலானால்.

சலதி - கடல் (௩௬)

இமிழிருள்கவற்றும்வேலானெழுந்திலனிருந்தானென்றுத்
தமிழ்விளைதண் ணஞ்சாரற்றடவரைமுனிசபிப்பச்
கமழ்கடாக்கவுழி தூங்குங்கருங்கவுள்வேழமாகி
உமிழ்கனற்றிகிரி நாயனுலைவில்வீடுற்றானன்றே.

கவற்றும் - வாடியசெய்கிற, கருங்கவுள் - கரியகபோலம், திகிரி - சக்கரம் ()

இயம்புமிக்காதைகேட்போரெழுதுவோர்னியதெர்போர்
நயம்பெறப்பரிக்காலைநவிலுநன்னலந்தோர்யாரும்
உயர்ந்தபொன்றாட்டுநேருருமுவந்தடிபரவமாயன்
வயந்தருவீட்டினென்றுமருவுற்றுநீடுவாழ்வார்.

புலரிக்காலை - விடியற்காலம். (௩௮)

மலையொடுபொருவெண்கோட்டுவாரணங்காத்ததன்றிக்
கொலைபயில்புழைகைகைவேழக்கூர்மருப்பொசித்தகொண்டல்
அலைகெழுபரவைவேலைகடைந்தமுதெடுத்தகாதை
இலைவிரிபசுந்தார்மார்பவிசைசகுமென்றிசைக்கலுற்றான்.

ஒசித்த - ஒடித்த. (௩௯)

கஜேந்திர வந்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௪௯.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

## மூன்றாவது

# கடல்கடைந்தவத்தியாயம்



அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஐந்தாமனுவைரவதனுக்குயவன்றாமதனுக்கருந்துணைவன்
நந்தாதுலகமளித்தருணலஞ்சேர்விபுவானவர்க்கிறைவன்
பைந்தார்புனைபூதரன்முதற்பகர்வோரமரரெழுமுனிவர்
முந்தாம்வேதசிருட்டனெனமொழியுமறையோன்முதலினரால்.

துணைவன் - சகோதரன் (க)

துலங்குதவச்சுப்பிரன்மேவுந்துணைவிவிகுண்டையிடத்துதித்து
நலங்கொள்பெயர்வைகுண்டனெனநண்ணிநளினைவேண்டுதலால்
இலங்குமெழில்வைகுண்டமெனவேத்துநகரமொன்றிழைத்தான்
வலங்கொடிகிரிப்படைவலக்கைமனஞ்சொற்கெட்டாமாயவனே.

நளினை - திருமகள் (உ)

ஆறாமனுசக்குசனளித்தவடற்சாக்குசனுமக்காலம்
மாறாதுலவுபெரும்புகழ்மந்திரத்துய்மனும்வானவர்கோன்
பாறார்வடிவேலமரரொன்போர்பகருமார்ப்பியாதியராம்
வீறார்தவத்தாராகவனல்விரிடாதியரேழ்முனிவாரால்.

பாற - பருந்து (௩)

மருவார்கூந்தற்சம்பூதிவயிற்றில்வயிராசற்கெழில்சேர்
உருவாய்மகவாயசிதனெனவுதித்தான்மாயனக்காலம்
துருவாசப்பேரொருதவத்தோன்றனைவினடந்துசார்பதிக்குத்
திருவார்தொடையலொன்றளித்தானிரனிற்றரித்தானிலமன்றே.

துனைவின் - விரைவாக. (௪)

கண்டமுனிவனிருவிழியுங்கனலும்புலிங்கக்கணங்கால
மண்டுமுயிர்ப்புக்கடைக்காலின்வளரவானோர்குழாமிரியக்
கொண்டலசனியுட்கநெடுங்குவடுகுலுங்கக்கதிர்மதியம்
விண்டுசெலவெண்ணகைபுரிந்துவெகுண்டுநோக்கியிதுவிளம்பும்

புலிங்கக்கணம் - நெருப்புப்பொறிக்கூட்டம். (௫)

என்னையென்னைமறந்துளம்மலையாதிகழ்ந்தாயழாய்நீ
முன்னைமுளரிப்பூம்பொகுட்டின்முளைத்தோன்முளைவெண்பிறையிதழி
தண்ணுசடையோனும்மவிர்துய்க்குஞ்செல்வச்செருக்கியாவும்
அன்னைதிருமாமகட்பணிந்தவரும்பேறென்னவறிதியால்.

மலையாது - தரிக்காமல். (௬)

முந்தயான்செய்பெருந்தவத்தான்முளரியாளுக்கிசைபயில்வாள்
தந்ததெய்வத்தண்டெரியறனைநீயிகழ்ந்தகாரணத்தால்

இந்தவரம்பில்பெருஞ்செல்வம்யாவுமிழந்தியெனவுரைத்தான்
சந்தமலர்க்கற்பகமுதலகடலிற்றுனைந்துகரந்தனவால்.

தெரியல் - மாலை, துனைந்து - விரைந்து. (எ)

செழுந்தார்ப்பொருட்டுமறைமுனிவன்சீறிச்சவித்தசெயலினால்
கொழுந்தார்ப்பச்சைப்பசுங்கிளிளக்குதலைச்சசிகாதலன்முதலோர்
இழந்தார்செல்வம்வாளமரிலேலற்றவவுணர்க்கிகலழிந்தார்
உழந்தாரிடர்போய்மலரவன்பாலுற்றாருற்றதுரைசெய்தார்

சசிகாதலன் — இந்திரன். (அ)

கேட்டமலரோன்ஞானமொடுகிளராநந்தச்சுடைமணிச்
சூட்டுப்படவாளரவணையிற்றுயிலொன்முதலையுண்ணினையின்
காட்டுங்கருணைக்கடலையிவட்கருதிற்றுயர்போம்வழிகாட்டி
வேட்டதளிக்குமெனவணங்கிவிருப்பால்வழுத்தத்தொடங்கினரால்.

வேட்டது - விரும்பினது. (௯)

குணமாய்க்குணியாய்க்குவலயமாய்க்கொழுந்தீம்புனலாய்க்கனலாகித்
தணவாய்வளியாய்வெளியாகித்தன்மாத்திரையாய்ச்சார்பொழியாக்
கணமாய்முக்காலமுமாகிக்கருணைக்கடல்போற்பாற்கடலின்
பணவாளரவினறிதுயிலசெய்பரமாவெங்கட்கருளுதியால்.

குவலயம் - பூமி, வளி - காற்று, பணம் - படம், (௧௦)

ஓரேழ்பிறவியுடலுயிராயுலகமனைத்துமோருருவாச்
சீராயுறைவாய்நின்னையல்லாற்செப்புந்தேவேறொன்றுளதோ
தேரார்க்கிருளாய்த்தெளிபவர்க்குச்சித்தாயுறையுஞ்செழுஞ்சுடரே
ஆராவமுதேதங்களுக்கிங்கருளாயென்றன்றேத்தினரால்

தே - தெய்வம், (௧௧)

வேட்டதறிந்துவிளைத்துளவோன்வெளிவந்தமரர்முகநோக்கி
ஆட்டுந்தரங்கப்பாற்கடலிலமுதமெழமந்தரவரையை
நாட்டிக்கடைதற்கவுணரொடுநட்புப்புரிதிரெனப்பணிப்ப
மோட்டுத்திறல்வாளவுணரொடுமுயங்கியமரர்நணிநட்டார்

முயங்கி - கூடி, நட்டார் - நிறுத்தினர். (௧௨)

நூறாயிரயோசனையுயர்ந்துநூறாயிரயோசனையகன்று
வீறாய்விளங்குமந்தரத்தைமிடலால்வேரினொடுபறித்துப்
பாறாயிரம்வீழ்நதுணைக்குருதிபாயுங்கதிர்வேற்றானவரோ
டேறாப்பிழிவண்டுண்டுறைதாரும்பர்குழுக்கொண்டெழுந்தனரால்

மிடலால் - வலியால், பாறு - பருந்து, பிழி - தேன். (௧௩)

எடுக்குங்குடுமிமால்வரைவீழ்ந்திமையோர்குழுவுந்தானவரும்
தொடுக்கும்பகம்பொற்றொடைமார்புந்தோளுநெரிந்துதுஞ்சமுகில்

கடுக்குந்துளவோனவருய்யக்கடைக்கட்கருணைபொழிந்தெய்திக்
கிடக்குங்கிரியோர்விரலேந்திக்கிளர்புள்ளரசூர்ந்தெழுந்தனனால்.

புள்ளரசு — கருடன். (கச)

கிளர்வெண்டிரைப்பாற்கடல்வயிறுகீளப்பசும்பொன்வரைநிறுவி
விளையுமமுதுதருதுமெனவிறல்வாசுகியையிடைப்பிணித்துத்
தெளியும்விசும்பினமரரொடுஞ்செந்தாமரைக்கட்கருங்கொண்டல்
ஒளிருமணிச்சூட்டவ்வரவின்றலைப்பற்றினனின்றான்.

நிறுவி - நிறத்தி, பற்றினன் - பற்றி, (முற்றெச்சம்). (கரு)

வாழியவுணர்யாமோகொல்வால்பற்றுவதிங்கெனவெருள
ஆழிமுதல்வனமரர்முகமருளினோக்கிவால்பற்றிப்
பாழியரவின்பணமருடம்படுவெங்கொலைத்தானவர்பற்ற
ஆழியகடுகிழிந்தலறியார்த்துமறுகக்கடைந்தனரால்.

அகடு - வயிறு. (கசு)

வழிந்தநறைத்தாரணிதிணிதோள்வருந்தவாங்கியானாது
தழைந்தமிடலாற்கடைந்திடலுந்தழலும்பாம்பின்பெரும்பகுவாய்
முழைந்துபொழிவெங்கொடியவிடமூழ்கியுடலமுழுதெரிந்து
விழுந்தாரசுரர்பலரமரர்மெல்லென்முறுவன்முகிழ்விளைப்ப

ஆனாது - நீங்காமல். (கஎ)

அழியும்பணிவெண்டிரைபுரட்டுமாழிவயிறுகிடங்கெழுந்து
கிழியநெடுமால்வரைதுளங்கிக்கீழ்வீழ்ந்திடலுந்தனிநின்று
சுழலும்பசும்பொற்கிரிமுதுகுசொறிந்தாங்கணிதினிளநறவம்
முழுகுந்துளவோன்மோட்டாமையுருவமெடுத்துத்தாங்கினனால்.

கிடங்கெழுந்து - ஆழ்ந்து. (கஅ)

தாங்கும்வரைப்பொற்குடுமிமிசைத்தடக்கையமைத்துநிலைநிறுவத்
தேங்கொள்கமலமலர்க்கைசிலநீவாயரவம்பணிகொள்ள
ஓங்குசுடர்ப்பூந்தொடியுடுத்தவோராயிரந்தோளுடையபிரான்
எங்கும்பரவைக்கடல்கடைந்தவிறும்பூதென்னென்றியம்புதுமால்

ஏங்கும் - ஒலிக்கின்ற, இறும்பூது - ஆச்சரியம். (கக)

வேறு.

ஆழியாயலறிப்பொங்கவாழியந்தடக்கையம்மான்
பாழிவாயரவுவாங்கிப்படுவலிகாட்டலோடும்
ஊழிவாய்நெருப்பொடொப்பவுயிரெலாமுடிக்குமென்ன
ஏழொடேழுலகுமஞ்சவெழுந்ததுகாளகூடம்.

வாங்கி - வளைத்து. (உ0)

எழுதலுமமரரஞ்சியிரியல்போயினராற்செந்தீ
விழுதுவிட்டனையகற்றைவேணியன்விமலமாகி

அழிவறுபரமானந்தமாழ்பவன்மலர்த்தாள்வீழ்ந்து
தொழுதனரளித்தியென்னத்துதித்தனர்பலவுமாதோ.

இரியல்போயினர் - ஓடிப்போயினர். (உக)

மூவுருமுறையிற்றாங்கிமுத்தொழினடாத்துமுக்கட்
டேவனேயுலகமெல்லாந்திருவுருவாகிநின்றாய்
காவெனவணங்கலோடுங்கலங்கன்மினீவிரென்னத்
தாவருங்கொடியநஞ்சந்தானுணக்கருத்துக்கொண்டான்.

காவென - காக்கக்கடவையென்று. (உஉ)

மருக்குழன்மலைமடந்தைவாண்முகநோக்கிநங்காய்
ஒருத்தருக்கொருவர்நன்றியுதவுறினுயிர்க்குளெங்கும்
இருக்குமத்திருமாலுள்ளமினிதுவந்தருளும்விண்ணோர்
வெருக்கொணஞ்சுண்பலென்றுமிசைந்தனன்விரைந்துமன்றே

மிசைந்தனன் - உண்டான். ( ங )

விடமும்வந்தீசன்கோலமிடற்றினினீலவண்ண
வடிவுபெற்றணியதாகிவயங்கிற்றுப்பெரிதுமென்றால்
கொடியரும்பெருமையோரைக்கூடின்வெங்கோதுநீங்கி
ஒடிவறுநலம்பெற்றுய்தலுமைப்பதென்னுலகினம்மா.

மிடற்றினில் - கண்டத்தில். (உ௪)

உந்துவெண்டரங்கவேலைக்குற்கடவிடமென்றேறும்
வெந்திறற்கொடியநஞ்சம்விமலனங்கருந்துங்காலைச்
சிந்துசில்விடத்தைவெய்யதேளரவாதியெல்லாம்
தந்திரப்பரவைவேந்தேசார்ந்தனநுகர்ந்தமாதோ.

உற்கடம் - மிகுதி. (உ௫)

வேற்கடற்றானைவேந்தேமீளவுங்கடையுங்காலை
நூற்கடல்கடந்தமும்மைநூலினர்மகிழும்வண்ணம்
பாற்கடல்பிறந்ததோமப்பயன்றருசுரபிமீட்டும்
சேற்கடற்றிரைநீர்வெள்ளைச்செழும்பரியெழுந்ததன்றே.

சுரபி - காமதேநு, வெள்ளைச்செழும்பரி — உச்சைசிரவம். (உ௬)

சும்மைவெண்டிரையின்வந்துதுளைபரியெழுதலோடும்
பெய்ம்மதக்களிறுவெள்ளிப்பிறங்கல்போற்பிறந்தபின்னர்க்
கொய்ம்மலரலங்கன்மாலைக்குருதிவேற்குரிசின்மற்றுன்
கைம்மலர்புரையுஞ்செம்பொற்கற்பகமெழுந்தவாங்கே.

பிறங்கல் - மலை. (உ௭)

துய்யபொற்றருமுன்வந்துதோன்றியபின்னர்ச்சங்கும்
செய்யபங்கயமும்வானிற்செழுங்கலைமுழுதும்பெற்று

மையறுமதியுமென்னவயங்கியமுகத்துவாணோர்
ஐயரிபரந்தமைக்கணரம்பையருதித்தார்பின்னர்

சங்கு - சங்கநிதி, பங்கயம் - பத்மநிதி, (௨௮)

செய்யசீரடியுங்கையுந்தெண்ணிலாமுறுவல்வாயும்
ஐயசெந்தளிராவெண்முத்தணிமுலைபசும்பொற்கொத்தா
மையரிநெடுங்கண்டேனுமரைமலருறையுமன்னை
கொய்யிணர்த்தருவின்பொன்னங்கொடியெனத்தோன்றுற்றாளால்.

மரைமலருறையுமன்னை - திருமகள். (௨௯)

இந்திரன்றவிசாங்கீயவிரும்புனைதிகணல்கக்
கந்தமாம்பொருள்களெல்லாங்காசினிமடந்தையுய்க்க
ஐந்தெனும்புனிதவான்பாலாதியவளிப்பவான்சீர்
மந்திரமுனிவோர்பொன்னைவழுத்திநீராட்டினால்.

தவிசு - ஆசநம், ஆன்பாலாதிய - பஞ்சகவவியம். (௩0)

அம்பரமீதுபைங்காரார்த்தலர்மாரிதூற்ற
அம்பரமெழுந்துபொன்னினம்பரமுதவயாழோர்
அம்பரமானவன்றுயிருள்கெனவமுதிற்பாட
அம்பரம்பொருவேலுண்கணரம்பையர்நடனவின்றா

அம்பரம் - ஆகாயம், கடல், ஆடை. (௩௧)

வருணன்வைசயந்திமாலைவழங்கினனயனும்வந்து
விரிகதிர்ப்பசும்பொனுற்செய்விளங்கிழைபலவுமீந்தான்
அருவிலைமுத்தின்கோவையளித்தனள்வாக்கின்செல்வி
குருமணிச்சுடிகைநாகர்குண்டலங்கொணர்ந்தீந்தாரால்,

வாக்கின்செல்வி - சரசுவதி. (௩௨)

ஈனமிலெவருமிவ்வாறியைந்தனவியந்துநல்க
ஆனபேரணிகட்கெல்லாமணியெனவணிந்துநம்மோய்
தேனமர்நீலமாலைசெழுந்தளிர்க்கரத்திலேந்தி
வானவர்தொழுதுவாழ்த்தவரன்றனைநோக்கினாளால்.

ஓய் - தாய். (௩௩)

செப்பியதுருவாசப்பேர்சேர்தவன்முதலாஞ்சில்லோர்
தப்பறுதவத்தின்மிக்காராயினும்வெகுளிசார்வார்
ஒப்பறுசனகனாதியொண்டவரறிவுமுற்றி
முப்பகையெறிந்தாரேனுமுன்னுவர்பேதஞானம்

வெகுளி - கோவம். (௩௪)

சாற்றுமார்க்கண்டாதிதவத்தினர்மாயாரேனும்
ஆற்றல்சேர்புலன்களைந்துமடக்கிலாரடக்கிமாயா

ஊற்றமோடசனென்பானுறையினுமுரைக்குமீனம்
மாற்றிடானீமத்தென்றமருவுவனெனும்புஞ்சூடி
மாயாரேனும் - இறவாராயினும், ஈமம் - மயானம். (௩௫)

இன்னணமுலகுளோர்தாமியைந்தனர்குணமென்றாலும்
பின்னுமோர்குணம்பெறாதுகுற்றமேபெறுவரென்று
மன்னுநற்குணங்கட்கெல்லாம்வைப்பெனமருவிநின்ற
முன்னவன்மாயனல்லால்மொழியின்வேறில்லையென்று.
மாயன் - திருமால். (௩௬)

உளத்திடையிவ்வாறுன்னியுவந்திலனெனையென்றாலும்
களிப்புறும்யானேசென்றுகலப்பனென்றமலையாவும்
அளிப்பவளலங்கல்சூட்டியருமறைமுதலிமார்பின்
துளிப்புயன்மணக்குமின்னிற்றோய்ந்தனடியக்தற்றாளால்.
அமலை - திருமகள், மறைமுதலி - திருமால். (௩௭)

பூரணைபுவனம்பூத்தபூமகள்பொருவிலெம்மான்
தாரணிநிறஞ்செய்மார்வஞ்சார்ந்தபின்கடையவாங்கு
வாருணியென்னுமாதுவந்தனளவளைவானோர்
சீரணிமுகுந்தன்சொல்லாற்சேர்ந்தனர்சேர்ந்தபின்னர்.
வாருணி - மத்யத்துக்கு அதிதேவதை. (௩௮)

வேட்டிடுமமுதுதன்வந்திரியெனும்விமலனேந்த
மோட்டுவெண்டிங்களென்னமுளைத்ததுமுளைத்தலோடும்
சேட்டிளம்பரிதிமார்பிற்றேவரோடிகலியேற்று
வாட்டிறலவுணரோடிவளைத்தனர்வவ்விஞரால்.
இகலி - பகைத்து. (௩௯)

கலிவிருத்தம்.

வவ்விணரெமக்கெனமதித்தனருரைத்தார்
அவ்வுரைசெவிப்படவழன்றுசிலருற்றார்
கவ்வைநெடுவாரிதிகலக்கினரெவர்க்கும்
இவ்வமுதமுண்டுபொதுவென்றனவிசைத்தார்.
கவ்வை - ஒலி. (௪0)

எஞ்சுதலிலாவவுணரின்னணமிசைப்பத்
தஞ்சமெனவந்தருகுசார்ந்தபுலவோரை
அஞ்சுசெயலோவுமினளிக்குமமிழ்தென்ன
மஞ்சணையமாயவன்வருட்டினன்மறைந்தான்.
வருட்டினன் - வசப்படுத்தி, (முற்றெச்சம்) (௪௧)

செய்யமணிமேகலைசிலம்பொடுசிலம்ப
மையொழுகுவார்குழலின்வண்டிசைமிழற்ற

# கடல்கடைந்த வத்தியாயம்.

வெய்யமுலைப்பாரமொடுவெள்வளையெறிப்பப்
பெய்யுமுகில்வண்ணனொருபெண்ணுருவெடுத்தான்.

முகில்வண்ணன் - திருமால். (சஉ)

வேளைவிறல்கொள்ளுமுலைமெல்லியனகைத்துக்
காளமொடுவேலனையகட்கடையெறிந்து
தாளிணைசிவப்பவணிதானைகுழல்சோர
வாளவுணர்சீற்றமொடுவைகுழிநடந்தாள்.

காளம் - விஷம். (சங)

முருக்கலர்முருக்கிதழ்முகிழ்க்குநகையாலோ
அரக்கெறிமலர்க்குவளையன்னவிழியாலோ
திருப்புருவமென்றொளிர்செழுஞ்சிலையினாலோ
உருத்ததிறல்வாளவுணருள்ளமயர்வுற்றார்.

முருக்கு - கோவிக்கிற, உருத்த - கோவித்த (சச)

பொன்னொழுகுகுன்றனையபூண்முலைசுமந்து
மின்னொழுகுநுண்ணிடைமெலிந்துதடுமாற
அன்னமெனநின்றவளடித்தளிரிறைஞ்சி
இன்னமுதநல்குதியெமக்கெனவுளித்தார்.

பொன்னொழுகுகுன்று - பொன்மலை. (சரு)

உண்ணுமுறைநீயமுதுவந்துதவுகென்னத்
தண்ணமுதநல்குதலுஞ்சாற்றுமதியில்லாப்
பெண்ணிவளுரைத்தகுதலென்றுபெரியீர்நீர்
எண்ணும்வகையெங்ஙனமியைந்திடுவதென்றாள்.

உறை - நீர். (சசு)

மன்னவுணரன்னவள்வழங்குமொழிகேளா
இன்னமுதுபோலநீயியம்புமொழியெம்மைப்
பன்னுகுருவானவர்பணித்தமொழியன்றோ
சொன்னசெயல்செய்குதுமெனத்தொழுதுசொன்னார்.

கேளா - கேட்டு. (சஎ)

என்றலுமிரும்புனல்படிந்தினிதின்யாரும்
நன்றுணவொழிந்துவருநாளையமுதுண்மின்
வென்றிதருவீரெனவிளம்புதலுமன்னோர்
அன்றுணவொழிந்தனரும்புனல்படிந்தார்.

புனல்படிந்து - நீரில்மூழ்கி. (சஅ)

வழுத்திமணிவண்ணனைமனங்குழையுமன்பு
பழுத்ததிறல்வானவர்பரிந்தொர்புறமேவி

விழுப்புனல்படிந்தனர்விரித்தனர்தருப்பை
ஒழுக்கினுடும்வாளவுணரோர்தலையிருந்தார்.

மணிவண்ணன் - திருமால், ஓர்தலை - ஒருபக்கத்தில். (௬௯)

ஆரமுதுவானவரருந்தியவளித்தாள்
தாரவுணர்கண்டமுதுதாவெனவுரைப்பின்
நீருரைகடத்தனெறியோவெனவெறுக்கும்
நாரியிவள்செய்ந்நயநமக்கமிழ்தமென்றார்.

அருந்திய - உண்ண, நாரி - பெண். (௭0)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இருந்தவாளவுணரெல்லாமேக்கறவெய்தச்சாவா
மருந்தினையமரர்தாமேமகிழ்ந்துணப்பொழிந்துபோக்கிக்
கரந்தமுதுண்டாற்செங்கேழ்க்கதிரொடுதிங்களேக்க
அரிந்திடவையனந்நாளவுணனுங்கிறந்திலானல்.

சாவாமருந்து - அமிர்தம் (௭௧)

அங்கரிந்திடவிராகுவாகியவவுணன்சென்னி
துங்கவெவ்விராகுவென்றுஞ்சொல்லுடல்கேதுவென்றும்
தங்கிருபெயர்சேர்கோளாய்ச்சார்ந்திடுகோள்களோடு
திங்களைக்கதிர்வெய்யோனைத்தீண்டுமீருவாவிற்சேரின்.

அரிந்திட - அறுக்க, கோள் - கிரகம் (௭௨)

விண்ணவரமுதமுண்ணவெகுண்டிழந்தவுணர்நொந்தார்
கண்ணனைநினைந்துளோர்தாங்கருதியபயன்கொண்மாறும்
அண்ணலைநினையாதாசையடைந்தவரரியபோகம்
நண்ணினுமடைந்திடாதுநலிதலுமியற்கையன்றே.

வெகுண்டு - கோவித்து (௭௩)

முன்னவனெடுத்துநின்றமோகினியுருவமாற்றி
மன்னுதன்னுருவம்பெற்றுவான்மிசைப்புள்ளிற்போனான்
பின்னரங்கவுணர்சீறப்பேரமர்விளைத்தார்விண்ணோர்
அன்னதுமொழிதுங்கேட்டியரசவென்றறைவானுற்றான்.

புள் - கருடன். (௭௪)

கடல்கடைந்தவத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்.—௧00

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.



## நான்காவது

## தேவாசுரர் போர்செய்த வத்தியாயம்.



கலிநிலைத்துறை.

காதற்பெண்ணுருநீங்கிமாலேகுதல்காணாச்
சூதிற்றீங்கிவர்செய்தனரெனச்சுடுசினத்தால்
பேதுற்றந்தரைமாவலிப்பெயரினான்முதலோர்
கோதற்றேறிகழ்விண்ணவர்க்கோறமென்றெழுந்தார்

காணா — கண்டு, கோறம் - கொல்வோம் (௧)

ஆனைமேற்சிலராளியின்மேற்சிலரடலார்
சேனமேற்சிலர்செழுங்கலைமேற்சிலர்தகரோ
டேனமேற்சிலர்திமிங்கிலமெனுமெறுழ்வலிசேர்
மீனமேற்சிலர்வேசரிமேற்சிலர்மேவி.

சேனம் - பருந்து, ஏனம் - பன்றி, வேசரி - கழுதை (௨)

கேசரின்மேற்சிலர்செம்பரிமேற்சிலர்கழுகோ
டேரிமேற்சிலரோதிமமேற்சிலருடற்றும்
ஏரிமேற்சிலரெண்கின்மாமேற்சிலர்முனிவால்
போரின்மேற்செலும்பொருபுலிமேற்சிலர்பொலிந்து.

ஏரி - எருது, எண்கு - கரடி. (௩)

நெரிந்ததண்டமென்றுரைசெயநெடும்பணைதுவைப்ப
விரிந்தபொன்னின்மானத்தின்மேன்மாவலிமேவிப்
பாங்குசுற்றியபன்னவரொடும்பகட்டெழுந்த
புரந்தரன்முனஞ்செருக்கினன்வெகுண்டமர்பொருதான்.

மானம் - விமானம், பகடு - யானை (௪)

தாருகாசுரன்சண்முகனொடும்பொரச்சமைந்தான்
கோரமார்கவிகுபேரனோடமர்செயக்குறித்தான்
காரின்மேலிடிபோல்வருகாலகேயரும்போர்
வீரமேதகுவசுக்களும்வெஞ்சமர்விளைத்தார்

கவி - சுக்கிரன். (௫)

வாணனேமுதனூற்றுவர்மாவலிமைந்தர்
சேணுலாவியசெஞ்சுடரொடுசமர்செய்தார்
ஏணுலாந்துவட்டாவொடுசம்பரனெதிர்த்தான்
காணமாமதிமுன்னிராகுவுநணிகடுத்தான்.

செஞ்சுடர் - சூரியன். (௬)

காலநேமிவந்துபேந்திரனோடுபோர்கலந்தான்
ஆலமாமெனவடன்மகிடாசுரனார்த்துச்

சீலமேதருமழற்கிறையொடுசெருச்செய்தான்
வேல்விடாவிரோசனன்விதாதாவொடுவெகுண்டான்.

உபேந்திரன் - திருமால், அழற்கிறை - அக்கினிதேவன், விதாதா - பிரமன். (எ)

மாலிமாலியவான்முதன்மற்றுளபேரும்
காலவேல்கொடுகடவுளரொடுபொரக்கலந்தார்
வேலைவேலையோடேற்றதுபோலவிண்ணவரும்
சூலவேற்படையவுணரும்பொருதனர்தொடர்ந்தே.

வேலை - கடல் (அ)

தலையற்றார்சிலர்தாள்களற்றார்சிலர்தருக்கும்
சிலையற்றார்சிலர்செங்கையற்றார்சிலர்செழும்பான்
கலையற்றாரரையற்றனர்சிலர்சிலர்கலங்கி
நிலையற்றாரிரிந்தங்ஙனநிகழ்ந்ததார்நினைப்பார்.

இரிந்து - ஓடி. (௯)

சீர்திக்கோடிடாதிருத்தியவவுணரிற்சிலரேண்
பேர்திக்கோடிடச்சிலர்பெருஞ்சமரினிற்குருதி
நீர்திக்கோடிடத்தம்முடனிணங்கமுகாதி
ஊர்திக்கீந்தனரவர்கொடையெவர்புகழ்ந்துரைப்பார்.

ஊர்தி - வாகநம். (க0)

ஏரிஞல்விளங்கவருடலினிதுமுற்பொறுத்துப்
போரிஞல்விழவவ்வுடல்வாய்வழிப்புகுத்தி
வீரமோடுமுள்வைத்தனபொறுத்துமிக்கோடும்
ஓரியேமுதலூர்தியினுணர்வையாருரைப்பார்.

ஓரி - கிழநரி. (கக)

வளைவிறேர்கரிவாசிபுண்ணீர்ச்சுழல்வருதல்
வளைகள்பற்பலவயின்றெறும்வயின்றெறும்வருத்துக்
கரையிலாதெழுங்குருதிவெங்கடலையுங்கடையக்
கரையுமாங்குப்பற்பலகரிபரிவரல்காட்டும்.

வாசி - குதிரை, புண்ணீர் - உதிரம். (க௨)

அழுதுகண்ணினீராக்கைமுன்றெழுகிடத்திசையின்
அழுவமெங்கணுமவுணர்களோடுதலடைந்து
கழுகுங்காகமுங்கூட்டுணுங்களத்திடைவீரம்
கழுவிநீக்கியங்கேகுறுங்காட்சியேகாட்டும்.

அழுவம் - பரப்பு. (க௩)

களையிருனவர்மடிதலிற்கரையழிந்தெழுந்த
குருதிமாக்கடலாயதுபாற்கடல்குறிக்கின்

உருவப்போர்வளையாற்கடைபொழுதகடுடையப்
பெருகிச்செய்யபுண்ணீரெழுபெற்றிபோன்றதுவே.

அகடு - வயிறு. (கச)

அரியபோரிடையசுரர்தமாருயிர்விடுத்தால்
மருவில்வானவரெனும்பகைப்பெயர்வரும்வலிசேர்ந்
தொருவிடாததம்பெயரொழிந்திடுமெனவுணர்ந்தோ
விரியுகாற்றிசைக்கால்விசைத்தோடினர்விரைந்தே.

ஒருவிடாத - நீங்காத. (கரு)

ஆற்றல்சேரிமையோரொடுவெருண்டனரடைந்தாங்
கேற்றபோரிடையவுணர்களிகலழிந்திரிதல்
காற்றொடொண்கதிரோடியுங்கண்டிலவதனால்
தோற்றன்மேயினரமரிற்சிலரெனச்சொலலாம்

இகலழிந்திரிதல் - வலியழிந்தோடல் (கசு)

கூற்றுவன்முனங்குறுகியுங்கொலையுணர்சிலபேர்
காற்றினுக்கிறைதொடரவுங்கைப்படார்சிலபேர்
நாற்றிசைக்கணுமோடினரன்றவரடைந்த
ஊற்றமும்முறுவிசையுமூங்கெவரெடுத்துரைப்பார்.

கூற்றுவன் - யமன், காற்றினுக்கிறை — வாயுதேவன். (கஎ)

அன்னகாலையிலவுணர்போரழிந்தமையறியாத்
துன்னுமாவலிபற்பலகணை துரந்தார்த்தான்
மின்னுலாங்கணைவேறுவேறிந்திரன்விடுத்துக்
கொன்னுலாங்கணையறுத்தலுமவுணனுங்கொதித்தான்.

துரந்து - செலுத்தி. (கஅ)

அலைகளோடெழுவாரிகாலாலலைத்திடவுந்
தலைகணீளரிபரந்தெனவிரித்திரைத்தவற்றின்
கலைகளொன்றறவரக்கியர்வளைப்பவுங்கரிசேர்
மலைகள்வீழவுமறைந்திருந்தியற்றினன்மாயை.

வாரி - கடல். (கக)

தேவரன்னவன்செய்தவம்மாயையிற்றேம்பி
பூவில்வைகியபூவைசேர்புனிதனைநினைப்பத்
தாவிலாதபுட்பாகனுமவ்வழிசார்ந்தான்
காவிவண்ணனைக்கண்டவர்மாயைகாண்கிலரால்.

தேம்பி - வருந்தி, பூவை - காயா, புட்பாகன் - திருமால். (உ0)

மாயன்சேவடிமனக்கொளிற்பிறப்பிறப்பென்னும்
மாயைபோய்விடுமாயனைக்கண்டவர்க்கவன்றன்

மாயையால்வருமாவலிமுதலியோர்வளர்த்த
மாயையோவுதற்கையமுண்டோவகுத்துரைப்பின.

ஓவுதற்கு - நீங்குதற்கு. (உக)

கொடியவேலினைக்காலநேமிப்பெயர்கொண்டோன்
நெடியனூர்திமேலவிட்டனனெடியனும்பிடித்துக்
கடியவேலினையன்னவன்களத்திடைவீழ்ந்து
மடியவேவினன்மற்றவன்றென்புலமணந்தான்.

நெடியனூர்தி - கருடன் (உஉ)

காலநேமியங்கிறத்தலுங்கண்ணன்முன்கனன்று
மாலிமாலியவானெடுசுமாலிவந்துடன்று
கோலவாழியெம்மான்விடக்கொடியமாலியவான்
சூலமோடிரிந்தானுயிரிருவருந்தொலைந்தார்

இரிந்தான் - ஓடினன். (உங)

வெய்யமாயைசெய்கூற்றினனீயெனவெகுளாக்
கையின்வச்சிரங்கொண்டவன்வெய்துரைகபூற
ஏய்யும்வெங்கணைமாவலியிவ்வுரையிரும்போர்
செய்யவல்லுநர்தெரிப்பரோசீச்சியென்றுரைத்தான்.

வெகுளா - வெகுண்டு, (கோவித்து). (உச)

கதிர்கொள்வேலினன்கழறுமச்சால்கேட்டலுங்கடுகித்
துதியின்மேம்படுவச்சிரந்துணைவினிற்றூண்டி
எதிரின்மேவுமம்மாவலிககியைந்தமாவலிநேர்ந
துதவியாய்வருசம்பனையும்பர்கோனொறுத்தான்.

துணைவினில் - விரைவாக. (உரு)

சம்பன்மாய்தலுமாவலிமடங்கலிற்சார்ந்து
வெம்புநெஞ்சமோடொருகதையெடுத்தனன்வெருளா
உம்பர்நாயகனூரும்வெங்களிற்றுடலடித்தான்
கம்பமுற்றது நிலனிடைவீழ்ந்ததுகலங்கி.

மடங்கலின் - சிங்கம்போல, கம்பம் - நடுக்கம். (உசு)

களிறுவீழ்தலுமாயிரம்பரியொடுங்கலின
ஒளிசெய்தேரவண்மாதலியுதவுறவூர்ந்த
நளிகொளிந்திரற்காண்டலுநமுசியேமுதலோர்
பிளிறுமையெனவார்த்தனர்பெருங்கதைசொரிந்தார்.

மாதலி - இந்திரசாரதி, மை - மேகம். (உஎ)

பாகன்மாதலிதுண்ணெனப்பதைப்புறவடித்தான்
மேகவாம்பரிமெலிவுறவெங்கணைவிடுத்தான்

சோகவார்கணைப்பஞ்சரம்படைகொடுதுணித்துப்
போகிகாரிருள்போகியகதிரினைப்போன்றான்.

கணைப்பஞ்சரம் - அம்புக்கூடு. (உஅ)

வலனும்பாகனுமடிதரவச்சிரத்தறுத்தாங்
கிலகுமப்படைநமுசிமேலேவினனேவக்
குலவுகந்தரந்தடியுமோர்வலிகொளாதாகப்
புலவர்நாதனும்புதுமையீதெனப்புலம்புற்றான்.

கந்தரம் - கழுத்து. (உகூ)

கானத்தோங்கியவரைச்சிறைசடியுமிப்படைதான்
ஏனத்தாயதென்காரணமென்னுமிந்திரன்முன்
வானத்தோருரைநமுசியைமாய்ப்பதுவனத்தார்
பேனத்தாமெனப்பேனம்விட்டவனுடல்பிளந்தான்.

பேனம் - நுரை, வனம் - நீர். (ங0)

அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்.

கடுந்திறற்காலநேமிகாலனேனமுசியாதி
மடங்கல்வெஞ்சீற்றத்துப்பின்மன்னவர்மடிதலோடும்
தடங்கடலுலகம்பூத்ததாமரைத்தவிசின்மேலான்
விடுந்தயாழ்முனிவனெய்திவெஞ்சமம்விலக்கினானால்.

மடங்கல் - சிங்கம். (ஙக)

வெள்ளிதன்விஞ்ஞையாலவ்வெஞ்சமர்க்களத்தின்வீந்த
அள்ளிலையலங்கலொள்வேலவுணருமாவிபெற்றார்
புள்ளரசுயர்த்தபெம்மான்பூங்கழலுருழுதுவிண்ணோர்
கள்ளவிழ்தருவினீழல்கதுவினர்களிமிக்காரால்.

விஞ்ஞையால் - வித்தையால். (ஙஉ)

தேவர்களமுதுபெற்றுத்தெறுசினநிருதர்தம்மை
ஆவலினமரிற்செற்றதறைந்தனமனைத்தும்வல்லோன்
பாவையாம்படிவநக்கன்பரிவொடுபார்த்தகாதை
காவலவுரைக்குமென்னக்கழறுவான்முனிவன்மாதோ.

பாவையாம்படிவம் - பெண்ணுருவம். (ஙங)

தேவாசுரர் போர்செய்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—கஙங.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

## ஐந்தாவது

## மோகினி யுருக்காட்டிய வத்தியாயம்.



மொய்கடந்தொளிறும்வாட்கைமுரண்வலியவுணர்மாழ்கப்
பெய்கடல்கடைந்தநம்பிபெண்ணுருவெடுத்தல்காண்பான்
மைகனிந்தொழுகுகண்டன்மருங்குறைமங்கையோடு
செய்கனிந்தொழுகும்வெவ்வாய்நேமியானிருக்கைசேர்ந்தான்.

காண்பான் - காண, மை - கருமை. (க)

மாய்வில்வைகுந்தமேவிமதியணிசடையோனென்றாய்
தூயவரொன்றேயென்னத்தொழுமவரிரண்டேயென்ன
ஆயினையுலகமாதியமர்ந்தனைய னுகிப்போகம்
நீயலாதிதுவென்றென்னநினைக்கிறேன்றில்லையென்றான்.

மதியணிசடையோன் - சிவன். (உ)

விண்ணவர்பரவைவேலைவிளைந்ததெள்ளமுதமெல்லாம்
உண்ணவாளவுணர்காமமுழந்தனருயங்கத்தாங்கும்
பெண்ணுருக்காணவேண்டிப்பெரிதுளம்பெட்டநின்னே
கண்ணவென்றுரைத்தான்வெய்யகனலுமிழ்கணிச்சியானே.

பெட்டது - விரும்பிற்று, கணிச்சியான் - சிவன். (ந)

குன்றவிற்குழைத்தநக்கன்கூறியமாற்றங்கேளா
நன்றெனப்பவளசெவ்வாய்நகைநிலாத்தவழநக்குத்
துன்றினர்விழைநறல்குந்தொல்புருடோத்தமன்றான்
மன்றலங்கடுக்கையான்கண்மறைந்தனனங்கண்யன்றே.

நக்கன் - சிவன், கேளா - கேட்டு, மாற்றம் - சொல். (ச)

விழுந்தொருகோடிவண்டுமிதிப்பவாய்நெகிழ்ந்துபைந்தேன்
வழிந்தபூங்கடுக்கைமார்பன்வாள்விழிபரப்பிநோக்க
எழுஞ்சுடர்ப்பரிதியென்னவிலங்குகூராழிமாலோன்
பிழிந்துகொள்வனையசெவ்விப்பெண்ணுருவெடுத்துநின்றான்.

பரிதியென்ன - சூரியன்போல, செவ்வி - அழகு. (ரு)

கலிநிலைத்துறை.

அன்னபெண்கொடியள்ளிலைப்பூண்சுமந்தொசியும்
பொன்னங்கொம்பெனப்பொருமழைக்கரும்புயல்கிழித்து
மின்னுமின்னெனவிரிசிறைச்சுரும்பினமிழற்றி
மன்னுகாவிலோர்மாதவிப்பந்தரிற்றோன்றி.

ஓசியும் - ஒடிகிற, மாதவிப்பந்தர் - வசந்தமல்லிகைக்கொடிப்பந்தர். (சு)

அயிலும்வாளுமிட்டளாயினவனையகட்பேதை
குயிலும்பூவையுங்குழைவுறக்குதலையந்தீஞ்சொல்

பயிலுமஞ்சிறைப்பச்சிளங்கிள்ளைபின்படா
இயலுமென்மெல்லிளமயிலியற்குடைந்திரிய
பின்படா - பின்செல்ல, இயல் - சாயல். (எ)

மழையைநோக்கியமடமயிற்சாயலாண்மதர்த்த
விழியைநோக்குமவ்விடத்தினைநோக்கும்வெங்காமம்
தழையுநோக்கினைநோக்குமுட்டளருந்தன்செங்கை
உழையைநோக்கும்பிஞ்ஞகன்மயல்யாதெனவுரைக்கேன்.
உழை - மான். (அ)

பெய்யுந்தண்கதிர்வளையெனப்பெருங்கடல்கடைந்து
மையில்வானவர்க்கேந்துதெள்ளமுதெனமலரும்
செய்யதாமரைமலருறையனமெனத்திகழப்
பையநித்திலப்பந்துகைப்பரிந்துநின்றாடும்.
வளை - சங்கு. (கூ)

முகிழ்ந்தவெம்முலைமுத்தணிதிருத்தியும்வீழ்ந்து
மகிழ்ந்துவண்டொடுமாலைதாழ்கருங்குழல்வனைந்தும்
நெகிழ்ந்தபூந்துகிறிருத்தியுநிலவுபொற்கொடியின்
நிகழ்ந்துபங்கெறிந்தாமேச்செய்வியார்தெரிப்பார்.
வனைந்தும் - அலங்கரித்தும். (க0)

எறிந்தபந்துசேய்த்தகறலுமெறிந்தவேலென்ன
மறிந்தசேலெனமானெனமதர்விழிபிழற
நெறிந்தபூங்குழனிலவுதூந்தூசசிறையனம்போல்
செறிந்தசில்லரிமணிச்சிலம்பொலியெழச்செல்லும்
சேய்த்தகறலும் - தூரத்தேசெல்லுதலும். (கக)

அழல்கட்பாய்புலியதளுடைநெகிழ்தரவலர்த்தி
விழுதுவிட்டெனமிளிர்சடைவெந்நிடைவிரிய
ஒழுகுதீங்கதிர்வெண்மதியின்னமுதுறைப்பச்
சுழலும்வண்டிமிர்கொன்றையந்தொங்கலான்மெருடரும்
புலியதள் - புலித்தோல். (கஉ)

நுணுகுநுண்ணிடையலம்வரநூபுரஞ்சிலம்பச்
துணிநிலாக்கதிர்தூற்றுபொன்மேகலையிரங்கப்
பணியணிந்தவன்கையகப்படும்படுமென்ன
அணுகும்பைப்பயவைகுமெல்லடிசிவப்பூர
பணி - பாம்பு. (கங)

அன்னகாலையிலசைநடைக்காறவழ்ந்திசைப்ப
மின்னுதண்கதிர்நித்திலமணிவிளிம்படுத்த
பொன்னஞ்சேலமும்புனைமணிக்காஞ்சியுநெகிழ
மன்னுநாணொடுமென்றலஞ்சினைதொறுமறையும்
சேலம் - ஆடை. (கச)

பிறையும்வில்லுமொத்திலகியதிருநுதற்பேதை
அறையும்வண்டிமிரணிமலர்த்தடஞ்சினைதோறும்
மறையுமாற்றருமாதர்மீதூரமுக்கண்ணன்
இறையுநாணிலன்பின்செலுமிருங்களிறேய்ப்ப.

சினை - கிளை. (கரு)

நெறித்துநெய்கனிகுழலுமைநகுவதுநினையான்
பொறுத்தகங்கையாள்புன்னகைகோட்டலுங்கருதான்
அறற்கருங்குழல்பற்றினனங்கையாற்றழுவ
எறிக்குஞ்சேயிழைமின்னெனக்கைப்படாதிலகும்.

நகுவது - சிரிப்பது, புன்னகைகோட்டல் - புன்சிரிப்புச்செய்தல். (கசா)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஞானநல்விளக்கமென்னநவையறுநல்லோர்நெஞ்சின்
மானுருமுளரியூறுபசுநறுந்தேறலென்ன
ஆனதொன்முதறாய்தந்தையாமவனுருவீதென்னான்
கானலைப்புனலென்றோடுங்கலையெனமயர்ந்துசெல்வான்

தேறல் - தேன் (கஎ)

பார்த்தனன்வேனில்வேந்தன்பழம்பகைதீரமற்றோர்
கார்த்தனன்சிலைகால்கோட்டியயின்முகப்பகழிமாரி
தூர்த்தனனிளவெண்டிங்கள்சூடுசெஞ்சடையினானும்
போர்த்தனியேறுபோலப்புலனழிந்தொழுகிநின்றான்

கோட்டி - வளைத்து. (கஅ)

மின்புரிந்தனையகற்றைவிரிசடைமகுடத்தண்ணல்
என்புரிந்தனமென்றுட்கியெருத்திறைஞ்சினனின்றானால்
பொன்புரியாரமார்பன்புரிவளையோடுவெய்ய
கொன்புரியாழியேந்திக்கொண்டலிற்றிகழநின்றான்.

எருத்து – பிடர், இறைஞ்சினன் - வளைத்து. (கக)

படுகழைவெடித்தமுத்தம்பளிக்கறைதழுவித்திங்கள்
புடைபரந்திமைக்குமீனிற்பொலிவுறுகயிலைசேர்ந்து
மடலவிழ்துளவப்பெம்மான்மாயையார்கடப்பரென்னாக்
கடல்விடநுகர்ந்தோன்வெற்புக்காரிகைக்குளாசெய்தானால்.

மீனின் - உடுக்கள்போல. (உ0)

குடுமிவான்றோயநின்றகொழுஞ்சுடர்வெள்ளிக்குன்ற
நடைநவிற்றென்னத்தோன்றுநரைவிடைப்பாகனென்றும்
மடவரல்பாகனென்றுமாமறைபுகழநின்றோன்
விடுபுலன்மண்ணின்வீழ்ந்துவெறுக்கையாய்விளைந்ததன்றே.

நரைவிடை - வெள்ளையெருது. (உக)

கலிவிருத்தம்.

கொன்றைசூடுங்குழகனுமிவ்வகை
ஒன்றுகாமமுழந்தனனென்னின்யார்
வென்றிவேல்விழியார்மயல்வெல்பவர்
என்றுவேந்துக்கிருந்தவனோதினன். (உஉ)

வேல்விழியார் - மாதர்.

மோகினி யுருக்காட்டிய வத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௩௩௫
ஸ்ரீ கிருஷ்ணசகாயம்

---

ஆறாவது

# வைவச்சுதனுதியவரையுரைத்தவத்தியாயம்.

அற்றமில்புகழாதிமனுமுதல்
உற்றவாறுமனுவையுரைத்தனம்
மற்றையெண்மனுப்பேரும்வழங்குவாம்
வெற்றிமன்னவவென்னவிளம்புவான். (க)

அற்றம் - முடிவு.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

எழுநிலம்புகழேழாமனுவென்பானிலங்கியவிவசுவானீன்ற
தழைவுறுபெயர்வைவசுதனுதஞ்சாற்றுமிக்காலத்துமனுவாய்
மொழிதருமன்னோனிக்குவாகுவையேமுதலியபதின்மரையுயிர்த்தான்
பொழிகதிர்வெள்வேற்புரந்தரனென்பான்பொன்னிலம்புரந்திருக்கின்றான்

உயிர்த்தான் - பெற்றான் (உ)

கலைபயில்சமதக்கினிகவுதமன்சீர்க்காசிபன்கோசிகன்வசிட்டன்
பலர்புகழ்பரத்துவாசனென்றுரைக்கும்பண்ணவனத்திரிபகர்வோர்
இலகுமேழ்முனிவராயிருக்கின்றாரிவ்றயவன்வாமனனாகி
அலகறுபுகழ்சேர்மாவலிபாற்போயவனிமூவடியிரந்தனனால்.

இரந்தனன் - யாசித்தான். (௩)

திரைப்புவியேழுமொருதனித்திகிரிசெலப்புரிமணிமுடியாச
அருந்திசெய்வைவச்சுதமனுவென்பானரசுசெய்கின்றவிக்காலம்
உருத்திரர்வசுக்களதிதியென்றுரைப்பாருயிர்த்தவாதித்தியரொளிசெய்
மருத்துவர்பரிப்பேர்த்தேவரென்றுரைப்போர்வானவராகிமன்னுவரால்.

தனித்திகிரி - ஏகசக்ரம். (௪)

இசைத்திடும்விவச்சுவாவெனும்பெயரோனெழிறிகழ்சாயையைமணந்து
வசைக்குழுவகற்றவளித்தசாவன்னிவழங்குமெட்டாமனுவாவான்
திசைத்தலம்புகழுமாவலியென்பான்செப்புமிந்திரனெனச்சேர்வான்
மிசைப்புகழ்ச்சுதபாதியரெனவுறைவோர்விண்ணவராகிவீற்றிருப்பார்.

மணந்து - கூடி, வசைக்குழு - மிருதிந்தை. (ஙி)

அரசவென்றுதையாகியவியாதனச்சுவத்தாமனற்கிருபன்
உடைமழுவிராமன்முதலினருறைவாரோரெழுமுனிவராயநாள்
மருவிய திருமால்வானுலகாளமாவலிக்கரசியல்வழங்கித்
தனைமுதலுலகமுவந்தினிதளிப்பான்சாருவபூமனென்றுதித்தே.

வழங்கி - கொடுத்து. (ச)

சாற்றுமொன்பானுமனுவெனச்சார்வான்றக்கசாவன்னியஞ்ஞான்று
போற்றுமிந்திரனற்புதனெனப்புகல்வார்புலவர்கர்க்காதியராவார்
சீற்றமிறுதிமான்முதலினர்முனிவர்திகழம்புதரைவயிற்றுதித்தங்
காற்றல்சேரிடபனெனும்பெயரினனுயாழியான்பகைகடிந்தளிப்பான்.

அஞ்ஞான்று - அந்நாளில். (எ)

பெருகுசீர்ப்பத்தாமனுவெனும்பெயரோன்பிரமசாவன்னியென்றுரைப்பான்
தரியலர்புகழுஞ்சம்புவென்பவன்றான்சாற்றுமிந்திரனெனச்சார்வான்
மருவிபுத்திரனேமுதலினரமரர்வருசயன்மூர்த்தியேமுதலோர்
அருமறைமுனிவர்விடவச்சேனன்னுயமலனிவ்வுலகினுக்கருள்வான்.

தரியலர் - பகைவர். (அ)

வயங்கியபதினொன்றுமனுவாவான்வளர்புகழ்த்தருமசாவன்னி
தயங்கியவிகங்காமுதலினரமரர்சாரருணதியர்முனிவர்
பயன்றருமமரர்க்கிந்திரனுவான்பகரும்வைதிருதன்யாவருக்கும்
நயந்தருதருமசேதுவாயுதித்துநளினைநாயகனுலகளிப்பான்.

நளினைநாயகன் - லக்ஷ்மீநாதன் (கூ)

பகருருத்திரசாவன்னியென்றுரைப்பான்பன்னிரண்டாமனுவாவான்
திகழ்தருமிருதுதாமனும்பெயரான்றேவர்கோனரிதனேமுதலோர்
அகமகிழமரராவ்ரோழ்முனிவரருந்தவமூர்த்தியேமுதலோர்
துகளறுதிருமால்சுதாமனென்றுதித்துத்தொல்லுலகருள்சுரந்தளிக்கும்

துகள் - குற்றம். (௧0)

செப்பியபதின்மூன்றுமனுவாவான்றேவசாவன்னியாமரசன்
எப்புவியோரும்புகழ்திவப்பதிதானிந்திரனுகும்விண்ணவராய்த்
துப்புறுசுகன்மன்முதலினருறைவார்சுதபனுதியர்முனிவராம்
ஒப்புறுயோகவிபுவெனமாயனுதித்துலகளிக்குவன்மாதோ.

அளிக்குவன் - காப்பான். (௧௧)

எண்ணுறுபதினான்காமனுவாவானிந்திரசாவன்னியென்பான்
விண்ணவராவார்பவித்திராதியர்தாம்விளங்கியசுசிபுரந்தரனும்

தண்ணறுந்தொடைசேரக்கினிமுதலோர்சாற்றுமேழ்முனிவராய்ச்சார்வார்
பண்ணவர்பராவுந்துழாயணிபரமன்பானுவாயுதித்துலகளிப்பான்
மண்ணவர் - தேவர். (கஉ)

ஆயிரஞ்சதுருயுகத்தினின்மனுக்களடைகுவர்முறைமுறையடைந்து
மேயவீரேழுமனுக்களுமடங்கின்விரிஞ்சனுக்கொருபகலிறத்தல்
நேயமார்பகலினளவையாயவற்குநிசியும்வந்துற்றுநீங்கியபின்
மாயனாருளான்மற்றையநாளுமறையவனின்னணம்வகுக்கும்.
நிசி - இரா. (கங)

தன்னுழையுதித்தமாயையுமருவிச்சாற்றியபெயரொடுமுருவம்
பன்னுபற்பலவாய்முக்குணத்தோடும்பயின்றனன்போன்றிருந்தாலும்
துன்னியவிருள்சேரலங்கல்வெவ்வரவாய்த்தோன்றியோர்சுடருறத்தானே
மன்னுதல்போன்மாயவன்மனங்கடந்துவயங்குவன்மதிக்கினென்றுரைத்தான்.
அலங்கல் - பூமாலை, (பழுதை). (கச)

வைச்சுதனுதியரை யுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தப் — கஅகூ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

ஏழாவது

வாமனாவதார முரைத்த வத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

என்னனுங்கேட்டவெள்வேலிறையவனுழிமாயன்
மன்னுமூவடிமண்கொள்வான்வாமனவுருவங்கொண்டு
துன்னினனவுணன்றன்பாலென்றனைசுருக்கிமுன்னர்
அன்னதுதெரித்தியென்னவருந்தவன்வழங்கலுற்றான்.
கொள்வான் - கொள்ள. (க)

மல்லலைத்தோங்குதிண்டோண்மாவலியுலகமெல்லாம்
வெல்லுதற்காகவேள்விவெள்ளியாலினிதிழைற்றி
நல்லெழிற்றேரும்வில்லுநலஞ்செயுங்கணையும்பெற்றுப்
பல்லியமொலிப்பவேதபாரகராசிகூற.
வெள்ளி - சுக்கிரன். (உ)

பொருவரும்பிரகலாதன்பொன்னடிதலையிற்சூடி
விரிகதிர்மகுடம்வேய்ந்துவிளங்கணிபலவும்பூண்டு
ரமணித்தேரினேறிநிகரில்வெந்தானைசூழ
மருவலர்தருவார்தேவர்வான்பதிவளைந்தானன்றே.
தானை - சேனை. (ங)

எண்ணருமவுணரெய்தியிரும்பதிவளைத்தல்காணு
விண்ணவர்வெருவிவானவேந்தொடுங்குருவின்முன்னை
நண்ணினர்தோற்றவெய்யோர்நற்பதிவளைத்ததென்கொல்
அண்ணலங்குரவவென்றாரவனுமாங்கறைதலுற்றான்.

காணு - கண்டு. (௪)

தோற்றபினமரிேனாடுந்துயரறக்குரவன்வேள்வி
போற்றினன்கேடில்பொன்னங்கவயமும்பொலங்கொடேரும்
மாற்றருஞ்சமத்தின்மிக்கவாளியும்வளைவெவ்வில்லும்
ஆற்றலுமடைந்துபோர்க்கூங்கடைந்தனனவுணர்கோமான்.

பொன்னங்கவயம் - பொற்கவசம், சமம் — போர். (௫)

ருருவருளடைந்தோர்வெற்றிகொள்ளுதலுண்மையன்றோ
மருளுறுநும்மையன்றிமருவியகுரவற்போற்றா
திருளுறுதுயரவாரியெய்துவோரொருவருண்டோ
பொருவலியுமக்கிங்கில்லைபோய்க்கரந்துறைதல்வேண்டும்.

துயரவாரி - துக்கசாகரம். (௬)

சில்பகல்கரந்துவைகிற்செருச்செய்மாவலியைவென்று
பல்வளந்திகழுநுந்தம்பதியளித்தாழியம்மான்
நல்குரவொழிப்பனென்னநவிற்றலுமவுணர்காணின்
கொல்வரென்றுருவம்வேறுகொண்டனரொளித்தார்விண்ணோர்.

நலகுரவு - வறுமை. (௭)

தேவர்கள்வீற்றுவீற்றாய்ச்சென்றொளித்துறைதலோடும்
மாவலியுலகமூன்றுமதிக்குடைநிழற்றியாளும்
காவலனாகிமிக்ககடவுள்வாம்புரவிவேள்வி
தாவிலாவொருநூற்றித்தயங்கினன்புகழின்மாதோ.

வீற்றுவீற்றாய் - வெவ்வேறாகி, புரவிவேள்வி - அசுவமேதயாகம். (௮)

நந்தலில்லாதமைந்தர்நலமிழந்தனராலென்னச்
சிந்தைநொந்ததிதியென்பாடிசைத்தனள்சேர்ந்தவில்லில்
நிந்தையிலறிவின்மிக்ககாசிபன்றவத்தைநீங்கி
வந்தனன்பணிசெய்கின்றமனைவியைநோக்கிச்சொல்லும்.

நந்தலில்லாத - கெடுதலில்லாத. (௯)

மனைவிநீவாட்டமுற்றுவைகினைபோலுமென்கொல்
முனிவர்நின்னில்லின்வந்துமுனிந்தனர்போயதுண்டோ
நனிபிணியுடலின்வந்துநண்ணியதுண்டோதீங்குன்
தநயருக்குற்றதுண்டோசாற்றெனவவளுஞ்சாற்றும்.

முனிந்தனர் - முனிந்து, (கோவித்து). (௧0)

மாதவநிறைதுகாதன்மனையவளாயினேற்குத்
தீதுவந்துறுவதில்லையாயினுஞ்சிறுவரெல்லாம்

குதறுபகைவராலேதொல்பதியிழந்தாரன்னோர்
கோதறுமிடரினீங்கிக்குலவவீங்கருள்செய்கென்றாள்.

கோது - குற்றம். (கக)

என்றதுகேட்டலோடும்பெருந்தவனிலங்குமட்டார்
மன்றலங்கமலைமேவுமார்பினன்வழிபாடாற்றின்
உன்றுயர்தீருமென்னவுரைத்தனன்வழிபாடாற்றல
நன்றுரையிவ்வாறெனனவென்னலுநவிலலுற்றான்

இருந்தவன் - பெருந்தவத்தினன். (கஉ)

கலிவிருத்தம்.

வழுவிலாதமகப்பெறமுன்னெனக்
கழிவிலாதநலந்தணனோதிய
பழுதிலாதபயோவிரததினை
மொழியுமாறுமுயல்வுறக்கேட்டியால்,

அந்தணன் - பிரமன். (கந)

மீனமானமதியினில்வெண்மதி
வானமீதுவளர்சுருபக்கமுன்
ஆனசீர்செய்திதியிலருமபொன்றேல்.
ஏனமாயனுருவம்யற்றியே.

மீனமானமதி - பஙகுனிமாசம். (கச)

பன்னிரண்டுதிதியும்பழுதற
உன்னுமெண்ணிரண்டாமுபசாரமோ
டன்னநல்லருண்மாயனடிதொழின்
மன்னுகின்றமனத்திடர்மாய்தியால்.

மனத்திடர்மாய்தி - மனத்துயரொழிவை. (கரு)

பாலருந்திப்பகர்ந்ததிதிதொறும்
மாலிரும்பதம்வாழ்த்திமகிழ்ந்துபின்
சீலநன்குருவெய்தத்திருநிதி
ஞாலமெங்கும்வியப்புறநல்கியே.

நல்கி - வழங்கி. (கசு)

அஞ்சுவையிருமூன்றெடுமாமமு
தெஞ்சலின்மறையோர்களியைந்துண
வஞ்சியஙகுதவென்னமதிநுதல்
நெஞ்சுவந்துநிகழ்த்துமுறைசெய்தாள்.

மதிநுதல் - பிறைபோலும் நெற்றி (கஎ)

விதியினற்றவனோதும்விரதமவ்
வதிதிமுற்றுமங்காற்றலுமச்சுதன்.

மதியினிற்சுடரும்வதனத்தொடும்
துதியினுற்றவளுக்குமுன்ருேன்றினன்.

அச்சுதன் - திருமால். (௧௮)

கொண்டலன்னகொழுந்திருக்கோலமுன்
கண்டுகண்டுகளிக்குமனத்தினள்
பண்டடும்மொழியாற்பலவாழ்த்தினள்
மண்டுகின்றமனத்திடர்கூறியே.

கொண்டல் - மேகம். (௧௯)

ஓதுவாசகங்கேட்டலுமுன்னுழைக்
காதலாலுதிப்பேனோர்கலையினல்
கோதுநீங்குதவைநீயெனக்கூறியம்
மாதுவாழ்ந்தமறைந்தனன்மாயனே.

ஓர்கலையினல் - ஒருஅம்சமாக. (உ0)

அலையின்மேற்றுயிலண்ணலவ்வண்ணமே
மலையின்மேம்படுகாசிபன்புல்லிய
சிலையினேர்நுதற்சேயிழைசெவ்வியால்
இலையினேர்வயிற்றெய்தினனென்பவே

செவ்வி - அழகு. (உ௧)

கன்னியென்றுமதியிற்கலைமதி
மன்னிநின்றுவளர்தருபக்கமென்
றன்னுநின்றவோணத்தொடுஞ்சேர்திதி
பன்னிரண்டினடுப்பகற்ருேற்றியே.

ஓணம் - திருவோணம் (உஉ)

துதிசெய்செம்பொற்முடியுமகுடமும்
அதிர்சிலம்பொடுமாடகத்தாடையும்
கதிரிளங்குழையுங்கரநான்குமாய்
விதிவணங்கவிமலன்விளங்கினன்.

ஆடகத்தாடை - பொன்னுடை. (உ௩)

வேறு.

தேமலர்தூவினர்தேவர்வணங்கித்
தாமரையாளுறையுந்தடமார்பன்
காமுறுமாணுருவங்கரந்தாங்கு
வாமனமாகிவயங்கினன்மாதோ.

வாமனமாகி - குறளுருவாகி. (உ௪)

வந்துபெரும்புகழ்மாமறைநூன்முன்
தந்துவிளங்கியதற்பரனுக்குச்

சுந்தரமுப்புரிநூல்சுரர்போற்றும்
அந்தணனெய்தியளித்தனனன்றே.

சுரர் - தேவர். (உ௫)

விருப்பைவெறுப்பொடுவிட்டவருக்குக்
கருப்பையகற்றுறுகாரணனுக்குத்
தருப்பைகொடுத்தனர்சாற்றுதவப்போர்ப்
பொருப்பைவளர்த்திடுபுங்கவர்மாதோ.

புங்கவர் - அந்தணர். (உ௬)

தன்னையளித்ததனிப்பொருளுக்குக்
கன்னல்களித்துறைகஞ்சனளித்தான்
பொன்னினிழைத்தொளிர்போர்வையிறோனுக்
கன்னையளித்தனள்கோவணமாதோ.

கன்னல் - கமண்டலம், கஞ்சன் - பிரமன். (உ௭)

போனகமாகியபூமகளீந்தாள்
தானுறையுங்கலையின்னதள்கையால்
ஈனமிலர்வரையேந்துபவற்கு
வானம்வழங்கினவண்குடைமாதோ

போனகம் - உணவு, அதள் - தோல். (உ௮)

அந்தமிலாதவருங்கதையோற்குச்
சந்திரனுற்றொருதண்டமளித்தான்
சுந்தரமேகலைசூழரைமீது
வந்துறைதாதைமவுஞ்சிவனைந்தான்

மவுஞ்சி - தருப்பையரைநாண். (உ௯)

மையின்மறைப்பொருண்மந்திரம்வந்து
வெய்யவனவ்வழிமெல்லவுரைத்தான்
கையினிதிக்கிறைபொற்கலநல்க
ஐயமளித்தனளம்பிகையன்றே.

வெய்யவன் - சூரியன், நிதிக்கிறை - குபேரன். (௩0)

இன்னணமியாருமியைந்தனநல்கி
உன்னுபிறப்பையொழிப்பவனுக்குத்
துன்னுபிறப்பதுசொல்லிரண்டென்ன
மன்னியகன்மமகிழ்ந்துபுரிந்தார்.

துன்னுபிறப்பது சொல்லிரண்டென்ன மன்னியகன்மம் - இருபிறப்பாளர் தன்மைக்குரிய சடங்கு. (௩௧)

மைதபுஞானமனத்திடையொன்றும்
கைதவமாய்மெய்கலந்தவனுக்குச்

செய்தவமாவலிசெய்பரிவேள்விக்
கெய்தவுளத்தினிலெண்ணியெழுந்தான்.

மை - அஞ்ஞானம், தபு - கெடுதற்குரிய. (௩௨)

நாற்றிசையும்மகிழ்கூரநடந்தோன்
ஏற்றவளந்திகழெவ்வுலகோரும்
போற்றியநருமதைப்பூங்கரையின்கண்
சாற்றுமகம்புரிசாலையடைந்தான்.

மகம்புரிசாலை - யாகசாலை. (௩௩)

சிற்றடிமாவலிசென்னிபுனைந்தே
அற்றமிலாதவருந்தவமெய்தப்
பெற்றனனென்றுபெருந்தவன்முன்யான்
உற்றதையாவருரைக்குநரம்மா.

சென்னி - சிரசு. (௩௪)

உன்னியவூர்பொருளுற்றிடவேயோ
மன்னியகன்னிமணஞ்செய்பொருட்டோ
அன்னமருந்திடவோவடைவுற்ற
தென்னதுநீசொலினீகுவலென்றான்.

அடைவுற்றது - வந்தது. (௩௫)

பூங்கதிர்மேனிபொலிந்திடல்காணூ
ஆங்குறைவோரெழுந்தற்புதமெய்தி
ஈங்குறையீங்குறையென்னவிருந்தான்
தீங்கறமாவலிசெய்ம்முறைசெய்தான்.

காணூ - கண்டு. (௩௬)

மாவலிதாழ்ந்தனன்மாமறைபாடு
நாவலவேட்டதெனல்குவனென்ன
மூவடிமண்பெறமுன்னினனாகிக்
காவிநிறக்கவுமாரனிசைப்பான்.

காவி - நீலோற்பலம், கவுமாரன் - சிறுவன். (௩௭)

வேறு.

முறைப்படுத்துமுதுமறைவேள்விசெய்
விறற்பெருந்தவவெள்ளியருளினால்
குறிப்பறிந்துகொடுக்குங்கொடையொடும்
பிறப்பதுங்குலத்தோர்குணப்பெற்றியே.

வெள்ளி - சுக்கிரன். (௩௮)

காரின்மேனிக்கடவுள்பயன்கொளத்
தீரனாகுமிரணியன்சேய்க்கொரு

போளுகிப்பிறந்தனையுன்வலி
பாரிஃ யாவர்பகரவல்லாரம்மா.

இரணியன்சேய் - பிரகலாதன். (௩௯)

நரகரிப்படிநண்ணிநலம்புரி
சுருதிநாயகன்றூண்வரப்போற்றிய
பிரகலாதன்குலனிற்பிறந்தநின்
விரகையாவர்விளம்பவல்லாரரோ.

தூண்வர - தூணிலவதரிக்க. (௪௦)

நடலைவானவர்நான்மறையாளர்தம்
உடல்கொடுத்துயிரேற்பவுதவுசீர்
மிடல்பொருந்துவிரோசனன்மைந்தநின்
கொடையையாவர்குறித்துரைப்பார்களோ

உயிரேற்ப - உயிரையாசிக்க. (௪௧)

திருவுஞ்சீருந்திறலுமியைந்தநுன்
பெருமையாரிவட்பேசவல்லாரென
உரைசெய்மாதவனேதுமெங்காலினுல்
மருவுமூன்றடிமண்டருவாயென்றான்.

காலினுல் - அடியளவினுல். (௪௨)

தண்டலைப்பெருந்தண்ணடையும்மன்றல்
தெண்டிரைச்செழுந்தீவுமன்றுனறு
முண்டகத்தொடைமார்பவோர்மூவடி
மண்டருகெனன்மற்றிவனென்னென்றான்.

தண்ணடை - நாடு. (௪௩)

பேசக்கேட்டவப்பிள்ளையுஞ்சொல்லுமால்
தேசம்பெற்றிடற்றீவினையுள்ளுமால்
நேசத்தீவை புற்றாலுநிலைநிலா
நாசைநோய்க்குமோரற்றமுண்டாகுமோ.

அற்றம் - முடிவு (௪௪)

பெற்றதாலுவப்பெய்திப்பெருமையோர்
குற்ற நீங்கிக்குலவுவர்முத்தியில்
உற்றதன்றியுறாதவையுள்ளுவோர்
சுற்றமோடுங்கெடுதலுஞ்சூழ்கலை.

சூழ்கலை - நினைந்திலை. (௪௫)

உடற்குள்வந்தெழுமொள்ளழல்போன்றபின்
கிடைத்திலாப்பொருண்மேற்கிளர்ந்தோடியே
நடக்குமாசையைநண்ணுமுவப்பினுல்
அடக்குமந்தணரேயறிவாளரால்.

உவப்பினுல் - திருப்தியால். (௪௬)

என்றுகூறலுமிங்ஙன்விளையது
நன்றுநல்குவனென்னமாவலி
ஒன்றுமெல்லையிலோர்குருவாகியே
வென்றியாற்குநல்வெள்ளிவிளம்புவான்.

எல்லை - சமயம். (௪எ)

தேசுபெற்றதிருப்புணர்மார்பினன்
காசிபற்குறுங்காதலனாகியிங்
காசையுற்றமூன்றுமுலகங்கொளா
வாசவற்களிப்பானிவண்வந்தனன்

கொளா - கொண்டு (௪அ)

ஆமொரீமூவடிமண்ணளிப்பேனென்றாய்
பூமியோரடிபூமியின்மேலெலாம்
வாமவோரடியாகவளர்குவன்
நாமவோரடியெங்ஙனநல்குவை.

வாமம் - அழகு. (௪௯)

கொடுக்கினீதுகொடையன்றுகுற்றமோ
டடுத்துளோரையுஞ்சுற்றமென்பாரையும்
கெடுத்துநீயுங்கெடுநரகெய்துவை
விடுக்கவேண்டுமிக்குற்றவிழைவையே.

குற்றவிழைவு - கொடுமையாகிய விருப்பம் (௫0)

மாறில்சுற்றமனையுறைதாரம்
தேறுதேவரதென்புலத்தோரொடும்
ஆறுசேரதிதிக்கும்பொருளீந்து
கூறுசெய்துகொடுத்திடல்வேண்டுமால்.

தென்புலத்தோர் - பிதிரர் (௫௧)

வஞ்சமுற்றுமருவினர்தம்மொடு
நெஞ்சமுற்றுநிகழ்த்துமெய்ந்நீக்கலும
தஞ்சமற்றுத்தனதுயிரீறுநின்
அஞ்சிமாற்றுபொய்யும்மழகாகுமே.

தஞ்சம் - ஆதரவு. (௫௨)

ஊடுமாதர்க்குனாதருபொய்ம்மையும்
பாடுமாமறையோர்பசுப்பல்பொருட்
காடலோடுறுமற்றமகற்றுழி
நாடுபொய்ம்மையுநன்மையின்பாலவால்.

ஊடும் — பிணங்குகிற. (௫௩)

ஐயமேற்றுணுமாச்சிரமத்தினோர்
செயிரில்செய்கைதிறம்பிச்செழும்பொருள்

கையினேற்பவுள்காதலித்தார்களேல்
பொய்யின்மாற்றிடினும்புரையில்லையே.

செயிர் — புரை - குற்றம். (௫௪)

அள்ளிலைத்தருவஞ்சவளிக்குங்கை
வள்ளலேயொருமாமறையோனென
உள்ளலோவுலகுண்டவனென்றமுன்
வெள்ளிகூறவவ்வேந்தனுங்கூறுவான்

உள்ளல் - நினையாதே (௫௫)

தருவமென்றுமுன்சாற்றிமறுத்தவர்
நரகஞ்சேர்ந்துநலிகுவரென்றுமு
துரைசெய்தாயடியேனுளந்தேறவிவ
வரியநல்லறமன்றறைந்தாயிலை

நலிகுவர் - வருந்துவர், தேற - தெளிய (௫௬)

துகளிற்சேர்ந்தநரகொடுதுன்னலா
பகழிக்கும்பயமில்லைபழிதருடும்
புகழிற்கும்மறையோர்கள்புகன்றிடும்
வெகுளிக்கும்வெருண்டோடுமென்னுளமே

துகள் - குற்றம். (௫௭)

நல்லைநின்னிகர்நான்மறையாளர்தாம்
செல்லைவென்றசெழுங்கொடையோய்பொருள்
வல்லைல்குதியென்னின்மறுகநெஞ்
சில்லையென்பதையெங்ஙனமுள்ளுமால்

மறுக - மயங்க, செல்லை-மேகத்தை. (௫௮)

வருந்தியுற்றவறுமையினன்மனம்
பொருந்துநான்மறைப்புங்கவரின்புறத்
திருந்துமோர்பொருளீதலிற்றீர
கிருந்தையெய்துமென்றூலநன்றீதலே

நான்மறைப்புங்கவர் - அந்தணர். (௫௯)

மன்றலந்துளவோன்மறையோனென
இன்றுமண்கவர்வானியைந்தானெனின்
நன்றுவேறுமுண்டோவெனநான்மறை
வென்றிசேர்தருவெள்ளிசபித்தனன்.

இன்று - இந்நாள், மண்கவர்வான் - மண்கொள்ளும்பொருட்டு (௬௦)

குரவன்கூற்றைமறுத்துக்கொடுப்பதெம்
மரபென்றோதியமன்னவறுமையால்

பெருகுதுன்பம்பெருகுதியென்னவும்
உரைசெய்கின்றதுதவவுவந்தனன்.

குரவன்கூற்றை - ஆசாரியன்சொல்லை. (௬௧)

விந்தியாவலியென்னு விளம்புபேர்
வந்தவோர்மனையாள்புனல்வார்த்திட
சந்தரானமவர்தாரிணிறபெய்துபின்
கநகமாமலர்க்கையிலும்பெய்தனன்.

சந்தம் — அழகு, சந்நம (௬௨)

வந்தவாமனன்கையில்மகிழ்ந்துநீர்
அந்தமாவலியன்பினளித்தலும
இந்திராதியமரதரினர்தேன்மலா
சிந்தினரடித்தார்செழும்பேரியே

அளித்தலும் - கொடுத்தலும் (௬௩)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம

சீர்விரிகமலசசெங்கைச்செலவிவந்தமாயோனே
பேரொளியுருவமெம்மாற்பேசலாத்தகைமைதொன்றே
பாரெலாம்பொதிந்தகோதாதாள்பனிமலர்த்தாளொன்றோங்கிக்
கார்கிழித்தொல்லையண்டகடாகமூடுருவிற்றம்மா

ஒல்லை — விரைவாக. (௬௪)

உரைத்தவுலகமேழுமுள்ளடியாகவிப்பார்
திருத்தகுசிறப்புவாய்ந்ததிகழுரைப்புரமதாக
மருத்தனைழவதனமங்கிமனமதிமயிர்காராக
விரித்தசெங்கதிர்கண்ணாகவிராட்டெனவிளங்கினானால்.

விராட்டென - விராட்டுருவாக. (௬௫)

பண்டருமொழியாள்பங்கன்பழமறைவிரிஞ்சியாதி
எண்டருமைம்புலப்பேருருவமற்றினையவெல்லாம்
கண்டனனசுரர்வேந்தன்கடையிலாஞானநந்தம்
கொண்டவானுருவப்பெம்மான்கொளுமுருவுறப்பினம்மா.

விரிஞ்சி - பிரமன். (௬௬)

அலர்கதிர்ப்பசும்பொன்னாட்டிலமரருய்ந்தனரென்றெங்கும்
இலகொளிமுழவமோங்கவெழுமெழிற்சாம்பவான்றன்
மலர்மழைவானோர்சிந்தமாதவர்முதலோர்வாழ்த்த
உலகுருவாயமாயனுள்ளுறச்சூழ்ந்தான்மன்னோ.

உய்ந்தனர் - பிழைத்தார். (௬௭)

நகுகதிர்த்திங்களென்னநறுந்துழாய்க்கொண்டலொற்றுள்
உயிர்பொழிநிலவுக்கற்றையுலகெலாம்பரக்கநோக்கி

முகிழ்விரிபோது தூவிமுளரியம்பொகுட்டுமேலான்
திகழ்தருபசும்பொற்கன்னற்செழும்புனலாட்டினால்.

உகிர் - நகம், கன்னல் - கமண்டலம். (சுஅ)

ஒட்டருபசும்பொனண்டத்துயர்முகடுடையமாலோன்
நீட்டியகமலப்பொற்றுணிரையிதழ்மலரின்மேலான்
ஆட்டியதெய்வநன்னீர திர்திரைககங்கையென்று
நாட்டமூவுலகினூடுநளிபெறத்தவழுமன்றே.

மலரின்மேலான் - பிரமன். (சுகூ)

ஆற்றல்வாளவுணரெல்லாமன்று வஞ்சனையேசெய்தான்
மாற்றருஞ்சிறப்புவாய்ந்தமணிவண்ணனெனச்சினப்ப
நாற்றிசைவழுத்துஞ்சீர்த்திநலஞ்செய்மாவலியன்னோரைத்
தேற்றினன்றேவர்காலமீதெனத்தெரித்துமாதோ.

மணிவண்ணன் - திருமால். (எ0)

உரவுநீருலகமெல்லாமோரடியாயதோங்கும்
இருவிசும்படியொன்றாயதேனையோரடிமற்றெங்ஙன்
தருதிநீதாராயென்னிற்சார்குவைநரகமென்று
வருணபாசத்தால்வீக்கமாவலிகட்டுண்டானால்

உரவுநீர் - கடல், வீக்க கட்ட. (எக)

குருவெகுண்டதனாற்புன்கண்குறுகினன்போலுமென்னப்
பிரகலாதப்பேரன்பன்பெருமனைக்கண்டுநெஞ்சம்
உருகுறப்புளகமெய்தியுவப்பினோடேத்தாகிற்ப
மருவிரிதுளவமாலைமலரவன்வழுத்திச்சொல்வான்.

புன்கண் - துன்பம். (எஉ)

உன்பதநீரினூட்டியுற்றநீர்தலையிற்றாங்கி
மன்பெருஞ்செல்வமெல்லாம்வழங்குமாவலிதானென்றும்
இன்பமேபெறுவதல்லாலிடருறற்கியாவன்கொல்லோ
அன்பனென்றுரைத்துப்பாசமவ்வழிநீக்கினானால்.

இடருறற்கு - துன்பமடைதற்கு. எங)

வீக்கியவருணபாசம்விட்டொழிந்தவுணர்வேந்தன்
மாக்கண்வெம்முலையாள்செய்யமலர்மகள்கொழுநபச்சைத்
தேக்கமழ்துவளத்தாரோய்செப்புமோரடியென்சென்னி
மீக்கண்வைத்தளத்தியென்னவிமலனங்குவந்துவிள்ளும்.

சென்னிமீக்கண் - சிரசின்மேல். (எச)

இருசுடரெறிக்கும்விண்ணுமேக்கறத்திருவிற்றாங்கி
உரைபெறுசுதலலோகமொருகுடைநிழற்றியாள்வாய்

மருவுகின்வாயில்காப்பேம்வயிரவாட்டடக்கைவேந்தன்
அரசுமேலளிப்பமெட்டென்றறைமனுக்காலத்தென்றான்.

இருசுடர் — சந்திரசூரியர்கள். (௭௫)

ஆழியானருளப்பாட்டினவுணர்கோன்சுதலலோகம்
சூழிருஞ்சுற்றமோடுதுன்னினன்பிரகலாதன்
எழிருபுவனந்தாயவிணையடிக்கமலம்வாழ்த்த
வாழிமாலவற்கும்க்கவாங்கொடுத்தருளினானால்

ஆழிமால் - சக்ராயுதத்தையுடைய திருமால் (௭௬)

நாடொறுமெம்மையாங்குநலம்பெறக்காணமையெனறைப்
பீடுசால்பிரகலாதன்பெயர்த்தனன் சுதலலோகத்
தேடலர்துளவோன்பின்னரிந்திரற்கரசளித்து
தாடொழுமமரர்யார்க்குந்தம்பதியருள்செய்தானால்

ஏடலர்துளவோன் - திருமால் (௭௭)

பிருகுவைநோக்கிப்பெருமான்பிறங்குமம்மகத்திற்செய்யாற
குரியனகுறைசெயென்னவுறறிருங்குறைகளாயாறவும்
அரியநின்னுமைசகதான்றேயனைத்தினுமாளும்
மருவினைகுறையுமுண்டோமதிக்கினிமகத்தாக்கம்மா

பாற்றும் - ஒட்டும். (௭௮)

குறையிலையெனினுமின்றுகூறுநற்பணிசெய்கேனென்
றிறைவனைவணங்கிவெள்ளியியற்றினனிறையன்றானும்
நறுநுதலதிதியென்பாணலந்திகழ்மகிழ்ச்சினாளும
உறவுபேந்திரனேயாகியும்பர்நாடுறையுமனறே

உபேந்திரன் - விஷ்ணு. (௭௯)

- மருங்குறையிளையோனென்னமருவுபேந்திரனலாறறல்
பொருந்திவச்சிரத்தோன்மூன்றுபுவனமுமினிதிறோம்பி
திருந்தியசெல்வத்துய்த்துத்திகழ்ந்திருக்கின்றானிந்த
இருங்கதைகற்போர்கேட்போரின்பமுற்றிருப்பர்மாதோ

ஓம்பி - காத்து. (௮0)

தேனுகுதுளவத்தாரான்றிருவிளையாட்டினதன்மை
ஊனுகுபரிதிவேலாயுரைக்குமாவெனிதோவென்று
நான்மறைக்கிழவன்மைந்தனவிற்றினன்மலராள்கேள்வன்
மீனுருவெடுத்தவாறென்விளம்பெனவிளம்பலுற்றான்.

உரைக்குமா - சொல்லுமாறு (௮௧)

வாமனவதார முரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்.—௧௫0

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.



கறங்குவெண்டிரையலைப்பக்கெளவையங்கடன்முகட்டில்
உறங்கியமலரின்மேலானுயிர்ப்பொடுமறைநடந்த
கங்குற்காலை - இராப்பொழுது. (௧௪)

உளைப்பரிமிடற்றனென்றுமுடல்சினத்தவுணனுங்கு
மூளைத்தனன்மறையைவெளவமுறுகியசினத்தால்வெம்போர்
விளைத்தவனுயிரையுண்டுவிழுமியின்மறைகளெல்லாம்
அளித்தனன்மீனமாயவருமுறைமுதவிமாதோ
பரிமிடற்றன் - ஹயக்ரீவன் (௧௫)

சத்தியவிரதனோடுதடங்கடலுலகுக்கெல்லாம்
வித்தொருதெப்பமேற்றிமீனுருவெடுத்தமாயன்
கொத்தொரிபயிலும்போதிற்குலவயன்விழிக்குங்காறும்
மொய்த்தவெண்டரங்கவேலைமுகட்டிடையுறைந்தானன்றே.
விழிக்குங்காறும் - விழிக்குமளவும் (௧௬)

முடங்குதெண்டிரையபெளவமுற்றுமோர்செலுவுட்சென்று
மடங்கியதுணரகில்லார்மயர்ந்தனர்நேடியன்னோர்
ஒடுங்கினமீரத்திரின்ற ருயர்வொப்பிலாதமேலோன்
தடங்கொள்சேலுருவின்மாண்பியாவரேசாற்றநீரார்
பெளவம் - கடல், செலு - சிலாம்பு. (௧௭)

மன்னியசேவிதொற்றைமருப்பினிலரவான்யாப்பத்
துன்னியபஃறியீதூலங்கியமுனிவரோடும்
இன்னருளரசனேறியேதகலுமேந்துமாயன்
பன்னுதத்துவங்களெல்லாம்பளகறவியம்பினானால்
பஃறி - ஓடம். (௧௮)

பொதியவிழ்கமலவீட்டுப்புராதனன்விழித்தகாலைச்
சிதரிமழைக்கட்செவ்வாய்த்திருத்துயிலாரமார்பன்
அதிர்திரைக்கடலிற்சேலாயளித்துவேலரசன்றன்னை
மதுவலார்தொடையல்வைச்சுதமனுவாக்கினானால்.
கமலவீட்டுப்புராதனன் - பிரமன், திருத்துயிலாரமார்பன் - திருமால். (௧௯)

பன்னும்இக்காதைகேட்போர்படிப்பவரொழுதில்வீடு
துன்னுவரரசவென்றுசுகமுனியுரைத்தானென்ன
இன்னருள்பழுத்தசூதனிசைத்திருந்தவர்தாங்கேட்பப்
பின்னுமம்முனிவன்சொற்றபெருங்கதைவழங்கலுற்றான்.
இருந்தவர் - பெரியதவத்தினார் (௨௦)

மச்சாவதார முரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—சஎ0.

எட்டாங்கந்தம்முற்றிற்று.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.



# ஒன்பதாங்கந்தம்.

## முதலாவது

## இளன் கதையுரைத்த வத்தியாயம்.



தனைபுகழ் விண்டோராதன்சத்தியவிரதனென்ன
மருவுமேவலாசன்வைவச்சுதமனுவாகியத்தித்
திருநிலமபுரக்கின்றானென்றிசைத்தனை முனிவன்மேறான்
விரிதருமரபின்வண்மைவிளம்பெனவிளம்பலுற்றான்.

புரக்கின்றான் — காக்கிறான். (௧)

ஈசனுந்திருமாலுந்தியெழுந்தசெங்கமலப்புத்தேள்
சேகுலாமனத்தின்வந்துமேசர்தருமரீசிசெய்தான்
காசிபனருமன்மேறன்காதலன்விவச்சுவான்றன்
மாசிலாமைந்தன்வைவச்சுதனெனவழங்குவாரால்

சேய் - புதல்வன். (௨)

அன்னவன்சிரத்தையென்னுமணங்கினைமணந்துகாதல்
மன்னுமோர்மைந்தன்வேண்டிவசிட்டனைமகஞ்செய்போது
பன்னிபெண்மகவுவேண்டிப்பகர்ந்தனளாகவோதா
உன்னுபெண்ணுதிக்கவென்றோர்மறைகரந்துரைத்தான்மன்னோ

மகம் - யாகம், பன்னி - மனைவி (௩)

இத்திறமியம்பலானேயிளையெனவுதித்தாளோர்பெண்
அத்திறமரசனோக்கியருமறைவசிட்டன்றன்னை
வித்தகவிதென்கொலென்னவிளைந்தவாறியம்பியன்னோன்
மைத்தபாம்பணையாற்போற்றிப்பளகிலானாக்கினானால்

பளகிலான் — குற்றமில்லாதவன். (௪)

இளனென்னும்பெயர்பெற்றன்னோனிலங்குநாள்வேட்டமாட
உளமுவந்தொருமாவேறியொளிர்வடவரையின்கீழ்பால்
வளமுறைகுமாரப்பேர்வனத்துழிச்சேறலோடும்
தளிர்நிறப்பெண்ணின்வண்ணஞ்சார்ந்தனன்மீட்டுமாதோ.

வேட்டம் — வேட்டை, மா - குதிரை (௫)

அங்குடனேகினோருமரிவையராயார்மாவும்
பொங்கெழில்வடவையாகிப்பொலிந்தசெந்துறைப்பவேந்தன்
மங்கையராகியன்னோர்வருந்துதற்குற்றசாபம்
இங்குரைசெய்வாயென்னவிருந்தவனுரைக்கலுற்றான்

அரிவையராயார் — பெண்களானார்கள், வடவை - ஊழித்தீ, (இது பெண்குதிரை டிவினது). (௬)

வாட்டமில்வகைசெய்தலைவசுதன்
மீட்டும்பெற்றபுதல்வர்விழுப்புகழ்
பாட்டுவண்டிமிர்பைந்தொடைமன்னவ
கேட்டியென்றுமுனிவன்கிளக்குமால்.

விழுப்புகழ் — பெரும்புகழ், கிளக்கும் - சொல்வான். (கஏ)

இன்னகதையுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்



## இரண்டாவது

## சையாதிகதையுரைத்தவத்தியாயம்.

வேறு

முழுந்துநீர்யமுனையின் முயன்றமாதவம்
வழுந்தலைவசுதமனுவனிந்தனன்
தழுந்துநீர்க்கடற்புவிதயங்குவாருறும்
பழுங்கணீக்கியவொருபதின்மர்தம்மைமேய

பழுங்கண் - துன்பம் (க)

ஏதமில்புகழினனிக்குவாகுவோ
டோதுசையாதிசாருறும்விடந்துரு
நீதிசெய்நபகனோர்நிகரிலாதகவி
ஆதியென்றனையுமப்பதின்மர்தங்களின்.

ஏதமில் - குற்றமில்லாத. (உ)

கவியெனும்பெயர்புனைகருதுசாரிஞன்
புவிமுதலியபுகழ்பூத்தசாலுறும்
எவைகளும்பிரமமாமென்றென்றெண்ணினா
நவையறுபிரமமாய்நண்ணினனரோ.

நவையறு - குற்றமற்ற. (ங)

எழிறிகழ்விடதருவென்னுமெய்ப்பிரன்
அழிவறுகுரவனும்வசிட்டனாணையால்
விழைவுறுபசுநிரைமேய்த்துமேவுநாள்
தொழுவுறுநிரைநடுத்தோன்றிற்றோர்புலி.

ஆணையால் — கட்டளையால், பசுநிரை - பசுமந்தை. (ச)

வெந்திறற்புலிதமமேயகங்குலின்
வந்தடங்ரையினம்வாய்விட்டார்த்தன

அநதமில்குணத்திறனுணர்த்தல்கேட்டலும்
மூந்தடுபடையொடுமுடுகித்துன்னினான்.

தமம் - இருள், அட - கொல்ல. (௫)

புலியெனவொருவிடைபுழுங்கிவீட்டினான்
வலிகெழுமுனிவரன்வைகற்காலைபோய்க்
கொலையுறுவிடையினைக்கண்டுகொன்றநீ
நிலையிழிபின்னவனென்றுநீக்கினான்

விடை - இடபம். (௬)

முனிவரன்சபித்தலான்மொழியும்பின்னவன்
எனவிருங்கானடைந்தியற்றிமாதவம்
துனியுறுவனத்தழல்சுலாவிமெய்சுட
மனுமகனொருபதமருவினானரோ.

சுலாவி - சூழ்ந்து. (௭)

சரவுக்கொச்சகக் கலிப்பா

சையாதியென்றுரைக்குந்தவங்கழுமவைப்புதல்வன்
மையார்ந்தவணர்கூந்தன்மாலையுமாதத்தன்முனைப்
பொய்யாதபுகழ்பெறுமுப்புதல்வரையும்பெற்றரவம்
பையாரப்பரிக்கின்றபாரகமோரேழ்புரந்தான்.

வணர் - நெரிவு, அரவம் - பாம்பு (ஆதிசேடன்). (௮)

ஏன்றமகடன்றோடவ்விறையோனற்சவனனுறை
கான்றருகானேகுதலுங்கனிமொழியாளசவனன்
வான்றவஞ்செய்தாக்கையொருவன்மீகமாகவதில்
தோன்றுவிழிமின்மினிபோற்றோன்றுதலைக்கண்ணுற்றாள்.

வன்மீகம் - புற்று (௯)

கண்டுநனிகுறுகியொருகண்டக திற்குத்தவவள்
மிண்டுமிகுசெங்குருதிவன்மீகமீதெழலும்
தெண்டிரைசூழ்பார்புரக்குந்தேர்வேந்தனோடுவனம்
கொண்டுறுவோர்யாவருமேகுருடரென்பாராயினரால்.

கண்டகம் - முள். (௧௦)

யாரோவிங்குற்றவரிந்நற்றவருக்கின்றுபிழை
ஓராதியற்றினரென்றுன்னியவனோடுதலும்
காராரும்பூங்கூந்தற்கதிர்முலைச்சுகன்னிகைதான்
தோராதிழைத்தபிழைசெப்பினளவ்வேந்தனுக்கே.

ஓராது - ஆராயாமல். (௧௧)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

சாற்றுதல்கேட்டவேந்தன்சவனனைவணங்கிப்போற்றிக்
கோற்றொடியறியாள்செய்தகொடும்பிழைபொறுத்தியென்று
மாற்றருந்தவத்தோனின்சீர்மகளையான்மணக்கும்வண்ணம்
நாற்றிசைபுகழுமேந்தானல்கெனநவிற்றினானால்
ஏந்தால் - அரசனே (கஉ)

முனிவரன்மொழிந்தவண்ணமுகிழ்நகைத்துவர்வாய்மைக்கட்
கனிமொழியணங்கைவேந்தன்காதலோடளித்தானற்றோர்
பணிமலர்க்கண்களெல்லாம்பளகறத்தெரிந்தவாறும்
புனைகழல்வயவரோடுபுரவலனகரம்போந்தான்
அளித்தான் - கொடுத்தான். (கங)

தவம்புரிசவனனென்போன்றையலோடனையனாகி
அவம்புரியுருவாகாதாலமுதுருகாமன்வேட்டும
நவம்புரியிளமையினண்ணறுகலவேண்டுமென்னச
சிவம்புரிபரியின்பேர்ப்புத்தேளிரைக்கருதவந்தோர்.
பரியின்பேர்ப்புத்தேளிர் - அசுவினிதேவர் (கச)

வந்தனரவரைநோக்கிமகத்தினிலுமக்குநாங்கூறு
தந்திடுவேனென்றேற்புத்தவிராநீரிளமையல்கின்
சுந்தரப்புலவீரென்றுதுதித்தனன்வணங்கலன்றோர்
அந்தணப்பெரியோராற்றம்போலழகுறவாக்கினாரால்.
மகத்தினில் - யாகத்தில். (கரு)

மூவருமுருவமொத்துமுன்னுறமயங்கிநோக்கிப்
பாவைதன்கற்பினாலேபதியையேயதியென்றாற்றாள்
தாவிலாத்தவத்தோன்வேள்விசார்பரிப்பெயர்சேர்தேவர்
தேவரோடிருந்துமாந்தச்செய்தவிவழங்கினானால்.
பதியையே - கணவனையே (கசு)

மகத்தினிற்கூறிலாதவயித்தியராயதேவர்
சகத்தினிற்சவனன்வேள்விசார்ந்தவிநுகர்தலகண்டு
அகத்திடைவெகுண்டுபொங்கவருந்தலைதுணிப்பெனென்றுப்
பகைத்திறலிருக்கும்வெய்யபடைபுரந்தரன்கைக்கொண்டான்.
வயித்தியராயதேவர் - அசுவினிமருத்துக்கள். (கஎ)

முத்தழல்வளர்க்குமந்தண்முனிவரன்குலிசங்கொண்ட
தத்தொளிப்புனிதன்றன்றடக்கரம்வழங்காவண்ணம்
அத்தலைநிறுத்தலோடுமமரரோடன்றேனோர்ந்து
மெய்த்தவன்வேள்விவாழ்த்திவிண்ணகத்தேகினானால்.
குலிசம் - வச்சிராயுதம். (கஅ)

அன்றுதொட்டவனிமீதேயாற்றுநன்மகங்கடோறும்
குன்றெறிகுலிசனாதிக்கொற்றவானமரரோடும்
சென்றவிக்கூறுபெற்றார்திகழ்பரிப்பெயர்கொடேவர்
ஒன்றியதவத்தோனில்லாவொருமுவாந்துறையுநாளில்.

குலிசனாதி - இந்திரன்முதலாகிய (௧௯)

காணுறைமுனிவற்கீந்தகனிபொழியனையகைக்காண்பான்
மாநிலம்புகழ்சையாதிமன்னவனுயருமேவிந்த
தேனிமிரலங்கன்மாலைதிகழ்ந்தருமதன்கொலென்ன
வானநல்லெழின்மிக்கானைமன்னர்துறைமகளைக்கண்டான்.

காண்பான் - காண. (௨௦)

உன்னைமுன்மணந்துநின்றவுடனமுதார்முனியைநீத்துப்
பின்னுமிவ்விளைஞற்சேர்ந்தமடநடையைப்பிழைசெய்வண்ணம்
என்னைகொலென்னவன்றுரிவைநீவாறியம்பக்கேட்டுப்
பன்னருமுவகைபூத்துப்பார்த்திபனசரஞ்சேர்ந்தான்

நீத்து - விட்டு, உவகை - சந்தோஷம் (௨௧)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கொண்டல்கண்படைகொடண்டலைநகரந்தலைவுசையாதிமுன்னுயிர்த்த
எண்டிசைப்புகழாநத்தனென்றிசைப்போனிறைவதன்றன்னையீன்றெடுத்தான்
வண்டிமிர்தொடையல்வளையுமவ்வேந்தனையயனருமிறைவதிதனையளித்திவ்
வொண்டொடிமலர்க்கையணங்கினையெயருக்குதவுதுமெனநினைந்துறைந்தான்.

கண்படைகொள் - நித்திரைசெய்கிற. (௨௨)

எரிதவழ்வடிவேலிறைவதன்றவிரேவதிதனைக்கொடுசெய்ய
மறைமலரண்ணலுலகினையடைந்துபாடகயாழினோர்பாடும்
ஒருகணங்கழியவணங்கையாகளிப்பனென்றனுமகழிந்தபலவூழி
இருநிலவரைப்பினின்குலவேந்தரில்லெனமலரவனிசைப்பான்.

மறைமலரண்ணல் - பிரமன் (௨௩)

அலைப்பெருங்கடல்சூழ்தறைப்பொறைதவிரக்குமலப்படையவற்குநீயீன்ற
குலக்கொடிதன்னையருளெனவுரைத்தகொழுமலரண்ணலைப்பரவிச
சிலைத்தழும்பிருந்ததிணிபுயன்மீண்டுதென்னிலாமுகிழ்நகைத்துவர்வாய்
மலர்க்கருங்குழலைமடற்பனையுயர்த்தமதிநிறப்பெருமனுக்களித்தான்.

பொறை - சுமை, அலப்படையவன் - பலராமன். (௨௪)

திதலைவெம்முலையாடிருவுருச்சாலத்திகழ்த்தாங்கண்டிருந்தமையால்
கதிர்மணிக்கலன்சேர்கமுகுறழ்கழுத்திற்கைப்படைநீட்டினன்வணக்கி
மதியெனமருளுமணிநிறவள்ளன்மணத்தினன்மலர்த்தொடைசூட்டத்
ததைமலர்க்குழலாள்சமவுருவாகித்தயங்கினளுவகைகொண்டிருந்தாள்.

திதலை - தேமல். (௨௫)

கலிவிருத்தம்.

வம்புலாந்தொடைமன்னவற்கம்முனி
உம்பர்நாடிவணங்கவுவந்தருள்
எம்பிரானடியெய்தியவண்புகழ்
அம்பரீடனருங்கதைசொல்லுமால்

வம்பு - வாசனை. (உக)

சையாதி கதையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — ௪௦.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்

மூன்றாவது

## அம்பரீடன் கதையுரைத்த வத்தியாயம்.

கலிநிலைத்துறை

நவின்றவம்மனுவுயிர்த்தசீர்நபகனென்னுமரைப்போன்
கவின்மெய்ம்மேவொளக்குமாரனாகனையளித்தான்
தவஞ்செய்தன்னவனம்பரீடன்றனைத்தந்தான்
பவங்கடீர்த்தவன்றிருமால்பதம்பணிந்தான்

கவின் - அழகு, பவங்கள் - பிறவிகள் (க)

தலையினாற்பரந்தாமனற்றிருவிணைபணிந்து
கலையினாற்சொலுமவன்புகழ்காதுகொண்டருந்தி
நிலையினாழியானுறைதரநெஞ்சிலுன்னினைந்து
சிலையினாற்றருவாற்செயுஞ்சினகரஞ்சூழ்ந்தான்

கலையினால் - நூல்களால், சினகரம் - கோயில் (உ)

கையினாலரிபூசனைகாதலித்தியற்றி
மெய்யினாற்றிகழ்நாவினனாமமேவிளம்பி
வையமேமுதலாய்வரும்பொருளெலாமாலோன்
பொய்யிலாவுருவெனுமவன்புலமையார்புகல்வார்

காதலித்து - விரும்பி (௩)

அரியமாதவவசிட்டனேயாதியந்தணரால்
புரவிவேள்விகள்பயன்விழையான்பலபுரிந்து
மருவுமேழ்பெருந்தீவுமோர்மதிக்குடைநிழற்றி
உரைசெயிந்திரபோகமுற்றவனதனுரவோன்.

பயன்விழையான் - பயனைவிரும்பாமல் (௪)

வினையினோர்முனிவெகுண்டவற்கியற்றியசாபம்
அநகனாழிவந்தகற்றியவிவ்வுலகளித்தான்

எனலுமன்னதிங்கிசைத்தியென்றேந்தலும்மியம்ப
முனைவனம்மதுவிரித்தனன்மொழியலுற்றனனால்.

வினையின் - வினவயத்தால், விரித்தனன் - விரித்து. (ரு)

திங்கடோறும்வந்துறுமரிதினத்துணவொழித்தே
எங்கணுயகற்போற்றியீராறெனுந்திதியில்
துங்கநான்மறையோர்க்கெழிற்றொறுநிரையுதவி
அங்கருந்தவர்க்குணவளித்தருந்துவனரசன்.

திங்கள் - மாசம், ஈராறெனுந்திதி - துவாதசி, தொறுநிரை - பசுமந்தை. (சு)

இன்னவாறுசெய்தொழுகுவோனீராறுதிதியோர்
கன்னலென்னவங்குற்றநாட்கலைவலோர்தொடாப்
பன்னுசீர்த்துருவாசனும்பண்ணவனணுக
அன்னநீயிவணருந்தெனவருந்தவனேர்ந்தான்

கன்னல் - கடிகை, நேர்ந்தான் - இசைந்தான். (எ)

கடிகையொன்றினுளருந்திடவேண்டுநீகடிது
படிசொலும்புகழ்யமுனையிற்படர்ந்துநீர்படிந்திங்
கடியன்புன்குடில்டைதியென்றரசனுங்கறைந்தான்
நடைசெய்மாதவனன்றெனநடந்தனனன்றே.

நீர்படிந்து - நீரில்மூழ்கி. (அ)

ஈரமார்புனன்மூழ்குவானேகியமுனிவன்
சேர்கலாதொருகன்னலுநதீர்ந்ததென்றரசன்
ஓரிவண்டுபாத்தோடுணதுறுபலனளிக்கும்
நீரின்பாரணைநன்றெனநீர்நுகர்ந்தனனால்.

நீரின்பாரணை - நீருண்டுபவாசமுடித்தல். (கூ)

விதியினாற்புனலருந்தியபின்முனிமேவி
அதிதிபூசனையாற்றுவன்முனமெனவறைந்து
பதிதனாகிமுன்பாரணைபுரிந்தனையென்னென்
றுதிரம்போன்றிருகண்சிவப்புறமுனிவுற்றான்.

ஆற்றுவன் - செய்வேன், பதிதனாகி - பாவியாகி (க0)

சீற்றமோடவன்செஞ்சடைநிலத்திடையடித்தங்
காற்றலோடுகைவாளொடுமார்த்தொருபூதம்
தோற்றநீயிவனுயிர்தொலைத்தேகெனச்சொற்றான்
மாற்றருஞ்சினத்ததுவரவுடைந்திலன்மன்னன்.

சீற்றமோடு - கோவத்தோடு. (கக)

அடைந்தவாறெலாமணிமணிப்பஃறலையரவில்
கிடந்ததொன்முதலறிந்துதன்னாழியைக்கெழுமி

உடைந்திடாதநம்மன்பனைக்காத்தியென்றுரைப்ப
நடந்தங்காழிவெங்குறளுயிர்நலிந்தொருக்கியதே.

பஃறலையாவில் - ஆதிசேடன்மேல், குறள் - பூதம். (௧௨)

பூதமாய்ந்ததுகண்டருந்தவன்பொருக்கென்ன
ஓதுநாற்றிசையெங்கணுமோடினனோடச்
சோதியாழியும்வீட்டியபின்றொடர்ந்தேகப்
போதமாதவன்வடவரைமுழைஞ்சுபுக்கொளித்தான்:

(௧௩)

அங்குவந்தடைந்துருத்திடவருந்தவனோடிப்
பொங்குசீரயனுலகுபுக்கவற்கதுபுகல
எங்குமாயவனாணையார்மாற்றுபவரென்றனச
சங்கரன்பதஞ்சார்ந்துரைத்தனன்றுயர்தாழ்ந்தே.

மாயவனாணை - திருமாலின்கட்டளை. (௧௪)

மாயனாழியைமாற்றவல்லுநரெவர்மதிக்கின்
தாயினன்புடைத்தற்பரனேதடுத்தாளும்
நேயமோடவனேகதியெனவரனிகழ்த்தப்
போயினான்றிருவைகுந்தம்பொருந்தினன்புகழ்ந்தான்

வல்லுநர் - வல்லவர் (௧௫)

மருவுமாயனைவணங்கினன்வாழ்த்திமாதவத்தோன்
அரியநின்னுடையன்பனுக்கறிவழிந்தடியேன்
புரியுந்தீங்கினைப்பொறுத்தீயருள்கெனப்போற்றத்
திருவினாயகனருந்தவற்கருண்மொழிதெரிப்பான்.

அறிவழிந்து - அறிவுகெட்டு, புரியும் - செய்த. (௧௬)

மன்னுமன்பாதமுள்ளமென்னிடத்திடைவதியும்
என்னதுள்ளமுமன்பர்தம்மாலியைந்திருக்கும்
அன்னதன்பரதீனமில்லாதிலையலர்மேல்
பொன்னினும்மெனக்கினியவரவர்களேபுகலின்

வதியும் - தங்கும், பொன்னினும் - திருமகளினும் (௧௭)

சுற்றமாதிப்பொருள்களும்பொய்யெனத்துணிந்து
மற்றென்பாதமேமனக்கொளுமவர்க்கிடர்மருவின்
உற்றுநீக்கிடாதுறைதுமோவன்பர்பாலுவந்து
பெற்றகன்றுகாண்கறவையிற்பெட்புறுமுள்ளம்.

கறவையின் - கறவைப்பசுப்போல. (௧௮)

அன்பருக்கருந்துயர்செயவடைந்தகிவங்கொடியோர்
மன்பெருந்துயருறுவதுமதித்திடல்வழக்கே

உன்பெருந்துயராசனேயொழிக்குமற்றவன்றான்
நன்குநின்சிரம்பொறுத்திநற்றவவெனநவின்றான்.

பொறுத்தி - தாங்கக்கடவை (௧௯)

சொன்னவாசகங்கேட்டலுமாயனைத்தொழுது
மன்னன்றண்முடிமருவினன்வணங்கினன்வழுத்த
என்னபாவம்வந்தியைந்ததிங்கெனக்கெனவாசன்
துன்னியாழியைத்துதித்தனன்பன்முறைதொழுதே.

ஆழியை - சக்ராயுதத்தை. (௨௦)

அரசன்வாழ்த்தலுமாழியம்முனிவனையடாது
விரைவிற்போயறவாழியந்தணன்காமேவப்
பருவமொன்றணவின்றியேவரவுபார்த்துறையோன்
உரைசெய்மாதவற்றொழுதுணவருத்தினனவர்தான்.

அடாது - கொல்லாமல். (௨௧)

கலிவிருத்தம்

அரியமாதவனுழியடர்த்தலால்
பருவமொன்றுபடாவிவ்வாறவன்
வரவுநோக்கியேவைகியமன்னவன்
உரையருந்தவனுணடபினுண்டனன்

அருந்தவன் - அருந்தவத்தினன், (துர்வாசன்). (௨௨)

கனிவருந்தியோராண்டுநன்பாரணைப்
புனலருந்திப்பொருந்துமவ்வேந்தைவெம்
முனிபுகழ்ந்துநன்காசிமொழிந்தபின்
தனிவிசும்புறச்சார்ந்தெழுந்தானரோ

புனலருந்தி - நீருண்டு, ஆசி - வாழ்த்து. (௨௩)

மூன்றுமைந்தர்கசேதுமுகலினர்
தோன்றினாரவர்தொல்லுலகாளுவான்
சான்றசெம்பொற்கதிர்முடிசூட்டியே
யான்றெடும்வனத்தேகினன்மன்னனே.

ஆளுவான் - ஆள. (௨௪)

அந்தமன்னனடைந்தனன்முத்தியின்
மைந்தர்தம்மரபுந்தழைத்தோங்கின
இந்தமாக்கதைகேட்கவியைந்திடும்
சிந்தையோர்திருமால்பதஞ்சேர்வரே.

மரபும் - சந்ததியும். (௨௫)

என்றுகூறியகலிக்குவாகுவின்
துன்றுசீர்மரபும்மினிச்சொல்லுவாம்

நன்றுகேட்கெனநான்மறையந்தணன்
வென்றிவேலரசுக்குவிளம்புவான்.

இகல் - வலி. (௨௯)

அம்பரீடன் கதையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — ௯௯

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்

---

## நான்காவது.

## இக்ஷ்வாகுவின் கதையுரைத்த வத்தியாயம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சொல்லுமாமறையுமுன் பயம்பெறுங்காலைச் சுடர்விரிமூக்கினின்றுதித்த
நல்லெழிலிக்குவாகுவென்றுரைபெறுமானவையறவுரைத்தமைந்தர்கடாம்
செலலுறழ்தடக்கைவிகுக்கியாதிகருணுசிர்சேர்நிமிதண்டகன்முதலாம்
எல்லையிறிறலார்நூற்றுவரென்பாரியம்புமன்னோர்களின் விருப்பு.

கலை - குற்றம், செல் - மேகம். (௧)

தாதைதன்சொல்லாற்றென்புலத்தோர்க்குச் சராற்றியகடன்கழிப்ப நற்றா
மேதகுகான்போய்வியன்சசமுதலாவேண்டியவுணவெலாம்வெளவிக்
காதல்வெம்பசியிற்சிலமுயலருந்தி நகுழியுந்தனகொணர்ந்திடலோக்கி
ஓதியவசிட்டனோர்ந்திதுசேடம்பிதிர்யகக்குறுதெனவொழித்தான்.

சசம் - முயல், பிதிர்மகக்கு - பிதிர்யாகத்துக்கு (௨)

ஒழித்திடுங்குருவைமுனிந்துதன்றாதைபொருவனைத்தேதெனமேய்ந்த
இழைத்தசோர்தொழிலாற்சசாதனென்றெவருமியம்பவாங்கிருந்துபல்பருவம்
கழித்தபின்றாதைவிண்ணகங்கடப்பக்கதிர்முடிபுனைந்துலகளித்துத்
தழைத்தெழுமன்பாற்புரஞ்சயனெனுமோர்தநயனையுயிர்த்தனனன்றே

பருவம் - வருடம், தநயன் - புதல்வன். (௩)

இயம்புமம்மன்னன்ககுத்தனென்பெயருமிந்திரவாகநனெனுமோர்
வயன்றருபெயருமடைந்தனனடைந்தவாறன்காரணமென்னின்
தயங்கொளிவிண்ணோர்தானவர்வெருட்டித்தமனியப்பதியிழந்தோடி
அயன்றொழுந்திருமாலடியிணைவணங்கவன்னவனமருக்கறைவான்

எவன் - யாது, தமனியப்பதி - பொன்னுலகு. (௪)

புரஞ்சயனிடத்தெம்மொருகலைபொருந்தும்புரஞ்சயனுற்புலவீர்காள்
பரிந்துதானவர்போரிகலழிந்திரியப்பசும்பொனுடைதிரென்றுரைப்ப
விரைந்துவிண்ணவரவ்வேந்தனையடைந்துவிளம்பினர்தந்துயர்விளம்ப
வருந்துதலொழிப்பன்வாசவனெனக்குவாகனமாய்வரினென்றான்.

புலவீர்காள் - தேவர்களே, இகலழிந்து - வலிகெட்டு. (௫)

இந்திரனவ்வாறியைந்தொருவிடையாயேந்தலெவரிநிடைத்தரிப்பப்
புந்திநொந்தவுணரிரிதரப்பொருதுபுரஞ்சயன்பொன்னுலகளித்தான்
நந்தலின்றமரர்புரந்தரனோடுநண்ணினருவந்துவீற்றிருந்தார்
அந்தநல்விடையின்முரிப்புறைந்ததனாலன்னவன்ககுத்தனென்பெயரும்

விடை - எருது, வெரிந் - முதுகு, முரிப்பு – முசுப்பு (௬)

நாற்றிசைபுகழுமிந்திரனென்பானண்ணலாபபோர்தெறவேண்டி
ஏற்றுருவெடுத்தங்கேந்தலாலொருபேரிந்திரவாகனனென்றும்
சாற்றிடவடைந்துதரைமுழுதளித்துத்தரியலரடிதொழுதேத்த
ஆற்றல்சேயென்னவேனசாம்வேந்தையளித்தனனன்பொடுமன்றே.

நண்ணவர் - பகைவர், ஏற்றுரு – எருதின்வடிவு, தரியவர் - பகைவர். (௭)

அன்னவன்புதல்வன்பிருதுவென்றுரைப்பானறைந்தவிப்பிருதுவின்மைந்தன்
மின்னகுசுடர்வேல்விரும்பலர்புகழும்விசுவகந்தன்மற்றவன்சேய்
பன்னுசபத்தனெனவுலகேத்தும்பார்த்திபனவன்றரும்பாலன்
துன்னலர்பராவும்பிரகதச்சுவனுஞ்சொல்லுமன்னவன்பெறுந்தோன்றல்

விரும்பலர் - பகைவர். (அ)

குறுகலர்பராவுங்குவலயாச்சுவனுங்கூறுமக்குவலயாச்சுவன்றன்
சிறுவர்மூவேழாயிரர்தமையளித்தசிறுவாகூழ்வாமுனமெழாது
கறுவொடுமெதிர்ந்ததுந்துவென்றுரைக்குங்காலவேலசுரன்முன்கலப்ப
முறுகுவெஞ்சினத்தோனுயிர்ப்பின்வெங்காற்றான்முருகினன்மைந்தரைமாதோ.

குறுகலர் - பகைவர் (௯)

மைந்தரோர்மூவரன்றியெல்லோருமாய்ந்தனரெனமனம்வெகுண்டு
துந்துவையரசன்செகுத்தனனதனாற்றுந்துமாரப்பெயர்பெற்றான்
உய்ந்தவம்மைந்தர்மூவரினெழில்சேர்ந்தொளிபெறுதிடச்சிவனுயிர்த்தான்
அந்தமில்புகழ்சேரரிச்சுவன்றன்னையவனிரும்பனையளித்தனனால்

உயிர்த்தான் - பெற்றான் (௧0)

நிகும்பனென்றுரைப்பான்பரிகிருச்சுவனைநேரலர்வணங்குறவுயிர்த்தான
மகம்புரிந்தோங்குமன்னவனளித்தமகன்கிருசாச்சுவனவன்சேய்
சகம்புகழ்சேனசித்தெனவுரைப்பர்சாற்றவன்றநயன்விண்ணுயர்ந்த
நகம்புரைபுயத்திண்வலியைநண்ணலருநவில்யுவனாச்சுவனன்றே.

நேரலர் - பகைவர், நகம் - மலை. (௧௧)

வீறுசேர்யுவனாச்சுவனெனும்பெயரான்மேதினிபுறந்தருநாளின்
கூறுமோர்மகவும்பெற்றிலனாகிக்குலவுநல்லெழிநிகழ்மனையார்
நூறுபேரோடுகானகங்குறுகநுவலருந்தவத்தினர்நோக்கி
மாறிலாவரசுக்கொருமகவுதிப்பமகத்தையவ்வுழிவளர்த்தனரால்.

கானகம்குறுக - காட்டையடைய. (௧௨)

வெந்திறல்வேந்தனுண்ணுநீர்வேட்டுவிழுத்தவர்துயிலுநள்ளிரவின்
சுந்தரமதலைதோன்றுதற்பொருட்டாத்துகளிலாச்சாலையிலமைத்த

மந்திரப்புனலார்குடத்தினீரெடுத்துமாந்தினன்மாந்தியபின்னர்
அந்தணரறிந்தாங்கரசவுன்வயிற்றிலருமகவுதிக்குமென்றறைந்தார்

வேட்டு - விரும்பி, தள்ளிரவு - நடுராத்திரி. (கங)

அரசனுமிறவாவண்ணமாலருளாலன்னவனகடுகீண்டெழுந்தான்
இருமுலைப்பாலுக்கேக்கறுவண்ணமிந்திரன்மகிழ்வொடுமாங்கு
மருவிமாந்தாதாவெனும்பெயர்வழங்கிமணிவிரலாலமுதளிப்ப
ஒருதினத்துலகமுவப்புறவளர்ந்தகொள்ளொளிதழைந்தபைங்குழவி.

அகடுகீண்டு - வயிற்றைக்கிழித்து. (கச)

வந்தெழுமாந்தாதாவெனும்பெயரோன்வையகம்பொதுவறப்புரந்து
விந்தைசேர்புயத்தானெனுஞ்சசிவிந்தின்வீறுசான்மகள்விந்துமதியைக்
கொந்தவிழலங்கல்சூட்டினன்வேட்டுநலவெழின்மைந்தர்மூவரையும்
செந்தளிருருவத்தைம்பதெண்ணினராஞ்சேயிழையாரையுமளித்தான்.

புரந்து - காத்து. (கரு)

ஐம்பதுமகளிர்தம்மையுந்தவஞ்செயத்தன்னன்சவுபரிவேட்டான்
என்பதைவிரிக்கின்யமுனைமாநதியினிரும்புனன்மூழ்கினனெடுநாள்
மண்பெருந்தவஞ்செய்காலையம்முனியன்வயங்குமீனினங்களோர்கடும்பாய்
முன்பொருந்துதல்கண்டன்னவாறுறையமுன்னினனரசன்மாட்டடைந்தான்.

கடும்பு - உறவு. (கசு)

கலிவிருத்தம்.

அரசன்முன்னமருந்தவனெய்தித்
உரைசெயுந்தவப்பேற்றினுயிர்த்தநல்
திருவன்னாரிலோர்சேயிழைமங்கையைத்
தருதியென்னவவ்வேந்தனுஞ்சாற்றுவான்.

தவப்பேற்றின் உயிர்த்த - தவப்பயனாற்பெற்ற. (கஎ)

பெற்றகன்னியர்பெட்புறுவாரெனின்
மற்றவர்க்குமணத்தின்வழங்குதல்
கொற்றமன்னர்குலத்தொழிலென்றனன்
உற்றவனுருவின்மையுணர்ந்தரோ.

பெட்புறுவாரெனின் - விரும்புவராயின். (கஅ)

சொல்லக்கேட்டசவுபரிதோன்றலே
நல்லனீதிநவின்றனைகன்னியர்
வல்லையேவரனென்னவரித்திடின்
ஒல்லுமோநினக்கீவதுரையென்றான்.

வரன் - நாயகன். (ககூ)

என்றலுந்தவத்தோனையவ்வேழையர்
ஒன்றுகின்றவுறையுளினுய்த்தவர்

நன்றுரைத்ததிறனவிலென்றுமுன்
நின்றகஞ்சுகியோடுநிகழ்த்தினன்.

கஞ்சுகி — சேவகன். (உ0)

அரசுரைத்தவவ்வாறவன்சென்றனன்
மருவுமிவ்வுருமாண்பிலதென்றுவிட்
டிரதிகாந்தனுமேக்கறவின்னெழில்
உருவுகொண்டவனுற்றனனெனுண்டவன்.

இரதிகாந்தன் - மன்மதன். (உக)

மங்கைமாரொடுமன்னன்விடுத்தது
செங்கைவேத்திரன்செப்பலுமன்னவர்
இங்குவேளெழுந்தேயினனோவெனாத்
தூங்கமாதவத்தோன்றலைச்சூழ்ந்தனர்.

செங்கைவேத்திரன் - சேவகன் (உஉ)

வந்துமொய்த்தமடந்தையர்மாலையிச்
சுந்தரற்குநான்சூட்டுவன்சூட்டுவன்
முந்தவென்னைமொழிந்தனர்மொய்த்தனர்
அந்தவாறரசற்குரைத்தானவன்

மொய்த்த - நெருங்கின. (உங)

கேட்டலோடுங்கிளர்ந்தமுனிவனை
வேட்டவைம்பதுமெல்லியலாரையும்
வாட்டநீங்கியமாதவன்காலினீர்
ஆட்டிநல்கினனன்புடைவேந்தனே.

வேட்ட - விரும்பின. (உச)

மணஞ்செய்மங்கையர்தம்மொடம்மாதவன்
கணஞ்செய்மாமணியாற்கனகத்தினால்
நிணஞ்செய்வேன்மயனெஞ்சினியற்றிய
குணஞ்செய்மாடங்குடிபுகுந்தானரோ.

மயன் - தெய்வக்கம்மியன், நெஞ்சினியற்றிய - மனத்தாற்சிருஷ்டித்த. (உரு)

இல்லின்வாழ்க்கைக்கியைந்திடும்பல்பொருள்
ஒல்லைவந்துறவைம்பதுருக்கொடு
சொல்லுமாதவன்றோகையர்தம்மொடும்
புல்லியன்புபொருந்தினன்வைகுநாள்.

ஒல்லை - விரைவாக. (உசா)

மடந்தைமாரைவனத்திலம்மாதவற்
றொடர்ந்துபோமெனச்சொல்லினன்னவர்

நடந்தவாறெவனுடுமெனன்றெழுந்
தடைந்தனன்மகவாசையின்மன்னவன்
மகவாசையின் - மகனாசையால். (உஎ)

உற்றமாதருவப்பினிலுறைந்தியந்
தற்றவன்செயல்யாவுநவின்றனர்
அற்றமின்றியகமகிழ்ந்தோதாநகவக்
கொற்றமன்னவன்கொண்டனனற்புதம்
அற்றம் - முடிவு. (உஅ)

மைந்தரோடுமகளிர்கடம்மொடும்
அந்தமைந்தரளித்தவர்தம்மொடும்
பந்தமோடுஞ்சவுபரிபல்பகல்
நந்தலின்மகிழ்கூர்ந்தவணமண்ணினன்
பந்தமோடும் - சுற்றத்தாரோடும். (உகூ)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இன்னணங்காமநுகர்ந்தவணிவைமுன்யமுனையின்மீற்றிரளொன்ன
மன்னுதற்சங்கத்துற்றவென்றெழித்துவனத்திடைப்புகுந்துபோய்மாயோன்
தன்னைநன்குணர்ந்துதவம்பலவாற்றித்தணப்பிலாமுத்தியென்றடைந்தான்
பன்னியர்தாழும்வனத்திடைப்படர்ந்துபரமவீடெய்தினர்மாதோ
மீற்றிரள் - மீன்கூட்டம், துனைந்து - விரைந்து (ஙO)

இக்குவாகுவின் கதையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—கூங

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்

---

## ஐந்தாவது

## அரிச்சந்திரன் கதையுரைத்த வத்தியாயம்



அறைதருமாந்தாதா னமுயிர்த்தோனம்பரீடன்புருகுச்சன்
நெறியுறுபுகழ்சார்தருமுசுகுந்தனிகழ்ந்ததும்பூவரின்முன்னோற்
குறைவறுகுணஞ்சாலொருமகவென்னக்குலவியபிதாமகனுதும்
முறைமையின்யுவனாச்சுவனெனுநாமன்மூதுலகிற்பெறீஇசிறந்தான்.
நாமன் - பெயருள்ளவன். (க)

அழகுறும்யுவனாச்சுவனெனும்பெயரானரிதனையளித்தனனரிதன்
விழைவொடுமரிதன்றனையுயிர்த்தான்விளம்பியபுருகுச்சனென்போன்
பொழிகதிர்மணிசூழ்பாதலங்குறுகிப்புயங்கவேந்தரைநணிசினக்கும்
ஒழிவறுபகைஞர்யாரையுமொறுத்தானுரகருமுளமுவந்தனரால்.
புயங்கவேந்தர் - நாகராஜர். (உ)

உரகருந்தம்மி னுடன்பிறந்தவளாமொருநருமதைதனையளிப்ப
விரிமலர்த்தொடையலரசனுமணந்துவிளங்குதன்பெயர்மொழிந்தவர்க்கும்
அரவினின்வெருவுளடைந்திடாவரமுமடைந்துலகொருகுடைநிழற்றித்
தரியலர்புகழுந்திரசதசியனுந்தநயனையுயிர்த்தனனன்றே.

தரியலர் - பகைவர். (௩)

பற்றலர்பரவுங்கொற்றமேலன்னோன்பரவுகுச்சன்றனையுயிர்த்தான்
முற்றிழைமகளிர்முகமெனமுளரிமுகைமுறுக்கவிழ்ந்திதழ்விரிக்கும்
அற்றமில்வளஞ்சான்மருதவைப்புடுத்தவயோத்திநாடாளுமவ்வண்ணல்
வெற்றிசேரநரண்ணியனெனவிளம்பும்வேந்தனையளித்தனனன்றே

பற்றலர் - பகைவர். (௪)

தசமுகன்றன்னாற்சமர்க்களத்திறந்ததருக்கரநண்ணியன்றநயன்
வசையறுமரியச்சுவனவன்மதலைவாழ்நருமருணன்மற்றவன்சேய்
திசைபுகழ்திரிபந்தனனவன்சிறுவன்றிகழ்திரிசங்குவின்றாதை
விசயம்வந்தேத்திவிரும்பலர்வணங்கவிளங்குமேவற்சத்தியவிரதன்

சமர்க்களம் - போர்க்களம். (௫)

சத்தியவிரதன்யேய்திரிசங்குசதுமறைவசிட்டனாற்கான்போய்ச்
சித்தநொந்திகழும்பூரியனாகிச்செய்தவக்கோசிகனருளால்
கொத்தலர்பசும்பொற்றருநிழல்குறுகக்குறுகலென்றமரராங்கொழிப்ப
விற்றகவீழுங்காலையம்முனிவன்விண்மிசைநிறுவினன்வெகுண்டான்

பூரியன் - நீசன். (௬)

கோசிகனருளாலின்னமும்விண்மேற்குலவுதல்யாவருங்காணத்
தேசொடுமுலவுகின்றனனன்னோன்சேயரிச்சந்திரனுமால்
ஆசறுமன்னோனிமித்தமாய்முன்னமருந்தவமுனிவசிட்டனுக்கும்
மாசில்கோசிகற்கும்வந்ததுசீற்றம்வானவருளமதிசயிப்ப

சீற்றம் - கோபம். (௭)

கலிநிலைத்துறை

ஆடல்வேலரிச்சந்திரனென்றுசொலரசன்
வாடியேமகவில்லனாய்வைகுமந்நாள்வாய்
நாடியாழிசைநவிற்றுறுநாரதனண்ணிப்
பாடுவார்புனற்கிறையைநீபணிகெனப்பணித்தான்.

புனற்கிறை - வருணன் (௮)

வருணன்வந்தொருமைந்தனைவழங்குவன்வழங்கும்
பொருவின்மைந்தனற்பசுவெனமகம்புரிவாய்கொல்
அரசவென்றவனியைந்தபின்னருள்புரிந்தகன்றான்
உரைசெய்வண்ணமவ்வேந்தனுமொருமகவுயிர்த்தான்.

மகம் - யாகம். (௯)

விரைவினிற்கொடுசாலைகமுன்விடுத்தனன்றாதை
புருடமேதமங்கியற்றினன்போக்கினன்பிணியே

புருடமேதம் - நரமேதயாகம். (கஎ)

மகமியற்றுழிமாதவக்கோசிகனேதா
பகையடக்கியசாமகன்பசுர்தருவசிட்டன்
சகம்வழுத்துமத்துவரியுபிருகுவாந்தவத்தோன்
புகழ்படைக்குமெய்ச்சமதங்கிபிரமனைப்புகல்வார்.

கோசிகன் - விசுவாமித்திரன். (கஅ)

வருணன்வெம்பிணிதீர்த்தனன்வழங்கினனாசுக்
கெரிபசும்பொலந்தேர்பகிழிநிரவிந்தானை
புரிமகத்தினிற்பசுவெனப்புகுஞ்சுனச்சேனன்
சரிதநல்லதுபின்னதுசாற்றுவன்றவதோனை

பொலந்தேர் - பொற்றேர். (க௯)

ஆழிசூழ்புவிபுகழரிச்சந்திரனணியாா
எழிரும்பொழில்காக்கெனமைந்தனையிருத்தித
தாழிருஞ்சடைக்கோசிகன்சாற்றுபோதத்தால்
ஊழிணண்முடிநதுவமொழித்துவீடுற்றான்

போதத்தால் - ஞானத்தால் (உ0)

அரிசசந்திரன் கதையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — கக௯

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.



## ஆறாவது

## சகரன் கதையுரைத்த வத்தியாயம்.



### கலிவிருத்தம்

அண்ணலரிச்சந்திரனளித்தமகிபென்ன
ஒண்ணிழல்பரப்புகுடைவேந்தருயிர்த்தான்
வண்ணவரைமார்பனரிதன்றலையவன்றான்
தண்ணறைதுளிப்பயருசயபனையளித்தான்

உயிர்த்தான் - பெற்றான். (க)

சம்பனெனுமன்னவனளித்ததநயன்சீர்
அம்புவிபரித்திடுசுதேவனவன்மைந்தன்
கம்பமதமாவிசயனென்பர்கலைவல்லோர்
உம்பர்புகழ்மன்னவனுயிர்த்தபுதல்வன்றான்.

பரித்திடு - தாங்குகிற. (உ)

டொப்பறுதுறக்கநகருற்றவனுவந்தான்
எப்பநிடந்தயமென்றரசர்நாட.

அயம் - குதிரை (௧0)

வேறு.

அறுபதினாயிரராசன்காதலர்
எறிதிரைசூழ்புவியெங்குநேடினா
மறுவறுவேள்வியின்வாசிகண்டிலர்
நிறைகடலிதுவெனநிலந்தொட்டுண்டனா.

வாசி - குதிரை. (௧௧)

தோண்டினர்நிலத்தினைத்துருவிப்பாதலத்
தீண்டினர்வடகிழக்கிருந்தமுதனை
மாண்டமாதவத்தினர்மாயனென்னவே
காண்டகுமுனிவனைக்கண்ணுற்றாரரோ,

துருவி - தேடி. (௧௨)

கண்டனர்கலினமாக்கபிலன்மாட்டுநீ
கொண்டனையோவெனக்கொடியவெவ்வுரை
விண்டனர்முனிவனைவெகுளிதீயையும்
உண்டனர்நீறெனவுடலமுற்றனர்.

கலினமா - கடிவாளம்பூட்டின குதிரை (௧௩)

உற்றதுதூதரினுணர்ந்துமன்னவன்
அற்றமில்புகழ்தருமஞ்சுமானெனப்
பெற்றிடும்பெயரொருபேரன்றன்னை நீ
கொற்றவெம்பரியிவட்கொணாகென்றோதினான்.

அற்றமில் - முடிவில்லாத. (௧௪)

என்னலுமன்னவனெழுந்தவ்வேந்தனை
முன்னுயிர்த்தவன்றிறமொழிதியென்றலும்
மன்னவனுளங்கொளவழங்கினான்றவம்
துன்னியமுனிவரன்சுகனென்பானரோ.

உயிர்த்தவன் — பெற்றவன் (௧௫)

சகரனென்றுரைதருதாமவேலினான்
துகளறுமெழிற்சுகேசினியைத்தோய்ந்துபார்
இகழசமஞ்சதனென்னுமைந்தனை
மகவெனவுயிர்த்தனன்மகிழ்ந்துமன்னமே.

துகள் - குற்றம், தோய்ந்து - கூடி. (௧௬)

அன்னவனஞ்சுமானையவண்ணலை
உன்னியமகவெனவுயிர்த்துவைகுநாள்

முன்னுறுபிறவியின் முயன்றயோகத்தால்
துன்னியகான்செலத் துணிந்தமன்னவன்.

கான்செல — காட்டுக்குப்போக (௧௭)

தாதைதன்னருளினன் வனத்திற்சார்வதிங்
கோதியவறனென வுடன்சென்மைந்தரைத்
தீதகல்சரயுவிற்செலுத்திமாய்த்தனன்
பேதைமையோவெனயாரும்பேசவே

சரயு - சரயுநதி. (௧௮)

எய்தினர்சகரன்மாட்டேவருந்தின்மகன்
செயதிறங்கேட்கெனப்பொருமிச்செப்பலும்
வைதனன்மைந்தனைவனத்துப்போகினன்
பொய்தபுகாட்சியன்போதுமெல்லையின்.

பொருமி - அழுது, எல்லை - சமயம். (௧௯)

தாவிலாச்சரயுவின்றண்ணளினைவீடினா
ஆவிபெற்றெழுந்திடவருளிப்போயினன்
காவலனுய்ந்தவாக்கண்டுகானபுக
ஏவினனெனத்துயரெய்திநைகின்றனை

வீடினர் - இறந்தவர் (௨௦)

அத்தகைமன்னவனளித்தவஞ்சுமான்
தத்தொளிப்பூணினன்சகரனேவலால்
மத்தவெங்கரியெனநடந்துவாம்பரி
உத்தமகபிலன்மாட்டுறைதனோக்கினன்

அளித்த - பெற்ற (௨௧)

தீங்கறுமுனிவரன்வெகுளித்தீயினால்
ஆங்கெரியுறுமுடலடலைநோக்கினன்
ஏங்கினன்கபிலனையிறைஞ்சியேத்தினன
நீங்கருநெடுந்தவனிகழ்த்தினனரோ.

வெகுளி - கோவம், அடலை - சாம்பல் (௨௨)

வரநதியிவணுறின்மாய்ந்தமன்னவா
திருவுறுபொன்னகாசென்றுசேர்குவா
குரகதம்வேள்வியிற்கொண்டுபோசெனப்
பரியொடவ்வேந்தனும்பதிபுக்கானரோ.

வரநதி - ஆகாயகங்கை (௨௩)

அண்ணலஞ்சகரனப்புரவிபுறறபின்
விண்ணவர்மகிழ்தரவேள்விமுற்றினன்
நண்ணினன்வனத்திடைநலஞ்செயஞ்சுமான்
கண்ணகன்புவியெலாங்காப்பநல்கியே.

புரவி - குதிரை. (௨௪)

சகரன் கதையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௧௪௦.

---

## ஏழாவது

## புகீர்தனைக் கதையுரைத்த வத்தியாயம்.

வேறு

மஞ்சுமான்மகந்துய்த்திடுமணவன்
மஞ்சுமானுமலரைந்தருவுகின
றஞ்சுமாநல்குமங்கையிணைபுகழ்
அஞ்சுமானரசாட்சியின்வைகுநாள்

மஞ்சு - மேகம், அஞ்சுமா - அஞ்சுமான (௧)

கழிந்ததாதையர்கற்பகநாடுற
இழிந்துகாளைவந்தெய்தியகாசற்காசினியம்
அழிந்தசிந்தையனாற்றவுநற்றிலன்
தழைந்தவெண்ணடிமைத்தகண்புனற்கங்கையாள்

கற்பகநாடு - சுவர்க்கலோகம் (௨)

அஞ்சுமானெனுமண்ணலளித்தசேய்
செஞ்சொனலெலோதத்திலீபனும்
கஞ்சநாண்மலர்க்கண்ணினனருடரும்
தஞ்சமாநதிநோக்கித்தவஞ்செய்தான்

கஞ்சநாண்மலர்க்கண்ணினன் - திருமால். (௩)

விழையுமாநதிமெய்த்தவஞ்செய்தவன
தொழுதுபோற்றலுநண்ணியதில்லையால்
மொழியும்வேந்தனுயிர்த்தனன்முன்னுவோர்
பழுதுநீக்குபகீரதன்றன்னையே

உயிர்த்தனன் - பெற்றான் (௪)

பாரளிக்குமப்பகீரதனப்பலபகல்
ஏரளிக்குந்தவநன்கியற்றலும்
தாரளிக்கும்பவன்செஞ்சடைவழி
சீரளிக்குநதிருநதிசேர்ந்ததால்.

பவன் - சிவன். (௫)

சேர்ந்துமன்னவன்றேர்முனஞ்செல்வழி
ஊர்ந்துபாதலத்துற்றுப்படிதலும்
போந்துமாமுனிபுங்கவன்சீறலால்
வீந்தவேந்தர்கள்விண்ணடைந்தார்களே

வீந்த - இறந்த. (௬)

எண்ணின் விடருளெய்பெருமான்றாழாய்க்
கண்ணியான்பதங்காண்டொழுகா கையான்
நண்ணினோர்பவந்தீர்க்குமாலதுசெயல்
மண்ணின்மேன்மதிக்கோதா கல்லழுக்கரோ.

பவம் - பாவம். (௭)

உலகந்தாயவுயரடிநின்றிழிந்
தலரின்மேலவனங்கைதவழ்ந்துபோய்
திலகவாணுதல்பங்கன்றிருச்சடை
சலவிவீழ்ந்தது தாங்கியிங்ஙனே

அலரின்மேலவன் - பிரமன், சலவி - நதி (௮)

சகம்விளங்கியதனைபுனற்கங்கையார்
அகமகிழ்ந்தவன்போயினை காணொளின்
பகரும்பூமிபரித்தபடியதனை
புகழையாவர்புகலவல்லார்களே

பரித்த - தாங்கின. (௯)

கலி நிலைத் துறை.

வரதமாகிவையகத்தினிதுறவருந்தி
விரதமாதவம்புரிந்தவம்மன்னவனைவிருப்பால்
சுருதனாகியதோன்றினோன்றினனவன்றோ
இரதமாதிநாற்றானைகாப்பாவானென்ப

வையகத்து - உலகத்தில் (௧௦)

எந்தத்தீபவதிபருமேகசருமனன்
இந்தத்தீவினிதோமபநாபாவரறநதான்
சந்தத்தீபமொதநிடரிருளகற்றிநற்குகாா
சிந்துத்தீபனைத்தந்தனன்செயபுமவ்வேதசன்

ஓம்ப - காக்க. (௧௧)

அரசர்போற்றயுதாயுவைபளித்தனனன்றேன்
இருதுபன்னனையேழுலகினைதொழுவீரன்
உரைசெயன்னவனோம்பு
மரபுளானவன்றன்னெ

உடுபதியோன் - சந்திரன். (௧௨)

இருக்குநாளினிற்கலிகடிந்திடுவதோர்விஞ்சை
மருக்கமழ்ந்ததார்நளனெனுமன்னனுக்குணர்த்திப்
பொருக்கெனச்செலும்புரவியினுளமறிவிஞ்சை
உரைக்குமன்னவனிசைப்பநன்குணர்ந்தனன்மாதோ.

புரவியினுளம் - அசுவ இருதயம். (௧௩)

இருதுபன்னனுமன்னவனினிதுவந்தீன்றான்
சருவகாமனைசாற்றமவ்வேந்தனுந்தரைமேல்
பொருதுதுன்னலரெவரையும்வெருட்டிவண்புகழே
கருதுமானவேற்சுதாசனைக்காதலித்தளித்தான்.

துன்னலர் - பகைவர். (௧௪)

சுதாசனென்பவனன்பினினீன்றவத்தோன்றல்
பதாரவிந்தம்வந்திறைஞ்சவெம்பகையெனுமிருளுக்
குதாசனன்றனைநிகாதருமானவேலுழவன்
மதாசலத்தினன்மித்திரசகனெனுமன்னன்.

மதாசலத்தினன் - மதமலையினையுடையவன், மதமலை - யானை (௧௫)

உரைத்தமன்னவனுவரிசூழுலகொருபுயத்தின்
பரித்துவண்டினங்காமரம்பாடிமட்டருந்த
விரித்தகிங்கிணிவாய்மலர்வேரியந்தொடையல்
தரித்தநல்லெழின்மயந்தினைமணந்துவந்தான்.

உவரி - கடல், மட்டு - தேன். (௧௬)

வேறு

என்மாடமோங்கவெழிலோங்குமயோத்திநாடன்
நன்மாடுபெற்றுநவைதீர்தானண்ணுநாளின்
சொன்மாடிருந்தருசாபந்தொடர்தலானே
கன்மாடபாதனெனும்பேரொடுகொளினுற்றான்.

நவை - குற்றம் (௧௭)

என்றாதரத்தின்முனிவேந்தனிசைத்தலோடும்
ஒன்றாதசாபமுரைசெய்தநனுற்றவாறென்
நன்றாகநீயிங்குரையாயெனநாமவேலான்
குன்றாதஞானக்கொழுந்தாஞ்சுகன்கூறலுற்றான்

ஆதரத்தின் - ஆசையோடு (௧௮)

பகீரதன் கதையுரைத்த வத்தியாயம முற்றிற்று.

ஆகத்திருவிருத்தப்—௧௫௮.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

# எட்டாவது

## கன்மாடபாதன் சரித்திர முரைத்த வத்தியாயம்.



எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

வாட்டிறல்வயவரிருபுடைநெருங்கவரிசிலைமித்திரசகன்வெங்
காட்டகத்தெழுந்துவேட்டமாடுங்காற்கடியனுமாக்களையொறுத்தான்
வீட்டுதலறிந்தங்கிளையவல்லரக்கன்வெவ்வினைசெயநாணுகித
தாட்டுணைபரவியரசனுக்குணவுதருந்தொழிலினனொடுஞ்சார்ந்தான்

வேட்டமாடுங்கால் - வேட்டையாடுங்காலத்தில். (க)

தென்புலத்தவருக்கூட்டுநாளணுகச்செழுந்தவவசிட்டனையரசன்
அன்பொடுமழைத்தங்கருத்திடுங்காலையரக்கனென்றுரைக்குமக்கொடியோன்
வன்பொடுநரூனளித்தனனளித்தோன்வஞ்சமென்றறிந்திலாமுனிவன்
என்புரிந்தனையென்றரசையிவ்வூன்றினிராக்கதனாகெனவிசைத்தான்.

நரூன் - நரமாமிசம். (உ)

மருவியமுனிவனரக்கனங்கிழைத்தமாயமீதென்றுணர்ந்ததற்பின்
அரசயாந்தெருளாதறைந்ததோர்சாபமாண்டுபன்னிரண்டடைந்தொழிகென்
றுரைசெயக்கேட்டமன்னவன்றானுமுனக்குமிங்கரியதோர்சாபம்
விரைவின்வந்துறுமாவிளம்புவனென்றுவெகுண்டனன்புனல்கரத்தெடுத்தான்.

தெருளாது - ஆராயாமல் (ந)

மன்னநின்குலத்தினரசர்தங்குருவைவைதவருண்டுகொன்மதிகின்
என்னினைந்தனையென்றெழுந்தவன்மனையாளெனுமதயந்திமுன்றகைப்பத்
துன்னியெவ்விடனுமுயிரினந்துன்னுஞ்சுடுபுனல்விடுத்தலெங்கென்று
தன்னிருபதத்திற்கைப்புனல்விடுத்தான்றகைபெறுமித்திரசகனே

தகைப்ப - தடுக்க (ச)

கைப்புனல்விடுத்தகாலையிற்கால்கள்கருகியதிறத்தினாலெவரும்
செப்புகன்மாடபாதனென்றொருபேர்சேர்ந்தனன்சாபமுஞ்சேர்ந்து
மைப்புயல்படியுங்கானகத்தேகியுறைபுரிந்துறையுமந்நாளின்
துப்புறழ்தாமமனைவியோடின்புதுய்க்குமோர்பூசுரற்கண்டான்

மைப்புயல் - கரியமேகம். (ரு)

தரவுக்கொச்சகக் கலிப்பா

கண்டானுள்வியப்புற்றான்கடிகுவலென்பசியையென்றான்
கொண்டானுவகைநனிகுறுகுமவன்முன்னணுகி
விண்டானுணவாகிமேவினையோநீயெனவே
தண்டாதநான்மறையோன்றன்னையிருகைப்பிடித்தான்.

உள்வியப்புற்றான் - மனத்தில் ஆச்சரியங்கொண்டான். (சு)

விள்ளற்கரியபெருவிருப்புடையதன்பதியைத்
தள்ளற்கரியதனிவெந்தருக்குடையோன்வவ்வுதலும்

உள்ளத்துளுயிர்போக்குமுயிர்ப்பலிநீநல்கெனவே
வள்ளைப்பொலங்குழைசேர்வரிவிழியாள்வந்துரைப்பாள்.

வவ்வுதலும் - கவர்தலும். (௭)

சீரார்குலத்துதித்தசெஞ்சிலைவேந்தேகுணத்தை
ஓராதுவெஞ்சாபமொருமுனிவனேதுதலான்
போரார்வல்லரக்கனெனப்பொல்லாவிவ்வுருப்புணர்ந்தாய்
ஏராருமவ்வுருவுமெய்துவைசின்னாள்கழித்தே.

செஞ்சிலைவேந்தே - செவ்வியவில்லையுடைய அரசனே. (௮)

நல்லாய்கேளுன்னுடையநவைதீர்நற்குலத்துதித்தோர்
வில்லாற்போர்ப்பகைகடிந்துவேதியரைக்காப்பதலால்
பொல்லாதவிநயமதுபுரிகுநர்தாமொருவருண்டோ
சொல்லாயென்றிருவிழிநீர்சோரவவள்சொல்லினளால்

நவைதீர் - குற்றமற்ற. (௯)

மாதுமனம்வருந்தியங்குவழங்கியசொற்கேளாமல்
ஓதவருமாமறையோனுடற்றசை புண்டென் புசித்தான்
காதன்மனையாணெஞ்சுகலங்கியுமிழென்பையெலாம்
சோதியழலிற்சொரிந்தோருரைமொழிவாள்சோர்வுற்றே

என்பு - எலும்பு. (௧௦)

உன்னரியகொடுஞ்சாபமொழித்துனதுபதியேயின்
மன்னுமெழில்வாய்ந்தகுணமதயந்தியேமுதலாத்
துன்னவருமனையாரைத்தோய்தியெனினுயிரொழிதி
என்னமடமங்கையுமங்கிசைத்தெரியின்மூழ்கினளே

தோய்தியெனின் - சேர்வையாயின். (௧௧)

அவ்வனத்திலிங்ஙனமாங்கமர்ந்துசிலநாள்கழிய
எவ்வமுறுகொடுஞ்சாபமிரிந்துதனிவேளனவே
செவ்வியொடுதன்னகரஞ்சேர்ந்துமதயந்தியெழிற்
கொவ்வையிதழுண்டிடுவான்குறுகவவள்கூறினளால்

இரிந்து - நீங்கி, வேள் - மன்மதன். (௧௨)

வண்ணமுலைநன்மடவாண்மதயந்திவிளம்புதல்கேட்
டண்ணல்வேலரசனுநன்கரிவையர்தம்போகமறந்
தெண்ணலருங்கொடியவினையேனுக்கிங்கொருமதலை
நண்ணவருள்புரிதியெனநவின்றுகுருவைத்தொழுதாள்.

அரிவையர் - மாதர், போகம் - சுகம். (௧௩)

காமநலநுகராவுளங்காதலித்தபூசுரனைப்
பூமருவுகானகத்துப்புகுந்துகொலைசெய்ததனால்

வாமமுறுமுதுமறையோன்மனையவளுமணங்கனன்று
தீமைதருவெஞ்சாபந்தெரிந்ததிறஞ்செப்பினளால்.

காதலித்த - இச்சித்த (கச)

இப்பார்பரிக்கவருமெழிலாருமகப்பெறற்காயத்
துப்பாரிதழ்க்கனிவாய்த்தோமில்குணமதயந்தி
தப்பாதகற்புடையாள்சாற்றுதவவசிட்டனைச்சேர்ந்
தொப்பாருமில்லாதவொருமதலையுயிர்த்திடைந்தாள்.

பரிக்க - தாங்க, தோம் - குற்றம் (கரு)

வாராடுவனமுலையாள்வயிற்றில்வளர்பாலனையிக்
கோரேழ்செலும்பருவமொழிந்துமுயிர்த்தேனிலையேழ்
பாராளவென்றுள்ளம்பரிந்தொருகல்லால்வெகுணடே
யாருந்தன்னகட்டிலெற்றினளாங்கின்றனனோ

உயிர்த்தேனிலை - பெறாதேனில்லை, அகட்டில் - வயிற்றில் (கசு)

கல்லாலால்வயிறதுகிழிக்கரிகையயங்கின்றதனால்
எல்லாருமசமகனென்றழைப்பப்பெயர்புனைந்து
வில்லாலேபகைகடிந்துமேதினியோரேழ்புரந்து
மல்லாரும்புயதாதனோர்மைந்தனையுமீன்றனனே.

மேதினி - உலகம (கஎ)

சலமதுவமுவலிலாசசெழுந்தவரவ்வேந்தனெனும்
கோலமுறுவெண்முத்தநருலவுதிரைவாரிதிசூழ்
ஞாலமிசைமூலமெனுநன்றொளிவசித்ததனால்
மூலகனென்றோர்நாமமொழிந்தாரம்மைந்தனுக்கே.

திரைவாரிதி - அலைகளையுடைய கடல் (கஅ)

ஏராருமூலகனென்றேத்தவருமொருபெயரான்
பாரோர்கள்புகழவருபரசுராமனுக்காய்ப்பொன
வாரார்பூண்முலைமடவார்மறைத்தவனைவைகியதால
நாரீகவசனென்றுநன்றுமமுற்றனனே.

பொன்வார் - பொற்கசசு. (க௯)

கலிநிலைத்துறை

பன்னுமூலகன்றயாதற்பயந்தனன்பகர்வோன்
மன்னுசீரளபிடியெனுமைந்தனையுயிர்த்தான்
அன்னவேந்தனுமருளுடைவிச்சுவசகனும்
என்னும்வேந்தனையீன்றனன்யாவருங்களிப்ப.

பயந்தனள் - ஈன்றாள். (உ0)

கட்டுவாங்கனைவிச்சுவசகன்களித்தளித்தான்
மட்டுவார்குழன்மடந்தையர்மதனெனவழங்கும்

எட்டுமாதிரம்புகழ்கட்டுவாங்கனென்றிசைப்போன்
கிட்டிவானவருளெனக்கெழுமியங்களித்தான்

மட்டு - தேன், மாதிரம் - திசை. (உக)

விண்ணின்மேவியவிண்ணவர்க்கிடரறவேண்டி
எண்ணின்மாற்றலரின்றுயிர்செறச்சமரியற்றும்
அண்ணலேநினக்காயுளோர்முகூர்த்தமென்றமரர்
நண்ணியோதலுமன்னவன்றரையினண்ணினால்

உயிர்செற - உயிரைக்கொல்ல. (உஉ)

தரையின்மேவினன்சாற்றுபோரறத்தினையறிந்தான்
உரைசெய்மால்பதமுன்னினன்முத்திசென்றுற்றான்
பொருவிலாத்திறற்கட்டுவாங்கன்றன்மெய்ப்புகழ்க்குப்
பருவமாயிரம்பகரினும்வரம்பெவர்பகர்வார்.

பதம் - திருவடி. (உ௩)

கார்க்குநேர்கொடையானெனும்புகழ்க்கட்டுவாங்கன்
தீர்க்கவாகுவென்றுரைதருசிறுவனையுயிர்த்தான்
போர்க்கவாய்திகழன்னவன்புகழ்நிலவெறித்துப்
பார்க்குவாமதிநிகர்க்குமோரிரகுவைப்பயந்தான்

கார் - மேகம், உவாமதி - பூர்ணசந்திரன். (உ௪)

திசைவிளங்கநல்லறந்திணைநிறுவியசெங்கோல்
இசைதரும்படிசெலுத்தியரகுவெனுமிறைவன்
அசனெனும்பெயரரசனையளித்தனனசனும்
தசரதன்றனைத்தந்தனன்முச்சகந்தளிர்ப்ப.

நிறுவிய - நிறுத்தின. (உ௫)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அன்னவனீன்றமைந்தனென்றுரைப்பவமரருக்கருடரவேண்டிக்
கன்னியந்துளவோன்றன்கலையாலுங்கலைகளின்கலைகளினாலும்
மன்னியவிராமனிலக்குவன்பரதன்வையகம்பராவுசத்துருக்கன்
என்னும்நால்வராகிவந்தேயோடேழுலகாண்டனனென்றான்.

கன்னியந்துளவோன் - திருமால், கலை - அம்சம். (உ௬)

கன்மாடபாதன் கதையுரைத்த வத்தியாயம் முற்றிற்று,

ஆகத்திருவிருத்தம்—௧௮௪

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---

# ஒன்பதாவது

## சக்ரவர்த்தித்திருமகன் சரிதமுரைத்த வத்தியாயம்



கலிவிருத்தம்.

என்றலும்பரமனுங்கெழுநதுவானவர்க்
கன்றருள்செய்தவாறரசுசொல்கென
ஒன்றியமொழிசிலவுரைக்குமென்றுமெய்ந்
நன்றறிசுகமுனிநவிற்றன்மேயினான்.

நவிற்றன்மேயினான் - சொல்லதொடங்கினான். (க)

மருக்கமழ்துளவணிமாயன்றாடொழா
அரக்கரையமரர்களடர்த்துநீயெமைப்
புரக்கெனமாதவன்புகன்றவாறவர்
குரக்கெனுமுருக்கொடுகுலவினாரோ,

புரக்கென - காக்கவென்று, குரக்கு - குரங்கு- (உ)

தாவறுபுகழுடைத்தயரதப்பெயராக்
கோவெழிற்கோசலைகுலவுகேகயன்
பாவைநற்சுமித்திரையென்னுமைந்தொடி
மூவரைமணந்தனன்முறையினன்பமே

கோ - சக்ரவர்த்தி. (ங)

பூசலைவெரீஇயபுலவர்வேண்டலால்
வீசலையுறங்குவோன்விளம்பிராமனென்
றூசலைநிகர்குழையுலவும்வாள்விழிக்
கோசலையளித்திடக்குலவினாரோ.

பூசலைவெரீஇய - போருக்கஞ்சின. (ச)

சரதனையறிவனைத்தருமரூபனை
வரதனையிராகவன்மலர்நற்றாடொழும்
விரதனைவிண்ணவர்விருப்பினேநதுறு
பரதனைக்கேகயன்பாவைபெற்றனள்.

கேகயன்பாவை - கைகேயி. (ரு)

நிலக்குவன்றுயர்க்கடனீக்கியெண்டிசை
துலக்குவனெனச்சொலசத்துருக்கன்றன்னொடும்
இலக்குவன்றன்னையிங்கெழிற்சுமித்திரை
விலக்குவன்பகையெனவிருப்பினீன்றனள்

நிலக்கு - உலகத்துக்கு, துலக்குவன் - விளக்குவேன். (சா)

பால்வருமுலையினர்பாணின்றிப்புவி
மேல்வருநாட்செயும்வினைகளாதிமுன்

நால்வருகளுமமுனோன்மைமைந்தர்கள்
நால்வருமடைந்தனர்நன்குவைகினர்

முன்னூல்வருக்ருமம் - பூணூற்சடங்கு. (எ)

அன்னவர்நால்வரிலடைந்தகோசிகன்
பின்னெழுந்திலக்குவன்மருவப்பேரருள்
துன்னியவிராகவன்றனைவிற்போய்ப்பழி
மன்னியதாடகைவதைசெய்தானன்றே

துனைவின் - விரைவாக. (அ)

வருமுனியருளொடுமகஞ்செய்சாலைவாய்ப்
பொருமருதாடகைப்புதல்வரைச்சினர்
தொருவனையொழுத்துமற்றொருவனைக்கடல்
விரிதிரைகடத்தினான் வீரன்வாளியால்.

மகஞ்செய்சாலை - யாகசாலை, ஒழுத்து - கொன்று (௯)

இகலறுகோசிகனினிதுறைறிய
மகமொருகுறைவறமகிழ்ந்துகாத்தபின்
அகலிகைசாபமுமகற்றியற்புதன்
மிருவளம்விளங்கியமிதிலையெய்தினான்

கோசிகன் - விசுவாமித்திரன். (௧0)

சாற்றியமுனியொடுந்தம்பிதன்னொடும
பாற்றிரையுறங்கியபரன்விதேகையாம்
மாற்றருவளநகாமன்னனென்றுசொல்
ஆற்றலனெதிர்கொளவடைந்துவைகுநாள்

பாற்றிரை - பாற்கடல். (௧௧)

நல்வளைச்சீதைதன்மணத்தினாட்டிய
எல்வளைத்திடவெழுமெழில்கொண்மேருவாம்
கல்வளைத்தவன்சிலையென்னுங்கட்டெழில்
வில்வளைத்ததிருறவெற்பின்வீழ்த்தினான்.

கல்வளைத்தவன் — மலைவளைத்தவன். (௧௨)

ஓதையையணடம்முடைந்ததோவெனக்
கோதைவில்லிறுத்தநங்குரிசிலுக்கெழிற்
சீதையைக்கொடுத்தனன்றேவர்வாழ்த்தநற்
றாதையென்றுரைபெறுசனகனென்பவே.

வில்லிறுத்த — தநுர்ப்பங்கஞ்செய்த (௧௩)

உடனுறைதருமிளையோனுமோகையால்
கடிமணங்கேட்டவட்கலந்ததாதையோ

டைதருபரதனுமணிசெய்தம்பியும்
வடிவிழிமகளிரைமணமகாற்றினர்

இளையோன் - இலக்குவன். (கச)

வதுவைசெய்தணங்கொடுமகிழ்ந்துநாயகன்
மிதிலையிற்சில்பகலிருந்துமன்னொடும்
இதமுறுதுணைவருமெவருஞ்சூழ்வரக்
கதுமெனவயோத்தியைக்கருதிப்போயினான்

வதுவை - மணம், கதுமென - விரைவாக (க௫)

கல்லையுங்காரிகையாக்குங்காலினான்
எல்லையிருணையோடேகுமவ்வழி
ஒல்லையில்வெகுண்டுறுபரசுராமனோர்
வில்லையும்வலோந்தனனயோத்திமேயினான்

கல் - கல்லுருவாயிருந்த அகலிகை (கசு)

வேறு

வாமமார்ந்தமலர்க்குழற்சீதையாட்
காமமோங்கலுந்துறைநாயகனை
பூமியாளப்புனைவன்முடியெனத்
தாமமேற்கைத்தயரதனெண்ணினான்

வாமம் - அழகு. (கஎ)

தேனிறைந்தபூழற்சீதைதமணாளன்மெய்
கானினேகக்கதிர்முடிமாற்றுவான்
கூனியாம்பெயர்கொண்டவளாந்திரை
வானநாடர்மயக்கினர்வல்லையே

கூனி - மந்தரை. (கஅ)

மன்னனெண்ணியசெய்கைமனத்திடை
உன்னியுன்னியுருகியகூனவள்
கன்னிமாடங்கலந்தகைகேசிதாள்
சென்னிதாழ்த்துவணங்கினள்செப்புவாள்

வணங்கினள் - வணங்கி, (முற்றெச்சம்). (க௯)

வாட்டமின்றியுன்மன்னையிராகவன்
காட்டிடேகவுங்காதவனுக்கிலண்
சூட்டவும்முடிசொல்லியமுன்வரம்
கேட்டியென்றுகிளந்தனளாங்கரோ.

கிளந்தனள் - சொல்லினள். (௨0)

கேகயனுருச்செய்தவக்கூனிசொல்
கேகயன்மகள்கேட்டனள்வல்லையே

ஏகயனெழிலெய்தப்பொற்றேரொடு
மாகயனெனுமன்னனையெய்தினள்

கேகயன்மகள் - கைகேயி. (௨௧)

உரத்தினுலொளிசேரரசுள்ளம்போழ்
அரத்தினேருமவளென்புதல்வனை
இருத்திநாயகனுகவிராமனை
வரத்தினுல்வனத்தேகவழங்கென்ருள்

போழ் - பிளக்கிற, அரததின் - அரம்போல. (௨௨)

மூங்தைநல்குமவரத்தின் முறைமையால்
சிந்தைநொந்துமெய்தீர்வதற்கஞ்சியே
அந்தமன்னனதற்கியைந்தானவன்
மைந்தனும்வனதேகவழிக்கொண்டான்

மெய்தீர்வதற்கு - சத்தியத்தைவிடுதற்கு (௨௩)

அள்ளியள்ளியூட்டையசெம்பஞ்சையும்
முள்ளதென்றுமுனிதருந்தாளினுல்
தெள்ளமுதிற்சிறந்தசொற்சீதையும்
வள்ளல்பின்றொடர்ந்தேகினன்மன்னனே.

ஐய - அழகையுடைய. (௨௪)

உன்னியவ்விறையும்முயிர்நீத்தனன்
மன்னிவைகிவயங்குவதெங்ஙனம்
என்னுமுள்ளத்திலக்குவனும்மவன்
பின்னெழுந்துபெயர்ந்தனனென்பவே

உயிர்நீத்தனன் - உயிர்விட்டான். (௨௫)

கானவண்ணமரவுரிகைக்கொடங
கானவண்ணமெடுத்தவிராமனும்
ஞானவண்ணனுங்கையுந்தம்பியும்
போனவண்ணம்புகல்பவர்யாவரோ

வண்ணம் - அழகு, மரவுரி - வற்கலை. (௨௬)

எட்டெனுந்திசைமாந்தரவ்வேலையும்
கட்டமைந்தசிலையுங்கணையுறை
புட்டிலுங்கொடிருவரும்போகுழிப்
பட்டதுன்பம்பகர்வல்லரெவர்.

மைழ - சீதை. (௨௭)

அகமகிழ்ந்தெதிர்வந்தடிபோற்றிய
குகனெடும்முவந்துற்றவட்கோதிலாக்

கனைநின்றிழிகங்கைகடந்திட
முகமலர்ந்தொருமூவருமேகினார்.

ககனம் - ஆகாயம். (௨௮)

வரத்தின்மிக்குண்மகிழ்ந்தெதிர்கொண்டுநற்
பரத்துவாசன்பதந்தொழுதன்னவன்
இருத்தியென்னவிராமனங்கோர்பகல்
அருத்திகூர்ந்தடகுண்டமர்ந்தானரோ.

அருத்திகூர்ந்து - அன்புமிகுந்து, அடகு - இலை. (௨௯)

ஆங்குநின்றெழுந்தையனணிதிகழ்
வாங்குநுண்ணிடைமங்கையுந்தம்பியும்
பாங்கர்மேவப்படர்ந்துகுறுகினன்
தீங்குநீங்கியசித்திரகூடமே.

பாங்கர் - பக்கம். (௩௦)

அவ்வழிச்சிலநாளமர்ந்தன்னையர்
பவ்வமொத்தபதாகினியோடுசேர்
கவ்வையுற்றபரதனைக்கண்டுமன்
எவ்வமற்றவிண்ணெய்தலுங்கேட்டனன்

பவ்வம் - கடல், கவ்வை - துன்பம். (௩௧)

கேட்டுநெஞ்சகலுழ்ந்துகிளர்ந்தவக்
காட்டிற்றுறைகடன்கழித்தோதினான்
வாட்டமுற்றபரதற்குவல்லையந்
நாட்டிலேகெனராகவனல்வரம்.

கடன் - ஈமக்கடன். (௩௨)

அழுதுசோரும்பரதனையங்கையால்
தழுவிநல்லனசாற்றியிராகவன்
பழுதிலாத்தனபாதுகைநல்கினன்
தொழுதுமீண்டவன்சுற்றமொடேகினான்.

பாதுகை - திருவடிநிலை. (௩௩)

எண்ணுமுள்ளமியைந்தனன்மீள்கலா
அண்ணல்பாலுற்றவன்னையர்தம்மொடும்
பண்ணமைந்தபடையொடுமீண்டனன்
நண்ணிவைகினனந்திக்கிராமமே

மீள்கலா - மீளாத. (௩௪)

வேறு.

சித்திரகூடமுற்றுறைந்தசேவகன்
தத்தரிநெடுங்கணாள்சனகிதன்னொடும்

எத்திசையும்புகழிளையகோவொடும்
அத்திரியுறையுளையணுகினனரோ.

சேவகன் - ஸ்ரீராமபிரான். (௩௫)

எண்டிசைபுகழவங்கெழுந்துராகவன்
தண்டலைவனந்தனைச்சார்ந்துசென்னெறி
விண்டலத்துறவருவிராதற்கொன்றனன்
அண்டருமலர்மழைசொரிந்தங்கார்த்தனர்

தண்டலை - சோலை (௩௬)

ஏற்றவவ்வனத்தினின்றெழுந்துமாதவன்
சாற்றவண்புகழ்ச்சரபங்கன்மெய்யொரீஇ
மாற்றருமுத்தியின்மருவவின்னருள்
நாற்றிசைபுகழ்பவனல்கிப்போயினன்

மெய்யொரீஇ - உடம்புவிட்டு. (௩௭)

கருதுபல்காவதங்கடந்துபோயெதிர்
வருமறைவாணர்தாள்வணங்கிமூவரும்
பருவமாங்குறைதருபத்தும்வைகினர்
அருளுடைமுனிவரர்க்கபயநல்கியே

மறைவாணர் - வேதியர். (௩௮)

பகைத்திறமுனிவரர்பகர்ந்தகன்மையால்
நிகழ்த்தியவவ்விடனீங்கியெய்தினர்
சகத்தினையொருநிலைநிறுத்தாந்தண்டமிழ்
அகத்தியமுனியுறையகத்தையுன்னியே.

நிகழ்த்திய - சொல்லப்பட்ட (௩௯)

நதிகளும்வனங்களுநடந்துநீங்கினர்
அதிசயமிகவுளவகத்தியற்றொழாத்
துதியுறமவன்வழிசொல்லிவில்லொடு
குதையுறுகணைதரக்கொண்டுபோயினா

கணை - அம்பு. (௪0)

விழைவுறீஇமுனிவரன்விளம்புமவ்வழித்
தழைசிறையுடையநற்சடாயுவென்றுசொல்
கழுகெழில்வேந்தனைக்கலந்துகவ்வைதீர்
ஒழுகுகோதாவிரியுவந்துநோக்கினர்

விழைவுறீஇ - விரும்பி. (௪௧)

வேறு

அன்னநதிதுன்னினரகன்கரையடைந்த
பன்னுமொருபஞ்சவடிகண்டுபகர்சாலை

மொழிந்தவாறுகேட்டிராகவன்மொழியெனநம்மோய்
அழிந்தநெஞ்சினளிலக்குவபோயறிகென்றாள்.

விளித்து - அழைத்து. (௪௯)

சீதைசொல்லியவாறுகேட்டிளையவன்றீச்சொல்
சூதுசெய்தபொய்யரக்கன்சொலெனநனிசொலலும்
போதியென்னலுமறுத்தியோவென்றவள்புலம்பிக்
கோதுசெய்தவெவ்வுரைபலகூறினள்குழைந்தாள்.

இளையவன் - இலக்குவன். (௫0)

பரிந்துபற்பலவெகுண்டவள்பகர்தலினிளையோன்
விரைந்துநாடுவான்போயபின்மெலிவொடுதனித்தங்
கிருந்தவன்னையையிராவணன்வவ்விவிண்ணெழுந்தான்
கரந்துகொல்வதற்குற்றதுகாலமென்றுணரான்

நாடுவான் - தேட. (௫௧)

சனகன்மங்கையையெடுத்ததசமுகற்றகைந்து
முனிவுகொண்டெதிர்த்தமர்முறைமுறைசெயுஞ்சடாயு
நனிவருந்திடவிறகிறைதுணித்தனனடந்து
புனையிலங்கைபோய்ச்சீதையைச்சிறைபுகுத்தனனால்

தசமுகன் - ராவணன் - தகைந்து - தடுத்து. (௫௨)

மாயமானுருவரக்கனைமாய்த்தவன்மீண்டு
சீயமாமெனவரும்வழிதம்பிசென்றெய்த
மேயவாறெவன்சீதையைவிட்டெனவிளம்பித்
தூயசாலைசென்றெய்தினனவனொடுந்துனைவின்

சீயம் - சிங்கம், துனைவின் - விரைவாக. (௫௩)

சாலையெய்தினன்சானகியெய்துதல்காணான்
மாலையெய்தியவனைகுழலெங்கெனமதித்துச்
சோலையெய்தியசுற்றிலுங்கண்டிலன்றுயராம்
வேலையெய்தினன்பாலெனும்வேலைமேய்மேலோன்

வேலை - கடல் (௫௪)

மனைவிமேற்செலுங்காதலைமாற்றவல்லுநர்கள்
வினைவினீங்கிலையென்பதைவிளம்புவான்போலச்
சனகியெவ்விடத்தாளெனச்சார்ந்தவைநோக்கி
அநகனங்கறைகின்றனவறிகுநர்யாரே.

சார்ந்தவை - அங்குள்ளவற்றை. (௫௫)

வாமவெஞ்சிலையிருவருமவணின்றுவருங்கால்
காமருஞ்சிறையிழந்தவச்சடாயுவைக்கண்டார்

தீமையிவ்வுழிநடந்தனதெரித்தவனிறப்ப
ஈமநல்வினையியற்றினனிராகவனிரங்கி.

காமர் - அழகு. (௫௬)

ஆங்குநின்றெழுந்தகல்வுழிப்புனற்கன்றல்லில்
தீங்குசெய்தவவ்வயோமுகிமூக்கினைச்சிதைத்து
வாங்குவெஞ்சிலையிளையவன்றுணித்தபின்மருவார்ந்
தோங்கிவானுறுநெடுங்கவந்தன்வாழ்வனத்தையுற்றனரால்.

அல்லில் - இரவில் (௫௭)

நிவந்தவவ்வனவிலங்கெலாம்வயிற்றிடுநெடுங்கைக்
கவந்தன்மெய்யில்வெங்கணைவிடச்சாபத்திற்கலந்த
பவந்தனையொழிந்தியக்கனுமாங்கவன்பரவி
உவந்துமற்றுநீர்சவரிபாற்போமினென்றுரைத்தான்

வனவிலங்கு - காட்டுமிருகங்கள் (௫௮)

உரைத்தவாறிருவோருமச்சவரிபாலுற்றார்
அருத்திகூர்ந்தவளடங்குநன்மூலமங்களித்து
மருத்தழைந்திடுமதங்கவெற்பெய்தினீர்மருவும்
விரித்தசெங்கதிர்மதலையையென்றுவீடுற்றாள்

அருத்திகூர்ந்து - அன்புமிகுந்து (௫௯)

சொன்னவாறிருவோர்களுந்துனைவினின்மேவிப்
பன்னுபம்பையாறடைந்தநுமானெடும்பயிலா
அன்னவெற்புறைகதிரவன்மதலையையணுகி
இன்னநீர்தரவவனொடுந்தோழமையியைந்தார்.

துனைவினில் - விரைவில், கதிரவன்மதலை - சுக்ரீவன். (௬0)

அந்தவெங்கதிர்மதலைவெவ்வாலிபோரழிக்கும்
மைந்துகாட்டுதற்கியைந்தனனுகமற்றவன்றான்
துந்துபிப்புரவென்பெறிந்திடச்சுடர்மலர்க்கை
உந்துமம்பெழுந்தெழுமராமரமுருவியதால்.

மைந்து - வலி. (௬௧)

ஆற்றல்கண்டருங்கதிரவன்சேயகமகிழ்ந்து
தோற்றகாலையில்வாலியைக்கொல்லெனச்சொல்லி
ஏற்றுவாலியோடிருஞ்சமம்விழைந்துநின்றிழைத்தான்
மாற்றருங்கணைமறைந்திருந்தெய்தனன்வரதன்.

சமம் - போர். (௬௨)

விடுத்தவெங்கணைவாலியைவிண்ணகத்தேற்ற
அடுத்தசெங்கதிர்மைந்தனுக்கரசியலளித்து

அடிவணங்கினரத்திறம்புரிந்தனல்கொளுவ
முடியவிந்நகர்சுட்டனன்மாருதிமுழுதும்.

மாருதி - அநுமான். (எஎ)

சனகிவைகிடனன்றிமற்றெங்கணுந்தழல்வைத்
தநுமன்வந்தடிவணங்கியச்சீதைபாலணியாய்
வளையுநல்லசூடாமணிவாங்கியவ்வேலை
துனைவிற்றவினன்றேன்றினன்மகேந்திரச்சுரும்பில்.

சுரும்பில் - மலையில் (எஅ)

அங்கதன்முதலாங்கடைந்தோருக்கவ்வணங்கை
நங்கணயகன்றேவியைநகண்டவாநவின்று
துங்கவேறெனவவரொடுந்துனைவின்வநதிறைஞ்சிச்
செங்கணனுக்குஞ்சீதையைக்கண்டமைதெரித்தான்

துனைவின் - விரைவாக (எகூ)

மண்டுநீர்க்கடல்கடந்தனனடந்தமைவழங்கிப்
பண்டைநான்மறைக்கரியவன்பதுமமென்காத்தில்
தொண்டைவாய்மயிலளித்தசூடாமணியளிப்ப
அண்டர்நாயகனம்மணிகண்மணிக்களித்தான்.

தொண்டை - கொவ்வைக்கனி. (அ0)

தேனிரைத்ததார்ச்செழுங்கதிர்மகன்முனஞ்செல்ல
நீனிறக்கடல்கடந்தவனீலனேமுதலாம்
வானரப்படைவளைதரவிளையவன்மருவக்
கானகத்தினைக்கடந்தனன்கடல்வணனெழுந்தே.

கதிர்மகன் - சுக்ரீவன் (அக)

விரியுமூவுலகத்துமன்னுயிர்க்கணேவிளங்கிப்
பெருகுமாறுவந்தருட்புனனிச்சலும்பெய்யும்
சரியமாமுகிற்கொழுந்தெழுகடற்படையோடு
திரைசெய்வாரிதிப்புறத்தினிறசென்றிறுத்ததுவே.

இறுத்தது - தங்கிற்று. (அஉ)

கலிவிருத்தம்.

மாற்கடனிகர்த்தவானரநற்சேனையின்
நூற்கடல்கடந்தபேரறிவின்வைகுறும்
நாற்கடனிலம்புகழ்நம்பிவைகினன்
பாற்கடல்வைகியபான்மையென்னவே.

நம்பி - ஸ்ரீராமன். (அங)

வேறு.

வலங்கொடிண்சிலைவள்ளல்கடற்கரை
நலங்கொள்சேனையினண்ணினனென்றலும்

புலங்கொள்புந்தியிற்புன்மையர்தம்மொடும்
இலங்கைமன்னவனென்னனுற்றனரோ.

வலங்கொடிண்சிலைவள்ளல் - ஸ்ரீராமபிரான். (௮௪)

என்னுங்காலையங்கெய்தியவீடணன்
அண்ணறேவியருஞ்சிறைநீக்கென
நண்ணுபற்பலநல்லறங்கூறலும்
கண்ணிற்நீயெழநீகடிதேகென்றான்

அண்ணறேவி - சீதை. (௮௫)

முனிவுகொண்டுதன்முன்னவனீக்கலும்
வினைகடந்தநல்வீடணன்வல்லைபோய்த்
தனிமுதற்றிருத்தாண்மிசைவீழ்ந்தனன்
அநகனும்மநுமான்முகநோக்கினான்.

வல்லை - விரைவாக. (௮௬)

நல்லனென்றநுமான்சொலநாயகன்
அல்லல்தீரவொழியென்றபயங்கொடுத்
தெல்விலங்கைக்கிறையவனாகென
சொல்விலங்குசுடர்முடிசூட்டினான்

அல்லல் - துன்பம். (௮௭)

கருணைகொண்டவக்கண்ணன் கருதலும்
வருணன்வந்திலனென்றுமலர்விழி
அருணம்வாநதவனம்பரத்தேவினான்
தருணவெய்யவன்போன்றதழற்கணை

அருணம் - செவப்பு, அம்பரம் - கடல். (௮௮)

அன்னகாலையறிந்துவருணன்வந்
தின்னறீர்க்குமிராமனையெய்தியுன்
மன்னுசீர்சொலிவாழ்வுறயாருமென்
சென்னிமேலணைசெய்யெனச்செப்பினான்

இன்னல் - துன்பம். (௮௯)

அளவிகந்தவரிக்குலத்தோரெழில்
வளரநின்றவரைக்குழுவுய்த்திட
உளமுவந்துநாறேசனையாமனை
நளன்விரைந்தவணன்கமைத்தானரோ

அரிக்குலத்தோர் - வாநரகுலத்தோர். (௯0)

அணைகடந்தருஞ்சேனையொடாங்குயர்
துணைகடந்தசவேலவெற்பெய்தினான்

இணைகடந்தவிலங்கெழிற்சீதையாம்
கணைகடந்தகண்ணாட்புணர்காதலன்.

கணைகடந்த - அம்பைவென்ற. (௧௧)

சோதுமேவுமிலங்கையர்கொற்றவன்
தூதராஞ்சுகசாரணராங்குற
ஏதநீங்கவின்றெங்கணுநாடிப்போய்
ஓதுநீரென்றிராமனுணர்த்தினன்

ஏதம் - குற்றம். (௧௨)

வேறு

நாடியதூதர்போய்நவின்றவாறுகேட்
டேடலரலங்கலாளிலங்கைநாவலன்
நீடியகோபுரநின்றுநோக்கினன்
ஆடவர்திலகனுமாங்குநோக்கவே.

ஆடவர்திலகன் - ஸ்ரீராமபிரான். (௧௩)

ஆரியனொடுமலையடைந்தோங்கிய
சூரியன்காதலன்றனைவிற்றலிப்போய்ப்
பாரினிலிலங்கையான்பைம்பொன்மாமுடி
சீரறவீழ்த்தினன்றிருகியெய்தினன்

சூரியன்காதலன் - சுக்ரீவன் (௧௪)

பங்கயச்செங்கணான்பணித்தவேவலால்
அங்கதன்றூதுபோயறைந்திராவணன்
வெங்கதங்கொளவவன்மீண்டகாலையில்
பொங்கரிச்சேனைபோய்ப்பரிசைசூழ்ந்ததே.

வெங்கதம் - கடுங்கோபம், அரிச்சேனை - வானரசேனை. (௧௫)

வேறு

எயிலைமுற்றியெதிர்ந்தவரக்கரை
அயிலெயிற்றவரிக்குலத்தோர்தெறப்
புயலையொத்தவன்பொன்முடிபத்தும்வெவ்
வெயிலையொத்தொளிர்வேக்கொடுமேற்றனன்.

புயலையொத்தவன் - ஸ்ரீராமபிரான் (௧௬)

காரையொத்தகரியவன்றம்பையக்
தாரையொத்ததசமுகனோடுஞ்செய்
போரைமற்றெவர்சொல்வரப்புன்மையோன்
பாரையுற்றனன்றேர்படையற்றரோ.

தசமுகன் - ராவணன். (௧௭)

நஞ்சமற்றதயமுகன்றன்னைநீ
செஞ்சரத்தொடுந்தீர்ந்தனையாவையும்

தோளை நீங்கிய தோன்றலைத் துதித்தனன் றெழுதான்
தாளை நீங்குறு தன்புசெய் தடஞ்சிறைக் கருளன்

கருளன் - கருடன். (௧0௫)

புள்ளின் வேந்துபோயகன்றபின் புகல்கவிக்குலத்தோரா
தெள்ளுதெண்டிரைப் பரவையிற் சிலைத்தனர் சீற
எள்ளருந்திறலி ராவணன் கேட்டவணேவும்
தள்ளருந்தருக்கரக்கர்கள் சாய்ந்தனர் சமரில்

பரவை - கடல. (௧0௬)

கோட்டுமால் கரிவாம்பரிக் கொடிஞ்சியந்தடந்தோ
ஈட்டமோடெழுந்தெண்ணிலரிருபுடை நெருங்க
மீட்டுமிந்திரசித் தரிக்குலத்தினர் வெருவப்
பூட்டுவார்சிலை யோடுவெம்பொருகளம்புகுந்தான்

அரிக்குலத்தினர் - வாநரகூட்டத்தோர். (௧0௭)

ஆர்ந்திராவணியயன்படை விடுப்பவப்படையால்
தார்ந்தடம்புயவீடணன் சாம்பவன்றழுங்கக்
கார்த்தடங்கடல்கடந்தவனன்றியக்களமாம்
பார்த்தலத்தினிலடைந்தவர் வீழ்ந்தனர் பதைத்தார்.

இராவணி - இந்திரசித்து. (௧0௮)

உருத்திராவணியொல்லையில் விடுத்தவப்படையால்
தரைத்தலத்திடை வீழ்ந்தவா யாவருந்தனிப்போய்
மருத்துமாமலைமாருதி வல்லையிற்கொணர
அருத்திகூர் துயிலுணர்ந்தவராமெனவெழுந்தார்.

மாருதி - அநுமான். (௧0௯)

அன்னகாலைவெம்மாயைசெய்தகன்றிராவணிபோய்
இன்னல்செயயுமோர்வேள்வியை நிகும்பலையிடத்துத்
துன்னியாற்றுதலறிந்தழித்தரிக்குலத்தோடு
மன்னுநீள்சிலையிலக்குவன் வளைத்தமர் விளைத்தான்.

அரிக்குலத்தோடு - வாநரகூட்டத்தோடு. (௧௧0)

தேரினேறியங்கெதிர்தருமிந்திரசித்தும்
ஏரினேறியமாருதி திறற்புயத்தேறிப்
போரினேறியவிலக்குவனும் பொருதிறத்தைப்
பாரின்யார் சொல்வார் பங்கயத்தயனுக்குமரிதால்

மாருதி - அநுமான். (௧௧௧)

இந்துவின்கணையிலக்குவன் வில்வளைத்தேவ
வந்தெதிர்ந்தவவிந்திரசித்தவண்மாய்ந்தான்

சுந்தரந்திகழாசுபெற்றனமெனச்சுரர்கள்
அந்தரத்தினின்றலர்மழைதூர்த்தனரார்த்தார்.

இந்துவின்கலை - அர்த்தசந்திரபாணம். (௧௧௨)

மைந்தனிந்திரசித்தவன்மாய்ந்ததுகேட்டுச்
சிந்தைநொந்திராவணனிருபான்விழிவழிநீர்
உந்துதுன்பவெவ்வலையெறிநீர்க்கடலுற்றான்
நிந்தைதவநதவன்பின்னருமமர்செயநினைந்தான்.

இருபான்விழி - இருபதுகண். (௧௧௩)

மிடல்கொண்மூலமாபலமெனுமவீரரைவிடுத்,தான்
கடிகையேழினிலிராகவனவருயிர்கவர்ந்தான
கொடியராவணன்றேரிவர்ந்தயிற்படைகொண்டு
படைகள்குழுவரப்பகைஎதிரொத்தனன்படர்ந்தே.

மிடல் - வலி, இவர்ந்து - ஏறி (௧௧௪)

மருவியிந்திரனேவலின்மாதலிகொணர்ந்த
பெரியபொற்றடந்தேரிவர்நதம்பிலைப்பெய்யும்
நருமுகிற்கொழுநதன்னவன்கார்முகங்கோட்டி
ஒருமடந்தையைபொளித்தகல்கள்வனொடுடன்றான்.

கார்முகம் - வில் (௧௧௫)

இராமராவணயுத்தராமமெனவிமையவரும்
நராதலத்துறைஞ்சமர்கலெலாமுவமையாச்சாற்ற
முராரியாமுதறசமுகனெடுமையன்முயன்ற
புராதனச்சமர்க்குவமைவேறெடுத்தெவர்புகல்வார்.

புராதநச்சமர் - பழையபோர். (௧௧௬)

திசைமுகன்படையெடுத்திராகவன்சினநதேயிர்
தசமுகன்றனைமாய்த்தனன்மாய்ததலுந்தயங்கும்
குசமுகங்களிற்குங்குமங்கோட்டராம்பையரோ
டிசைமுகம்மலர்ந்திணர்மழைபொழிந்தனரிமையோர.

திசைமுகன்படை - பிரமாஸ்திரம. (௧௧௭)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தள்ளருந்துயர்கூரரக்கியர்யாருந்தலைவிரித்தனரழுதேங்க
வெள்ளியம்பொருப்பங்கெடுத்தவன்முதலாவெஞ்சமரழுவத்தின்மாய்ந்த
அள்ளிலைநெடுவேலரக்கருக்கெல்லாமருந்திறல்வீடணனென்பான்
எள்ளரும்புகழ்சேரிராமனின்னருளாலியற்றுநீர்க்கடன்கழித்தனனால்.

வெள்ளியம்பொருப்பங்கெடுத்தவன் - ராவணன். (௧௧௮)

இலங்கைகாத்தளிப்பவீடணற்காயுளியம்புமோர்கற்பமதளித்து
நலங்கிளர்கற்பினரசியென்றெவருநவிற்றுநங்கையர்க்கரசியையவ்

எய்பேர்மகிழ்ச்சியோடிருப்பவெங்கணும்
நேயனோர்மதிக்குடைநிழற்றினனரோ.

சனகன்பாவை - சீதை. (௧௩௩)

உரைதருதீயனவொழிந்துபாறின
மருவுநல்லறமெலாம்வளர்ந்தமாமழை
இருவளஞ்சுரந்தனவேகதாரனும்
கரியவன்கடற்புவிகாவல்செய்யவே.

பாறின - ஓடின, ஏகதாரன் - ஸ்ரீராமபிரான். (௧௩௪)

காநகளிற்கணைபொழிகரியமாமுகில்
தாங்கநற்கடற்புவிசார்ந்துகாக்குநாள்
புரங்களுநதிகளும்புள்ளுமாக்களும்
மரங்களுமலைகளுமகிழ்ச்சிகூர்ந்தவே.

கரியமாமுகில் - ஸ்ரீராமபிரான். (௧௩௫)

மிகும்பொருட்குவையெலாம்விருப்பின்வேதியர்
புகுந்தனர்முகந்துதாம்போகநல்கிமுச்
சகம்புகழ்வசிட்டனுற்றயங்கிராகவன்
மகம்பலபுரிந்தனன்மகிழ்ந்துவைகினன்

மகம் - யாகம். (௧௩௬)

வினைத்தொடுமரக்கரைச்செருத்தசெஞ்சிலைக்
கனத்தினிற்றிகழ்பவன்கதைகள்கேட்குநர்
நினைக்குநர்வைகுவோர்நிகழ்த்தும்வண்மையோர்
மனத்தினில்விழைந்தனமருவிவாழ்பவே

கனத்தினின் - மேகம்போல. (௧௩௭)

சக்கரவர்த்தி திருமகன் சரிதமுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௩௨௧.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---

## பத்தாவது

## தன்னுடைச் சோதிக்கெழுந்தருளிய சரித முரைத்த வத்தியாயம்.

திருப்பிறைநுதலினள்சீதையென்பவள்
விருப்பொடுநாயகன்விளங்குபூணணி
பொருப்பெனுமிணைப்புயம்புல்லியன்புசெய்
கருப்பநன்குற்றனள்களித்துவைகுநாள்.

பொருப்பு - மலை, இணை - இரண்டு.

அரக்கர்கோன்வெளவியவணங்கைநீக்கிலான்
மருக்கமழலங்கலான்மணந்ததென்கொலென்
றிரக்கமில்சிதடனுங்கிசைத்தனல்லறம்
புரக்கவந்தருள்புரிபுனிதன்கேட்டனன்.

அரக்கர்கோன் - ராவணன் (உ)

நற்புகழ்த்தம்பியானுசன்சீதையாம்
சற்பினுக்கரசியைக்காட்டினீக்கினன்
பொற்பினிற்பொலிபவள்புலம்புற்றேங்கலால்
வெறபொடுமரங்களுமெலிவுகொண்டவே

புலம்புற்று - துன்பமடைந்து. (௩)

மாதவம்புரிபும்வான்மீகிதானழல்
மீதுறுபிணையெனமெலிவுற்றேங்குமச்
சீதையைக்கண்டுளந்தேற்றித்தானுறை
சோதறுசாலைபுட்கொண்டுபோயினன்.

பிணையென - பெண்மான்போல (௪)

சனனருட்சாலையுட்டவஞ்செய்மாதர்பால்
அனனையையடைக்கலமாகவைத்தனன்
இன்னெழின்மிக்குளவிரட்டைப்பிள்ளையாய்
மன்னுமச்சீதையும்வயிறுவாய்த்தனள்

வயிறுவாய்த்தனள் - பெற்றாள் (௫)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

முனிவரன்குசையின்கடையிற்றைவரலான்முன்னவனைக்குசனென்பார்
இனியநல்லடியிற்றடவரலாலவ்விளையவன்றனைலவனென்பார்
அனையவர்பிறைபோல்வளருநாளவருக்கறைந்தவான்மீகியென்றுரைப்போன்
தனிமறைவிளம்புசெளளமேமுதலாச்சாற்றுநல்வினைபுரிந்தனனால்.

குசை - தருப்பை (௬)

பொருவருந்திறலான்வரதனென்றுரைப்போன்புட்கரனெனும்புரவலனோ
டிருநிலம்புகழுந்தக்கனையீன்றானிலக்குவனங்கதனுடனே
தரியலர்வணங்குஞ்சந்திரகேதுதனையுயிர்த்தனன்சொல்சத்துருக்கன்
சொரிமதுத்தொடையான்சுவாகுவினோடுஞ்சுருதசேனனையளித்தனனால்.

தரியலர் - பகைவர். (௭)

பொன்னிறச்சீதையுருவமொன்றமைத்துப்புரவியின்வேள்விபத்தாற்றும்
கன்னியந்துளவமுகுந்தனென்றுரைக்குங்கரியவன்சாலையிலடைந்து
தன்னெழிற்சரிதமுனிவரனருளாற்றநயர்கள்பாடுதல்கேளாப்
பன்னருமுவகைப்பரவையின்மூழ்கிப்பல்பொருள்பெறுதிரென்றிசைத்தான்.

உவகைப்பரவை - சந்தோஷசாகரம். (அ)

மைந்தரவ்விராமன்பணித்தசொல்கேளாமாதவம்வனத்திடைபுரிவோர்
நந்தலில்பொருள்வேட்டடைதநீதென்னநவிற்றினர்போயபின்னுதன்
இந்தநல்லவையோர்யாவருங்காணவியம்பருஞ்சூளுரையதனுல்
கொந்தலர்குழலாள்சீதையையடைவேன்கொணருதிர்விரைவினென்றுரைத்தான்.

சூளுரை - சபதவார்த்தை. (௯)

அவ்வுரைகேட்டதூதர்போயிசைப்பவருந்தவம்புரியும்வான்மீகி
கொவ்வையங்கனிவாய்ச்சீதையைக்கொணர்ந்துகோதிலாவவைக்களநிறுவி
எவ்வமில்கற்பாற்பழிப்பிலளிவளென்றிசைத்தனன்சீதையுமிசைப்பாள்
செவ்வியகற்பிற்றிறம்பிலேனென்னிற்சேர்நெறிபுவிதருகென்றாள்.

அவைக்களம்நிறுவி - சபையில்நிறுத்தி. (௧௦)

என்றலுந்தரைவிண்டிடவதினெழுந்தவெரிமணித்தவிசிடையேந்தி
மன்றலங்குழலாள்சீதையைப்புவிமான்வெளவினள்யாவருமறுகக்
குன்றெனுந்திணிதோட்கொற்றவன்சீறிக்குவலயமடந்தையைக்கோறும்
வென்றியாங்கணையாலெனவயனுற்றுவெகுளிநீயொழிதியென்றுரைப்பான்.

கோறும் - கொல்வோம். (௧௧)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

திருந்திழைச்சீதையெம்மோய்சேர்ந்தனடிகழ்வைகுந்தம்
பொருந்துதியெந்தாயென்னுப்போற்றினன்போயபின்னர்
அருந்திறலையனன்னுளகன்றநற்கயர்ந்தான்போலின்
மருந்துறழ்மனையார்தம்மைப்பிரிந்தெவர்வைகவல்லார்

ஓய் - தாய். (௧௨)

மருவியமைந்தர்தம்மைமலர்புரைகையிற்புல்லி
உருகியவுள்ளத்தோடுமுவப்பொடுமுச்சிமோந்தான்
அருளொடுபதின்மூன்றாயவாயிரம்பருவமாநீர்
இருநிலம்புரந்தான்செங்கோலிராமனென்றுரைக்குமெம்மான்.

உவப்பொடும் - சந்தோஷத்தோடும். (௧௩)

மருவுதன்புதல்வருக்கும்வயங்குநலிளைஞர்பெற்ற
பொருவரும்புதல்வருக்கும்புகல்புகத்திசைகடோறும்
கருணைசெய்திருந்துவையங்காக்குமாமௌலிசூட்டித்
தரைபுகழ்சரயுவுற்றான்சதுமறைமுடிவிலுற்றான்.

மௌலி - முடி. (௧௪)

கோசலநாட்டுமேயசராசரமனைத்துங்கூறும்
தேசுறுவானஞ்சாரத்திருவருள்புரிந்திராமன்
பேசியவிளைஞரோடும்பிறங்குவைகுந்தமெய்தி
ஆசறுமரவப்பாயலாதியாயமர்கின்றானல்.

அரவப்பாயல் - சர்ப்பசயநம். (௧௫)

என்னையாளுடையவையனிராகவன்சரிதமீதை
மன்னுமாதவருமேலாம்வானவர்முதலிஞேரும்
பன்னும்மின்னமுதமுறப்பாடுநர்வீடுசேர்வர்
சொன்னவிக்காதைகேட்போர்துயராறுநலந்துய்ப்பாரால்.

ஈதை - இதனை (௧௬)

மருவினைகாட்டின்மேயவானரர்துணைபோன்மேவ
அருவினைமூட்டும்பொல்லாவரக்கரையமரின்வீட்டும்
ஒருவினையாட்டுநெஞ்சத்துவந்தருளிராமனீன்ற
குருவிரிசூட்டுவைவேற்குசனதிதியைப்பெற்றுனல்.

மரு - வாசனை, குரு - நிறம். (௧௭)

அருள்புரிந்துலகங்காத்தவதிதிதன்மரபில்வந்து
மருவினன்மருத்தென்றேதுமன்னவனன்றேனின்னும்
கருதருந்தவநன்றுற்றிக்களபநற்கிராமமென்னும்
ஒருநக்குறைகின்றுனுலுரைதருங்கலிகாலத்தில்.

கருதருந்தவம் - நினைத்தற்கரியதவம். (௧௮)

சூரியன்மரபொன்றின்றித்தொலைவுறுமீட்டுமந்த
ஆரியமரபைமேவுமாதியாமுகத்துண்டாக்கிப்
பார்கம்புரப்பானன்றேன்பகர்பெருமரபின்மன்னர்
தாரணிபுரந்துபோயார்சாற்றுமம்மரபுதன்னில்.

சூரியன்மரபு - சூரியவம்சம் (௧௯)

சொல்லுமிக்கலியினின்னுஞ்சுமித்திரனந்தமாக
நல்லெழிலரசர்தோன்றிநானிலங்காப்பர்சில்லோர்
மல்லமர்மணிப்பூணிக்குவாகுவின்மரபின்னர்
செல்லுறழ்தடக்கைவேந்தேதிருமென்றுரைசெய்தானல்.

செல் - மேகம். (௨௦)

தன்னுடைச் சோதிக்கெழுந்தருளிய கதையுரைத்த வத்தியாயம்

முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௩௪௧.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.



பதினோராவது.

# நிமிமர புரைத்த வத்தியாயம்



கலிநிலைத்துறை.

இக்குவாகுவென்றிசைதருநிருபர்கோனீன்ற
மக்கணூற்றுவர்தங்களினிமியெனுமன்னன்
மிக்கசீர்புனைமரபினைவிண்டொராதனுக்குத
தொக்கநான்மறையொருங்குணர்சுகமுனிசொல்லும

நிருபர்கோன் - அரசர்க்கரசன். (க)

இமிழ்தடந்திரையிருநிலமினிதினோம்புதல்செய்
நிமியெனும்பெயர்மன்னவனெடுமகம்புரிவான்
அமிழ்தருந்தினாபுகழ்தருவசிட்டனையழைப்ப
உமிழ்செழுங்கதிர்வேலவவெனமுனியுரைப்பான்

இமிழ் - ஒலிக்கின்ற. (உ)

அரியமாமகமிந்திரனாற்றுவான்றொடங்கி
உரைசெயைந்துநூறென்னுமாண்டொழிந்தனயின்றும
விரவுமைந்துநூறாண்டினவ்வேள்விமுற்றுறும்பின்
பொருவினீமகம்புரிதரப்புகுவலென்றுரைத்தான்

ஆற்றுவான் - செய்ய. (ங)

என்றுகூறலுநிமியெனுமன்னவனெய்தி
ஒன்றுமாக்கையிங்குறைவதுதிண்ணமதன்றால்
துன்றுசீரறஞ்செய்வதேதுணிபெனவெகுளி
வென்றகோதமனென்மகம்விருப்பொடாங்கிழைத்தான்.

திண்ணம் - உண்மை. (ச)

ஈரைஞ்ஞூறெனுமாண்டிழைப்பேனெனும்வேள்வி
ஓரைஞ்ஞூறெனுமாண்டவணிழைத்துறைநாளில்
சீரைஞ்ஞூறொடைஞ்ஞூறுறுசெங்கணன்வேள்வி
பாரினூன்முறைமுற்றுவித்திருந்தவன்படர்ந்தான்.

ஐஞ்ஞூறொடு ஐஞ்ஞூறுறுசெங்கணன்-ஆயிரங்கண்களையுடையவன், (இந்திரன்)

அரியமாதவவசிட்டன்வந்தடைந்தமையறியா
துரைசெய்வேலவனுறங்கினனுறங்கலுமுரவோன்
வருதிநீயெனவழைத்துமுன்வரவுமீங்கெண்ணான்
பொருவிலாவுடலொழிகெனவுரைத்தனன்புழுங்கி.

பொருவிலா - ஒப்பில்லாத. (சு)

உறங்கினேன்விழித்துரைத்ததுகேட்டவனுறுதல்
அறிந்திலேன்றனைச்சபித்தமெய்யருந்தவன்றானும

இறந்தாரீங்கவென் றுரைத்தனனிருவருமிறந்தார்
சிறந்தவெங்குலச்செழுந்தவன்பிறந்ததைத்தெரிக்கின்.

அருந்தவன் — அரியதவத்தினையுடையவன். (௭)

மருத்தழைந்ததார்மித்திராவருணருக்கன்பு
பொருத்துருப்பசிநிமித்தமாய்ப்பொலிந்தபொற்குடத்தில்
அருத்தியுற்றமெய்யருந்தவத்திட்டமோடடைந்தான்
உரைத்தமைத்திரவருணியென்பெயருமாங்குற்றான்.

மரு — வாசனை, அருத்தி - ஆசை (௮)

உயிரொழிந்திடுநிமியுடற்குயிராவாயுதவிச்
செயிரொழிந்திடுமுனிவரோடமரர்சேர்ந்தெழுப்ப
வெயிறழைந்தவேன்மன்னவன்விழித்தவவ்வுடலம்
துயர்தழைந்திடவெடுக்கிலெனெனச்சொலித்துறந்தான்.

செயிர் - குற்றம். (௯)

நிமிபெரும்புகழ்விதேகனென்றெவர்களுநிகழ்த்த
இமைதொறுங்கலந்திருந்தனனிமையவர்வரத்தின்
அமரருந்தவராசுடல்பேணினராங்குக்
கமழுநெய்பொழிந்தம்மகமுடித்தனராகலின்

அமரருந்தவர் - விரும்புதற்கரியதவத்தினர். (௧௦)

உடலையந்தணருலகினுக்கரசுறவேண்டிக்
கடையவந்தனரேரிறைகடைதலிற்சனித்தாய
கடைதலாலவனறிவுடைச்சனகனென்பெயரும்
மிடலொடும்மதனத்தினின்மேவிவந்துறலால்.

மத்னத்தினில் - கடைதலில். (௧௧)

மிதிலனுமெனும்பெயருமுன்விளம்பியவிதேகன்
மதலையாகிவைதேகனென்பெயரும்வந்திடையப்
புதியமாநகரொன்றமைத்தனன்புகனகரும்
துதிசெய்மாமதிண்மிதிலையென்றுயர்ந்ததுதிப்பான்

மதலை - புதல்வன். (௧௨)

சனகனீன்றசேயுதாவசுவாமவன்றனும்
அநகனாந்திவர்க்கனன்றனைமகிழ்ந்தளித்தான்
வினையிலானவன்சுகேதுவைநல்கினன்விருப்பின்
சினவுவேலவன்பெற்றனன்றேவராதனையே.

சேய் - புதல்வன். (௧௩)

அறங்கொணெஞ்சினன்றேவராதன்றருமரசன்
பிறங்குவேற்பிரகத்திரதன்றனைப்பெற்றான்

மறஞ்செய்தானைமாவீரியனும்வயமைந்தன்
கறங்குமாப்படைச்சுகிர்த்தவனல்கியகாளை.

வயம் - வெற்றி. (௧௪)

திட்டகேதுவாமன்னவனுதவியசெம்மல்
எட்டுமாதிரம்புகழரியச்சுவனென்பார்
மட்டுவார்தொடையன்னவன்மருவினையளித்தான்
பெட்டசிந்தையாலவன்பிரணிந்தகற்பெற்றான்.

மாதிரம் - திசை. (௧௫)

அன்னவேந்துமோர்கிருதிதன்றனைப்பெறவவனும்
பன்னுதேவபீடன்றனைப்பயந்தனன்பகர்வோன்
மின்னும்வேல்விதூர்த்தன்றனையுதவவவ்வீரன்
மன்னுசீர்மகாகிருதியைமகிழ்ந்தளித்தனனால்.

பயந்தனன் - பெற்றான். (௧௬)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கிளரொளிமணிப்பூண்கெழுமுதோளேந்தல்கிருதராதன்றனைப்பெற்றான்
அளியுளர்நறுந்தார்புனைதருவெள்வேலவன்மகாரோமனையளித்தான்
களிசெயுமெகினப்பழனநாடுடையோன்கனகரோமாவினையளித்தான்
இளநிலவொழுகுமுத்தவெண்குடையானிரச்சுவரோமனையீன்றான்.

எகினம் — அன்னம். (௧௭)

அடையலர்நெய்த்தோர்நுகர்ந்துதேக்கெறியுமாடல்வேன்மன்னவன்மைந்தன்
துடியிடைமடவார்மதனெனுஞ்சீரத்துவசனுஞ்சனகனென்றுரைப்போன்
படைகொடுவேள்விபுரிதரவுழுசாற்பரப்பெழுஞ்சீதையைமகிழ்ந்து
கடிமணமயரவோமொழிப்பொருளாங்காகுத்தற்களித்தனன்களிப்ப.

நெய்த்தோர் - உதிரம், அடையலர் - பகைவர். (௧௮)

விண்ணவர்புகழமிதிலைநாடளிக்கும்விரிகதிர்மணிமுடிவேந்தன்
பெண்ணணங்காயசீதையாங்குதிப்பப்பெட்பொடுமுழுதசீரத்தால்
நண்ணுபேர்சீரத்துவசனென்றுரைக்குநலந்திகழ்சனகன்றன்மைந்தன்
தண்ணளிகூருங்குசத்துவசன்றான்றருமநற்றுவசனைத்தந்தான்.

சீரத்தால் - கலப்பையால். (௧௯)

தருமநற்றுவசனகித்துவசனையுஞ்சாற்றியமிதத்துவசனையும்
இருநிலத்தரசாகவீன்றெடுத்தானிருவருண்முன்னவனென்போன்
விரிபுகழ்க்கேசித்துவசனையுயிர்த்தான்விளம்புமப்பெயருடைவேந்தன்
புரையறுஞானக்கடலிடைக்குளித்துப்புவிப்பொறைதவிர்த்தினிதளித்தான்.

புரை - குற்றம். (௨0)

விரும்பெழில்கெழுமுமிதத்துவசப்பேர்வேந்துகாண்டிக்கனையளித்தான்
பொருந்துநற்கருமத்ததிசயித்தன்றேன்புரந்தினிதருளுநாட்புகன்ற

பெரும்புகழ்க்கேசித்துவசனுக்கஞ்சிப்பெயர்ந்துகாட்டகத்தமர்ந்தனஞ்ஞேற்
கரும்பெறற்கருமத்தையுறவொழித்தங்கவன்சொலுஞானமுமுணர்ந்தான்.

ஐயுறவு - சந்தேகம் (௨௧)

ஞானவாரிதிகேசித்துவசப்பேர்நரபதிமகிழ்தரவுதித்தான்
பானுமானன்ஞேன்வழிவருமரசர்பலருளர்நிமிமரபுதித்தோர்
தேனவாங்தொடையாய்சிறந்தநல்வினையாற்சிமிழ்ப்புண்டார்போன்றிருப்பினுநல்
மோனமாதவரும்வியப்பமெய்ஞ்ஞானமுதிர்ந்துளாரெனமுனியுரைத்தான்

ஞானவாரிதி - ஞானக்கடல். (௨௨)

நிமிமரபுரைத்த வத்தியாயம் முற்றிற்று

ஆகத்திருவிருத்தம்—௩௫௩

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்



பன்னிரண்டாவது

## சந்திரன் மரபுரைத்த வத்தியாயம்.



கலிவிருத்தம்.

சுந்தரவட வரைசூழுஞ்செங்கதிர்
வெந்திறன்மரபுகேட்டுவெந்நவேலவன்
சந்திரமரபினிச்சாற்றுவாயென
மந்திரமறைமுனிமகிழ்ந்துகூறுமால்.

செங்கதிர் - சூரியன், மரபு - வமிசம். (௧)

அந்தமிலாழிதாங்கங்கைமாயவன்
உந்தியம்போதிடையுதித்தநான்முகன்
தந்தனனத்திரிதன்னையன்னவன்
இந்துவையளித்தனனவிழியினென்பவே.

ஆழி - சக்ராயுதம். (௨)

மாதவன்கண்ணின்முன்வந்தமாமதி
வேதியரொடுங்கருவிண்ணின்மீன்புலன்
ஏதமில்வண்பதிக்கெழில்செய்வேந்தெனப்
போதுறுமயன்முடிபுனைவித்தானரோ.

போதுறும்அயன் - தாமரைமலரில்வாழ்கின்றபிரமன். (௩)

மணிமுடிவனைதரமகிழ்ந்துசந்திரன்
இணையறுவலியினுலிராசசூயமாம்

அணிபெறுமொருமகமாற்றிமுச்சகம்
பணிசெயவுவகையம்பரவைமூழ்கினான்.

உவகையம்பரவை - சந்தோஷசாகரம். (௪)

இருநிதிச்செருக்கினாலிமகரன்குரு
மருவியதாரையைமணந்துவைகினான்
அரியவெஞ்சமர்செயவழன்றுவானுறை
சுரரொடுமாமதிதனைவினைய்நினான்.

இமகரன் - சந்திரன். (௫)

தாரையைவிடுத்திநீயென்றுசார்ந்திரும்
போரினைநனிசெயும்புலவர்தம்மொடும்
சூருடையசுரரைச்சுடரும்வெள்ளியை
ஏருடையிமகரனியைந்தேற்றனன்

ஏற்றனன் - எதிர்த்தான் (௬)

எதிர்பொருமவ்வழியெய்தினான்முகன்
துதிசருகுருவெனுஞ்சுடர்செய்பொன்புணர்
கதிர்முலைவனிதையைக்கலந்ததென்கொனின்
மதியெனவழங்கலுமதிவிடுத்தனன்

பொன் - வியாழம் (எ)

சந்திரன்விடுத்தலுஞ்சார்ந்ததாரையை
அந்தணனோக்கிவம்பலனணைந்துறும்
இந்தவெங்கருவொழிகெனவுயிர்த்தனள்
சுந்தரம்விளங்கொருதோன்றலாகவே,

வம்பலன் - அயலான். (அ)

புனைதருகருங்குழற்பூவைநல்கிய
தனியெழிற்குழவியைச்சார்ந்துநோக்கலும்
பனிமதிக்கடவுளும்பகர்ந்தசீவனும்
எனதெனதெனவவணேக்கற்றூரோ.

சீவன் - குரு. (௯)

முனிவருமமரருமோகமைந்தனைக்
சனிமொழியாரைநீகலந்துபெற்றனை
எனவவண்வினவலுமிடர்செய்நாணொடு
துனியொடுதாரைசொல்லாதுவைகினாள்.

துனி - அச்சம். (௧௦)

தாரையைப்பார்த்தயன்றநயனைப்பெற
ஆரைநீமணந்தனையென்னவன்னவள்

பாரினைநாடுறநோக்கிப்பைப்பயப்
பேருறுமதிக்குநான்பெற்றதென்றனள்.

மதிக்கு - சந்திரனுக்கு. (௧௧)

ததைதமலர்க்கருங்குழற்றாரைசாற்றலும்
கதிரொளிகளுலியகாதலோன்விதி
மதிமகனென்னவும்வயங்குபுந்தியால்
புதனெனவழங்கவும்பெயர்பொருந்தினன்-

மதிமகன் - புதன். (௧௨)

பெருந்திறற்புதனெனும்பெயரினன்முனம்
திருந்திழையிளையெனச்செப்புமங்கையாம்
மருந்துறழ்சாயலைமணந்துபெற்றனன்
பொருந்தலர்வணங்குவேற்புரூரவாவையே

மருந்து - அமிர்தம் (௧௩)

அன்னவனற்குணமறிந்துநாரதன்
பொன்னகரடைந்தனன்புகழ்ந்துபாடினன்
மன்மொழிலுருப்பசிமகிழ்ந்துகேட்டனள்
துன்னமுன்மெழுகினிற்சோர்ந்துநின்றனள்

மன்மொழில் - அரசனழகு. (௧௪)

மருவியமித்திராவருணரென்பவர்
உருகுதலறிந்தவனுரைத்தசாபத்தால்
தரைமிசையுருப்பசிசார்ந்துநோக்கினள்
அரசனையரசனுமவளைநோக்கினன்.

தரா - பூமி (௧௫)

தரவுக்கொச்சகக்கலிப்பா.

கண்டானல்வியப்புற்றான்கவினுமமுதுகண்ணால்
உண்டான்போலுள்ளுவந்தானொளியிழையிங்கென்னுறுயிராய்த்
தண்டாமலுறைதியெனத்தாங்கரியகாதலுரை
விண்டானவ்வுரைகேட்டமெல்லியலும்விள்ளுவளால்.

கவினுமமுது - அழகாகிய அமுதத்தை. (௧௬)

அங்கணிலவேந்தேநின்னழகினலங்கண்டுளையத்
துங்கவெழின்மதனுமொருதோகையுருக்காதலிப்பான்
இங்கணெனிற்றேயநனியிருந்தவத்தினாற்கிடைத்தாய்
மங்கையர்யார்நின்னகலமருவாமலொழிபவரே.

காதலிப்பான் - விரும்புவான். (௧௭)

உன்னவரும்பல்சுவையாமுணவொழிந்துநெய்யருந்தி
நின்னகலம்புல்லிப்பனெமெய்யகல்யாணிவணிருப்பல்

என்னெனுநேன்னேயகல்கவிசைந்தவிந்தயாடிரண்டும்
மன்னவர்கண்மன்னவெனேமகிழ்ந்துறையக்காத்தருளே.

யாடு - ஆடு. (கஅ)

கோடாதசெயங்காலகொள்குரிசிலெனநிலவரைப்பின்
வாடாமலுணவுதவவந்தவிந்தயாடகலின்
தேடாதிருப்பினுநீசேர்ந்ததுகிலின்றிவா
நாடாதகின்னுருவாடினான்றீர்குவனால்.

குரிசில் - வேந்தன் (கக)

என்றுநயமொழிகூறியியையநதெழில்செய்கின்றவிரு
குன்றினெடுமிகல்குன்றநகொடுஞ்சமருற்றடற்றுதல்போல்
வென்றிதருவேலோன்றன்விளங்குமணிசேர்பயத்தில்
நன்றிதருகொங்கையிணைநெருங்கநலனுண்டனளே

சமருடற்றுதல் - போர்செய்தல் (உ௦)

இன்னணமவ்வேந்துமணியிலங்கிழையுமின்பமவ
மன்னமுகமுண்டுநெஞ்சமகிழ்ந்துநெடுநாள்கழித்தார்
உன்னிவிசும்பாராசனுருப்பசியைநீத்தலிற்றன்
பொன்னகரும்வான்செல்விபொலிந்திலதென்றேநவுதலால்

விசும்பாராசன் - இந்திரன் (உக)

கந்திருவரன்றோர்கள்கலந்துறையுநள்ளிரவில்
அந்தமுறுபேர்யாட்டையடைந்தாற்றவவ்வுதலும
சிந்தைமகிழ்செய்வோனைச்சிறந்தவென்றனுட்டினையார்
வந்துபிடித்தார்கொலெனமடந்தையதுநேர்ந்தனளால்

நள்ளிரவில் - நடுராத்திரியில். (உஉ)

தோய்ந்துறையுமவ்வேந்தன்றுகிலொழியவலையெழுந்
தாய்ந்தவர்கள்விட்டேகுமாடுகொடுமேவுதலும்
வாய்ந்ததொருமின்னன்னாள்வனேதுகிலில்லாவேந்தை
ஏய்ந்தெழிலாள்கண்டனளங்கிருவிசும்பிலேகினளே.

துகிலொழிய - ஆடைநீங்க. (உங)

முன்பொருந்துமுருந்துறழ்வெண்முகிணகையங்கேகுதலும்
என்பொருந்திலைகாமவெழுந்தனளென்றென்றிரங்கிப்
பொன்பொருந்திப்போக்கிமிகப்புலம்பும்வறியோர்களென
மன்பொருந்துமையறனேவழங்கவெவர்வல்லுநரே.

முருந்து - மயிலிறகினடி. (உச)

எங்குமெழுமோடலுறுமிருக்குமிறைபதைபதைக்கும்
ஓங்குமொளிறன்னுசப்பாருருவெளியைக்கலந்திவைக்கும்

சொன்னவாண்டினுக்கொருமுறைகண்டனன்றோய்ந்து
பன்னுமாயுவேமுதலிருமூவரைப்பயந்தான்.

தாழும் - வணங்குகிற. (கஉ)

உரைசெய்கின்றவவ்வுருப்பசியொள்ளிழையொருநாள்
அரசவென்றனையடைவதற்கொருவகையறைவல்
மருவியாழினர்க்கேட்டியென்றுரைத்தவண்மறைந்தாள்
விரைவினன்னவாறடைந்தவர்க்கேட்டனன்வேந்தன்.

ஒள்ளிழை - பெண் (கக)

கலிநிலைத்துறை.

விஞ்சைமன்னவர்வேந்துவந்துரைத்தலும்விருப்பால்
மஞ்செனுங்குழலுருப்பசிமுலைமுகமணப்பான்
ஏஞ்சலின்றிநீயெழின்மகமியற்றெனவியம்பி
அஞ்சுடர்க்கனற்றாழியொன்றளித்தனரன்றே.

தாழி - மிடா. (கச)

கொடுத்தவங்கியந்தாழியைக்கொணர்ந்திடையதர்க்கண்
விடுத்திதென்கொலென்றரசனுநகரிடைமேவ
எடுத்தியம்பியவிரண்டெனுமூழியான்றுளின்
அடுத்ததாதலாற்கருமம்வந்தவனுளத்தடைந்த.

அங்கியந்தாழி - நெருப்புமிடா, அதர் - வழி. (கரு)

கமழ்மலர்த்தொடைக்காவலனுருப்பசிகலப்பான்
இமையவர்க்கிதஞ்செய்மகமியற்றுவலெனப்போய்
உமிழ்கதிர்க்கனற்றாழியையுய்த்துழிக்காணன்
சமிகருப்பமாந்தடஞ்சினையரசவட்கண்டான்.

உய்த்துழி - வைத்தவிடத்தில். (கசா)

கண்டிரும்பினிற்கருதியநூல்வழிகுறைத்துக்
கொண்டுவந்துமேலரணிதானுகமுன்கூறும
கெண்டையந்தடங்கண்ணனுளுருப்பசிகீழா
அண்டரும்புகழரணியாமதிக்குமத்தண்டம்.

அரணி - தீக்கடைகோல். (கஎ)

இலிங்கமாகவங்கெண்ணினன்கடையவங்கெழுந்த
புலிங்கமார்தழன்மூன்றெனப்பிறிந்தனபொருந்தத்
துலங்குவேதமுமூன்றெனப்பிறிந்தனசொல்லும்
நலங்கொள்வேள்வியும்பற்பலபுரிந்தனனவில்வோன்.

புலிங்கம் - தீப்பொறி. (கஅ)

ஆதியாம்யுகத்தருமறைகுடிலையாயடங்கும்
சோதிமாயவனொருத்தனுங்கடவுளாய்த்துலங்கும்

சாதியோர்வகைத்தாகியேசத்துவகுணத்தாம்
பேதமாகியவினையின்றிஞானமேபிறங்கும்.

குடிலை - பிரணவம். (௩௯)

அரியவாதியாம்யுகமொழித்தாங்கிரண்டாய
உரைசெயூழிவந்தடைதலாற்கருமமுண்டாக்கிப்
பொருவில்வேள்விகள்புரிந்தவப்புரூரவாவென்போன்
மருவினனுருப்பசிமுலைவானுலகடைந்தே.

பொருவில் - ஒப்பில்லாத. (௪௰)

சந்திரன் மரபுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௪௱௩.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

பதின்மூன்றாவது

## பரசுராமவிசுவாமித்திரர்கதையுரைத்தவத்தியாயம்.

இசைநிலாவெடுத்தியம்பியபிதாமகனெய்ப்ப
வசையிலாவுருப்பசிமுலைமணப்பவங்குதித்தோர்
அசைவிலாயுநற்சுதாயுவசத்தியவாயு
விசையன்வேற்சயன்ரயனெனவறுவராம்விளம்பின்.

பிதாமகன் - பிரமன். (௧)

தூமவார்குழலார்க்குவேள்சுதாயுவென்றுரைப்போன்
வாமமேவியசீர்வசுமான்றனையுயிர்த்தான்
தாமவேலினன்சத்தியவாயுவென்றுரைப்போன்
நாமமாப்படைச்சுதஞ்சயன்றன்னைநல்கினனால்.

தூமம் - புகை. (௨)

ரயனெனேந்தனற்சுருதஞெம்டகனையீன்றான்
சயனெனுந்திறலோனமிதன்றனைத்தந்தான்
வியனிலம்புகழ்வீமனையுயிர்த்தனன்விசயன்
பயன்படுந்திறல்வீமனுங்காஞ்சநற்பயந்தான்.

ஏந்தல் - அரசன். (௩)

தரைக்குவேந்தனுங்காஞ்சநனேத்திரற்றந்தான்
திருத்தகுந்திறலான்றருசன்னுவாந்திறலோன்
இரைத்துவேள்வியினெய்தியகங்கையுண்டினன்போல்
விரித்தபைங்கதிர்க்குழையணிசெவிவழிவிடுத்தான்.

இனன் - சூரியன். (௪)

மன்னுகங்கையாள்சாநவியெனும்பெயர்மருவ
முன்னுகர்ந்துதன்செவிவழிவிடுத்தவம்முனிவன்
சன்னுவென்பவன்றந்தனன்பூருவைத்தந்தான்
அன்னவன்வலாகனையவனசகனையளித்தான்.

நுகர்ந்து - விழுங்கி. (௫)

குசனெனுந்திறன்மன்னனையவன்றரக்குசனும்
இசைவளர்ந்தவற்குசாமபனொடெழில்கொளமூர்த்தன்
திசைபுரந்திடுந்திங்களங்குடைக்குசநாபன்
வசுவெனும்பெயர்நால்வரைப்பெற்றனன்மகிழ்ந்தே.

திங்களங்குடை - சந்திரவட்டக்குடை. (௬)

ஓதுநால்வருட்குசாம்பனென்றுளபெருமுரவோன்
காதியென்னுமோர்மைந்தனைத்தந்தனன்காதி
தாதுசேர்குழற்சத்தியவதிதனைத்தந்தான்
மாதைமாமறையிருசிகன்மணஞ்செயமதித்தான்.

தாது - மகரந்தம். (௭)

மதித்தமாமுனிமன்னனையெய்தியின்மகளை
விதித்தமன்றலினுதவெனவேந்தனுந்திருவம்
உதித்தமாமதிபோல்விளர்த்தொருசெவிபசுத்து
துதித்தவாயிரந்துரகந்தரினெனச்சொன்னான்.

விளர்த்து - வெளுத்து, பசுத்து - பசுமையாகி (௮)

பெற்றபேதையைத்தருமணம்பொருந்திடானவேகம
கொற்றவாம்பரிவருணனைக்கேட்டனன்கொணர்ந்து
முற்றமாதவமுனிவரன்கொடுத்துமுன்மொழிந்த
கற்றைவார்குழற்கன்னியைமணந்தனன்களித்தான்.

வாம்பரி - தாவுகின்றகுதிரை (௯)

ஏதநீங்கியமகப்பெறவிரும்புநல்லவட்கும
ஓதுமாமியென்றுரைதருமொள்ளிழைதனக்கும
தீதுநீங்குதங்குலத்தினுக்குரியநற்சிறுவர்
காதலால்வரவிருசிகமுனிவரன்கருதி.

ஏதம் - குற்றம் (௧௦)

பிரமமந்திரத்தாலுநற்பெரும்புகழரசற்
குரியமந்திரத்தாலுமுண்டாக்கிருவகைத்தாம்
சருவைமாறியவ்விருவருநுகர்ந்தனர்தாங்கும்
கருவைநோக்கினன்காதலிக்கம்முனிகழறும்.

சரு - தேவருணவு. (௧௧)

உனக்குவைத்திடுஞ்சருவைநீதாய்க்களித்துத்தாய்
தனக்குவைத்தவச்சருவினைநுகர்ந்ததன்மையினால்

சினக்குநெஞ்சடைச்சிறுவனைப்பெறுகுவைதிருத்தாய்
மனக்கிதஞ்செயமைந்தனையுயிர்ப்பொன்றிசைத்தான்.

நுகர்ந்த - உண்ட (௧௨)

என்றுகூறலுமனையவளிரங்கினளெனக்கு
நன்றிசெய்யநன்மைந்தனையெங்கெனவினவ
துன்றுமாதவற்றொழுதெறுதுன்னலர்ச்செகுத்து
வென்றியோடனைமகப்பெறவெனமுனிவிதிக்கான்

செகுத்து - கொன்று. (௧௩)

சாற்றுமாமருடருஞ்சமதக்கினியாமுனியைப்
போற்றுமாறுபெற்றவந்தனள்கவுசிகைபுகலும்
சீற்றநீங்குதன்னாயகன்வீடுறச்செல்ல
ஆற்றுமாதவத்திருநதியாயினளன்றே

சாற்றுமாறு - சொல்லும்வண்ணம் (௧௪)

அயர்வொழிந்திடச்சத்தியவதியெனவழைப்ப
பெயர்பொருந்தியகவுசிகைதாயெனும்பேதை
துயரகன்றிடவானவர்முதலினர்துதிக்கும்
உயர்பெருந்தவக்கோசிகன்றன்னையாங்குயிர்த்தாள்

பேதை - பெண். (௧௫)

தரைசொன்மாதவஞ்சாருமெய்ச்சமதக்கினிமுனிவன்
முரசமார்ப்புறரேணுகைதனைமணமுயன்று
கருதுசீர்புனைசிலமகவுயிர்த்தமால்கலையாம்
பரசுராமனைப்பார்பொறைநீக்குறப்பயந்தான்

மால்கலை - விஷ்ணு அமிசம் (௧௬)

பரசுராமனென்றுரைதருபசுந்துழாயணிவோன்
அரசர்யாவருமடிதொழுமாயிரந்தடக்கைக்
குரிசிலாகியகார்த்தவீரியன்றனைக்கோறல்
உரைசெய்வேனெனச்சுகமுனியரசனுக்குரைப்பான்

கோறல் - கொல்லுதல். (௧௭)

கலிவிருத்தம்

தத்துதெண்டிரைச்செழுந்தரணிகாத்தபூங்
கொத்தலர்தொடையலாய்குமாரனைவே
அத்திரிபுதல்வனையடைந்தொராயிரம்
கைத்தலம்படைத்தனன்கார்த்தவீரியன்.

தத்துதெண்டிரை - தாவுகிறதெள்ளிய அலைகளையுடையகடல். (௧௮)

எத்துசீர்விதுகுலத்துதித்தவேந்தலாம்
கார்த்தவீரியன்வலிகழறயார்வலார்

சீர்த்தியாரொருகுடைநிழற்றித்தெண்டிரை
ஆர்த்தவேழ்வாரிசூழவனியோம்புநாள்.

விதுகுலம் - சந்திரகுலம். (௧௯)

பாடினவளியினம்பரந்தபைந்தொடை
சூடினநறுங்குழற்றோகைமாரொடு
நாடினனருமறைதநண்ணிநீர்விளை
யாடினனாயிரங்கையினனரோ.

அளியினம் - வண்டுக்கூட்டம். (௨௦)

எண்ணுறுதிசைகளுமேகிவென்றுவந
தெண்ணுறுபடையொடுமிலங்கைமன்னவன்
கண்ணுறுஞ்செழுமலர்களுமந்நதிக்
கண்ணகன்கொழுநகரைகலந்துவைகினன்

இலங்கைமன்னவன் - ராவணன். (௨௧)

காயிருங்கதிர்செய்வேற்காத்தவீரியன்
ஆயிரங்கரத்தினலடைத்தங்காடலும்
மேயநன்னதிப்புனன்மீண்டிலங்கையார்
நாயகன்றாய்தாநிளைத்ததென்பவே.

ஆடலும் - மூழ்கலும். (௨௨)

எண்டிசைவென்றவணிறுத்தராவணன்
தெண்டிரைநதிப்புனறேங்கலென்னென
மண்டமர்வெம்படைமருவிமன்னனைக்
கண்டமர்விளைத்தனன்கனன்றுநெஞ்சமே

இறுத்த - தங்கின. (௨௩)

தரங்கநன்னதிக்குடைதடக்கைமன்னவன்
குரங்கினைப்பிடித்துடன்கொணருமாறுபோல்
இரங்குறக்கைப்பிணித்திலங்கைமன்னனைப்
புரங்கொடுபுகுந்தனன்புகுந்தமாலைவாய்.

தரங்கம் — அலை. (௨௪)

மாதவப்புலத்தியன்மருவிமன்னநின்
ஏதமில்வலியையாரியம்பவல்லரென்
றோதினன்விடுத்தியென்றுரைப்பவெய்யனை
மேதகுகுணத்தினன்விடுததிட்டானரோ.

வெய்யனை - கொடியனை. (௨௫)

மூவகையுலகமுமொய்ம்பின்வென்றுநேர்
தாவரும்புகழ்த்தயமுகனையும்பிணித்

ஈந்துநூறுகையாடல்விற்கொள
ஈர்ந்துநூறுகையம்புதொட்டிட
வந்துவேகமார்வாசிபூண்டதேர்
வந்துபோர்செய்தான்மன்னர்மன்னனே

**வாசி** - குதிரை, வாதுவேகம் - வாயுவேகம (௩௩)

வெந்திறற்பரசேவலேந்தியன்
கந்தமுற்றதார்க்கார்த்தவீரியன்
சிந்தினனுயிர்சென்னியற்றவன்
மைந்தர்யாவருமவல்லையோடினார்

**வல்லை** - விரைவாக (௩௪)

புயவார்தபுராருரியநலகும
காமதேனுவைக்கண்டுகொண்டுடன்
சேமமாதவன்சேர்ந்தசாலைவாய்
நாமராமனுநண்ணினனரோ.

**உரிய** - உரியவற்றை (௩௫)

காதைதாளிணைசார்ந்துகைதொழா
ஓதினனவனுற்றவாறெலாம்
மீதிமாதவனெஞ்சுநொந்துகேட்
டீதுநீசெய்தாயென்றுசொல்லுவான்

**ஏதம்** - குற்றம (௩௬)

சொல்லுமந்தணர்துன்புசெய்துளார்க்
கல்லல்செய்திடாரருளின்வைகுவார்
வில்லொடம்பையுமேவிவேந்தையும்
கொல்லும்வெஞ்சினங்கொண்டதென்கொலோ

**அல்லல்** - துன்பம. (௩௭)

காவல்வேந்தனைக்கடிதுகாதுவெம்
பாவநீப்பவிப்பாரின்வைகிய
தாவிநீர்த்தநீசார்ந்துதோய்திவென்
றேவமைந்தனுமேகினனரோ

**காது** - தாக்குகிற. (௩௮)

நீண்டவானதிநீராடியாய்
மாண்டநீரெலாம்வல்லையேகியோர்
ஆண்டுமூழ்கினனடர்கணிச்சியான்
மீண்டுசாலைவாய்மேவிவைகுநாள்.

**நீரம்** - நீர், கணிச்சியான் - பரசுராமன். (௩௯)

உற்றது தண்ணக்கையனெனல்லைவந்தணுகிக்கேளாக்
கொற்றவிற்குழைத்துவீரர்க்கொன்றுதன்றாதைசென்னி
பெற்றனன்கொணர்ந்துசாலைப்பெய்திடுமுடலிற்சேர்த்தி
இற்றிடுங்கருமமுற்றவிலங்கமுன்மடுத்திட்டானல்

தண்ணக்கையன் - பரசுராமன். (சஎ)

அறந்தவன்றலையையன்னோர்தடிந்தவக்காலதன்னை
வருந்தினண்மார்பின்மூவேழ்வருமுறைபுடைத்தவாற்றால்
பொருந்தியவறத்திற்றீர்ந்தபுரவலர்தம்மைமூவேழ்
தருந்தலைமுறைபுரைய்தாதன்றனிமறைப்பரசுராமன்

தடிந்த - அறுத்த (சஅ)

சமந்தருபரிதிவேலாதலைதுமித்துயர்ந்தகுன்றம
சமந்தரக்குவைகள்செய்துதரையிழிகுருதியாற்றல
சமந்தபஞ்சகமென்றோதுஞ்சலதிநோர்தடங்களாக்கிச்
சமந்தமம்புரிந்ததாதைதருப்பணமுஞற்றினனல்.

சமம் - போர், சமம் - ஒப்பு, சலதி - கடல் (சகூ)

பெசுமநவியத்தண்ணல்பெட்பொடுமகன்காற்றிக
காசிபன்முதலினோர்க்குக்காசினிபிறிதுநல்கித்
தேசுறுஞ்சித்தராறிதேவர்கள்வணங்கவின்னும
மாசறுமகேந்திரப்பேர்மலையகத்துறைவான்மன்னோ

நவியத்தண்ணல் - பரசுராமன். (ரு0)

காதிச்சேயன்னமுன்னங்கழறியகௌசிகப்பேர்
மாதவனூற்றினொடுமருவுமோர்மகவைப்பெற்றான்
ஓதியமைந்தர்தம்முளொளிபெறுநடுவனுள்ளான்
கோதறுமதுச்சந்தப்பேர்குலவியகுமாரனுமால்.

சேய் - புதல்வன். (ருக)

கோசிகன்றவஞ்செய்போம்துகுலவியமருகனென்பான
றேசுமம்பரீடன்வேள்விப்பெரும்பசுவாகச்சார
ஆசறுமறையங்கோதென்றருமறையறைந்தானன்னோன்
தேசுறுவேள்விச்சாலைசென்றனன்யூபஞ்சேர்ந்தான்.

யூபம் - யாகத்தம்பம் (ருஉ)

சேர்ந்தவன்முனிவன்சொற்றசெழுமறையுளத்திற்றேற
வார்ந்தசெஞ்சடையோனாதிவானவர்மகத்திற்றோன்றி
ஆர்ந்ததுவேள்வியென்னவரசனுக்கருளிப்போயார்
ஓர்ந்தவம்மறைவல்லோனுமுயர்ந்தொருபெயருமுற்றான்.

வார்ந்தசெஞ்சடையோன் - சிவன். (ருந)

உற்றபேருரைப்பிற்றேவராதனவ்வொருவன்றன்னைக்
குற்றமின்மறையோனையகோசிகன்மகவாய்க்கொண்டு

பெற்றதன்புதல்வர்தம்முட்பெட்புறாதிகழ்ந்துள்ளாரைச்
சொற்றிடும்வேச்சாகச்சொற்றனன்வெகுண்டுமாதோ.

பெட்புறாது - விரும்பாமல். (௫௪)

மருவியமதுச்சந்தம்பர்மைந்தனைமுனிவாமைந்தர்
அருள்புரிதாதைசொல்லையஞ்சிமுன்னவனைக்கொண்டார்
கருதியகௌசிகப்பேர்கலைக்கோதிநாதனாகி
உரைதருந்தவராசனுவந்தனன்சாலமாதோ.

சால - மிகுதியாக (௫௫)

புனைதருமலங்கல்வெவ்வேற்புரவலன்கன்றதாதை
நினைதருமுணர்வின்மிக்கோர்களுந்தமூவர்நிகழ்த்தல்கேட்பார
வினைதருபிறவிவேலைவீழ்ந்திடார்வையமடல்பெற்று
வனைதருகாளவமாயன்மலரடிபெறுவர்மாதோ

அலங்கல் — பூமாலை, வேலை - கடல் (௫௬)

பரசுராம விசுவாமித்திர கதையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — ௪௫௯

ஸ்ரீ கிருஷ்ண சகாயம்

## பதினைன்காவது

## யயாதி கதையுரைத்த வத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பொருதிரையுததிசூழ்புவிபுரந்தபுரூரவாவளித்தருள்புதல்வன்
மருவலர்வணங்குமாயுவென்றுரைப்போன்மைந்தரையிசைக்குறினதுடன்
அருள்புரியாசருருத்தனோடரசியரம்பனெனச்சிலைமதனென்ன
இருவிசும்பாள்வோன்றுதையென்றிறைஞ்சுமேனசுவெனவிளம்புவாரால

உததி - கடல், மருவலர் - பகைவர். (௧)

அவர்களிலரசவிருத்தனன்மரபிலாழியான்கலையெனுமரிய
தவர்புகழ்தன்வந்திரியுநல்லிருக்காந்தனிமறைச்சவுனகராதி
நவிலுமந்தணருமறுபதோடாறினண்ணுமாயிரமெனும்பருவம
புவிபுரந்தருளுமளர்க்கனைமுதலாய்ப்புகழ்பெறுவேந்தருமுதித்தார்.

ஆழியான்கலை - விஷ்ணுவினம்சம். (௨)

நானிலம்புரந்தநகுடன்முன்னுயிர்த்தோர்நயம்பெறும்யதிபுகழ்யயாதி
வேனிலஞ்செல்வனிவன்கொலென்றெண்ணவிளங்குசையாதியேரயாதி
தேனினமுரலுஞ்செழுமலர்த்தொடைவேய்திண்புயவியதிநற்கிருதி
ஈனமொன்றில்லாவறுவரென்றுரைப்பாரிவர்களின்யதியெனவிசைப்போன்.

வேனிலஞ்செல்வன் - மன்மதன். (௩)

துறவறம்பூண்டுதுலங்கினைகுடன்சுரர்பதியாய்விசும்படைந்து
நிறைதவத்தெழுமாமுனிவர்சாபத்தாலெடுமலையராவெனவீழ்ந்தான்
மறமிகுங்குடுமிவேலிளையவர்தாமருவுநாற்றிசைபுரந்தளிப்ப
அறைதருபுகழ்ச்சர்யயாதிமெய்ப்புவியுமவிர்மதிக்குடைநிழற்றினனும்

சுரர்பதி - இந்திரன் (௪)

அள்ளிலைநெடுவேல்யயாதியென்றுரைப்பானசுரர்தங்குருவெனவமர்ந்த
வெள்ளிதன்மகளைமணந்தனனென்னவிண்டுரைநப்பெயர்வேந்து
தள்ளரும்பெருமையந்தணர்குலத்திற்றையலைமணந்ததென்னரசன்
எள்ளருமுனைவவியம்புதியென்னவிருந்தவமுனிவரனிசைப்பான்

வெள்ளி - சுக்கிரன். (௫)

காவியனீன்றகதிர்முலைத்துவர்வாயககருங்குழற்கன்னிசெங்கமலப்
பாவையாந்தெய்வயானையென்றுரைக்கும்பணைமருமேடாளியுமவுணா
கோவெனுமாடல்விடவருவாவாங்கொற்றவன்பெற்றபூங்குழலாள்
காவிலாவெழிலாள்சன்மிட்டையென்னுந்தையலுந்தடங்குடைந்தனராக

காவியன் - சுக்கிரன், பணை - மூங்கில் (௬)

ஆயிரமடவார்சூழ்தரவறுவையகன்கரைவைத்தனருவந்து
தூயநீராடும்வேலையினீசன்சுடர்விடுமானமேற்சென்ற
ஏயபேர்மடவார்யாவரும்விரைந்தங்கிலங்கியதுகில்புனைபெயலவை
சேயமார்தெய்வயானைதன்றுனைநிகழ்த்துசன்மிட்டையுற்றுடுத்தாள்

அறுவை - ஆடை. (௭)

கலிநிலைத்துறை

காவியன்றருநகருங்குழற்காரிகைகரைசேர
ஆவியந்துகிலாங்கவள்புனைதலுமழலார
ஓவியம்புரையொள்ளிழையுயர்பர்தம்முனவை
நாவியந்துணுநாய்நிகர்ப்பாயெனநவின்றாள்

காவியன்றருநகடுங்குழற்காரிகை - தெய்வயானை. (௮)

மங்கைசொல்லுதல்கேட்டுளம்வருந்துசன்மிட்டை
வெங்கருங்கொடிமிச்சிலைவேட்டுணுமாபோல்
எங்களில்லுடையிரந்துணுமேழையென்றவளைத்
தங்கரும்புனலற்றவாழ்கூவத்திற்றள்ளா.

கொடி - காகம், மிச்சிலை - எச்சிலை (௯)

உள்ளுவந்துமங்கையரொடுமனையகத்துற்றாள்
வெள்ளிநல்கியமெல்லியல்கூவத்தின்மெலிந்
எள்ளருந்திறற்படையொடும்வேட்டம்வேட்டெழுந்த
தள்ளரும்புகழ்யயாதிகண்டனனவட்சார்ந்தே.

வெள்ளிநல்கியமெல்லியல் - தெய்வயானை. (௧௦)

ஓதுமாயிரமடந்தையரோடவனுற்ற
தாதியாகியசன்மிட்டைதன்றொழும்பியற்ற
ஆதிதோளிணைபுல்லினளன்னவளளித்தாள்
சோதிசேரணிபுனையெதுவொடுந்துருவசுவை.

தொழும்பு - தொண்டு. (௧௮)

இகல்செய்வேல்விழியிலங்குசன்மிட்டையையாதி
திகழும் வெள்ளிதன்மகளறியாவகைசேர்ந்தாங்
ககமகிழ்ந்தனனளித்தனன்றுருகுவையதுவைப்
புகழும்வெற்றியும்படைத்தநற்புருவைப்புவிமேல்

இகல்செய் - போர்செய்கிற. (௧௯)

தொழும்புசெய்தசன்மிட்டைதன்றுணை | லைதோய்ந்தாங்
கெழும்பிறைக்கொழுந்தெனவளாகுழவிபெற்றிறைவன்
விழைந்ததன்மையைவெள்ளிதன்மகள்விரைந்தறிந்து
குழைந்தநெஞ்சொடுதாதைபாணடந்தனள்கூற.

துணை - இரண்டு (௨0)

மனைவிவெஞ்சினத்தேதகலுமன்னவன்றகையாப்
புனைமலர்க்குழல்பொறுத்தருளெனப்புகன்றடிமேல்
தனிவணங்கலுமறுத்தவடாதையைச்சார்ந்தாள்
னிநடுங்கியந்நாதனுந்தொடர்ந்துநண்ணினனால்.

தகையா - தடுத்து. (௨௧)

தலைவனவ்வழிவிலக்கினன்றொடாலுஞ்சார்ந்தாள்
மலையெனும்புயன்மாதுசன்மிட்டையைமணந்து
கலையரும்பியமதிபுரைகாதலர்ப்பெற்றாங்
கலகிலன்புசெய்கின்றனனையவென்றறைந்தாள்

மதிபுரை - சந்திரனைநிகர்த்த. (௨௨)

மகள்வருந்தியங்கியம்புதல்கேட்டவம்மறையோன்
துகள்புரிந்தனைமன்னவவெனச்சுடுசினத்தால்
உகள்கருங்கயலோடரிக்கண்ணியருன்னை
இகழவெவ்வியமூப்புருவெய்துகவென்றான்

துகள் - குற்றம் (௨௩)

அழன்றுவெள்ளியங்கறைந்தவாறவ்வுருவடைந்தோன்
சுழன்றுவண்டுறைசுரிகுழனின்வயிற்றோன்று
நிழன்றதண்மதிமுகத்தினனேயமென்னெஞ்சின்
கழன்றதில்லையென்றிறைஞ்சிடக்காவியன்கழறும்.

கழன்றதில்லை - நீங்கிற்றில்லை (௨௪)

கொடுக்கவும்மிதுவாங்கவுமுரித்தெனக்கோமான்
நடுக்கமவ்வழிநீங்கியிந்நவையுருநண்ணி

அடுக்குநல்லுருவளித்தவற்கரசியலளிப்பன்
விடுக்கருந்தவவெனப்பணிந்தணங்கொடுமீண்டான்.

நவை - குற்றம். (௨௫)

நீண்டவவ்விறைமைந்தரைத்தனித்தனிமேவிப்
பூண்டவிக்கிழவுருவினைப்பெற்றுத்துநும்பானவை
ஈண்டுநல்கிடினரசியலளிக்குதுமென்ன
மாண்டதன்றெனவெதாமுதனுல்வருமறுத்தார்

பொறுத்து - தாங்கி (௨௬)

பூருவாகியமைந்தனம்மூப்புருப்பொருந்தி
ஏருலாவுநட்டிளமையையிறைவனுக்கீந்தான்
சீருலாவியமதனெனச்சிறந்தவவ்வேந்தன்
வாருலாமுலையார்நலமாந்தினன்மாந்தா.

மாந்தினன் - அநுபவித்தான். (௨௭)

பருவமாயிரம்பாவையரினாலம்பருகி
அருவமாமறிவாலசத்தாசையென்றறிந்து
தருவனுமுணர்ந்தருமுருநல்கினன்றன்மூப
பருகும்வாங்கினன்யயாதியெனுறைகருவெவுரவோன்.

இளநலம் - இளமையின்பம் (௨௮)

இளமைநல்கியபூருவுக்கிசைத்தவாறிப்பார்
உளமுவந்தவனேம்நல்லொளிமுடிபுனையா
வளமிருந்தநாற்றிசையையுமன்னவர்மன்னன்
அளவிகந்தசீரொதுமுதனுல்வர்க்குமளித்தான்

ஓம்ப - ஆளும்படி. (௨௯)

வண்ணச்சேயிழையுசனன்றன்மகண்முகநோக்கிக்
கண்ணிற்காண்பவுங்காதினிற்கேட்பவுங்கருதோ
டெண்ணிற்பார்த்திடிற்பொய்யெனவயன்சிலவியம்பி
நண்ணிக்காட்டகத்தாற்றுதுங்கவமெனநடந்தான்.

உசனன் - சுக்கிரன். (௩0)

காமமானதுகுறையையேதருமெனக்கடிந்து
தீமைதீர்தாவனத்தினிற்சிலபகல்சேர்ந்து
பூமியோரடிப்பொதிந்திடுபுனிதனைநினையுஉ
நாமவேலினுளெளிவிசும்பணவிநண்ணினனல்.

பூமியோரடிப்பொதிந்திடுபுனிதன் - திருமால் (௩௧)

ஆவிநேர்தருநாயகனிசைத்தவாறலர்ந்த
பூவினுன்றருமுலகுபொய்யெனத்தெளிபுலத்தாள்

மேவுமூன்றெனுமெய்யுமங்கொழிக்குபுவிளங்கும்
தேவயானையுமயர்வறவுயர்கதிசேர்ந்தாள்.

புலத்தாள் - அறிவினையுடையவள். (௩௨)

பயாதி கதையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—சகூச.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.



பதினோந்தாவது

## பூருமரபுப் பரதன் கதையுரைத்த வத்தியாயம்.



வேறு

போர்வேல்விசயம்புனைகின்றயயாதிமைந்தன்
பார்மேவுவேந்தன்பழிதீர்புகழ்ப்பூருவென்னும்
சீர்மேவரசன்றிகழ்நின்குலச்செல்வனன்னோன்
ஏர்மாமரபிற்றிறம்யாவரியம்புமீட்டார்.

விசயம் - வெற்றி. (க)

அன்னோன்மரபினருட்கண்ணுவனாதியாய
நன்னான்மறைதேரறவோர்களுநாட்புடற்றும்
கொன்னார்வடிவேலிறையோர்களுங்கோதமன்சேர்
மின்னாரிடையும்பிறந்துற்றுவிளங்கினரால்.

நாட்பு - போர். (உ)

உன்மாமரபிற்சிலவேந்தரையோதுதுங்கேள்
பொன்மாமணியாற்புனைபூணணிபூருவென்போன்
தன்மாமசலைசனமேசயன்சாற்றுமன்னோன்
தொன்மாமரபின்வழிவந்தனன்றுட்டியந்தன்.

பூண் - ஆபரணம். (௩)

உரைப்பாளொளிர்மாமதிவெண்குடையொன்றினலித்
திரைப்பார்புரந்தாங்கொருகோனனிசெல்லநின்றான்
விரைப்பாதவங்கண்மிடைகாட்டினில்வேட்டமாடித்
தரைப்பாலடங்கப்படைசூழ்தரச்சார்ந்தகாலை.

பாதவங்கள் - மரங்கள். (௪)

கலிவிருத்தம்.

விண்ணவர்க்கருள்புரிவிமலனாகிய
அண்ணலந்துளவினற்கன்புசான்றமெய்க்

கண்ணுவன்சாலைசூழ்சோலைகண்டவண்
நண்ணினனலவலர்நாட்டினனோ.

துளவினாற்கு - திருமாலுக்கு. (௫)

புகுந்தளையுறைந்தெழும்புயங்கத்தாடியோர்
முகுந்தளையருந்துமெய்ப்பொருளுக்கன்பினன்
நகுதளையவிழ்மலர்ச்சோலைநாடுவோன்
சகுந்தளையென்பவடன்னைக்கண்டனன்.

அளை - வெண்ணெய், புற்று, புயங்கம் - பாம்பு (காளியன்). (௬)

கண்டனன்கண்ணிணைகளிப்பக்காமநோய்
கொண்டனனெனமனங்கொண்டதன்மையான்
மண்டமர் கடங்களுண் மன்னர்தங்குலத்
தொண்டொடியாகுமென்றுள்ளத்துள்ளினான்.

ஒண்டொடி - பெண். (௭)

அண்ணலங்களிறனானுரைநீயெனத்
தண்ணறுங்குழலினாடவஞ்செய்கோசிகன்
பெண்ணெனமேனகைபெற்றிங்கேகினாள்
கண்ணுவன்வளர்த்தனன்காதலுற்றமேரா.

கோசிகன் - விசுவாமித்திரன். (௮)

என்றுதன்னியற்கையங்கிசைத்திலங்குசீர்
வென்றிறன்மன்னவவருத்தநீங்கநீ
நன்றிவணுறைந்தபின்னடக்கவேண்டுமேல்
ஒன்றுதியென்னவுமுரைசெய்கின்றனள்.

இசைத்து - சொல்லி. (௯)

அன்னவன்முகமணங்கறைதல்கேட்டலும்
இன்னருட்கோசிகனீன்றதன்மையால்
நன்னயக்குணனனிநண்ணினாளென
மன்னவர்மன்னவன்மகிழ்ந்துசொல்லுவான்.

அன்னவன்முகம் - அவனுக்கெதிரே. (௧௦)

நல்லெழில்வரன்றனைக்காணினங்கைமார்
புல்லுவரவரெனப்புகன்றுநீயுமென்
அல்லலிங்ககற்றெனவணங்குநேர்ந்தனள்
சொல்லுநன்மணத்தினிற்றோய்ந்துவைகினான்.

புல்லுவர் - தழுவுவார். (௧௧)

ஓர்பகன்மணங்கொளீஇயுறைந்துமற்றைநாள்
சீர்வளர்வளநகர்சென்றுவைகினான்

பார்புகழ்பாதனும்பாலகன்றனை
வார்குழற்சகுந்தலைவயிறுவாய்த்தனள்.

மணங்கொளீஇ - மணம்புணர்ந்து. (கஉ)

பிறையெனவளர்ந்தவப்பிள்ளையாளியின்
விறலணங்கொடும்விளையாடல்வந்துகண்
டறைதருகண்ணுவனுழிமாயனும்
இறைகலையிவனெனவெண்ணினனரோ.

ஆளியின் - சிங்கம்போல. (க௩)

எண்ணியகண்ணுவனீன்றசேயொடும்
ஒண்ணுதல்வனிதையுன்பதியைமேவென
மண்ணகம்புரந்தவம்மன்னைமன்னினள்
அண்ணலும்யார்கொலென்றையுற்றனனோ.

சேய் - புதல்வன். (கச)

முன்னவணடைந்ததுமுயங்குசெய்தியும்
பின்னெழிற்புதல்வனைப்பெற்றவண்ணமும்
இன்னெழிற்சகுந்தலையிறைஞ்சிமென்மெலப்
பன்னலும்பார்த்திவன்பழிச்சொலீதென்றான்.

முயங்கு - புணர்ந்த. (கரு)

ஆங்கெழுந்தந்தரவாணியையுமேறல்
வாங்குநுண்ணிடையுன்மனைவிமன்னவோர்
தீங்கிலள்கற்பினாற்சிறுவனீபெறும்
ஓங்கெழிற்புதல்வனீயமேகாதின்மால்கலை.

அந்தரவாணி - ஆகாயவாணி. (கசு)

சங்கநல்விரேகையைத்தடக்கைகாட்டுமால்
பங்கயவிரேகையைப்பாதங்காட்டுமால்
இங்கிவனேமுலகோம்புமென்றலும்
சிங்கமொத்தவனுளந்தேறினனரோ

பங்கயம் - தாமரை. (கஎ)

பெருவிறற்பாதனும்பிள்ளைதன்னொடும்
உரைதருமனைவியன்றுற்றமின்னொடும்
மருவியநகுறைந்தனன்மன்னனைம்பது
புரவியின்வேள்வியும்புரிந்துவீடுற்றான்.

புரவியின்வேள்வி - அசுவமேதயாகம். (கஅ)

நீரகம்பொருந்தியநித்திலத்தொடு
தேரகம்பொருந்துசெங்கதிரின்மாமணி

ஆரகமுடிபுனைந்தாழியேழுஞ்சூழ்
பாரகம்புரந்தனன்பரதனென்பவே.

நித்திலம் — முத்து. (௧௯)

வாழிவானவர்பகைமாய்த்தவார்திரை
ஆழிசூழ்புவிமுழுதாண்டுநல்லறம்
சூழுநான்முறைவழிதுரங்கவேள்வியி
னேழுநூறுயிரம்பல்பின்னுமாற்றினன்.

துரங்கவேள்வி - அசுவமேதயாகம். (௨௦)

நிரைத்தமாமணிக்கடனிலந்திரையன்பொடு
பரித்தகார்ப்பய [illegible] தினனபரதனூங்கிணை
தெரிந்தநூலறிவினைச் [illegible] தார்முனமெனை
உரைத்தயாவர்க்கினுமொருயிர் மலையால்.

பரித்த - தாங்கின. (௨௧)

வேறு.

பாரதன்வேட்டநற்பாவைபாழுவர்கள்
விரைசெய் [illegible] தைகவி [illegible] ப்ப [illegible] வர்
பொருவிறப்ப [illegible] ல் [illegible]
றுருவுகாண்டநமொலலையாறுததனர்.

ஒல்லை - விரைவு. (௨௨)

பெற்றபெற்ற [illegible] வளரப்ப [illegible] பர்
வெற்றியுற்றநமை [illegible] [illegible] பா [illegible] லர்
உற்றுநோக்கிமனயற்குபிர்த்தாயரனும்
குற்றமேதருவாயெனக் காறலால்

கோறலால் - கொல்லுதலால். (௨௩)

இறந்திலாதபுதல்வனைநல்கெய்திடச்
சிறந்தவோர்மகஞ்செய்தனனன்னவற்
கறிந்ததேவர்களந்தமாற்கண்பொடும்
பிறந்தசீர்வளர்பிள்ளையைநல்கினார்.

மகம் - யாகம். (௨௪)

என்னமாமுனிவேந்தனியம்புவான்
பன்னுசீர்செய்பரதனுக்கும்பர்கள்
மன்னிநல்குமம்மைந்தனுதித்தவா
றுன்னிநீயுணர்த்தென்றலுமோதுவான்.

உம்பர்கள் - தேவர்கள் (௨௫)

வேறு.

திசைத்தலம்புகழ்தருதேவர்தேசிகன்
நிசித்தலையமர்ந்தவேணெடுங்கணைக்கடைந்

திசைத்தனன் றுணையவனென்னுமாதவ
உசத்தியன் மனைவியையுவந்துபுல்லினன்.

நிசித்தலே - இராக்காலத்தில். (உசு)

அன்னவள்கருக்கொடகமர்ந்தவாற்றினல்
இன்னமோர் கருவினுக்கிடமங்கில்லையென்
றுன்னியகருவனியுதைந்துதள்ளலால்
பொன்னெழில்வீரியம்புவியின்வீழ்ந்ததே

வீரியம் ) விந்து. (உஎ)

அந்தணன்வீரியமாங்குத்தள்ளிய
மைந்தனையந்தகனுகவைத்தால்
உந்தியவீரியமுருவுபெற்றெளிர்
சுந்தரமகவெனத்துலங்கிறு ஙகமோ.

அந்தகனுக - குருடனுக (உஅ)

புதல்வனை விரும்பிலனபொன்னும்போயினன்
இதமறுபழிதருமெனனவெண்ணினள்
மதிநுதன்மடந்தையுமகிழ்ந்துகொண்டிலள்
கதிர்முடியமாக்காதன்மைந்தனை.

பொன் - வியாழம் (உகூ)

பரதனுக்களித்தனர்பரத்துவாசனென்
ஞெருபெயர்முன்னமேயுற்றமைந்தனு
காசனுக்கன்புடைத்தத்தனுதலால்
மருவினன்விநத்தனென்பெயருமன்னனே.

அளித்தனர் - கொடுத்தார்கள். (௩0)

அன்னவன்மரபினிலந்தனுளரும்
மன்னருமுதித்தனர்மன்னர்தம் ழ்ப்
பன்னுதன்பேரினேர்பதியுண்டாக்கிய
போன்முடியத்தியென்றெருவன்போந்தனன்.

போந்தனன் — தோன்றினன். (௩௧)

ஆங்கவன்மரபினிலடற்சராசந்தன்
ஓங்கியமரபுபாஞ்சாலருற்றிடும்
தீங்கறுமரபிவைமுதலசேர்ந்தன
ஈங்குரைத்திடினனிபாக்குமென்பவே.

அடல் - வலி. (௩௨)

மருவியவத்திதன்மரபின்வந்தனன்
குருவெனும்பெயர்புனைகொற்றமன்னவன்

உரைதருமவன்மரபுதித்தனன்புகழ்
பெருகியவெழிற்பிரதீபனென்பவே.

கொற்றம் - வெற்றி. (௩௩)

பூருமரபுப்பாரதன் கதையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௫௨௪

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்

---

பதினொருவது

## சந்தனுவின் கதையுரைத்த வத்தியாயம்.

பிள்ளைவண்டறைதார்ப்பிரதீபனென்பெயரோன்
எள்ளருந்திறன்மூவரையீன்[illegible]னிவரின்
உள்ளுவர்தொழுதேவாபியென்றுரைசெயுமுரவோன்
கள்ளவிழ்ந்தபூங்கானிடைத்தவஞ்செயக்கடந்தான்

யிள்ளைவண்டு - வண்டுக்குஞ்சு. (௧)

அன்னமன்னவனணிகதிர்ச்சந்திரன்மரபில்
துன்னுகின்றவெங்கலியினிலொழியுமற்றொழியின்
பின்னரம்மரபுதிப்பமாண்பெருந்தவம்புரிந்திங்
கின்னம்வைகினன்கலாபகிராமமென்பதிலே.

கலியினில் - கலியுகத்தில். (௨)

பொய்யறத்தவமியற்றுமப்புரவலற்கிளையோன்
கையினிற்றனிதொடப்படுமாக்கையைக்கவின்சேர்
மெய்யெனப்பெறவிளக்குவனாகலின்விழுப்பேர்
ஐயமற்றசீர்ச்சந்தனுவெனவிவணடைந்தான்.

புரவலன் - அரசன் (௩)

சந்தனுப்பெயர்மன்னவன்சாபமாங்கடைந்து
வந்தகங்கையாடனைமணம்புரிந்துயிர்த்தருள
மைந்தனிந்தமாநிலம்வியக்குறுந்திறல்படைத்தான்
அந்தண்கோதையர்மணந்திடாவிரதமுமடைந்தே.

உயிர்த்தருள - பெற்றருள. (௪)

தரைசொல்சந்தனுப்பின்னரும்பராசரன்றழுவக்
கருதுமெம்மெழிற்றாதையைப்பெற்றகன்னிகையாய்
அரியதண்புனலம்பியான்மனையகம்வளர்ந்து
மருவுசத்தியவதிதனைமன்றல்செய்தனனால்

அம்பியான் — நாவாயோட்டுவோன். (௫)

சந்தனுப்பெயரான்புணர்சத்தியவதிதான்
கந்தனுக்குநேர்சித்திராங்கதனொடுகருதார்
மைந்தனுக்கியல்விசித்திரவீரியமன்னும்
வெந்தனுக்கொருவீரனைவிரும்பிநல்கினளால்.

கருதார்மைந்து அனுக்கு - பகைவர் வலியையடக்குகிற, இயல்-இயற்கையுள்ள.

நெய்த்துவார்ந்தபூங்குழலினார்மதனெனநிகழ்த்தும்
சித்திராங்கதனெனும்பெயர்த்திண்டிறற்செம்மல்
கொத்துலாந்தொடைச்சித்திராங்கதனெனக்கூறு
மத்தவாரணநிகர்த்தகந்திருவனான்மாய்ந்தான்.

மத்தவாரணம் - மதயானை. (எ)

அங்கண்மாநிலம்புகழ்தருகாசிவேந்தளித்த
தங்குமேர்செயம்பாலிகையம்பிகைதம்மைக்
கங்கையாண்மகன்சுயம்வரங்கண்டெடுத்தளிப்பப்
பொங்குசீரினன்விசித்திரவீரியன்புணர்ந்தான்

அம்கண் - அழகிய இடத்தையுடைய (அ)

புணர்ந்துவைகியநாளிலப்புரவலன்கயநோய்
மணந்துமாய்ந்தனன்மற்றவன்றனையெணமதிப்பாள்
இணங்குநன்மரபிறந்ததென்றெண்ணிமுன்னின்ற
குணஞ்செய்யாதவவியாதனைவரமனநினைந்தாள்.

புரவலன் - அரசன் (௯)

நினைந்தகாலையிலப்போதுமுன்னுறப்பொருந்திக்
குனிந்தவார்சிலைநுதலினருடனயமொடுகொண்டு
புனைந்தவார்கழல்விசித்திரவீரியன்புணர்ந்த
கனிந்தசொல்லியரிருவரோடிலதியையுங்கலந்தான்.

இலதி - அடியவள். (௧0)

கழறுமாதரவ்விருவருங்கண்ணிலான்றனையும்
விழையுஞ்சீர்புனைபாண்டுவையும்மைந்தரையளித்தார்
அழிவில்வேதவவ்வியாதனையுவந்தனைதொழுத்தை
ஒழிவிலாவறமுணர்க்குநல்விதுரனையுயிர்த்தாள்.

தொழுத்தை — அடியவள். (௧௧)

கண்ணிலானெழிற்கனிந்தகாந்தாரியைக்கலந்தாங்
கண்ணல்வாளரவுயரியவரசனைமுதலாம்
நண்ணுநூற்றுவரோடொருநங்கையையளித்தான்
எண்ணிலாதசீர்ப்பாண்டுவென்றிசைக்குறுமிறையோன்.

அரவுயரியவரசன் - துரியோதனன். (௧௨)

குந்தியென்னுமோர்கொடியிடைதன்னையுங்குளிர்யாற்
றுந்தியென்னுமோருந்திமாத்திரியெனவுரைக்கும்

கந்தமன் னுபூங்குழலையுங்கடிமணம்புணர்ந்து
உந்தமன்னியதடமுலைதழுவுமந்நாளில்.
உந்தி - சுழி, கந்தம் - வாசனை. (௧௩)

மாதர்மென் முலைமணக்குறின்மன்னு யிமொழிகென்
றோதுசாபமங்குற்றனனுற்றபின்மனையார்
நீதிறேவனைவரத்தினுற்சேர்ந்தனருன்பு
தாதைமார்களைப்பெற்றனர்நல்லறந்தளிர்ப்ப
மாதர் - பெண்களின், மணக்குறின் - கூடினல். (௧௪)

தருமராசனைக்காற்றிறையைச்சதமகனை
உரைசெய்குர்தியாங்குறமுறைதழுவினளுயிர்த்தாள்
மருவிநல்லறம்புரிதருதருமனைவலியால்
அரியசீர்புனைவீமசேனனையருச்சுனனை.
தருமராசன் - யமன், காற்றிறை - வாயுதேவன், சதமகன் - இந்திரன். (௧௫)

அகனிலத்தவர்புகழ்பரித்தேவரையணையா
முகிலெனப்பொலிகருங்குழன்முகிணகைச்செவ்வாய்
இகல்படைத்தவெவ்வேல்விழிமாத்திரையென்பாள்
நகுலனைச்சகதேவனைநல்கினளன்றே.
பரித்தேவர் - அசுவினிதேவர். (௧௬)

கூறுகின்றவவ்வைவருநகுழைபொருகுழன்மேல்
சீறுகின்றவவ்வேல்புரைசெழுந்தடங்கண்கள்
ஏறுகின்றபாஞ்சாலியைமணந்திளந்தேறல்
ஊறுகின்றமென்குதலையஞ்சிறுவரையுயிர்த்தார்.
புரை - நிகர்த்த. (௧௭)

ஓதுமைவருளொப்பறுமருச்சுனனேவில்
காதன்மைத்துனனுகியகண்ணனேடுதித்த
சூதுநேர்முலைச்சுபத்திரைதோளிணைதோய்ந்துன்
தாதையாமபிமன்னியுமன்னனைத்தந்தான்.
சூது - சொக்கட்டான்காய். (௧௮)

ஆடல்வாளபிமன்னியுவென்றுசொல்லரசன்
ஏடுமாமலர்மாலையான்விராடனீன்றெடுத்த
தோடுசேர்குழலுத்தரைதோணலந்துய்த்தான்
வீடுசேருநீபிறந்தனைவியனிலம்பிறங்க.
பிறங்க - விளங்க. (௧௯)

விரிந்தபோரிடையாவுயர்கொடியினுன்வீழப்
பரிந்தநெஞ்சமோடமர்க்களத்தடைபரித்தாமா
துரந்தவெங்கணையாலுயிர்தொலைந்திடாவண்ணம்
புரந்தனன்னுனைக்கருவினிற்றேவகிபுதல்வன்
பரித்தாமா - அசுவத்தாமா. (௨௦)

மாற்றருந்திறன்மன்னநின்மைந்தர்நால்வர்களில்
சாற்றுசீர்ச்சனமேசயனெனும்பெயர்த்தாயன்
ஆற்றன்மன்னநின்சரித்திரங்கேட்டபினமூன்று
சீற்றவெம்பணிவேள்விசெய்குவனெனத்தெரித்தான்.

பணிவேள்வி - சர்ப்பயாகம். (உக)

சந்தனுவின்கதை யுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௫௪௫

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

## அநுமரபுரைத்தவத்தியாயம்.



அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அணிதிகழ்யாதிமைந்தரைவருளநுவென்றேத்தும்
மணிதிகழ்புணிஞனன்மரபினிலங்கன்வங்கன்
இணையறுகலிங்கனுதியிறைவர்வந்துற்றானன்னோர்
தணிவரப்புரந்தநாட்டைத்தம்பெயர்புனைவித்தாரால்.

புரந்த - காத்த. (க)

அங்கனென்றுரைக்குமன்னனணிபெறுமரபுவந்த
பங்கம்லெழிலுரோமபதனெனப்பகருமன்னன்
பொஙகெழிற்சாந்தையென்னும்புதல்வியைத்தயரதப்பேர்
மங்குலினுதவுகையான்வழங்கிடவளர்த்தன்ஞான்.

மங்குல் - மேகம் (உ)

மழைவளம்வறந்தகாலைமருவுதன்றேயமெல்லாம்
பொழிதருமாரிபெய்யல்பொலிதரமடவாருய்த்த
தழைகலைக்கோடுபெற்றதவத்தினற்களித்தமன்னன்
விழைவொடுசதுரங்கப்பேர்வேந்திணையுயிர்த்தான்மன்றே.

வறந்தகாலை - வற்றிப்போனகாலத்தில். (௩)

அன்னவன்மரபின்மன்னரங்குநாடளித்தபின்னர்ச்
சொன்னவனுகொத்தான்றலங்கெழிற்குந்தியென்பாள்
பன்னுகன்னிகையென்றேதும்பருவத்திற்கதிரோற்கின்ற
கன்னனென்றுரைக்கும்போசொல்கருதருங்கொடையானுமால்.

கதிரோற்கு - சூரியனுக்கு. (௪)

அநுமரபுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௫௪௯

ஸ்ரீகிருஷ்ணசகாயம்

# எதுமரபுரைத்தவத்தியாயம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மண்ணகமுழுதுமொருகுடைகவித்தமானவேல்யயாதியென்றுரைப்போன்
வெண்ணகைத்துவர்வாய்வெள்ளிதன்மகளைவிருப்பொடுபுணர்ந்துமுன்னளித்த
தண்ணறுந்தொடைசேரெதுமரபுரைப்போர்தவப்பயன்சாற்றுதற்கெளிதோ
கண்ணனென்றிறைவனுதித்ததென்றவன்சீர்காவலற்கருந்தவன்கழறும்.

காவலற்கு - அரசனுக்கு, கழறும் - சொல்வான். (௧)

மருவலர்புகழுமெதுவெனுமன்னன்மகிழ்ந்தினிதளித்தருண்மைந்தா
தனைபுரந்தருளுஞ்சகத்திரசித்தேர்தயங்கியகுரோட்டன்வண்டாற்றும்
விரைகமழ்மலர்த்தார்நளனொடுரிபுவாம்வேந்தனென்றுரைதருநால்வோர்
புனையறுமவரிற்சகத்திரசித்தாம்புங்கவன்சேய்சதசித்தே.

புரந்தருளும் - காத்தருள்கின்ற. (௨)

கள்ளவிழ்நறுந்தாரணிசதசித்தாங்காவலனளித்தருள்புதல்வன்
கிள்ளையங்கிளவிவனிதையர்வேட்கும்கேகயன்கேகயன்சிறுவன்
தள்ளரும்புகழ்சேர்தருமனென்றிசைப்பார்சற்றியதருமனற்றநயன்
அள்ளிலைநெடுவேற்றருமகேத்திரனுமரசனென்றியம்புவான்றே.

காவலன் - அரசன், வேட்கும் - விரும்புகிற. (௩)

அலைக்கருங்கடல்சூழ்புவிப்பொறைநீத்தவாடல்வேலாங்கவன்புதல்வன்
கலைக்கடல்கடந்தகுந்தனென்றிசைப்பார்கவின்பெறுகுந்தனுக்குதித்தோன்
வெலற்கருந்திறற்சாவஞ்சியனவன்றன்விருப்பொடுமுயிர்த்தருடநயன்
சிலைக்கரும்பொழித்தமதனனம வார்செப்பெழின்மயிட்டமானுமால்.

புவிப்பொறை - பூபாரம். (௪)

கலிநிலைத்துறை.

மத்தமால்கரிமயிட்டமானளித்தருள்மைந்தன்
பத்துமாதிசைபுகழ்தருபத்திரசேனன்
முத்தநீள்குடையன்னவனுயிர்த்திடுமுதலோன்
தொத்துலாந்தொடைத்துன்மிதன்றநகனென்றோன்றல்.

பத்துமாதிசை - எட்டுத்திக்கும் பூமியும் ஆகாசமும். (௫)

உரைத்ததுன்மிதன்றநகனென்றுரைக்குமாங்கவரில்
வரைத்தடம்புயத்தநகனுமன்னவன்மதலை
அரைத்தசந்தனமப்பியவணிமுலைத்துவர்வாய்
விரைத்தண்கோதையர்விரும்பெழிற்கிருதவீரியனால்.

வரை - மலை. (௬)

கேளொடுஞ்சுரும்பாற்றுதார்க்கிருதவீரியன்சேய்
வாளொடும்பொலியாயிரந்தடக்கையான்வையம்

கோளொடும்பகைநீங்கியமதிக்குடைநிழற்றி
வேளொடும்பகைக்குறுமெழிற்கார்த்தவீரியனே.

சுரும்பு - வண்டு. (எ)

பகருமன்னவனெண்பதினாயிரம்பருவம்
புகரறும்படிபாரகம்பொதுவறப்புரந்து
மகிதலம்புகழ்மழுப்படையாளனான்மடிந்தான்
தகைசெயன்னவன்றநயர்களாயிரர்தம்மில்.

புகர் - குற்றம். (அ)

பார்புரந்தனரைந்துபேரேனையோர்பகர்ந்த
ஏர்தழைந்தகூர்மழுப்படையாளனாலிறந்தார்
போர்தழைந்தவேலவர்தம்மரபுதிண்புவிமேல்
சீர்தழைந்திடவளர்ந்தனநாடொறுந்திகழ்ந்தே.

மழுப்படையாளன் - பரசுராமன். (௯)

கூறுகின்றவேலெதுமகனென்றுசொல்குரோட்டன்
ஆறறிந்திடுமிரசினவான்றனையளித்தான்
ஊறுமின்னறைததாரவனவிபுவையுயிர்த்தான்
வீறுசேய்குருசேருவைவிருப்பினல்கினனால்.

அளித்தான் - பெற்றான் (௧0)

அன்னமன்னவன்சித்திரதன்றனையளித்தான்
பன்னுசித்திரரதன்சசிவிந்துவைப்பயந்தான்
மன்னுநற்சசிவிந்துவிம்மாநிலமேழும்
தன்னதாணையேசெலுத்தினனல்லறந்தயங்க.

பயந்தான் - பெற்றான். (௧௧)

வையமேழுமோர்மதிக்குடைநிழற்றுமம்மன்னன்
தையலார்பதினாயிரரிளமுலைதழுவிப்
பொய்யிலாதவோர்பத்துநூறாயிரம்புகலும்
ஐயபேரழின்மைந்தரையளித்தனனன்றே.

ஐய - அழகாகிய, (௧௨)

அந்தமைந்தரிலாறுபேரவனியின்முதலோர்
சந்தநுங்கியதடம்புயத்தறுவரிற்றவத்தால்
வந்தவன்பிருதுச்சிரவசுவவன்மதலை
உந்துதெண்டிரைப்பார்புகழ்தருமனென்றுரைப்பார்.

அவனி - பூமி. (௧௩)

தருமனாகியமன்னவனுசகனைத்தந்தான்
பெருமையேதரும்ருசகனையுசகசப்பெற்றான்

முருகுலாந்தொடைரசகனுமளித்தனைமுதனூல்
மருவுசாமகன்முதலியவைவலனாமாதோ.

முருகு - தேன், வாசனை. (௧௪)

தேமலர்த்தொடைதெரியலர்செருக்களத்திரியப்
பூமுகக்கணைபற்பலபொருதருந்திறலான்
காமனுக்கிணையாகநற்கவின்பெருங்காளை
சாமகப்பெயர்மன்னவன்விதர்ப்பனைத்தந்தான்.

தெரியலர் - பகைவர். (௧௫)

சேரும்வண்டினமளாநறுமாந்தியசிலம்பும்
வேரியந்தொடைவிதர்ப்பனென்றுரைபெறும்வேந்தன்
போரியன்றதன்புகழையாார்புகல்பவர்புவிமேல்
சீரியன்றவன்மதலைதன்றிறத்தைத்தெரிக்கின்.

நறு - தேன். மாந்திய - உள்ள. (௧௬)

அலைதழைத்ததண்பரவையினழிபுண்ணீர்பெருகச்
சிலையழுத்தியதிண்புயத்தொன்னலர்சிரத்தைத
தலையழுத்துயர்பெண்ணையின்கனியெனத்தள்ளும்
கொலைபழுத்தவேற்கிதன்மகிழ்ந்தளித்தசேய்குந்தி.

பரவையின் - கடல்போல. (௧௭)

குந்திசேய்திருவிருத்தியாங்கொற்றவனவன்சேய்
தந்திமாப்படைதசாருகன்றசாருகன்றநயன்
விந்தைசேர்விறற்றடம்புயவியோமன்மற்றவன்சேய்
சிந்துசூழ்தருகுவலயம்புகழுஞ்சீமூதன்.

தந்தி - யானை, சிந்து - கடல். (௧௮)

திகழுநெட்டிலைவேலினனெனச்சொல்சீமூதன்
விகுதியென்னுமோர்வேந்தனையுயிர்த்தனன்விகுதி
தகுதிபெற்றிடுந்தீவிரதன்றனைத்தந்தான்
அகனிலம்புகழவனவரதன்றனையளித்தான்.

உயிர்த்தனன் - பெற்றான் (௧௯)

நானிலம்புகழ்நவரதனெனப்புகலுதன்
கானலர்ந்ததார்த்தயரதன்றனைக்களித்தளித்தான்
தானவெங்கரித்தயரதன்சகுனியைத்தந்தான்
மானவெஞ்சிலைக்கரம்பனையவன்மகிழ்ந்துயிர்த்தான்.

தான் - வாசனை, தானம் - மதம். (௨௦)

கரம்பனென்பவன்றேவராதனைக்களித்துயிர்த்தான்
விரும்புநல்லெழிற்றேவராதப்பெயர்வேந்தன்

பெரும்புகழ்ப்பெயர்த்தேவகத்திரன்றனைப்பெற்றான்
சுரும்புசூழ்தொடையவன்மகன்மதுவெனச்சொல்வார்.

சுரும்பு - வண்டு. (உக)

மதுவெனும்பெயர்மன்னவனளித்தருண்மைந்தன்
குதசதப்பெயர்க்கொற்றவன்குதசதனுயிர்த்தான்
அதிர்திரைக்கடற்புவிபுகழநுவினையநுவும்
இதமுறும்புருகோத்திரன்றன்னையீன்றெடுத்தான்.

அதிர்திரை - சத்திக்கிறஅலை. (உஉ)

இயம்புமப்புருகோத்திரனீன்றவங்கிசுமுன்
தயங்குவெந்திறற்சாத்துவதற்றாவவன்பால்
நயஞ்செயந்தகவிருட்டுணிநானிலம்புகழ
வயஞ்செய்போசனுதியரெழுவோர்களும்வந்தார்

வயம் - வெற்றி. (உங)

போசனன்மரபுதித்திடும்புகழ்ப்புரவலரை
ஓசையுற்றமாபோசனென்றுலகெலாமுரைக்கும
தேசுபெற்றுயர்விருட்டுணியுயிர்த்தருள்சிறுவர்
ஆசகற்றநமித்திரனுதிமூவர்களாம்.

புரவலரை - அரசரை. (உச)

அரசர்தாழநமித்திரனுவந்தினிதளித்த்தார்
உரைசெய்மாநிலம்புரக்குறுநிமமனனொடுசீர்ப்
பிரசநாண்மலர்ப்பிணையல்வேய்பிரச்சினிமுதலாப்
புரசைமால்களிற்றரசரோர்மூவராம்புகலின்.

பிரசம் - தேன், பிணையல் - மாலை (உரு)

குனிதடஞ்சிலைநிமமன்னனளித்தருள்குமரர்
நினைவருஞ்சுடர்ச்சமந்தகமணியைநீடொளிய
தினகரன்றரப்பெறுதிறற்சித்திராசித்தும்
புனைகழற்பிரசேனனும்புரவலர்க்கரசும்.

குனி - வளைந்த, தினகரன் - சூரியன். (உசு)

பேட்டொடுஞ்சுரும்பரற்றுதார்ப்பிரிசினியென்போன்
கோட்டுவெஞ்சிலைச்சுவர்க்கனுங்கொற்றவனொடும்போர்
வேட்டமர்க்களத்தெதிர்தருவெருவலருயிரை
ஊட்டுவெம்படைச்சித்திராங்கதனையுமுயிர்த்தான்.

கோட்டு - வளைக்கப்பட்ட (உஎ)

நிறைபெருப்புகழன்னவனிருவரினிகழ்த்தும்
அறனிழுக்குறாவக்குரூரப்பெயரரசன்

முறைதிறம்பிடாதொழுகியதேவவான்முதலாத்
திறல்விளங்கொருநால்வரையுயிர்த்தனன்சிறப்பால்.

அறனிழுக்குறு - தருமமார்க்கத்தில்தவறுத. (௨௮)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இடையலர்பரவுநெடுமுடியரசனந்தகனெனமுனமறைந்த
மடலவிழ்நறும்பூந்தொடைபுனைமார்பன்மகிழ்ந்தினிதளித்தருண்மைந்தர்
முடிவறுபுகழ்சேர்குகுரனும்புவியோர்மொழிபயமானனுமுதலாப்
படையுடைநால்வரவர்களிற்குகுரன்பயந்தசெய்விருட்டுணியென்ப.

• அடையலர் - பகைவர். (௨௯)

இருட்டியலளகவிணைமுலைத்துவர்வாயிளையவர்மனங்கனிகுழைய
மருட்டியநெடுங்கண்மடந்தையர்விரும்பமதனெனவயங்கெழில்படைத்த
விருட்டுணியுயிர்த்தான்விலோமனைவிலோமன்விளங்குமோராழியேழ்புவியும்
உருட்டியகபோதரோமனென்றுரைக்குமொருவனையுயிர்த்தனனன்றே.

துவர் - பவளம், அளகம் - கூந்தல். (௩0)

பாவையர்முகம்போற்பங்கயமலரும்பழனநாடுடையவவ்வேந்தன்
ஆவொடுபசும்பொற்காவெனவளிக்குமந்தகன்றனையளித்தனனால்
கோவடுகுருநிமேலவனீன்றகுமரனைத்துந்துபியென்பார்
தாவரும்புகழ்சேர்துந்துபியென்போனருமியோதாவினைத்தந்தான்.

பழனம் - வயல், ஆ - காமதேனு, கா - கற்பகச்சோலை (௩௧)

வேகமார்பரித்தேரன்னவன்மதலைவிளங்கியபுநாவசுவாமால்
பாகுநேர்தீஞ்சொற்பாவையர்விரும்பும்பசுங்கழைவேணிகரன்றோன்
ஆகுகனுயவரசனேடெழில்சேராகுகைதன்னையுமளித்தான்
ஓகையாகுகனுந்தேவகனுடுஞ்சீருக்கிரசேனனையுயிர்த்தான்.

கழை - கரும்பு. (௩௨)

கஞ்சனைமுதலாமைந்தர்நால்வரையுங்கதிர்முலையெழிற்கஞ்சவதியாம்
அஞ்சனவிழியாளாதிநால்வர்களாமரிவையர்தம்மையுமளித்து
மஞ்செனுங்குழலம்மகளிர்நால்வரையும்வாள்வசுதேவனுக்கிளவல்
எஞ்சலின்மணஞ்செய்துவப்புறக்கொடுத்தானிலங்குவேலுக்கிரசேனன்.

மஞ்சு - மேகம். (௩௩)

காவெனுங்கொடைக்கைத்தேவவான்முதலாங்காதலர்நால்வர்தம்மோடு
தேவகிதிருதேவைநற்சாந்திதேவைசீர்திகழுபதேவை
தாவறுயாணர்தருசகதேவைசாற்றுநல்லணித்ததிதேவை
மாவகிர்விழித்தேவாக்கிதையென்னுமாதரைத்தேவகனளித்தான்.

கா — கற்பகச்சோலை. (௩௪)

கொண்டலிற்கருகிநெய்த்துமெத்தென்றுகொழுமலர்த்தொடைபுனைகூந்தற்
றொண்டைடங்கனிவாய்த்துடிபுரைமருங்குற்சுடரவிர்மதிமுகத்தணியாள்

தெண்டிரைப்பிறந்தகொள்ளமுதெனுஞ்சொற்றேவகிமுதலெழுவரையும்
வண்டிமிரலங்கல்வசுதேவன் மன்றல்செய்துயகதனென்மாதோ.

கொண்டல் - மேகம், துடி - உடுக்கை. (௩௫)

அந்தகன்மதலையென்றமுன்னுரைத்தவாடெஞ்சிலைப்பயமானன்
மைந்தனென்றிசைப்பர்விடூரதனென்றுமாவேலையினையன்றோன்
சுந்தரவதனச்சூரனென்றுரைக்குந்தோன்றலையீன்றனன் சூரன்
சந்தணிபுயத்தானெனும்பயமானன்றன்னையின்புறவளித்தனனால்.

ஆடல் - வெற்றி, சந்து - சந்தநம் (௩௬)

பற்றலர்மகுடமணித்தழும்பிருந்தபதயுகமலர்ப்பயமானன்
பெற்றிடுமதலைசினியெனவுரைப்பார்சினியெனும்பெயரான்
கற்றவர்புகழுநல்லறநிறுவிக்கருதலர்களத்திரிந்தோட
வெற்றிசெய்நெடுவேற்போசனென்றுரைக்கும்வேந்தனையுயிர்த்தனன்விருப்பால்.

பற்றலர் - பகைவர், யுகம் - இரண்டு. (௩௭)

திருந்தலர்புகழும்போசனன்மதலைதிருதிகன்றிருதிகன்சிறுவன்
மருந்தினுமினியமழலையந்துவர்வாய்வரிவிழிமலர்க்கருங்கூந்தல்
முருந்துழற்மூரன்மடந்தையர்விரும்புமொய்கணைமதன்கொலென்றிசைப்பப்
பொருந்துநல்லெழில்சேர்கிருதவன்மாவாம்புரவலனெனப்புகலுவரால்

திருந்தலர் - பகைவர், மருந்து - அமிர்தம் (௩௮)

அன்னவன்றேவமீடனையுயிர்த்தானவனடற்சூரனையளித்தான்
மன்னியசூரன் மாரிடையெனும்பேர்மாதினைமணந்துநல்கினனால்
முன்னுநற்குணஞ்சால்வாள்வசுதேவன்முதலியபுகழ்ப்பதின்மரையும்
இன்னெழிற்குந்தியாதியோரைந்தாமேழையர்தம்மையுமன்றே.

ஏழையர் - பெண்கள். (௩௯)

நானிலத்தவரும்புகழ்வசுதேவனலஞ்செயப்பிறந்தவஞ்ஞான்று
வானகத்தமரர்மாயனையளிப்பான்மகிழ்சரவிவனெனமதித்தாங்
கானகத்தோடுதுந்துபிதுவைப்பவானகத்துந்துபியெனும்பேர்
ஊனமற்றொளிசெய்வேலவவன்றேனுற்றனனுவப்பொடுமன்றே.

அஞ்ஞான்று - அந்நாளில். (௪0)

சூரனென்றிசைப்போன்பெற்றவோர்மகளைத்தோழமைக்குந்தனுக்களித்தான்
ஏருடைமகளாயவன்வளர்த்ததனெழிற்பெயர்குந்தியாமன்னாள்
சீருறுதுருவாசன்றருவரத்தாற்செங்கதிர்ப்பண்ணவற்சேர்ந்து
போருறுநெடுவேற்கன்னனையுயிர்த்துப்புனலுறுகுடிஞையின்விட்டாள்.

செங்கதிர்ப்பண்ணவன் - சூரியதேவன், குடிஞை - யாறு. (௪௧)

செங்கதிர்க்கடவுளளித்தநல்வரத்தாற்றீங்கறகின்றவத்திருவை
மங்குலினுதவுன்றைதமூதாதைமன்றல்செய்துவந்தனன்வழங்கு

தங்கை தன்னிளையார் நால்வரிலொருத்தி நல்கினளேந்து கேகயரைப்
பங்கயிலொருத்தி தந்தவக்கிரனும் பாலனைப்பயந்தனளன்றே.
மங்குலின் - மேகம்போல. (௪௨)

அணிகிளரொருத்தி சிசுபாலனாகிய மன்னனையளித்தாள்
இணையின்மற்றொருத்தி விந்தனோடெழிலா லிலங்கநுவிந்தனையீன்றாள்
தணிவறுவயஞ்சால் வாள்வசுதேவன் றன்னுடன் பிறந்த மன்னவரும்
மணிநிகழ் தரும்பூண் மைந்தரையளித்து வயங்கினருவப்பொடுமாதோ.
வயஞ்சால் - வெற்றிநிறைந்த. (௪௩)

வானவர்புகழும்வாள்வசுதேவன்வாணகைத்தேவகிமுதலாம்
தேனிமிர்கூந்தலெழுவரோடிரோணி நமனைம் புரி ரனையரோணி
பாகிற மானவலாயு தன்முதலாம்பாலரைப்பயந்தனள்பகரும்
எனையர்தாமுஞ்சிறவரையீன்றாரிலங்கெழிற்றேவகியென்பாள்.
தேன் - வண்டு, இமிர் - ஒலிக்கிற (௪௪)

கீர்த்திமான்முதலாவறுவரையளித்துக்கிளர்ந்தவேபாகவென்னப்
பார்த்தலம்பரித்தபஃறலையரவப்பாணிறன்றனைவயிற்றடைந்து
போர்த்தலையவுணர்த்தொலைத்துமெய்ந்நிறுத்தப்புனைதுழாய்ப்புராணனிப்புவிமேல்
கார்த்திருமேனிக்கண்ணனென்றுதிப்பக்கருதருந்தவந்தினல்கினளால்.
பார்த்தலம்பரித்த - பூமியைத்தாங்கின. (௪௫)

மன்னவர்மன்னதன்னிடத்துதித்துமருவுதன்னேவன்மாயையினால்
பின்னல்வெண்டிரைப்பார்ப்பொறைதவிர்ப்பதற்காப்பேரொளிபிறந்ததற்பின்னர்
உன்னுடைத்தந்தைக்குவப்புறுந்தாயாமுருவநற்சுபத்திரைதனையும்
அன்னமென்னடையதேவகியென்பாளளித்தனளெனமுனியறைந்தான்.
பொறை - பாரம் (௪௬)

மறைமுழுதுணருமாதவத்தீர்காள்வகுத்தவிக்காதைகூறுநரும்
நிறைதருமன்பாற்கேட்டகமகிழுநிகரிலாதவருநீணிலக்கண்
குறைவறுமாயுள்சேர்மகவுயிர்த்துக்குலவிவீற்றிருந்தபின்மாலோன்
உறைதருபதம்பெற்றுவப்பரென்றுரைத்தானுணர்வுடைச்சூதமாமுனிவன்.
வகுத்த - வகுத்துச்சொல்லப்பட்ட. (௪௭)

கலிவிருத்தம்.

என்னலுமிருந்தவரிளநறுப்பொழி
கன்னியந்துளவணிகண்ணன்செய்திறம்
மன்னவன்கேட்டதென்விருத்துமாமுனி
சொன்னதென்சொல்லெனச்சூதன்சொல்குவான்.
இருந்தவர் - பெருந்தவத்தினர். (௪௮)

எதுமராபுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௫௯௭.

ஒன்பதாங்கந்தம் முற்றிற்று.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.



# பத்தாங்கந்தம்.

## முதலாவது

## திருவவதார அத்தியாயம்.



கலிநிலைத்துறை.

பரிதிவானவன்மரபொடுபானிலாத்திங்கள்
மரபுகேட்டவேன்மன்னவன்மதிமரபுதித்த
ஒருதனிச்சுடர்திருவிளையாட்டெலாமுள்ளம்
தெருளக்கேட்பதுவிரும்பினன்செப்பலுற்றனனால்.

பரிதிவானவன் - சூரியதேவன், திங்கள் - சந்திரன். (௧)

புனலுமூண்ணலனிருப்பவும்பொறுப்பதற்கரிதா
நனிகனற்றுவெம்பசிப்பிணிநலிதன்மற்றின்றால்
முனிவன்மூரலொண்முகமலர்முளரியின்முளைத்த
அநகன்மாக்கதையெனுநறுவருநதலினன்றே.

முளரி - தாமரை. (௨)

அரவுயர்த்தவனுடலம்படைக்கடலைவர்
ஒருகுளப்படியாம்படிகடப்பவோர்புணையாக்
கருவின்மற்றெனைக்காத்தசெந்தாமரைக்கண்ணன்
பொருவின்மாக்கதைவிரித்தனைபுகலெனப்புகன்றான்.

அரவுயர்த்தவன் - துரியோதனன். (௩)

தனிவெண்சங்குறைதடக்கையான்சேவடிப்பிறந்த
பனிகொள்கங்கைநீர்படிந்தவர்போலநன்னெஞ்சம்
கனியமாயவன்கதையெடுத்துரைப்பவர்கேட்போர்
புனிதராவரென்றருந்தவன்புகலலுற்றனனால்.

புனிதர் - பரிசுத்தர். (௪)

அரசுருப்புணரவுணராலாற்றலளாகிப்
பரவைமாநிலப்பசுங்கொடிமல்லலஞ்சேதா
உருவெடுத்தனளுற்றனளுற்றதுகிளந்தாள்
மரைமலர்ப்பொகுட்டுறைதருமறையவற்கன்றே.

அரசுரு - அரசவடிவு, பரவை - கடல். (௫)

சேட்டநான்முகன்கிளரொளிவிரிந்தசெம்பவளக்
காட்டினல்லெழில்கவற்றியகற்றையஞ்சடைமேல்
கோட்டிளம்பிறைசூடியதழகனோடமரர்
ஈட்டஞ்சூழ்வரவெழுந்துபாற்கடற்புலந்திறுத்தான்

பவளக்காட்டின் - பவளக்காட்டினது. (௬)

பரவைவெண்டிரைப்பாற்கடல்கருங்கடல்கடுப்ப
உருவமேனியினொளி பரந்திமைப்பவெஞ்செஞ்சுட்
டரவணை நதுயிலமலனையிறைஞ்சுபுபரவு
இருவிசும்பிடையெழுந்ததோர்வாணிமற்றன்றே.

கடுப்ப - நிகர்க்க. (எ)

பட்டவந்தரவாணியின்படுபொருடெருண்டு
வட்டவானகத்துறைபவர்வானமுகமேனைகி
விட்டுரைத்தனன்வெள்ளிவெண்ணிலாக்கதிர்விரியக்
கட்டவிழ்ந்ததாமரையுறைகலைமகள்காந்தன்

அந்தரவாணி - ஆகாயவாணி, தெருண்டு - தெளிந்து. (அ)

தண்ணந்தாமரைத்தலைவிவீற்றிருந்ததார்மார்பத்
தண்ணலானகதுந்துபிககருள்சுரநதளிக்கும்
விண்ணிற்றீர்ந்துநீர்வெணணகையரம்பையரோடு
மண்ணினமேம்படுமெதுகுலத்துதிக்கெனவருத்தான்.

ஆநகதுந்துபி - வசுதேவன். (கூ)

அலர்பசுந்துழாயணிமுதற்றேவுவந்தளிக்கும்
மெலியனீயெனவெண்டிரைக்கருங்கடலுடுத்த
நிலமடந்தையைவிடுத்தனனிரையிதழ்க்கமல
மலரின்வந்தவன்மாண்டதன்பேருலகடைந்தான்.

துழாயணிமுதற்றேவு - திருமால். (க0)

பாரெலாமொருபனிமதிக்குடைநிழல்பரப்பும்
சூரசேனனின்னருள்பெறுதோன்றல்லைந்துணர்த்தாழ்
வேரியந்தொடைவிறல்வசுதேவன்வெண்டரங்க
வீரியன்னகுண்டகழ்மதிண்மதுரைகாத்தளித்தான்.

வேரி - தேன், வாசனை. (கக)

பருந்துசூழ்தருபரிதிவேற்படைவசுதேவன்
புரிந்தவெள்வளைபொலமுகடுடைபடமுழங்க
சுரும்புசூழ்பசுந்தோட்டநாண்மலர்த்தொடைசூட்டித்
திருந்துவெண்ணகைத்தேவகிதிருமணம்புணர்ந்தான்.

சுரும்புசூழ் - வண்டுகள்மொய்க்கிற. (கஉ)

செஞ்சிலைத்தழும்பிருந்ததோட்டேவகனீன்ற
அஞ்சொல்வஞ்சியோடந்தராதுந்துபிமுழங்கப்
பிஞ்சுநாண்மதிபிறங்குவெண்கோட்டுமால்யானைக்
கஞ்சன்பொற்றடந்தேர்விடக்கடிநகர்க்கெழுந்தான்.

சிலைத்தழும்பு - வில்வடு. (கங)

மருப்பிளம்பிறைவாணுதற்றேவகியெட்டாம்
கருப்பம்வென்றிவேற்கஞ்சனுருயிர்தெறுமென்று

உருத்துவானிடையொலித்ததோருரைசெவியோர்ந்து
நெருப்புவாயுதுவாளுறைவாங்கினனின்றான்.

தெறும் - கொல்வான். (கச)

குவளைநாண்மலர்பிணைந்தனகொழுங்கடைமழைக்கண்
அவளைமாய்ப்பலென்றடைதலுமடல்வசுதேவன்
தவளவாணகைத்தங்கையாருயிர்தெறறறைத்தோ
கவளமால்களிற்றரசவென்றின்னுரைகழறும்.

மாய்ப்பல் - கொலவேன், தெறல் - கொல்லுதல். (கரு)

அழியும்யாக்கைமேல்விழைவிஞலழிவிலவாய
பழியும்பாவமும்படைததிகொலென்றுதெள்ளமுதம்
பொழியுமாறெனப்புகன்றனன்புதுமுகையவிழ்ந்து
வழியுந்தேறலுண்வண்டுவீழுந்தாறறுதார்மார்பன்.

விழைவிஞல் - விருப்பத்தால். (கசு)

சொற்றநன்மொழிகேட்கலன்கொலைத்தொழிறுணிய
மற்றினிசசெயல்யாதெனமனனவன்குறிததுப்
பொற்றதாமரைமுகிழ்முலைப்பூவையைக்கொல்லல்
பெற்றபச்சிளங்குழவிநீகொல்கெனப்பெயர்ந்தான்.

குறித்து - ஆலோசித்து. (கஎ)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சேட்டிளம்பரிதிமார்பிற்றேவகனன்பினல்கம்
மோட்டிளந்திஙகட்கோடுமும்மதக்களிநல்யானை
கோட்டினிலியற்றுதிண்டேர்கொய்யுளைப்புரவிசூழ
வேட்டபூந்தெரியல்வேந்தன்விழுமணிக்கோயில்புக்கான்

இளந்திங்கள் - இளம்பிறைபோன்ற, கோட்டு - கொம்பினையுடைய. (கஅ)

மற்றடமார்பனின்பமாந்தினனுறையுநாளில்
சிற்றிடைப்பவளச்செவ்வாய்ததேவகிகருப்பந்தாங்கிப்
பெற்றமென்குதலைத்தீஞ்சொற்பிள்ளையையங்கைதாங்கிக்
கற்றிரண்டன்னதிண்டோட்கஞ்சன்முன்னெய்திஞறல்.

மாந்தினன் - அநுபவித்து, (முற்றெச்சம்). (ககூ)

வளரிளந்திங்களன்னமதலைவாண்முகத்தைநோக்கி
விளைவதொன்றிலலையாமால்விழுத்தகுகுழவிதன்றல்
குளிர்மலர்த்தெரியன்மார்பகொண்டனைசென்மோவென்னத்
தெளிகலனுரைத்தமாற்றஞ்செம்மல்கொண்டேகிஞறல்.

கொண்டனை - கொண்டு, (முற்றெச்சம்). (உO)

தாழிருந்தடக்கையானைத்தாமவேற்கஞ்சன்முன்னர்
யாழுடைமுனியாங்கெய்தியாதவரமராவார்

சூழ்கடலவுணர்கின்பாறமொக்கவாவரையெல்லாம்
ஆழியான்பிறந்துவீட்டுமொசமெவன் றுறைந்துமெசென்றான்.

வீட்டும் - கொல்யான். (௨௧)

கோதைவேற்கஞ்சன்றானுங்கொல்லுதிறற்சாலமேய
ஆதலினமுவரியன்கூற்றுமறிந்தனனாமுவரிந்துபாண்வண்
டேவாய்விரிந்தபூந்தாருக்கிரமோசையெனன்னும்
தாதைபோரசுயாற்றித்தனியரவெப்பதிகுறாள்.

கோதை - பூமாலை, அறிந்தனன் - அறிந்து, (முற்றெச்சம்). (௨௨)

இன்றளிர்ப்படலைமாலையாதவரிரிய நூறி
வென்றியாங்களிவ்யானைவிறல்வசுதேவயனோடு
சென்றுயர்குழைமீதா புண்கட்டேவகிதன்னையாங்கு
வன்றளைப்படுத்திப்பெற்றமகவெலாமாய்க்கலுற்றான்.

தளைப்படுத்தி - சிறைப்படுத்தி. (௨௩)

கூற்றனுன்குழவியாறுகொன்றபின்னுலகந்தாங்கும்
ஆற்றலஞ்சேடன்மாலகட்டகத்தனுக
மாற்றருஞ்சிறப்புவாய்ந்த மாயையைநோக்கிமல்லற்
பாற்றிரைத்துயிலுநங்கள்பாஞ்சுடர்பணிக்குமன்றே.

ஆலகட்டு - ஆலிலைபோலும் வயிற்றின். (௨௪)

கந்துகொல்களிநல்யானைக்கஞ்சனைக்கரந்துமல்லல்
நந்தகோன்மனையின்வைகுநறுநுதலுரோணியாலின்
அந்தளிர்வயிற்றின்வைத்தியரக்கெறிகுவளையுண்கட்
செந்தளிருருவமேனித்தேவகியிளஞ்சூன்மாதோ.

கந்து - கட்டுத்தறி, கொல் - முறிக்கிற. (௨௫)

சிறப்புடையமுதின்சாயற்றேவகிவயிற்றின்வந்து
பிறத்துநாமுலகமெல்லாம்பிறைநுதற்கன்னியென்று
நறைத்துணர்தூவிவாழ்த்தநலந்தரப்பிறத்திநீசென்
றறற்கருங்கூந்தற்செல்வாயசோதையவ்வயிற்றிலென்றான்.

அறல் - கருமணல். (௨௬)

புள்ளுயர்கொடியினானைப்போற்றியமாயையாங்கே
தெள்ளமுதனையநீஞ்சொற்றேவகிவயாவைவாங்கி
ஒள்ளொளிபரந்தவுண்கணுரோணியென்றுலகமேத்தும்
வள்ளிதழ்க்கோதைமாதர்வயிற்றிடைவைத்ததன்றே

வயாவை - கருப்பத்தை. (௨௭)

ஆயிரந்தலையநாகத்தறிதுயிலமர்ந்தவம்மான்
மாயையங்஗னமுனுற்றமாவிதழ்க்குவளைவென்று

சேயரிசிந்துவாட்கட்டேவகிகருப்பம்வீந்து
போயதென்றங்கண்மூதூர்புலம்பொடுமெயர்ந்தன்றம்மா.

ஆயிரந்தலையநாகம் - ஆதிசேடன். (௨௮)

கலிநிலைத்துறை.

எண்ணுமெண்ணெயுமியையமற்றெப் பாருளகத்தும்
நண்ணுநாரணனலததருமாதவம்புரிந்த
வண்ணவானகதுந்துபிமனத்துவந்தடைந்தான்
தண்ணென்வெண்டிரைத்தடங்கடனிலப்பொறைதவிர்ப்பான்.

எண் - எள், நிலப்பொறை - பூபாரம். (௨௯)

தண்மதுக்கமழ்தாமரைத்தலைவிவீற்றிருந்த
ஒண்மணி திருமார்பினுளத்துவந்துறலால்
விண்வழுக்கிவீழ்வெங்கதிர்ப்பரிதிகொலென்னக்
கண்வழுக்குறுகதிரொளிகலுலினன்மன்னன்.

தாமரைத்தலைவி - திருமகள். (௩௰)

பின்னல்வெண்டிரைப்பிறந்தெள்ளமுதினிற்றேனின்
கன்னலிற்சுவைகனிந்தசொற்றேவகிமேதத்துத்
தன்னகத்தினிற்றோன்றியதனிப்பெருஞ்சுடரை
மன்னர்மன்னவன்மனத்தினுல்வைத்தனன்மாதோ.

தேவகிதேத்து - தேவகியிடத்தில். (௩௧)

கலைநிரம்பியகற்றைவெண்ணிலாக்கதிர்மதியைக்
குலவுநல்லெழிற்குணதிசைபொறுத்தவாபோல
உலகெலாந்தனதுந்தியந்தாமரைகாட்டி
இலகுசோதியையேந்திழைபொறுத்தனளன்றே.

குணதிசை - கீழ்த்திசை. (௩௨)

மாலையந்துழாய்மரகதப்பசும்புயல்வளர்வான்
கோலவாலிளந்தளிரின்மேல்லிழைதலென்குறிக்கேன்
சேலுலாவுகட்டேவகிதிருவயிறந்த
ஆலிளந்தளிர்போலுமென்றடைகுறல்போன்மால்

மாலையந்துழாய் மரகதப்பசும்புயல் - திருமால். (௩௩)

மூடக்குந்தெண்டிரைமுழங்குபாற்கடலகநீங்கி
வடிக்குமென்மலரோதியவ்வயிற்றகத்தமர்ந்தான்
ஒடிக்குமஞ்சுடர்மரகதவுருவினதொளிமேல்
நடத்தல்போன்மெனத்தோன்றினமெய்ப்பசுநரம்பு.

மலரோதி - மலரையணிந்த கூந்தலையுடையாள். (௩௪)

அஞ்சலஞ்சலென்றருளினுற்றுமினிதளித்த
வெஞ்சினக்கடக்களிற்றுவெண்கோடடிபிடுங்க

மஞ்சனுன்வயிற்றுற்றதுகினேந்துகொன்மாதர்
கஞ்சநாண்முகைகடந்தெழுமுலேமுகங்கறுத்த

கடக்களிறு - மதயானே, கோடு - கொம்பு. (௩௫)

பட்டகாரிருட்படலமெண்டிசையிறும்பாற
விட்டதண்கதிரொளியிலுலல்லதுவிளர்த்து
* வட்டவாண்மதிநிகர்த்தவண்டினந்துவைப்பக்
கட்டவிழ்ந்தபூங்கோதைதீங்கதிர்நகைவதனம்

விளர்த்து - வெளுத்து (௩௬)

மாற்றிலாதபொற்கொழுந்தின்மாமணிவிளக்கன்ன
தோற்றங்காணடலுஞ்சுடரிழைபண்டையளல்லள்
ஆற்றன்மாயனேயவ்வயிற்றகத்துவந்தடைந்தான்
கூற்றம்போலுயிர்குடிப்பவென்றுணர்ந்தனன்கொடியோன்.

மணிவிளக்கு - ரத்நதீபம். (௩௭)

அளேயுறைந்தவாளரவெனமுனிந்துமற்றின்னே
குளிர்மலர்ப்பசுங்கோதைமெய்க்கோறமென்றுள்ளும்
இளேயருன்முதிரேந்திழையீங்கிவட்கொல்லின்
விளேயுஞ்சாலவும்வெம்பழியெனமனமீளும்.

அளே - புற்று, கோறும் - கொல்வோம். (௩௮)

இருக்கினிற்கின்மற்றேகின்மெல்லணேயிசைக்கிடக்கின்
உரைக்கினுண்ணினெங்குற்றனெனுருக்குமோவென்னும்
கருத்தனுதலாற்கண்டுழிக்கண்டுழியெல்லாம்
அரத்தமுண்டிலங்காழியானுருவமேகாணும்

ஆழியான் - திருமால். (௩௯)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சுடர்ந்துவில்லுமிழுஞ்செம்பொற்றேடவிழ்மலரினுனும்
விடம்பொதிமிடற்றினுனும்விண்ணவர்குழுவுமீண்டித்
தடங்கடலுலகமெல்லாந்தன்வயிற்றிருப்பமற்றோர்
மடந்தையால்வயிற்றுவாழுமாயனேவழுத்தலுற்றூர்.

மலரினுனும் — பிரமனும், விடம்பொதிமிடற்றினுனும் - சிவனும். (சO)

தெளிக்குநான்மறையுமின்னந்தெளிவதற்கரியதெய்வ
விளக்கமேஞானந்தவெள்ளமேகினதுமாயை
வலேத்திடப்பட்டோர்நின்னேமதிப்பரோவூவராக
உளத்தெளிவுற்றோர்பார்ப்பருன்னேமற்றொருவனென்றே.

மற்றொருவன் - மூவரின்மேம்பட்டவொருவன். (சக)

ஆக்கமுமழிவுமின்றியகண்டமாயமலமாகி
வாக்கொடுமனத்துக்கெட்டாவள்ளலேயறத்தின்வாழ்வே

தீர்க்கவுந்தீயோர்தம்மைச்செய்வினைநலத்தினோரைக்
காக்கவுமன்றேகோடிகடவுளிவ்வுருவமம்மா.

கோடி - கொள்ளுகிறாய். (சஉ)

பாழிவாய்ச்சுடிகைநெற்றிப்பஃறலைப்பாந்தண்மீதே
ஊழிவாயண்டகோளமுடைபடக்கோத்ததெண்ணீர்
ஆழிவாய்வளர்வாய்மற்றுனடிப்புணைபற்றப்பெற்றோர்
எழிரும்பிறவிவேலையெளிதினிற்கடப்பரன்றே.

பிறவிவேலை - பிறவிக்கடல். (சங)

இருட்குழம்பெறியத்தோன்றுமிளங்கதிர்ப்பரிதிபோல
மருட்பெருந்திமிரமோடிமாண்டகவிளங்கஞானப்
பொருட்கதிரில்லாதாமேபூர்த்துழாயலங்கன்மாலை
அருட்கடல்பிறந்திலாயேலாழிசூழுலகமம்மா.

திமிரம் - இருள். (சச)

ஆதிநின்னாமமெல்லாமஞ்செவிமடுத்தும்வாயால்
ஓதியுமழகுவாய்ந்தவுருவுகண்களிப்பக்கண்டும்
கோதில்வீட்டின்பமெல்லாங்கொள்ளைகொண்டுண்பரன்றே
மோதுவெண்டரங்கமுந்நீர்முதுநிலமாக்கடாமே.

தரங்கம் - அலை, முந்நீர் - கடல். (சரு)

கற்றையங்கதிர்கால்பைம்பொற்கிங்கிணிகவைஇயதெய்வச்
சிற்றடிக்கமலப்போதுநீண்டவென்றேற்றதேயோ
ஒற்றையந்திகிரிச்செல்வவொருபெருங்கமலத்தாளால்
அற்றைநாட்பொதியப்பெற்றவங்கண்மாஞாலந்தானே.

கதிர்கால் - ஒளிவீசுகின்ற, ஞாலம் - பூமி. (சசு)

ஆக்குமாறென்னையீதியணிசடையரனையீதி
போக்குமாறனைத்துங்காப்பப்புகுதிநின்னுண்மையெம்முள்
பூக்குமாறுணர்த்திலாதாய்புவனமோடெமையுமாய்ப்பான்
ஊக்குவாய்தொழில்களூன்றுமுன்னவேயயன்மற்றுண்டே

மாய்ப்பான் - மடிக்கும்பொருட்டு. (சஎ)

மாயையால்விளைந்தவன்னமல்லதுவாய்மையாக
மாய்தலும்பிறத்தலானுமன்னுயிர்தனக்குமில்லை
மாயையிற்றீர்ந்துநின்றமற்றவைக்குண்டுகொல்லோ
மாயைநின்றேற்றமெல்லாமதிக்கினோர்விளையாட்டன்றே,

வாய்மையாக - உண்மையாக. (சஅ)

இனமலரண்ணலாதியீசனவ்விமையோரேத்தி
வனைமலர்விலோதமாதுன்வயிற்றுறைகுழவிவெய்ய

கனலுமிழ்திகிரியெம்மான்கஞ்சனைக்கொல்லுமொன்றும்
நினையலென்றணங்கைவாழ்த்திநிலைக்களங்குறுகினாரே. (௪௯)

விலோதம் - கூந்தல்.

களியிருட்பிழம்புசீத்து நானிலம்விளக்குகின்ற
குளிர்கதிருமிழ்வெண்டிங்கள்குணதிசையுதிக்குமாபோல்
தெளியமுதன்னசாயற்றேவகியிடத்துநின்றும்
ஒளிமணிவண்ணத்தண்ணலுதித்தனனுரோணிதன்னில். (௫0)

இருட்பிழம்பு - இருட்கூட்டம்

கலிநிலைத்துறை

காமரைக்கரநான்கின்வெண்சங்கொடுகழல்வாய்
நேமவெங்கதைநேரியிகழ்க்தாமரைநிலவ
நேமலர்ச்சொடை பார்பிணிற்றிருமலர்சிறப்ப
காமர்கட்டெழிற்கவுந்தூவங்களக்கிளிர்கவின

நேமி - சக்கரம் (௫௧)

இருட்குறும்பெறிந்தெரிபணிமுழுவெயிற்கற்றை
விரிக்கவாய்தொடிவில்லிடவெண்ணிலாமதியைச்
சிரிக்கும்வாண்முகத்திலகுபொற்குழையொளிசிதற
நிரைத்தபன்மணிக்காஞ்சிபொன்னுடைமேனிலவ.

வில்லிட - ஒளிசெய்ய (௫௨)

கருவிமாமுகிற்கொழுந்தெனக்கண்கவர்மேனி
திருவில்கான்றொளிசிந்திடச்செய்யதாமரைக்கண்
அருள்பொழிந்திடவற்புதக்குழவியாய்த்தோன்றும்
விரைசெய்பூந்துழாய்விமலனைக்காண்டலும்வியந்தான்.

திருவில்கான்று — அழகியவொளியையுமிழ்ந்து. (௫௩)

கலிவிருத்தம்.

வானகுமதியெனவந்துதோன்றிய
கானகநாடனைக்கண்டுகைதொழாத்
தேனகுதாமரைச்செங்கணீருக
ஆனகதுந்துபியன்பினேத்தினன்

ஆநகதுந்துபி - வசுதேவன். (௫௪)

ஈனநல்லிளங்கதிர்ப்பரிதியேயென
வானுறவழங்குசெவ்வண்ணங்கோடியால்
பானிறங்கோடியாற்பாதுகாத்திட
நீனிறங்கோடியானீறுசெய்யவே,

பரிதி - சூரியன். (௫௫)

செய்யதாமரைமலர்ச்செல்விகாதல
பையராத்தாங்கியபரவைமண்மிசை
வெய்யகோலரசரைவீட்டற்கன்றுகொல்
ஐயகாருருவைவந்தடைந்தவண்ணமே.

பையரா - ஆதிசேடன், வீட்டற்கு - கொல்வதற்கு. (ருசு)

மன்னவன்படைச்செயன்மன்னன்செய்கையாப்
பன்னுதல்போற்றனிப்பரமமாயநீ
முன்னமேயியற்றியமூவகைச்செயல்
நின்னுடைச்செயலெனநிகழ்த்தல்செய்வரால்.

நிகழ்த்தல்செய்வர் - சொல்லுவர் (ருஎ)

என்றனனேத்துழியீன்றசெல்வியும்
துன்றருந்தொன்முதரேூற்றங்கண்டனள்
ஒன்றுவந்துலகைநீர்நாட்டம்வார்தரக்
கன்றுகாண்கறவையிற்கசிந்துபோற்றினள்

உவகைநீர் - ஆநந்தபாஷ்பம். (ருஅ)

காணுயிர்த்ததுபுனல்கனல்கறங்குகால்
வானுயிர்த்தவன்றனைவகுத்துநின்றபூந்
தேனுயிர்த்தலர்ந்ததார்ச்செம்மன்மற்றனை
நானுயிர்த்தனனெனநகையுடைத்தரோ.

கால் — காற்று (ருகூ)

கழிந்தொருநான்முகன்காலந்தீர்தலும்
அழிந்துமண்முதலியவனைத்துநின்னுற
ஒழிந்துநீசேடனென்றுரைப்பநின்றனை
செழுஞ்சுடர்நின்னிலைசெப்பற்பாலதோ.

சேடன் - எஞ்சிநிற்பவன். (சு0)

வெஞ்சினநிருதர்நீள்வேரறுப்பவான்
செஞ்சிலைநிமிர்குதைகுழைத்ததேவக
கஞ்சனென்றுரைபெறுகடுங்கட்கூற்றினுக்
கஞ்சினனஞ்சினனழிப்பவேண்டுமால்.

நிருதர் - அரக்கர். (சுக)

காமர்வெண்ணிலாவுமிழ்கடவுட்சங்கொடு
தீமுகத்துமிழும்வெந்திகிரிநீள்கதை
தாமரைநறுமலர்தாங்குமிவ்வுரு
மாமுகில்வண்ணநீமாற்றல்வேண்டுமால்.

காமர் - அழகு. (சுஉ)

இவ்வுருக்கொண்டநீயென்கொரேன்றினை
பவ்வவெண்டிரைத்துயில்பரமமற்றெனை
மவ்வலங்கருங்குழல்வழுத்துமாயவன்
செவ்விதழ்விண்டனன்செப்பினனரோ.

பவ்வம் - கடல், மவ்வல் - முல்லை. (௬௩)

முன்னநீர்நற்றவமுயலத்தோன்றினேனம்
உன்னிகர்புதல்வனையுதவுகென்றலால்
எந்நிகர்யாமலதில்லையாலுமக்
கப்பலபிறந்தனமார்வமுற்றவே.

ஆர்வம் - விருப்பம். (௬௪)

என்றனனவ்வுருவிகந்துமாமணிக்
குன்றனுளொருபசுங்குழவியாயினன்
ஒன்றுரையாடினனுயிர்த்தகாவலன்
மன்றலந்தாமரைவதனநோக்கியே.

இகந்து - நீங்கி. (௬௫)

மன்னவநந்தகோன்மாலைமார்புதோய்
அன்னமென்னடையினுள்சோதைமற்றொரு
கன்னியைப்பயக்குமக்கன்னிகைக்கொடாங்
கென்னைநீவளர்த்துகென்றிதழ்விண்டானரோ.

பயக்கும் - பெறுவாள். (௬௬)

இமிழ்திரைக்கடலுலகேத்தவவ்வழி
அமுதுறழ்சாயலவ்வசோதையீன்றனள்
குமுதையென்றுணாபெறுகுமுதச்செய்யவாய்க
கமழலங்கருங்குழற்கன்னிதன்னையே.

இமிழ்திரை - ஒலிக்கின்றஅலை. (௬௭)

ஏமுறத்துயின்றனர்யாருமெங்கணும்
காமரங்கதிர்மணிக்கடைதிறந்தன
மாமலர்ப்பசுந்தொடைமன்னன்செய்யதாட்
டாமரையாயிடைத்தளையவிழ்ந்ததே,

ஏமுற - இன்புற, கடை - வாயிற்கதவு, தளை - விலங்கு. (௬௮)

உயரிருவிசும்பெலாமொளிசெய்மின்றவழ்
புயல்வளைதண்டுளிபொழியவெம்புழை
அயிலெயிற்றரவரசண்ணன்மாமணி
வெயில்விரிபணடவிமிசைகவிப்பவே.

புயல் - மேகம், புழை - தொளை. (௬௯)

எழுதருபனிமதியிமிழுங்கார்முகில்
நுழைதருமாறிருதூறுதண்ணிலாப்

பொழிமதிமுகத்தெழிற்புதல்வற்கொண்டுதேன்
வழிதொடைமார்பினான்வல்லையேகினான்.
இமிழும் - ஒலிக்கின்ற. (௭௰)

கறையணற்பாப்பணைவிட்டெய்திய
மறைமுதன்மலரடிவழுத்துமாறுபோல்
வெறிகமழாம்பல்வாய்விண்டுதேன்பொழி
துறைதிகழ்யமுனையிற்றுன்னினானரோ.
கறை - விஷம், பாப்பணை - சர்ப்பசயநம (௭௧)

விரியனல்வழிவிடவிழிசிவந்தவாள்
அரவணைப்பள்ளியானடைதல்காண்டலும்
கரையழியமுனைசெங்கமலக்கைம்முகிழ்த்
துருவுகாதலினெறியுதவிற்றென்பவே.
கைமுகிழ்த்து - கைகுவித்து. (௭௨)

அந்தரதுந்துபியதிரவதன்றியும்
உந்துதெண்டிரைநதியுதவமாணறம்
நந்தினமாதிரநடந்துநந்தன்வாழ்
கொந்தவிழ்மலர்வனங்குறுகினானரோ
நந்தின - பெருகின, மாதிரம் - திக்கு. (௭௩)

நள்ளென்யாமத்திடைநரந்தநாறுதெண்
கள்ளுலாங்கருங்குழற்கன்னிதன்னையீன்
றள்ளிலைப்பூணினாள்சோதைகண்டுயில்
பள்ளிவாய்மென்மெலப்படர்குற்றானரோ.
நரந்தம் - கஸ்தூரி, படர்குற்றான் - நடந்தான். (௭௪)

இன்னமுதார்குழவிநாமீன்றதாமென
உன்னலண்மம்மர்கூர்ந்துறங்குமேழைபால்
மன்னுபைங்குழவியைவளர்த்திமன்னனக்
கன்னியைக்கைக்கொடுகடிதின்மீண்டனன்.
மம்மர் - மயக்கம். (௭௫)

மணிக்கொடியனையதன்மனைவிசெங்கையில்
தணிப்பருங்குழவியைத்தலைவனல்கினன்
பிணித்ததுவல்லிகான்மலர்பிறங்கிட
அணித்தருகதவ மடைக்கப்பட்டவே
வல்லி - விலங்கு, கதவம் - கதவு. (௭௬)

அழுததகுழவியாங்கழுதலின்னொலி
செழுமணிவாயிலோர்செவிப்பட்டோதலும்

குழலொடுநறுமலர்க்கோதைசோர்தரக்
கழைசுளிகளிற்றுவெங்கஞ்சனெய்தினன்

கழைசுளி - கரும்பைமுறிக்கிற (எஎ)

மல்லடுதோளினன்வரவுநோக்கிய
சில்லரியொழுகுகட்மஞ்சொற்றுவஙி
கொல்லலினின்றிருமகன்கோடற்காதும்ந
நல்லெழின்மாதெனநயப்பிற்கூறினள்

கொல்லல் - கொல்லாதை (எஅ)

துளிமுகிற்கருங்குழுறவர்ததசெய்யவாய்க
கிளியெனமிழற்றதிங்கிளவிகேட்கலன்
தளிர்புரைசொகையிற்றழீஇக்கொள்கன்னிமை
வளைதொடுதடக்கையால்வலிதின்வாங்கினன்

வலிதின்வாங்கினன் - பலாத்காரமாகப்பற்றினன். (எகூ)

அற்றமில்கன்னிதனஞ்செஞ்சீறடி
பற்றினன்குருசசுடர்ப்பளிக்குப்பாறைமேல்
எற்றுழிக்கையிகந்தெழுந்துதைத்தனள்
சுற்றமைசிலையினன்றோளினொன்பமேவ

எற்றுழி - அறையும்போது, கையிகந்தெழுந்து - கைகடந்தெழுந்து. (அ0)

வாளுலாயத்திரிதருவான்முகட்டிடை
நீளொளிமின்னெனநிலவத்தோன்றியெண்
டோளினண்முருகவிழ்துளவத்தாரினள்
காளகவுடையினள்காளிகூறுவாள்

காளகவுடை - கரியஆடை (அக)

அரசமற்றென்னைநீயறைவதென்கொலோ
பொருதுநிற்கொலவவன்புத்வெண்டிங்கள்போல்
ஒருவழிப்பிறந்தனனுறைகின்றனென
வெருவருகட்டுரைவிளம்பியேகினள்

எனு - என்று. (அஉ)

முத்தவெண்ணகையினண்மொழிதல்கேட்டலும்
எத்திறம்புரிந்தனமியாமற்றீங்கெனுத
தத்தரியொழுகுகட்டங்கைதன்னொடு
மைத்துனன்வன்றளைமாற்றினனரோ.

தளைமாற்றினன் - விலங்குவெட்டினன். (அங)

தெய்வமும்பொய்யுரைசெப்பிற்றேயெழு
பல்வவெண்டிரைநிலம்பரவுநல்லெழிற்

கொவ்வைவாய்க்குழவிகள்கொல்லப்பட்டவே
வெவ்விளைவிளைவையார்விலக்கவல்லரே.

பவ்வம் - கடல். (அச)

அழியன்மினுதலுமழிவுமோர்ந்திடின்
ஒழிவிலெப்பொருட்கேலாமுண்மையல்லவோ
பொழிமதுக்கோதையீர்பொறுமின்யான்புரி
பிழையெனப்பணிந்தனன்பெயர்ந்திட்டானரோ.

அழியன்மின் - அழிக்காதீர்கள். (அரு)

மழைமதக்களிறனுன்மற்றைநான்றுநல
எழில்வளர்கன்னிநன்றிசைத்தகூறலும்
குழவிகளனைத்தையுங்கோறல்வேண்டுமென்
றழலுமிழ்வேற்படையமைச்சர்கூறினர்.

கோறல்வேண்டும் - கொல்லவேண்டும். (அசு)

புணர்ப்புறுபூதனையாதியாகிய
தணிப்பருங்கொடியவர்தம்மைமாநிலத
திணைப்பருங்குழவிகள்யாவுங்கொல்கெனப்
பணித்தனன்வெங்கொலைபழுத்தவேலினன்.

புணர்ப்பு - தந்திரம், இணைப்பு - ஒப்பு. (அஎ)

முருகவிழ்முளரிவாண்முகத்
தொருபசுங்குழவிவந்துதித்ததாமென
நரலைமாநிலம்புகழ்நந்தகோபனோர்
கரையிலாவுவகையங்கடலின்மூழ்கினன்

நரலை - கடல். (அஅ)

ஊழிமார்க்கடன்முகட்டொருவரின்றியே
தாழ்சினையாலிளந்தளிரின்மீமிசை
வாழ்பசுங்குழவிக்குமறைவல்வேதியர்
சூழ்வரவியற்றினன்றோற்றச்செய்வினை.

தோற்றச்செய்வினை - ஜாதகர்மம். (அகூ)

சொரிதருபாலினதுள்ளுகன்றின
புரையறுபசும்பொனற்புனையப்பட்டன
இருபதினாயிரமிளநல்லானுவந்
தருமறையவர்க்கவாவடங்கநல்கினன்.

ஆன் - பசு. (கூ0)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கொத்தளிசுலாவுமுல்லைக்கொழுமலர்கொடுத்தபைந்து
கைத்தளிர்சிவப்பவீசிக்கடிகமழ்சிவிறிநீர்தூய்

முத்தவெண்ணகையார்நெய்தோய்முறிபுரைமேனிமாதர்
நெய்த்தபேரன்புபோர்ப்பநெய்விளையாடல்செய்தார்.

சிவிறி - நீர்வீசுதுருத்தி. முறிபுரை - தளிர்போன்ற. (கக)

நந்தன்வாழ்பெருந்தண்கானலத்தகுபசும்பொற்சுண்ணம்
சிந்துரப்பொடிகளோடுதிசைதிசைகமழவீசி
அந்தளிர்ப்பாரிசாதத்தாய்மலர்த்தாதுபோர்த்த
இந்திரனகரமேய்ப்பவின்னெழில்சிறந்ததன்றே.

ஏய்ப்ப - நிகர்க்க. (கஉ)

பிடவவென்படலைமாலைப்பெருந்தகைநந்தகோபன்
கடன்மடைதிறந்ததென்னக்கடாம்பொழிகளிற்றுக்கஞ்சற்
கிடுதிறைகொணர்ந்துநல்வேயிசைதெரியாயர்சூழ
வடவரைமருளுமாடமதுரைசென்றெய்தினால்.

பிடவம் - பிடவமரம், கடாம் - மதம். (கங)

கதக்களியானையன்னகஞ்சனைக்கண்டுவண்டு
மிதிக்கவாய்நெகிழ்ந்ததாரான்வீட்டமீடலோடும்
பொதுக்கடிந்துலகங்காத்தபுகழ்வசுதேவனெய்தி
உதித்ததேகுழவியென்னவுரைத்தனன்றழீஇனானே.

கதம் - கோவம். (கச)

கொடிப்பசுந்துளவமாறுகோகுலந்தன்னினண்ப
அடுக்குமுற்பாதங்கூர்வேலரசினைக்கண்டாயன்றே
நெடித்தல்செல்லாதிபோதியென்றலுநினைவுகூர்ந்து
வடித்தபூந்தாமமார்பன்வல்விரைந்தணுகலுற்றான்.

நெடித்தல் செல்லாதிபோதி - காலநீட்டித் தலைசெய்யாது போகக்கடவை. ()

திருவவதார வத்தியாயம முற்றிற்று.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## இரண்டாவது
## பூதனைவீடுபெற்ற வத்தியாயம்.

கலிவிருத்தம்.

செஞ்சுடர்மணிக்கலைசிலம்பொடுசிலம்ப
வஞ்சியெனநின்றுஒசிமருங்குதடுமாற
நஞ்சுபொதிவெம்முலையறுத்துறநடந்தாள்
அஞ்சுவருபூதனையணங்குருவெடுத்தே.

வஞ்சியென - கொடிபோல, ஒசி - ஒடிகின்ற, மருங்கு - இடை. (க)

கண்டவர்மனம்பருகுகாவிபுரைகண்ணாள்
வண்டுபடுதாமரைமலர்க்கையின்விளங்கப்
புண்டரிகமாதுவரல்போலவருண்மாரிக்
கொண்டல்விளையாடல்புரிகோயிலினடைந்தாள்-

புண்டரிகமாது - திருமகள். (௨)

காலவிடமூறுமொருகட்செவியையந்தண்
மாலையெனவங்கையிலெடுப்பதனைமான
ஆலுமறையந்தமுமறுக்கடலுநீத்துக்
கோலமுறுகோவலர்கொழுந்தினையெடுத்தாள்.

கட்செவி - பாம்பு, மான - நிகர்க்க, ஆலும் - ஆலிலையும். (௩)

குண்டலமிலங்கவொர்குறங்கினிருத்தி
வெண்டளவரும்பனையமென்னகைவிளைத்து
மண்டுபுனல்வேலிநிகழ்மண்ணுமுயர்விண்ணும்
உண்டவனைவெய்யமுலையூட்டினளொர்பேய்

குறங்கு - தொடை, தளவு - முல்லை (௪)

அறிந்துநகையாடிமுலையங்கைகொடுபற்றி
மறங்குலவுவஞ்சமகண்மாமுலைமணிக்கண்
திறந்தொழுகுபாலினொடுசெய்யதனிரென்னப்
பிறங்குகனிவாய்முகில்பிழிந்துயிர்குடித்தான்.

வஞ்சமகள் - பூதனை. (௫)

ஊறுமுலைதந்தினையருள்ளுயிரையெல்லாம்
ஈறுபுரிபூதனையிறந்துருவுவேறு
நீறுபடயோசனையினின்றமரனெல்லாம்
வீறுயர்நிலம்புகவிழுந்தனளொர்வெற்பின்.

வெற்பின் - மலைபோல. (௬)

கொண்டறவழ்கின்றதொருகுன்றமனையாண்மேல்
தண்டனிதமாமுகிறவழ்ந்துவிளையாட
அண்டர்குலமங்கையரொடாய்தொடியசோதை
கண்டனள்கலங்கினள்கலுழ்ந்தனளெடுத்தாள்.

தனிதம் - ஒலி, தனிதமாமுகில் - கண்ணபிரான். (௭)

மூப்பிளமையின்றியுயிர்மூவுலகுமுண்டோர்
பாப்பணையின்மீதுதுயில்பண்ணவனையெல்லாம்
பூப்பவனையுந்திதருபூவினில்வகுத்துக்
காப்பவனைநின்றுசிலகாப்பணகள்செய்தாள்.

காப்பணகள் - ரக்ஷைகள். (௮)

மூரலின்முகிழ்த்தமலர்மொய்த்ததொடைநந்தன்
சார்தருநெறிக்கணுயர்தண்சினைமரங்கள்

வோறவிருந்தவள்வெருக்கொளுடனோக்கி
ஓரும்வசுதேவன்மொழியுள்ளினன்வியந்தான்.

வெரு - அச்சம், உள்ளினன் — ஆலோசித்து, (முற்றெச்சம்). (௯)

நீட்டியநற்செவ்விகொடுசேர்ந்ததுமுலைப்பால்
ஊட்டியதும்வல்லுருவமுற்றுவிழுமாறும்
கேட்டனன்வியந்தளிகிளைத்ததுளவோனை
ஆட்டினன்விழிப்புனலணைத்தனனுவந்தான்.

செவ்வி - அழகு, துளவோனை - கண்ணபிரானை. (௧௦)

மட்டொழுகுமுல்லைமலர்மார்பர்முகனோக்கிக்
கட்டிடுகவிங்கிதுதுணித்தெனவிசைப்பக்
கட்டழலுமிழ்ந்துகதிர்காலுமழுவாளால்
வெட்டியவரக்கியுடல்வெங்கனன்மடுத்தார்

மட்டு - தேன், துணித்து - துண்டித்து. (௧௧)

மேதகுகடற்பவளம்வென்றுமிளிர்செவ்வாய்
ஆதிகதிர்மாமுலையருந்தியதிறத்தால்
பூதனையுடற்சுடுபகைப்புடலமண்டக்
காதமொருநான்குவிளைகாரகில்கமழ்ந்த.

மேதகுகடற்பவளம் வென்றுமிளிர் செவ்வாய் ஆதி - கண்ணபிரான் (௧௨)

வீட்டநினையாகியழல்வெய்யவிடனூறு
மோட்டுமுலைதந்தவளுமுத்திபடர்குற்றாள்
வாட்டுளவினுற்கமுதுதத்திவழிகொங்கை
ஊட்டுமவர்சேர்நெறியுரைப்பதெவனம்மா.

வீட்ட - கொல்ல, துளவினுற்கு - கண்ணபிரானுக்கு. (௧௩)

பூதனைவீடுபெற்ற வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௧௦௮

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## மூன்றாவது
## சகடமுரைத்த வத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மஞ்சாயொளிருந்திருமேனிமழலைப்பசுஞ்சொன்மறைக்கொழுந்தை
அஞ்சாய்மருங்குற்செங்கனிவாயசோதைகனிவாய்முலையருத்தி
நஞ்சாயிரவாய்மழைஞ்சுபொழிநாகங்கிடந்துபெரிதுயிர்ப்பத்
துஞ்சாமணிப்பொற்றொட்டின்மிசைத்துயிலத்துணைகண்டுயிற்றினளால்

ஞ்சு - மேகம், மறைக்கொழுந்தை - கண்ணபிரானை. (௧)

சிறந்தமூன்றாந்திங்களின்வாய்ச்செந்தாமரைக்கட்பசுங்குழவி
பிறந்ததிருநாள்விழாவயர்ந்துபிள்ளைப்பிறைவாணுதலன்னை
உறைந்தகாலைப்பசித்தழுதங்கொண்பொன்னடித்தாமரைநீட்ட
மறிந்துசகடம்வீற்றுகிமண்மேலெநிர்ந்துவீழ்ந்ததால்.

வீற்றுகி - வேறுபட்டு, (கட்டுக்குலைந்து) (௨)

வேறுபடவீழ்நெடுஞ்சகடம்வீழவியந்தேயெடுத்தணையா
ஊறுமுலைப்பாலின்னமுதமூட்டிக்குறங்கில்வைத்துவப்ப
மாறில்குழவிமணிவரையிற்கனப்பமண்மேல்வைத்திடலும்
சூறைவளியாயோரவுணன்சுழன்றுவிண்மெகாண்டெழுந்தனனால்.

அணையா - அணைத்து, வரையின் - மலைபோல, அவுணன் - த்ருணுவர்த்தன். (௩)

சுழிக்குங்கடுங்காலெழிகின்றதூளிப்படலத்திடைமறையக்
குழைக்கும்பசும்பொற்கொம்பனையாள்குழவிகாணுள்குழைசெய்த
வழுத்தற்கரிய மறைமுதலைவவ்விக்கொடுபோம்வாளவுணன்
கழுத்தநெரியக்கண்பிதுங்கிக்கன்மேற்கவிழ்புருயிர்மாய்ந்தான்.

படலம் - கூட்டம், கவிழ்பு - கவிழ்ந்து. (௪)

விண்டோய்குடுமிநெடுவரைபோல்வீழ்ந்தவவுணனுக்கைமிசைத்
தண்டாதுறைக்குந்துளவமுகிறவழ்ந்துவிளையாடுநலன்னை
கண்டாள்வெருவிக்கைவிதிர்த்தாள்கலுழ்ந்தாள்கைத்தாமரைமலரில்
கொண்டாள்சுரந்துவழிமுலைப்பால்கொடுத்தாளுள்ளங்குளிர்ப்புற்றாள்.

துளவமுகில் - கண்ணபிரான். (௫)

கலிநிலைத்துறை.

பூவைப்புதுமாமலர்போலெழில்பூத்ததோன்றல்
ஆவித்தகாலைத்துவர்வாயிடையாழிஞாலம்
மேவித்திகழுந்திறனோக்கிவியக்குமன்னை
காவித்திருமாமலரன்னதன்கண்புதைத்தாள்

ஆவித்தகாலை - கொட்டாவிவிட்டபோது. (௬)

நிறைவுற்றதிங்கணிலத்தூடெழுநேரமும்மை
மறுவற்றகாட்சிமறையோன்வரக்கண்டுநன்னர்
நறையுற்றபூமென்கரங்கூப்பியநந்தகோபன்
சிறுவர்க்குநாமம்புனைவாயெனச்செப்பினுனால்.

நேர - நிகர்க்க, மும்மைமறு - முக்குற்றம். (௭)

மடல்சேர்கழுநீர்மலர்வாட்கணுரோணிசெம்மல்
சுடர்கான்மதியிற்சுடர்கின்றதொர்தோற்றமேய
அடலேறனையாற்ககன்ஞாலமனைத்துமேத்த
மிடல்கூரிராமனெனநாமம்விளம்பினுனே.

மதியின் - சந்திரன்போல. (௮)

மண்ணைக்கிளைக்குஞ்சுடர்நீலமும்வண்டுதேறல்
உண்ணக்கிளைக்குநறுநீலமுமொத்தகோல
வண்ணற்குத்தண்ணங்கமலத்தலர்போன்மலர்ந்து
கண்ணற்குக்கண்ணனெனவோர்பெயர்கட்டுரைத்தார்.

மண்ண - சுத்தப்படுத்த, சுடர்நீலம் - நீலரத்நம். (௯)

கலிவிருத்தம்.

பொருவில்வெண்மையுஞ்செம்மையும்பொன்மையும்
மருவினுற்றனன்மற்றையுகந்தொறும்
விரவலுற்றகலியில்விழிகவர்
கருமையெய்துபுகண்ணனென்றுயினன்

விரவலுற்ற - கலந்த, எய்துபு - அடைந்து. (௧0)

அருமறைத்துறையாடுகடற்றிரைப்
பரவைஞாலப்பரப்பிற்றவழ்தர
முருகுவிம்முமுளரியுஞ்செய்யகட்
கரியவன்றவழ்கற்றனனென்பவே.

முருகு - வாசனை, கரியவன் — கண்ணன். (௧௧)

களித்துவண்டுகளுலுங்களிநறுத்
துளித்ததண்ணந்துழாய்முகிற்கேழல
களிப்பத்தோன்றுமமலற்குயந்தறம்
முளைத்தெனமுளைத்ததுமூரலே.

அமலற்கு — கண்ணபிரானுக்கு, மூரல் - பல். (௧௨)

கடகளிற்றிளநகன்றனையான்மழ
விடையின்மென்னடைகற்பவிளங்கெனப்
படருநகன்றின்வாய்பற்றினன்மென்மெல
நடைபுரிந்தனன்ஞாலங்களிப்பவே.

கடகளிறு - மதயானை (௧௩)

வேறு.

தழைத்தநீருலகுதந்துமளித்தும்
அழித்துநின்றுவிளையாடுமவ்வண்ணல்
குழைத்தபைந்தழைசெய்கோவலர்குற்றில்
உழைப்படர்ந்துவிளையாடலுவந்தான்.

குற்றில் - சிறுவீடு. (௧௪)

உந்துநீருலகமுண்டருள்செவ்வாய்ப்
பைந்துழாய்க்குழவிபண்பினியற்றல்

கொந்துலாநறியகோதையசோதைக்
கந்தண்முல்லைநகையாய்ச்சியர்சொல்வார்.

உந்துநீர் — கடல். (கூ)

கட்டமைந்தசிறுகன்றுவிடுக்கும்
தொட்டுவெண்ணெயொடுதோய்தயிருண்ணும்
நெட்டுறிக்குரலினின்றுகைநீட்டும்
எட்டுகின்றிலதுடைக்குமெறிந்தே.

தோய் - உறைந்த. (கசு)

வேறு.

ஏரொழுகுதாமரையெனத்திகழ்கரத்தால்
காரிருள்குடித்துவெயில்காலுமணிபொத்திப்
பாரில்விளையாடுமொருபைம்புயலெனச்சென்
றூரிருளகத்தளையெடுத்தனனருந்தும்.

அளை - வெண்ணெய். (கஎ)

என்றுபலசின்மழலையேழையரிசைப்பக்
குன்றிணைசுமந்துகுழைவுற்றகொடிபோல
நின்றுசிமருங்கினெழிலேரிழையசோதை
ஒன்றுமுரையாடலளுவந்தனளிருந்தாள்.

ஏழையர் - பெண்கள். (கஅ)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நங்காய்மண்ணருந்தினனின்குழவியெனவில்லையெனநவின்றோனைக்
கொங்கார்ந்தசெழுங்கமலக்கோற்றொடிகைப்பற்றினள்வாய்காட்டுகென்ன
அங்காந்தமணிவண்ணனம்பவளத்துவர்வாயினழகுகாலும்
செங்காந்தண்முகிழ்விரலந்தீங்கிளவியுலகனைத்துந்தெரியக்கண்டாள்.

மணிவண்ணன் - கண்ணன், அங்காந்த - வாய்திறந்த. (கக)

விண்கண்டாள்விண்வளைக்கும்வெங்கதிருந்தண்சுடரும்விளங்கக்கண்டாள்
மண்கண்டாண்மண்வளைத்தமாகடலும்பேருயர்மால்வரையுங்கண்டாள்
தண்கொண்டவெண்டோட்டுத்தளவநெடுவனங்கண்டாடனையுங்கண்டாள்
பண்கொண்டவண்டாற்றும்பசுந்துளவோனிவனெனவேமாவினளால்.

வெங்கதிர் - சூரியன், தண்சுடர் - சந்திரன். (உ0)

முருகொழுகுமுகிழ்விரியுமொய்த்துளவோன்மாயையினன்மறைத்தலோடும்
பருகுவனபோனோக்கிப்பழுத்தொழுகுமன்பினளாய்ப்பராவியன்னை
பொருகளிறுவருகவளர்ப்பாரேறுவருகவெழிற்பூவைவண்ண
வருகவெனத்துகிரில்விளைமணிமுத்தங்கொண்டனளுண்மகிழ்வுபூத்தாள்.

பூவைவண்ண - காயாமலர் நிறத்தையுடையவனே. (உக)

வேறு.

என்னலுமன்னர்மன்னனீன்றவர்க்கெய்தலாகாக்
கன்னன்மென்றனையதீஞ்சொற்கண்ணனதிளமைத்தன்மை
மன்னியவிருப்பிற்காணமாதருநந்தகோனும்
முன்னமெத்தவஞ்செய்தார்கொலெனமறைமுனிவன்சொல்வான்.

ஈன்றவர் - பெற்றவர், (வசுதேவன் தேவகி). (உஉ)

சகடமுதைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் கஙO.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---

நான்காவது

## மருதிடைத்தவழ்ந்த வத்தியாயம்.

தண்ணிலாமுறுவற்செவ்வாய்த்தரையெனுந்தலைவியோடு
மண்ணினிற்பிறப்பவென்றோர்வசுவினைமலரோன்கூற
அண்ணலந்திகிரியான்மேலன்பெமக்களிப்பாயென்னக்
கண்ணுறுநம்மில்வந்துகண்ணனென்றருளினானால்.

மலரோன் - பிரமன், அண்ணல் - பெருமை. (க)

அன்னவரிவர்மற்றம்பொனரும்பவிழ்கமலவீட்டு
முன்னவன்மொழிந்தவாறேமுறிமிடைபடலைப்பைந்தார்க்
கன்னியந்துளவத்தோன்றல்கண்ணுறக்கனியுமன்பால்
இன்னிளஞ்செவ்விநோக்கியெய்தினரின்பமன்றே.

முறி - தளிர், இளஞ்செவ்வி - இளமையழகு (உ)

வளையினமுரலத்திங்கள்வாணுதன்மூத்தம்பூப்ப
அளியுணவிரிந்தகோதையவிர்தரவசோதையோர்நாள்
முளிதயிர்கடைந்தகாலைமுழங்குநீருலகமுண்ட
ஒளிமணிவண்ணனெய்தியுண்டனன்முலைமற்றன்றே.

முளி - தோய்ந்த, மூத்தம் - வேர்வை. (ங)

பைங்கதிர்க்குழவியன்ஞன்படாமுலையருந்துமெல்வைப்
பொங்கியதடுபாலென்றுபுணர்முலைசொரிந்தபாலும்
கொங்குலாமலங்கன்மாலைக்கொழுநறுத்தளியுஞ்சிந்தச்
செங்கடைமழைக்கட்பேதைசென்றனளோடிமன்றே.

படா - சாயாத, அடு - காய்ச்சுகிற, தளி - துளி. (௪)

எறித்தவெண்டிங்களூறுமின்றளியமுதமென்னத்
தெறித்தவெண்டயிர்நுண்புள்ளிதிருமுகஞ்சிறப்பநின்ற

உறைப்பசுங்கொண்டலன்னானுடைத்தனன்றடவுத்தாழி
மறைத்தனள்வைத்தவெண்ணெய்வாரினளோடினாளல்.

உறை - நீர், தடவு - பெரிய. (ரு)

மழைக்கருங்கண்ணிநோக்கிமழையிருங்கூந்தருழுக
குழைத்தகோர்வல்லியென்னக்குழைந்தநுண்மருங்குநோவப்
பழைத்தநான்மறையினோடுபடுபொருளொருவகுநேர்ந்த
விழுத்தவர்தொடரவெட்டா விமலனைத்தொடர்ந்துசென்றாள்.

மழை - குளிர்ச்சி, மேகம், விழுத்தவர் - பெரியதவத்தினர். (சு)

தளிர்க்கவினழித்தபொற்றாட்டாமரைசிவப்பவோடி
இளைத்தனளன்னையெனாவிளங்கதிர்ப்பரிதிநாணக்
கிளைத்தொளிதவழும்பைம்பொற்கிங்கிணிசிலம்பவோடும்
களிற்றிளங்குழவியன்னாள்கையகப்பட்டுநின்றான்.

தளிர்க்கவின் - தளிரினழகு, என்னு - என்று. (எ)

தளையவிழ்முளரியன்னதாட்டுணைநினைவோர்க்கெல்லாம்
விளைதருவினையின்கட்டுவீட்டுபைந்துளவினானைக்
களியிருஞ்சுரும்பர்மூசுகாந்தண்மென்முகுளமன்ன
ஒளிவளைக்கரத்தாலன்னையுரலொடுபிணிககலுற்றாள்.

தளை - கட்டு, வீட்டு - சேதிக்கிற, முகுளம் - அரும்பு. (அ)

கலிநிலைத்துறை.

அணைந்துவெண்மதிதொடுநெடுங்கிரியெனவண்ணாந்
திணைந்துவிம்மியவேந்திளவனமுலைசுமந்து
வணங்குநுண்ணிடைமயிலியல்வயின்வயிறோடிக்
கொணர்ந்துகட்டியகயிறெலாம்குருவிரல்குறைந்த.

வணங்கு — வளைந்த, மயிலியல் - யசோதை. (கூ)

வீக்கிவீக்கித்தன்விரைகமழ்தாமரைச்செங்கை
சேக்கவங்கதிர்த்திங்களஞ்சிறுநுதல்வியர்ப்ப
மாக்கண்வெம்முலைமடவரல்வருந்துதனோக்கி
யாக்கப்பட்டனனெங்கணுநிறைந்தவவ்விறைவன்.

வீக்கி - கட்டி, சேக்க - செவக்க, யாக்கப்பட்டனன் - கட்டப்பட்டான். (க0)

இருநிதிக்கிறைகாதலரிரிபொன்வார்ந்தன்ன
புரிநரம்புளர்நாரதன்புகன்றசாபத்தால்
மருதுருக்கொடுநின்றமைநோக்கினன்மலர்ந்து
கருணைமாமழையசும்பெழுதாமரைக்கண்ணன்.

இருநிதிக்கிறை - குபேரன், காதலர் — புதல்வர். (கக)

எனுமன்னவனென்னைகொலிளநறுவொழுகி
அனையதீங்தொடையாழ்முனியறைதருசாபம்

தனதன்காதலருற்றதுசாற்றுவாயென்ன
வினைமுருக்கியமெய்த்தவன்விளம்பலுற்றனனால்.

தனதன் - குபேரன். (கஉ)

வேறு.

நந்தாதவென்றிநளகூபரனென்றுரேன்சோர்
மந்தாரமாலைபுனைமார்பன்மணிக்கிரீவன்
செந்தாமரைமேற்றிருவிற்றிகழ்மாதரோடும்
அந்தாதுயிர்க்குமலர்ப்பூம்புனலாடுவாரால்.

நந்தாத - அழியாத. (கங)

விரைநாறுமேதறன்மதுமார்திமென்றூசுநீங்கி
அரமாதரோடுகளியாற்பனைவாடனோக்கி
மரனுகவென்றுசபித்தான்மலர்வாயவிழ்ந்து
சொரிதேறலென்னச்சொரியாழிசைச்சூழ்ச்சிமிக்கோன்.

யாழிசைச்சூழ்ச்சிமிக்கோன் - நாரதன் (கச)

உயர்தெய்வயாண்டினொருநூறினின்றொற்றையாழிப்
புயல்வண்ணன்றன்னையடைவுற்றழிப்போவதாகச்
செயிர்மன்னுசாபமெனச்செப்பினன்செப்புமாறு
வெயின்மன்னுசெக்கர்மணிமார்பன்விலக்கலுற்றான்.

செக்கர்மணி - செம்மணி, (கௌஸ்துபமணி). (கரு)

வேறு.

தழைதவழ்ந்தபூந்தாதவிழ்தாழிருங்கூந்தற்
குழைதவழ்ந்தகட்டேவகிபச்சிளங்குழவி
இழைதவழ்ந்தபேரொளிக்கதிர்மின்னெனவிமைப்ப
மழைதவழ்ந்தெனமருதிடைத்தவழ்ந்தனன்மன்றே.

தாழ் - தொங்குகிற, நீண்ட. (கசு)

உரலொடுந்தனித்தவழ்தருபுயர்வெளியளந்த
விரிதடஞ்சினைபுணர்மருதெசிந்துவேர்பறியா
வரைவிழுந்தெனவீழ்ந்தவம்மருதுருவெடுத்தோர்
பரவியேகினர்பசுந்துழாய்ப்பரனடிபணிந்தே.

தவழ்தருபு - தவழ்ந்து. (கஎ)

அசனிவீழ்ந்ததென்றாய்ச்சியரால்வயிறதுக்கி
நொசிமருங்கிறநொய்தின்வந்தீண்டினர்நோக்கிப்
பசியமாமுகில்வண்ணத்தனுரலொடும்படா
தொசிதலுற்றுவீழ்ந்தனவெனத்தெளிந்தனருள்ளம்.

அசனி - இடி, நொசி - நுண்ணிய. (கஅ)

அண்ணனந்தகோனறிந்தனன்கைம்முகிழ்த்தறியா
வெண்ணெயுண்டபைம்புயல்பிணிப்பவிழ்த்தனன்விருப்பால்
தண்ணந்தாமரைத்தடக்கையாற்றழீஇயினன்செய்ய
கண்ணிறைந்தனன்படுபுனல்களித்தனநெஞ்சம்.

பைம்புயல் – கண்ணபிரான், பிணிப்பு - கட்டு. (௧௯)

மழைத்தகார்முகிற்கொழுந்தனுண்மணிநிறவிசும்பு
கிழித்தமின்னெனக்கீற்றிளம்பிறைநுதலுரோணி
தழைத்தகாதலிற்றளிரடிசிவப்புறநடந்தாங்
கழைப்பவந்திலனுடினனுற்றடைகரையில்.

மழைத்த - குளிர்ந்த, உரோணி - உரோகிணி. (௨௦)

கண்ணதாமரைக்கண்ணனின்பிறந்தநாளின்றால்
அண்ணலானினமந்தணர்க்குதவுவானடைக
உண்ணிலாவிளையாடலேயுவத்திகொலென்று
வண்ணவார்குழலசோதைசென்றழைத்தனள்வந்தான்.

அண்ணல் - பெருமை, ஆன் இனம் - பசுக்கூட்டம். (௨௧)

தோடுவாயவிழ்தூமலர்க்கற்பகங்கொணரக்
கோடுவாய்வைக்குங்கொற்றவன்கூத்தெனைப்புகல்வேன்
பாடல்வாயிளம்பூவையிற்பாவையர்பாடி
ஆடுவாயெனச்சீறடிசேப்பநின்றாடும்.

கோடு - சங்கு. (௨௨)

ஊறுபற்பலவுற்றவிவ்வுழையகன்றொருபால்
சேறுநாமெனத்தேங்கொள்பூந்தொடையுபநந்தன்
கூறநந்தகோன்கோற்றொடிமாதர்முன்செல்ல
ஏறுபோல்வளர்குழவிகடம்மொடுமெழுந்தான்.

சேறும் - செல்வோம், ஊறு - இடையூறு. (௨௩)

மருதிடைத்தவழ்ந்தவத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௪௰௫.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ஐந்தாவது
## விருந்தாவன மடைந்த வத்தியாயம்.



கலிச்சந்த விருத்தம்.

நரந்தங்கமழ்குழன்மங்கையர்நகைகண்டதிர்நகைபோல்
அரும்புந்தளவிளவெண்முகையலர்தாதுழுசுகலாச்
சுரும்பஞ்சிறைவரிவண்டொடுதுளவம்பொழிதண்டேன்
விருந்துண்டுணைந்தொடையாழ்செயும்விருந்தாவனமடைந்தான்.
நரந்தம் - கஸ்தூரி, தளவு - முல்லை. (௧)

கொண்டற்குலம்விளையாடியகோவத்தனகிரியும்
கண்டற்கடிமணநாறியகாளிந்தியுமெறிநீர்
வண்டற்புதுமணலுந்தகிர்மணிவாலுகக்குன்றும்
அண்டர்க்கிறைகண்டுற்றனனமையாமகிழ்வன்றே.
கண்டல் - தாழை, வாலுகக்குன்று - மணற்குன்று. (௨)

உழைக்கன்றுறழ்விழியாய்ச்சியருறிவெண்ணெய்தொட்டுண்டோர்
மழைக்கன்றெனத்திகழ்வோனுயர்வஞ்ஞோர்மணிமுடியால்
தொழக்கன்றியபதத்தான்பசுந்தோட்டின்னறுகருந்தும்
குழக்கன்றினமேய்த்தானிளங்குறுமாக்களொடம்மா
உழைக்கன்று - மான்கன்று, மழைக்கன்று - சிறுமேகம். (௩)

வளர்கன்றினதுருவாயொருவைவேற்கொலையவுணன்
தளவம்படர்தண்கானகந்தலைப்பெய்தமையறிந்தான்
துளவம்புனைவிரிதாரவன்றுணைவற்கறிவுறுத்தான்
விளவின்கனியுதிரும்படிவிரைவிற்கொடெறிந்தான்.
தளவம் - முல்லை, தலைப்பெய்தமை - வந்திருப்பதை. (௪)

வையம்பொதிபொற்றுண்முகில்வால்வெள்வளையொளிரும்
கையம்புயமலராலிருகால்பற்றினனெறியப்
பெய்யும்புயலெனவார்த்துமண்பிள்ளும்படிவீழாப்
பொய்யும்படுகொலையுந்தனிபுலம்புற்றிடமடிந்தான்.
பொதி - மூடின, பற்றினன் - பற்றி, (முற்றெச்சம்) பிள்ளும்படி-பிளக்கும்படி.

அழன்மன்னியதிகிரிப்படையவிர்தாமரைக்கரத்தோர்
எழின்மன்னியசிறுகோலெடுத்திளங்கன்றினந்துரந்தான்
பொழின்மன்னியநறுமுல்லையம்புலத்தொள்ளிணர்க்குரவின்
நிழன்மன்னியதண்ணந்துறைநீரூட்டினனிருந்தான்
துரந்தான் - ஓட்டினான், இணர் - கொத்து. (௫)

புழுங்குஞ்சினமுதிர்வுற்றடுபுள்ளாகியொரவுணன்
விழுங்கும்பொழுதழலாமெனமிடற்றிற்சுடவுமிழாக்
கொழுந்தண்டுளவணிமாயனைக்குத்தற்கெழநெடுமால்
செழும்பங்கயமலரங்கையிற்றீவாய்கிழித்தனனால்.
மிடற்றில் - கண்டத்தில், உமிழா - உமிழ்ந்து. (௭)

பொருகொக்கினதுருவாகியபுலவுப்படையவுணன்
செருகுற்றனன்விழிமற்றெழுசிறுகன்றினங்தொடரா
முருகுற்றதண்முகைவாய்நெகிழ்முல்லைப்புறவெலலாம்
விரைகக்கியதுளவப்புயல்விளையாடினனுவந்தான்

செருகுற்றனன்விழி - கண்செருகினன், (மயங்கினன்) தொடரா - தொடர்ந்து.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

எறிகதிர்வாளாலிருட்குறும்பெறியுமேரிளம்பரிதிவான்பொடிப்பச்
செறியிதழ்விரிசெந்தாமரைக்கண்ணன்சேட்டிளர்கன்றெலாந்துரந்து
முறியிளமுல்லைமெல்லரும்பென்னமூரல்வெண்டயிரளைபொதிந்து
குறுகுறுநடந்துசிறுவர்வந்தீண்டக்கோடுவாய்வைத்தனனெழுந்தான்.

முறி - தளிர், கோடு - சங்கு. (கூ)

முள்ளரைமுளரிமுகத்தினளாகிமுலைகொடுத்திறந்தபூதனைக்கும்
புள்ளுருவெடுத்துவிழுங்கிமாய்ந்தவற்கும்பொருவிலாத்தம்பியென்றுரைக்கும்
அள்ளிலைநெடுவேலகாசுரனென்போனவ்வழிமலைநெடும்பாம்பாய்
வெள்ளிமுள்ளெயிற்றுபபாழிவாய்விசும்புவெளியறவிரித்தனன்கிடந்தான்.

புள்ளுரு - கொக்குரு (௧0)

சேட்டிளந்திங்கடவழ்வரைமுழைஞ்சேரர்தீவிடப்பாந்தள்வாய்போலக்
காட்டியவண்ணங்காண்மினேவென்றுகாதலாற்சிறுவராக்கணங்கள்
நீட்டமோடேகப்பவளவாய்மலர்விண்டியம்பலெனன்றுமாங்கேகிச்
சூட்டுவாளரவின்மிடறுகீண்டெழுந்தான்றுத்திவாளரவினிற்றுயில்வோன்.

வரைமுழைஞ்சு - மலைக்குகை, பாந்தள் - பாம்பு, ஆக்கணம் - பசுக்கூட்டம். ()

பிளந்தகார்மிடற்றினின்றிளங்கன்றும்பிள்ளையஞ்சுறும்பொடிவரிவண்
டுளர்ந்ததார்முல்லைப்பசுந்தொடையாயருயிர்புரைசிறுருமுய்ந்தெழுந்தார்
வளர்ந்தபாம்புருவாக்கிடந்தவன்பாம்பின்வளர்ந்தவன்சேவடிபடர்ந்தான்
களங்கனிவண்ணத்திறைவிளையாடல்கண்டனன்மலரவன்களித்தான்.

புரை - நிகர்த்த, சிறுரும் - சிறுவரும், வளர்ந்தவன் - கண்வளர்ந்தவன் (௧௨)

வெருவருபாந்தளுருக்கொடுகிடந்தவேற்றிறலவுணனையந்தாம்
பருவமாமாயன்கோறல்கண்டாடும்பருவமேபுகழ்ந்தனருயர்
புரையறுசிறுவராதலவ்வாறுபுகழ்ந்ததென்வழங்குவாயென்னக்
குருதிகொப்புளிக்கும்பரிதிவேல்வேந்தன்கூறநான்மறையவன்கூறும்.

கோறல் - கொல்லுதல், புரை - குற்றம். (௧௩)

விருந்தாவன மடைந்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—.௧௬௬.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்



## ஆறாவது

## மலரவன்சிறார்க்கன்றுகவர்ந்தவத்தியாயம்.



பாற்குடமருட்டுசெருத்தலான்கன்றுபச்சிளம்புல்லுணாதெவிட்டித்
தாற்றிளங்கமுகநறுநிழல்படரத்தளவணியாயர்தந்தநயர்
வீற்றுவீற்றாகப்பாசடைவிரித்துவிரவியேதனிதனிமேவி
ஆற்றுணவயின்றாரெறிதிரையமுனையாற்றடைகரையகத்திறுத்தே.

செருத்தல் - பால்மடி, பாசடை - பசிலை, ஆற்றுணா - கட்டுச்சோறு, அயின்றார் - உண்டார்கள், (க)

வட்டுடைச்செருகுமுல்லையங்குழலவ்வயிற்றிடைத்திகழுவார்கோடும்
கட்டெழிற்கோலுங்கையமுதலனையதுக்களியமுதிடக்கரத்தேந்தி
விட்டொளிர்பசும்பொன்றொழிமெல்விரலின்மிசைவதற்குரியனதாங்கி
இட்டபூந்தவிசினணிதிகழின்றயின்றனிமையவர்குழாத்தவிநுகர்வோன்.

வட்டு - திரட்சி, கோடு - சங்கு, மிசைவதற்கு - உண்பதற்கு. (உ)

நிழல்வளரிளங்கன்றுழைதொறும்படரநின்மனென்றிளைஞரைநிறுவி
எழில்வளர்செங்கைமலரிலம்வெண்கவளமேந்தினனெழுந்தனன்றொடரப்
பழமறைமுதலிதிருவிளையாட்டுப்பார்க்குநாமின்னமென்றிளவண்
டுழுநறுமலரோன்மழவரோடானகன்றொளித்தனன்மாயையினொருங்கே.

உழைதொறும் – இடந்தோறும், பழமறைமுதலி - கண்ணபிரான், பார்க்கும் - பார்ப்போம், மழவர் - சிறுவர். (ங)

முற்றநான்மறையுங்கற்றறிந்தவருமுறைமைசான்முதுமறைக்குலமும்
தெற்றெனக்காணவொருபெருந்தீர்த்தஞ்சிற்றடித்தாமரைசிவப்பக்
கற்றினந்தேடிக்காண்கிலான்மீளுங்காலமெனமுல்லையங்கண்ணிப்
பொற்றொடிப்புதல்வர்தம்மையுமந்தண்புளினமேற்காண்கிலனினைந்தான்.

பெருந்தீர்த்தன் - பெருந்தேவன், கற்றினம் - கன்றுக்கூட்டம். (ச)

களிச்சுரும்பாற்றுவெள்ளிவெண்டோட்டுக்கள்ளவிழ்முளரிவீற்றிருக்கும்
பளிக்கொளியுருவிற்பவளவாய்ப்பச்சைப்பசுங்கிளிமழலையாள்கொழுநன்
ஒளித்தனனென்பதுணர்ந்துபாரேழுமுந்திநாண்மலரிடைக்காட்டி
அளித்தழிப்பவன்றானுயர்தஞ்சிறுமானிளங்கன்றுமாயினனால்.

அரற்று - ஒலிக்கிற, வெள்ளிவெண்டோட்டுக் கள்ளவிழ் முளரிவீற்றிருக்கும் பளிக்கொளியுருவிற் பவளவாய்ப்பச்சைப் பசுங்கிளி மழலையான்கொழுநன் - பிரமன்

மாற்தருஞ்சிறப்பின்மழலைவாய்க்குடவமைந்தர்தம்வண்ணமும்வனப்பும்
தோற்றமும்வடிவுந்தொழில்களுங்குணனுஞ்சுடர்மணிப்பூணுமந்துகிலும்
ஊற்றிருந்திளந்தேனொழுகுபூந்தாருமூதுதீங்குழலும்வார்கோடும்
வேற்றுமையின்றியங்ஙனம்விளைந்தவிளைவுநாமெங்ஙனமுரைக்கேம்.

குடவமைந்தர் - இடைச்சிறுவர். (ரு)

நறவுவாய்மடுத்துவரியளிமிழற்றுநகுமலர்வடிக்கணைதெரிந்து
சுறவமீதுயர்த்தவேனிலான்றென்றச்சுடர்மறைமாலையம்போதில்
பறவையூர்பறவாப்பூவைவண்ணத்தன்படர்தலுங்குவிமுலைசுரந்து
கறவைகன்றூட்டிக்களித்தவாய்ச்சியருங்களித்தனர்சிறுவர்க்கண்ணுறவே

பறவை - கருடன், பறவாப்பூவை - காயாமலர். (எ)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஈன்றதங்குழவிதம்மேலெழுதருங்காதறன்னின்
மேன்றவழ்துளவதெய்வசிறுவர்மேற்காதல்கூர்ந்தார்
வான்றவழ்குழவிதிங்கள்வாணுதற்பவளச்செவ்வாய்க்
கான்றவழ்முல்லைவேய்ந்தகாரிருங்கூந்தலாரே.

தெய்வச்சிறுவர் - க்ருஷ்ணபலராமர்கள் (அ)

பருவமொன்றிவ்வாறகப்பாற்கடலவண்ணனேடும
கருமுகில்வண்ணத்தண்ணலகன்றெலாந்துரந்துமன்றற்
குரவமுங்குருந்துங்கோங்குக்கொன்றையுமகிலுஞ்சாந்தும்
மரவமுங்கமழுஞ்சாரன்மலையகத்தேகினுல்

பருவமொன்று - ஒருவருடம், பாற்கடல் வண்ணன் - பலராமன். (கூ)

பொற்புறுவரைமேனின்றபுனிற்றிளஞ்சேதாவோடிக்
கற்பகமலர்ந்ததெய்வக்கடிகமழ்சாரன்மேவும்
முற்படுகன்றுக்கெல்லாமுலைசுரந்தொழுகுதீம்பால்
அற்பின்வந்தூட்டல்செய்தவாயாகையிகந்துமன்றே.

பொற்பு - அழகு, கடி-வாசனை, அற்பின் - அன்போடு. (கo)

ஊடுதுவண்டுழலுமுல்லையொள்ளிணர்க்கண்ணிசிந்த
ஆதுரந்தொல்லைவந்தவாயருமலைதலின்றி
மாதர்மீதூறநின்றுமதுப்பொழிமழலைச்செவ்வாய்க்
காதலர்செவ்விநோக்கிக்களித்தனர்நெஞ்சமாதோ

ஆதுரந்து - பசுக்களையோட்டி, மலைதலின்றி - போர்செய்யாமல், மாதர் - அழகு
காதலர் - பிள்ளைகள், செவ்வி - அழகு. (கக)

விளைவதெனிதுமற்றென்றுவியப்புடைமனததனுகி
வளைமருண்மேனிவள்ளன்மாயவன்வதனநோக்க
உளநனிகசிந்துகற்றூறுபாலூட்டுகன்றும்
இளைஞருந்தானேயாகியிருத்தலாங்கியம்பினுல்.

வளை - சங்கு, வதநம் - முகம். (கஉ)

அவ்வழிநமதுமாயையஃததனராகிக்கன்றும்
மைவழிகுழல்சூழ்கண்ணிமைந்தருமிருப்பமற்றும்
இவ்வழியிவ்வாறுகியிருந்ததென்னென்றுபார்த்தான்
செவ்வழிவணடுபொடுஞ்செய்யதாமரையானம்மா.

செவ்வழி - ஓர்பண், மை - மேகம் - கருமை. (கங)

கொடிவளர்முல்லைப்பைந்தார்க்குமரரும்வளரான்கன்றும்
கடல்வயிறுளைந்துபெற்றகதிர்மணிதிருவில்வீசச்
சுடர்விரிபசும்பொன்றூடைசூழ்கதிர்க்கற்றைதூற்ற
மடலவிழ்துளவோனாகிவயங்கினன்பெரிதுமாதோ

ஆன் - பசு, கடல்வயிறுளைந்துபெற்ற கதிர்மணி - கௌஸ்துபமணி. (கச)

புனிற்றிளங்கன்றுமாயர்பொற்றொடிப்புதல்வர்தாமும்
கனற்பொலிநிகிரியேந்துங்கார்முகில்வண்ணனாகித்
தனித்தனியமரரோடுநானுநின்றேத்தநோக்கி
அனைத்தையும்படைக்குமண்ணலலம்வரலெய்தினானால்.

அனைத்தையும்படைக்கு மண்ணல் - பிரமன். (கரு)

மலரவன்மறுக்கநோக்கிமாயவன்மாயைவாட்க
உலகெலாமளிக்குமாமொருருவனேயாகிச்செங்கை
மலரில்வெண்கவளமேந்திவளரிளங்கன்றுதேடிக்
குலவுதலகண்டுசெங்கண்குளிர்ந்தனனுவந்திட்டானே

மறுக்கம் - மயக்கம். (கசு)

கலிவிருத்தம்.

மற்றொருததிமடுக்கிளர்பூவினில்
பெற்றெடுத்தபிரான்புலியுட்பொதி
சிற்றடித்துணைசேர்ந்தனன்றேங்கமழ்
பொற்றதார்முடிநான்கும்பொலியவே.

பிரான்-கண்ணபிரான், அடித்துணை-இரண்டுதிருவடி, பொற்ற-பொன்மயமாகிய.

செழும்பொனண்டந்திறப்பமுழுக்கொடு
விழும்புனற்கங்கைவெள்ளநததும்பிய
கொழும்பொற்றாமரைப்போதுகுறைந்துநாத்
தழும்பவேத்தினன்றாமரைச்செல்வனே.

ததும்பிய - பொருந்திய, தாமரைப்போது - திருப்பாதம் (கஅ)

அற்றமில்லெனவண்டமனுவென
முற்றுகின்றவானின்றன்முழுமெய்யும்
ஒற்றையண்டத்தொருவழிவைகுவேன்
தெற்றெனத்துணிவேன்கொனின்சீர்த்தியே.

அற்றம் - முடிவு, வைகுவேன் - தங்குவேன். (ககூ)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வெங்கதிர்ப்பரிதிமுன்னமேயமின்மினியும்விள்ளாப்
பொங்கிருட்கயகுல்சேர்ந்தபுன்பனியருளுமன்றே
அங்கண்மாஞாலமுண்டோராலிலைப்பள்ளிதுஞ்சும்
செங்கண்மாமாயநின்பாற்செய்தவென்மாயைதானே.

ஆலிலைப்பள்ளி - வடபத்ரசயநம். (உ0)

அடைத்துழாய்ப்படலைமாலையமலநின்னிலைமைதேரா
துடைப்பெருமாயைதன்னுலுருப்பலகாட்டுவாயால்
படைக்கையானுகிமற்றைப்படைப்பெலாங்காப்பனீயாய்த்
துடைப்பமுக்கண்ணனுகிநீதோன்றுமாபோலமாதோ.

அடை - இலை, படைக்கையான் - பிரமன். (உக)

அல்லியங்கமலச்செங்கணமலநீயாகத்தன்னை
நல்லுணர்வதனுனுடுநற்றவமுடையார்கன்ருே
மெல்லிணர்க்கண்ணிமேயவெஞ்சினவரவுபோல
இல்லதாமெல்லையில்லாவிருள்படுதோற்றந்தானே

மெல்லிணர்க்கண்ணிதோன்றும் வெஞ்சினவரவு - பூமாலையிற்ருேன்றும் பொய்ப் பாமபு, (கயிற்றிற்பாம்பு). (உஉ)

மண்ணெலாமுண்டசெல்வவயிற்றகத்துறைபாநின்ற
ஒண்ணிறக்குழவிதானாலுழைந்ததலாய்பிழையென்ருேரர்
அண்ணனின்னகல்வயிற்றுளகப்படாப்பொருளுமுண்டோ
எண்ணினுன்வயிற்றுவாழ்மேனிழைத்ததெப்பிழையதாமால்

ஆய் - தாய். (உ௩)

உவப்பொடுமறையோர்வேள்வியூட்டுமின்னவியினுலே
தெவிட்டலாய்தெவிட்டுமாறுநீஞ்சுவையமுதமூட்டும்
குவட்டிளங்குளவுக்கொங்கைக்கொடியிடையாயர்மாதர்
தவத்தையென்புகல்வலானின்றவத்தையென்சாற்றுகிற்பேன்.

உவப்பொடு - விருப்பத்தோடு, குவடு - மலை, ஆனின் - பசுக்களின் (உச)

வெஞ்சினந்திருகுநஞ்சம்விளைநதவெம்முலைப்பாலூட்டு
வஞ்சனையரக்கிதானும்வந்துநின்னடியிற்சேர்ந்தாள்
நெஞ்சுவந்தமுதமூட்டுநேரிழையவரோடாவிற்
கஞ்சனவண்ணவென்னேவளித்திமற்றறிகிலேனுல்.

அரக்கி - பூதனை, ஆவிற்கு - பசுக்களுக்கு. (உரு)

திருவினர்பெரிதுமந்தோதிருவினர்பெரிதுமந்தோ
விரியல்வெண்டோட்டுமுல்லைவியன்புலத்துறையப்பெற்ருேர்
அருவமாயொன்ருய்ச்சித்தாயகண்டமாய்ப்பரமாநந்த
உருவமாய்நின்ருய்நின்னேடுறவுகொண்டிருக்கின்ருரே.

திருவினர் - பாக்கியவான்கள். (உசு)

என்றவன்வலங்கொண்டேகவிளநிலாக்குவித்தாலன்ன
குன்றவெண்மணலின்மேயகோற்ருெடிப்புதல்வர்தம்பால்
மன்றலங்கமலவீட்டுமறைமுதல்விடுக்கப்பட்ட
கன்றினந்துரந்துசென்ருன்கஙகைசூழ்கழற்பெம்மானே.

கமலவீட்டுமறைமுதல் - பிரமனுல், இரந்துசென்ருன் - ஓட்டிக்கொண்டுபோனுன், கங்கை சூழ்கழற்பெம்மான் - கண்ணபிரான். (உஎ)

## மலரவன்சிறார்க்கன்று கவர்ந்தவத்தியாயம்.

குவளைபோல்வண்ணன்வந்துகுறுகலுங்குமரர்யாங்கள்
கவளமொன்றருந்தாமுன்னங்கன்றினங்கொண்டுமீண்டு
திவளுமஞ்சுரும்புபாய்ந்துதேன்மதுத்திவலைமாந்தும்
தவளமெல்லிணர்ப்பூமுல்லைத்தாரவாமிசையென்றாரால்.

குவளைபோல்வண்ணன் - கண்ணபிரான், மிசை - உண்ணக்[illegible]வை. (௨அ)

முத்தெனமுகிழ்த்தமூரன்முறுவல்வாண்முகத்தனாகிப்
பைத்தவாளரவின்பைந்தோல்பார்மிசைகிடந்ததென்னக்
கொத்தவிழ்முல்லைமெல்லென்கொடிதலைமணந்துமன்றற்
பித்திகைவளர்தண்கானம்பெயர்ந்தனன்மெல்லமாதோ

தலைமணந்து - கூடி, பித்திகை - சிறுசண்பகம். (௨௯)

வண்டுசூழ்கண்ணிமைந்தர்மலைநெடும்பாம்பின்பைந்தோல்
கண்டனரிதுமற்றம்மகண்ணிறத்தோங்கிற்றென்னக்
கொண்டனர்வியப்புமுல்லைக்குழலினன்விளைத்தகொற்றம்
விண்டனர்புகழ்ந்தார்முல்லைவியன்புலமாக்கட்கன்றே.

முல்லைக்குழலினன்-கண்ணபிரான், முல்லை வியன்புலமாக்கட்கு-இடையருக்கு.

இத்திறனாகுமோர்யாண்டிறந்தபின்னிளைஞரெல்லாம்
பைந்தபாம்புருவமாயபடுகொலையவுணன்றன்னை
மைத்தகார்வண்ணத்தண்ணன்மாய்த்தமைபுகழ்ந்ததென்று
முத்தரின்முதல்வனாகுமுழுந்தவனியம்பினனால்.

இறந்தபின் - கழிந்தபின். (௩௧)

பெற்றதங்குழவிதம்மேற்பிறந்திடுங்காதறன்னின்
மற்றிளங்குழவியாயமாயன்மேலாயர்மாதர்க்
குற்றதென்காதலென்றேயொளிறுவாளுழவன்கேட்ப
முற்றுணர்முனிவன்மூரன்முறுவலன்மொழியலுற்றான்.

காதறன்னின் — ஆசையினும், ஒளிறு - விளங்குகின்ற. (௩௨)

தன்னுயிர்மேற்செல்காதறானுயிர்ப்பதற்குண்டேகொல்
மன்னுயிரனைத்துஞ்செங்கண்மாதவனுறைதலானே
இன்னுயிர்க்குழவிதன்மேலியைந்ததுபெரிதுங்காதல்
மன்னுயிர்த்திலங்குவேலோயென்றனன்மீட்டுஞ்சொல்வான்.

இன்னுயிர்க்குழவி - கண்ணபிரான். (௩௩)

மலரவன் சிறார்க்கன்றுகவர்ந்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௧௯௧.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்

---

ஏழாவது

## அரவின்மேலாடிய வத்தியாயம்.



குராமலர்முருகுவிம்மிக்குழவியமல்லன்முல்லை
விராய்மலர்த்துளவம்பூத்தமேதகுதண்ணங்கானின்
மராமெனமருளுமேனிவள்ளலோடெழுந்துசெஞ்சூட்
டராவணைதுயின்றவண்ணலானிரைமேய்க்கலுற்றான்.

மராம் - வெண்கடம்பு, மராமெனமருளுமேனி வள்ளல் - பலராமன், அராவணை துயின்றவண்ணல் - கண்ணபிரான். (க)

அறம்புரைதுணைவன்றன்னையஞ்சனவண்ணனோக்கிச்
செறிந்தகார்மயில்களாடல்செய்தபாண்முரன்றவண்டு
நறுஞ்சினைமெலியப்பூத்தநாண்மலர்மரன்களெல்லாம்
இறைஞ்சினநிற்கண்டென்னாவின்னுரையாடினான்.

அறம்புரை - தர்மதேவதையை நிகர்த்த (உ)

வளரொளிவிரிக்கும்பச்சைமரகதப்பசுங்கட்டோகை
இளமயிலாடவாடியிளைத்தகார்மேகவண்ணன்
முளரிநாண்மலராள்காந்தன்முகிழ்விரலங்கைநீண்டும்
தளிரடிதொழுவர்மைந்தர்தைவரவைகுமன்றே

முளரிநாண்மலராள் - திருமகள். (ந)

கலிவிருத்தம்.

காமனையொப்பவன்கமழுமுல்லையந்
தாமமார்பினன்றிருத்தாமனென்பவன்
தேமுறுபனங்கனிசெல்வவீங்குள
ஏமமார்ந்தனவெனவியம்பினனரோ.

தாமம் - மாலை, தேம் - இனிமை. (ச)

செழுநிலாவான்மதித்திகழுமொற்றையங்
குழவியினெழுந்தனன்குறுகித்தேம்படு
பழமுதிர்மடற்பனையலைப்பப்பார்த்தனன்
கழுதையினுருவினன்கனன்றுதோன்றினான்.

கழுதையினுருவினன் - கார்த்தபாசுரன். (ரு)

அணற்செவிக்கழுதையாயாண்டுத்தோன்றிய
தணிப்பருந்தேனுகாசுரனைத்தாமரை
மணிக்கையாற்சுழற்றினனெற்றவான்பனை
துணித்தனன்வீழ்ந்தனன்றுஞ்சினனரோ.

அணல் - பெரிய, துஞ்சினன் - இறந்தான். (சு)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆனெழுதூளிமொய்த்தவணிகருங்கேசன்மாயன்
கானெழுமலரினோடுகார்மயிற்பீலிசூடித்
தேனுறவமுதமூறுந்தீங்குழலிசைத்துமாறை
மானனமதர்த்தகண்ணார்மகிழ்வுறவெய்தினானால்.

கேசன் - சிகையையுடையவன், மாறை - மாவடு (௭)

ஊனிரைதெவிட்டிப்பல்பேபுவந்தனகுனிப்பமேயாங்கு
வானிரைநிருதர்மேவவரிசிலைகுனித்தபோரா
ரூனிரைதூர்ந்துசென்றனநீர்நிரையமுனையாற்றுத்
தேனிரையிதழுண்டாடுஞ்செழுமலர்த்தடத்தினோர்சார்

குனிப்ப - ஆட, குனித்த - வளைத்த (௮)

வடித்தகார்முல்லையாயர்மைந்தரோடஞ்செஞ்சேதா
விடப்புனன்மாந்திவீழ்ந்துவிளிந்தனவிளிதலோடும்
உடைத்தெழுகருணைவெள்ளமொழுகியின்னமுதமூறும்
கடைக்கணோக்குதவியாவிகாத்தனனுலகங்காப்பான்.

மாந்தி - குடித்து, விளிந்தன - இறந்தன (௯)

வெவ்விடப்புனலும்வெய்யவிடப்புனல்விளைத்தபாம்பும்
அவ்வழிக்கடிதல்செய்தானஞ்சனவண்ணனென்ன
எவ்வகைக்கடிதல்செய்தானினிதெரிந்திசைத்தியென்று
தெவ்வடுதிருதிவேலோன்செப்பலுமுனிவன்செப்பும்.

கடிதல்செய்தான் - விலக்கினான், தெவ்வடு - பகைவரைக் கொல்லுகின்ற (௧௦)

கடுவிளைந்தொழுகுபேழ்வாய்க்காளியனுயர்காளிந்தி
மடுவினில்வாழுமற்றம்மடுவினிற்றவழ்ந்தகாற்றுப்
படினும்வல்விலங்குமாயும்பறவைவீழ்ந்துயங்கும்வேம்பின்
நெடுமரங்கரியுமாங்குநீள்சினைக்கடம்பொன்றுண்டால்.

கடு - விடம், பேழ்வாய் - பெரியவாய். (௧௧)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஈறிழைத்தவிடநீரகற்றுதுமெனக்கடம்பின்மிசையேறியோர்
ஆறெனக்களிநறவெடுத்தொழுகுமாய்மலர்ப்படலையந்துழாய்
மாறடர்த்ததனிநேமிமாயவன்மணித்தடத்தினிடைபாய்தலும்
தூறுவிற்கடையகன்றொழிந்ததுநுரைத்தலைப்புனலகழ்ந்தரோ.

ஈறு - மரணம். (௧௨)

அளக்குமண்ணுலகருந்திவெண்ணெயுணவாயர்பாடிவளர்செங்கணான்
தொளைக்கைமால்களிறுபோலநின்றுதனிதுளையவெம்பியெழுவாளரா

வளைந்துவால்கொடுநெடும்பணாடவியின்வள்ளன்மேனியைமறைக்குபு
முளைத்தநாண்மதிமருட்டும்வாலெயிறாழ்குறும்படிகடித்ததால்.

துளைய - நீராட, மறைக்குபு - மறைத்து, வாலெயிறு - வெண்பல். (௧௩)

சூட்டுவாளரவின்மன்றலந்துளவுசூடுகார்முகிலகப்படா
வாட்டமுற்றனனெனத்தளர்ந்திளையர்மறுகவானுமறுகுற்றதால்
நாட்டமென்கொலிடனாடுகின்றதெனநந்தகோபன்முதலாயினோர்
ஆட்டுதெண்டிரையலம்புநீர்யமுனையாற்றகன்கரைமரீஇயினார்.

மறுக - மயங்க, நாட்டம் - கண். (௧௪)

பாழிவாயரவுமெய்வளைப்பவொருபாலனின்றநிலைகண்டுடன்
வீழ்துநாமுமெனநந்தகோபனெழவீழல்வீழலெனவந்துபால்
ஆழிபோல்பவன்விலக்கநின்றலையுமலைவுகண்டருளியாகமேல்
சூழும்வாளரவகற்றினான்றுயில்கொள்சூட்டராவளையகற்றினான்.

பாலாழிபோல்பவன் - பலராமன் (௧௫)

காடுகொண்டெழுபணாமணித்திரள்கள்கக்குசெக்கரொளிசுற்றியோ
பாடுசெக்கரொளிவீசுகற்கள்பலபட்டழுந்தியெழில்கன்றியோ
சூடுதார்மகுடகோடிமேலமரர்சூடுசேவடிசிவப்பநின்
றாடல்வாளரவினுச்சிநின்றுநடனாடினான்மறைகள்பாடினான்.

நடனாடினான் - நடனஞ்செய்தான். (௧௬)

பண்பழிந்தரவினீள்பணாடவிபதைப்பவாய்குருதிகாலவெங்
கண்பிதுங்கநடனாடனோக்கியுயிர்காத்தியென்றுதளர்காளியன்
நண்புகொண்டுபுணர்தொய்யில்வெல்யமுலைநாககன்னியர்செறிந்துமால்
மண்பொழிந்தகமலத்திலந்தண்மலர்மாரிதூவினர்வணங்கினார்.

மால் - கண்ணபிரானது, மண்பொழிந்தகமலம் - திருவடி. (௧௭)

பொருதிரைக்கடலுடுத்தநீள்புவிபுரக்கவந்தமணிவண்ணபொற்
றிருமணக்குமணிமார்பகொற்றமுறுசெம்முகத்திகிரியங்கையாய்
அருமறைத்தலையின்வைத்தசேவடியழுங்குபைத்தலையின்வைப்பஃதற்
கெரிசினத்தவிடவரவமெத்தவமிழைத்ததோவெனவழுத்தினார்.

புரக்க — காக்க, கொற்றம் - வெற்றி. (௧௮)

அறிந்திலானிவனிழைத்தவெம்பிழையருட்பெருங்கடல்பொறுததியென்
றிறைஞ்சவாளரவினுடல்விட்டனனெழுந்துபோகியுறைதீவின்வாய்ப்
பிறங்குநின்முடியினெம்மடித்துணைபிறங்கபொற்பொறிபடைத்தலால்
மறங்கொள்வெங்கலுழனொன்றுநின்னையடவல்லனல்லனெனவோதினான்.

போகி - சென்று (௧௯)

மறைக்கொழுந்தினைவணங்கியொண்மணிகண்மாசிலாடையகின்மான்மதம்
வெறுப்பநல்கியதிர்வெண்டிரைக்கடல்விளிம்படுத்ததொருதீவின்வாய்

எறித்தசெஞ்சுடிகையாவினுக்கிறையெழுந்துகன்னியரொடேகினன்
நறைச்செழுங்கமலமலர்நதித்தடனுநஞ்சொழிந்துபொலிவுற்றதால்.
மறைக்கொழுந்தினை - கண்ணபிரானை, மான்மதம் - கஸ்தூரி. (உ0)

என்னலோடுடன் மன்னனென்னைகொலிருந்ததீவினையகன்றிடாப்
பன்னகாதிபதியின் றுடுதண்டிரைபரந்துபாயமுனைமடுவின்வாய்
மன்னனுற்றதுவழங்குவாயெனமகிழ்ந்துதண்ணறவுவட்டெழும்
கன்னியந்துளவணிந்தகண்ணனருள்கனியுமாதவனியம்புவான்.
மன்னன் - பரிக்ஷித்து, கண்ணனருள்கனியுமாதவன் - புகன். (உக)

அறுசீரகழிநெடிலாசிரியவிருத்தம்.

வாளராவழிபாடாற்றிவழங்குதல்வழங்காதுகிக்
காளியனிருப்பவூறிக்காற்றெனக்கலுழன்சீறி
நீளிருஞ்சிறையிற்றுக்கவெஞ்சகங்கலங்கியோடித்
தாளதாமரைவாய்விள்ளுந்தடத்திடையெய்தினானால்.
சிறை - சிறகு. (உஉ)

இருஞ்சிறைக்கருளன்மீனுயகெறிதலுமெறியலென்றோர்
அருந்தவன்சபித்தலாலேயாநகண்வந்தணுகானுகப்
பொருந்தினன்யமுனையாற்றுப்பூந்தடமென்றுசாவா
மருந்தினுமமிழ்தமூறுமாதவன்வகுத்தான்மன்னோ.
எறியல் - கவராதை, அணுகான் - நெருங்கான். (உங)

அழலெனவுயிர்க்குநாகத்தஞ்சுலுவிடம்பாயாகம்
முழுவதுந்தாயர்கொம்மைமுலைசுரந்தொழுகுபாலோ
குழையொடுபொருதுநீண்டகொழுங்கயற்கண்ணீர்கொல்லோ
கழுமுறக்கமலச்செங்கட்கண்ணனைக்கழீஇயினாரே.
ஆகம் - திருமேனி, கழுமுற - நிறைய (உச)

வேயிலுமிழ்பரிதியத்தவெற்பகம்படரவீங்கு
புயலெதிர்நறியமுலைபுதுப்புனல்படரயாரும்
குயில்குடைந்துகுந்தபைந்தேன்கொங்குலாமணற்குன்றேறித்
துயிலமர்ந்தனராலறைத்தூங்கிருட்கங்குன்மாதோ.
அத்தவெற்பகம் - அஸதமநபர்வதத்தில் (உரு)

கலிவிருத்தம்.

உய்ந்துபோநெறியுமுண்டுகொலென்று
நந்தகோபன்மனநைந்துநடுங்கச்
சிந்தவல்லிருடிசாமுகமெங்கும்
வந்துகானழல்வளைந்ததையன்றே
திசாமுகம் - திக்கினிடம், கானழல் - காட்டுத்தீ. (உசு)

நண்ணுமாரழலைநச்சரவேந்து
மண்ணெலாமகல்வயிற்றிடைவைத்த
அண்ணல்செய்யதளிரங்கையின்வாரி
வெண்ணெயுண்டெனவிழுங்கினனன்றே.

நச்சரவு - ஆதிசேடன். (உஎ)

முரிதிரைக்கடன்முகத்துவிளங்கும்
உருவவொண்டிலகமொப்புறமாறு
இருள்குடித்தெழுமிளங்கதிரோனல்
விருதெதன்வேனிலது ீமயதுசென்றே.

இளங்கதிரோன் - பாலசூரியன் (உஅ)

வெயில்சினந்திருகும்வேனிலிறுப்புக்
குயிலினத்தொடெதிர்கூவியும்வேயின்
இயல்கொளின்னிசைவடித்தும்ருங்கான்
மயில்களிப்பமழைவண்ணனெழுந்தான்.

இறுப்ப - தங்க. (உகூ)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கவளமார்களிநல்யானைக்கதிர்மருப்பொசிக்குந்தோன்றல்
தவழ்மதுக்கமழுங்கானந்தண்ணெனவுமுதலூறு
குவிமுலையஞ்செஞ்சேதாக்குவிதரத்தாளமூறற்
பவளவாய்நிகழவைத்துப்பசுங்கழையிசைத்திட்டானல்.

ஒசிக்கும் - ஒடிக்கின்ற, தானம் - முத்து. (௩0)

விசும்புசூழ்வெயிலான்வற்றிவெம்பியமரன்கள்யாவும்
ஓசிந்துயர்மருதஞ்சாயவுரலொடுதவழ்ந்தவொண்கேழ்
அசும்புபொன்னுடையான்றனவிரொளிதவழுந்தோறும்
பசுங்குழைகுழைத்தபோலும்பான்மையிற்சிறந்தமாதோ.

பொன்னுடையான் - கண்ணபிரான், குழை - தளிர். (௩க)

வாட்டிறனிருதர்வெள்ளம்வானெலாம்பரக்கவல்லில்
கோட்டியகொண்டன்மேனிக்கொழுஞ்சுடர்தவழுந்தோறும்
ஊட்டழல்சுட்டசெம்பொனுயர்வரைச்சாரல்பச்சைத்
தோட்டறுகின்றபோலத்துலங்கெழில்படைத்தமன்றே.

கோட்டிய - வளைத்த, அறுகு - அறுகம்புல். (௩உ)

நாகமீமிசைத்துயின்றுநளிகடலுடுத்தஞாலத்
தோகையுண்மகிழவந்துதோன்றியுந்துளிக்குநீல
மேகமேபோல்வான்மேனிவிரிகதிர்பாயுந்தோறும்
போகுயர்பூவையாவும்பூத்தனபோலுமன்றே.

ஞாலத்தோகை - பூமிதேவி. (௩௩)

மதுக்குடம்விரிந்தாலன்னமாமலர்க்கோதைமார்பன்
கதிர்த்தகாருருவின்காந்திகரைமிசைத்தவழுந்தோறும்
புதுப்புனல்பரந்தேய்க்கும்பொறிவரிவண்டுபாய்ந்து
மிதிப்பவாயிதழ்மென்போதுவிரிதுறையமுனைமன்றே

மதுக்குடம் - தேன்குடம் (௩௪)

வளமலர்முருதவிம்முமாதவிப்பந்தரூடு
துளவணிபடலைமாயன்சுடரொளிபாயுந்தோறும்
களிதலைமணந்துதோன்றுக்கரந்துறைகருங்கட்டோகை
இளமயிலெருத்தநீட்டுமியற்கையிற்பொலிந்தவன்றே

மூருகு - வாசனை, தோகை - கலாபம் (௩௫)

இருநிலவளாகம்போற்றும்பலங்கிதழ்க்கமலப்பொற்றாள்
ஒருமுதல்பவளச்செவ்வாயொள்ளொளிதவழுந்தோறும்
அருவியஞ்சாரலெல்லாமஞ்சிறைச்சுரும்பர்பாட
விரைகமழ்குருதிக்காந்தள்விரிந்தனபோலுமன்றே.

நிலவளாகம் - நிலவுலகம், குருதிக்காந்தள் - செங்காந்தள். (௩௬)

ஆரமுமகிலுமுந்தியதிரொலியருவிபாயும்
சாரலுங்காடுங்காவுந்தடநிரையாறுந்தண்ணந
கார்வளங்காட்டவேனிற்காலைநின்றாடல்செய்தான்
ஏர்விளையாடுசெம்பொனேந்தெழின்மார்வத்தெம்மான.

உந்தி - தள்ளி (௩௭)

வளைகடன்ஞாலமஞ்சவருபிரலம்பன்மற்றுங்
களவிலைப்பொலம்பூணகத்தாயர்தம்புதல்வனாகி
ஒளியிலங்கருவிச்சாரலோங்கியநடையினாலோர்
களிறெனநின்றசெங்கட்கண்ணனையெய்தினானால்.

ஞாலம் - உலகம் (௩௮)

விரவியவண்ணமோர்ந்தவ்வெய்யவன்றன்பாலாக
இருதிறமாக்கியாயரின்னெழிற்குமரரீட்டத
தோருதிறத்திராமனிற்பவொருதிறம்பற்றிநீலச்
சுரிகுழற்குரிசினோன்றார்சுமக்கெனவாடலுற்றான்.

இராமன் — பலராமன், நீலச்சுரிகுழற்குரிசில் - கண்ணபிரான். (௩௯)

மல்லலங்கங்கைபோலுமன்னவன்றிறத்துவெற்றி
புல்லலும்வண்டுபாடப்பொதியவிழ்குழவுமுல்லை
மெல்லிணர்விரியன்மாலைமிலைந்தசீர்த்தாமன்மன்றற்
கல்லினான்மாரியோப்புங்கரியவன்சுமததல்செய்தான்.

கங்கைபோலுமன்னவன் - பலராமன், பொதி - கட்டு, ஒப்பும் - தடுத்த. (௪௰)

இகலறவிமைக்குமொண்கேழிந்திரநீலங்கான்ற
திகழொளிபுடைசூழ்வெள்ளிச்செழுங்கிரிகடுப்பநீலுண்

துகில்புனைவெள்ளைமேனித்தோன்றலைத்துணைவினாயர்
மகனெனவந்தவஞ்சமனத்தினான்சுமந்திட்டானே.

வெள்ளைமேனித்தோன்றல் - பலராமன். (௪௧)

கமழ்ந்தபூந்தெரியன்மார்பன்கையகப்பட்டானென்னாச்
சுமந்தனனேகுங்காலைத்தொல்லைவல்லுருவுகொண்ட
சமங்கடந்தெரிசெய்வெள்வேற்றானவன்றலையிற்குட்ட
உமிழ்ந்தனன்குருதிமாரியுலந்தனன்குப்புற்றன்றே.

உலந்தனன் - இறந்தான். (௪௨)

விரைவிளையாடுமுல்லைமென்றொடைப்புதல்வரோடு
வரைவிளையாடுமாயமால்விளையாடுமெல்லைத்
திரைவிளையாடும்யாற்றுச்செழுங்கரைமருங்குவண்டின்
நிரைவிளையாடுகானநீங்கியான்மறைந்தமாதோ.

மால் - கண்ணபிரான், ஆன் - பசுக்கள் (௪௩)

தண்ணறல்படுகான்யாற்றுத்தழைத்தபுற்கானஞ்சேர்ந்த
அண்ணலஞ்சேதாமைந்தரழைப்புழிமுழங்காவாய
கண்ணும்வாண்முகமுஞ்செய்யகமலமொத்தலர்ந்தமைக்கார்
வண்ணனின்றழைப்பப்பொங்கிமகிழ்ந்தெதிர்சிலைத்தமாதோ.

அறல் - கருமணல், எதிர்சிலைத்த - எதிரொலிகொடுத்தன. (௪௪)

காட்டழல்கனன்றுபொங்கிக்கடுவளிப்புடைப்பிற்சூழ
மோட்டிளமுல்லைமெல்லென்முகிழ்முகைவிரிந்தபைந்தார்ச்
சேட்டிளங்குமரர்காத்திசெல்வவென்றிறைஞ்சநம்பன்
நாட்டநீர்புதைத்திரென்றானளியழல்பருகினானால்

காத்தி - காக்கக்கடவை, நாட்டம் - கண், புதைத்திர் - மூடிக்கொள்ளுங்கள். ()

எரிபகைந்தன்னதேமாவிளந்தளிர்கோதுசெங்கட்
கருநிறக்குயில்வாய்வைத்தகாம்பிசைகேட்டுமாழ்கச்
சுரிகுழற்பவளச்செவ்வாய்த்தோகையரோகைகூற
நிரைபுரந்தினிதின்மீண்டானீனிறக்கொண்மூவண்ணன்.

கோது - கோதுகின்ற, காம்பு-வேய்ங்குழல், கொண்மூவண்ணன்-கண்ணபிரான்.

அரவின்மேலாடிய வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௨௪௫.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## எட்டாவது

## வேய்ங்குழலிசைத்த வத்தியாயர்.



கலிநிலைத்துறை.

கண்ணுந்திருமுகமுங்குளிர்கமலம்புரைமடவார்
வண்ணந்திகழெயிறாறு தெண்மதுவுண்பவர்நிகரா
உண்ணுந்தளிநறைதேரளியொருகோடிவெண்டளவின்
தண்ணென்முகைசுழலும்படி தலைவந்ததுபைங்கார்.

புரை - நிகர்த்த, எயிறு - பல், அளி - வண்டு, தளவு - முல்லை, முகை - அரும்பு

குடிக்குங்கலைகடனீருயர்குன்றத்தலைபொழியா
இடிக்கும்புயல்கண்டோவலவிளமஞ்ஞைகளெல்லாம்
நடிக்கின்றனமகிழ்கூர்ந்தனநாகத்தலைநடிக்கும்
வடிக்குங்கழைமுகில்கண்டுளமகிழ்கோவியர்மான.

பொழியா - பொழிந்து, புயல் - மேகம், மஞ்ஞை - மயில், கழைமுகில் - கண்ண பிரான், மான - நிகர்க்க. (உ)

முற்றுந்தனியாழிக்கதிர்முறுகுஞ்சினவெயிலால்
வற்றுங்கிளைமரமின்றளிவளர்மாரியிற்றளிர்த்த
பற்றுந்தவத்துடல்வாடுநர்பரனின்னருண்மாரி
பெற்றின்புறுதிருவாலொளிபிறங்குந்திறனிகர்ப்ப

மாரியின் - மழையினல் (௩)

மறைகற்றவர்மறையென்பனமேதடத்துளிமதுவின்
வெறிகக்கியதுளவப்புயல்விளையாடுறுதண்கான்
முறிமுற்றியகொடிமுல்லைமென்முகைவிண்டனவானோர்
செறிகற்பகவனமெள்ளுபுசிரிக்குஞ்செயல்புரைய.

வெறி - வாசனை, துளவப்புயல் - கண்ணபிரான், முறி - தளிர், எள்ளுபு - இகழ்ந்து, புரைய - நிகர்க்க. (௪)

கலிவிருத்தம்.

நறைத்துளவமாமுகினந்தலையஞானம்
மறத்தின்மகனுளும்வகையாரமரினுண
மறைத்தெனமறைத்ததுவிளத்தெழுகருங்கார்
எறித்தவெயில்கான்றுவிண்ணெழுஞ்சுடரைமன்றே.

நறை - தேன், துளவமாமுகில் — கண்ணபிரான், அமரில் - போரில். (௫)

புட்கொடியுயர்த்தபுயல்பொங்கிதழ்விரிக்கும்
கட்கமலவாய்மலரின்வைத்தசிறுகாம்பின்
உட்கனியுமின்னமிழ்தமூறுமிசைகேளா
வட்கினவெனப்பெரிதடைத்தகுயில்வாய்கள்.

புட்கொடியுயர்த்தபுயல் - கண்ணபிரான், காம்பு - வேய்ங்குழல். (௬)

வெள்ளைமதிவான்மறையமின்மினிவிளங்கல்
உள்ளரியவெங்கலியிலோர்முதல்விழுச்சீர்
தெள்ளுமறைநின்றுதிகழாமன்மறையெல்லாம்
எள்ளுநர்விளங்குறுமியற்கையைநிகர்க்கும்.

எள்ளுநர் - இகழ்வோர், முதல் - முதற்பொருள், (கடவுள்). (எ)

வியலிருவிசும்புகதிர்மின்னுவிளையாடும்
புயறமுவநின்றுபொலிவுற்றதொருதோற்றம்
உயர்வறவுயர்ந்தநலனுற்றபொருண்மற்றுங்
கியல்குணமணப்புறவிலங்குதல்கடிக்கும்.

உயர்வறவுயர்ந்த நலனுற்றபொருள் - திருமால், கடிக்கும் - ஒலிக்கும். (அ)

கலிச்சந்தவிருத்தம்.

இவ்வண்ணமுறுங்காரினிலாற்றுவினமேயாச்
செவ்வண்ணமணிக்குன்றுகள்சேர்ந்தின்னமுதயிலாப்
பைவண்ணவராவோடெறிபாலாழிகடுப்ப
மைவண்ணன்மகிழ்ந்தாடினன்மன்றற்சிறுகானம்.

ஆவினம் - பசுக்கூட்டம், அயிலா - உண்டு, கடுப்ப - நிகர்க்க, மைவண்ணன்—கண்ணபிரான். (கூ)

வழங்குங்கலைமகள்காதலின்வளர்கின்றவெண்டோட்டுச்
செழும்பங்கயமலர்போலவுஞ்செந்தேனுகர்வரிவண்
டுழும்வண்டுளவணிவோன்கரத்தொளிர்வால்வளையெனவும்
எழுந்தங்கதுமதியோர்பெறவிறுத்தந்ததுகூதிர்

வெண்டோட்டுச்செழும்பங்கயமலர்-வெண்டாமரைமலர், வால்வளை-வெண்சங்கு.

தண்டோட்டிணர்விரிகற்பகத்தழைகொய்தழிகவுள்வீழ்
வண்டோட்டியகளிறெட்டொடுவரைதாங்கியகடற்பார்
உண்டோட்டறுபொன்னந்துகிலுடுத்தோனெனத்திகழ்கார்
வெண்டோட்டிளம்பனைமீமிசையுயர்த்தோனெனவிளர்த்த.

பொன்னந்துகிலுடுத்தோன்-கண்ணபிரான், பனைமீமிசையுயர்த்தோன்-பலராமன்.

ஒள்வாளுமிழ்திகிரிப்படையுயர்வோனடம்புரியும்
முள்வாளெயிற்றரவம்மெனமுகிழ்விண்டனகாந்தள்
கள்வாய்மடுத்திளவண்டினங்களுலத்துணர்விரியாப்
புள்வாய்கிழித்தவனுமெனப்பொலிவுற்றனபூவை.

விரியா - விரித்து, புள்வாய்கிழித்தவன் - கண்ணபிரான். (கஉ)

வந்தாதவனிளஞ்செங்கரம்வருடத்தளையவிழும்
செந்தாமரைமலர்நின்றுதண்டேன்சிந்தியதோற்றம்
அந்தாமரைக்கண்ணன்மலரடிநின்றலைபுரட்டும்
மந்தாகினிபெருகிப்பொழிதருகின்றதுமானும்.

ஆதவன் - சூரியன், மந்தாகினி - ஆகாயகங்கை. (கங)

இத்தன்மையதண்கூதிரிலின்றீங்குழலிசையா
அத்தன்புனிற்றுமேய்ப்பதற்கலர்கானகம்படர்ந்தான்
மொய்த்தஞ்சிறைவரிவண்டினமுருகுண்டிசைபயில்பூங்
கொத்துங்குறுமுறியுஞ்சிலசொய்தான்குழல்புனைந்தான்.

கூதிர் - பனிக்காலம், இசையா - ஊதி, முருகு - தேன், முறி - தளிர். (௧௪)

கதிராயிரம்பொழியாதவன்காய்வெஞ்சினந்திருகும்
முதுவேனலின்முளிபாதவமுகில்பெய்தலிற்றளிராப்
புதுநாண்மலர்துளவப்புயல்புனையத்தரவந்தண்
மதுநாண்மலர்தளிர்பாதவமழைக்கீவனமானும்

முளி - உலர்ந்த, பாதவம் - மரம். தளிரா - தளிர்த்து. (௧௫)

கலிவிருத்தம்.

மோடுடைநெட்டிலைமுடவெண்டாழையந்
தோடுடைநறுமலர்தேன்றல்கொய்வது
பாடுடைநெடுமடற்பனைக்கைவேழவெண்
கோடடிபிடுங்கியகோலம்போன்மரோ.

பாடு - பெருமை. (௧௬)

தளிர்க்கவின்கவற்றியதடக்கைபோகுயர்
நளிச்சினைமலர்கொளநம்பிநீட்டுதல்
களிச்சுரும்பரற்றுபூங்கற்பகங்கொள
வளைக்கரநீட்டியவண்ணமானுமே.

கவின் - அழகு, நம்பி - கண்ணபிரான். (௧௭)

அலங்கொளிமணிதெளித்தன்னபைஞ்சுனை
நலங்கொள்வெண்டாமரைநம்பிகொல்வது
பொலந்தருக்கவர்ந்தநாட்புதுநிலாப்பொழி
வலம்புரிவாங்கியவண்ணங்காட்டுமே.

பொலந்தரு - அழகியகற்பகச்சோலை (பாரிஜாதம்). (௧௮)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

குருந்தமென்கண்ணிசூடுங்கோவலர்கொழுந்துசெய்ய
அரும்பவிழ்காந்தள்கொய்வதாடியகுரவைக்கந்தண்
முருந்தொடுமுல்லைசாய்த்தமுகிழ்நகையாயர்மாதர்
திருந்துபொற்றொடிசூழ்கையிற்றேமலர்தொடுத்தல்போலும்.

கோவலர்கொழுந்து - கண்ணபிரான். (௧௯)

எழில்வளர்செம்பொன்மார்பனின்னணஞ்செவ்விவாய்ப்பக்
கழைவளர்வரைசாரெல்லாங்களிற்றிளங்கன்றுபோன்றும்

மழைவளர்கானமெல்லாமழவிடைபோன்றுந்தோன்றிக்
கொழுமுகையவிழ்மென்போதுகொய்தனன்மிலேந்தான்மன்னே.

பொன் - திருமகள், கழை - மூங்கில், மிலேந்தான் - சூடிக்கொண்டான். (உ0)

கலிவிருத்தம்.

மழலைவண்டிசைமுரலவணர்பசுந்தெரியன்மது
ஒழுகநின்றுயர்வரையுமுருகநுண்டொளைகடொறும
அறிபசுந்தளிநறவமுதமுங்குழுழியெழ
எழுதரும்புயல்கழையினிசைநவின்றனனினிதின்.

இசை - கேதாரப்பண், எழுதரும்புயல் - கண்ணபிரான். (உக)

பமொன்களுநறிடபசியதண்டளிர்தழைய
அடைவுறுங்கழையினிசையமுதமஞ்செவிநிறைய
இடைமடந்தையர்கணெஞ்சிடையிளங்கொடியொசிய
மடவனம்பொருவமலர்வனமடைந்தனர்குழுமி.

கழையினிசை — புள்ளாங்குழலோசை, பொருவ - நிகர்க்க, குழுமி - கூடி. (உஉ)

மருவிரிந்தொழுகுகுழன்மழையெனும்படிசரிய
இருவிசும்பொருவியெழுமிசையினெஞ்சகமுருகி
முரிதடந்திரையமுதுமுனிவுகொண்டணுகினர்கள்
அருமருந்தனையமொழியாமடந்தையரடைய.

மழை - மேகம், ஒருவி - நீங்கி, மருந்து - அமிர்தம். (உந)

வேறு.

மழையெனமதங்கலுழுமாவுமரியேறும்
உழுவையுமுழைக்குலமுமொன்றியினமென்னக்
கழையிஞெடுநின்றகளிறன்னவனைநோக்கி
எழுதுருவுபோன்றுருகிநின்றவிசையோர்ந்தே.

மா - யானை, அரியேறு - சிங்கம், உழுவை - புலி, உழை - மான், கழை - வேய்ங்குழல். (உச)

மாமறைமுதற்பொருள்வடித்தவிசைகேளா
காமர்நதியாவுமுயர்கங்கையெனலாகித்
தேமருவுதாமரைதிரைக்கைகொடுசெந்தித்
தாமரைமருட்டுமிறைதாண்மலர்தவழ்ந்த.

மாமறைமுதற்பொருள் - கண்ணபிரான், இறை - இறைவன். (உரு)

பைத்தவரவத்துவளர்பச்சைமுகில்செவ்வாய்.
வைத்தகழையேழ்தொளையும்வாரியமுதூறித்
தத்தவெழுமின்னிசைதலைப்படமுழங்காப்
புத்தமுதநுண்டுளிபொழிந்தபுயலெல்லாம்.

பச்சைமுகில் - கண்ணபிரான். (உசு)

அஞ்சுவைபழுத்தவிசையஞ்சனநிறத்தோர்
மஞ்சமுதுபெய்வதெனமாதவனிசைப்ப
வெஞ்சுடர்பனிக்கதிர்விரித்ததழல்வெவ்வாய்
நஞ்சுபொழிவாளரவுநல்லமுதுகுத்த.

மஞ்சு - மேகம், வெஞ்சுடர் - சூரியன். (௨௭)

பூவின்வருநான்முகன்புணர்ந்துமகிழ்மாது
நாவின்மிசைநீத்துநடனன்குநவிலுற்றாள்
காவினறுநீழலமர்காவலனெடுங்கண்
தூவினகொழுந்தளிதொளைக்கணிசைகேட்டே.

*பூவின்மிசை நான்முகன்புணர்ந்து மகிழ்மாது - சரசுவதி, காவினறுநீழலமர்காவலான் - இந்திரன், தொளைக்கண் - புள்ளாங்குழல். (௨௮)

மங்கையொருபாகனுளமலியுவகைநன்னீர்
பொங்கியழனீள்விழிபுணர்ந்தவியவார
அங்கமிசைசூடரவமாடலயர்வுற்ற
சிங்கலில்பரன்கழைதெரித்தவிசையோர்ந்தே.

சிங்கலில் - அழிவில்லாத. (௨௯)

கலிநிலைத்துறை.

தெறித்தகன்றுவாய்வைத்தவம்முலையுணாதிரண்டு
கறித்தபுல்லுணாகறவைபூங்கற்பகச்செங்கேழ்
முறிக்கொழுங்கவின்கவற்றியமுகிணகைச்செவ்வாய்
மறைக்கொழுந்தின்வேயின்னிசையஞ்செவிமடுத்தே.

மறைக்கொழுந்து - கண்ணபிரான். (௩0)

குமரிவண்டுழுதுளவினான்குழலிசைகேளாக்
கமலநாண்முகைகடந்தசெங்கைம்மலர்முகிழாத
தமனியப்பசுந்தார்முடிவணங்கினரிமையோர்
அமிழ்துணாத்தருஞான்றினுமகமகிழ்ந்தனரால்.

தமனியம் - பொன். (௩௧)

வட்டவாயழற்றிகிரியான்வடித்தவேயிசையால்
பட்டபாதவந்தளிர்ப்பவும்பச்சிளந்தென்றல்
சுட்டசூடுறவெதும்புமத்துடியிடைமடவார்
கட்டுமின்றளிர்க்கண்ணிகள்வாடினகரிந்த.

திகிரியான் - கண்ணபிரான், பாதவம் - மரம். (௩௨)

பழுத்தவேயிசைபரஞ்சுடர்தெரிப்பவான்பசுங்கார்
கிழித்தபொன்னெடுங்கிரிவளர்குங்குமங்குழைத்த
குழைத்தகுங்குமங்கரிந்தனகுழைபொருதலைக்கும்
மழைக்கட்கோவியர்வளரிளவனமுலைக்குவடு.

பரஞ்சுடர் - கண்ணபிரான், பொன்னெடுங்கிரி - மேருமலை, குங்குமம் - குங்குமமரம், குங்குமச்சேறு. குவடு - மலை. (௩௩)

வேரியந்துழாய்ப்படலையான்வேயிசைநவில
மாரிபெற்றெனமரனெலாங்குளிர்ப்பவுமலயச்
சாரன்மன்னுசெஞ்சாந்துவெண்டளவரும்பன்ன

துழாப்பட்டலையான் - கண்ணபிரான், மலயம் - பொதியமலை, தளவரும்பு-முல்லையரும்பு. (௩௪)

கலவமாமயிலெருத்துறழ்கண்ணன்வேயிசையால்
புலியுமானுமோரினமெனப்புகுந்தனவேனும்
அலர்சுலாவியவசைநடைத்தென்றலம்புலிவாய்
மலருமுல்லையங்கருங்குழன்மானொடுமறலும்.

கலவம் - கலாபம், மயிலெருத்து - மயிற்கழுத்து. (௩௫)

மதம்பெய்மாமருப்பொசித்தவன்மணிக்கழையிசையால்
வெதும்புவெங்கதிர்வெம்மையிற்றீரவும்பசும்பொன்
துதைந்தபோலுமஞ்சணங்கணிமுலையினார்க்கமுதம்
ததும்புதிங்களந்தண்கதிர்தழலெனக்கனலும்.

மதம்பெய்மா - குவலயாபீடமென்னும்யானை, மருப்பு - கொம்பு, ஒசித்தவன்-ஒடித்தவன், வெங்கதிர் - சூரியன். (௩௬)

கஞ்சநாண்மலர்க்கண்ணினன்கழையிசைகேட்ட
அஞ்செவிக்கெலாமஞ்சிறைக்குயிலிசையழன்ற
நஞ்செனத்தகுநாகிளம்பிறைநுதல்பசந்த
வஞ்சிநுண்ணிடைமடந்தையர்க்கென்கொலாமதிக்கின்.

கஞ்சநாண்மலர்க்கண்ணினன் - கண்ணபிரான். (௩௭)

பாந்தண்மேற்றுயில்பசும்புயல்பவளவாயமுதம்
மாந்தவெத்தவம்புரிந்ததிம்மணிக்கழையென்று
ஏந்துகோட்டிளவனமுலைக்கோவியரேக்கற்
றுய்ந்தவந்துணர்வல்லியிற்குழைந்தனரயர்ந்தார்.

பாந்தண்மேற்றுயில் பசும்புயல் - கண்ணபிரான், கழை-வேய்ங்குழல், வல்லியின்-கொடிபோல. (௩௮)

வேய்ங்குழலிசைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—உ௮௩.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## ஒன்பதாவது

## கோவியர்துகில் கவரத்தியாயம்.

செழுந்துழாய்முகினீங்குழலிசையினாலுருகிக்
குழைந்தகோவியர்குவிமுலைவெதும்பவிற்காமன்
பொழிந்தவெங்கணைமுகத்தெழுபூம்புகைப்படலம்
தழைந்ததாமெனவெழுந்தது தண்பனிப்பம்மல்.

செழுந்துழாய்முகில் - கண்ணபிரான், பனிப்பம்மல் - மூடுபனி. (௧)

பாட்டுவண்டிமிர்துளவினான்பசுங்கழையிசைப்பக்
கேட்டுமாலுறுகிளிமொழிக்கன்னியர்வதனம்
தோட்டதாமரையென்பதுநிலமெலாந்துணிய
வாட்டமுற்றனவருபனியிறுத்தலுமன்றே.

மாலுறு - மயங்குகின்ற (௨)

ஐயதாமரையாயிதழ்மலரெலாங்கரியப்
பெய்யுமீர்ம்பனிப்பெருகனல்வெம்மையிற்பெயரா
மையகூந்தலார்வட்டவாயிரும்பினில்வளர்த்த
செய்யவாரழல்சேயிதழ்முளரியிற்சிறந்த.

ஐய - அழகாகிய, சேயிதழ்முளரி - செந்தாமரைமலர். (௩)

பனிவிளைத்திடுமென்றுகொல்பட்டவெங்கனலின்
கனலுமென்றுகொல்காழ்படுகாமமுற்றுருகி
இனையுமாயர்தங்கன்னியரேந்திளங்கொங்கை
தனிவெண்முத்தமுந்தமிழ்வரைச்சாந்தமுந்தணந்த.

இனையும் - வருந்துகிற (௪)

பனியும்வீங்கிரும்பனிபொறுப்பரிதெனவெய்ய
கனல்விழுங்கிமெய்கனிந்துவீழ்திறத்தமற்றன்றே
நளிகரிந்தனநளிபனிதவழ்தரூஉக்கொழுந்தீம்
புனறவழ்ந்தெனப்பொதிந்தசெந்தாமரைப்போது

தவழ்தரூஉ - தவழ்ந்து, செந்தாமரைப்போது - செந்தாமரைமலர். (௫)

இன்னதண்பனிப்பருவநல்லிளநறுவொழுகு
கன்னியந்துழாய்க்கண்ணனெங்கணவனாகென்ன
அன்னமென்னடையாயர்தங்கன்னியர்நோற்றார்
மன்னுவெம்பனிமால்வரைக்கன்னியைத்தொழுதே.

வரைக்கன்னி - பார்வதி. (௬)

பனிநிலாக்கதிர்பரப்பியமுத்தவெண்மணலால்
பனிவரைக்கொடிதிருவுருப்பாற்படவகுத்துப்

பனிமலர்த்தொடைசூடியும்பரவியுநோற்றும்
பனியிறப்பினிற்படர்புனலாடுவான்படர்ந்தார்.

புனலாடுவான் - நீராட, (எ)

தண்ணந்தாமரைத்தாளிருதடக்கையுமுகமும்
கண்ணுங்காட்டலிற்கண்ணனிற்றிகழ்தருநீல
வண்ணவார்புனல்யமுனையிற்படிந்தனர்வரிவண்
டுண்ணவின்னறுவூற்றிருந்தொழுகுபூங்குழலார்.

தாள் - பாதம். (அ)

குரவமெல்லரும்பென்னவெங்கூரெயிற்றரவின்
உரிவையன்னவாலுண்டுகிலொலிபுனலாற்றங்
கரையின்வைத்தனர்கமழலந்தண்டுறைகமழ
விரையொடந்துவர்மெய்துவர்ந்தாடினர்மன்னோ.

உரிவை - தோல், துவர்ந்து - பூசி. (௯)

அருப்புநாண்மலர்த்தொடைபரிந்தாடியவேலை
கரைக்குறும்பெறியமுனையந்திரைவரிக்களிவண்
டிரைக்குமுல்லையங்கோதையரிடைநெறித்திருண்ட
விரைக்கருங்குழல்வேற்றுமைதெரிந்திலமாதோ

முல்லையங்கோதையர் - முல்லைமாலையணிந்த கோபியர். (௧௦)

சுண்ணமாடியதுணைமுலைக்கன்னியர்படிய
நண்ணுபன்மலர்நாற்றமுநரந்தமுங்கமழ்ந்து
வண்ணமன்றியுமொத்தனவணிருங்கூந்தல்
தண்ணந்தீம்புனல்பெருகியயமுனையந்தரங்கம்.

நரந்தம் - கஸ்தூரி, தரங்கம் - அலை. (௧௧)

திங்கள்வாணுதற்கன்னியர்தேனவாங்கூந்தற்
கொங்குவிம்முறுகுவிமுகைமுல்லைமெல்லிணரும்
பொங்குமல்லியின்விரியல்வெண்டோடுமேற்போர்த்துக்
கங்கையொத்ததுகல்லெனமுழங்குகாளிந்தி,

தேன் - வண்டு, கொங்கு - வாசனை (௧௨)

யாணர்க்கோங்கின்மென்முகிழ்முலையெழுதுகுங்குமமும்
வாணிலாமதிமுகத்தியர்வாரொலிகூந்தற்
காணமாகியவாய்மலர்ச்சுண்ணமுமளாவிச்
சோணையாற்றையுநிகர்த்ததுதொல்லைநீர்யமுனை.

யாணர் - அழகு. (௧௩)

தெளிவிசும்புலாங்கதிரவன்றிருமகளென்று
அளவளாய்த்திகழம்புயநறுமலர்கடுத்த

நனி தடந்திரையமுனைமாநதிப்படிந்தெழுந்த
முனையெயிற்றிளங்கன்னியர்முழுமதிவதனம்
அளவளாய் — கலந்து. (௧௪)

களிக்கருங்கயலன்னகட்கடைசிவப்பூரக்
குளிக்குமேழையர்குங்குமக்குவிமுலைவளாகம்
கிளைக்குந்தாமரைக்கேழ்கிளர்நறுமலர்மணத்தல்
திளைத்தல்போன்றனசெழுந்துழாய்க்கருமுகில்செங்கை.
கட்கடை - கடைக்கண், ஏழையர் - மாதர். (௧௫)

கற்றைவார்குழற்கன்னியர்கதிரிளங்கொங்கை
முற்றந்தோய்தருமுழுநெறிக்குவளையம்பசுந்தோ
டுற்றகண்ணனல்லொள்ளொளிநிறனுமுண்ணிறைந்து
பொற்றமாமையும்புறத்திடைதவழ்வதுபோன்ற.
மாமை - பசலை. (௧௬)

ஆட்டுகுங்குமக்கொழுங்களியளாயசெங்கமலம்
சேட்டிளங்கதிர்முலையெனவொழிந்துவெண்டிங்கள்
காட்டுவாணுதற்கன்னியரெழுதுசாந்தழிந்த
மோட்டுவெம்முலைமுளரியென்றளிகுலமொய்ப்ப.
களி - சேறு, அளிகுலம் - வண்டுக்கூட்டம். (௧௭)

அமிழ்திற்றோன்றியவம்மலர்த்திருமகளேய்ப்ப
இமிழ்திரைப்புனலாடுமவ்வின்னகைமடவார்
உமிழ்நிலாத்திகழ்பூந்துகிலொருங்குகைக்கொண்டு
கமழலந்துறைகடம்பின்மேலேறினன்கண்ணன்.
அமிழ்தின் - அமிர்தத்துடன், பாற்கடலில். கடம்பு - கடம்பமரம். (௧௮)

ஆவியந்துகில்வாரினனலர்கடம்பிவர்ந்த
ஆவியன்னவன்றன்னையவ்வரிவையர்நோக்கிப்
பூவைவண்ணவெம்பூந்துகில்வழங்குதியென்றுப்
பூவைபோல்விளைபுத்தமுதுகமிழற்றினரால்.
பூவைவண்ண - காயாம்பூவண்ணனே. (௧௯)

அரவமாநதிதுகிலொழிந்தாடினீரதற்குக்
கரையிவர்ந்துநீர்கைதொழத்தருகுதுமென்ன
முருகுவிம்மியகோதையர்முகமுகனோக்கி
உருகுகாதலுநாணுமீதூர்ந்தனரொல்கி.
அரவம் — சத்தம், கரையிவர்ந்து - கரையேறி. (௨0)

இருடரந்துதாழ்கூந்தலாரிறங்கியமுகத்தர்
சொரிதரும்புயறுறந்தெழுமின்னெனநுடங்கிப்

பரவையல்குலோர்பங்கயச்செங்கரமறைப்பக்
கரையிவர்ந்தொருகையினுற்ருெழுதனரன்றே.

தாழ் — நீண்ட, புயறுறந்து - மேகத்தைநீங்கி. (உக)

ஒருகையாற்ருெழிதேடரித்தடங்கணீர்செங்கை
அரிதல்வேண்டுமென்றஞ்சனவண்ணனின்றுரைப்பக்
குருகிளங்கொடிமறைந்தனர்சிலர்சிலர்குழைந்து
முருகுவிம்மியமொய்ம்மலர்த்தண்டுறைபடிந்தார்.

அரிதல்வேண்டும் - அறுக்கவேண்டும், முருகு - தேன், வாசனை. (உஉ)

ஏந்துகோட்டல்குன்மறைதரவிருள்கணிந்தொழுகும்
கூந்தல்சுற்றியுங்கொய்தழைசுற்றியுங்குளிர்தேன்
பாய்ந்ததாமரைப்பாசடைசுற்றியுமெதிர்ந்து
காந்தண்மென்முகிழ்கவற்றிருகையினுந்தொழுதார்.

பாசடை - பச்சிலை, கவற்று - வருத்துகிற. (உங)

அலர்க்கருங்குழற்கன்னியரகன்மதியடைந்து
நலத்ததாமரைநாண்மலர்குவிவதுகடுப்ப
மலர்க்கைகூப்பினர்வணங்கலுமறிகடலகடு
கலக்கியின்னமுதளித்தவனளித்தனன்கலிங்கம்.

கடுப்ப - நிகர்ப்ப, கலிங்கம் - ஆடை. (உச)

மகிழ்ந்துகொண்டவம்மாசிறாசுடைபுனைதோறும்
நெகிழ்ந்துசோர்தரநிச்சலுநெகிழ்ந்தநோக்குதவி
முகிழ்ந்துவீங்குறும்முலைமுயங்குவமெனவகன்றான்
திகழ்ந்தவால்வளைகொண்டெறிபாற்கடற்சேர்ப்பன்.

வால்வளை - வெள்ளியசங்குகள். (உரு)

கோவியர் துகில் கவரத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## பத்தாவது
## வேள்விமங்கையருணவளித்த வத்தியாயம்.



கலிவிருத்தம்.

கோழரைநாகமுங்குருந்துங்கொன்றையும்
தாழ்சினைமரவமுந்தழைத்தகானிடைத்
தோழரொடின்னிரைதுரந்துசென்றனன்
ஆழிவாய்த்துயிலொழியண்ணலென்பவே.

ஆழிவாய்த்துயிலொழியண்ணல் - கண்ணபிரான், நிரை - பசுக்கூட்டம். (க)

பூந்துணர்முருகுலாம்பொதும்பர்பற்பல
நீந்தினனிளையவர்நெகிழ்தண்பூங்குலைக்
காந்தளஞ்சாரலினெய்த்துக்கண்ணனைக்
கூர்ந்ததுபசியெனக்குழைந்துபோற்றினர்.

முருகு - வாசனை, பொதும்பர் - சோலை. (௨)

வளர்த்தனரங்கழன்மறைவலாளர்சோ
றளிக்கெனக்கண்ணனின்றறைந்திட்டானெனக்
கிளக்கினல்குவரெனக்கிளந்தகாலைவாய்க்
களிப்புடையிளையவர்கடிதின்மேயினர்.

கிளக்கின் - சொன்னால். (௩)

தம்மின்வெள்வல்சிவெந்தழற்கட்பாந்தளின்
பைம்மிசையாடியபச்சைமாமுகில்
நும்முழைவிடுத்தனனெனநுவன்றனர்
செம்மையந்தாமரைத்தெரியலார்க்கரோ.

வெள்வல்சி - வெண்சோறு, தம்மின் - தாருங்கள். (௪)

மறையவர்நான்மறைவழுத்தும்வேள்வியின்
இறையையோர்மகனெனவெண்ணியில்லென
அறைதரவத்திறனடைந்துகூறலும்
முறுவல்வாண்முகத்தினன்முதல்வன்கூறுமால்.

வேள்வியின் இறையை - கண்ணபிரானை, மகனென - மனிதனென்று. (௫)

வேதியரிருக்கவவ்வேள்விவேதியர்
கோதையர்க்குரைக்கெனக்கூறயன்றலந்
தாதவிழ்முல்லையந்தாமமார்பர்போய்
மாதர்பாலத்திறன்வழங்கினாரரோ.

வேதியர்கோதையர்க்கு — வேதியர்மனைவியர்க்கு. (௬)

முல்லையங்கோதையர்முதிர்சுவைத்துவை
முல்லைமென்முகைபுரைமூரல்கைக்கொளா
மல்லன்மாமறையவர்தட்பவந்தனர்
மல்லடுதோளினன்மருங்கினென்பவே.

மூரல் - சோறு, தட்ப - தடுக்க. (௭)

மயிலின்மென்பீலியுமல்லன்முல்லையும்
துயல்வரச்சூடியோர்தோட்டதாமரை
இயல்பெறச்செங்கைகொடிருந்தசெல்வனைக்
கயன்மலைப்பன்னகண்களிப்பநோக்கினர்.

கயல்மலைப்பு - மீன்சண்டை. (௮)

மூரல்வாண்முகத்தினர்மூரலுண்டபின்
வாரொலிகூந்தலம்மடநல்லார்தமை

ஆரழற்சாலைநீரடையினென்றனன்
காரெழில்கொண்ட றங்காக்குமையனே.

அறங்காக்குமையன் - கண்ணபிரான். (௯)

அநகவாங்கடைகலமடையினந்தணர்
முனிகுவரெனவவர்முனிவுசெய்கலர்
புனமயிற்சாயலிர்போமினென்றனன்
நனைவிரிகூந்தலார்நண்ணினாம்பரா.

அநக - பரிசுத்தனே. (௧௦)

நண்ணலுமந்தணர்நகைமுகத்தினர்
கண்ணனையெய்தினாங்காணகிற்றிலேம்
பெண்ணறிவிலநனிபேதையேமென
உண்ணெகிழ்காதலினுருகினாரரோ.

பேதையேம் - அறிவிலிகளாகியயாம். (௧௧)

நிரையொடுமீண்டனனிலவுசெங்கதிர்
வரைமறைதரவெழுமாலைவெண்பிறை
சொரிநிலவெனவலர்தோட்டுமுல்லையந்
தெரியல்சூழ்கருங்கழற்செங்கணேறனன்.

செங்கதிர் - சூரியன், வரை - அஸ்தமநகிரி. (௧௨)

வேள்விபங்கைய ருணவளித்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௩௨௦

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## பதினோராவது
## கோவத்தனமெடுத்தவத்தியாயம்.



உந்துநீரமுதுடனுயிர்த்தபேதையர்
அந்தண்வாணகையமுதருந்தியின்புறும்
இந்திரன்மகிழவாங்கிப்பற்றியீட்டினன்
பைந்தொடைநந்தர்கோன்பண்ணிகாரமே.

உயிர்த்த - பெற்ற, பேதையர் - மாதர். (௧)

ஆவயின்மாயவனறிந்துமென்செய்வான்
மேவினைநீயெனவிளம்பநந்தர்கோன்
பூவைபோல்வண்ணயான்புரியவேட்டது
தேவர்கோன்பூசனையென்றுசெப்பினான்.

வேட்டது - விரும்பினது. (௨)

சேணுலாமிந்திரன்சீற்றமீங்கினிக்
காணலாமென்றுசெங்கமலவீட்டுறை
வாணிலாமென்னகைமணந்தசெம்மணிப்
பூணுலாமார்பினன்புகறன்மேயினன்.

சீற்றம் - கோவம். (௩)

பண்டுசெய்வினையலாற்பரவுதெய்வமொன்
றுண்டெனிற்றன்பயனுதவவல்லதோ
அண்டர்கோன்பூசனையாற்றுகின்றதால்
கண்டிலனொருபயன்கருதுங்காலையே.

பரவு - வழிபடுகிற, அண்டர்கோன் - தேவாதிபன். (௪)

எவ்வினையேனுமொன்றிழைக்கினீறிலா
தவ்வினையேபயனளித்தல்செய்யுமால்
செய்வினையல்லதுதெய்வமென்செயும்
மவ்வலம்பசுந்தொடைமாரமற்றரோ

இழைக்கின் - செய்தால், மவ்வல் - முல்லை. (௫)

செழுமறையவரொடுசெம்மலானினம்
விழைதருமுணவெலாம்வெறுப்பநல்கிடாப்
பொழிமழைதவழுநம்பொன்னங்குன்றினை
வழிபடலினிதெனவள்ளல்கூறினான்.

செம்மல் - பெருமை, நல்கிடா - கொடுத்து. (௬)

திருத்துயில்பெற்றவச்செம்பொன்மார்பினன்
உரைத்தவாறமனுவந்துநந்தர்கோன்
அருச்சனைபுரிந்தனனருவிமாலைதாழ்
பொருப்பினைவெண்டிரைப்புவிகளிப்பவே.

பொன் - திருமகள். (௭)

கன்னலின்றீஞ்சுவைக்கனியின்குப்பையும்
பொன்னெடுங்குன்றெனப்பொலிந்ததோர்தலை
கொன்னவில்வெள்ளியங்குன்றமாமெனச்
செந்நெல்வெள்ளடிசிலோர்திசைமலிந்ததால்.

கன்னலின் - சர்க்கரையினும். (௮)

உண்ணுமின்னமுதுடனுடையும்பாற்கடல்
கண்ணுறுகின்றதோர்காட்சியாமென
வெண்ணெய்வெண்டயிரொடுவிளங்கவோர்தலை
அண்ணலான்பொழிந்தபாலலையெறிந்ததால்.

அண்ணலான் - பெரும்பசுக்கள். (௯)

வெடித்தநாண்மல்லிகைவிரியல்வாசிகை
தொடுத்தனர்விரைகமழ்சுண்ணந்தூவினர்

எடுத்தனர்தீம்புகையினியதேனுக
வடித்தனர்கழையிசைவயிரிசைத்தனர்.

கழை - வேய்ங்குழல், வயிர் - ஊதுகொம்பு. (க0)

அவிழ்ந்ததாமரைமலரனையசெங்கணன்
நிவந்தகோவத்தனமாகிநெய்யொடு
குவிந்தவால்வல்சியுங்கூட்டுண்டவ்வழி
உவந்தனமெனச்சிலவுரைவழங்கினன்.

வால்வல்சி - வெண்சோறு. (கக)

ஆரமிழ்தன்னநல்லடிசின்மாந்தியோர்
கார்வரைமகிழ்வதுகாண்மினேனவெனு
வேரியங்கருந்துழாய்விமலன்வெண்ணிலா
மூரலனிவ்வழிமொழிந்திட்டானரோ.

அடிசில் - சோறு. (கஉ)

உண்டதுவாய்திறந்துவந்துளோமென
விண்டதுமற்றிதுவியப்பிற்றுமென
அண்டர்மால்வரையினையன்புற்றேத்தினர்
வண்டிமிர்போதுதூஉய்வணங்கினரரோ.

அண்டர் - இடையர். (கங)

முகிழ்விரிமெல்லிணர்முல்லையாயர்கோன்
மகன்மொழிகேட்டனன்மலைவழுத்தினன்
நகையுடைத்திஃதெனநாட்டஞ்சேந்தனன்
அகலிருவிசும்புகாத்தளிக்குமண்ணலே.

விசும்புகாத்தளிக்குமண்ணல் - இந்திரன். (கச)

ஒருமகன்காப்பதூஉமுயர்பொற்கோட்டதோர்
கருவரைகாப்பதூஉங்காணத்தக்கதால்
வருகமாமுகிற்குலம்வாரிவற்றிடப்
பருகுபுசொரிகெனப்பணித்திட்டானரோ.

ஒருமகன் - கண்ணன், கருவரை - கோவர்த்தநம், வாரி-கடல், பருகுபு-குடித்து.

ஏழ்பெருங்கொண்டலுமெழுந்துவான்வளை இ
ஊழியினிறுதியினுரறியொல்லெனச்
சூழ்கழலிந்திரன்சூழியானையின்
தாழிருந்தடக்கையிற்றுரைகான்றவே.

உரறி - பேரொலிசெய்து. (கரு)

இடியினில்வெருவுறுமிடித்துமின்னுமின்
கொடியினிற்கரிந்துமெய்குலைகுலைந்திடும்

கடியகன்மாரியிற்கலங்குமவ்வழிப்
படுமணியானிரைபட்டதென்சொல்கேம்

படுமணி - ஒலிக்கின்றமணி, ஆனிரை - பசுக்கூட்டம். (கள)

சாய்த்தவஞ்சென்னியதளர்ந்தகாலன
காத்திளங்கன்றினைக்கரந்தமெய்யன
ஆத்திரண்மறுகினவலமந்துற்றன
பார்த்தன்மான்றேர்க்கொருபாகன்றன்னையே.

ஆத்திரன் - பசுக்கூட்டம். (கஅ)

முடிந்ததோவூழியம்முதலவனண்டமாங்
கிடிந்ததோவுலகியலிறந்துபோயதோ
கடும்புயலின்னதுகண்டிலேமென
நடுங்கினர்கோவர்நனிகலங்கினார்.

புயல் - மேகம். (கக)

ஆரழல்வளைத்தநாளாவிகாத்தனை
கார்முகில்வண்ணநீகாப்பவேண்டுமிம்
மாரியுமென்றனர்மல்லன்முல்லையந்
தாரவன்சேயடிதாழ்ந்துபோற்றினார்.

முல்லையந்தாரவன் - கண்ணபிரான். (உ0)

வம்மினீர்யாவருமறுகுமாவெலாம்
தம்மினிவ்வழியெனத்தண்டுழாய்முகில்
செம்மையந்தாமரைச்செங்கையொன்றினால்
பெய்ம்முகிறவழ்வரைபிடுங்கினானரோ.

தம்மின் - கொண்டுவாருங்கள், வரை - கோவர்த்தநகிரி. (உக)

கலிநிலைத்துறை.

காவற்றொழில்பூண்டுலகேழையுங்காக்கவந்தோன்
ஆவுக்கிடரொன்றணுகாவகையாழிமேய்ந்த
தூவற்கருங்கார்சொரிகின்றவம்மாரிகாத்தான்
கோவத்தனமோர்குடையாமெனக்கொண்டுநின்றே.

ஆழி - கடல். (உஉ)

பாரேழுதவும்பனிமாமலரண்ணலோடும்
ஈரேழுலகத்துயிர்யாவையுமீன்றநம்மான்
ஓரேழ்பகனின்றுயரண்டம்வெடிப்பவார்த்துக்
காரேழ்பொழியுங்கனைவெம்பெயன்மாரிகாத்தான்.

மலரண்ணல் - பிரமன். (உங)

பாட்டாயிரம்வீழ்ந்திளவண்டினம்பாடுமுல்லைச்
சூட்டாயிதழ்ப்பூந்துளவோடுமிலைந்ததொல்லோன்

கோட்டாடகமால்வரையேந்தியகோலநோக்கி
மீட்டான்பொழியும்புயலேழும்விண்காவல்வேந்தன்.

சூட்டு - மாலை. (உச)

தந்தாவளமோர்தடந்தாமரையேந்தியாங்குச்
செந்தாமரைக்கட்டிருமால்வரையேந்தனோக்கி
நந்தாமகிழ்ச்சிதழைகோவலர்நந்தகோனோ
டந்தாமமார்பன்றனையோர்ந்தனரையமற்றே.

தந்தாவளம் - யானை. (உரு)

ஏர்வண்ணம்வெவ்வேறெதிரூழிதொறெய்துமீங்குக்
கார்வண்ணமெய்திக்கருங்கண்ணனென்றேத்தநின்றான்
போர்வண்ணனேமிப்புயலென்றனன்கர்க்கனென்று
ஓர்வண்ணநோககியுயர்நந்தனுவந்துரைத்தான்

கர்க்கன் - யாதவர்க்குப் புரோஹிதனுகிய வோரிருடி, பலராமக்ருஷ்ணர்களுக்கு நாமகரணாதிகள் செய்தவர் இவரே. (உசு)

ஒரேழ்பருவத்தொருதோன்றலொர்குன்றமேந்தி
ஒரேழ்கருங்காரொழியாதுபொழிந்தமாரி
ஒரேழ்பகல்காத்தளித்தானெனவுன்னியுன்னி
ஓரேழுலகத்தெவர்நெஞ்சமுவக்ககில்லார்.

உவக்ககில்லார் - சந்தோஷியாதவர். (உஎ)

பண்ணாயிரமஞ்சிறைவண்டுபடிந்துபாடும்
தண்ணார்துளவோன்றனிநின்றதொர்செவ்விநோக்கி
விண்ணாடுகாக்குந்தனிவெண்குடைவேந்துசெய்ய
கண்ணாயிரமுங்களிகூர்தரச்சென்றுகண்டான்.

துளவோன் - கண்ணபிரான், விண்ணாடுகாக்குந் தனிவெண்குடைவேந்து - இந்திரன். (உஅ)

கொழுதாமமழலைக்குரற்றேனுழுகோதைமார்பன்
எழுதாமறையின்முடிமீதிலிருந்ததாள்விண்
முழுதாளுமன்னன்முளரிக்கரங்கூப்பிநின்று
தொழுதானிருதாண்முடிச்சென்னியிற்சூடினனால்.

கொழுதா - கிண்டி, தேன் - வண்டு, கோதைமார்பன் - பூமாலையையணிந்தமார்பையுடைய கண்ணபிரான். (உகூ)

உரைவாயிகந்துள்ளுணர்வுங்கடந்தோங்கிநிற்பாய்
தரைவாய்ப்பிறந்துதனிநல்லறங்காத்தல்செய்வாய்
விரைவாய்மலர்மேலுறைவாய்வரைவீற்றிருப்பாய்
திரைவாய்த்துயில்வாய்நினையெங்ஙனந்தேர்வல்யானே.

இகந்து - கடந்து, விரை - வாசனை, வரை-கைலாயமலை, திரைவாய்-பாற்கடலில்

மலர்மேலவன்கைம்மலேமேலுளென்மாசில்வெள்ளி
மலேமேலவனேனவருள்ளமயங்கியெம்மைத்
தலேயாயவரேயெனநெஞ்சுதருக்கும்வேலே
உலேயாமுதல்வாவொழிப்பாயலேசொல்லேமாதோ.

ஏனவர் - மற்றையோர், தருக்கும்வேலே - அகங்கரிக்குங் காலத்தில், உலேயா அழியாத. (௬௧)

மாற்றற்றபொற்றுமரையாள்புணர்மாலேமார்ப
ஆற்றற்றிகிரிப்படையாய்வெறுப்பார்வமில்லாய்
சீற்றத்திழைத்தசெயலீதுபொறுத்தியென்றுப்
போற்றிப்பணிந்தான்பசும்பொன்னகர்போற்றும்வேந்தன்.

வெறுப்பார்வமில்லாய் - வெறுப்பும் விருப்புமில்லாதவனே. (௬௨)

ஒளியுற்றபொன்றுட்டெயரின்பமருந்தியுள்ளம்
களியுற்றனேயக்களிமம்மர்கனன்றநெஞ்சம்
தெளிவுற்றிடவித்திறன்செய்தனமென்றுசெங்கண்
அளியுற்றதாரானளிகூர்ந்துரையாடினுல்.

மம்மர் - மயக்கம், அளியுற்றதாரான்-கண்ணபிரான், அளிகூர்ந்து-கருணமிருந்து.

நிலங்காத்தகோவேநெடுங்குன்றினின்மாரிகாத்தென்
குலங்காத்ததெய்வக்கொழுந்தேயருள்வாழியென்றுப்
புலங்காத்துயர்விட்டுலஞ்சேர்பொலங்கோதைமாதர்
கலங்காத்தகண்ணன்றனேச்சார்ந்ததுகாமதேனு.

குன்றினின் - குன்றினுல், கலம் - தாலி. (௬௩)

மாலேக்கதிர்வாண்மதிநின்றுவயங்குகோல
நீலக்கிரிமேனிலவுக்கதிர்கால்வதென்ன
ஆலக்கருஞ்சேறுமிழ்பாம்பினின்றுடினனேப்
பாலிற்பரவிப்பரிந்தாட்டல்புரிந்ததன்றே.

ஆலம் - நஞ்சு, பாம்பு - காளியன், பாலின் - பாலினுல், ஆட்டல்புரிந்தது - அபிஷேகஞ்செய்தது. (௬௪)

பாட்டுற்றவண்டுபடிந்தூதுபொற்பாரிசாதக்
கோட்டுற்றதெய்வக்குளிர்நாண்மலர்கோத்திறுததுச்
சூட்டிற்றுநீண்டதொளேக்கைகொடுகங்கைவாரி
ஆட்டிற்றுக்கண்ணற்கயிராவதமாங்கடைந்தே.

கோடு - கிளே, சூட்டிற்று - தரித்தது. (௬௫)

நாவந்தமாதுபுணர்நான்மறையோனேயுந்திப்
பூவந்தளித்தோற்கொருபொன்னெடுங்குன்றமேந்தி
ஆவந்தளிக்குமடலாழியஞ்செங்கையாற்குக்
கோவிந்தனென்றேர்பெயர்கூறினன்கொற்றவேந்தன்.

நாவந்தமாது - சரசுவதி. (௬௭)

காலக்கமஞ்சூழ்கருங்கார்முகில்கண்டுவெந்து
கோலக்கலவக்குலமஞ்ஞைகுனிக்குமாபோல்
வேலைக்கடல்வாய்விளையின்னமுதன்னதீஞ்சொல்
ஆலக்கருங்கணரமங்கையராடினரால்.

கமம் - நிறைவு, குனிக்குமாபோல் - ஆடுமாறுபோல. (௩௮)

நந்தாதுபொன்வார்ந்தனயாழினரம்புளர்ந்து
பைந்தேனுறைப்பவுயர்கின்னரர்பாடலுற்றார்
செந்தேறல்சிந்தச்சிறைவண்டர்செறிந்துபாடும்
மந்தாரமன்றன்மலர்வானவர் தூவியார்த்தார்.

வண்டர் - வண்டு, மந்தாரம் - பஞ்சதருக்களிலொன்று. (௩௯)

நறைவார்முளரிப்பொலம்போதுறைநங்கைமேவும்
இறைவாகமலத்தெழில்வாய்ந்தநின்செய்யபொற்றாள்
மறவாதருள்வாயெனமாயனைநின்றுவாழ்த்தி
அறைவார்கழற்காலமரர்க்கிறைபோயினனால்.

நறை - தேன், முளரி - தாமரை, போதுறைநங்கை - திருமகள். (௪0)

கோவத்தனமெடுத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௩௬0.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---

பனிரண்டாவது

## கோவியரைமணந்த வத்தியாயம்.



ஈராறுசேர்ந்ததிதியெய்தலுநந்தகோபன்
ஓராறுநண்ணியொலிதீம்புனலாடனைக்கிக்
காரேறுபோலுமொருதானவன்கைக்கொடேகப்
போரேறுபோலவெழுந்தான்றிகழ்பூவைவண்ணன்.

ஈராறுசேர்ந்ததிதி - துவாதசி, பூவைவண்ணன் - கண்ணபிரான். (௧)

அணைந்தாயவனென்றலராடகப்போது தூவி
வணங்காவழுத்தவருணன்பதிசென்றுவல்லே
கொணர்ந்தான்கமழ்பூங்குருந்தம்புனைநந்தர்கோனைப்
பணந்தாழரவின்றலைநின்றுபதம்பெயர்த்தான்.

ஆடகப்போது - பொன்மலர் - பணந்தாழாவு, காளியன். (௨)

மன்னுஞ்சிறப்பின்வருணன்மழைவண்ணன்மல்லற்
பொன்னனங்கழற்கால்புனைந்தேத்தினன்பூவில்வாழும்

அன்னம்புணருங்கரியோனிவனுங்கொலென்னுத்
துன்னுந்தொறவர்க்குயர்நந்தனுவந்துசொன்னான்.

புவில்வாழும் அன்னம் - திருமகள், தொறுவர் - இடையர். (௩)

தண்ணந்துணர்தூஉய்த்தடந்தாமரைமேற்செல்வனோடு
விண்ணும்பரவித்தொழுந்தன்னிலைகா [illegible] வட்ப
வண்ணந்தெரிந்துமைபூவண்ணனைவ [illegible] மாயர்
கண்ணும்மனமுங்களிக்குப்படிகாட்டினனால்

தாமரைச்செல்வன் - பிரமன் (௪)

தலைவந்தகூதிர்ப்பருவத்தினிலோர்பய [illegible]
கலைவந்தகற்றைக்கதிர்மாமதித்தோற்றமாக்கி
அலைவந்துலாவும்யமுனைக்கரையெய் [illegible]
இலைவந்ததாரானிசைசெய்ங்குழலின் [illegible] சான்.

அங்கில் - அங்கு, அசைநிலை (௫)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நஞ்சுகொப்புளிக்கும்பேழ்வாய்நாகணைதுறந்தநம்பி
கஞ்சநாண்மலர்வாய்வைத்தகழையிசையமுதமாரி
அஞ்செவிதவழ்தலோடுமாய்ச்சியர்நிறைதுமாறல்
செங்கிலைபழுதநுக்கான்றசெஞ்சரந்தவ [illegible] மாசா.

துறந்த - விட்ட, சரம் - பாணம் (௬)

வழிதருமுதொழுகுமாலைமதிநிலாமேனிமேயப
செழுந்தழலிறைக்குநெஞ்சந்தெருமரலுழப்பவாயர்
கொழுந்தின்மேவியிசைவெங்காமக்கொழு [illegible] வளர்க்குமென்றே
பிழிந்துகொள்வலையவெண்மைப்பேதையர்பிழைக்குமாறே.

தெருமரல் - மயங்கல், ஆயர்கொழுந்து - கண்ணபிரான், மாலை - மாலைக்காலம்.

காதளவோடிநீண்டுகடைசிவந்தகன்றுபோர்க்குப்
போதருகென்றுநீலப்போதினுக்கோலைபோக்கும்
மாதர்மென்மீனுக்கினும்கண்மயிலியன்மாதரெல்லாம்
தாதுறுமறுகுசூழ்ந்ததம்புலமகன்றுமொய்த்தார்

நீலப்போதினுக்கு - கருங்குவளைமலருக்கு, மறுகு - வீதி. (௮)

விசும்பிடஞ்சிறியதென்னவீங்கிளங்கொங்கைதாங்கி
ஒசிந்துநுண்மருங்குநோவவொலிகருங்கூந்தல்சரூழ
அசும்புபொற்கலாபமேங்கவணிசிலம்பரற்றவோடிப்
பசும்புயல்வண்ணத்தண்ணல்பண்வலைச்சென்றுபட்டார்.

பசும்புயல் வண்ணத்தண்ணல் - கண்ணபிரான், பட்டார் - சிக்கிக்கொண்டார்கள்

நெடுநிலாக்குவித்தாலன்னநீண்மணற்குன்றமெல்லாம்
படுநிலாத்தெறுவெண்டேவிப்பவளவாயன்னம்போன்று

மடலவிழ்முல்லேவேலிமாதவிப்பந்தரெல்லாம்
சுடர்பொலங்கொம்பர்போன்றுதோகையர்துவன்றினரால்.

பொலங்கொம்பர் - பொற்கொடி, தோகையர் - மாதர், துவன்றினர் - நெருங்கினர்கள். (க0)

எரிளமயிலின்மொய்த்தவேலையுயர்வதனநோக்கித்
தார்விரிந்தகன்றமார்வத்தலேவரைப்பிழைத்துக்கானத்
தாரிருட்காலேயெம்பாலடைதனல்லறநவொல்போமின்
நேரிழைமடவீரென்றுநெடியவனெடிதுசொற்றான்.

மயிலின் - மயில்போல, நெடியவன் - கண்ணபிரான். (கக)

அல்லியங்கமலக்கண்ணனறைந்தசொற்கேட்டலோடும்
சில்லரித்தடங்கண்முத்தந்திருமுலேக்கோட்டிற்சிந்த
நல்லறங்கேட்பவென்றோநம்பியாமடைந்தமென்று
மெல்லெனப்பவளச்செவ்வாய்விண்டனர்மிழற்றல்செய்தார்.

கோட்டில் - மலேமேல் (கஉ)

துளிப்பதத்தேறன்மாந்தத்துதைந்துதாதளேந்துசூழ்ந்து
களிச்சுரும்பரற்றுதாரோய்காட்டழல்கடிந்திலாயோ
இளேத்தனந்துயரும்வண்ணமெண்டிசாமுகமும்வந்து
வளேத்தவெண்ணிலவுத்தீயைமாற்றலேயென்னேயென்பார்.

பதம் - பதப்பட்ட, தேறல் - தேன், மாந்த - குடிக்க, துதைத்து - நெருங்கி. ()

பொருப்பினன்மாரிகாத்தபூவைபோனிறத்தாயென்னே
கருப்புவார்சிலேகால்கோட்டிக்கவம்பெய்தோள்கழியவாங்கிச்
சுருப்புநாண்டொடுத்துத்தூணிதொலேவுறமாரனெய்யும்
அருப்புவெம்பகழிமாரியமைத்திலேயயென்பார்.

பூவை - காயாமலர், வாங்கி - வளேத்து, அமைத்திலே - தடுத்திலே. (கச)

மல்லனீர்யமுனேயாற்றுவல்விடமகற்றவல்லாய்
முல்லேவாய்பொழிந்ததேறன்மூழ்கிவெவ்வழல்வாய்கான்று
கொல்லியவெழுந்தவாடைக்கொலேவிடமகற்றாயென்னே
அல்லியங்கமலச்செங்கணமலவென்றயர்ந்துநிற்பார்.

கொல்லிய - கொல்ல, வாடை - வடகாற்று. (கரு)

பண்ணுறுகிளேநின்செங்கேழ்ப்பவளவாய் த்தநாளும்
உண்ணவைத்திலேயோநங்கட்குதவிலேயொருநாளென்னே
பெண்ணலங்கனியவந்தபேய்முலேயூறுபாலும்
வெண்ணெயுமினிதுமாந்தும்விடைநடைக்குரிசிலென்பார்.

கிளே - வேய்ங்குழல், விடை - இடபம். (கசு)

உருகினர்நிறையுநாணுமுகுத்தனர்நெகிழ்ந்துவீழும்
குருகினர்கொங்கைமுத்தங்கொதித்திடக்கரிந்ததண்பூஞ்

சருகினர்விளக்குமேனித்தளிரினர்கருங்கட்கையால்
பருகினர்வாரிவாரிப்பசும்புயலழகின்வெள்ளம்.

குருகு - வளையல், பசும்புயல் — கண்ணபிரான். (௧௭)

கழைபுரைதோளும்பச்சைக்கழைதருகதிர்முத்தன்ன
ஒழுகொளிநகையும்பெற்றவோடரிச்சடங்கணல்லார்
இழைபுரைமருங்குற்றேய்க்குமிராமுழையுமணந்தான்குன்றம்
குழைதரக்கழைவாய்வைத்தகோவலர்கொழுந்துமன்றே.

கழைபுரை - மூங்கிலைநிகர்த்த, இழை - நூலிழை, மருங்குல் - இடை. (௧௮)

திகழ்மணிக்கூந்தலங்கைபற்றிபுஞ்செய்யகோங்கின்
முகிழெனமுகிழ்த்தகொம்மைமுலைமுந்தழீஇயுநீவி
நெகிழ்தரப்புரிந்துமங்கணரையிதழ்ப்பூங்கொம்பன்னார்
மகிழ்தருமின்பத்தேறன்மாந்தினன்மணிவண்டன்னான்.

நீவி - கொய்சகம், மணிவண்டன்னான் - கண்ணபிரான். (௧௯)

துளும்புநன்னலந்தசெவ்வாய்த்தோகையர்சிலர்வண்மட்டம்
உளர்ந்தசெங்குமுதமாகவொழுகொளிமதியம்போன்றும்
தெளிந்தவின்முறுவனல்லார்சிலர்செழுங்கமலமாக
இளங்கதிர்ப்பரிதிபோன்றுமெழினலந்திகழ்வித்தானால்.

துளும்பும் - ததும்புகிற, மதியம் - சந்திரன், பரிதி - சூரியன். (௨௦)

அருப்பிளநிலவுகாலவாரமொத்திலங்குமந்தண்
சிரிப்பினும்புருவஞ்செய்யுஞ்செயலினுநகைகூர்தீஞ்சொல்
விருப்பினுமலங்கக்கணோக்கின்விளைவினுங்களிநல்யானை
மருப்பிளங்கொங்கைமாதர்மனமகிழ்விளைத்தல்செய்தான்.

ஆரம் - முத்து. (௨௧)

பொங்கிணர்க்காவுதோறும்புதுமணற்குன்றுதோறும்
பங்கயச்செங்கணெம்மான்பானலர்பயன்கொண்டோங்கு
கங்கையந்திரைவாயுற்றகளியினவன்னம்போலும்
கொங்கவிழ்கோதைமாதர்குழாத்தொடுமாடல்செய்தான்

பானல் - கருங்குவளை, பயன் - நீர் (௨௨)

முருகுவாய்சொரியுமுல்லைமொய்ம்மலர்தெரிந்துவேய்ந்தோர்
வரிமுலைத்துவர்வாயேழைவணரிருங்கூந்தலேக்கும்
இருள்படப்பொதுளுஞ்சோலையின்னிணர்கிழித்துவீழ்ந்து
விரிகதிர்நிலவுபாய்ந்துவிளங்குபூங்கானநோக்கும்.

முருகு - தேன், வாசனை. வரி — தேமல். (௨௩)

சிறைச்சுரும்பெழுந்துபாடச்செவ்விதிற்றிகழ்சிந்தூரம்
பொறித்துமற்றொருத்திநீலப்புரிகுழற்காடுநோக்கும்

எறித்தசெம்பவளவல்லியிடைத்தவழ்ந்தழகுபூத்து
நெறித்தபைந்தோட்டுமென்றனெய்தலங்காடுநோக்கும்.

சுரும்பு - வண்டு, நெய்தல் - நெய்தற்பூ. (௨௪)

மருக்கமழ்கமலக்கையான்மானமதத்திலகந்தீட்டி
முருக்கிதழொருத்தியந்தண்முகிழ்நகைவதனநோக்கும்
உருக்கிளர்மறுவிற்றுகியொண்கலைநிறைந்துதோன்றும்
திருக்கிளர்நிலவுபூத்தசெங்களங்கவினுநோக்கும்.

மான்மதம் - கஸ்தூரி, முருக்கு - முருக்கமலர். (௨௫)

தீட்டுசாந்தழிதலாலேதனதகமழ்நரந்தங்கோட்டி
வாட்கணொருத்திகொம்மைவரிமுலைச்செவ்விநோக்கும்
பாட்டயர்ந்தொழுகுநீர்ப்பனிச்சிறைவண்டுமொய்க்கும்
மோட்டிருஞ்சுனையிற்பூத்தமுளரிமெல்லரும்புநோக்கும்.

நரந்தம் - கஸ்தூரி, முளரி - தாமரை. (௨௬)

தெளிர்க்கதிர்மணியிற்செய்தவொண்டொடிதிருத்திமற்றோர்
கிளிக்குலமருட்டுமெந்தீங்கிளவியஞ்செங்கைநோக்கும்
துளிப்பசுந்தேறன்மாந்தத்தோடுவாய்வைக்குநீலக்
களிச்சுரும்புடுத்தவந்தண்காந்தண்மென்முகிழுநோக்கும்

தொடி - வளையல். (௨௭)

வண்ணநுண்சுண்ணமாட்டிவளரிளந்திங்களன்ன
ஒண்ணுதலொருத்திமாமையொழுகுமாமேனிநோக்கும்
பண்ணமர்மழலைப்பல்காற்பறவைவீழ்ந்தாழுமென்பூந்
தண்ணறுந்தாதுதுற்றாக்கப்பங்குசெந்தளிருநோக்கும்.

மாமை - வைவர்ண்யம், நிறம் - அழகு. (௨௮)

கலிநிலைத்துறை.

வள்ளுறைசிந்துமழைப்புயன்மின்னுமணந்தாங்குத்
தெள்ளறலெக்கர்சிறப்பவொர்மாதொடுசென்றாடி
ஒள்ளிழைநின்முகமொப்பிலவாகியுடைந்தெங்கும்
கள்ளவிழ்தாமரைமாமலர்வாடுதல்காணென்னும்.

உறை - நீர், மழைப்புயல் - குளிர்ச்சியையுடையமேகம், மணந்தாங்கு - கூடினாற்போல. (௨௯)

தொங்கலணிந்தொருசார்குழலாளொடுசூன்முற்றும்
சங்குமுழங்கியதண்டுறைசென்றுதலைப்பெய்யா
மங்கைநினங்கலுழ்வாண்முகமஞ்சியவண்ணத்தால்
பைங்கதிர்மாமதிகாரிலொளிப்பதுபாரென்னும்.

தலைப்பெய்யா - கூடி, காரில் - மேகத்தில். (௩௦)

ஓடரிமைக்கணொருத்தியொடின்னறவூறுந்தண்
கோடணிகைதைவனத்துமலர்ந்தலர்கொய்தாய்நீள்
காடுபடுங்குழல்காண்டொறுமென்றுகொல்காளிந்தி
ஆடுதிரைக்கையின்முத்தமளிக்குமதிர்ந்தென்னும்

கைதைவனம் - தாழங்காடு. (௰௧)

கோழரைநாகமணந்தமணற்சிறுகுன்றேறி
மாழைமென்னோக்கியொர்மாணிழையோமெலிந்தாழ்ந்த
தாழ்ந்தழனின்னகையொப்பநினைந்துகொறண்முசுதம்
சூழ்பவளக்களையூடுசெறிந்தசுடர்த்தென்னும்.

கோழ் - வழுவழுப்பு, அரை - பொருக்கு, நாகம் - புன்னைமரம். (௰௨)

ஆடுமொருத்தியொடாங்கருவிப்புனலாய்கோதை
சூடுமொருத்தியொடின்றொடையாழிசைசூழ்வந்து
பாடுமொருத்தியொடுற்றபளிக்கறைசென்றெய்திக
கூடுமொருத்தியொடின்னிளவாடைகுளிர்ப்பெய்த

பளிக்கறை - பளிங்குக்கற்களாற் செய்யப்பட்டவீடு. (௰௩)

மாடிருத்தியிளங்களிவண்டுபாந்தாடும்
ஆடிருத்தியலம்புகவீழுமநாமச்
சூடிருத்துமொருத்தியைமென்மொழிசொல்லாநின்
றாடிருத்துமொருத்தியையுள்ளமுவப்பூர.

சொல்லா - சொல்லி. (௰௪)

இம்முறைகாமமுழுந்தவருகியியைந்தாட
நம்முறையார்வம்விழைந்தனனென்றுநயப்பெய்தி
செம்மலராணிகர்சின்மொழிமாதர்செருக்குற்றார்
மைம்முகிலன்னவனவ்வழியின்னின்மறைந்தானால்

ஆர்வம்விழைந்தனன் - ஆசைகொண்டான். (௰௫)

கலிவிருத்தம்.

இடிபோலதிர்ங்கவுள்வேழமனான்
கொடிபோலுமொர்கோதையொடாங்கனல
வடிபோலமலர்ந்தகண்மாரியுகப்
பிடிபோன்மறுகுற்றனர்பேதையரே.

கவுள் - கபோலம், வடி - மாவடு. (௰௬)

மறைதேடருமாயவனாகுமெனா
நறைவார்குழலார்சிலர்நண்ணினரால்
வெறிமேவியபூஞ்சினைவிள்ளுமினார்ப்
பொறையான்மெலிபூவையிளந்தருவே.

எனா - என்று, வெறி - வாசனை. (௰௭)

ஆலப்பருவாயரவத்துயிறீர்
மாலுற்றனளுமெனமாலுழவா
நீலச்சிறுகுன்றிளைநீள்விழிசெஞ்
சேலிற்பிறழ்வார்சிலர்சேர்ந்தனரால்.

ஆலம் நஞ்சு, மாலுழவா - மயங்கி. (ங அ)

புவியிற்றிகழ்பொற்றருவல்லியெனக்
கவினிற்பொலிவார்சிலர்கண்ணனெனுப்
பவளக்கொடியுற்றபளிக்கறைமேல்
தவழப்புயல்சென்றுதழீஇயினரால்.

பொற்றருவல்லி - காமர்வல்லிக்கொடி. (ங கூ)

மண்ணுமணியேயமபூவேறனையாய்
உண்ணுவமுதேயெமதுள்ளுயிரே
கண்ணேவெமகண்ணெதிராய்கொலெனுப்
பண்ணுர்மொழியார்பலபன்னுவரால்.

மண்ணுமணி - மாணிக்கம், பன்னுவர் - சொல்லுவார். (ச0)

தளராநிலவுந்தழலிற்றமியேம்
குளியாவுருகிக்குழையத்தனிநீ
விளையாடுதியோவிரிதாரவனே
இளவாளரியேயெழுதற்கரியாய்.

குளியா - குளித்து, முழுகி. (சக)

வார்கொண்டிதழ்வாய்மழைவிண்டொழுக
கார்கண்டலருங்கமழ்வெண்டளவே
நீர்கொண்டெழுகார்நிகராயவனெம்
ஏர்கொண்டனனெவ்வழியேகினனே

வெண்டளவே - வெள்ளியமுல்லைக்கொடியே. (சஉ)

தளவேயறியாய்தடமார்பணியும்
துளவேயறியுஞ்சொலவல்லைகொலோ
களவேயுரைநின்கனிபோல்பவனெம்
அளவேபிறிவுற்றகலும்புலமே.

களவே - களாமரமே (சங)

இரவுத்தலையுந்துயிலாதிழுமென்
றுருவுக்கதிர்மாமணிகொண்டொழுகும்
அருவித்திரைகாளறிவீரறையீர்
மருவிப்பிரியும்மணிவண்ணனையே.

இரவுத்தலையும் - இராக்காலத்தும், அறையீர் - சொல்லீர். (சச)

கன்றால்விளவின்கனிசிந்தியமால்
சென்றாடிடனீர்தெரிவுற்றிலிரோ
பொன்றாழிணரிற்பொலிவுற்றிடுநுண்
கொன்றாய்குரவேகொடியீருரையீர்.

கொன்றாய் - கொன்றையே, குரவே - குராவே. (௪௫)

தாதாடியவந்தளிர்மாதவியே
போதார்துளவப்புயலின்செயலீங்
கேதோபுகல்வாளிதழ்விண்டதுமற்
றேதாயளிநீயுடையாயலையோ.

மாதவியே - குருக்கத்தியே, வசந்தமல்லிகைக்கொடியே, துளவப்புயல் - கண்ணபிரான். (௪௬)

தரவு கொச்சகக்கலிப்பா.

தண்ணெனுங்கூர்வெண்முறுவற்றண்டளநிரைமுகிழ்க்கும்
வண்ணநிலவுக்கொழுந்தான்மடநாணும்பெண்ணலமும்
உண்ணிறையுநெஞ்சமதொடொருங்குகொடுபோயகலாக்
கண்ணன்றனிறந்தபுலங்காட்டாய்கொல்கழைமுத்தே.

தாளநிரை - முத்துவரிசை, அகலா - நீங்கி, இறந்த - நீங்கிய, கழைமுத்து-மூங் கழைமுத்து, கரும்புமுத்து. (௪௭)

வண்டாயிதழ்குடையவாயவிழ்ந்துசெய்யபொலந்
தண்டாதுறைத்ததடந்தாமரைகண்டுஞ்சுதியால்
கண்டாய்நீயிலையோகொல்களவத்தெங்காதலனை
விண்டாயின்றிலையோதண்விரிநீரக்கொழுஞ்சுனாயே. னை

களவம் - கலவைச்சந்தனம், நீரம் - நீர். (௪௮)

தேம்புசிறுமருங்கொசிக்குஞ்செம்மாந்தகொங்கையெனத்
தேம்படுமந்தீங்கிளவிசிலகிளந்துதோடோய்ந்த
ஆம்பலந்தீங்குழலிசையெம்மாயர்கடம்போரேற்றை
ஆம்பனீயறிதியன்றேயஃதுரையாதிருக்குதியே.

ஒசிக்கும் - ஒடிக்கும், செம்மாந்த - இறுமாந்த - நிமிர்ந்த, தேம் - தேன், கிளவி- சொல், ஆம்பல் - மூங்கில். (௪௯)

மட்டருந்துவாகைபுனைமழலையிசைச்சுரும்பூதி
நெட்டிதழ்த்தேயப்பெரிதுநெறிக்குமிதழ்க்கருநெய்தால்
பட்டமாந்தளிர்தளிர்ப்பப்பண்ணுருங்குழலிசைத்த
கட்டெழிலெங்காளையுருக்காட்டுதற்கென்செய்வேமே.

மட்டு - தேன். (௫௦)

முள்வாய்வெண்சங்குநனிமுரலுமிசைசெவியோர்ந்து
கள்வாய்ச்செங்கழுநீர்நீள்காலனையசெங்கமலத்

துள்வாய்க்கண்டுயில்குருகேயொன் றுமுணர்ந்தாயிலேயே
புள்வாயங்கிடந்தகரும்புயல்கரந்துபோயதுவே.

முரலும் - ஊத்திக்கிற, இடந்த - கிழித்த. (௫௧)

என்றென் றுளம்முருகியிளமரக்காவகத்துழையே
தென்றலெனும்பசுங்கொழுந்துந்தெள் ளுநிலாவெண்மதியும்
கொன் றுநனிகுறைத்திட்டகுறையாவிகொண்டயா
நின் றுநிறைதாமழிந்துநெஞ்சமதுகலுழ்ந்தனரால்.

இளமரக்கா - இளமரச்சோலை. (௫௨)

கலிவிருத்தம்.

தடங்கொடாமரைக்கையாற்றண்ணந்தாரினுன்
பிடுங்கியவரைத்தலைபெய்யுமாரிபோல்
நெடுங்கணீர்முலையுகநின் றுநீணிலம்
கடந்தமாமுகில்செயல்காட்டன்மேயினுர்.

நீணிலம்கடந்த மாமுகில் - கண்ணபிரான். (௫௩)

மைதவழ்நெடுவரைமாரிகாப்பநல்
கொய்துழாய்ப்படலையங்கொண்டலேர்தல்போல்
ஐதெழின்முலைத்தலையழுந்தவேனிலான்
எய்ததாமரைபறித்தேந்துவார்சிலர்.

மைதவழ் - மேகங்கள் தவழ்கின்ற, துழாய்ப்படலையங்கொண்டல்-கண்ணபிரான்

கரியவன்வெண்டுகில்கவர்தல்காட்டுவான்
விரிமலர்ப்பசுந்தொடைவேனின்மன்னவன்
பொருகணைமுகத்தெழுபுகைமுகந்துற
நிரைவளைச்செங்கரநீட்டுவார்சிலர்.

கரியவன் - கண்ணபிரான், வேனில்வன்னவன் - மன்மதன் (௫௪)

தொளைவழியிளநறுச்சொரியுந்தீங்கழை
ஒளிமணிவண்ணனின் றூதுமாறுபோல்
முளைமதிக்கவிகையான்முரியவாங்கிய
வளரிளம்பசுங்கழைவாய்வைப்பார்சிலர்.

கழை - வேய்ங்குழல், கரும்பு, மதிக்கவிகையான் - மன்மதன் (௫௫)

வெஞ்சினவரவெனவெறுத்ததாரின்மேல்
துஞ்சியகளியளித்தொழுதிபாண்செய
நஞ்சுவாய்வழிபடநாகத்தாடிய
அஞ்சனப்புயலினின்றுடுவார்சிலர்.

அளித்தொழுதி - வண்டின் கூட்டம், அஞ்சனப்புயலின் - கண்ணபிரான்போல.

மோட்டிளங்குரும்பைபோன்முகிழ்த்தவெம்முலை
ஆட்டுசெஞ்சாந்திணையள்ளியங்கையால்

பாட்டளித்துளவினும்பருகவாரிவெங்
காட்டழலேந்துதல்காட்டுவார்சிலர்.

செஞ்சரந்தினை - செஞ்சந்தநத்தை. (௫அ)

நனிவரும்பனிமலர்நான்றகூந்தலார்
அனைவருங்குழீஇயிளவன்னநேர்பவர்
வனைவருங்குரிசில்கார்வண்ணங்காட்டிய
துனைவருங்கடும்புனல்யமுனைதுன்னினர்.

நான்ற - தொங்கிய, துனைவு - விரைவு. (௫௯)

இடுமணலெக்கரினிறுமென்சாயலங்
கொடியிடைமடந்தையர்கொய்துழாய்முகில்
மடலவிழ்மலரடிவைப்புநோக்கினர்
கடிகமழ்தாமரைக்கண்களிப்பவே.

துழாய்முகில் - கண்ணபிரான், அடிவைப்பு - அடிச்சுவடு. (௬0)

பூவைமென்முகையவிழ்பூவையன்னவன்
சேவடியழுந்தினதேம்பெய்கோதையோர்
பாவையையெடுத்தனன்படர்கின்றான்கொலென்
றேவுறுபிணையனாரிரங்கியேகினார்.

பூவையன்னவன் - கண்ணபிரான், கோதை - கூந்தல், ஏவுறுபிணை - அம்புபட்ட
பெண்மான். (௬க)

நெட்டிடைகழிதலுநிலாக்குவித்தென
விட்டொளிர்வெண்மணற்குன்றமீமிசை
இட்டிடையொசிதரவெழுந்தவெம்முலை
மட்டவிழ்மலரடிவைப்புநோக்கினார்.

இட்டிடை - சிற்றிடை, ஒசிதர - ஒடிய. (௬உ)

உருவவெண்ணிலாக்கதிருகுத்தமுத்தவெண்
பருமணன்ஞெமரியபனிகொள்பூந்துறைத்
தெருவிதழ்நறுமலர்சிதர்ந்துதாழ்ந்தவை
கருநெறிக்குவளையங்கண்ணிற்கண்டனர்.

ஞெமரிய - படர்ந்த, சிதர்ந்து - சிதறி (௬௩)

பாடல்சால்சிறப்புடைப்பவளவாய்முகில்
தோடவிழ்நறுமலர்சூட்டிப்பாவையோ
டாடியசூழலீதாகுமென்றுநின்
றோடரித்தடங்கண்முத்துறைப்பமாழ்கினார்.

சூழல் - இடம். (௬௪)

தணந்தவரின்னணந்தளர்வுற்றையபொன்
சுணங்கணிவனமுலைசுமந்துபின்செல

மணங்கொளஞ்சாயலம்மதர்வைநோக்கியைப்
புணர்ந்துடன்போயினன்பூவைவண்ணனே.

தணந்தவர் - பிரிந்தவர், சுணங்கு - தேமல். (சுரு)

அல்லிநாண்மலர்புரையஞ்செஞ்சீறடி
மெல்லியனின்னடைவெருவியன்றுகொல்
ஒல்லெனமடவனமொதுங்குமீங்கெனச்
சொல்லினன்புல்லினன்றொடையல்சூட்டினன்.

அல்லி - அகவிதழ். (சுசு)

அரும்பவிழ்நறுமலரலங்கல்சூட்டியும்
மருங்கிறுமென்னவீழ்வரிவண்டோச்சியும்
கரும்புயலளிசெயக்கண்டுசாலவும்
விரும்பினனெனக்களிவிளைஇவியந்தனள்.

அலங்கல் - மாலை, மருங்கு - இடை, இறும் - ஒடியும், கரும்புயல்-கண்ணபிரான்.
அளிசெல - கிருபைசெய்ய. (சுஎ)

நடத்தலோவரிதினிநம்பிவேண்டுழி
எடுத்தெனையேகுவாயெனமிழற்றலும்
சுடர்த்தொடிமடநலாய்தோளினேறென
வடித்தபூந்துளவினன்வழங்கினனரோ.

மிழற்றலும் - கொஞ்சிப்பேசுதலும். (சுஅ)

இந்நிலமடவரலேறுவானெழும்
அந்நிலையாடல்வாளரவினடிய
கன்னியந்துளவினன்கரப்பக்காண்கலள்
பொன்னலர்கோதையும்புலம்புற்றேங்கினள்.

காப்ப - ஒளிக்க. (சுகூ)

வேறு.

வழிந்தநறைதோய்ந்தவிளவாடைவரவொல்கா
விழுந்தவிளவான்மதிசெய்வெங்கதிரின்வாடும்
எழுந்தளருமென்மெலவியங்கியிடைதேடும்
அழுந்தமியளூற்றதுயரார்புகல்வரம்மா.

ஒல்கா - அசைந்து, நறை - வாசனை. (எ0)

அரக்கெறியுநீலமலரன்னவிழிநல்லார்
புரிக்குழல்புலம்புறுபுலத்திடையிறுத்தார்
மருக்கமழும்வல்லிபுரைமாதிவளுழுள்ளம்
செருக்கினள்கொலென்றுதமசிந்தைநினைவுற்றார்.

அரக்கு - செந்நிறம், இறுத்தார் - தங்கினர், (எக)

ஐயனெவனுற்றனனணங்கெனவிறைஞ்சிப்
பொய்யளிபுரிந்துழலைபுல்லியிவணெய்தா

வெய்யனெனையுந்தனிவிடுத்தனனெனத்தன்
மையுலவுசெய்யவிழிமாரியுகநின்றாள்.

பொய்யளி - பொய்யன்பு. (எஉ)

வண்ணமதிகொண்டுளமயங்கிமெலிகின்றேம்
கண்ணினெதிர்நின்வதனகாந்தியுமுறாதோ
அண்ணன்மதவேழமனையாயெனவிரங்கிப்
பண்ணின்மொழிவஞ்சியர்கள்பாடல்பயில்வுற்றார்.

அண்ணல் - பெருமை, மதவேழம் - மதயானை. (எங)

நிறங்குலவுநித்திலநிரைத்தனையமூரல்
பிறங்குநிலவாலுருகும்பேதையரையெல்லாம்
வெறுங்கனலிறைக்குநெடுவெண்ணிலவிளித்தல்
அறங்கொலரசேயமுதமேயுலகளிப்பாய்.

நித்திலம் - முத்து, விளித்தல் - அழித்தல். (எச)

வண்ணமுறுதாமரைமலர்ந்தனையவாநின்
கண்வலையகப்படுதல்கண்ணநினையாமே
அண்ணன்மதன்விற்பொழியுமம்புயமலைப்பத்
தண்மலர்வனத்திடைதணத்தறகைமைத்தோ.

அம்புயம் - தாமரைமலர், அலைப்ப - வருத்த, தணத்தல் - பிரிதல். (எரு)

அறந்தலைமணந்தபுயலேயருமருந்தே
மறந்தலைமணந்துபொருமாரனமர்தன்னால்
இறந்துபடுமாவியிறைசெல்லினெனவேங்கிப்
பிறங்கினரவ்வல்லிபுரைபேதையரயர்ந்தார்.

தலைமணந்த-கூடின, மறம் - கோவம், இறைசெல்லின்-கொஞ்சநேரங்கழிந்தால்.

தேனுமமுதும்பொருவுசின்மழலைநல்லார்
மானுமெறிவேலுநிகர்மைவிழிகளிப்ப
வேனிலரசாளனும்வியக்குமுருவுற்ற
நீனிறமுகுந்தனெதிர்நின்றனனுவந்தே.

பொருவு - நிகர்த்த, வேனிலரசாளன் - மன்மதன். (எஎ)

கண்டனர்வியந்தனர்களித்தனர்துளித்தேன்
உண்டவரிவண்டினினமொத்தனர்கருங்கண்
தெண்டிரைமுகத்தெழுசெழும்பரிதிகண்ட
புண்டரிகமென்னவெழில்பூத்தனர்முகங்கள்.

திரைமுகத்தெழு - கடலிற்றோற்றுகிற. (எஅ)

மன்னியொருவர்க்கொருவனாகிமணிவண்ணன்
புன்னைமணநாறுமுயர்பூம்புளினமீதும்

கன்னிநறுஞாழல்கழழ்காவுமிருகைகோத்
தன்னநடைமாதருடனாடினன்மகிழ்ந்தே.

புளினம் - மணற்குன்று, ஞாழல் - குங்குமமரம். (எகூ)

பொடித்தபிலைற்போலவெழில்பூத்தநுதனுண்வேர்
துடைத்தணியணிந்துமலர்சூட்டிமடவாரோ
டடுத்துநெடுமால்குரவையாடியதொர்தோற்றம்
எடுத்துநவிலுந்திறனெவர்க்குளதுமன்றே.

பொடித்த - அரும்பின, நுதல் - நெற்றி. (அ0)

கலிநிலைத்துறை.

மைக்கருநகண்ணார்மாணெழிற்புணரியிற்பொடித்த
மொக்குளன்னவெம்முலைமுகம்பொறித்தசெஞ்சாந்தும்
நக்கநாண்மலர்நறியசெஞ்சுண்ணமுமாடிச்
செக்கர்வானெனச்சிறந்தனன்பாற்கடற்சேர்ப்பன்.

புணரி - கடல், மொக்குள் - குமிழி, செக்கர்வான் - செவ்வானம், பாற்கடற்சேர்ப்பன் - கண்ணபிரான். (அக)

குரவையாடியுங்குளிர்நதியாடியுங்கோதை
அருவியாடியுமகன்சுனையாடியுங்கொண்டற்
கருவியாடியகாவினுங்கடிமணற்றடத்தும்
மருவியாடினன்மாதர்தங்குழாத்தொடுமாயன்.

கோதை - வரிசை, கருவி - துணைக்காரணம், கொண்டல் - மேகம். (அஉ)

பலரிறைஞ்சினர்பரவுறுபச்சைமான்றடந்தேர்
அலரிமண்டிலமதிர்திரைக்கடன்முகட்டரும்பு
புலரிமுல்லையம்புலத்துவந்தடைந்தனன்புனிதன்
மலரிவர்ந்தபைங்கூந்தலார்மனையகம்படர.

பச்சைமான் - பச்சைக்குதிரை, அலரிமண்டிலம் - சூரியமண்டலம். (அங)

நெறிந்துநெய்த்திருணேமிமால்வரையிறந்தேட்டச்
செறிந்தகார்க்குழற்சிறுநுதற்கோவியரெல்லாம்
நறுந்துழாய்முகினின்றுழிநண்ணியுந்தம்பால்
உறைந்துளானெனத்தோன்றினர்காதலர்க்கொருங்கே.

நேமிமால்வரை - சக்ரவாளகிரி. (அச)

எனலுமன்னவனென்னைகொலறந்தலைமணப்பப்
பனியிருங்கடற்பாரகம்புரப்பவந்துதித்தோன்
அனையவாய்ச்சியராய்நலநுகர்ந்ததோரறங்கொல்
முனைவவென்றலுமூரல்வாண்முகத்தினன்மொழியும்

புரப்ப - காக்க, நலம் - இன்பம், முனைவ - முனிவனே, மூரல் - சிரிப்பு. (அரு)

அழலனைத்தையுநுகர்ந்திலதேகொலொள்ளழலின்
எழில்விரிந்தசெஞ்சடைமிசையின்னமுதுறைக்கும்
குழவிவெண்பிறைக்கொழுங்கொழுந்தணிதருவெவ்வாய்
மழுவலானன்றிப்பிறர்விடமாந்தினுய்குவரோ.

மழுவலான் - சிவன், விடமாந்தின் - நஞ்சுண்டால் (௮௬)

இழைப்பன்யாவையுமிறையவனிறையவனொழுகும்
ஒழுக்கம்யாவருமொழுகமேற்கொள்ளுகலொல்லா
விழுச்சிறப்புடையிறையவன்விதியினில்விதித்த
வழக்கினிற்பதேயறனெனப்பழமறைவழங்கும்

ஒல்லா - இயலாது, இழைப்பன் - செய்வான். (௮௭)

நிறுததியாரையுநெறியினினெகிழ்ந்துநண்மிடறல்
உறைத்ததாமரையிறையவற்குருத்தடர்விடைமேல்
இறைக்குநாடருமிறைவனுமெய்ங்கணுநிறைந்த
அறத்தின்வித்தினுக்கறமெவன்பாவமெவ்வம்மா.

தாமரையிறையவற்கு - பிரமனுக்கு, விடைமேல் இறைக்கு - சிவனுக்கு. (௮௮)

தோய்ந்துந்தோய்விலான்றுகளிலாமாணியொழுக்கம்
எய்ந்துளான்றனியிறையவனுயிழையவர்க்கு
நீந்தலில்லதோர்நீணலநெடிதுதந்தனன்றற்
சார்ந்துளார்க்கறனுறியதரலவன்வழக்கே.

மாணி - பிரமசாரி, ஆயிழையவர் - மாதர். (௮௯)

கோவியரைமணந்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௪௪௯.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்



பதின்மூன்றாவது

## சங்கசூடனைக்கொன்ற வத்தியாயம்.

கேட்டிமன்னவகேழ்கிளரிளவெயில்கிளைக்கும்
சூட்டராவணைதுயின்றவன்முதலினோர்தொடர
வேட்டுநந்தகோன்விழாவயராம்பிகாவனத்து
நாட்டமூன்றுடைநம்பனையிறைஞ்சுவானடந்தான்.

வேட்டு - விரும்பி, விழாவயர் - திருவிழாவைச்செய்கிற, நம்பன் - சிவன். (௧)

ஆறறிந்தவவ்வாயர்கோனடைந்தனன்றருந்தா
தாறெனப்பகர்தொழிலுடையந்தணர்க்கெல்லாம்

ஆறெனப்படுமஞ்சுவையடிசிலூட்டினனால்
ஆறெனப்பொழிநெய்யொடுபால்பொருதலைப்ப.

ஆயர்கோன் - நந்தன், அடிசில் - அன்னம், ஆறென - நதிபோல. (உ)

வள்ளிதழ்த்தொடைநந்தகோன்வளவாய்முளரி
வெள்ளிமண்டபத்துறைபவள்பெயரினல்விளங்கும்
தெள்ளுநீம்புனற்றிருநதிருடைந்தனன்மலர்தூஉய்ப்
பிள்ளைவெண்மதிபிறங்குசெஞ்சடையவற்பணிந்தான்.

முளரிவெள்ளி மண்டபத்துறைபவள் பெயரினல் விளங்கும் தெள்ளுநீம்புனற் றிருநதி - சரசுவதிநதி. (௩)

அங்கண்மாநிலம்விளங்குறநமதான்றலாலளியால்
பொங்குபல்கலைநமைதலாற்புகழ்நிலாவுறலால்
திங்களாமெனத்திகழ்தருஉநந்தகோன்றனைக்
கங்குல்வாயொருகட்செவிவிழுங்கியதன்றே

அளி - கிருபை, கட்செவி - பாம்பு. (௪)

துயிலுமெல்லையின்விழுங்குறுசுடுசினப்பகுவாய்
வெயின்மணிக்கொடுஞ்சுடிகைவாளரவினைவெள்ளை
அயிலெயிற்றுவாளரவினின்றுடியசெங்கட்
புயல்கருங்கடற்புவிபொதிதாளினெற்றினனால்

எல்லை - பொழுது, வெள்ளையயிலெயிற்றுவாளரவு - காளியன், செங்கட்புயல்-கண்ணபிரான். (ரு)

கஞ்சநாண்மலர்க்கண்ணினன்கடற்புவிகவைஇய
அஞ்செஞ்சீறடிபடுதலினரவுருவகலா
மஞ்சுகொண்டொளிர்மின்னெனமணிமுடியிமைப்ப
விஞ்சைமன்னவனுதலுநோக்கினன்வியந்தான.

கஞ்சநாண்மலர்க்கண்ணினன் - கண்ணபிரான், அகலா - நீங்கி. (சா)

ஆரைநீயெனவண்ணனின்வலம்படுதிகிரிப்
பேரினேனொருவிஞ்சையன்பெருந்தவமுனிவர்
ஏரிலாரெனவெள்ளினனகைத்தனனிதற்குச்
சார்கவெவ்வராவுருவெனவாங்கவர்சவித்தார்.

ஏரிலார் - அழகில்லாதவர், எள்ளினன் - இகழ்ந்து. (எ)

மன்னுவெஞ்சினவாலெயிற்றரவினதுருவம்
பின்னல்வெண்டிரைப்பெருகுமந்தாகினிபூத்த
பொன்னந்தாமரைப்பூங்கழல்படுதலிற்றீர்ந்தேன்
அன்னமாய்மறையறைந்துளாயெனத்தொழுதகன்றான்

மந்தாகினி - ஆகாயகங்கை. (அ)

மருப்பிளம்பிறைவாலெயிற்றரவுநாண்கொளுவு
பொருப்புவில்லினற்புரஞ்சுடுமுக்கண்வானவனை

விருப்பினுற்றெழுதியாவரும்விழாக்கழிவழிநாள்
அருப்புமுல்லையம்புலத்திடையினிதுவந்தடைந்தார்.

முக்கண்வானவன் - சிவபிரான், வழிநாள் - பிற்றைநாள், முல்லையம்புலம் - முல்லைநிலம். (க)

கலிவிருத்தம்

அள்ளிருட்படலமள்ளிவிழுங்கும்
வெள்ளிவெண்ணிலவுவிண்ணெழுகாலைக்
கள்ளுண்வண்டுதுயில்காவகமேவி
வள்ளல்வெயிலைவழுத்தனன்மன்னே.

இருட்படலம் - இருட்கூட்டம், காவகம் - சோலையிடம், வள்ளல்-கண்ணபிரான்.

செம்மல்வெயிலைசெவிப்படமோடும்
அம்மெலோதியரகங்களிகூர
கைம்முகிற்குமகிழ்மாமயில்போலக்
கொய்ம்மலர்ப்பொழில்குறுகினர்சென்றார்.

செம்மல் - கண்ணபிரான், வெயிலை - வெய்ங்குழல் பாசை, மெல்லோதியர் - மெல்லிய கூந்தலையுடையவர் (கோவியர்.) (கக)

அண்ணலம்பரிதிகண்டலர்கின்ற
வண்ணவான்முளரிபோல்வதனங்கள்
வெண்ணிலாவினிடைவிட்டுவிளங்கக்
கண்ணனின்றநிலைகண்டுகளித்தார்.

பரிதி - சூரியன், முளரி - தாமரை (கஉ)

மங்குல்கண்படுவனத்திடைமேய
கொங்குடைந்தொழுகுகோதையரெல்லாம்
அங்குடைந்திடவடைந்துதுரந்தான்
சங்கசூடனெனுமோர்தறுகண்ணன்.

கண்படு - தூங்குகின்ற, துரந்தன் - துரத்தினுன், தறுகணன் - கொடியவன்.

மின்றிகழ்ந்தகருமேகநிறத்தோன்
சென்றெதிர்ந்துவிழிசென்றழல்கால
நின்றதீயவனிறத்தினிலெற்றிக்
கொன்றுசென்னிமணிகொண்டனன்மாதோ.

நிறத்தினில் - மார்பில், சென்னிமணி — சிகாமணி. (கச)

மேயதோகையிளமென்மயிலன்ன
சாயலார்முலைதழீஇவிளையாடி
மாயன்வைகறையில்வண்டுளர்தண்டார்
ஆயர்பாடியிலடைந்தனன்மன்னே.

வைகறையில் - விடியற்காலத்தில். (கரு)

நிலம்புரக்குமுகினித்திலமென்ன
விலங்கிவில்லுமிழுமேனியினூற்கு
வலங்கொள்செங்கதிரின்மல்கிருணூறி
இலங்குசெக்கர்மணியீந்தனனன்றே.

நித்திலமென்ன விலங்கிவில்லுமிழுமேனியினூற்கு - பலராமனுக்கு. (கசு)

ரங்கரூடனைக்கொன்ற வத்தியாயர் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—சகூ௫.

ஸ்ரீ கிருஷ்ண சகாயம்.

---

## கசு-ஆவது ஸ்ரீ நாரதர் கஞ்சனோடுரைத்த வத்தியாயம்.

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

குரவெலாம்வெருவமுருகுகொப்புளித்துக்குழன்றிடைநெறித்தபூங்குழலார்
அரவெலாமறுகவயிலெயிற்றரவினுடியகூத்தனோடாடி
இரவெலாங்கதிர்வாணிலாக்குவித்தென்னவிடுமணற்குன்றமுங்காவும்
மருவுலாமுல்லைவிரிந்துமட்டுயிர்க்குமாதலிப்பந்தரும்பயின்றார்.

முருகு - தேன், குழன்று - சுருண்டு, மறுக - மயங்க. (க)

அரந்தினப்படுபொனரும்பிளங்கொங்கை யாச்சியர்பகர்பொழுதெல்லாம்
திருந்தெழில்பெருகியலையெறிதிங்கட்டிருமுகஞ்சிறிநுடங்கோட்டி
விரும்பெழிற்செங்கைவிரலுளைப்பொதிந்தும்விடுத்துநல்வேயிசைவடிப்போன்
கருங்கொடிப்புருவச்செயலும்வெண்ணகையுங்கருதினர்நெஞ்சகங்கனிவார்.

பொதிந்து – மூடி, விடுத்து - திறந்து, வேயிசைவடிப்போன் - கண்ணபிரான்.

பழமறைக்கொழுந்துசெழுமலரவனும்பாசிழைபாகனுமருளக்
கழையிசைவடித்தல்கருங்குயில்கேட்டுக்களிக்குமேசுரும்புகண்படுமே
உழையுழைபரந்துநோக்குமேயென்றுவோடரித்தடங்கண்முத்துறைப்ப
எழுதுபொற்பாவையனையவரேக்கற்றிருத்தலாரெடுத்தனரிசைப்பார்.

பழமறைக்கொழுந்து - கண்ணபிரான், பாசிழைபாகன் - சிவன். (உ)

நீனிறநெடியோனினநிரைமேய்த்துநீல்யாற்றடைகரைநிவந்த
பானிலாச்சொரியும்படுமணலெக்கர்ப்பரப்பினின்றுடுமோர்காலைக்
கானிலங்கீறிவான்மிசையுயர்த்துக்கதிர்மணிமருப்பிடைநோக்கி
ஆனிளவேறுயடுசமர்க்கெழுந்தானசனியேறென்னவோரவுணன்.

வான்மிசையுயர்த்து-வாலைமேலேதூக்கி, ஆனிளவேறுய்-இளங்காளையெருதாகி.

தீக்கனன்றெழுகுசெங்கண்வெள்ளேறுதிருகுவெஞ்சினந்தலைக்கொண்டு
தாக்குவானடைதன்முருகவிழ்செய்யதாமரைக்கண்ணினுனோக்கி

மாக்கடல்வேலிநெடுநிலப்பாரப்போர்மரைமலரடியினுட்பொதிந்தோன்
தூக்கினூறடிமுன்சென்றவீழ்த்தினனூ னுதிமருப்பங்கைகொண்டடர்த்தே.

வெள்ளேறு - வெள்விடை, நுதி - நுனி. (௫)

விரிநிலங்கிழியவீழ்ந்தெழுந்தழன்றவிண்டொடுநெடுமொருனுங்க
உருமெனவுரறியுடன்றுமேனடந்தவுருகெழுசெவ்விமால்விடையைச்
சொரிபசுங்குருதியாறலைத்தொழுகத்துளக்கில்கூர்ங்கோடுறப்பற்றி
அருமணிகடகக்கையினுற்சுற்றிநந்தியும்வெருக்கொளவறைந்தான்.

துளக்கில் - அசையாத, கூர்ங்கோடு - கூரியகொம்பு (௬)

எற்றமருழந்தவேற்றுவாளவுணனிறந்துபாடெய்தலுமுவந்து
போற்றிசைத்தமரர்புதுமதுத்துளிக்கும்பூமழைபொழிந்தனரதம்
ஊற்றிருந்தொழுகுபாடல்யாழ்முனிவனூழிவெங்கனல்விழியொழுகக்
காற்றெடுத்தெறியுந்தழைசெவிப்புழைக்கைக்களிற்றுவெங்கஞ்சன்மாட்டடைந்தான்.

அமர் - போர், யாழ்முனிவன் - நாரதன் (௭)

வேறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்,

மன்னநீயறிந்திலாயேமதி நுதலசோதைதயின்ற
கன்னிநீயடர்த்தகன்னிகாரிருட்பிழம்புவாரிப்
பின்னிவிட்டன்னவைம்பாற்றேவகிபெற்றதோன்றல்
மின்னுங்கொளிநால்கூர்வாள்விறல்கெழுகண்ணனன்றே.

ஐம்பால் - ஐவகைமயிர் முடி, அளை முடி, கொண்டை, சுருள், குழல், பனிச்சை யென்பன. அவற்றுள் மயிரையுச்சியில் முடித்தல் முடி, பக்கத்தில் முடித்தல் கொண்டை. பின்னே-செருகுதல் சுருள், சுருட்டி முடித்தல் குழல், பின்னிவிடுதல்-பனிச்சை.

மற்றுனேயொளிர்தாரம்மமறந்தனனின்னுமொன்று
சொற்றவகேட்டிவெள்ளிகுன்றெனப்பணைத்ததிண்டோள்
விற்றிறலிராமனென்பான்வெள்வளையுரோகிணிப்பேர்ப்
பொற்றொடிவயிறுவாய்த்தபெரங்கெழிற்புதல்வனுமால்.

பணைத்த - பருதத. (௯)

உடைத்திளந்தேறல்பாயவூதுவணடுழுதுதாது
மடுத்துணுமலங்கன்மாலைமார்பவாய்ப்பாடிமற்றுங்
கடுத்தனர்வளராநின்றவரசிளங்குமார்கண்டாய்
விடுத்தவாளவுணராவிவீட்டினுரொன்றுசொற்றூன்

தேறல் - தேன், அலங்கல் - அசைதலையுடைய (௧௦)

அத்திறங்கேட்டலோடுமழலுருகடைக்கண்சேப்ப
முத்தவெண்முறுவனுறமுரிவுறப்புருவம்வல்லே
மைத்துனன்றன்னைக்கொல்வான்வன்றிறற்கஞ்சன்சீறித்
தத்துவெங்குருதியொள்வாடடறுநீஇடந்தானுங்கே.

உரு - சிந்துகிற, சேப்ப - சிவக்க, தடறு - உறை. (௧௧)

மலைக்கும்வெண்கோட்டதாகிமலைமதம்பட்டாலன்ன
கொலைக்களிற்றுழவகொல்லல்கொல்லலீங்கிவனையென்று
விலக்கியமகதிநல்யாழ்வித்தகன்கண்ணனோடவ்
வலப்படையவனைக்கொல்வானமைகவென்றேகினுல்.

மலைக்கும் - போர்செய்கிற, கொல்லல் - கொல்லாதை, அலப்படையவன் - பலராமன். (கஉ)

தாதுகமழலைவண்டுதளையவிழ்த்துறங்குமந்தண்
போதுலாங்தெரியன்மாலைபுனைவசுதேவனோடு
தீதறுசிறப்புவாய்ந்தசெழுமறைக்கொழுந்தையீன்ற
மாதவக்கொழுந்துதன்னைவன்றளைப்படுத்தல்செய்தான்.

மறைக்கொழுந்தை - கண்ணபிரானை, மாதவக்கொழுந்து - தேவகி. (கங)

பூசுறுபரிதிபோலப்பொன்னணிந்திலகுமார்பன்
பாசிலைப்படலைமாலைப்பங்கயக்கண்ணனோடு
மாசறுதிங்கண்மேனிவள்ளலையடுகவென்றுக்
கேசியையழல்வெஞ்சீற்றங்கிளர்ந்தெழவேவினுல்.

பாசிலை - பச்சிலை, திங்கள்மேனி வள்ளல் - பலராமன். (கச)

இழைக்கவில்வேள்விமற்றீங்கியற்றுகமல்லர்சாலை
மழைக்கடாஞ்செருக்கித்துஞ்சுமணிநெடுங்கோட்டுநால்வாய்ப்
புழைக்கைவெங்களிற்றுச்சாலைபொன்னெடுவாயில்சேர்க்க
அழைக்கமற்பழுத்ததிண்டோளரசர்தங்குழுவையென்றான்.

மல்லர்சாலை - மற்போர் வீரர்சாலை, அரசர்தங் குழு - ராஜசமூஹம். (கரு)

மண்ணெழுவனையதோளான்மல்லர்தம்வதனநோக்கித்
துண்ணெனப்பொருதுநுங்கடோள்வலியொருங்குகாட்டி
வெண்மடற்கரியபோந்தைமீமிசையுயர்த்தோனோடும்
கண்ணனைப்படுத்திரென்றுக்கண்ணறக்கழறினுல்.

போந்தை மீமிசையுயர்த்தோன் - பலராமன். (கசு)

கூற்றுறழ்குருதிக்கோட்டுக்குஞ்சரப்பாகன்றன்னைச்
சீற்றவாளரசனோக்கிச்செஞ்சிலைவேள்விக்கெய்தும்
பாற்கடல்வண்ணனோடும்பசும்புயல்வண்ணன்றன்மேல்
காற்றெனக்களிறுதூண்டிக்காய்கெனப்பணித்தான்மாதோ.

குஞ்சரப்பாகன் - யானைப்பாகன், பாற்கடல் வண்ணன் - பலராமன். (கஎ)

சீந்துதீமுகத்தவைவேற்றெவ்வடுதானைவேந்தன்
காந்திநிபுதல்வன்றன்னைக்கனன்றகட்கடையினோக்கிப்
பாந்தண்மேலாடினானைப்பாணிறவண்ணனோடு
கூந்தன்மான்றேரின்வல்லேகொணர்கெனக்குறித்தான்மன்னே

தெவ்வடு - பகைவரைக் கொல்லுகிற, காந்திநி புதல்வன் - அக்ரூரன். (கஅ)

அலிருளையுதறிவானமலக்கணுற்றிரியவார்த்துப்
புலிமுதுகுளுக்கப்பாய்ந்துபூந்துழாய்க்கொண்டன்முன்னர்க்
கலிகுளம்பபறியுந்தூளிகருங்கடலூர்ப்பமற்றுங்
கிவுளியாய்கேசியென்னுமெறுழ்வலியவுணனேற்றான்.

அலக்கன்-துன்பம்-இவுளி-குதிரை-உளை-புறமயிர். (௧௯)

விழுங்குவான்போலச்சாலவிரிந்ததீவாயினூடு
பிழிந்துபேயாவியுண்டோன்பிறங்கும்பாற்றொடிக்கைநீட்டி
வழிந்தழகொழுகுசெங்கைவளர்த்தனன்வளர்ப்பவாகம்
கிழிந்துவாம்புரவியாயகேசிமாண்டுயிர்நீத்தானல்.

பேயாவியுண்டோன் - கண்ணபிரான், ஆகம் - மார்பு (௨௦)

பண்ணுறுமகதிநல்யாழ்ப்பழமறைமுனியாங்கெய்தி
அண்ணலங்களிநல்யானையடுதிறற்கஞ்சனுதி
நண்ணியோர்மாய்வதின்றுநாமினிக்காண்குமென்னுக
கண்ணனைப்பரவிநெஞ்சங்களிகொளவேகலுற்றான்

மகதியாழ்ப்பழமறை முனி - நாரதன், காண்கும் - பார்ப்போம் (௨௧)

ஸ்ரீ நாரதர் கஞ்சனோடுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—சஅ௬

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்

---

## பதினைந்தாவது
## அக்குரூரன்வந்த வத்தியாயம்.



கலிவிருத்தம்.

கள்வர்சிலராச்சிலர்கள்காக்குநர்களாகத
துள்ளுமறியாச்சிலர்துளங்குபணிமாலை
வெள்ளருவிவெற்பின்விளையாடினர்விரிந்த
அள்ளிலையபைந்துளவணிந்தமுகிலண்பா.

துளவணிந்த முகில் - கண்ணபிரான், மறியா - ஆடுகளாக. (௧)

உந்துதிரைநீருலகுமும்பருநடுங்கும்
வெந்திறன்மயன்புதல்வன்வேற்படைவியோமன்
அந்தளிரலங்கல்புனையாயர்மகனாகி
வந்துவிளையாடினன்வரைத்தலையிவர்ந்தே.

இவர்ந்து - ஏறி, வரைத்தலை - மலையுச்சியில் (௨)

காழகவுடைச்சிறியகள்வனெனநண்ணு
மேழகமெனக்குலவுமெல்லிணர்நறுந்தார்

வாழியெழின்மைந்தர்தமைவவ்வினனடந்தான்
தாழ்புயல்கிழித்துயர்தடங்கிரிமுழைஞ்சின்.

காழகவுடை - ஆடையுடுத்த, மேழகம் - ஆடு. (௩)

கொல்லியவடைந்ததுகுறிப்பினிலறிந்தான்
மல்லடுபுயத்தவனைமாய்த்துமணிவண்ணன்
கல்வளையகத்திளையர்கண்ணுறநடந்தான்
மெல்லமருண்மாலைவரமேதருநிரைப்பின்.

கொல்லிய - கொல்ல, கல்வளை - மலைக்குகை, நிரைப்பின் - பசுக்கூட்டத்தின் பின்னே. (௪)

கநகைவளநாடுடையகாந்தினிபயந்தோன்
அங்கணிலமாதுபுணரண்ணலையழைப்பான்
பொங்குளைவயப்புரவிபூண்டதொருதேர்மேல்
செங்கதிரெழக்கடிதுசென்றனனெழுந்தான்.

காந்தினி பயந்தோன் - அக்ரூரன். (௫)

சேணுலகில்வாழுமுயர்தேவருளமாலும
மாணெழிலுடைககமலைமன்னவனையின்னே
காணலுறுமேநமதுகட்புலமுமென்று
யாணர்நறுமுல்லைநிலமெய்தினன்விழைந்தே.

மாலும் - மயங்குகிற, கமலைமன்னவனை - கண்ணபிரானை, கட்புலம் - சக்ஷுரிந்திரியம். (௬)

நலங்கிளருமாளியினடந்தவெழினம்பன்
இளங்கெழிலதாமரையொடேரெழில்கிளைக்கும
வலம்புரிபொறித்தவடிவைப்பினெழில்காணுக்
கலந்தனன்மகிழ்ச்சியிருகண்மலர்குளிப்ப.

ஆளியின் - சிங்கம் போல, நம்பன் - கண்ணபிரான், தாமரை - பத்மரேகை, வலம்புரி - சங்கரேகை, அடிவைப்பு - அடிச்சுவடு. (௭)

மேதகுசிறப்புடையவிண்ணவர்பசும்பொன்
கோதைபுனைநீண்மகுடகோடிமிடைகின்ற
ஆதியிருசெங்கமலமன்னவடிவைப்பின்
தாதுகவிரிந்துகமழ்தாமமுடிதாழ்த்தான்.

ஆதி - கண்ணபிரான், தாழ்த்தான் - வளைத்தான். (௮)

மீளிமையுடைக்கனகன்வெஞ்சமரடர்கக
வாளரியுருப்புணருமல்லல்வரைமார்பன்
தாளகமலத்தழகுதந்தவிருபொற்றாட்
ளேியில்விழுந்தொழுதெழுங்களிதுளங்கும்.

மீளிமை - வீரத்தன்மை, கனகன் - இரணியன், அரி - சிங்கம், மல்லல்-வளம்.

வே று.

இத்திறமகிழ்சிறந்தெறிக்குஞ்செங்கதிர்
அத்தமால்வரைசெலவரவின்பைத்தலைக
கொத்தின்மேலாடியகுரிசில்சேவடி
வைத்தொளிர்நீணெறிவல்லையேகினான்

செங்கதிர் - சூரியன், அரவின் - காளியனது, குரிசில் - கண்ணபிரான். (௧௦)

துளங்கொளிச்சிலநாண்டுகிலுடுத்தநல்
இளங்களிறன்னவவ்விராமனோடுற
விளங்குசெம்பொற்றுகின்மிளிரச்சார்த்திய
களங்கனிவண்ணனைக்கண்டிறைஞ்சினை

களங்கனிவண்ணன் - கண்ணபிரான் (௧௧)

அல்லியந்தாமரையனையசேவடி
எல்லையிலுவகையினிறைஞ்சுவான்றனை
முல்லையந்தாரணிமுழவுத்தோளினர்
புல்லினருடன்கொடுபோயினாரரோ.

முழவு - மத்தளம் (௧௨)

விருந்தினிதூட்டினாவிரிதருவண்டுசா
தருந்துதார்மாலையுமருவிமாலைதாழ்
திருந்துதண்டமிழ்வரைத்தெய்வச்சாந்தமும்
நரந்தமுநல்கினர்நன்றுவப்பவே.

தமிழ்வரை — பொதியமலை. (௧௩)

கனைகழற்காலவேற்கஞ்சன்வாழ்தலால
இனிதிருந்தாய்கொலென்றெநயன்கூறுகேனை
வினையினேனெனச்சிலவிளம்பினான்புது
நனைவிரிபூந்தொடைநந்தகோபனே.

கனைகழல் - ஒலிக்கின்ற வீரக்கழல். (௧௪)

வெந்திறலாழியான்வேறுகொணடிருந
தெந்தையுமாயுமற்றென்பொருட்டினால்
நொந்ததையல்லதுறுவல்வதுண்டுகொல்
வந்ததென்கூறெனவழங்கினான்ரோ

ஆழியான் - கண்ணபிரான். (௧௫)

நல்லிசைநாரதனவின்றமாற்றமும்
கொல்சினமன்னவன்கொற்றவேந்தனை
வல்லியிற்படுத்ததும்வந்தவண்ணமும்
சொல்லினன்மல்லடுதோளினாற்கரோ .

வல்லியிற் படுத்தது - விலங்குபூட்டினது. (௧௬)

அரசுவெஞ்சிலைமகமாற்றுகின்றனன்
வருகவென்றழைத்தனன்வல்லைசேறுமென்
றுரைசெய்தானந்தனுக்கோங்குகற்பகத்
தருமுதல்பிடுங்குகைத்தடக்கைமாயனே.

சிலைமகம் - தநுர்யாகம், சேறும் - செலவோம். (கஎ)

வண்டுசூழ்கானகநாடன்வல்லையே
தெண்டிரையமுதினைச்சிரிக்குந்தீஞ்சுவை
வெண்டயிர்நறுநெய்பால்விரைசெலப்பெரும்
பண்டியிற்பரப்பினன்படர்தன்மேயினன்.

விரைசெல - மணம்வீச, படர்தல் - போதல் (கஅ)

மழகதிரெழுதலுமழலைவண்டுணப்
பொழிமதுக்கமழ்மலர்ப்பூவைகொண்கனை
எழுகவென்றிசைத்தனனிளநிலாச்சொரி
குழைமுகக்காந்தினிகுமரனென்பவே.

மலர்ப்பூவைகொண்கனை - கண்ணபிரானை (கசு)

செய்யபொற்கொடிஞ்சியந்தேரின்மீமிசை
ஐயதாரண்ணலையழைப்பத்தோன்றினன்
வெய்யவனளியிலன்வெங்கணனெனை
மையகட்கோவியர்மறுகினாரரோ.

ஐய - அழகிய, அளியிலன் - தயையில்லாதவன், மறுகினர் - மயங்கினர். (உ0)

வளைக்கையீர்வருநதன்மின்வழியுமும்மதக்
களிற்றடுகஞ்சனைக்கண்டுமீடுமென்
றளிக்குலமரற்றுதாரண்ணன்மாதரைத
தெளித்தனன்கதிர்மணித்தேர்சென்றேறினன்.

மீடும் - மீள்வோம். (உக)

நரலைமாநிலம்புகழ்நந்தகோபனும்
எரிமணிக்குன்றிரண்டென்னவேந்துதோள்
ஒருகுழையொருவனுமுடனிவர்ந்தனர்
விரைசெலப்பரிபுணர்வியன்பொற்றேரரோ.

நரலை - கடல், ஒருகுழையொருவன், - பலராமன் (உஉ)

மவ்வலங்கருங்குழன்மாதர்நெஞ்சமும்
நவ்விமென்றேக்கமுந்தொடரநன்பகல்
பவ்வவெண்டிரைத்துயில்பச்சைமாமுகில்
கவ்வைநீர்யமுனையங்கரைசென்றெய்தினன்.

நவ்வி - மான், பச்சைமாமுகில் - கண்ணபிரான். (உங)

முடம்படுமுள்ளிலைமுடங்கல்மூரிசால்
கடம்படுகரிமருப்பீன்றுகட்கமழ்

தடந்துறையமுனையந்தண்ணந்தீம்புனல்
படிந்தனன்காந்தினிபயந்ததோன்றலே

முடங்கல் - தாழை, கரிமருப்பு - யானைக்கொம்பு. (தாழங்குருத்து), காந்தினிப யந்த தோன்றல் - அக்ரூரன். (௨௪)

தூம்புடையெயிற்றவிர்சுடிகைப்பாழிவாய்ப்
பாம்பின்வெம்பஃறலைபனிப்பவாடிநின்
றாம்பலந்தீங்குழலிசைக்குமண்ணலைப்
பூம்புனல்குடைகுவான்புனலுட்கண்டனன்.

தூம்பு - தொளை, பனிப்ப - நடுங்க, ஆம்பல் - மூங்கில் (௨௫)

ஒழுதீம்புனலிடையுற்றதென்னெனாச்
செழுமணிக்கொடிஞ்சியந்தேரைநோக்குமால்
எழில்கனிந்தொழுகியவெழிலிவண்ணனோர்
பொழிபொலந்தேரினும்பொலியக்காணுமால்.

எழிலிவண்ணன் - மேகவண்ணன். (௨௬)

நீரிடைக்காண்டல்போனிலவுபொற்கொடிச்
தேர்மிசையிருந்தனன்செல்வனுமெனா
ஓர்தருமுளத்தினனொழுகுபூம்புனல்
வேரியந்தாரினன்மீட்டுமூழ்கினன்.

வேரி - வாசனை, தேன். (௨௭)

கறங்குதண்புனலிடைக்கமலக்கண்ணனை
அறம்புரைவெண்ணிறத்தரவப்பாயன்மேல்
உறங்குவானாகநெஞ்சுவந்துகண்டனன்
இறைஞ்சினன்கைம்முகிழ்த்தேத்தினனரோ

கறங்கு - சுழல்கின்ற, வெண்ணிறத்தரவம் - ஆதி சேடன். (௨௮)

எத்தலுமறைத்தனனெடுத்தவ்வுருக்
கூத்தினர்கொண்டதங்கோலமாற்றல்போல்
பூத்தளித்தேழிரும்பொழிலுமூழியில்
தீத்திடுதாமரைச்செங்கண்மாயனே.

கூத்தினர் - கூத்தாடுவோர், கோலம் - வேடம். (௨௯)

மதிநுதற்காந்தினிமகன்வியப்பினன்
விதிர்விதிர்ப்பெய்தியமெய்யனெய்தலும்
புதுவதுகண்டனைபோலுநீயெனா
முதல்வனின்னகைநிலாமுகிழ்த்துக்கூறினன்.

மெய்யன் - சரீரத்தை யுடையவன். (௩௦)

பொன்னவந்தாமரைப்பூம்பொகுட்டுறை
அன்னமென்னடைமயிலன்னசாயலாள்

மன்னவநிலமகண்மணாளநின்னுழை
என்னகாண்பரிதெனவேத்தினனரோ.

நின்னுழை - உன்னிடத்தில். (௩க)

கொழுந்திறன்மடங்கலங்குருளேகுன்றினின்
றிழிந்தெனத்தேரினின்றிழிந்துதண்ணருப்
பொழிந்தெழுந்துளவினன்போதிநீயென
வழங்கினன்காந்தினிமைந்தன்றன்னையே.

மடங்கலங் குருளை - சிங்கக்குட்டி. (௩உ)

உளமலியுவகையனுவர்பொற்றேர்விடத்
தளேயவிழ்தாமரைத்தலைவிமன்னவன்
வளமலிமதுரைமாநகர்மருங்கினேர்
இளமரக்காவுசென்றெய்தினனரோ

தாமரைத் தலைவிமன்னவன் - கண்ணபிரான் (௩௩)

கலிநிலைத்துறை.

தண்ணந்தாமரைக்கண்ணினன்சேவடிதாழ்ந்து
நண்ணல்வேண்டுமென்மனையெனநண்ணுதுமெனலும்
பண்ணமைந்ததேர்கடாயினன்படர்ந்துமன்னவற்குக
கண்ணனுற்றமைகூறினன்காந்தினிபுதல்வன்.

தாமரைக்கண்ணினன் - கண்ணபிரான், கடாயினன், செலுத்தினன். (௩௪)

அக்குரூரன் வந்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௫உ௦.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---

பதிஞருவது

## மதுரைகண்ட வத்தியாயம்.



வெதிரிசைத்தகார்வண்ணனும்விரியல்வெண்டோட்டுப்
புதுநறுப்பொழிபோந்தைமீமிசையுயர்த்தவனும்
முதிருங்காதலர்தம்மொடுமுழவுகண்டுயிலா
மதுரைகாணியவெழுந்தனர்மாலைவந்திறப்ப.

வெதிர் - வேய்ங்குழல், போந்தை - பனைக் கொடி, முழவு - பேரிகை. (க)

தேன்றதும்புதார்த்தேவராதிருக்கைமற்றுலகம்
மூன்றுமுந்தியந்தடத்தலர்முளரியம்பொகுட்டின்

என்றுகாத்தழியிமையவர்தலைவன்வீற்றிருப்பத்
தோன்றுமந்நகர்க்குவமையொன்றெங்ஙனஞ்சொல்கேம்.

இமையவர் தலைவன் - கண்ணபிரான் (௨)

படுதிரைத்திருப்பாற்கடல்போலவெம்மருங்கும்
அடைதல்செவ்வண்டுமென்றாண்முடிக்கம்புனலளித்த
மடலவிழ்ந்ததாமரையடிவண்ணங்குருவானீலக்
கடல்கிடந்தெனக்கிடந்ததுகடிமதிட்கிடங்கு.

புனலளித்த - கங்கையைத்தந்த, கிடங்கு - அகழி (௩)

உறையிலிற்றியவுருவமாமுகிலினைத்தரு
பொறிமணந்தலாற்பொலிமுகடுடையநீண்டதனல்
கறையணற்கடுக்கட்செவியணையினிற்றுயின்ற
இறையெனத்திகழ்வுற்றதாலெழின்மணிப்புரிசை

உறை - நீர், பலிற்றிய - துளிக்கிற, பொறி - திருமகள், யந்திரம், அனல் - தீ வாய், கட்செவி - பாம்பு (௪)

வடித்தபைந்துழாய்வனைமுகில்சேவடிக்கமலம்
உடைத்தவண்டநீள்முகடடின்வீழ்கங்கையினொளிர்வ
விடத்தபாழிவாய்வெவ்வராவுண்டுமிழ்திங்கள்
துடைத்துமாளிகைச்சூளிகைதொடக்குவெண்கொடிகள்.

சூளிகை - சிகரம், துழாய்வனைமுகில் - கண்ணபிரான் (௫)

ஒளிரும்வெண்மருப்பொசிப்பவனெதிர்ந்தனனென்றுப்
பிளிறியஞ்சினபெயர்வபோன்றனவெழில்பிறங்கி
அளறெழக்கடிமறுகெலாமழிமதம்பொழியுங்
களிறுகௌவையிற்காழ்வரைநிற்கிலகழிவ

ஒசிப்பவன் - ஒடிப்பவன், பிளிறி - ஒலித்து, மறுகு - வீதி, கௌவை - சத்தம். ()

ஒண்ணிறப்பரியுருவெடுத்தவனுடல்கீண்ட
அண்ணலுற்றனனெனவெரீஇயலம்வரலுற்று
மண்ணினிற்கிலவானிடைப்பறப்பனபோலும்
பண்ணமைந்திடுபல்லுளைப்பசும்பரிபாய்வ.

வெரீஇ - பயந்து, பண் - கல்லணை (௭)

செழுந்தடங்கிரிபுரைமணித்தேர்கிழித்தோடக்
கிழிந்துபொன்னிலங்கிளைத்திருவிசும்பகமறைய
எழுந்ததூளியாங்கேழுலகளிப்பவனெய்தப்
பொழிந்ததண்ணறும்பூந்துகளாமெனப்பொலிந்த.

கிரிபுரை - மலையை நிகர்த்த, பொன்னிலம்—சுவர்க்க லோகம். (௮)

பைந்தண்கோதையர்புலவியிற்பரிந்தவெண்முத்தம்
மந்தரத்துயர்மாடநீண்மறுகினிற்றிகழ்வ

அருதளிர்ப்பனிமுல்லையந்தாரினுனடையச்
சிந்துவெண்பொரிசிதர்ந்தனகிடந்தனசிறந்த

புலவியில்—ஊடலில், பரிந்த-நீக்கப்பட்ட, சிதர்ந்தன-சிதறி (முற்றெச்சம்) (கூ)

அளப்பில்வெஞ்சுடர்மணிதிகழாவணம்புள்வாய்
பிளக்கும்வன்றிறற்பெய்ம்மதக்களிறனெய்தத்
துளக்கமில்லெனத்தூங்கிருட்குறும்பெறிந்தோட்டும்
விளக்கெறிந்தனவாமெனவிளங்கொளிபடைத்த

ஆவணம் - தெரு, புள் - பகாசுரன். (க0)

கூந்தலம்பிடிக்குலமெனக்குவவியமடவார்
சாந்தளாவியதடமுலையெதிரெதிர்தயங்கல்
பாந்தளங்கதிர்ப்பணுடைவிப்பரப்பினின்ருடும்
ஏந்தலெய்துதற்கேந்தியமணிக்குடனிகர்த்த.

பிடி - பெண்யானை, சாந்து சந்தநம், பாந்தள் - பாம்பு, ஏந்தல் - கண்ணபிரான்.

பின்னல்வெண்டிரைப்பிறந்ததண்முத்திறைற்குயின்ற
கன்னிமாடநின்றெழுதருபனிநிலாக்கற்றை
பொன்னந்தாமரைப்பொகுட்டுறைசெய்யபொற்கொழுந்தின்
மன்னவற்கெதிர்வைத்தவெண்கவரியைமானும்.

நிலாக்கற்றை - சந்திரிகைத்திரள், தாமரைப் பொகுட்டுறை செய்யபொற் கொழுந்து - திருமகள், மன்னவன் - கண்ணபிரான். (க௨)

மாலைமுற்றியவணரிருங்கூந்தவார்துணைக்கண்
காலதர்ப்புறத்தொளிர்வனகனைபெயல்காப்பச்
சோலைமுற்றியவரைபெடுத்தாற்கொளிசொரிநல்
நீலமொப்பவற்கேந்தியவிணைக்கயனிகர்த்த.

துணைக்கண்—இரண்டு கண்கள், அதர்ப்புறத்து-வீதியில், பெயல்-மழை, காப்ப-தடுக்க, இணைக்கயல்-இரட்டைமீன், நீலம் - நீலமலர். (கங)

கோடுடைப்பனிமதிவடிம்பிடறுபொற்குடுமி
மாடமீண்டியவரிமுலைமகளிராற்சிறத்தல்
ஆடலந்தனிநேமியானடைந்தனனென்று
ஏட விழ்ந்தபல்கோதையாற்புனைந்தவையேய்க்கும்.

வடிம்பு-ஓரம், ஈண்டிய - நெருங்கிய. நேமியான் - கண்ணபிரான். (கச)

திருந்தொளிப்பசுங்கொடிக்கரங்கோல்பொரச்சிவப்ப
முருந்தொளித்திடமுகிழ்த்தவெண்முறுவலார்பாடல்
பரந்தளிக்குலம்பாடுபூந்துளவினுன்றனக்கு
விருந்தளிப்பதுபோலுமால்வீணைசுவையமிழ்தம்.

கோல்பொர-வீணை நரம்பு படுதலால், முருந்து-மயிலிறகினடி. (கரு)

இன்னமாககர்நோக்கியவிறைவன்விண்ணெழுந்த
பொன்னங்கொம்பெனப்பொழிகமஞ்சூற்புயல்கிழித்த
மன்னெனக்குழீஇமென்னகைமாதரார்தனது
கன்னவின்றதோட்பணைப்பொழிலீனக்கினர்களிப்ப.

இறைவன் - கண்ணபிரான், கமம்-நிறைவு, சூல்-கருப்பம், புயல்-மேகம், குழீஇ-கூடி.

மழைமதம்பொழிமதக்களிறனையவம்மாலோன்
நிழலும்வெண்மதிநெற்றிதோய்மாடநீண்மறுகில்
அழலும்வேற்படைக்கஞ்சனதநதுகின்மாசு
கழுவுவான்றனைக்கண்டனன்கலைதருமென்றான்

மாலோன் - கண்ணபிரான், மறுகில் - வீதியில், துகில் மாசுகழுவுவான் - வண்ணான்.

பொன்னனந்தூசணிபொருவிலோன்புகன்றமைகேட்டு
மன்னுகானிலுமலையினும்வாழ்பவருடுப்ப
கின்னபூந்துகிலாங்கொலென்றியம்பலுமவன்றின
சென்னிசிந்தினன்செம்முகசுதிகிரியஞ்செல்வன்

பொருவிலோன்-ஒப்பற்றவன், திகிரியஞ் செல்வன்-கண்ணபிரான், (௧௮)

கையிலைவன்கருந்தலைதுமித்தபின்கழுமச
செய்யதாமரைகருமுகில்பூத்தெனத்திகழ்வோன்
ஐயபூந்துகிலொன்றுடீஇயதுகிலனைத்தும்
வெய்யதோழருக்குதவினன்விடையெனநடந்தான்.

துமித்தபின்-அறுத்தபின்பு, ஐய-அழகிய, உடீஇ-உடுத்து. (௧௯)

ஊசிநுண்வினைகுயில்பவனொருவன்வந்தெய்திய
பாசிலைத்துழாயப்படலையம்பரம்பொருளவற்குக
கோசிகப்பொலம்பட்டொடுகோலம்வீற்றிருப்பக
காசில்பொன்னெறித்தெழுதுபுங்கசனிதணிந்தான்

ஊசி நுண்வினை குயில்பவன்-தையற்காரன், கோலம்-அழகு. (௨௦)

அருநுண்கீசுநல்லணிபெறவணிந்தவன்றனக்குப்
பின்னல்வெண்டிரைக்கருங்கடலெயிற்றிடைப்பிறந்து
பொன்னந்தாமரைப்பூம்பொருட்டுறைந்தபொற்கொழுந்து
மன்னுமார்பினன்றன்னுருவழங்கினன்மாதோ.

தாமரைப்பூம் பொகுட்டுறைந்த பொற்கொழுந்து மன்னுமார்பினன் - கண்ணபிரான்.

அலர்ந்தகாவியுமரக்கிதழ்க்கமலமுமொருபால்
கலந்தவாமெனக்கண்கவர்கட்டெழில்படைத்த
இலங்கலாழியானிரும்பொழில்வரையெலாங்கமழ
மலர்ந்தபன்மலர்தொடுப்பவன்மருங்குசென்றடைந்தான்.

அரக்கு-செந்நிறம், ஆழியான்-கண்ணபிரான். (௨௨)

எண்டிசைக்களிற்றீர்ங்கவுள்படிந்தவஞ்சிறகர்
வண்டுமொய்த்தெழுமருப்பரந்துலாயபூந்தெரியல்

கொண்டலிற்சிலைகுலாயதோர்கோலம்வீற்றிருப்பப்
புண்டரீகக்கட்புராதனற்காங்கவன்புனைந்தான்.

மரு - வாசனை, பூந்தெரியல்-பூமாலை, சிலை-வில் (உ௩)

விழைவதென்னெனவெந்திறல்பழுத்தகூராழி
உழவநின்கழற்பொதுமைநீங்குருகுபேரன்பு
தழையநல்கெனத்தாமரைக்கண்ணருள்பெருகிப்
பொழியுநகார்முகில்பூந்தொடையளித்தவற்களித்தான்.

விழைவது-விரும்புவது, ஆழி-சக்கரம், கழல்-திருவடி (உ௪)

கலிவிருத்தம்.

எண்ணரிய யோசனையிருங்கடிகமழ்ந்து
விண்ணுறும்விழையப்படும்விழுக்கலவையேந்தி
வண்ணமகள்கூனியெதிர்வந்துமழைவண்ணத்
தண்ணலையணிந்தனளகங்களிசிறந்தே.

கடி-வாசனை, விழையப்படும்-விரும்பப் படுகிற, கலவை-கலவைச்சந்தனம், வண்ணமகள்-கோலஞ் செய்பவள், அணிந்தனள்-அலங்கரித்தாள். (உ௫)

சேவடிசிலம்படிமிதிப்பவிறைசெங்கை
பாவையனையாளணரிபற்றினனெடுப்ப
மூவகையகூனொருவிமூவுலகின்மாதா
மேவரியசெவ்வியின்விளங்கினள்விழைந்தே

இறை-கண்ணபிரான், அணரி-கீழ்வாய்க்கட்டை, மூவகையகூன்-முக்கோணல், செவ்வியின்-அழகோடு (உ௬)

நனைத்துணருநானமுமரும்புகையும்விம்மிக்
கனைத்துவரிவண்டிமிர்கருங்குழன்மடந்தை
புனைந்துளவிணனிபொலந்துகில்பிடித்தென்
மனைக்குவருகென்றுசிலமாற்றமுரைசெய்தாள்

நனை-அரும்பு, துணர்-கொத்து, நானம்-கஸ்தூரி, மாற்றம்-சொல். (உ௭)

பொற்றரிமழைக்கணவள்சொன்மொழிகேளா
முந்துதிரைவேலியுலகுண்டமணிவண்ணன்
வந்தவினைமுற்றியபினவந்தருடுமென்று
அந்தரளவாணகையரும்பினனகன்றான்.

வினை-காரியம், வந்தருடும்-வந்தருள்வோம (உ௮)

இடங்கர்கதுவத்தளரிளம்பிறைமருப்பின்
கடங்கலுழ்கருங்களிறுகாத்தபுயல்வல்வில்
கிடந்ததெவணென்றுரைகிளந்துவிடையென்னத்
தடஞ்சிலைமகங்குலவுசாலையினடைந்தான்

இடங்கர்-முதலை, களிறு-கஜேந்திராழ்வான், புயல்-கண்ணபிரான். (உ௯)

வரைக்குலம்வெருக்கொளவளர்ந்ததிணிதோளால்
சிரித்தெயிலெரித்தவிறைசெஞ்சிலையிறுத்தான்
கரைக்குமதவேழமொர்கரும்பினைவளைத்து
முரித்தெனவெடுத்துநெடுமுரிவிலிறுத்தான்

வெருக்கொள-அஞ்ச, சிரித்தெயிலெரித்த விறை-சிவபெருமான், மதவேழம்-மதயானை. (௯௦)

பொற்றகமலத்தபுருபூத்தொருகையில
இற்றவரிவிற்றுணியெடுத்துலகளிப்பான்
விற்றொழில்பழுத்தமர்விளைப்பவவணேரும்
கொற்றமறவீரருயிர்கூற்றுணவளித்தான்.

பொற்ற - அழகிய, இற்ற-முடிந்த, விற்றுணி - வில்லின் துண்டு, உலகளிப்பான்-கண்ணபிரான். (௯௧)

மைத்தவரவந்தவளர்பசைமுகிலன்றேள்
அத்தவரைவெங்கதிரடைந்திடலுமந்தண்
முத்தெனமுகிழ்ந்துமென்முறுகவிழுமுல்லைக்
கொத்தணியுநந்தனுறைகொய்பொழிலடைந்தான்.

அத்தவரை-அஸ்தமனகிரி, வெங்கதிர்-சூரியன், பொழில்-சோலை. (௯௨)

ஆலுமழல்வெவ்விடவராவரசுசீதமீதார்
சோலைநிழன்மேயபுயலேழருடன்மேவி
வேலையமுதிற்சுவைவிளைந்தெழுகொழுந்தீம்
பால்விரவுமின்னடிசில்பாற்படவயின்றான்.

ஆல் - ஆலிலை, அராவரசு - ஆதிசேடன். அடிசில்-சோறு, அயின்றான் - அமுதுசெய்தான். (௯௩)

மதுரைகண்டவத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௫௫௩.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## பதினேழாவது
## கஞ்சனைகொன்றவத்தியாயம்.



*கலிநிலைத்துறை.*

பூத்தபல்லிரும்பொழிலெலாம்விழியருள்பெருகிக்
காத்தளிப்பவெங்கட்செவித்துயிலொரீஇயரவின்
கூத்துவந்தவன்கொடுஞ்சிலைமுரித்ததுகேளா
நீத்தனன்றுயில்கஞ்சனும்புழுங்கினனெஞ்சம்.

பூத்த - உண்டாக்கின, பொழிலெலாம் - உலகங்களெல்லாம், கட்செவி - ஆதிசேடன், ஒரீஇ - நீங்கி, கேளா - கேட்டு (க)

கல்லென்வெண்டிரைக்கருங்கடன்முகட்டிருள்பருகி
எல்லெழுந்துறவினமலர்ப்பள்ளிநின்றெழுந்து
பல்லியத்திரளதிர்குறப்பால்வளையலற
மல்லர்சாலைசென்றடைந்தனன்மானவேற்கஞ்சன்.

எல் — சூரியன், பால்வளை - வெண்சங்கு. (உ)

கதிர்நிலாப்பொழிகடவுள்வெண்கவிகைமீககவிப்ப
எதிர்நிலாப்பொழியெயிற்றினோரேந்திணைக்கவரி
பொதியவிழ்ந்துகாலுயிர்ப்பநீள்பொன்னெயிலுடுத்த
மதுரைமன்னவன்மஞ்சமீமிசையிவர்ந்தனனால்.

நிலாப்பொழியெயிற்றினோர் - மாதர்கள், பொன்னெயில் - பொன்மதில், மஞ்சம்-கட்டில். (ங)

கட்டமைந்தவார்கழலினர்களிச்சுரும்பரற்ற
விட்டலர்ந்தபூந்தாரினாவெண்ணிலாவிரியும்
வட்டவெண்குடையாதவர்மற்றொருழில்காண்பான்
இட்டபொற்றவிசிவர்ந்தரியேறெனவிருந்தார்.

யாதவர் - யாதவமன்னர், காண்பான் - காண, அரியேறு - ஆண்சிங்கம். (ச)

மழைக்கருங்கணூர்வளரிளவனமுலைக்கோடு
கிழிப்பமென்முகைகிழிந்துபச்சிளநறுக்கலுழி
கொழித்தபைந்தொடைகுலவுதோட்கொடுந்திறற்கஞ்சன்
அழைப்பநந்தர்கோனடைந்தீவேத்தவைசிறந்தனனால்.

கோடு · கொம்பு, நறுக்கலுழி - தேன்பெருக்கு. (ரு)

அலங்குமெசந்துவராடையராடகப்பசும்பொன்
விலங்கறன்றெடுவெஞ்சமர்விளைத்திடவேட்ட
உலங்கொடோளினருறுவலித்தழைந்துமற்பூத்து
மலர்ந்தமார்பினர்மல்லர்வந்தீண்டினர்மாதோ.

விலங்கல் - மலை, சமர் - போர், வேட்ட - விரும்பின, உலம் - திரண்டகல். (சு)

வேறு.

வென்றிமற்பறைகறங்கலும்விளங்குவெயில்சூழ்
குன்றெனக்குலவுமாடமறுகிற்குளிர்துழாய்
மன்றலந்தெரியன்மார்பன்வளைமேனியனொடு
நன்றுவந்துமழவேறெனநடந்தனனரோ.

வென்றிமற்பறை - வெற்றிமுரசு, கறங்கலும் - சத்தித்தலும், மறுகில் - வீதியில், மழவேறு - இளஞ்சிங்கம் (எ)

கஞ்சநாண்மலரணங்குபுணர்கண்ணனுறலும்
பிஞ்சுநாண்மதிபிறங்குநுதன்மாதருயர்வான்
நெஞ்சுபோழுநெடுமாளிகைநிலங்கடொறுநீள்
மஞ்சுகண்டுமகிழ்மஞ்ஞையெனமொய்த்தனர்களால்

மலரணங்கு - திருமகள், மஞ்சு - மேகம், மஞ்ஞை - மயில். (அ)

வண்டுசூழ்தருமணிக்குவளைவண்ணன்வரலும்
கண்டுகட்குவளைமாமலர்களிப்பநிலவுத்
துண்டமன்னநுதன்மாதர்சிலர்சூழுமுகைவாய்
விண்டபன்மலர்செய்மாலையின்விளங்கினர்களால்.

குவளைவண்ணன் - கண்ணபிரான், நிலவுத்துண்டம் - பிறை. (கூ)

அம்பொனாழிவளையங்கைதிகழண்ணல்புகலும்
செம்பொனாழிவளைசென்றொழியமின்பொழிதரும்
பைம்பொன்வார்குழைதுளங்கவளிபாய்தருமலர்க்
கொம்பினின்றுசிலகோதையர்குழைந்தனர்களால்

ஆழி - சக்கரம், வளை - சங்கு, அண்ணல் - கண்ணபிரான், ஆழி - மோதிரம், வளை - வளையல். (கo)

ஆவியாயவனடைந்திடலுமாவிமகிழா
மேவியன்பினொடுபின்படரமேதகுகருங்
காவிநாண்மலர்கடந்தவிழிமாதர்சிலர்பொன்
பாவைபோலியபாரந்துதவநின்றனர்களால்

படர - செல்ல, கடந்த - வென்ற, போலிய - போல, தவ - மிகுதியாக. (கக)

எல்விலங்குவளையேழையரிரிந்தகையராய்ச்
செல்லுறங்குநெடுமாடமறுகிற்செறியவோர்
கல்லிளங்களிறுபோன்மெனநடத்தல்புரியா
மல்லர்சாலையயன்மாதவனடைந்தனனரோ.

எல் - ஒளி, வளை - வளையல், இரிந்த - நீங்கின, செல் - மேகம், நடத்தல்புரியா - நடந்து, மாதவன் - கண்ணபிரான். (கஉ)

வேறு.

ஏறுபோனடந்தேகுழியிளங்களியானை
மாறுவந்தெதிர்நிற்றலுமாயவனோக்கி

ஆறகன்றிடவடுகளிறுய்த்திமற்றன்றேல்
கோறுநாமெனக்குஞ்சரப்பாகொடுகுறித்தான்.

ஆறு அகன்றிட - வழிநீங்க, உய்த்தி - செலுத்து, கோறும் - கொல்வோம். ()

மாற்றமன்னதுகேட்டலும்வயங்குவான்முறுவல்
தோற்றவல்லழற்சுடுசினங்கதுவிவெம்பாகன்
காற்றெனநடுதெறுகணவெனக்கனைகடலென்னக்
கூற்றமென்னமேற்றூண்டினன்குவலயாபீடம்.

மாற்றம் - சொல், முறுவல்தோற்ற - சிரிப்புண்டாக, குவலயாபீடம் — கஞ்சனது பட்டத்துயானை (கச)

களிக்கும்வண்டுணக்கடாந்திறந்தொழுகுபோர்க்களிறு
வளைக்குங்கைப்படுமழைமுகின்மின்னெனமறியா
ஒளிக்குஞ்சென்றுராற்காலிடையொருப்படுநெஞ்சத்
தொளைக்கைமால்கரியழைப்பமுன்தோன்றியதோன்றல்.

கடாம் - மதம், மால்கரி - கஜேந்திராழ்வான். (கரு)

மஞ்செனக்குலாய்வளைத்திரும்பனைக்கையாற்றொடாக்
கஞ்சநாண்மலர்க்கண்ணன்வால்பற்றிநின்றிருபத்
தஞ்சுவிற்கிடைவாங்கிநின்றழிமதஞ்செருக்கித்
துஞ்சுறுக்கரிசுழல்வுறவொல்லையிற்சுற்றும்.

வாங்கி - இழுத்து, துஞ்சுறு - தூங்காத, ஒல்லை - விரைவு. (கசு)

மும்மைசாலுலகளித்தகார்முகிலெதிர்தோன்றிச்
செம்மைவாலொளிசிந்துபொன்னோடைசூழ்நுதலில்
கொம்மைதீட்டிடுங்கோக்களிறழன்றுமேனடப்ப
வெம்மைகூர்விளையாட்டினனோடினன்வீழும்.

கார்முகில் - கண்ணபிரான், கொம்மைகோட்டிடும் - சித்திரமெழுதப்பெற்ற, கோக்களிறு - பட்டத்தியானை (கஎ)

குளிறுதெண்டிரைமேய்ந்தகார்க்குலமெலாமயங்கப்
பிளிறுவெங்குரற்பிணர்படுபனைநெடுந்தடக்கைக்
களிறுகட்களடசனலுகக்கவிழ்ந்துமேற்குத்த
ஒளிறுவெண்பிறைமருட்டுவார்மருப்பிடையொளிக்கும்.

குளிறு - சத்திக்கிற, பிணர் - சருச்சரை, பனை - பருத்த, கனலுக - நெருப்புதிர, வார்மருப்பிடை - நீண்டகொம்பினிடத்தே. (கஅ)

வடவிழ்ந்தபூந்துழாய்முகிலித்திறன்களிற்றோ
டாடிமண்மிசைவீழ்த்தினனழிபெருங்குருதி
மோடுகொண்டவம்மும்மதக்கலுழியிற்பெருகி
ஓடவங்கையாலொளிறுவெண்மணிமருப்பொசித்தான்.

துழாய்முகில் — கண்ணபிரான், மோடு - பெருமை, மதக்கலுழி-மதநதி, மருப்பு ஒசித்தான் - கொம்பையொடித்தான். (கக)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கொங்குடைந்தொழுகுகோதைகுளிர்மதுத்துவலைதூற்றப்
பங்கயக்காடுபூத்தபசும்புயலென்னநின்றோன்
அங்கதிர்க்குழவித்திங்களவிர்நுதற்புயலைங்கூந்தற்
செங்கயலன்னவுண்கட்டேவகிமைந்தனென்பார்.

கொங்கு - வாசனை, கோதை - மலர்மாலை, மதுத்துவலை - தேன்றுளி (உஎ)

உருவரையுழுவையன்னான்காலவேற்கஞ்சற்கஞ்சம்
மருவிரிதெரியன்மாலைவாள்வசுதேவனுய்ய
நரலைமாஞாலமேத்துநந்தகோனன்புபூத்துப்
புரியவிழ்நறியமுல்லைப்புலத்தினில்வளர்ந்தானென்பார்.

உழுவை - புலி, நரலை - கடல் (உஅ)

கடுஞ்சிலைவெள்விநென்னற்காணியபுகுந்துவென்றிக்
கொடுஞ்சிலைமுரியவாங்குகுங்குமக்குவவுத்தோளான்
நெடுஞ்சிலைவானம்பெய்தகீள்பெயன்மாரிகாப்பத்
தடஞ்சிலைபிடுங்கிச்செங்கைதாங்கியகுரிசிலென்பார்.

வெள்வி - வேள்வி, காணிய - காண, நெடுஞ்சிலை - வானவில், பெருங்கல் - தடஞ்சிலை - கோவர்த்தனகிரி. (உகூ)

பொழிகதிர்மணியினீலப்பூஞ்சிறைவரிவண்டாட
மழைமதவருவிதூற்றுமத்தமாநாகஞ்செற்றோன்
நிழன்மணிச்சுடிகையுச்சிநெரியவாய்க்குருதிகால
அழல்விடம்பொழியுநாகத்தாடினான்போலுமென்பார்.

மத்தமாநாகம் - பெரியமதயானை. (குவலயாபீடம்) (ங0)

பாடல்சால்லாடைநெற்றிப்பாவடிச்சிறுகண்யானைப்
பீடுசால்கோடுதோளிற்பிறழ்தரவைத்துநின்றோன்
கோடுவாய்வைத்துவண்டுதுதையுமென்முல்லைசூடிக்
கோடுவாய்வைத்துமுல்லைக்குழலிசைகுறித்தோனென்பார்.

பீடு - பெருமை, சால் - மிகுந்த, கோடு — கொம்பு, சங்கு. (ஙக)

வெற்பகம்வெறுததோகைவிளங்குமஞ்சாயலாரும்
மற்பகமலர்ந்ததிண்டோண்மைந்தருமகிழ்ச்சிகூர்ந்து
கற்பகங்கொணர்ந்தான்செவ்விகண்களாற்பருகுவார்போல்
அற்பகந்தழையநோக்கியாடமராங்குமொய்த்தார்.

தோகை - மயில், செவ்வி - அழகு, அற்பு - அன்பு. (ஙஉ)

கலிநிலைத்துறை.

தளையவிழ்ந்ததார்க்கண்ணனையடைந்துசாணூரன்
களிறு நக்கடாக்களிற்றுவேற்காவலன்காண

விளையுமல்லமர்விளைக்குதும்யாமெனவிளம்ப
இளையமெங்ஙனநின்னொடுபொருதுமென்றிசைத்தான்.

மல்லமர் - மற்போர். (௫௩)

ஓடைசூழ்ந்தவொருபதினாயிரங்களிற்றுப
டீசொல்வலிபெற்றந்தார்பெரும்பணைத்தடக்கை
ஆடல்யானையினணிமருப்பொசித்தனன்போல
ஈடிலாவுசாரிளையர்மற்றளர்கொலிவுலகில்.

ஓடை - முகபடாம், ஆடல் - வெற்றி. ( ,, ,, )

வருதிவல்லைநீவருதிநின்மற்றொழில்வலிநோக்கப்
பொருதியாலெனப்பொருப்புறழ்தோளினன்புகலக்
குருதிதோய்பிறைக்கோட்டிபிடுங்கியகொற்றப்
பரிதிமார்பினனேற்றனன்வேத்துளம்பனிப்ப

வருதி - வரக்கடவை, பொருதி-போர்செய்யக்கடவை, பரிதிமார்பினன்-கண்ணபிரான். (௫௫)

காரிடித்தெனக்கனைத்தொடுகிர்கடசாணூரன்
போர்விளைத்தலும்பொருசினத்தலாயுதன்றன்னோ
டாரமர்த்தொழிற்றொடங்கினனுடன்மற்பழுத்து
முரிவெற்பெனப்பணைத்ததோண்முட்டிகன்முட்டி,

அலாயுதன் - பலராமன், அமர்த்தொழில் - போர்த்தொழில். ( ,, ௬)

தாளிற்றாள்பொரத்தலையொடுதலைபொரவுலங்கொள்
தோளிற்றோள்பொரத்துன்னியும்பின்னியுங்கழன்றும்
வாளுடைத்திறன்மன்னவர்மணிமுடிதுளக்க
ஆளிமொய்ம்பினராடமர்விளைத்தனரன்றே.

உலம் - திரள்கல், ஆளி - சிங்கம், மொய்ம்பு - வலி. (௫௭)

இலங்குபூணெழிலின்னிளங்குமரர்மேலமர்க்கு
விலங்கலன்னவெம்மல்லரைவிடுத்தனர்நோக்கல்
அலங்கலவெண்குடைமன்னவர்ககறங்கொண்மற்றிறன்மே
நிலந்தளர்ந்துழிநெடியவன்வீழ்த்தினனிலத்தில்.

விலங்கல் - மலை, விடுத்தனர் - விட்டு, (முற்றெச்சம்). (௫௮)

தொடித்தடக்கையாற்றுழாய்முகிலெடுத்திருநிலத்தில்
அடிப்பமாய்ந்தனனருவரைபொருவுசாணூரன்
இடித்தகாருருமேறெனவெறுழ்வலியிராமன்
முடிப்பவெந்திறன்முட்டிகனுருயிர்முடிந்தான்.

துழாய்முகில் - கண்ணபிரான், உருமேறு - ஆணிடி. (௫௯)

தத்திவீழ்ந்தளிதவழ்ந்ததார்மாயவனவனி
பொத்துதாளினாற்சலனொடுகவுசலன்பொன்ற

முற்றெனத் திகழுருவினன் முழுவலிக் கரத்தால்
குற்றமாய்ந்தனன் குன்றெனப் பணைத்த தோட் கூடன்.

பொருந்து - மூழ்ன, பொன்ற - இறக்க, முத்தெனத்திகழுருவினன் - பலராமன்.

ஏரித்து மல்லர் மற்றேனையோருழையுழையொதுங்கத்
துளித்தகார் முகிலன்னவன் ஞேழரோடாட
வெளிற்றிளம்பனை வெருட்டியவிறல்கெழு தடக்கைக்
களிற்றுமன்னவருவந்தனர் சிவந்தனன் கஞ்சன்.

ஏனையோர் - மற்றையோர், விறல் - வெற்றி. (சக)

பூட்டுமின் றளைநந்தனைப் புதல்வரைவல்லே
ஓட்டுமின் மகிழுக்கிரசேனனேடொருங்கே
வீட்டுமின் வசுதேவனையென்றுவாய் வெம்பித
தீட்டுமின்னெனத்திகழ்ந்தவேற்கஞ்சனுங்குரைத்தான்.

தளை - விலங்கு, வீட்டுமின் - கொல்லுங்கள். (சஉ)

மதுக்கமழ்ந்தமென் மழலைவாய்வண்டினம்பாய்ந்து
மிதிக்கவாய்நெகிழ்வேரியந்துழாய்முகிலேக்கிக்
கதக்கடாக்களிறன்னபோர்க்கஞ்சன் மெல்லணைதாய்க
குதித்தனன்டொருசினத திளங்கோளரிகடுப்ப.

வேரி - தேன், துழாய்முகில் - கண்ணபிரான், கதம் - கோபம். (சங)

பிஞ்சுநாண்மதிதவழ்தரப்பிறங்குதண்டுளிவான்
கெஞ்சுபோழ்ந்துயர்நெடுநிலைத்தவளநீண்மாட
மஞ்சநின்றெழாவாளொடுகேடகந்தாங்கிக்
கஞ்சனெஞ்சொடுகட்கடைகனலுகக்கனன்றான்.

மஞ்சம் - கட்டில். (சச)

மல்லலைத்தபோர்மாயவன்வளைததனன்ருடாரக்
கல்லெனத்திரண்டேந்துதோட்கஞ்சன்வெஞ்சினத்தன்
வில்விலங்குபூண்பிறழ்தரவென்றிவாண்மிளிரத
தொல்விசும்பிடைச்சுலாவுறுபாறெனச்சுழன்றான்.

பாறு - பருந்து, மல் - மல்லர், பிறழ்தர - விளங்க (சரு)

வெவ்வராவினைவிரிசிறைப்பசியபுள்ளரசு
வௌவியாங்கணிமலர்த்தொடைவண்டெழுந்தார்ப்பத்
தெவ்வடுந்திறற்கஞ்சனைக்குஞ்சியைச்சேர்த்துப்
பௌவவெண்டிரைத்துயில்பசுங்கொண்டல்பற்றினனல்.

புள்ளரசு - கருடன், குஞ்சி - குடுமி, பசுங்கொண்டல் - கண்ணபிரான். (சசு)

அலங்குதாதுகவலைத்ததார்முடியினன் செங்கை
இலங்குவாளினனெரிமணிமாளிகையிறந்து

விலங்கலாமெனவீழ்பவன்மேலுடன்வீழ்ந்தான்
நிலங்கடந்ததாணீலமால்வரைபுரைநெடியோன்.

விலங்கல் - மலை அலங்கு - அசைகின்ற (௪௭)

பஞ்சியூட்டியபங்கயச்சீறடிமடவார்
அஞ்செஞ்சாந்தணியலர்முலைக்களிற்றொடுபொருத
மஞ்சுதோய்வரைமார்பொடுமணிப்புயநெரிந்து
துஞ்சினனடுகஞ்சன்வெஞ்சோரிவாய்சொரிய

முலைக்களிற்றொடு - முலையானையோடு, துஞ்சினன் - இறந்தான். (௪௮)

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

கட்பாந்தொழுகுபைந்தார்க்கருங்கழற்கஞ்சனஞ்சி
நட்பொடுபகையிலானைநாடொறுநினைத்தவாற்றால்
புட்கொடியுயர்த்தநம்மான்பொலங்கழல்புல்குநோன்றாள்
விட்புலவிபுதரெல்லாம்வியப்புறவிரைந்துமேயான்.

கள் - தேன், கருங்கழல் - பெரியகழல், நட்பொடுபகையிலானை-கண்ணபிரானை, விபுதர் - தேவர். (௪௯)

தடஞ்சிலைவளைத்துககஞ்சன்றம்பியரெண்மர்சீறிக்
கொடுஞ்சமம்விளைப்பவெள்ளிக்குன்றெனப்பணைத்ததிண்டோள்
மடங்கலஞ்சீற்றத்துப்பின்வால்வளைமேனிவள்ளல்
உடன்றவராவிபேழ்வாய்க்கூற்றினுக்கூட்டினானால்.

சமம் - போர், வால்வளைமேனிவள்ளல் - பலராமன். (௫௦)

பருஉத்தடம்பணைக்கையானைப்பருமதத்துவலையாடிக
குருஉத்துளிக்கமஞ்சூற்கொண்டற்கொழுந்தெனநின்றதோன்றல்
அராத்தலைகுனித்தசெம்பொனடிதொழுதமரரெல்லாம்
விராய்ப்பசுந்தேறலூற்றும்விரைமலர்தூவியார்த்தார்.

கொண்டற்கொழுந்தெனநின்றதோன்றல் - கண்ணபிரான். (௫௧)

இந்திரநகரமெல்லாமெழுகருங்கொண்டலனைத்
துந்துபிமுழங்கியார்ப்பச்சொரிமதவருவிதூங்கி
மந்தரவரையிற்றோன்றுமத்தமால்யானைக்கஞ்சன்
அந்தின்மாநகரமெல்லாமழுங்கியுண்மயங்கிற்றன்றே.

மந்தரவரையின் - மந்தரமலைபோல, அழுங்கி - வருந்தி. (௫௨)

மறந்தலைமணந்தவெள்வேன்மலைந்தகண்மாரிகற்ப
நறுந்துணர்க்கூந்தல்சோரநங்கையரழுதன்மாற்று
பிறந்துபாடுற்றகஞ்சற்கீமநல்வினைகளெல்லாம்
அறந்தலைமணந்தகூர்வாயாழியான்புரிவித்தானால்.

மறம் - கோவம், மாற்றுபு - நீக்கி, ஈமநல்வினை — மயானச்சடங்கு. (௫௩)

ஆயிரம்பகுவாய்நாகத்தறி துயிலுணர்ந்தசெங்கண்
மாயனும்வெள்ளைமேனிவள்ளலும்வல்லிநீக்கித்
தாயொடுதந்தைதாளிற்றமரைபுனைவதென்னச்
சேயபொற்றொடிக்கைகூப்பிச்சென்னியினிறைஞ்சிநின்றார்.

வல்லி - விலங்கு, ஆயிரம்பகுவாய்நாகம் - ஆதிசேடன். (நிச)

எம்மைநீருயிர்த்தவாற்றாலின்பொன்றுந்துய்த்திலீர்மற்
றும்முழைவளரயாங்களொருதவமுஞற்றிலேமே
அம்மவென்றுலகங்காக்குமாழியந்தடக்கைவீரர்
செம்மைசால்பவளச்செவ்வாய்திறந்தனர்செப்பினாரால்.

உயிர்த்தவாற்றால் - ஈன்றதனால். (நிரு)

இறைவரேயிவரென்றெண்ணியின்றவரிறும்பூதெய்த
மறுவறுசிறப்புத்தொல்லோன்மாயையின்மறைத்தலோடும்
பெறலரும்புதல்வரென்னுப்பிறந்ததோர்காதல்கூரக்
கறவைகன்றெதிர்ந்ததென்னக்கசிந்துளங்கரையலுற்றார்.

இறும்பூது - ஆச்சரியம், தொல்லோன் - கண்ணபிரான். (நிசு)

சேட்டிளங்குமரர்தம்மைச்செங்கையான்முகந்துபுல்லி
மோட்டிளம்பரிதிகண்டமுளரிவாண்முகத்தராகி
ஆட்டினருவகைக்கண்ணீரங்கண்வானுறைந்தோர்தூற்று
நாட்டுணர்க்கண்ணீரோடுநேறியமெய்திகழமன்னே.

பரிதி - சூரியன், முளரி - தாமரைமலர். (நிஎ)

உள்ளுயிர்தளிர்ப்பவாகந்தீண்டியுமுச்சிமோந்தும்
முள்ளரைமுளரிவென்றுமுழுமதியென்னதோன்று
தெள்ளொளிமுறுவற்செவ்வாய்த்திருமுகச்செவ்விகண்டும்
விள்ளருமுவகைவேலைவீழ்ந்தனராழுந்தினரால்

ஆகம் - உடம்பு, செவ்வி - அழகு, உவகைவேலை - களிக்கடல் (நிஅ)

மாற்றருஞ்சிறப்புவாய்ந்தவலம்புரிபொறித்தசெங்கைக்
கோற்றொடிப்புதல்வர்செம்பொற்குழைமுகமுளரித்தண்போ
தூற்றிருந்தொழுகுதீந்தேனொத்தமென்மழலைகேட்ப
நோற்றனமல்லேமென்னுநொந்துநெஞ்சுருகிச்சோர்வார்.

முளரித்தண்போது - குளிர்ந்ததாமரைமலர், மழலை - மழலைச்சொல். (நிகூ)

உரைப்பரும்பரமாநந்தவோங்கெழிலுருவுதாங்கித்
திருப்பொலிபவளச்செவ்வாய்திறந்துநின்றத்தாவென்றும்
விருப்பமுற்றன்னையென்றுமிழற்றுமாகேட்கப்பெற்ற
வரத்தினர்மகிழ்ச்சியாரேவகுத்தனருரைக்கிற்பார்.

அத்தா - தந்தையே, அன்னாய் - தாயே. (கூ0)

வாட்டிறற்செறுநராவிவன்றிறற்பேழ்வாய்க்கூற்றுக்
கூட்டியபரிதிவைவேலுக்கிரசேனன்றன்னை

நாட்டினனரசனுகநகுமணிச்சுடிகைநெற்றிச்
சூட்டுவாளரவினுடுந்தொடுகழற்காலினெம்மான்.

செறுநர் - பகைவர், அரவினுடுந்தொடுகழற்காலினெம்மான் - கண்ணபிரான். ()

தடந்தவழ்முதலைவெளவத்தடக்கைவிண்கிளநீட்டிக்
கடந்தவழ்கடாத்தநால்வாய்க்கருநகளிறழைப்பவந்தோன்
படந்தவழரவிற்சீறும்படுகொலைக்கஞ்சற்கோடும்
விடந்தவழ்குடுமிவெள்வேல்வேந்தரையழைப்பித்தானல்.

தடம் - மடு, கிள - கிழிய, களிறு - கஜேந்திரராஜ்வான், அரவின் - பாம்புபோல

மூப்புடையவரும்பாந்தண்முடிமிசைக்கிடந்தஞாலம்
காப்பவந்துதித்தசெங்கட்கண்ணனைக்கண்டுகண்டு
நீப்பிலாவிளமையெய்திநிறைந்தபேரின்பமாந்திப்
பூப்புறுபோகபூமிபொருந்தினரனையரானூர்.

பாந்தள் - ஆதிசேடன், நீப்புஇல்லா - நீக்கமற்ற (௯௩)

பைந்துழாயலங்கலானும்பால்வளைமேனியானும்
நந்தகோன்றன்னைப்பல்கானகைமுகமலர்ந்துபுல்லி
மைந்தரின்வளர்த்தல்செய்தீர்மற்றுநீரல்லீர்கொல்லோ
தந்தையுமுருகுகாதற்றாயுமென்றியம்பினூரால்

பைந்துழாயலங்கலான் - கண்ணபிரான், பால்வளைமேனியான் - பலராமன் ()

எண்ணணியொன்றுமெந்தாயெய்துதுநின்பாலென்று
வெண்ணிலாவிரிக்குந்தூசும்வெயில்கிளைத்தொழுகுஞ்செக்கர்
வண்ணமாமணிப்பொற்பூணும்வரம்பிலவழங்கிமன்றற்
றண்ணுலாங்கானமுல்லைத்தலைவனைவிடையீந்தாரால்.

எண்ணல் - எண்ணுதை, எய்துதும் - வருவோம். (௯௫)

வெள்ளிவெண்முல்லைப்பைந்தார்விரைகமழ்மார்வமெல்லாம்
வள்ளிதழ்க்கமலக்கணணீர்வார்தரநந்தகோபன்
கள்ளவிழ்துளவமாலைக்காதலர்தம்மைநீங்கா
துள்ளமுமுயிரும்வைகவொருதனிப்போகலுற்றான்.

விரை - வாசனை, மார்வம் - மார்பு, வார்தர - ஒழுக. (௯௬)

வருபிறப்பின்றிநாளுமலர்தலையுலகங்காப்ப
ஒருபிறப்பெய்தித்தோன்றுமுயர்நலமுடையமைந்தர்
இருபிறப்படைந்தாராகவிளநிலாவெழுகுமுந்நூல்
தருபிறப்பெறிந்தகர்க்கமுனிவனற்புனைந்தான்றுதை.

மலர்தலை - விரிந்தஇடம், இருபிறப்படைந்தாராக - த்விஜராக, முந்நூல்-முப்புரிநூல்.

கஞ்சனைக்கொன்றவத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௯௨௦.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## பதினெட்டாவது

## குரவன்மைந்தற்கொணர்ந்தவத்தியாயம்.



கலிநிலைத்துறை.

பூந்தாதுழக்கிப்பொறிவண்டுதண்டேறன்மாந்திக்
காந்தாரம்பாடுங்கமழ்சோலையவந்திமேய
சாந்தீவினிபாற்படர்குற்றுயர்தான்றன்முன்னோ
டாய்ந்தான்கலைபண்டருநான்மறைசொற்றவையன்.

தேறல் - தேன், காந்தாரம் - ஓர்பண், முன்னோடு - தமையனோடு (௧)

சிறையுற்றநீலச்சுரும்பின்னிளந்தேறலாடி
வெறியுற்றதாதுவிருந்துண்டிசைபாடுமந்தண்
நறையுற்றதாரார்பகலோராறுபத்துநான்கின்
அறுபத்துநான்குகலையும்பகுத்தாய்ந்தறிந்தார்

தேறலாடி - தேனில்மூழ்கி, வெறி - வாசனை, பகல் - நாள் (௨)

திருவிற்கிளைக்குங்கதிர்மாமணிச்செய்யசெஞ்சூட்
டரவிற்குனிக்குங்கருங்கார்முகிலன்புபூத்துப்
பரவற்கமைந்தகுரவன்றனைப்பண்பினேத்திக்
குரவற்குநல்குங்கடனெம்வயிற்கோடியென்றான்.

அரவில் - காளியன்மேல், குனிக்கும் - நடித்த, கார்முகில் - கண்ணபிரான். (௩)

கோடற்கிவர்பாலுரித்தென்னெனக்கோதைமாலை
சூடுற்றமன்றற்குழலாளொடுசூழ்வன்னாள்
பாடுற்றவேலைப்பரப்பின்றலைப்பட்டுமுன்னம்
வீடுற்றமைந்தன்றனைக்கோடல்விரும்புகென்றாள்.

கோடற்கு - கொள்ளுதற்கு, வீடுற்ற - இறந்த. (௪)

மடலாட்டுவண்டுதுதைபூந்தொடைமாதுசொற்றுங்
குடலாட்டமெய்தித்தளர்பாம்பினதுச்சிமேனின்
றடலாட்டுவந்தமழைவண்ணனைநோக்கியன்னோன்
கடலாட்டின்மைந்தன்கழிந்தான்றனைத்தம்மினென்றான்

பாம்பினது-காளியனது, மழைவண்ணனை-கண்ணபிரானை, தம்மின்-தாருங்கள்.

என்னுந்துணையிற்றுணையாகியவேந்தலோடு
மின்னுங்கவீங்குதிரடோட்கருமேகவண்ணன்
மன்னுந்திரைநீர்வருணன்பதிவல்லையோட்டிப்
பொன்னங்கொடிஞ்சித்தடந்தேர்மிசைப்போயினானால்.

துணையில் - அளவில், துணையாகியவேந்தல் - பலராமன். (௫)

வருணன்றெருமந்தெதிர்வந்தெவன்வந்ததென்னாப்
பரவும்பொழுதைப்படர்வெண்டிரைப்பட்டுமாய்ந்த

குரவன்புதல்வன்றனைவல்லைகொடுத்தியென்றான்
அரவஞ்சுமந்தவகன்ஞாலமளந்தவண்ணல்

ஞாலமளந்தவண்ணல் - கண்ணபிரான். ( )

கடலுற்றவாழுங்கனலிற்கனல்கான்றவெங்கண்
மிடலுற்றபாஞ்சசனன்வவ்விவிழுங்கினான்கொல்
அடலுற்றவாழிப்படையாயெனவாழிபுக்கு
மடலுற்றபைந்தார்மணிமார்பினனடினனல்

மிடல் - வலி, வவ்வி - பற்றி. ( ;

வஞ்சம்படைத்தமறிவெண்டிரைவேலையூடு
துஞ்சுந்திறல்வாளவுணன்றனைச்சூழ்ந்துபற்றி
நெஞ்சம்பிளந்துநிலவுக்கதிர்சங்கங்கொண்டான்
கஞ்சங்கடிக்குங்கருணைத்தடங்கண்ணன்மாதோ

வேலையூடு - கடலில், துஞ்சும் - தூங்குகிற ( )

மின்னும்பிறைவாளெயிற்றந்தகன்வீற்றிருக்கும்
தென்னம்புலத்திற்கதிர்மாமணித்தேர்கடாவிப்
பின்னுந்திரையிற்கவர்சங்குபிறங்கயாவும்
முன்னம்படைத்தமுகிலின்றுமுழக்கல்செய்தான்

அந்தகன் - யமன், யாவுமுன்னம்படைத்தமுகில் - கண்ணபிரான் (௧௦)

வெருவுற்றகூற்றம்விரைவோடெதிர்வந்திறைஞ்சி
வரவுற்றதென்கொலெனவேத்தலும்வந்தவண்ணம்
தெரிவுற்றதாக்கிச்சிறுவற்றரவொல்லைமீளாக்
குரவற்பணிந்துகுமரன்றனைக்கொள்கவென்றான்.

கூற்றம் - யமன், சிறுவற்றரா - சிறுவனைக்கொடுக்க, மீளா - மீண்டுவந்து. (௧௧)

பண்டார்கலிநீர்ப்பரப்பின்றலைப்பட்டுமாய்ந்த
வண்டாரலங்கற்சிறுதோன்றன்முன்வந்துநிற்றல்
கண்டார்களித்தார்களியாரமுதள்ளியள்ளி
உண்டார்நிகர்த்தாரெவரேயவரோகைசொல்வார்

ஆர்கலி - கடல், ஓகை - சந்தோஷம். (௧௨)

அடித்தாமரையாலகன்ஞாலமளந்துகாப்போன்
தொடித்தாமரையாற்றொழுதின்னுநின்னுள்ளம்வேட்ட
துடைத்தேலுயர்ந்தோயுரையின்றெனவும்மையிஞ்ஞான்
படைத்தேற்குளதோகுறையென்றுபழிச்சினனால்.

இஞ்ஞான் - இப்போது, வேட்டது - விரும்பினது. (௧௩)

நஞ்சூட்டுபேயின்முலையுண்டொருநச்சராவின்
அஞ்சூட்டினடுங்கருங்கொண்டலலர்ந்தகஞ்சப்

## பத்தாங்கந்தம்.

பைஞ்சூட்டணிந்தமறையோன்விடைகொண்டுபைம்பொன்
செஞ்சூட்டெயில்சூழ்மதுரைப்பதிசென்றடைந்தான்.

நஞ்சூட்டுபேய் - பூதனை, நச்சரா - காளியன், கருங்கொண்டல் - கண்ணபிரான்.
கஞ்சப்பைஞ்சூட்டணிந்த மறையோன் - சாந்தீபன். (௧௪)

குரவன் மைந்தற்கொணர்ந்தவத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௯௩௪.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.



### பத்தொன்பதாவது
### உத்தவனைக்கோகுலத்தில்விடுத்த வத்தியாயம்.



அருட்டந்தைதாயினிடராற்றுபலங்கல்வெள்வேல்
வெருட்டுங்கருங்கண்மடக்கோவியர்வெய்யநெஞ்சம்
தெருட்டும்பொருட்டுவிடுத்தான்றிகழொற்றையாழி
யுருட்டுங்கதிர்ற்றிகழுத்தவன்றன்னைமாயன்.

இடராற்றுபு - துன்பத்தைத்தணித்து, ஒற்றையாழியுருட்டுங்கதிர் - சூரியன். ()

தேதாவெனவண்டொருகோடிசிலம்புதொங்கற்
றூதாடுமென்றற்குழற்காடுதயங்கமல்லற்
கோதூளிமொய்ப்பமருண்மாலையிற்கொண்டல்வண்ணன்
தூதாகிநின்றோனுயர்கோகுலந்துன்னினானால்.

சிலம்பு — சத்திக்கிற, தொங்கல் - மாலை. (௨)

கலிவிருத்தம்.

தோட்டெழுந்துளவினான்றனைவன்வந்தனனென
நாட்டுணர்விரவுதார்நந்தகோனெதிர்கொளாச்
சேட்டிளம்பரிதியிற்றிகழுமார்புறத்தழீஇ
யூட்டினன்விருந்தினிதுளங்களிசிறப்பவே.

என - என்று, நாட்டுணர்விரவுதார் • புதுமலர்க்கொத்துக்களானியன்றமாலை.

பொன்னலந்தாமரைப்பூமகள்காமுறும்
கன்னியந்தண்டுழாய்க்கமழ்தொடையணிந்ததோள்
இன்னெழிற்புதல்வனோடினிதிருந்தனன்கொலோ
மன்னவர்திலகனென்மனமகிழ்தோழனே.

தாமரைப்பூமகள் - இலக்குமி, காமுறும் - விரும்புகிற. (௪)

கனைக்குமாவண்டுணைக்கலுழிபாய்கருங்கவுட்
புனைக்கைமால்யானையின்பான்மருப்பொசித்தநம்

தனிப்பெருஞ்சங்கொளிர்தாமரைக்கரத்திஞன்
நினைக்குமேயெம்மையுநிரைமலர்த்தாரிஞய்.

கனைக்கும் - சத்திக்கிற, பான்மருப்பு - வெண்கொம்பு. (௫)

கறங்குவெள்ளருவிபாய்கனவரைச்சாரலும்
சிறந்தசெங்கதிர்தருதெய்வமாநதியும்வண்
டுறங்குபூஞ்சோலையுமுடன்குலாந்தோழரும்
மறந்தனன்போலுமம்மணிநிறவண்ணனே.

கறங்கு - சத்திக்கிற, கனவரை - பெரியமலை. (௬)

மனமெலாமுருக்கியமகரவார்குழையுமென்
பனிநிலாமுறுவலும்பவளவாய்மலருமோர்
கனியும்வாண்முகமுமெங்கண்களாற்காணுமா
றினமலர்த்தாரிஞனின்னுமிங்கெய்துமே.

முறுவல் - சிரிப்பு, வாள் - ஒளி. (௭)

முல்லையந்தாரிஞன்மூரிமால்வரைநிகர்
வில்லிறுத்தெண்டிசைவேழமேபோல்வரும்
மல்லடர்த்தேந்தியமணிவரைத்தோளிஞற்
புல்லுநாளின்னமும்பொருந்தலுண்டாகுமே

மூரி - வலி. மால்வரை — பெரியமலை, இறுத்து - ஒடித்து (௮)

கோட்டுமால்வரையிஞற்குளிர்மழைதாங்கியும்
காட்டழல்பருகியுங்காத்தகார்பயின்றவால்
ஏட்டிணர்க்கானமுமிளமரச்சோலையும்
நாட்டமுற்றிடுதொறுநாடுமெம்முள்ளமே.

தாங்கியும் - தடுத்தும், பருகியும் - குடித்தும் (௯)

எனப்பலநந்தகோனிசைத்தலுமன்னையும்
புனைத்துழாய்மாலையம்புதல்வனைநினைந்துகண்
பனிப்பவெம்முலைசுரந்தொழுகுபால்பாரெலாம்
நனைத்திடக்கலுழ்ந்தனணன்னர்நெஞ்சுருகியே.

பனிப்ப - நீர்துளிக்க, கலுழ்ந்தனள் - அழுதாள் (௧௦)

கலிநிலைத்துறை.

அத்திறத்தேனக்கியலங்கலாழியான்மேல்
இத்திறமன்புறுமும்மையார்நிகர்ப்பார்
பைத்தரவேந்துமிப்பாரிலென்றுபைந்தார்
உத்தவனெஞ்சமுவந்துரைக்கலுற்ருன்.

ஆழியான் - கண்ணபிரான், அர - ஆதிசேடன். (௧௧)

சங்கமிலங்கியதாமரைக்கைமாயோன்
உங்கண்மனத்திலுமென்மனத்துமுண்டால்

வெங்கனருருவின்மேவிநின்றவாபோல்
எங்கணுமுண்டவனெங்கணும்மைநீத்தான்

தாருவில் - மரத்தில், (விறகில்). (கஉ)

வெள்ளிவெண்முல்லைமிலைந்தசெம்பொன்மார்பனை
உள்ளமுவப்பவுமக்குதித்தகாதற்
பிள்ளைகொல்விண்ணுடுமன்னுமன்றுபெற்ற
தள்ளில்சிறப்புறுதந்தையல்லனைகொல்.

மிலைந்த - சூடின, செம்பொன் - திருமகள். (கந.)

என்றவர்நெஞ்சுதெளித்துவண்டிசைக்கும்
மன்றல்விரிந்தமலர்த்துழாயலங்கற்
குன்றனையானிலைகூறினனலங்கூர்
மின்றிகழ்வெள்ளியும்விண்முளைத்ததன்றே.

தெளித்து - தெளிவித்து, வெள்ளி - சுகரன் (கச)

நடைந்திளவண்டினங்கோதைதாழமின்னின்
சுடர்ந்திலகொண்குழைதோடியங்கநல்லார்
நடைந்தனர்வெண்டயிர்காய்சினத்தபாம்பின்
நடம்புரிகார்செயனுவினனவின்றே

கோதை - பூமாலை, பாம்பில்நடம்புரிகார் - கண்ணபிரான். (கரு)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நிரையெறிதுளியுஞ்சிந்துசெழுமணிதிரளுஞ்செய்ய
மரைமலர்வீழும்வண்டும்வயின்வயின்வயங்கலுற்ற
உரவுநீர்யமுனையாடவுத்தவனெழுந்துசென்றான்
பரிநாயஞ்செல்வன்போலப்பசும்பரித்தேரின்மன்னோ.

செய்யமரைமலர் - செந்தாமரைமலர். (கசு)

கதிர்மணிக்கொடிஞெகிதிண்டேர்காண்டலுமமுதங்கால
வெதிரிசைவடித்தசெவ்வாய்வேரியந்துளவினானை
மதுரையிற்கொண்டுபோயான்வந்தனன்கொல்லோவென்னச
சிதரரிமழைக்கணமாதர்திரண்டனர்நெருக்கினரால்.

வெதிர் - மூங்கில், (புள்ளாங்குழல்). (கஎ)

முகினிறவண்ணன்செய்யமுளரியங்கண்ணன்றாழ்ந்த
மகரவார்குழையன்வட்டவாண்மதிமுகத்தன்பைம்பொன்
துகிலினனிவனம்மாயன்றோழனேயாகுமென்று
அகிலணவிரிந்தகூந்தலாய்ச்சியர்வளைந்துமொய்த்தார்.

செய்யமுளரி - செந்தாமரைமலர். (கஅ)

மடங்கலங்குருளைபோலமத்தமால்யானைக்கோடு
பிடுங்கியநடக்கையானைப்பெற்றெடுத்தவர்தந்துன்பம

கடிந்திடந்தாய்நீயன்றேகாவலவென்றுவெள்வேல்
கிடந்தபோற்பிறழுங்கண்ணார்கிளியெனக்கிளக்கலுற்றார்.

மடங்கலங்குருளை - சிங்கக்குட்டி (௧௯)

கலிவிருத்தம்.

நறையுணின்வரிவண்டுநாண்மலர்விடுமன்றே
அறைகடலமுதூறுமாயகனிநுகர்வுற்றால்
பறவையம்மரம்விட்டுப்படாகுவதுளதன்றே
எறிகதிர்மணிமார்பற்கெம்முறையெவனென்றார்

நறை - தேன் (௨௦)

கண்டலின்முகைவிண்டேழ்காவதமணநாறும்
தண்டலைவிளையாடத்தாதளைதருசெங்கண்
வண்டெதிர்வரல்காணுமயவன்விடுதூதாக
கொண்டொருமுகிழ்மூரற்கோல்வளையுரைசெய்வாள்.

கண்டல் - தாழை, தண்டலை - சோலை. (௨௧)

வெம்மதுநுகர்கிற்பாய்விரைகமழ்துளவத்தா
மைம்முகில்வரைமார்வமருவியமடநல்லார்
கொம்மைவெம்முலையாடுங்குங்குமமெழுகுற்ற
செம்முகமுடையாய்நீதீண்டலெம்மடிவர்தே,

மது - கள், தேன். (௨௨)

விடவரவினிலாடும்விண்ணவனிசைகானத்
திடையர்தமடவார்முன்னென்னைகொனவில்கிற்பாய்
வடவரைபுரைசெம்பொன்மாடநன்மதுரைக்கட்
படைவிழிமடவார்முன்பாடுதல்புரிசென்றே.

வடவரைபுரை - மேருமலையைநிகர்த்த. (௨௩)

மற்றிணைபெறுகல்லாமதுரையினுறைகின்ற
பொற்றொடிமடவார்தய்புதுநலனுகராமே
சிற்றிடைமடவார்தோள்சேர்தரநினைவானோ
கொற்றமும்மதயானைக்கோடுகொணடியோனே,

நலன் - இன்பம், கொற்றம் - வெற்றி. (௨௪)

போக்கறுபொலவண்ணம்பூப்புறமெலிவேமைக்
காக்கவுநினைவானோகாமருகொடியேபோல்
ஏக்கறவுடனெய்தும்மின்னைமடமாதின்
மூக்கறமுனிவுற்றமொய்யடுசிலையோனே.

போக்கறு - குற்றமற்ற, பொலவண்ணம் - பொன்னிறம். (௨௫)

கலிநிலைத்துறை.

ஓர்குறளாயருண்மூவடிமண்ணெனவுற்றோதா
நீர்செலவானகநெஞ்சுபிளப்பநிவந்தானல்

வார்கடன்மண்புகவாலியைமுன்புமறைந்தெய்தான்
காருருவத்தனையார்கொறெளிந்தனர்கற்றோரே.

குறளாய் - வாமனனாகி, ஓதா - சொல்லி, நிவந்தான் - உயர்ந்தான். (௨௬)

மட்டவிழ்தாமரைமாமலர்மேலுறைமாமாதும்
பெட்டவுருப்புணர்பூதனையாவிபிழிந்துண்டோன்
கட்டுறையானிரைபோன்மடநெஞ்சுகலுழ்ந்தாளாம்
விட்டிலள்செக்கர்மணித்திருமார்வம்விழைந்தாளே

மட்டு - தேன், வாசனை. பெட்ட - விரும்பின (௨௭)

தண்ணகையாலுயிருண்டுவிடுங்குளிர்தார்மார்பன்
கண்ணன்வளைந்ததிருப்புருவச்செயல்கண்ணுற்றால்
எண்ணறுநெஞ்சுகுழைந்துவிரும்புதல்யாமேயோ
விண்ணம்விளங்கியவெம்முலைமாதரும்வீழாரோ.

விண்ணம் - விண்ணுலகம், வீழாரோ - விரும்பாரோ. (௨௮)

மங்கையொருத்திமணித்தடமார்பினில்வாழ்வாளாம்
செங்கயலுண்கணொருத்திபுயத்திடைசேர்வாளாம்
கொங்குபடிந்தெழுவண்டுலகுக்கொருகோவோடே
எங்களையித்திறமின்றுபுணர்க்கவெழுந்தாயே.

கொங்கு - தேன், வாசனை. (௨௯)

பொற்றவிலங்கிதழாயிரம்விண்டலர்பூமேவும்
நற்றிருமாதுமணந்தவனின்னருணன்றுமால்
பற்றுபுதன்னைமனத்துநினைத்தவர்பார்மேலொன்
றற்றுமணிச்சிறைவண்டினையொப்பவளிப்பானே

திருமாது - திருமகள், பற்றுபு - பற்றி. (௩௦)

நாமுமறக்குதுநம்மைமறந்தநறுந்தேறற்
பூமகள்கொண்கனையென்னினின்விளங்குமொர்பொன்னாழிக்
காமருசெங்கதிர்நல்கியமாநதிகண்டாலும்
மாமணிகாணினுநெஞ்சுநினைக்குறுமாறேசு.

தேறல் - தேன், செங்கதிர்நல்கியமாநதி - காளிந்தி (௩௧)

என்றலுமஞ்சனவண்ணனிடத்தினிவ்வாறே
ஒன்றியகாதல்விளைத்ததிறத்தினிலுய்தீரால்
மன்றலிலங்குழலீரெனவஞ்சிறைவண்டேது
மென்றளிர்சேர்தருபைந்தொடையுத்தவன்விண்டானால்

அஞ்சனவண்ணன் - கண்ணபிரான். (௩௨)

அங்கணிலம்புனநீவளிவானெனுமைம்பூதம்
எங்குமுறைந்தனனுங்கண்மனத்துமிருந்தானால்

வெங்கதைதாமரைநேமிகிலாவுமிழ்வெண்கேழொண்
சங்கொளிர்கைம்முகிலெங்குமையின் றுதணந்தானே.

தணந்தான் - நீங்கினான். (ரு௩)

மற்றிறைசேய்மையின்வைகியதும்மைமறந்தேயோ
பற்றிடவன்றுகொனும்மனமன்புபழுத்தென்று
விற்றிகழ்பொற்குழைபற்றியலைத்திடும்வேலுண்கட்
சிற்றிடைவெம்முலைமங்கையர்நெஞ்சுதெளித்தானல்.

சேய்மை - தூரம், வைகியது - தங்கினது. (ரு௪)

இவ்வழிநல்வெதிரின்னமுதூறவிசைத்தான்மற்
றவ்வழிதோழரொடாடினனுள்ளமுருக்காநின்
றவ்வழியெம்மொடமர்ந்தனனென்னவந்தேனார்
மைவழிவார்குழன்மங்கையர்கூறவதிந்தானே.

வெதிர் - வேய்ங்குழல், தேன் - வண்டு. (ரு௫)

நரந்தநறைக்குழன்மாதரசோதைநடந்தேழ்பார்
பரந்தபெரும்புகழ்நந்தனுவப்பொடுபாராட்ட
விரிந்தமலர்த்தொடைவேள்சிலதிங்கள்விருப்பாலங்
கிருந்துதிருந்தெயில்சூழ்மதுரைக்கணெழுந்தானே.

நரந்தநறை - கஸ்தூரிமணம். (ரு௬)

வண்டிசைபாடுமலர்த்தொடையுத்தவன்வந்தெய்திப்
புண்டரிகம்பலபூத்தகரும்புயல்போல்வானைக்
கண்டனனெஞ்சுகளித்தனனன்பொடுகார்முல்லை
அண்டர்தமக்கிறைநல்கினயாவுமளித்தானே.

அண்டர் - இடையர். (ரு௭)

காருவரித்துகில்சுற்றிவிளங்கியகாரோதிப்
பார்மகள்கொம்மைமுலைத்தடமேவுபரந்தாமன்
ஏர்வளர்கூனியெனப்பெயர்பெற்றவளில்லின்கண்
ஒர்தருமுத்தவனோடுமெழுந்தனனுற்றானே.

காருவரி - கருங்கடல், காரோதி - கருங்கூந்தல். (ரு௮)

வெள்ளிவெண்முல்லையமெல்லிணர்துன்றுவிரைக்கோதைக்
கள்ளவிழோதியரிற்றெறும்வெண்ணெய்கவர்ந்துண்டோன்
அள்ளிலைவேல்விழியாரமுதம்புரையஞ்சாயல்
ஒள்ளிழைபச்சிளவேய்புரைதோணலமுண்டானல்.

இணர் - பூங்கொத்து, கோதை - பூமாலை, ஓதியர் - கூந்தலையுடையவர், வேய்-மூங்கில். (ரு௯)

மின்னினுடங்குநுணங்கிடையுள்ளம்விருப்பூர
இன்னணமென்னைமணந்தனைநாளுமிருக்கென்ன

அன்னதுநேர்ந்தனனின்னிளஞூரலரும்பாத்தன்
பொன்னெடுமாடமடைந்தனன் மைப்புயல்போல்வானே

மைப்புயல்போல்வான் - கண்ணபிரான். (௪௦)

விருந்துணவண்டுநெகிழ்ந்துநறூவுமிழ்வெண்டோட்டுக்
கரும்பனைமீதுயர்காவலனோடெழுகார்வண்ணன்
அருந்ததிநேர்வருகாந்தினியீன்றருளக்குரூரன்
திருந்தொளிமேவியசெம்பொன்மனைத்தலைசெலவுற்றான்.

நறூ - தேன், கரும்பனை மீதுயர்காவலன் - பலராமன். (௪௧)

உள்ளமுவந்தெதிர்வந்துகணின்பனியூர்கின்றோன்
வெள்ளியவெண்டிரையாடியகங்கைவிளங்கும்பொன்
கள்ளவிழ்தாமரைநீம்புனல்கொண்டுகெழீஇயேத்த
வள்ளிதழ்விண்டதுழாய்மணிமார்பன்மகிழ்ந்தானால்

கங்கைவிளங்கும்பொன்கள்ளவிழ்தாமரை - கண்ணபிரானது திருவடி. (௪௨)

உத்தவனைக் கோகுலத்தில் விடுத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—கூ௭௬

ஸ்ரீ கிருஷ்ண சகாயம்



## இருபதாவது
## அக்குரூரனை அத்தினபுரத்து விடுத்த வத்தியாயம்

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தந்தையிறப்பத்தளர்ந்ததண்டாரைவர்தம்மை
மைந்தர்க்கிணையாக்கண்ணின்மன்னன்காப்பான்கொல்லோ
அந்தினிசென்றறியென்றருட்காந்தினியீன்றெடுத்த
பைந்தார்மார்பன்றனைப்பசும்புட்பாகன்பணித்தான்

கண்ணின்மன்னன் - திருதராட்டிரன் (௧)

ஆயும்பழநான்மறையுமறியலாகாச்செங்கண்
மாயன்பணிப்பமகிழ்ந்துமல்லற்கங்கைநாடன்
பாயுங்கலினப்புரவிப்பைம்பொற்றேர்மேலிவாராக்
காயுங்கனல்கால்சிறுகட்களிற்றுநகர்சென்றடைந்தான்

இவார - ஏறி, களிற்றுநகர் — அத்தினபுரம். (௨)

நிழல்வாய்நேமியுருட்டிநிலவுக்கதிர்வெண்டிங்கள்
எழில்வாய்க்கவிகைநீழலெறிநீருலகங்காக்கும்

வழுவில்சிறப்புவாய்ந்தவடசொற்பெயரால்விளங்கும்
அழல்வெம்பரிதிவதனத்தராசற்கண்டானன்றே.

கவிகை - குடை, வடசொற்பெயர் - முருராசநன். (௩)

அரவகொடியோன்முதலாமரசர்குமரர்தம்மோ
டிரவுத்திரைநீர்க்கங்கையுயிர்த்தோன்றன்பாலெய்
விரைகொப்புளிக்கும்பசுந்தார்விதுரற்காணாவுலகம்
பரவத்தகுசீரைவர்ப்பயந்தாண்மனைசென்றுற்றான்

காணா - கண்டு. (௪)

ஆலக்கருஞ்சேறுமிழுமரவின்னழல்வெஞ்சீற்றக்
காலக்கதிர்வேற்றடக்கைக்கஞ்சன்வெம்போர்கடந்த
நீலக்கொண்டலெமையுநினைக்குங்கொல்லோவென்னாக்
கோலக்குவளைக்கருங்கட்குந்திநெஞ்சங்கலுழ்ந்தாள்.

ஆலம் - நஞ்சு, கடந்த - வென்ற, நீலக்கொண்டல் - கண்ணபிரான் (௫)

நஞ்சமூட்டன்முதலாநச்சுநாகமுயர்த்த
வஞ்சமனத்தான்செய்திவகுத்துமொழிவாடன்னை
நெஞ்சந்தளரேனும்மைநெடியோன்காக்குமென்னாச்
செஞ்சொற்பலவாங்கியம்பித்தெருட்டல்செய்தானன்றே.

நச்சு - நஞ்சு, நாகமுயர்த்தவஞ்சமனத்தான் - துரியோதநன். (௬)

வெங்கணரவமுயர்த்தவெள்வேற்குமரன்செயலும்
அங்கன்ஞாலமளிக்குமரசன்செயலுநாடாத்
திங்கள்சிலவாண்டுறைந்தான்றிங்கணிலவிற்றிகழும்
பொங்கர்த்திரைநீர்க்கங்கைபுரக்குநாடுகிழவோன்

அரவமுயர்த்தவெள்வேற்குமரன் - துரியோதநன். (௭)

பெற்றபுதல்வர்போலப்பிள்ளைச்சுரும்பர்பாடும்
பொற்றாரைவர்தம்மைப்போற்றிக்கொள்ளல்வேண்டும்
ஒற்றைத்திகிரியுருட்டியுலகம்புரப்பாயென்றா
பெற்றிக்கதிர்வேற்றடக்கைவேந்தற்குரைத்தல்செய்தேன்.

சுரும்பர் - வண்டு, புரப்பாய் - காப்பவனே. (௮)

பொதுநின்றுலகம்புரத்திபொங்குபுகழேயல்லால்
ஏதுநின்றதுமற்றென்றாவினியபலவாங்கியம்ப
மதுநின்றொழுகுந்தாரான்மைந்தர்தம்மேற்காதல்
முதிர்கின்றதனாலுளத்தின்மொழிசார்கிலதென்றுரைத்தான்.

புரத்தி - காக்கிறாய். (௯)

விடப்பாந்தளின்மேற்கிடந்தவிரிநீர்நிலத்தின்விழுமம்
துடைப்பான்பிறந்தகண்ணன்றாளவோன்விதிக்கும்விதியார்

கடப்பாரென்னுச்செங்கட்கண்ணற்பரவிக்கடுகி
அடுத்தான்மதுரைப்பதிச்சென்றண்ணற்கனைத்துங்கிளந்தான்.

விடப்பாந்தன் - ஆதிசேடன், விழுமம் - துன்பம், அண்ணல் - பலராமன். (சO)

அக்குரூரனை அத்தினபுரத்து விடுத்தவத்தியாயம் முற்றிற்று,

ஆகத் திருவிருத்தம்—௬அ௬

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---

## இருபத்தோன்ருவது

## சராசந்தனொடுபொருத வத்தியாயம்.



கலித்துறை.

எழ்கடன்ஞாலமளித்திடுகஞ்சனிறப்பெய்த
மாழ்கியவன்பனிமால்வரையமார்வமணப்புற்ற
தாழ்குழலாரிருபேதையர்தந்தைசராசந்தன்
சூழ்கழல்சென்றவிழுந்தனருற்றதுசொற்ருரே.

இறப்பு - மரணம், மாழ்கி – மயங்கி. (க)

அங்கலுழ்கோதையர்கண்கலுழ்கின்றனராங்கோதும்
பொங்கழல்வெவ்வுரைகேட்டலுநெஞ்சுபுழுங்குற்ருேன்
செங்குருதிப்புனலோடுசுழன்றிமைதீகின்ற
வெங்கணழற்பொறிசிந்தவுருத்துவெகுண்டானே.

கண்கலுழ்கின்றனர் - கண்கலங்கி, (முற்றெச்சம்) உருத்துவெகுண்டான் - மிகு கோவங்கொண்டான். (உ)

பல்லுளைவாம்பரிபண்ணுகபான்மருள்வெண்கோட்டுக்
கொல்கரிபண்ணுகபண்ணுகவாடுகொடித்திண்டேர்
வெல்படையாதவர்தம்முயிர்கூற்றுவிருந்தூட்டச்
செல்கடற்படையென்றனன்வெவ்வியதீயொப்பான்.

பண்ணுக - அலங்கரிக்க, கூற்று - யமன். (௩)

எதிர்ந்ததொலூழியிடிக்குமிடிப்பொலியின்றென்று
வெதும்புறுதீவிடநாகமொரெட்டும்வெருக்கொள்ளத்
ததும்பினபேரிதழங்கியவெள்வளைதண்காரின்
அதிர்ந்தனவார்முரசண்டகடாகமதிர்ப்பெய்த.

என்று - என்று, தழங்கின - முழங்கின. (௪)

கொண்டன்முழங்குகடாக்களியானைகுழுக்கொள்ளத்
தெண்டிரைபோலவலங்குளைவாம்பரிசென்றீண்ட

மண்டமர்வேட்கைமலிந்திடுமாகதன்மான்றேரின்
எண்டிசைமன்னவர்கண்டுவணங்கவெழுந்தானால்,

மாகதன் - சராசந்தன், மான் - குதிரை. (௫)

எழுசீர்க்கழிநெடிலாசிரியச்சந்தவிருத்தம்.

வழிந்துதேனொழுகுபாரிசாதமுகைவாய்நெகிழ்ந்தசாவயின்றொறும்
பொழிந்தசெந்துகடுடைத்தசென்றுபலபொன்னெடும்பகொடியெனக்கொலோ
முழங்குதெண்டிரைமுடங்குவேலையெனமொய்த்தெழும்படையெழுச்சியால்
எழுந்ததூளிபடலம்பரந்தனவிலங்குபொன்னுலகமெங்குமே

வயின்றொறும் - இடங்கடோறும். (௬)

சேரெழுந்துபொருமன்னர்செங்குருதிநீர்குடித்துநிணமுண்டுவெம்
போர்விழைந்தழலும்வென்றிவாட்படைபொழிந்ததீயுணவறந்துமே
ஏர்தழைந்தமணியோடைமால்களிறிரும்பனைக்கையின்முழங்குமேழ்
கார்பிழிந்திடவெழுந்ததீம்புனல்கனத்தலாற்கடல்சிறந்தவே.

வறந்து - உலர்ந்து, கனத்தலால் - அதிகரித்தலால். (௭)

கற்றைவானிலவுகான்றவெண்மதிகடுக்கும்வெண்குடைசெறிந்துமேல
ஒற்றையாழியினன்வெய்யசெங்கதிரொளித்துநீடிருள்விளைந்தவே
மற்றழைந்ததிணிதோண்மறங்குலவுமானவேன்மகரமன்னர்தம்
கொற்றநீண்மகுடகோடிசெஞ்சுடர்கொழித்துவல்லிருள்கிழித்தவே.

கடுக்கும் - நிகர்க்கின்ற. (௮)

குழவிஞாயிறுகடப்பவாரிருள்குடித்துவாள்வெயில்விரிந்திடும்
எழின்மணிச்சுடிகையரவினுக்கிறையெருத்துளுக்கவெழுதானைபோய்ப்
பொழிமதக்கரிமருப்பொசித்தசிறுபூந்துழாய்ப்படலையம்பிபோல்
மழைதவழ்ந்துவிளையாடுமாடமலிமதுரைமூதெயில்வளைத்தவே

குழவிஞாயிறு - பாலசூரியன். (௯)

அக்குரோணியிருபத்துமூன்றெனவறைந்ததானையெதிர்முற்றலும்
திக்கயங்களெனவென்றியாதவர்சினந்தலைக்கொளவெழுந்துநீக்
கக்குகண்ணினர்விசித்தகச்சினர்கதிர்த்திலங்குகனைகழலினர்
மைக்கரும்புயல்கிழித்தமின்னெனவயங்குவாள்கொடுதிர்மண்டினார்.

விசித்தகச்சினர் - கட்டினகச்சையுடையவர். (௧௦)

நீணிறப்பரவைவெள்ளிவெண்டிரைநிரைத்துவெண்டிரையொடெதிர்வபோல்
பாணிறக்கவரிநெற்றிமாவினொடுபல்லுளைப்பரியெதிர்ந்தவால்
வானுறத்திகழும்வரையினோடருவிமாலைமால்வரைமலைந்தபோல்
கூனிறப்பிறைமருப்புவேழமொடுகொலைமதக்கரிமலைந்தவே.

மலைந்தபோல் - போர்செய்தனபோல. (௧௧)

அறைகருங்கடலுடுத்தமாநிலமளிக்குமன்னர்முடியுழுதலர்ல்
பறைகருங்கழலலம்பயாதவர்படைப்பரப்பினிடந்திடா

உறைகழித்தவடிவாளழன்றுதழலுமிழ்தலாடமருழந்தவேற்
செறுநருனனிசுவைத்துமற்றதுதெவிட்டிநின்றுமிழ்தன்மானுமே.

செறுநர் - பகைவர். (கஉ).

கொற்பழுத்தகொலைவேலிளேடுசிலகொற்றமாகதரெடுத்தபோர்
விற்பழுத்துமிழும்வெய்யவாளியொருமேலதிர்ந்தெதிரும்யாதவன்
மற்பழுத்ததிணிதோளின்மொய்ப்பனவடித்தநாண்மலரலங்கல்சூழ்
அற்பழுத்தகுழன்மாதர்செங்கணமராடுகின்றனகடுக்குமே.

கடுக்கும் - ஒக்கும், வாளி - அம்பு. (கங)

அழிந்துமட்டொழுகுதாரினுளொருவனம்பகட்டுவரைமார்பின்மேல்
குழந்தைவெண்பிறைமருட்டுகோடடிகுளிப்பவெஞ்சினமிகுந்துபாய்
செழுங்கடாக்கரியின்மத்தகத்தெழுதுசிந்தூரஞ்செறிதனெஞ்சகம்
விழைந்தமாதர்முலையெழுதுகுங்குமமெழுக்கெறிந்தெனவிளங்குமே.

பகட்டு – மயக்குகிற. (கச)

வளைநதெண்கடல்கிளைத்தசெம்பவளவல்லிபோலொளிபிறங்குமாண்
குளம்புடைப்புரவிபார்மிதிக்கிலகுழீஇயமன்னர்நெடுமுடியுநல்
இளங்களிச்சிறுகண்யானைநெற்றியுமிவர்ந்தியங்கினும்வலங்கொள்போர்
விளைந்தசெங்குருதிபாய்களத்தினின்மிதித்தெழுந்தனகடுக்குமே.

இவர்ந்து - ஏறி, கடுக்கும் - நிகர்க்கும். (கரு)

ஏர்திரண்டொழுகுமாதர்வெம்முலையிளங்களிற்றிளுடுபோர்புரிந்
தோரிரண்டுவரையென்னமேம்படுவலங்கொடோண்மகதமன்னவன்
போர்முரண்டொலையவெஞ்சமம்புரிதல்பூவைவண்ணனினையப்பொலந்
தேரிரணடொருவிசும்பினின்றெரளிர்திசாமுகங்கிழியவந்தவால்.

வெம் - விருப்பத்தைத்தருகிற, இளங்களிறு - யானைக்கன்று, உலம் - திரள்கல், சமம் - யுத்தம். (கசு)

நம்பிபான்மதிநிறத்தினுளெனுடுனைந்தலைப்புவிபுரந்திடும்
ஐம்படைக்கிழவன்வந்துமுன்னுறுமலங்குளைப்புரவிபூண்டதேர்
வெம்புசெம்பரிதிநாணவேறினன்விடுத்தனன்கடிதுவேரியந்
தும்பைசூடினன்மிடைந்தகன்னியெயில்சூழ்பெரும்படைதுளங்கவே.

பான்மதிநிறத்தினுன் - பலராமன், ஐம்படைக்கிழவன் - கண்ணபிரான் (கஎ)

வெணணிலாக்கதிருமிழ்ந்ததண்மதியைவெங்குரற்புயல்வளைந்தபோல்
அண்ணல்யானைபலகொண்டுமுற்றமுகையவிழவண்டினமாற்றுதார்க்
கண்ணன்மற்றிளையனிற்கவென்னெடுகடுஞ்சமர்த்தொழில்விளைத்திபால்
வண்ணவென்றுவளைமேனிவள்ளலொடுமகதன்வெஞ்சமர்தொடங்கினன்

புயல் - மேகம், பால்வண்ண - பலராமா. (கஅ)

மறுவறத்திசழுமதியமாமெனவயங்குவெண்கவிகைமகதர்கோன்
விறல்விளங்குபடைவெள்ளமொல்லையினில்வீட்டிவெண்டினையுடுத்தபார்ப்

பொறையகற்றுதுமெனத்தடக்கையெழுபொருசிலைக்குடுமிகோட்டினான்
கறைமிடற்றரவவரசனுச்சிமிசைகால்பெயர்த்ததிறலாட்டினான்.

மறு - களங்கம், ஒல்லை - விரைவு, வீட்டி - கொன்று, பொறை - பாரம், அரவ வரசன் - காளியன். (௧௯)

பட்டமுற்றகரிநெற்றிமேலுமெழுபச்சைவாம்பரிமுகத்தினும்
வட்டுடைக்கொடியவீரர்மார்பினும்வடித்தவாளிமழைதூவினான்
கட்டெழிற்பிறைகடுப்பவெய்யதொருகார்முகக்கடைகுழைத்திடா
விட்டிலங்குகுழைமின்னெனத்திருவில்வீசநின்றகருமேகமே

பட்டம் - முகபடாம், கரி - யானை, பரி - குதிரை, வாளி - அம்பு, கார் முகம்- வில், குழைத்திடா - வளைத்து, கருமேகம் - கண்ணபிரான். (௨௦)

குண்டலத்தினொடுகொற்றநீண்மகுடகோடிசிந்துகரமணிகொழித
தெண்டிசாமுகநடுங்கநின்றெதிரிரட்டுவெள்வளைசுழித்திடா
வண்டிரைத்திமிழுமாலைவேள்மகதர்மானவெண்கவரிநுரைகுலாய்
வெண்டிரைக்கடல்சிவப்பவோடினவிரிந்துபாய்குருதிவெள்ளமே.

கரம் - கிரணம், வளை - சங்கு, குலாய் - பொருந்தி. (௨௧)

சூடுபொன்முடிதுணிந்துவாணிலவுதூற்றுவெண்குடைகவிழ்ந்துபோர்
ஆடல்வன்மகதரனைவருந்தொலையவண்ணனின்றநிலையெண்ணினால்
பாடல்சால்பரிதிவீழ்ந்துவட்டமதிபட்டுவானவரொடுங்குநாள்
சேடனென்றுலகிசைத்திடத்தனிசிறந்துநிற்குநிலைதோற்றுமே.

துணிந்து - அறுபட்டு, ஆடல் - வெற்றி, சேடன் - எஞ்சிநிற்பவன். (௨௨)

போந்தைமீமிசையுயர்த்துவெள்ளிவரைபோலநின்றதிறலண்ணல்கண்
சேந்துபாகனதுசென்னிமணமிசைதெறிதத்திடப்பசியபுல்லியற்
கூந்தன்மாபுரளவிண்கிழித்துநிகர்குன்றின்வீழசனியேறுபோல்
ஏந்துதோண்மகதனூர்ந்ததேர்மிசையிருப்புலக்கைகொடுமோதினான்.

போந்தை - பனை, சேந்து - சிவந்து, அசனியேறு - இடியேறு, ஊர்ந்த-ஏறிவந்த.

நெட்டெயிற்றபலபேய்குனித்திடநெடுஞ்சிலைக்கடைகுழைத்துமேல்
விட்டவிட்டகணையாவும்விண்ணுறவிலக்கிநின்றவளைமேனியான்
வட்டவான்முகடளந்தபொங்கர்மலிமகதர்மன்னனைவளைத்திடாக்
கட்டினான்வருணபாசம்வீசிநனிகண்டவானவர்களிப்பவே.

குனித்திட - ஆட, குழைத்து - வளைத்து, வளைமேனியான் - பலராமன், பொங் கர் - சோலை. (௨௪)

விளைவதுண்டிவனைவிடுதியாலெனவிரைத்துழாய்முகில்விடுத்திடா
அளிபரந்துசுழல்பாரிசாதமலரங்கண்வானவரிறைப்பவால்
உளைவயப்புரவிபூண்டதேர்கடிதினூர்ந்துமீண்டமரிலெய்துநல்
வளமனைத்தினையுமாறிலாமதுரைமன்னவன்பெறவழங்கினான்.

மதுரைமன்னவன் - உக்ரசேநன். (௨௫)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

வாளிளைநோக்குஞாஞ்சில்வலத்தினன்சிக்கயாத்த
தோளிணைநோக்குமிற்றசுற்றமைவரவைநோக்கும்
கேளிணைநோக்கல்செய்யான்சினைவரால்கௌிறுபாயப்
பாளைவாய்விரியும்பூகப்படப்பைசூழ்மகதவேந்தே.

ஞாஞ்சில் - கலப்பை, யாத்த - கட்டின, பூகப்படப்பை - கமுகந்தோட்டம். ()

பரந்ததன்பழியைநோக்கும்பரந்ததன்பழியேபோலச்
சுரும்பெபடுவெண்டுபொடச்சொரிமதஞ்செருக்கித்த ஞ்சாக்
கருங்களிற்றீட்டமெல்லாங்களத்திடைக்கவிழ்ந்து துஞ்சி
இரும்பெருங்குருதிச்சேற்றினிடையிடைக்குவிதனேக்கும்.

துஞ்சி - இறந்து, களிற்றீட்டம் - யானைக்கூட்டம். (உஎ)

அற்றதன்புகழைநோக்குமற்றதன்புகழேபோலக்
கற்றைவெண்ணிலவுகான்றகவிகையுங்கவரிக்காடும்
ஒற்றைவெள்வளையுஞ்சிந்தியொழுகொளியோடைநெற்றிக்
கொற்றமால்களிறுமாய்க்குங்குருதியாறொழுகநோக்கும்.

கவிகை - குடை, ஓடை - முகபடாம். (உஅ)

நிழலும்வெண்டிங்களன்னநித்திலக்கைவிகைவேந்தர்
அழலவிருளை புசெர்கணரியணையிருத்தனேக்கும்
புழைபடுதடக்கையற்றுப்பொன்வரைதுளங்கவீழ்ந்த
கழைசுளிசிறுகணல்வாய்க்களிற்றினைக்கிடத்தனேக்கும்

அரியணை - சிங்காதநம், துளங்க - நடுங்க, நால்வாய் - தொங்குகிறவாய். (உகூ)

அடல்விடைநடந்ததென்னவரசிளங்குமரர்முத்தக்
குடையொடுபிச்சம்பெய்தகுளிர்நிழல்குறுகனேக்கும்
படுபசுங்குருதிமாந்தப்பனியிருவிசும்புபோர்த்து
மிடைதருபருந்தினீழன்மேயதோர்வண்ணநோக்கும்

விடை - இடபம், மாந்த - குடிக்க, மிடைதரு - நெருங்கின. (ருo)

மானவேன்மகதர்மார்பின்மன்றலந்தெரியன்மூசித்
தேனுகர்பறவைசூழச்செருக்களம்படுத்தனேக்கும்
ஆனைசாய்த்தொழுகுகின்றவரத்தநீராறுமூழ்கி
ஊனுகர்பறவைசூழவோங்கலிற்கிடத்தனேக்கும்.

மூசி - மொய்த்து, பறவை - வண்டு, ஓங்கலின் - மலைபோல. (ருக)

ஏழுயர்களிற்றுமன்னரெறியும்வெண்கவரிக்காற்றின்
தாழ்பசுந்தெரியலாடச்சமர்க்களங்குறுகனேக்கும்
வீழ்தருவளைவாய்ப்புள்ளின்விரிசிறையெறிந்தகாற்றின்
சூழ்குடர்மாலையாடத்துஞ்சினர்கிடத்தனேக்கும்.

வளைவாய்ப்புள் - கூளி (பெருங்கழுகு), துஞ்சினர் - இறந்து, (முற்றெச்சம்).

வடிமலர்த்தும்பையார்த்துவாளமராழுவத்தேற்ற
முடிகெழுவேந்தர்கொற்றமுரசுகண்டுயிலனேக்கும்
கடவுளரெழுந்துதுள்ளக்கல்லெனக்கலித்துமல்லற்
சுடர்தவழ்விசும்பிற்றெய்வதுந்துபிமுழங்கனேக்கும்.

அமராழுவம் - போர்க்களம், ஆர்த்து - சூடி. (ரு.ரு)

இன்னனபலவுநோக்கியெள்ளினனரசின்வாழ்க்கை
மன்னியசிறப்புவாய்ந்தமாதவம்புரிதனன்றென்
றுன்னினன்மற்றென்செய்வாரெனுளிறுவெள்ளருவிமாலைப்
பொன்னெடுங்குன்றநோக்கிப்போவதுபுரிந்தான்மன்னே.

உன்னினன் - நினைந்தான், பொன்னெடுங்குன்றம் - மேருமலை. (ரு.சு)

வெல்லலுந்தோற்றலுறுனும்விளைகிலதேவர்மாட்டைய
செல்லனீரவநதினென்றுச்செறிநதவாளரசர்தேற்றக்
கொல்லியவெழுந்தகூற்றிற்கொடுஞ்சமம்புரியநாடி
மல்லலைதசெழுநததோளான்மகதநாடெய்துற்றனல்.

என்று - என்று, கொல்லிய - கொல்ல, கூற்றின் - யமன்போல (ரு௭)

சராசந்தனொடு பொருத வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—எஉக.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## இருபத்திரண்டாவது
## முசுகுந்தற் கருள்புரி யத்தியாயம்



கலிச்சந்தவிருத்தம்.

முதிருங்களியினவண்டினமுரலத்தகைதொடுதார்
ததைபைந்தொடைபுனைகின்றசராசந்தனல்வலத்தால்
பதினேழ்முறையிவ்வாறெதிர்படைவெள்ளமொடெய்தா
மதுரைக்கடியண்முற்றினன்மலைந்தாடமர்தோற்றான்.

முரல - சத்திக்க, ததை - நெருங்கின், எய்தா - வந்து, மலைந்து - போர்செய்து.

பின்னுஞ்சமர்புரிதற்கடல்பெருகுர்படைதிரட்டா
மன்னும்பொழுதினிலின்றொடைமகதித்தனியாழோன்
பொன்னங்கிரிபுரைதேயட்பசும்புலவுப்படையவனன்
தன்னைக்கடிதடையாவமர்தலைப்பெய்திடவுரைத்தான்.

சமர் - யுத்தம், திரட்டா-திரட்டி, மகதித்தனியாழோன்-நாரதன், புரை-நிகர்த்த

இளைத்தானிகன்மகதன்பொரவினியெம்மொடுவெம்போர்
விளைப்பாரிலையெனச்செஞ்சினவேல்யாதவரெல்லாம்

களித்தாரெனமுக்கோடிகடற்றானைகொண்டெழுந்தான்
வளைத்தான்விரிபுனற்குண்டகழ்மதுரைக்கடியரணம்.

இகல்-வலி, பொர - போர்செய்ய, வளைப்பார் - செய்வோர், அரணம் - மதில்.

மலைக்குந்திறல்யவனன்படைவளைக்கும்மமரொருபால்
அலைக்குஞ்சினமகதன்படையொருபாலினியடையின்
கலக்குற்றிடுநகராமெனக்கதிர்கான்மரகதப்பா
சிலைக்கொத்தவிழ்துளவத்தொடையெம்மானினைத்தனனால்.

மலைக்கும் - போர்செய்கிற, அலைக்கும் - வருத்துகிற. (௪)

கார்மேவியபரவைத்திரைக்கடறன்னகட்டிடையே
ஈராறெனப்பகர்யோசனையிடனல்கவவ்விடத்தின்
ஓராயிரம்பெயரோன்விசும்புறைதச்சனைக்கூவாச்
சீர்மேவியதுவரைப்பெயர்த்திருமாநகரமைத்தான்.

பரவை - பரப்பு, அகட்டிடையே - நடுவே, ஓராயிரம் பெயரோன்-கண்ணபிரான்.

சிந்தாமணியொன்றேவுயர்செம்பொற்றிருநாடன்
பைந்தாதுணவளிகோடிபரந்தாடியவந்தண்
மந்தாரமலர்ச்சோலையுமழைமட்டிழிந்தொழுகும்
அந்தார்புனையிமையோருறையத்தாணியும்விடுத்தான்.

மட்டு - தேன், அத்தாணி - அரசிருக்கை (௬)

விரைமட்டுறுதண்டாமரைவிரியக்கதிர்விரியாத்
திரைபட்டவெங்கதிராமெனத்திகழ்கின்றனசெஞ்சூட்
டரவெட்டையும்விழைவிப்பனவருமாமணியுடனே
வரவிட்டனனளகைக்கிறைவளங்கூரிருநிதியம்.

விரை - வாசனை, விரியா - விரித்து, வெங்கதிர் - சூரியன். (௭)

எண்ணற்றனவெறிவெண்டிரையேழ்பாரையுங்கடப்ப
விண்ணத்திடைபறக்கின்றனவிழுப்புள்ளியல்படைத்த
பண்ணுற்றனபால்போல்வனபழிதீர்பசும்பச்சை
வண்ணத்தனகலினப்பரிவருணன்விடுத்தனனால்.

விண்ணத்திடை - ஆகாயத்தில், புள்ளியல் - பறவையினியற்கை. (௮)

செறிவுற்றபல்வளத்தாலருஞ்சிறப்பெய்துமந்நகர்வாய்
நெறியுற்றதண்மடற்றாமரைநிலவத்திகழ்செம்பொன்
மறுவற்றொளிர்வரைமார்பினன்மதுரைத்திருநகர்க்கண்
உறைவுற்றவர்தமைமாயையினுணார்வகையுய்த்தான்.

செம்பொன் - திருமகள், வரைமார்பினன் - கண்ணபிரான். (௯)

சீர்முற்றியமதியாமெனத்திகழ்தம்முனையொன்றார்
போர்முற்றுமிந்நகர்காக்கெனப்புகலாப்புயல்வண்ணன்

கார்முற்றியமதுரைக்கடியெயிளீள்கடைக்கண்ணுற்
றோர்முற்றியபடையேந்தலனெழுந்தோடினனன்றே.

தம்முனை - தமையனை (பலராமனை) ஒன்னார் - பகைவர், புகலா - சொல்லி, எயில் - மதில், படையேந்தலன் - ஆயுதமெடுக்காதவனாய். (க0)

மணிகுண்டலம்வெயில்சிந்திடமணிமார்பினிற்றிகழ
அணிகின்றபைந்துளவத்தொடையணிதார்துயல்வரமின்
பணியுங்கதிர்கான்றாடகப்பசும்பொற்றுகில்குலவத்
திணிதோளொருநான்கொண்மணிச்சிகரங்களிற்றிகழ.

வெயில் - ஒளி, தார் - மாலை, துயல்வர - அசைய ஆடகப்பசும்பொற்றுகில்-பீதாம்பரம், சிகரங்களின் - மலைகள்போல. (கக)

உருவப்பசும்புயல்போலெழுந்தோடுந்திறங்காணாப்
புரையற்றதண்டமிழ்யாழ்முனிபுகல்கண்ணன்மற்றிவனென்
றெரிகக்குசெங்கதிர்வேற்படையவனன்பசும்பொற்றூர்த்
துரகத்தடந்தேர்தூண்டலன்றொடர்ந்தோடினன்மாதோ.

காணா - கண்டு, புரை - குற்றம், துரகம் - குதிரை. (க உ)

செய்ப்பட்டசெங்கமலம்புரைசெம்பொற்கழல்சேப்பக்
கைப்பட்டனனெனவோடியொர்கருங்கல்லளைபுகுதா
மெய்ப்புபட்டதொன்மறையுச்சியின்மிசைவீற்றிருந்தருளும்
மைப்பட்டதண்புயலொப்பவன்மறைந்திட்டனன்மன்னோ.

செய் - வயல், சேப்ப - செவக்க, அளை - குகை, புகுதா - புகுந்து, புயலொப்பவன் - கண்ணபிரான். (கங)

ஆரத்திரள்பொழிமாலைவெள்ளருவிக்கிரிமுழையின்
தாரொப்பவற்றொடர்ந்தேகியகாலக்கதிர்வேலான்
சீருற்றபைந்துளவோனெனச்செங்கண்டுயில்கின்ற
மூரிச்சிலைவலந்தாங்கியமுசுகுந்தனைக்கண்டான்.

ஆரம் - முத்து, துளவோனென - கண்ணனென்று. (கச)

எயில்வந்துவெம்படைமுற்றவுமிகல்வெங்களத்தெய்தா
அயில்வாளமர்தருகின்றிலையபிடார்பிறரெனக்கொல்
துயில்கின்றனையிவணீயெனச்சுடர்கின்றசெங்கதிர்போல்
வெயில்சிந்தியவெவ்வாய்வடிவேலோன்றனையுதைத்தான்.

இகல்வெங்களத்து - கொடியபோர்க்களத்தில், அயில் - கூர்மை, அமர்தருகின்றிலை - போர்செய்கின்றிலை. (கரு)

அழித்தார்கலியுலகேழையுமணியுற்றதனுந்திச்
சுழித்தாமரைமலரிற்றருதுளவப்புயலேபோல்
எழிற்றாமரைவிழிதுஞ்சியவிகல்வேன்முசுகுந்தன்
விழித்தானெதிர்பார்த்தானுடல்வெந்தான்விறல்யவனன்

ஆர்கலி - கடல், துளவப்புயல் - கண்ணபிரான். (கசு)

என்றுமுனை முசுகுந்தனென்றிசைப்பானெவனென்னுப்
பொன்றுழியொன்றுருட்டாக்கடற்புவிகாத்தசெங்கதிரோன்
அன்றுன் விருப்பொடுகூறலுமறைவானரிறபவாழ்;
பன்றுண்மதியெனத்தோன்றியபழநான்மறைமுனிவன்.

என்று - என்ற, உருட்டா - உருட்டி, அரிறப=அரில்தப - குற்றமற (கஎ)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்,

கொய்யுந்துணர்ப்பூந்தொடைமார்பகுன்றேடெட்டுங்கடாக்கலுழி
பெய்யுங்கடக்களிறெட்டும்பேழ்வாயரவும்பொறையுயிர்ப்ப
வையம்புரக்குந்தனிக்கவிகைமாந்தாதாவின்றிருமைந்தன்
எய்யுஞ்சிலைக்கைமுசுகுந்தனென்னுநாமத்தினன்மன்னே.

துணர் - பூங்கொத்து, பொறையுயிர்ப்ப - இளைப்பாற, புரக்கும் - காக்கின்ற.

ஆலக்கருஞ்சேறாம்பாந்தளரசுசுமந்தபுவிநிழற்று
மாலைக்கவிகைநிழலொதுங்குமலர்த்தாரிமையோர்குறையிரப்பக்
காலக்கனல்போலுருத்தவுணர்களத்திற்கவிழக்கற்பகப்பூஞ்
சோலைத்திருநாடிணிதளித்தான்சுடர்செய்வடிவேற்படையோனே

ஆலம் - நஞ்சு, பாந்தளரசு - ஆதிசேடன், உருத்து - கோவித்து (சஅ)

குருகின்பெயரால்விளங்குமுதுகுடுமிநெடுமால்வரைகிழியத்
திருகுசினவேற்படையெறிந்தசெம்பொற்றொடித்தோட்டிறன்முருகன்
முருகுகமழ்தாரமரர்படைமுழுதுங்காப்பத்தோன்றலுமல்
பருகுபசும்பொற்கழலானைப்பார்த்தாரிமையோர்பகர்குற்றார்.

குருகின்பெயரால் விளங்குமுது குடுமிநெடுமால்வரை-கிரவுஞ்சமலை, அல்-இருள்.

மருவின்சாயன்மடமகளிர்மைந்தர்யாருமாங்கிறந்தார்
புரவுபூண்டிங்கமையளிதாய்பொழியுங்கதிர்மாமணிச்சுடிகை
அரவிற்கிடந்தபுயலன்றியளிப்பாரில்லைதனிவீடு
தருதும்பெறநீவேட்டவரஞ்சாற்றென்றமரரிசைத்தனரால்.

புரவு - காத்தற்றொழில், அரவிற்கிடந்தபுயல் - திருமால், அளிப்பாரில்லை - காப்பவரில்லை. (.க)

அழிவின்றுயர்ந்ததனிமுத்தியல்லால்வரங்களனுகுதற்கு
விழைவொன்றில்லான்பன்னெடுநாள்விண்காத்துறங்காவேல்வேந்தன்
ஒழிவின்றுயர்ந்தவிண்ணுடருதவுமுறக்கத்தினனுகி
மழைகண்டுயிலுமலைமுழைஞ்சின்மலாத்தர்மரைக்கண்டுயின்றனனால்.

விழைவு - விருப்பம், மழை - மேகம், கண்டுயிலும்- தூங்குகிற, முழைஞ்சு-குகை.

மலைச்செஞ்சிகரமெனப்பணைத்தமல்லற்றடந்தோளவுணர்குலம்
தொலைச்சிக்குடுமிவேற்றலையிற்சுடர்ப்பூவாகைநறுந்தெரியல்

மிலைச்சிப்பசும்பொனுடைளித்தவேந்தனியலார்விரிக்குநரொன்
றலைச்சங்கணிந்ததடக்கைமுகிற்கன்பனன்பினுரைசெய்தான்.

தொலைச்சி - தொலைத்து, மிலைச்சி - சூட்டி, வாகை - வெற்றி, சங்கணிந்ததடக்கைமுகில் - கண்ணபிரான், அன்பன் - சுகமுனிவன் (உரு)

பதுமப்பொகுட்டுவெட்டவணைப்பாவைமணக்குந்தடமார்பில்
கதிர்கொப்புளிக்குமணிதிகழக்கவின்செய்மகரக்குழைதாழ
உதிரங்குமட்டிங்கணங்குதட்டுமொளிறுவடிவேன்மன்னவற்கு
வெதிர்நின்றிசைத்தசெங்கனிவாய்விமலனருளால்வெளிப்பட்டான்.

பதுமப்பொகுட்டுவெட் டவணைப்பாவை - திருமகள், கவின் - அழகு, ஒளிறு-விளங்குகிற, மன்னவற்கு, முசுகுந்தனுக்கு, வெதிர் – வெளிப்படுமுன் (உ௬)

அருணமணிகள்விளிம்படுத்தவம்பொனுடைததிருமருங்குந்
தருணவெயில்கான்மணிமார்புந்தாமேடாய்தடக்கையொருநான்கும்
இருணன்ககற்றுமதிமுகமுமிருளுஞ்சுருளாருழற்காடும
கருணைபொழியுஞ்செங்கமலக்கண்ணுமெதிர்கண்டுவந்தனனுவ

மருங்கு - இடை, இருளும-இருண்ட, விளிம்பு-ஓரம, உவந்தனன் - மகிழ்ந்தான்.

தழைக்கும்பரிதியொருகோடிதலைவந்தெறிக்குந்தகைபோற்கவின
வழூக்குற்றிடநின்றிமைத்திடுபேர்வனப்பாருருவமுந்தொழின்மற
றிழைக்கின்றவருட்சிறக்கின்றுயாரைநீயென்றெறிகவலை
சுழிக்குங்கமலமலர்ப்பொற்றூடொழுதுகுழைவுற்றேறதன்னுல்.

தலைவந்து - கூடி, இமைத்திடு - பிரகாசிக்கிற, போவனப்பு - பேரழகு. (உ௬)

முரியுந்திரைப்பாற்கடற்றுயிலுமுகுந்தன்யாமேபனிமுருகு
சொரியுந்தாரோயளவிலவெந்தோற்றம்புவியின்பொறைதவிர்ப்பான்
குருதிவடிவேல்வசுதேவன்குமரனென்னத்தோன்றினமால்
வரமிங்குனக்குததரவடைந்தேம்வழங்கென்றிசைத்தான்மறைமுதல்வன்

முருகு – தேன், புவியின்பொறை தவிர்ப்பான் - பூபாரம் நீக்கும்பொருட்டு, மறைமுதல்வன் - கண்ணபிரான். (உஎ)

ஊழியிருபத்தெட்டிலழவொழுகும்வடிவாள்வசுதேவற்
காழிவளருங்காழியமலன்றோன்றியளிக்குமெனத
தாழ்வின்முதியகர்க்கமுனிசாற்றிக்கிடந்தவுரைசூழ்ந்தான்
சூழுமுள்ளங்குளிர்ப்புற்றான்றுளித்தான்கண்ணீரிவைசொற்றான்

ஆழி - பாற்கடலில், வளரும் - கண்வளர்கின்ற, காழியமலன் - திருமால், தோன்றி - அவதரித்து, உள்ளம் குளிர்ப்புற்றான் - மனங்குளிர்ந்தான். (உஅ)

இறக்குமுடலம்யானெனப்பட்டிறந்தும்பாயவித்துணைநாள்
பிறப்பின்மக்கட்பிறப்பம்மபெறுதற்கரிதாலினிப்பிறவாச்
சிறப்புநெறிதந்திடல்வேண்டுந்தெவிட்டாவமுதேயருட்கடலே
துறக்குமுனிவருளக்கமலந்துறவாத்தெய்வச்சுடரொளியே.

இத்துணைநாள்-இவ்வளவுநாள், சிறப்புநெறி-மேலானமுத்திநெறி, துறவா-நீங்காத

யாழின்மிழற்றுமாதர்முதலெல்லாப்பொருளும்போயதுவும்
ஆழித்தடக்கைமுதல்வநினதருளால்விளைந்ததென்றறிந்தேன்
வீழ்தலிலன்மற்றினியொன்றின்வீழ்ந்தேனமரர்முடிசூடி
வாழிவளநான்மறைமுடிமேல்வைத்தநின்றாட்டாமரையே.

யாழின்-யாழோசைபோல, மிழற்றும்-கொஞ்சிப்பேசுகிற, மறைமுடி-வேதாந்தம்,

பொலந்தாமரையினாசிருக்கும்பொன்னங்கொழுந்தின்முலையுழக்க
மலர்ந்தாய்பிழிதாதுறைக்கின்றமன்றற்றுளவமணிமார்பா
நிலந்தாய்விசும்பிற்றவழ்கங்கைநீர்பூத்தலர்ந்ததாண்முளரி
அலந்தார்க்களிக்கலாகாதோவமலாவெனநின்றிறைஞ்சினனால்.

பொலந்தாமரையி னாசிருக்கும் பொன்னங்கொழுந்து - திருமகள், பிழி - தேன், மன்றல் - வாசனை, நிலந்தாய் - நிலத்தைக்கடந்து, தாண்முளரி - பாததாமரை, அலந்தார்க்கு - வருந்தினவர்க்கு. (ருக)

நாட்டமிதுவந்ததுநன்றுநன்றாலம்மாநறுந்தாரோய்
வேட்டமாடுந்திறந்தன்னால்விளைந்தபாவந்தவமியற்றி
வாட்டிமறையோர்குலத்துதித்துவந்தெம்மடிசேர்கெனப்பணித்தான்
ஆட்டுந்திரைமாக்கடல்கலக்கியமுதமமரர்க்களித்தோனே.

நாட்டம் - கருத்து, வேட்டம் - வேட்டை, வாட்டி - அழித்து. (ருஉ)

உழுதாயிரம்வண்டலம்பநறவூற்றுந்தொடைமார்பினன்கையின்
தொழுதான்குழைந்தானுள்ளினன்றுள்ளிப்புனல்கட்டுணைபனிப்ப
அழுதானுவகைத்தடங்கடலிலாழ்ந்தான்வீழ்ந்துதனிமுதல்வன்
எழுதாமறையின்முடிபுனைந்தவிருதாள்சென்னிமிசைப்புனைந்தான்.

அலம்ப - சத்திக்க, நற - தேன், கட்டுணை - இருகண், துளிப்ப - துளிக்க, உவகை - களிப்பு. (ருங)

விடைபெற்றெழுந்தானாற்றிசையும்விழியிற்பார்த்தானிற்பனவும்
நடைபெற்றனவுங்குறைந்தவகைநாடிக்கலிவீற்றிருந்ததெனப்
படைபெற்றோங்குதடம்புயத்தான்படரும்வதரிகாச்சிரமம்
அடைவுற்றொழியாவாசையைவேரரிந்தோர்விருந்தாயினனன்றே.

நிற்பன - அசரங்கள், நடைபெற்றன - சரங்கள், படை - ஆயுதம், அடைவுற்று - அடைந்து, ஆசையைவேரரிந்தோர் - தவசிகள். (ருச)

கலிநிலைத்துறை.

கோட்டினான்சிலைகுரைகடல்வெதும்பவெம்பகழி
மாட்டினானொருமடங்கல்போன்மதுரைவந்தெய்திச்
சூட்டினான்விளங்கெயிற்புறஞ்சூழ்பவர்நூழில்
ஆட்டினான்பலகவந்தநின்றடுகளத்தாட.

கோட்டினான் - வளைத்தான், சிலை - வில், குரை - ஒலிக்கின்ற, பகழி - அம்பு, மடங்கல் சிங்கம், நூழிலாட்டினான்-கொன்றான். இதுபுறப்பொருட்டுறையினொன்று.

வேழவெண்மருப்பொசித்தவன்வெண்டிரைப்பாயல்
ஆழியன்னவன்றன்னொடுமொடல்மேல்யவனன்
பாழிவெம்படைபடுத்தனன்படுபொருளெல்லாம்
சூழுங்கட்டெயிற்றுவரையில்விடுத்தனனெழுந்தான்.

வேழவெண்மருப்பொசித்தவன் - குவலயாபீடமென்னும் யானையின்கொம்பையொடித்தவன், வெண்டிரைப்பாயலாழியன்னவன் - பலராமன். (௩௬)

முளைத்தவெண்பிறைகோட்டகாமுகிலெனவதிர்வ
களித்துவண்டுவீழ்கடாத்தநீர்கழையெனக்கனல்வ
வெளிற்றிளம்பனைக்கரத்ததிண்வெங்கரிநிரைத்து
வளைத்தெதிர்ந்தனன்வால்வளைகலிப்பவெம்மகதன்

கோட்ட - கொம்பையுடையன, அதிர்வ - சத்திப்பன, கடாத்த - மதநீரையுடையன, கழை - மூங்கில், கரத்த - துதிக்கையையுடையன, வால்வளைகலிப்ப - வெள்ளியசங்குகள் முழங்க. (௩.௭)

கரைக்குறாமறிகடல்புரைகதழ்சினத்தானைப்
பெருக்கினனிணம்பில்குவேற்படைச்சராசந்தன்
நெருக்கவோடினனிலைக்களம்புகுந்தவன்கடுப்ப
அரக்கர்வேரறவடற்சிலைகுழைத்தபோரண்ணல்.

புரை - போன்ற, நெருக்க - வருத்த, கடுப்ப-ஒப்ப, அடுசிலை-கொல்லுகின்றவில்.

அருவிமாலையந்தடவரைக்குடையெடுத்ததிரும்
கருவிமாமழைகாத்தவனிதியெலாங்கைவிட்
டுருவவார்குழையொன்றணிந்தவனொடுமோடிப்
பருவவார்முகில்போலவோர்பருப்பதம்படர்ந்தான்.

தடவரை-பெரியமலை, காத்தவன்-தடுத்தவன், குழையொன்றணிந்தவன்-பலராமன்.

காரிரும்புயல்களைப்படுபாளைவாய்க்கமுகின்
ஆரலுவியவகன்பணைமருதநாடாளும்
மூரிவேற்படைமன்னவன்முளரியாற்பொத்தும்
சாரல்வெற்பெலாந்தயங்கழலூட்டினன்மன்னோ

ஆரல் - ஓர்வகைமீன், பணை - வயல், முளரி - தாமரை, அழலூட்டினன் - நெருப்பூட்டினான். (௪0)

மோட்டிருங்கடல்புழுங்கவெம்முனையடுபகழி
வாட்டினானொடுவால்வளைமேனியான்றன்னை
ஊட்டுவெவ்வழலுண்ணுமென்றெழுகுநீர்மகத
நாட்டகஞ்சனிப்புரப்பவனடந்தனனகரம்

முனை - யுத்தகளம், அடு - கொல்லுகின்ற, பகழி - அம்பு, வால்வளைமேனியான் - பலராமன். (௪௧)

கப்புவாயிப்பிகான்றவெண்முத்தொடுசெங்கேழ்த்
துப்புவெண்டிரைசுழித்தெறிதுவரையம்பதியின்

மைப்புயற்குலந்தவழ்தருவரைமுகடிவர்ந்து
குப்புற்றானொருகுழையினன்றன்னொடுகுழகன்

கப்புவாய் - பிளப்பையுடையவாய், இப்பி - முத்துச்சிப்பி, கான்ற - உமிழ்ந்த-செங்கேழ்துப்பு - செந்நிறமுள்ளபவளம், முகடு - உச்சி, இவர்ந்து - ஏறி, குப்புற்றான்-குதித்தான், ஒருகுழையினன் - பலராமன். (சஉ)

முசுகுந்தமு சுருப்புரிய நதியாயம் முற்றிற்று
ஆகத்திருவிருத்தம் — ௰௩௩௩.
ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---

## இருபத்துமூன்றாவது
## உருக்குமிணியைமணத்திறமுரைத்த வத்தியாயம்

கலிவிருத்தம்.

ஆனந்தநாடுகனியானமடன்மன்னன்
மானுற்றவேல்விறலிரேவதனுயிர்த்த
தேனுற்றசின்மொழியிரேவதியைமைதீர்
வானுற்றதனைபனையுயர்த்தவன்மணந்தான்.

அட்டல் - வெற்றி, உயிர்த்த - பெற்ற, மைதீர் — குற்றமற்ற, பனையுயர்த்தவன்-பலராமன். (க)

தேனுற்றநாண்முளரிசெம்முகநகைக்கும்
வீறுற்றதண்பணைவிதர்ப்பன்மகள்பைந்தேன்
ஊறுற்றமென்மொழியுருக்குமிணிதன்னை
மாறற்றபொற்றிகிரிமான்மணமயர்ந்தான்.

முளரி - தாமரை, நாள்-புதிய, திகிரிமால்-சக்ராயுதத்தையுடைய கண்ணபிரான்.

என்னுமுன்வெந்திறலிராக்கதமணத்தால்
பொன்னுழிமாமுகில்புணர்ந்ததுணர்கிற்பான்
அந்நீர்மையாவையுமறைந்தருள்கவென்று
மன்னுதராதவொடுவழங்கமுனிகூறும்.

பொன்னுழிமாமுகில் - கண்ணபிரான், ஆதரத்தொடு - அன்போடு. (௩)

விண்ணுற்றதண்டலைவிதர்ப்பவளநாடன்
மண்ணுற்றசெக்கர்மணிமானுமெழின்மாதைப்
பண்ணுற்றவண்டுபடுபைந்துளவமாலைக்
கண்ணனுக்களிப்பதுகருத்துறவிழைந்தான்.

தண்டலை - சோலை, மண்ணுற்ற - கழுவின, செக்கர்மணிமானும் - ரத்நத்தையொத்த. (௪)

வீடாதவென்றிகெழுவேந்தனதுநாட்டம்
நாடாவவன்புதல்வனச்சிலையவேலான்
வாடாதவாமமலர்மாலைதலையாக்க
ஒடாவயப்படையுருக்குமியுரைப்பான்

வீடாத - நீங்காத, நாட்டம் - கருத்து, நாடா - நாடி (௬)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

விரியல்வெண்டோட்டுமுல்லைவேயிசைவடித்தசெங்கட்
கரியவற்குதவவெண்ணல்கரும்புறழ்கிளவியாளைச்
செருமுகங்கடந்தவென்றித்திறற்சிசுபாலனென்னும்
வரிசிலைவடித்ததிண்டோண்மன்னவற்கீகுவமென்றான்.

கரியவற்கு - கண்ணனுக்கு, கரும்புஉறழ் - கருப்பஞ்சாற்றை நிகர்த்த, கிளவியாளை - சொல்லையுடையவளை (௭)

துப்பிதழ்முளரிச்செங்கட்டுளவினன்செவ்விகேட்டு
வெப்புறழ்காமமேன்மேல்விளைதரவிளைமென்சாந்தம்
அப்பிலும்வெதும்பாநின்றவலர்முலையணங்குமுன்னோன்
செப்பியமாற்றங்கேட்டுச்செவிமுதல்வெதும்பினாள

துப்பிதழ்முளரி-செந்தாமரைமலர், துளவினன்-கண்ணபிரான், செவ்வி- அழகு.

கவின்மதங்கடந்தயாணர்க்கவின்குடியிருந்தகொம்மைக்
குவிமுலைப்பவளச்செவ்வாய்க்கோதற்றொடிகாதல்கூறி
உவவுவெண்டிங்களன்னவொருமறையவனையாங்குப்
புலிபொதிகமலப்பொற்றாட்புயலுழைவிடுத்தல்செய்தாள்.

யாணர்க்கவின் - பேரழகு, உவவு - நிறைந்த, புலிபொதிகமலப்பொற்றாட்புயல்- கண்ணபிரான் (௮)

உப்புநீர்ப்பரவையெல்லாமொண்மதுப்பரவையாக்கும்
குப்பைவெண்மணலிற்செய்தகுளிர்மதுக்கலுழிதூற்றும்
துப்பிதழ்மலர்ப்பூஞ்சோலைசூழ்தருதுவரையெய்திச்
செப்பினன்கண்ணற்கண்டுசென்றவம்மறைவலோனே

பரவை - கடல், மது - தேன், துப்பிதழ் - செவ்விதழ் (௯)

புடைதவழ்வானயாற்றுப்பொங்குவெண்டிரையேபோலக்
கொடிபலநுடங்குமாடக்குண்டினபுரத்துவேந்தன்
மடமகண்மறிமானன்னமதர்வைமென்னோக்கிமற்றுன்
தடவரையகலந்தோயத்தழைத்தனள்காதன்மன்னோ.

வானயாறு - ஆகாயகங்கை, மறிமான் - மான்கன்று, அகலம் - மார்பு (௧0)

ஆங்கவடன்னையையவாயிரம்பகுவாய்நாகம்
தாங்குபேருலகின்மன்னர்த்தருக்கறப்பொருதுவென்ற

தேங்கமழலங்கன்மாலைத்திறற்சிசுபாலனென்னும்
வாங்குவிற்றடக்கையரசர்வமுர்வாணிருக்கின்றாரால்.

ஆயிரம்பகுவாய்நாகம் - ஆதிசேடன், தருக்கற - செருக்கொழிய, பொருது-போர் செய்து, திறல் - வலி, வாய்ந்த - விளக்கின்ற (கக)

விழுவயர்நாளின்முன்னாள்வெற்பிளங்கன்னிதன்னை
வழிபடவெழுவலாங்குவர்தெனைக்கவர்ந்திலானேல்
அழலிடையவிந்துதோன்றியஞ்சனவண்ணன்செய்ய
எழில்வரையகலந்தோய்வலென்றனளணங்கனாளே.

வெற்பிளங்கன்னி - பார்வதி, எழுவல் - வருவேன், அழலிடையவிந்து - தீப்பாய்ந்திறந்து, அஞ்சனவண்ணன் - கண்ணபிரான், தோய்வல் - புணர்வேன். (கஉ).

என்னலுமுந்நீர்வேலியிருநிலவலயங்காக்கும்
மன்னவர்யாருங்காணமானவேல்விதர்ப்பன்காதற்
கன்னியைக்கவர்ந்துகோடுங்காண்டிநீயென்றுகண்ணன்
கொன்னவில்புரவிழ்திண்டேர்கொணர்கெனக்கூறினானல்.

முந்நீர் - கடல், நிலவலயம்-பூமண்டலம், கவர்ந்துகோடும்-கவர்ந்துகொள்வோம்

நிலப்பொறைதவிர்ப்பவந்தோனிலமுதுகுளுக்கவேண்டிக்
கலித்தெழுகடலந்தானைசூழவரக்கமழ்ந்தேன்காமற
இலைப்பசுங்கோதைதூதாமிருபிறப்பாளனோடு
சிலைப்புறுகலினவாமான்றேரிவர்ந்தேகலுற்றான்.

நிலப்பொறை - பூபாரம், தவிர்ப்ப - ஒழிக்க, உளுக்க - நௌிய, கலித்து—ஆரவாரித்து, கோதை - உருக்குமிணி, இருபிறப்பாளனோடு - பிராமணனோடு, சிலைப்புறு-சத்திக்கிற, வாமான் - குதிரை, இவர்ந்து - ஏறி. (கஈ)

கடற்படைகளுலவந்துகளத்தெதிர்வேந்தர்கொற்றம்
முடித்துமென்முருகார்முல்லைமுடித்தலர்கூந்தற்கன்னி
தொடுத்ததாரெம்பிதோளிற்சூட்டுவித்திடுதுமென்று
அடற்பெருந்தானையோடுமலாயுதனெழுந்துசென்றான்.

களுல - நெருங்க, களத்து - போர்க்களத்தில், எதிர் - எதிர்க்கிற, கொற்றம்-வெற்றி, முடித்து - அழித்து, முருகு - வாசனை, தேன். கன்னி - உருக்குமிணி, தார்-பூமாலை, எம்பி - என்தம்பி, என்று - என்று, அலாயுதன் - அலப்பையாயுதத்தையுடையபலராமன். (கச)

ஊனகுபரிதிவைவேலுரவிறல்விதர்ப்பவேந்தன்
கானகுமலர்த்தார்மைந்தன்கட்டுரைகடக்கலாற்றான்
தேனகுமாலையம்பொற்றிறற்சிசுபாலற்கீவான்
மாநகர்புனைகவென்றுமணிமுரசறைவித்தானல்.

ஊன் - மாமிசம், வை - கூர்மை, உரம் - வலி, விறல் - வெற்றி, கட்டுரை - உறுதிச்சொல், ஈவான் - கொடுக்க, புனைகவென்று - அலங்கரிக்கவென்று. (கரு)

திருமகள்வளர்தலானுந்தெண்டிரைவேலினாலுத்
துறைபெறுமன்றலாலேயோங்கியதிறத்தினானும்
செரிகதிர்ப்பனிவெண்முத்தங்கேற்றுப்புசுடர்தலானும்
மரைமலரென்னத்தோன்றும்வளநகர்மன்னிற்றோ.

மன்றல் - வாசனை, விவாகம, தோற்றுப்பு - தோற்றி, சுடர்தல் - பிரகாசித்தல், மரைமலர் - தாமரைமலர் (௧எ)

விண்ணிகர்குடுமிமாடவீதிவாய்நிரைத்தபைம்பொன்
கண்ணவிர்கமுகும்பொன்செய்கதலியும்விளங்குதோற்றம்
பெண்ணமுதோடுமுந்நீர்ப்பிறந்தபொற்பாரிசாதம்
மணணிடைவிழவுகாணபான்வந்தோர்மாட்சித்தாமால்.

குடுமி - சிகரம், கண் - கணு, பெண்ணமுது - திருமகள், முந்நீர் - கடல். (௧அ)

மாமழைதவழுமாடமழைமுதிர்சூற்கொணமன்ற
தாமவெண்டரளமாலைதயங்கொளியுமிழுந்தோற்றம்
தேமொழிமன்றல்வேட்டதிறற்சிசுபாலனென்னும்
சாமவேற்றடக்கையானைநகையசிப்புரிவபோலும்

மழை - மேகம், தரளமாலை - முத்துமாலை, தேமொழி - உருக்குமிணி, வேட்ட- விரும்பின, அசி — அவமதிச்சிரிப்பு, நகை - ஒளி. (௧௯)

பொன்னிதழ்க்கோதைமாதர்புரிகுழல்கமழுநூட்டும்
இன்னகிற்புகைவெண்மாடத்திடைவிராயெழுந்ததோற்றம்
கன்னியந்துளவமேகநுகள்ளவிழ்கமலவீட்டு
மின்னினைக்கோடல்காண்பான்மேகம்வந்தீண்டல்போலும்.

கோதை — பூமாலை, துளவமேகம் - கண்ணபிரான், கமலவீட்டுமின் - திருமகள், (உருக்குமிணி) ஈண்டல் - நெருங்கல் (௨௦)

தாமரைதுறந்தசெங்கமற்றளர்நடையன்னமேபோல்
கோமறுகிண்டுமாதர்குழைமுகஞ்சுடருந்தோற்றம்
காமருசமலமாதைத்தக்கமலலோசனன்கொண்டேகல்
தேமருகமலங்காண்பான்றிரண்டெழுசெவ்விமானும்.

கோமறுகு - ராஜவீதி, காமர் - அழகு, உகரச்சாரியை பெற்றுக்காமரு என்றாயிற்று, கமலமாது - திருமகள், கமலலோசனன் — கண்ணபிரான் (௨௧)

பைந்தொடைமுருகுதூற்றும்பகட்டுடைமிற்பரிதிமார்பின்
அந்திவான்மருப்புத்திங்களலர்கதிராரமின்ன
உந்துநீருலகம்விற்குமொளிமணியோடைநெற்றிச்
சிந்துரக்களிநல்யானைத்திறற்சிசுபாலன்வந்தான்.

முருகு - தேன், பகடு - பெருமை, மருப்புத்திங்கள் - பிறைச்சந்திரன், ஆரம்— சந்திரஹாரம் (௨௨)

மாக்கடல்வண்ணன்வந்துவளைப்பினுமுழுவெண்டிங்கள்
எக்கறுமுகத்துக்கன்னியிகற்சிசுபாலன்பால

தாக்குவனென்றுபொங்குமடற்சராசந்தனுதிக்
கோக்கணமெழுந்துசெம்பொற்கொடிநகர்குழீஇயதன்றே.

கடல்வண்ணன் - கண்ணபிரான், முழுவெண்டிங்கள் - பூர்ணசந்திரன், கன்னி- உருக்குமிணி, கோக்கணம் - ராஜஸமூஹம். குழீஇயது - கூடிற்று. (உங)

இருபிறப்பாளனென்கொலெய்தினனின்னுமென்று
வரிமிடற்றளிவீழோதிமனத்தினினுணருமேல்வை
முருகுகொப்புளிக்குஞ்செய்யமுளரியம்போதுபூதத
கருநெறிக்குவளையன்னகண்ணிடனுடிற்றன்றே.

வரிமிடற்றளிவீழோதி - உருக்குமிணி, செய்யமுளரியம்போது - செந்தாமரை மலர், இடனுடிற்று - இடந்துடித்தது. (உச)

துளிக்கருங்கொண்டலென்னத்தோன்றிமூதுலகமெல்லாம்
அளிப்பவன்விடுக்கப்பட்டாங்களிக்குலமரற்றநண்டேன்
தளிர்க்குமாயிரமென்றோட்டுத்தாமரைத்தெரியன்மார்பன்
களிக்கயலன்னவுண்கட்கன்னிமுன்னெய்தினனுல்

கொண்டல் - மேகம், அளிப்பவன் - காப்பவன் (கண்ணபிரான்) அளிகருலம்- வண்டுக்கூட்டம், அரற்ற - சத்திக்க, தாமரைத்தெரியல்மார்பன் - பிராமணன், களிக கயலன்னவுண்கட்கன்னி - உருக்குமிணி (உரு)

மறுவறுசிறப்புவாய்ந்தமாமறையந்தணாளன்
முறுவல்வாண்முகமோரந்தண்முழுமதிபோன்றதேனும்
எறிகதிர்ப்பரிதியாயிற்றிளநிலாக்கற்றைதூற்றும்
செறிதொடிமடந்தைசெவ்விதிருமுகமுளரிக்கன்றே.

முறுவல் — சிரிப்பு, முழுமதி - பூர்ணசந்திரன், பரிதி - சூரியன், செறிதொடி மடந்தை - உருக்குமிணி, முளரிக்கு - தாமரைமலருக்கு (உசா)

கொந்தழலுமிழும்வெவ்வாய்க்குருதிவாட்படையினோடும்
பைந்தடத்தலர்ந்தநீலப்பனிமலரெதிர்ப்பவாறுசு
சிந்தரிமழைக்கட்பேதைசெவிமுதல்தளிர்க்குமாறு
வந்தனன்கண்ணனென்றுமறையவன்வழங்கினனுல்

சுந்தரிமழைக்கட்பேதை - உருக்குமிணி, வாட்படை - வாளாயுதம், நீலப்பனிம லர்—குளிர்ந்தநீலமலர். (உஎ)

வெயில்பொரவாடடமுற்றமென்றளிர்ப்பசியவல்லி
புயல்பொழிதுவலைமாந்திப்போங்கெழில்படைக்குமாபோல்
மயிலெருத்துறழுமேனிமாயவன்வரவுகேளாக
குயிலெனமிழற்றுமாதுகொழுங்கவினெய்தினளே.

வெயில்பொர — வெயில்பட, புயல் - மேகம், துவலை—மழைத்துளி, மாந்தி - குடித்து, மயிலெருத்து - மயிற்கழுத்து, உறழும் - ஒத்த, கேளா - கேட்டு (உஅ)

புரிவளையலறிமுத்தம்பொழிபுனற்றடங்களெல்லாம்
விரைகமழ்கமலம்பூத்தவிதர்ப்பநாடணைதல்செய்தான்

குரைதிரைப்பரவைமுந்நீர்க்குவலயம்வந்துதோன்றும்
ஒருபெருங்கமலம்பூத்தவுந்தியந்தடக்குடற்தும்மான்.

புரிவளை - முறுக்கையுடைய சங்கு, குரை - சத்திக்கிற, பரவை - பரப்பு, குவலயம் - பூமண்டலம் (௨௧)

பொழிமதயருவிமாலைப்பொருப்பின்வெண்கோடுகொண்ட
வழுவறும்சோளினனம்மன்னகைக்கனிவாய்மாதின்
விழுவிறுக்கடைந்தானென்றவீங்குநீர்விதர்ப்பநாகரும்
கழைகனிகனிநல்யானைகநாவலனெநிர்கொண்டானல்.

பொழிமதவருவிமாலைப் பொருப்பு - குவலயாபீடமென்னும் யானை, மாது - உருக்குமிணி, விழுவு - மணம. (௩௦)

ஆயிரம்பகுவாய்நாகத்தறிதுயின்மேவறுகுஞ்செய்ய
ஆயிரக்கணணிறுன்வந்தடைந்தலும்மிடைந்துபாண்வண்
டாயிரமலம்புந்தாரிவ்வண்ணமேலர்காணக்கணகள
ஆயிரம்பெற்றிலேமென்றகங்கனிந்துருகிநிற்பார்.

மிடைந்து - நெருங்கி, அலம்பு - ஒலிக்கின்ற, வர் - அழகு, தார் - பூமாலை, அண்ணல் - கண்ணபிரான் (௩௧)

வலம்புரிபொறித்தசெங்கைமறைமலாதனிலொண்கேழ
வலம்புரிநிகழுந்தாங்கிவருவதும்கையென்றேயோ
வலம்புரிநாங்கல்செய்யாவவந்தணிலவுகாலும்
வலம்புரித்தடக்கையாமனவாழியிவவள்ளலென்பார்

வலம்புரிபொறித்த - சங்கரேகைபதிந்த, கேழ - நிறத்தினையுடைய, வலம்புரி- பாஞ்சஜந்யம (௩௨)

ஆழியம்பொருப்புவேலியவனியோரமுமொற்றை
ஆழியேயகாக்குந்தீவாயாழிமற்றெண்கொலென்றே
ஆழிகைத்தாங்கல்செய்யானடைந்தனனாழியானை
ஆழியந்தேரிற்றோன்றமரசிளங்குமரனென்பார்.

ஆழியம்பொருப்பு - சக்ரவாளகிரி, அவனி - உலகம், ஆழி - ஆஜ்ஞாசக்ரம், நகிரிப்படை, ஆழி - உருள. (௩௩)

காமலாம்பண்டுசெயதநற்றவமுடையேமாயின்
சீமறைமலரினீங்கித்தண்பண்ணவிதர்ப்பநாக்கும்
கோமகன்மனையிற்றோன்றுங்கொழுங்குயறகருங்கட்செவ்வாய்க்
காமருவனப்பினுளைககவருமககாளையென்பார்

காமருவனபபினுள் — உருக்குமிணி. (௩௪)

எழுதருஞ்செவ்வாய்நதவீங்கிவன்றனக்கேயந்தண
முழுமதிபுரையுமுரான்முகத்தவளுரியளென்பார்
மழைமதர்நெடுங்கட்செய்வாய்மாணிழையவட்கேமற்றித்
தழைவிரிதுளவத்தண்பூந்தாரவனுரியனெனன்பார்.

செவ்வி - அழகு, புரையும் - நிகர்த்த. (௩௫)

கருங்கடலன்னகாதல்கைம்மிகவளைத்துநீண்ட
கருங்கடலன்னகண்ணார்கருந்துழாய்ப்படலைமாலைக்
கருங்கடல்வண்ணன்றன்னைக்கண்டொறுங்கதிர்கள்பொங்கு
கருங்கடற்படுவெண்சங்கங்கையிகந்தாழியநிற்பார்.

கைம்மிக - அதிகரிக்க, வெண்சங்கம்-வெள்ளியவளையல், கையிகந்து-கைநழுவி.

நுணங்குமென்மருங்குநோவநுண்ணெழில்வாய்ந்தமாமைச்
சுணங்கணிந்தேந்துகொங்கைத்தோகையர்தூசுவாரி
மணங்கமழ்கடம்பினேறுமாயனைக்காணுந்தோறும்
அணங்கரவுரியினன்னவந்துகினெகிழநிற்பார்.

நுணங்கு - வளைந்த, மருங்கு - இடை, சுணங்கு - தேமல், தூசு - ஆடை, அரவு
ரியினன்ன - பாம்புச்சட்டைபோன்ற. (௩௭)

அலங்குவெண்மதியையென்றவண்ணல்வாண்முகத்தைமானும்
மலர்ந்தசெங்கமலமென்றுமதிப்பதோர்மதிகொலென்பார்
பொலங்கிரிமருளவீங்குபுயத்தொடுபொருவுமென்ன
இலங்கொளிநீலக்குன்றமெத்தவம்புரிந்ததென்பார்.

அலங்கு - ஒளிசெய்கிற, மானும் - நிகர்க்கும், மதிகொல் — அறிவுதானோ, பொல
ங்கிரி - பொன்மலை, (மேரு) பொருவும் - நிகர்க்கும், நீலகுன்றம் - நீலமலை. (௩௮)

செஞ்சுடர்விரிக்குமின்னுத்திரண்டெழுதோற்றம்போல
மஞ்சிவர்குடுமிமாடமறுகுதோறீண்டுமாந்தர்
நெஞ்சகமுருகாநிற்பநித்திலமுறுவற்செய்வாய்
அஞ்சனவண்ணனுங்கோரகன்மணிக்கோயில்புக்கான்

மின்னு - மின்னல், (உகரம் சாரியை) மஞ்சு - மேகம், மறுகு - வீதி, ஈண்டும்—
நெருங்குகிற, நித்திலம் - முத்து (௩௯)

உரைப்பரும்பொலிவிற்றாகியோசனைநூறுதெய்வ
மருக்கமழ்மாலைக்காங்கோர்மலர்மணங்கொளுத்துமாபோல
அரக்கிதழ்க்கமலநீங்கியரசரிற்பிறந்தமன்றற்
புரிக்குழற்பவளச்செவ்வாய்ப்பூவையைப்புணர்தல்செய்தார்

தெய்வமரு - தெய்வமணம், அரக்கிதழ்க்கமலம் - செந்தாமரைமலர், பூவையை-
உருக்குமிணியை (௪0)

முள்ளரைமுளரியன்னமுழுங்கைமுகததிருடன்
வள்ளைவார்காதிற்றூழ்ந்தமணிக்குழைகுலாயதோற்றம்
கிள்ளையிற்சிறந்தபாராள்கேள்வன்மேற்றூதுபோக்கும்
பிள்ளையஞ்சுரும்புவந்துபேசுவபோன்மற்றம்மா.

கிள்ளையிற்சிறந்த - கிளியினுமேலான, பாராள் கேள்வன் - கண்ணபிரான், பிள்
ளையஞ்சுரும்பு - இளவண்டு. (௪௧)

முருகுணமழலைவண்டுமூசுபூங்கூந்தற்பேதை
அரிபார்த்தகன்றவாட்கணஞ்சனமணிந்ததோற்றம்

திரைபடிந்தெழுந்தகாரிற்றிகழ்பவனுருவக்காந்தி
பருகினதெவிட்டிக்காலும்பான்மையேபோலுமாலோ.

முருகு - தேன், மூசு - மொய்த்த, பேதை - உருக்குமிணி, காரிற்றிகழ்பவன்- கண்ணபிரான். (௪உ)

ஒடிக்கவஞ்சுடர்கால்பச்சையொண்மணியாரந்தாழ்ந்து
வடிக்கருங்கண்ணிகொம்மைவரிமுலைத்திகழுந்தோற்றம்
கடற்புவிபொதிந்தசெம்பொற்கனைகழற்காளைகாமர்
அடைத்துழாயலங்கன்மாலையணிந்ததும்போலுமன்றே

ஒடிக்க - முறிக்க, சுடர்கால் - ஒளியைக்கக்குகிற, வடி - மாவடு, பொதிந்த- மூடின, காளை - கண்ணபிரான் (௪௩)

கழைக்கரும்பனையகுயின்றொற்கன்னிமென்மருங்கிற்கொம்பு
குழைதழைத்தெழுகொங்கைமுன்றிற்குங்குமமெழுந்ததோற்றம்
அழைத்ததமால்களிறுகாதற்றானப்பகட்டலங்கன்மார்வம்
தழைத்தசெம்மணியின்காந்திதவழ்ந்ததும்போலுமன்றே

அனுக்கும - வருத்துகிற, மருங்கிற்கொம்பு - இடையாகியகொடி, (இன் அல்வழிச்சாரியை) அழைத்த மால்களிறு - கஜேந்திராழ்வான், மார்வம் - மார்பு. (௪௪)

புரிநரம்பிரங்குசொல்லாள்புணர்முலைக்களிநல்யானைச்
சொரிகதிர்ப்பணிவெண்முத்தஞ்சுடர்த்தரசூடுந்தோற்றம்
பெருமதவரைகீள்கொடுபிடுங்கினோன்றுயவுதிண்டோள்
வரையொடுமலையத்தும்பைமலைந்தனம்போலுமாதோ.

மதவரை - மதமலை, (யானை) தோள்வரை - புயமலை (௪௫)

மலர்தலையுலகமகாத்தோன்மலரடிகமலைசேர்ந்த
தலைகலாமுயிர்த்தாள்பொற்றாளுறுகுநாமென்றுநாடி
அலைதவழ்யமுனைசெய்யவடிமலரடைந்ததேய்க்கும்
சிலைநுதல்புனையுநீலச்சில்லரிச்சிலம்புமன்றே.

தலை - இடம், உயிர்த்தாள் - ஈன்றவள், ஏய்க்கும - நிகர்க்கும், சிலைநுதல் - உருக்குமிணி, புனையும் - தரித்த (௪௬)

மருப்பிளந்திங்களன்னவாண்மருப்பொசித்தமைக்கார்
விருப்பிளந்தோகைவெவ்வாய்வேற்படைவெள்ளஞ்சூழ
அருப்பிளமுலையாரீண்டவாடகப்பசும்பொற்கோட்டுப்
பொருப்பிளங்கன்னிநோன்புபோற்றுவான்போயாண்மாதோ.

மைக்கார் - கண்ணபிரான், பொருப்பிளங்கன்னி - பார்வதி. (௪௭)

முதுமறைமுதலிசெம்பொன்மொய்வரைமார்வமேவி
விதுபுனைசடிலன்றாயவிரிஞ்சனுதியைப்பூத்துப்
பொதுமலியருளினோம்பிப்புரக்குநம்மன்னைதண்பூ
மதுவருகூந்தற்கன்னிவணக்கமேற்கொளல்வியப்பே.

முதுமறைமுதலி - திருமால், விது - சந்திரகண்டம், சடிலன் - சடையையுடையவன் (சிவன்) பூத்து - ஈன்று, ஓம்பிப்புரக்கும் - காத்துரக்ஷிக்கிற, நம்மனை - உருக்குமிணி, கன்னி - பார்வதி, வியப்பே - ஆச்சரியமே. (சஅ)

கன்னிநன்னகரினெய்திக்கள்ளயாவுயிர்க்குமந்தலா
கன்னியந்துளவுசூடுங்கண்ணனைக்கணவனாகக்
கன்னிநீயருள்செய்கென்றுக்கண்ணுதல்வேட்குங்கொங்கைக்
கன்னியையுலகமீன்றகன்னியாமகத்தினாளால்

கள் - தேன், அயாவுயிர்க்கும் - தூற்றுகிற, கண்ணுதல் - சிவன், வேட்கும்-விரும்புகிற, உலகமீன்றகன்னி - உருக்குமிணி. (சக)

சில்லரிச்சிலம்புபாடக்கிங்கிணிசிலம்பக்காஞ்சி
ஒல்லெனவொலிப்பச்செம்பொனுழுருமாலிமயமீன்ற
வல்லியைவலங்கொண்டேகிமடநடையன்னமன்னாள்
எல்லிலங்காழிதந்தணைட்டேமாறுவானெண்ணிநின்றாள்

சிலம்ப - சத்திக்க, இமயமீன்றவல்லியை - உமாதேவியை, ஏறுவான் - ஏற. ( )

நறையகிலாவியுண்டுநரந்தமுமலருநாறி
உறைமுகிலாவியுண்ணுமொலிகருங்கூந்தற்கற்றை
செறிதொடியிடக்கையேந்திசெம்மலெங்கிருந்தானென்றுக்
கறையுறுவடிவேலன்னகண்மலர்பரப்பினாளால்

நறை - வாசனை, அகிலாவி - அகிற்புகை, நரந்தம்-கஸ்தூரி, முகிலாவியுண்ணும்-மேகத்தினுயிரை யுண்ணுகிற, செம்மல் - கண்ணபிரான், கறை - உதிரம். (ருக)

சூழ்படைகிழியதெய்வசசுடர்மணிப்பொலந்தேர்தூண்டி
ஆழ்கடலவனியாளுமரசருங்காணவாங்குப்
போழ்படுதிங்களன்னபுதுநிலாக்கறைதூற்றும்
காழிளமுலையினாளைக்கவர்ந்தனன்கமலக்கண்ணன்

போழ்படுதிங்களன்ன புதுநிலாக்கற்றை தூற்றும் காழ் - முத்துமாலை. (ருஉ)

வெண்டலைப்புணரியாடும்விரிகடல்கலக்கிக்கொண்ட
பண்டருகிளவியாளைப்படைக்கடல்கலக்கிக்கொண்டு
கொண்டலங்கொழுந்துமின்னுககொடிதலைமணந்ததொத்தான்
வண்டுணமலர்ந்ததெய்வமரகதத்துளவந்தாரான்.

புணரி - கடல், பண்டருகிளவியாள் - உருக்குமிணி, மின்னுககொடி - மின்னற்கொடி, தலைமணந்தது - கூடினது. (ருங)

ஆலமுற்றிருந்தவெள்வேலடற்சீராசந்தனுதி
மாலைவெண்கவிகைவேந்தர்மறலிவாளரவிற்சீறிக்
கோலவெந்தூணியாததுக்கொடுமரங்குழையவாங்கிக
காலியற்புரவித்திண்டேர்கதுமெனக்கடாஅய்ச்சூழ்வுற்றார்.

ஆலம் - விஷம், மறலி - பகைத்து, அரவின் - பாம்புபோல, தூணி - அம்புக்கூடு, கொடுமரம் - வில், வாங்கி - வளைத்து, கால் - காற்று, கதுமென - விரைவாக, கடாஅய் - செலுத்தி. (ருச)

### கலிநிலைத்துறை.

மாற்றாதவென்றிமறமன்னர்மலங்கிவீற்று
வீற்றாகவோடவிறற்பால்வளைமேனிவள்ளல்
கூற்றாடவாடுங்கொடித்தேர்கடிதோட்டியாங்கே
ஏற்றானிடிக்குமிடிபோலவின்றொனெறிந்தான்.

மலங்கி - கலங்கி, வீற்றுவீற்றாக — வெவ்வேறாக, பால்வளைமேனி வள்ளல் -. பலராமன், கூற்று - யமன், ஏற்றான் - எதிர்த்தான் (௫௫)

மராமன்னதோன்றன்மறலாவரிவில்வணக்கும்
சராசந்தனோடுதனியேறெனச்சென்றுதாக்க
அராகின்றெழுந்தோனரவத்தடந்தேரினந்தண்
குராமன்னுநீழற்குழற்கொம்பினைக்கொண்டெழுந்தான்.

மராம் - வெண்கடம்பு (ஆச்சாமரம்), மறலா - பகைத்து, வளைக்கும் - வளைக்கின்ற, ஏறு - ஆண்சிங்கம், அராகின்றெழுந்தான் - கண்ணபிரான், அரவம்-ஒலி, குராமன்னுநீழற்குழற் கொம்பினை - உருக்குமிணி பிராட்டியை (௫௬)

வாடாதவென்றிகெழுவால்வளைவண்ணன் வல்வில்
கோடாதமுன்னங்குலைவுற்றுவிற்கோட்டல்செய்யான்
ஆடாதவெம்போரினியாடுதுமென்றெதிர்ந்த
ஓடாததானைமகதர்க்கரசோடினானால்.

வால்வளைவண்ணன் - பலராமன், கோட்டல்செய்யான் - வளைக்காதவனாய், மகதர்க்கரசு - சராசந்தன். (௫௭)

சார்வாய்க்கிழிக்குங்கதிர்மின்னனையாளைவந்து
போவாய்நகிகிரிப்புயல்வவ்வினனென்றவாடும்
தார்வாய்த்திணிதோட்சிசுபாலனைசசென்றுசார்ந்து
சீர்வாய்மகதத்திருநாட்டிறைதேற்றலுற்றான்.

மின்னனையாளை — உருக்குமிணி=பிராட்டியை, கிகிரிப்புயல் — கண்ணபிரான், வவ்வினன் - கவர்ந்துசென்றான் (௫௮)

மல்லுங்களிறுங்கடந்தானொடுமாறுடன்று
செல்லுஞ்செருத்தோறுடைந்தேனெதிர்சென்றுதாக்கி
வெல்லுந்திறனுமொருகால்விளைவுற்றதனறே
சொல்லுந்திறனென்கலங்கேலெனச்சொற்றுநீத்தான்.

மல்லும் - சாணூரன் முஷ்டிகன் என்னுமல்லரையும், களிறும் - குவலயாபீடம் என்னும் யானையையும், கடந்தான் - வென்றவன் (கண்ணபிரான்) செருத்தோறு-யுத்தந்தோறும், உடைந்தேன் - தோற்றேன், சொற்று - சொல்லி, நீத்தான் - நீங்கினான்

முளைநாண்மதியிற்றிகழ்வாணுதன்முல்லைமூரல்
இளையாளைமாயனெறுழாற்கவர்ந்தேதகனேக்கி

விளையாதசீற்றம்விளைவுற்றனனீள்வி தர்ப்ப
வளநாடன்மைந்தன்வடவானலம்போலெழுந்தான்.

எறுழால் - வலியால், சீற்றம் - கோவம் (கூ0)

தெரிவுற்றமுல்லைக்குழலான்றனைச்செற்றுத்தீங்தேன்
விரையுற்றமுல்லைக்குழனங்கையைமீட்கிலேனேல்
முருகுற்றபைந்தார்முடிமன்னவர்முன்னமீண்டு
வரையுற்றமாடமணிமாநகர்வாரலேனுல்.

முல்லைக்குழலான்றனை - கண்ணனை, செற்று - செயித்து, நங்கையை - உருக்குமிணியை, மீட்கிலேனேல் - மீட்கிலேனுயின், வாரலேன் - வாரேன் (கூக)

வாடடானையெல்லாமெழுகென்றவில்வாங்கிமான்றோ
ஒட்டாவழல்வாயுமிழ்வாளிதெரிந்துசெல்லா
நாட்டாமரைமேலுறைகின்றவணங்கைமுன்னேன்
தாட்டாமரைக்கட்கரியோனொடுதாக்கிநின்றான்.

வாங்கி - வளைத்து, ஒட்டா - ஓட்டி, வாளி - அம்பு, அணங்கை - உருக்குமிணியை, கரியோனொடு - கண்ணபிரானேடு. (கூஉ)

பூத்துந்தியந்தாமரைவாய்ப்பொழிம்பெழுமேட்டழும்
காத்தெங்குநின்றகருணைக்கடன்மேற்கனன்று
கோத்தண்டமுற்றுங்குலுங்கச்சிலைநாணெறிந்து
தீத்தும்முவாளிசிலசிந்தினன்றீயொடொப்பான்.

பொழில் - உலகம், கருணைகடல் - கண்ணபிரான், தீத்தும்மு - தீச்செறிந்த

வாரும்பசுந்தேன்படிந்தஞ்சிறைவண்டுபொற்று
தாருஞ்செழுந்தார்புரளம்பதுட்டாரமார்பன்
தேரும்பரியுஞ்சிலையோடுதுணிபடுசிதக்
காருங்கடலும்புரைவான்சிலைகால்குழைத்தான்

வாரும் - ஒழுகுகின்ற, பகடு - பெருமை, பரியும் - குதிரைகளும், துணிந்து-அறுபட்டு, காருங்கடலும் புரைவான் - கண்ணபிரான், சிலைகால் குழைத்தான் - வின்னுனியை வளைத்தான். (கூச)

துஞ்சாமணிப்பூண்டுயல்கொங்கைசுமந்தெ நசிந்த
அஞ்சாய்மருங்கினமுதன்னவண்முன்னுதித்தோன்
செஞ்சோரிகான்றுதிகழ்கின்றவொள்வாள்விதிர்த்து
நஞ்சூறுநாகத்துயிநீர்ந்தவன்முன்னடந்தான்.

துயல் - அசைகின்ற, நசிந்த - துவண்ட, மருங்கு - இடை, முன்னுதித்தோன்-தமையன், சோரிகான்று - உதிரங்கக்கி, விதிர்த்து - அசைத்து, நஞ்சூறுநாகத்துயிநீர்ந்தவன் — கண்ணபிரான். (கூரு)

வில்லற்றுவாளோடெதிர்ந்தான்றனைவீட்டமாயன்
எல்லிற்கதிர்கான்றெறிவெஞ்சினவெஃகமேந்தக்

கொல்லற்கவென்றுகொடிமின்னின்வயங்குகோதை
மல்லற்கமஞ்குன்மழைவண்ணனைவேண்டினாளால்.

எல்லின் - சூரியன்போல, எஃகம் - சக்ராயுதம், கோதை - உருக்குமிணி. (சுரு)

ஊன்றுவெள்வேல்விறலோனையொர் தூசினீங்கி
வானாறுநக்குங்கொடித்தேர்மிசைமன்னயாத்துத்
தேனாறுதாமஞ்செறிகுஞ்சிகுறைத்தல்செய்தான்
மீனாறுவேலைக்கடல்வெம்பவில் வாங்குமேகம்

தூசு - ஆடை, வானாறு - ஆகாயகங்கை, யாத்து - கட்டி, தாமம் - பூமாலை, குஞ்சி - சிகை, குறைத்தல் செய்தான் - அறுத்தான், கடல்வெம்பவில்வாங்குமேகம்- கண்ணபிரான் (சுள)

பால்வண்ணனுங்குப்படுவெஞ்சமரேற்றுநின்ற
கோல்வண்ணவல்விற்குலமன்னவர்பாறவென்று
சூல்வண்ணமேகக்கொழுந்தாமெனதோற்றம்வாய்ந்த
நீல்வண்ணநேமிநெடியோனுழையெய்தினனே

பால்வண்ணன் - பலராமன், கோல் - வளைத்த, பாற - ஓட, நீல்வண்ணநேமி நெடியோன் - கண்ணபிரான் (சுஅ)

வீக்குஞ்செயற்குமுனியாவருவேலினனை
யாக்கும்பிணிப்பினிடைநின்றுமகற்றியாவும்
காக்குங்கருணைக்கடன்முன்னமுகிழ்த்தகாளை
சேக்குங்குவளைத்தடங்கண்ணியைத்தேற்றினனல்.

வீக்கும்செயற்கு - கட்டினசெய்கைக்கு, முனியாவருவேலினன், கோவித்துக் கொண்டு வருகிற வேற்படையவனாகிய ருக்மியை, பிணிப்பு - கட்டு, யாவும் காக்கும் கருணைக்கடல் முன்னமுகிழ்த்தகாளை - பலராமன், சேக்கும் - செவந்த, குவளைத்தடங் கண்ணி — உருக்குமிணி (சுகு)

கலிவிருத்தம்

பொருப்புறழுமாடமலிபேரூசகடமென்னும்
திருக்கிளருமாநகர்திறப்படவியற்றூ
உருக்குமியுறைந்தனனுருக்கமைபசும்பொன்
தருக்கிளர்துறக்கநிகர்தன்னகர்தணந்தே

பொருப்புறழும - மலையைநிகர்த்த, இயற்றூ - உண்டாக்கி, துறக்கம் - சுவர்க்க லோகம், தணந்து - நீங்கி. (எ0)

தன்னிகரில்கற்பகதருக்கொணர்கருங்கார்
பொன்னொழுகுவல்லிகொடுபோவதுகடுப்ப
மின்னொழுகுபூணணியுமெல்லியறளைக்கொண்
டின்னெழில்சிறந்தநகரின்புறவடைந்தான்.

கருங்கார் - நீலமேகம், கடுப்ப - நிகர்க்க, பொன்னொழுகுவல்லி - பொற்கொடி, மெல்லியறளை - உருக்குமிணியை, (எக)

துளும்புகதிர்முத்தலைசுருட்டுநெடுமுந்நீர்
விளிம்புதிகழ்மாநகரமேவிவிரிபொற்று
தளந்தளியலம்பலரினன்னமெனவாழ்வாள்
இளம்பவளவல்லியெனவின்னெழில்சிறந்தாள்

முந்நீர் - கடல், அளி அலம்பு - வண்டுகள் சத்திக்கிற, அலரின் - தாமரைமலரிலுள்ள. (எ௨)

வேழநகர்மன்னர்முதல்வெண்டிரையுடுத்த
எழிருநிலத்தரசர்யாவருமிறுப்ப
வாழிநெடுவானவர்வழுத்தமணிவண்ணன்
ஆழிதருமின்னமுதமன்னவளைவேட்டான்.

வேழநகர் - அத்திநபுரம், எழிருநிலம் - பெரிய சப்தத்வீபங்கள், இறுப்ப - தங்க, ஆழிதருமின் னமுதமன்னவளை - உருக்குமிணிபிராட்டியை, வேட்டான் - மணஞ்செய்தான் (எ௩)

இக்கதையிசைக்குநரிசைப்பதுவிருப்பால்
புக்கினிதுகேட்குநர்கள்பொன்னிதழ்விரிக்கும்
செக்கர்கமலத்தவடிருந்தருள்வழங்க
மக்களொடுமிப்புவிமகிழ்ந்துறைவர்மாதோ.

இசைக்குநர் - சொல்வோர், செக்கர் கமலத்தவள் - திருமகள். (எ௪)

உருக்குமிணி பணத்திருமுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—அ௯௱.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

—(✻)—

இருபத்துநான்காவது

## பிரத்துமன னவதரித்த வத்தியாயம்.



எழுசீர்க்கழிநெடிலாசிரியச் சந்தவிருத்தம்

தெண்டிரைத்துயின்றநம்பிசெம்பொனாரமார்புதோய்
வண்டாற்றுகோதையவ்வயிற்றுவந்துதித்தனன்
துண்டவெண்பிறைக்கொழுந்துசூடுநக்கனெண்ணுதற்
கண்டிறந்தகாலையிற்கரிந்திறந்தகாமனே.

தெண்டிரைத்துயின்றநம்பி - கண்ணபிரான், கோதை — உருக்குமிணி, நக்கன்-சிவன், நுதற்கண் - நெற்றிக்கண். (௧)

ஊற்றிருந்துபச்சிரத்தமொழுகுகின்றபரிதிவேற்
சீற்றமிக்கசம்பரன்றெரிந்துவெய்யபகையெனு

மாற்றருஞ்சிறப்புவாய்ந்தமன்றல்வேனிலானையவ்
வீற்றறைக்கரந்தெடுத்திருங்கடற்படுத்தினான்.

சீற்றம் - கோபம், சம்பரன் - ப்ரத்யும்நன்பிறந்தவுடனே சூதிகாக்ருஹத்திற் பிரவேசித்து அந்தச்சிசுவை யெடுத்துக்கொண்டுபோய்க் கடலிற்போட்டுவிட்ட வோரிராக்கதன், இவன் ப்ரத்யும்நனாலேயே கொல்லப்பட்டான், வேனிலானை - ப்ரத்யும்நனை, ஈற்றறை - ஈன்றவீடு. (ப்ரஸவக்ருஹம்). (௨)

அலைதுளித்தவேனிலானையாங்குமீன்விழுங்கவோர்
வலைஞன்மற்றுமயிலைவீசவலையகப்படுத்திட
நலமிகுந்ததீதெனநயந்துபோர்கடந்தவேற்
றலையலங்கல்வாகைவேய்ந்தசம்பரற்குநல்கினான்.

மயிலை - மீன், நலம் - அழகு, நயந்து - விரும்பி, கடந்த - வென்ற, அலங்கல்-பூமாலை. (௩)

மட்டருந்திவண்டுபாடுமன்றன்மாலைமார்பினான்
அட்டிலிற்கொடுப்பவட்டின்முதல்வியாயமர்ந்திடும்
இட்டிடைதடங்கொள்கொங்கையிரதிமீன்குறைத்தலும்
விட்டிலங்குகுழவிமீனுள்விழிகளிப்பநோக்கினாள்.

மட்டு - தேன், மன்றல்-வாசனை, அட்டில் - சமையல்வீடு, இட்டிடை-சிற்றிடை, குறைத்தலும் - அறுத்தலும், விட்டு இலங்கு-ஒளிவீசி விளங்குகிற, குழவி - குழந்தை.

மெல்லென்முல்லைமுரலாள்வியந்தெடுத்தகாலையாழ்
வல்லமாதவத்தனெய்திவாணெடுங்கண்மங்கையிவ்
வெல்லிலங்குகுழவிமாயனீன்றதோன்றல்வேனிலஞ்
செல்வனின்மணாளனென்றுதேர்ந்துதன்மைசெப்பினான்.

முல்லைமுரலாள் - முல்லையரும்புபோலும் பற்களையுடையவளாகிய ரதிதேவி, வியந்து-அதிசயித்து, யாழ்வல்லமாதவத்தன்-நாரதன், வேனிலஞ்செல்வன்-மன்மதன்.

இளங்களிச்சுரும்பர்கோடியேடுலாவுமுகைகிழித்
துளர்ந்துபாடவூறுமட்டுறைத்தமாலைவேனிலான்
விளங்குவானிலாவுகுத்தவெண்பிறைக்கொழுந்துபோல்
வளர்ந்தனன்றளர்ந்தநுண்மருங்குன்மாதர்மயரவே.

சுரும்பர் - வண்டுகள், முகை - அரும்பு, மட்டு - தேன், வேனிலான் - மன்மதன், மயர - மயங்க. (௬)

காளையாயகாலையிற்கருப்புவிற்குழைத்தபோர்
வேளையேர்தணிந்தநீலவெற்பெனப்பணைத்ததிண்
டோளைநோக்கிநீலமுந்துளங்குகொற்றம்வாய்ந்தகூர்
வாளும்வென்றகண்ணிகாதல்வாரிவீழ்ந்தழுந்தினாள்.

குழைத்த - வளைத்த, வேளை - மன்மதனை, பணைத்த - பருத்த, நீலம் - நீலோத்பலமலர், கொற்றம் - வெற்றி, காதல்வாரி - ஆசைக்கடல். (எ)

கன்னல்வில்லிசெங்கயற்கருங்கணாள்குறிப்பறிந்
தன்னைநீவிழைந்ததென்னையம்மவென்றியம்பலும்
மன்னனீயெனக்குமாயன்மைந்தன்வேனிலானெனா
மின்னினுண்மருங்குலாள்விளைந்தவாவிளம்பினாள்

கன்னல்வில்லி - கரும்புவில்லையுடையவனாகிய மன்மதன், குறிப்பு - எண்ணம், விழைந்தது - விரும்பினது. (அ)

நஞ்சளாவியமுதுதோய்ந்தநாமவேற்கருங்கணாள்
கஞ்சனைக்களத்துவென்றகண்ணன்மைந்தவிண்ணுலாம்
மஞ்சிலங்குமின்னினன்னவாள்வலங்கொள்சம்பரன்
வெஞ்சமங்கடத்தியென்றுவிஞ்சையொன்றுநல்கினாள்.

நாமம் - அச்சம், மஞ்சு - மேகம், வலம் - வெற்றி, வெம்சமம்கடத்தி - கொடிய போரை வெல்லக்கடவை, விஞ்சை - வித்தை. (கூ)

அரிமழைத்தடங்கணாளளித்தவிஞ்சையெய்தலும்
விரைகொழித்ததும்பைசூடிவேனிலாளிவல்லைபோய்ப்
பொரவழைப்பவிழிசிவந்துபொருமடங்கலேறுபோல
எரியழற்சினத்தினானெதிர்ந்துபோரியற்றினான்.

அரி - இரேகை, விரை - வாசனை, வேனிலாளி - மன்மதன், வல்லை - விரைவாக, பொர - போர்செய்ய, மடங்கலேறு - ஆண்சிங்கம் (க0)

தண்டமொன்றுதாங்கியும்பர்தலைபனிப்பநெடியமூ
தண்டகோளமதிரநின்றடித்தசம்பராசுரன்
துண்டமாகமின்னெனச்சுடர்ந்தவாளின்வீட்டினான்
வண்டுபாடவாய்நெகிழ்ந்தவாகைமாலைசூடினான்.

தண்டம் - கதாயுதம், தலைபனிப்ப — தலைநடுங்க, வீட்டினான் - கொன்றான். ()

வெளிமுகங்கிழித்தெழுந்துமின்னினன்னமாதொடும்
துளிமதுக்கடுக்கையான்றுளங்கவெய்தவேனிலான்
அளிகிடந்தலம்பவாயவிழ்ந்தகண்ணிமாயன்வாழ்
நளிகடற்கிடங்குடுத்தநன்னகர்க்குநண்ணினான்.

வெளிமுகம் - ஆகாயத்தினிடம்; மின்னினன்ன - மின்னலைநிகர்த்த, கடுக்கையான் - சிவன், துளங்க - சலனமடைய, அளிகிடந்தலம்ப - வண்டுகள் தங்கிச்சத்திக்க, கண்ணி - பூமாலை, கடற்கிடங்கு - கடலாகிய அகழி. (கஉ)

வேழவெம்படைத்தடக்கைவேனிலானிறுத்தலும்
கேழ்கிளர்ந்ததண்ணிலாக்கிளைத்தசங்கினோடுகூர்
ஆழிதாங்குசெங்கைநங்கையனென்றுகோனகர்
காழணிந்தவெம்முலைக்கருங்கணார்மயங்கினார்.

வேழம் - கரும்பு, படை - ஆயுதம், வேனிலான் - மன்மதன், இறுத்தலும் - தங்குதலும், கேழ் - நிறம், ஆழி - சக்கரம், ஐயன் - கண்ணபிரான், காழணிந்த - முத்துவடமணிந்த, வெம் - விருப்பம்.

அழலுகச்செயிற்று வாளராவணைத் துயின்றமால்
எழில்விளங்குதேவிநோக்கியித்தறைக்கரந்தபைங்
குழவிகோலமன்னதேந்தல்கோலமென்றுமுலைசுரந்
தொழுகுபாலினிலனெகிழ்த்துளுருகிநின்றிரங்கினுள்.

அராவணை துயின்றமால் - கண்ணபிரான், தறை - பூமி. (கச)

அறிந்தமாயனென்றுமாங்கறைந்திலன்னிருப்பவேல்
எறிந்தமைத்தடங்கணுண்முன்னெய்திநின்வயிற்றிடைப்
பிறந்ததோன்றலிவனெனுப்பிறந்தவண்ணமோதினுன்
உறழ்ந்துமென்னரம்புளர்ந்தவொற்றைமாதவத்தினுன்.

அறைந்திலன் - சொல்லாமல் (முற்றெச்சம்), மாதவத்தினுன் - நாரதன். (கரு)

காவிவென்றுவேல்பொருங்கருங்கயற்கணீருகக்
கோவைமுத்தணிந்ததன்னகொங்கைமால்கொழிப்பநின்
ருவியன்னமைந்தனைத்தனங்கையிற்றழீஇயினள்
ஓவியப்பொலங்கொழுந்துவப்பசும்புளுரவே.

காவி - குவளைமலர், உவப்பு - களிப்பு. (கசு)

மலைக்குமாழியானுமாழிமாலைநல்குமன்னனும்
சிலைக்கைமன்னன்மன்பெருஞ்சிறப்புவாய்ந்ததேவியும்
கலித்தவெண்டிரைத்தடங்கடற்சுருவுயிர்த்ததம்
குலக்கொழுந்தையன்பினிற்குழைந்துபுல்லினரோ

மலைக்கும் - போர்செய்கிற, கலித்த - ஒலித்த, சுரு - மீன் (கஎ)

வேறு,

எழில்வளர்மாயாவதியெனும்பேர்பெற்றிருந்தவவ்வின்னகைமங்கை
கழைவளர்தோளிலெழுதுநீங்கரும்புகன்னவிரேரளினிற்கதுவத்
தழுவுதற்கடங்காத்தடமுலைமுகட்டிற்றண்மலர்த்தார்வடுப்பொறிப்ப
விழைவினிற்றழுவிவிழிகவர்வனப்பின்மேவனிலஞ்செல்வன்வீற்றிருந்தான்.

கழை - மூங்கில், கரும்பு. கதுவ - பட, பொறிப்ப - அழுந்த, விழைவினில்-விருப்பத்தோடு, வனப்பு - அழகு. (கஅ)

பிரத்துமன னவதரித்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—அருரு.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

—(*)—

# இருபத்தைந்தாவது

## சத்தியபாமையை மணம்புரியத்தியாயம்,



*கொத்தலைதவழுங்குரைகடல்பொடித்தகுழவியஞ்செங்கதிர்ப்பரிதி*
*ஒத்தொளிகிளைக்குஞ்சமந்தகமணியோடொருதனித்திகிரியான்றனக்கு*
*மூத்தவெண்கவிகைமன்னவர்பசும்பொன் முடிபொரச்சிவந்தபூங்கழற்காற்*
*சத்திரசித்துநித்திலமுறுவற்சத்தியபாமையைத்தந்தான்.*

கொத்தலை - கூட்டமாகிய அலைகள், குரை - ஒலிக்கிற, பொடித்த - உதித்த, செங்கதிர்ப்பரிதி ஒத்து - சூரியனை நிகர்த்து, திகிரியான்றனக்கு - கண்ணபிரானுக்கு, பொர - படுதலால். (௧)

*என்னலும்பின்னற்றிரைமுகஞ்சிவப்பவெழுந்தமாமணிகிடந்திமைக்கும்*
*பொன்னுறையலங்கன்மார்பினன்றனக்குப்பொழிகதிர்மணியொடுதுவர்வாய்*
*அன்னமென்னடையவணங்கினையரசனளித்ததுவிரித்தருளென்ன*
*மின்னகுபரிதிவேலினன்கிளப்பமெய்த்தவன்விளம்பலுற்றனனால்.*

பின்னற்றிரை முகஞ்சிவப்ப - கடலிடஞ்சிவக்கும்படி, இமைக்கும் - விளங்குகிற, பொன் - திருமகள், துவர் - பவளம், வேலினன் - பரிக்ஷித்து, மெய்த்தவன் - சுகன்.

*எரிமணிச்செஞ்சூட்டராவணைதுயிலுமிறையவரிறைவன்மார்வத்துத*
*திருமணிகடுப்பப்புணரிமேன்முளைத்துச்செம்பொன்மால்வரைவலந்திரியும்*
*ஒருதனியாழித்தேரவற்பரவியுடைதிரையாழியேழுடுத்த*
*பெருநிலங்காக்குஞ்சத்திராசித்துப்பெற்றனன்சமந்தகமணியே.*

எரிமணிச்செஞ்சூட்ட ராவணைதுயிலும் இறையவரிறைவன் - திருமால், மார்வத்துத்திருமணி - கௌஸ்துபமணி, கடுப்ப - நிகர்க்க, புணரி - கடல், ஒருதனியாழித்தேரவன் - சூரியன், சமந்தகமணி - சத்திராசித்து சூரியனைவழிபட்டு அவனால்பெற்றவொரு அர்புதமணி, இது நாடோறும் நூற்றறுபது துலாம் எடையுள்ள சுவர்ணத்தைத்தரும், ஒருநாள் சத்திராசித்தினுடைய தம்பியாகிய ப்ரஸேநன் இதைக்கழுத்திலணிந்து காட்டுக்குப்போகையில், அவனை ஒரு சிங்கமானது கொன்று அந்தமணியைக்கொண்டுபோய்க் கொண்டிருந்ததை சாம்பவந்தன் பார்த்து அந்தச்சிங்கத்தைக்கொன்று அதனிடத்திருந்த மணியைக்கொண்டுபோய் தன்மகளாகிய சாம்பவதியினுடைய ஊசலிலேகட்டித் தொங்கவிட்டான், அதற்கு முன்னே இந்தமணியை கண்ணபிரான் தனக்குக் கொடுக்கவேண்டுமென்று சத்திராசித்தைக் கேட்டிருந்ததனால், இந்த மணியின்பொருட்டுக் கண்ணபிரானே பிரசேநனைக் கொன்றானென்று ஒரு அபவாதமுண்டாயிற்று, அந்தநிந்தையை யொழிந்துக் கொள்ளும்பொருட்டுக் கண்ணபிரான், ஜாம்பவந்தனிருக்கிற குகைக்குப்போய் அவனோடு இருபத்தெட்டுநாள் போர்செய்து அந்தமணியைக் கொண்டுவந்து சத்திராஜிததுவுக்குக் கொடுத்தான், அவ்வளவில் சத்திராஜித்து கண்ணன்மேல் இல்லாத அபவாதத்தைக்கற்பித்தேன், இதனாலுண்டாகிய விரோதத்தை யொழித்துக்கொள்ளும் உபாயம் யாது என்று விசாரித்து, தன்மகளாகிய சத்தியபாமையைக் கண்ணபிரானுக்குக் கொடுத்து, அவனால் மன்னிக்கப்பட்டான், இந்த சத்தியபாமையை முன்னே சததன்வனுக்குக் கொடுப்பதாக வாக்கத்தஞ்

செய்திருந்ததனால், அவ்வாறு செய்யாமல் தப்பிப்போனதற்குச் சததன்வன் கோவித்து சத்திராஜித்தனைக் கொன்று அந்தமணியை யெடுத்துக்கொண்டுபோய் அக்ரூரனிடத்தி லொளித்துவைத்து, சத்தியபாமையினிடத்துள்ள அன்பினால் க்ருஷ்ணன் தன்னைக் கொல்லுவானென்று நினைத்து அஞ்சி ஒரு வேகமுள்ள குதிரைமேலேறி மிதிலா நகரத்தை நோக்கிச்சென்றான். அந்தச்செய்தியை க்ருஷ்ணன் தெரிந்துகொண்டு அவனைப் பின்றொடர்ந்து தூரத்திப் பிடித்துக்கொன்று இவனது ஆடைகளில் மணியைத்தேடிக் காணாமல் வந்து அந்தவிருத்தாந்தத்தைச் சததியபாமைக்குச்சொல்லி மணிகாணாமற்போன வுளவை விசாரித்துக்கொண் டிருந்தான். அதையறிந்து அக்ரூரன், மணி தன்னிடத்திலிருப்பதனால், தனக்கு என்னகெடுதி நேரிடுமோவென்று, துவாரகையைவிட்டு தேசாந்தரம் போனான். அவ்வளவில், துவாரகையிலே அளவற்ற உத்பாதங்களுண்டாயின, அதற்குக் காரணம் அக்ரூரன் ஊர்விட்டுப் போனதேயென்று தெரிந்துகொண்டு க்ருஷ்ணன் அவரைத்தேடிக் கண்டுபிடித்து அழைத்துக் கொண்டு வந்து சம்மானித்து மணியை உன்னிடத்திலேயே வைத்துக்கொள்ளென்று சொன்னான், அதைக்கேட்டு அக்ரூரன் மணியைத் தான் கவர்வதற்குச் சம்மதிக்காமல் க்ருஷ்ணனுக்கே கொண்டுவந்து கொடுத்துவிட்டுத் தான் போய்விட்டான். (௩)

விழுத்தவப்பேற்றாலடைந்தமாமணியைவிரைமதுத்துளித்தபூந்தாரான்
கழுத்தினிற்புனைந்துவருதலுமற்றைக்கடிநகர்மாக்கணேக்கினர்கண்
வழுக்குசெஞ்சுடர்செய்பரிதியஞ்செல்வன்வருமெனத்திருமறுமார்பன்
தழைத்தவெண்ணிலவுபொழிமதிக்கவிகைச்சத்திராசித்தெனக்கிளந்தான்.

விழுத்தவம் - பெருந்தவம், விரை - வாசனை, புனைந்து - அணிந்து, திருமறுமார்பன் - கண்ணபிரான், மதிக்கவிகை - சந்திரவட்டக்குடை (௪)

விரிகடல்வயிறுகீண்டுசெங்குருதிவெள்ளம்வந்தெழுந்தெனத்தவழும்
எரிகதிர்க்கற்றைசொரிமணிபிறப்பவெறுழ்வலியரவுகால்யாத்த
வரையினிற்கலக்கும்வலம்புரித்தடக்கைவள்ளலம்மன்னனைநோக்கித்
திருவிழைபவளச்செய்யவாய்திறந்துசெம்மணிதருகெனக்கிளந்தான்.

கீண்டு - கிழித்து, எறுழ்வலி - மிக்கவலி, கால்யாத்த - வாயுவினாற் பிணிக்கப்பட்ட, வரையினில் - மலைபோல. (௫)

செறியிருட்குறும்புதிசைத்திசையிரியத்திகிரியொன்றுருட்டுசெங்கதிரோன்
மறைதரத்திகிரிவழங்கியதடக்கைமரகதவுருவினான்றனக்கு
உறுபொருள்வேட்கையுடையனைக்களித்தவ்வலம்பொருதோளினொருநூற்
றறுபதுதுலாம்பொனுடொறுமீனுமழன்மணிகொடுக்கிலேனென்றான்.

குறும்பு - சிற்றரசர், இரிய - ஓட, திகிரிவழங்கிய - சக்கரத்தைவிடுத்த, மரகதவுருவினன் - கண்ணபிரான், வேட்கை - விருப்பம். (௬)

வெள்ளிவெண்டிங்கண்மீமிசைகவிப்பவிளங்கிளஞாயிறுநடந்தாங்
கொள்ளொளியெறிக்குஞ்சமந்தகமணிபூண்டொற்றைவெண்கவிகைமேனிழற்ற
எள்ளருந்துப்பிற்சத்திராசித்துக்கிளவலாமெழிற்பிரசேனன்
வள்ளுகிராரிமாவழங்குதண்சாரல்வரையிடைவேட்டமேலெழுந்தான்.

இளஞாயிறு - பாலசூரியன், நிழற்ற - நிழலைச்செய்ய, துப்பு - வலி, இளவல்-தம்பி, வள்ளுகிர் - கூர்மையாகியநகம், அரிமா - சிங்கம் (எ)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

அருவரைச்சாரல்வேட்டமாடுழியழன்றுபொங்கி
நிரையுளையரிமானேறிநிழல்சுளிகளிறுமானும்
வரிசிலையுழுவற்கொன்றுமழகதிர்ப்பரிதியென்ன
எரிசுடர்க்கற்றைதூற்றுமெழின்மணிகவர்ந்தன்றன்றே

வேட்டமாடுழி - வேட்டையாடும்போது, அரிமானேறு - ஆண்சிங்கம், களிறுமானும் - யானையை நிகர்த்த, வரிசிலையுழுவன் - பிரசேநன், மணி - சமந்தகமணி, கவர்ந்தன்று — கவர்ந்துகொண்டது (அ)

கோக்களிற்றுழுவன்மார்பிற்குருதிநீர்தெறித்ததென்னத்
தேக்கடைதவழ்ந்தசெங்கட்டெறுநினைவரிமாத்துஞ்சத்
தாக்கினன்மணிக்கைகொண்டு சாம்பவன்பிலத்துநண்ணித்
தூக்கினன்குழவியாடுந்தொட்டின்மேற்சுடரமன்னோ

குருதிநீர் - உதிரநீர், தெறு - கொல்லுகிற, துஞ்ச - இறக்க, பிலத்து-குகையில்.

தம்பியைக்காண்கிலானுற்சத்திராசித்துமாழ்கி
வெம்புசெஞ்சுடர்செய்சீர்சால்விழுமணிப்பொருட்டுப்பற்றித்
தும்பிவெண்கோடுகொண்டதொடிபொலிதடக்கையானே
எம்பியைச்சவட்டினுனென்றெடுத்தெடுத்தியம்பலுற்றான்.

மாழ்கி - மயங்கி, தும்பி - குவலயாபீடம் என்னும் யானை, கோடு - தந்தம், தும்பிவெண் கோடுகொண்ட தொடிபொலிதடக்கையான் - கண்ணன், சவட்டினன்-கொன்றான். (௧0)

கடங்கலுழ்களிற்றுமன்னன்கரைவதுகேட்டுக்கண்ணன்
தடங்கிரிச்சாரலெய்தித்தாமவேற்காளைமாண்டு
கிடந்ததுமரிமாத்துஞ்சிக்கிடந்ததுமெண்கொன்றாங்கு
நடந்ததுங்கண்டுமற்றந்நடவையினடந்தான்வல்லே.

கரைவது - சொல்லுவது, காளை - பிரசேநன், அரிமா - சிங்கம், துஞ்சி-இறந்து, எண்கு - கரடி, நடவை - வழி, (௧௧)

இருட்பிலமொன்றுதோன்றவிருள்படுபிலத்தினெல்லைக்
கரைக்குறும்பெறிந்துபொங்குசூருங்கடற்றுளைநிற்பத்
திரைத்தலைபிளந்துதோன்றுஞ்செங்கதிர்ப்பரிதிநாண
உருத்தெரிஞானநந்தவுருவினனொல்லைபுக்கான்

பிலம் — குகை, திரைத்தலை — கடலினிடத்தை, பரிதி — சூரியன், ஞானனந்தவுருவினன் — கண்ணபிரான், ஒல்லை — விரைவாக. (௧௨)

குழைவியின்விளையாட்டாகக்குழவியம்பரிதிபோலும்
எழின்மணிசுடரநோக்கியிந்திரநீலவெற்பின்

ஒழுகொளிவிரியுநம்மானுற்றனனுகத்துன்னென்
. றழுதனளழைத்தாண்மற்றவரும்பெறற்குழவிகைத்தாய்.

குழவி — குழந்தை, குழவியம்பரிதி - பாலசூரியன், சுடர் - பிரகாசிக்க, நம்மான்-கண்ணபிரான். (௧௩)

அஞ்சனத்தடங்கணல்லாளழுதனளழைத்தல்கேளா
நஞ்சுகொப்புளிக்கும்பேழ்வாய்நகுதலைநாகமேபோல்
வெஞ்சினந்திருகியெண்கின்வேந்துவந்தெழுதலாகா
மஞ்சனன்றன்னொடேற்றுமல்லமர்மலைதல்செய்தான்.

கேளா — கேட்டு, எண்கின்வேந்து - சாம்பவந்தன், மஞ்சனன் - மேகம்போல்பவனாகிய கண்ணபிரான், ஏற்று — எதிர்த்து, மல்லமர்மலைதல் செய்தான் — மற்போர் புரிந்தான். (௧௪)

வெலற்கருங்களிறுபோலவெந்திறலெண்கின்வேந்து
மலைத்தலும்மலையினுலேழ்மைம்முகின்மாரிகாத்தோன்
கொலைப்படையெடுக்கவில்லான்குங்குமக்குவட்டின்வீங்கிச்
சிலைத்தழும்பிருந்ததோளாற்செஞ்சமம்புரிந்தானன்றே

மலைத்தலும் — போர்செய்தலும், மாரிகாத்தோன் — கண்ணபிரான், குங்குமக்குவட்டின் — குங்குமமலைபோல, சிலைத்தழும்பு — வில்வடு, செஞ்சமம்—செவ்வியமற்போர்.

ஒல்லெனவுருமின்வெம்போருழந்துறுவொன்பான்வைகல்
செல்லலுமெண்கின்வேந்துதெள்ளிதிற்றெளிந்துகொற்ற
வில்லினுலிலங்கைசெற்றவிறல்கெழுதடக்கைவீரன்
அல்லைகொனீயீங்கென்றேனுவடைந்ததென்மேறத்தினுல்.

உருமின் — இடிபோல, ஒன்பான்வைகல் — ஒன்பதுநாள், வில்லினுலிலங்கைசெற்றவீரன் — ஸ்ரீராமபிரான். (௧௫)

பணிபுரைசீற்றத்துப்பிற்பகுறலையரக்கன்சூடும்
துணிகதிர்மகுடபந்திதுணியவெஞ்சிலைகால்கோட்டும்
அணிமணிக்குன்றமன்னனலர்கதிரொறிக்குஞ்செக்கர்
மணியினுக்கடைந்தவண்ணமணியிதழ்விண்டுசொன்னான்.

மணிக்குன்றமன்னன் — கண்ணபிரான், செக்கர்மணி — சமந்தகமணி, மணியிதழ்விண்டு — பவளம்போலும் வாய்திறந்து. (௧௬)

வெண்மணிசுழிக்குந்தெண்ணீர்வியன்பணைவிதர்ப்பவேந்தன்
கண்மணியனையநங்கைகாதலங்கொழுநற்காங்குப்
பெண்மணியோடுமுந்நீர்ப்பிறந்தசெங்கதிரினன்ன
ஒண்மணியெண்கின்வேந்தனுவப்பொடுமுதவிநின்றான்.

வெண்மணி - முத்து, விதர்ப்பவேந்தன் கண்மணியனையநங்கை - உருக்குமிணி, காதலங்கொழுநன் - கண்ணபிரான், பெண்மணி - திருமகள், ஒண்மணி—சமந்தகமணி.

எண்கின்வேந்தளித்தசாம்பவதியெனுமிலவச்செவ்வாய்ப்
பண்கனிமழலைத்தீஞ்சொற்படாமுலைப்பவளவல்லி

கண்கவர்மணியினோடுகொண்டகவிளங்கக்கொண்டு
மண்கவர்கமலத்தாளான் மாகடலென்னமீண்டான்.

இலவம் — முருக்கம்பூ, கண்கவர்மணி — ஜாம்பவதி, மண்கவர்கமலத்தாளான்— கண்ணபிரான். (கக)

பன்னிருவைகல்காறும்பாயிருட்பிலத்தினெல்லை
துன்னியதானைநம்பிதோன்றுதல்காண்கலாமே
மன்னியநகரமெய்திமால்வரவருள்செய்கென்றுக்
கன்னியந்துளவுசூடுங்கன்னியைப்பரவிற்றன்றே.

பன்னிருவைகல் காறும் - பன்னிரண்டு நாள்வரைக்கும், கன்னியந்துளவு சூடுங் கன்னி - ஜாம்பவதி. (உ०)

சிந்துரவருவிபோலச்செய்யபூஞ்சுண்ணமாடி
அந்தளிர்தொடுத்தகோதையழிகடக்கலுழிபாய
இந்திரநீலவெற்பினெழில்பெறப்பணைத்ததோளான்
வந்தனன்புணரிவேலிமாநகர்மகிழமன்னோ.

கடக்கலுழி - மதப்பெருக்கு, இந்திரநீலவெற்பின் - இந்திரநீலமலைபோல. (உக)

நளிர்கடல்கடைந்துவானநாட்டினர்க்கமுதுநல்கி
அளைகவர்ந்துண்டவம்மானவைக்களத்தழைத்தல்செய்யாத்
தளையவிழலங்கன்மாலைச்சத்திராசித்துக்காங்கு
விளைதிறமுழுதுங்கூறிவிழுமணிநல்கினுனல்

வானநாட்டினர் - தேவர்கள், அளை - வெண்ணெய், அழைத்தல்செய்யா - அழைத்து, விழுமணி - மேன்மையுள்ள சமந்தகமணி. (உஉ)

பிழைத்தனமென்றுவேந்தன்பிழைத்தவப்பிழைப்புத்தீர்ப்பான்
விழைத்தருமணியினோடுவெண்டலைப்புணரிவேலை
தழைத்ததெள்ளமுதின்சாயற்சத்தியபாமைதன்னை
மழைப்புயலன்னமேனிவள்ளலுக்குதவினுனே.

பிழைப்பு - குற்றம், தீர்ப்பான்-ஒழிக்க, புயலன்னமேனிவள்ளல்-கண்ணபிரான்.

பொன்னிதழ்க்கமலவீட்டுப்பொற்கொழுந்தணிந்தமார்பன்
கன்னலுமமிழ்துங்கூட்டிக்கவின்குழைத்தெழுதுபாவை
அன்னமென்மருங்குற்செவ்வாயலர்முலையணங்கைவேட்டு
மின்னகுமணியைமீட்டும்வேந்தனுக்கருளினுனல்.

கமலவீட்டுப் பொற்கொழுந்து - திருமகள், அணங்கை - சத்தியபாமையை, வேட்டு - மணம்புரிந்து. (உச)

சத்தியபாமையை மணம்புரியத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்.—அஎகூ

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## இருபத்தாறாவது

## சததன்னுவாவைக்கொன்றவத்தியாயம்



அனலுமிழ்திகிரிமாயனறிந்தனனிருந்துமைவர்
புனையரக்கில்லஞ்சேர்ந்துபொன்றினாரென்னலோடும்
பனைவலனுயர்த்தசெங்கட்பானிறவண்ணனோடு
நனைகவுட்களிநல்யானைநகர்க்கெழுந்தேகினானே,

அறிந்தனன் - அறிந்து (முற்றெச்சம்), அரக்கில்லம் - அரக்குமாளிகை, பொன்றினார் - இறந்தார், பானிறவண்ணன் - பலராமன். (க)

கங்கையாள்காதன்மைந்தன்கல்லென்வெண்டரங்கவேலை
அங்கண்மாஞாலங்காக்கும்அம்பிகைபுதல்வன்மற்றை
வெங்களிச்சிறுகண்யானைவிதுரனாற்றுவரையீன்ற
நங்கையென்றிவரைக்கண்டுநம்பியாங்குறைந்தான்மன்னோ.

தரங்கவேலை - அலைகளையுடையகடல். (உ)

களிமுகச்சுரும்புண்கோதைகாந்திினிமகனுஞ்செய்ய
கிளரொளிப்பரிதிவைவேற்கிருதவன்மாவுமற்றுங்
களையுறைஅரியேறன்னவடற்சததன்னுவாவின்
வளமனைகுறுகிமெல்லவகுத்துரையாடலுற்றார்.

சுரும்பு - வண்டு, காந்தினிமகன் - அக்குரூரன், அளை - குகை, அரியேறு - ஆண்சிங்கம். (ங)

மாறிலாய்நினக்குநேர்ந்தமழைமதர்நெடுங்கணாளைத்
தேறல்பாய்தெரியன்மாலைத்தேவகிகுமாற்கீந்த
தாறுபாய்களிநல்யானைச்சத்திராசித்தையின்னே
கோறல்செய்தவன்கைக்கொண்டகுருமணிகோடியென்றார்.

நேர்ந்த - சம்மதித்த, தேவகிகுமரன் - கண்ணபிரான், குருமணி - சமந்தகமணி.

அணிபுனைபணைமென்றோளாரலர்கதிராரந்தாழ்ந்த
பணைமுலைபொருததாரான்பள்ளிகொள்களிறுபோலத்
துணர்விரியமளிமீதுதுஞ்சுழியெருக்கித்துஞ்சா
மணியினைக்கவர்ந்தான்மற்றமானவேற்றடக்கையானே.

ஆரம்தாழ்ந்த - முத்துவடந்தங்கிய, பணை - பருத்த, பொருத - உழுத, துணர்-பூங்கொத்து, அமளிமீது - சயனத்தின்மேல், துஞ்சுழி - தூங்கும்போது, எருக்கி-கொன்று, துஞ்சாமணி — சமந்தகமணி. (ரு)

தண்ணறுங்கோதைசோரச்சத்தியபாமைநெஞ்சம்
துண்ணெனச்சோர்ந்துமாழ்கிச்சுடர்செய்வேற்றந்தைதன்னை
எண்ணெய்பெய்தோணியிட்டாங்கெய்தினள்கொழுநன்றன்பால்
புண்ணுறுபுலவுவாட்கட்புலம்புமுத்துகுப்பநின்றாள்

எண்ணெய்பெய்தோணியிட்டு - தைலமாட்டி, கோதை-கூந்தல், சோர-தொங்க, மாழ்கி - மயங்கி. (௬)

கேட்டனன்விளைந்தவண்ணங்கிளர்கடலுலகங்காப்பச்
சூட்டுவாளரவப்பள்ளிதுயிற்சுவைதுறந்ததொல்லோன்
மோட்டுவெண்டிங்கண்மேனிமுன்னவன்றன்னோடொல்லை
ஓட்டினன்கொடிஞ்சித்திண்டேருற்றனனகரமாதோ.

அரவப்பள்ளி - ஆதிசேஷனாகியபாயல், தொல்லோன் - கண்ணபிரான், திங்கள் மேனி முன்னவன் - பலராமன் (௭)

உந்துநீருலகங்காக்குமொருதனித்திகிரிமாயன்
வந்தனனென்னவோடும்வயிறெரிதவழவஞ்சிக்
கொந்தழல்வேலினானைக்கொன்றெரிமணிகைக்கொண்ட
கந்துகளிற்றுத்தானைக்காவலன்கலக்கமுற்றான்.

கொந்தழல்வேலினான் - சத்திராசித்து, காவலன் - சததந்வா. (௮)

மழைத்தலைமின்னனார்தம்வரிமுலைக்கோடுபாய்ந்து
கிழித்ததண்படலைமாலைக்கிருதவன்மாவைநண்ணி
அழற்சினந்திருகுகூர்வாயாழியானோடும்வெம்போர்
இழைத்துமென்றியம்பினானவ்வெழுவுறழ்தோளினானால்.

மழைத்தலை - மேகத்தினிடத்துள்ள, மின்னனார் - மின்கொடிபோலுமாதர், ஆழியானோடும் - கண்ணபிரானோடும். (௯)

புரையறுபசும்பொற்கோட்டுப்பொருப்பொடுபொருதயானைக்
குருவளர்குழவித்திங்கட்கோட்டடியகழ்ந்தகொற்றத்
தெரிசினநேமியானோடெங்ஙனம்பொருதுமென்னா
வரிசிலைத்தடக்கைமன்னன்வழங்கநெஞ்சழுங்கினைந்தான்.

புரை - குற்றம், பொருப்பு - மலை, குரு - நிறம், குழவித்திங்கள் - இளம்பிறை, கோட்டடி - கொம்பினடி, அகழ்ந்த-தோண்டின, நேமியானோடு - கண்ணபிரானோடு, பொருதும் - போர்செய்வோம். (௧0)

விழாவரிமிடற்றவண்டுவிரைகமழ்முகைவாய்விள்ள
உழாவெரிபசும்பொற்றாதுண்டுறங்குபூந்தாமமார்வன்
கழூஉவிளங்காரமார்பிற்காந்தினிபுதல்வன்றன்பால்
எழாமழைவண்ணன்றன்மேலெதிர்பொரவியைதுமென்றான்

விரை - வாசனை, முகை - அரும்பு, உழா - உழுது, பூந்தாமம் - பூமாலை, எழா- எழுந்து. (௧௧)

அலையெழுதழலின்வெம்பியாடமருழந்தமல்லர்
கொலையுறப்பணைத்துவீங்குகுங்குமக்குவவுத்திண்டோள்
மலையொடுமலையவல்லார்மண்ணினின்விசும்பின்மற்றை
உலகினிலுளர்கொலென்னாவுரைபலவுதவினானால்,

அலையெழுதழல் - வடவைத்தீ, குவவு - திரட்சி, மலையவல்லார் — போர்செய்ய வல்லவர், திண்டோள்மலை - கண்ணபிரான். (கஉ)

காய்சமர்விழைவுதீர்ந்துகாந்தினிபுதல்வன்றன்மேல்
மாசறவிளங்குசெங்கேழ்மணியினையெறிதல்செய்யா
ஓசனைநூறுதாவுமுளைவயப்புரவியூர்ந்து
பூசல்வேற்றடக்கைமன்னன்பொருக்கெனப்போயான்மன்னோ.

சமர் - போர், விழைவு - விருப்பு, எறிதல்செய்யா - எறிந்து, உளை - புறமயிர், வயப்புரவி - வெற்றியையுடைய குதிரை, பூசல் - போர். (கந)

கடங்கலுழ்களிறன்னனக்காயழல்கவிழ்க்குஞ்செங்கண்
மடங்கலேறன்னதுப்பின்வால்வளையன்னமேனிக்
கொடுஞ்சிலையுழவனேடுகொடிஞ்சியந்தடந்தேரூர்ந்து
தொடர்ந்தனனவனிபொத்துஞ்சூழ்கழற்காலம்மானே.

கடம்கலுழ் - மதமொழுகாநின்ற, அழல்கவிழ்க்கும் - நெருப்பைக்கொட்டுக்கிற, மடங்கலேறு - ஆண்சிங்கம், துப்பு - வலி, வால்வளையன்னமேனிக் கொடுஞ்சிலையுழவன் - பலராமன், அவனிபொத்துஞ் சூழ்கழற்காலம்மான் - கண்ணபிரான். (கச)

ஒளிமதிகமலத்தோடுமுறவுகொண்டிலவுமாபோல்
தளையவிழ்முளரிக்காட்டிற்சங்குசூலுளைந்துசூழும்
வளவயன்மிதிலையெல்லைமருவலும்பரிமாவீழக்
களிமதக்களிற்றுமன்னன்கால்வலிகாட்டினனல்.

மதி - சந்திரன், முளரிக்காடு - தாமரைக்காடு, பரிமா - குதிரை, கால்வலிகாட்டினன் - உதைத்தான். (கரு)

நொறில்வயப்புரவித்திண்டேர்நூக்கலன்கணணனேடிக்
குறுகினனூழிவெந்தீக்கொழுந்துவிட்டெறிந்தாலன்ன
எரிசுடரலங்கனேமியெறிந்தனனிரியல்போய
கறையுறுவேலினன்றன்கருந்தலைதடிந்தான்மன்னோ,

நொறில் - விரைவு, நேமி - சக்ராயுதம், கறை - உதிரம், தடிந்தான்-அறுத்தான்.

கட்டுயின்மேயகூர்வேற்காவலனொருவற்கொன்று
நெட்டுறக்கெய்தினன்பானிழன்மணிகாண்கிலானல்
விட்டொளிர்மணிச்செஞ்சூட்டுவிடவராப்பள்ளிநீத்து
வட்டவெண்டிரைப்பார்போற்றும்வலம்படுதிகிரிப்பெம்மான்.

நெட்டுறக்கெய்தினன்பால் - இறந்தவனிடத்தில், நிழல் - ஒளி, திகிரிப்பெம்மான் - கண்ணபிரான். (கஎ)

திரைமுகங்கருகவென்றிச்சிலைகடைகுழைத்துநீண்ட
வரைமுகமுருக்குமுல்லைவனைபசுங்கழைவாய்வைத்த
கருமுகில்வண்ணனீங்குக்காண்கலன்மணிமற்றென்று
முருகுவீற்றிருந்தபைந்தார்முன்னவற்கியம்பினனல்.

சிலை - வில், குழைத்து - வளைத்து, முகில்வண்ணன் - கண்ணபிரான், முற்குவாசலை, முன்னவற்கு - றமையனாகிய பலராமனுக்கு (௧௯)

இளவெயிற்கற்றைகாலுமெரிமணியிவன்றேத்தின்றேல்
வளநகரொருவன்கைப்பால்வைத்தனனாகல்வேண்டும்
நளிமதிமுகத்தாய்நீபோய்நாடுதிவருவலென்று
வெளிமுகடுடைக்குமாடமிதிலைசென்றெய்தினானே.

இவன்றேத்து - இவனிடத்தில், கைப்பால் - கையில், வருவல் - வருவேன். ()

ஓங்கிருந்தாழைநெற்றியொண்பழன்வருக்கைபோழ்ந்து
தீங்கரும்பெருத்திற்றாழ்ந்ததேற்றிறால்சிதையவீழும்
வீங்குநீர்மருதவேலிமிதிலைமாநகரங்காக்கும்
வாங்குவின்மருவுதோளான்வழிபடவைகினான்.

தாழை நெற்றியொண்பழன் - தெங்கம்பழன், வருக்கை - பலாப்பழம், போழ்ந்து - பிளந்து, தேற்றிறால் - தேன்கூடு, வழிபட - பூசிக்க. (௨0)

சொரிமதக்களிறுபோலத்துள்ளிவீழருவிமாலைத்
திருமணிசெய்குன்றோங்கித்திகழ்தருமிதிலைமன்னும்
ஒருகுழையொருவன்றன்பாலொளிமணிச்சுடிகைநெற்றி
அரவுயர்கொடியனோன்வந்தடற்கதைபயின்றானன்றே.

ஒருகுழையொருவன் றன்பால் - பலராமனிடத்தில், கதைபயின்றான் - கதாயுத்தஞ்செய்தான். (௨௧)

கேழ்கிளராரமார்பிற்கிருதவன்மாவுங்கொற்றக்
காழணிகதிர்மென்கொங்கைக்காந்தினிபுதல்வன்றானும்
ஏழுயர்களிநல்யானையிகற்சததன்னுவாவை
ஆழியான்றுணித்தல்கேளாவஞ்சினர்பாறலுற்றார்.

காழ் - முத்துவடம், ஆழியான் - கண்ணபிரான், கேளா - கேட்டு, பாறலுற்றார் - ஓடலுற்றார். (௨௨)

பண்ணெழுவண்டுபாடும்பனிமலர்ப்பாரிசாதத்
தண்ணிழலடைந்தகூர்வாட்சத்திராசித்துக்காங்குக்
கண்ணகன்ஞாலமுண்டுகற்றிலையாலிற்றுஞ்சும்
அண்ணலம்பசும்புட்பாகனருங்கடன்புரிவித்தானால்.

கற்றிலையாலில் - ஆலின் இளந்தளிரின்மேல், துஞ்சும் - யோகநித்திரைசெய்கிற, அண்ணல் - பெருமை, பசும்புட்பாகன் - கண்ணபிரான். (௨௩)

கலிவிருத்தம்-

அத்தலைவிரிதிரையாழிமீமிசைப்
பைத்தபாம்பணைத்துயில்பரமவானவன்
முத்தவாணகைமுகமுளரிநோக்கினர்
உத்தவன்முதலினருரைசெய்தாரரோ.

பாம்பணைத்துயில் பரமவானவன் - கண்ணபிரான், முளரி - தாமரைமலர். (௨௪)

எழில்வளர்காந்தினிபுதல்வனிவ்வழி
ஒழிதலிற்போனுமாலோங்குவெண்ணிலாப்
பொழிதருவலம்புரிபொறித்தசெங்கையாய்
மழைவளங்கரந்ததிம்மல்லனுடரோ,

வலம்புரி - பாஞ்சஜந்யம், வளங்கரந்தது - வளமொழிந்தது. (உ௫)

கார்வளங்கரத்தலிற்காசிமன்னவன்
ஆரருட்சுவர்க்கனையாங்கழைத்திடா
ஏர்வளங்காந்தினியென்னுமின்னகைப்
பேரெழிற்கன்னியைப்பெட்பினல்கினன்.

அழைத்திடா - அழைத்து, பெட்பின் - அன்போடு. (உ௬)

அங்கலுழ்மேனியவ்வணங்கின்வெம்முலை
பொங்கியபுகழினன்புணர்ந்துவைகலால்
மங்குலேய்மழைவளமல்கின்றோங்கிய
• கங்கையந்தீம்புனற்காசிநாட்டகம்.

அம்கலுழ் - அழகொழுகாநின்ற, புணர்ந்து - கூடி, மங்குல் - மேகம். (உ௭)

தாதையையொத்தவத்தண்ணந்தாரினன்
போதரின்மழைவளம்பொலியுமீங்கென
• ஓதலுங்காந்தினியுயிர்த்ததோன்றலைத்
தூதினலழைத்தனன்சுடர்செய்நேமியான்

போதரின் — வந்தால், காந்தினியுயிர்த்ததோன்றலை—அக்ரூரனை, நேமியான்-கண்ணபிரான். (உ௮)

எரிமணித்திறத்தினலெனையுந்தேறலன்
ஒருகுழையொருவனவ்வுருவமாமணி
தருகெனக்கரியவன்சாற்றநல்கினன்
பரிவுறுகாந்தினிபயந்ததோன்றலே.

ஒருகுழையொருவன் - பலராமன், கரியவன் - கண்ணபிரான். (உ௯)

சேட்டிளங்கதிர்புரைதெய்வமாமணிச்
சூட்டுவாளராவணைத்தோன்றல்கைக்கொளாக்
காட்டினனவைக்களங்கண்டுவப்புற
மீட்டவற்களித்தனன்விருப்பினென்பவே.

இளங்கதிர்புரை - பாலசூரியன்போன்ற, சூட்டு - உச்சிக்கொண்டை, அராவணைத்தோன்றல் - கண்ணபிரான், கைக்கொளா - கைக்கொண்டு. (௩0)

சததன்னுவாவைக் கொன்ற வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௯0௧.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---

# இருபத்தேழாவது.

## காளிந்தியை மணஞ்செய்தத்தியாயம்.

அளைத்தகவளர்ந்தவாளரியின்மாண்டக
வெளிப்படுமைவரைக்காணவீழ்ந்திளங்
களிச்சுரும்பரற்றுதார்க்கமலலோசநன்
துளிப்புயலெனவளைதுவைப்பமேவினன்.

அளை - குகை, அரி - சிங்கம், கமலலோசநன் — கண்ணபிரான், வளைதுவைப்ப-சங்கொலிக்க. (௧)

நேரிலாவச்சிரநிலவத்தாங்கியும்
சோர்மதுக்கற்பகச்சோலைதுன்னியும்
காரிவர்மாளிகைகடவுளிந்திரன்
ஏர்பெறுமிந்திரப்பிரத்தமேவினன்.

வச்சிரம் — வச்சிராயுதம், கார் இவர் - மேகம்தவழ்கின்ற, நிலவ - பிரகாசிக்க. ()

தருமனேடுளர்வளித்தநயற்கைதொழாப்
பெருசிலைவிசயனைப்புல்லியேனையோர்
இருவரும்பணிந்தெழவினிதுவந்தனன்
மருடருபிறப்பிலிமகிழ்சிறந்தரோ.

வளித்தநயன் - வாயுபுத்திரன், (பீமன்) விசயன் - அருச்சுநன. (௩)

களிகொண்மாதவத்தினர்காணவெஃகிய
துளிமுகில்வண்ணநின்றேற்றங்காணிய
அளியமெத்தவமுனமாற்றினேமெனுத்
தளையவிழ்நெஞ்சினன்றருமனேத்தினன்.

வெஃகிய — விரும்பிய, முகில்வண்ண — மேகவண்ணனே, அளியம்—எளியேம், ஆற்றினேம் — செய்தோம் (௪)

இந்திரநீலமொத்தெறிக்குமேனியன்
இந்திரப்பிரத்தநின்றெழுந்துவேட்டமேல்
இந்திரன்சிலையெனவிலங்குபூந்தொடை
இந்திரகுமரனேடேகினனரோ.

இந்திரநீலம் — இந்திரநீலரத்நம், எறிக்கும் - பிரகாசிக்கிற, இந்திரகுமரன் - அருச்சுநன். (௫)

சந்தக் கலிநிலைத்துறை.

அளிகோடிவிளையாடுமந்தாரநறுநீழலளியெய்தவோர்
இளவஞ்சியெனமாதரின்சொற்பசுங்கிள்ளையெனவெல்லுலாம்
வெளிசேர்கமஞ்சூற்கருங்கொண்டறேய்கின்றமின்னென்னவோர்
களியன்னமெனநின்றகாளிந்திவிளையாடல்கண்டானரோ.

அளியெய்த - குளிர்ச்சியடைய, வஞ்சி - கொடி, எல் - சூரியன். (௬)

அரக்குண்டசெந்தாமரைப்போதுநிகர்செங்கையலர்மீதிலோர்
விரைக்கொந்துமலர்தாங்கிவிளையாடுவாள்செவ்விவிழிகண்டுபோய்
திரைக்கொந்தலம்புங்கடற்கட்பொலம்போதுதிகழ்மாதெழா
வரக்கண்டநாளிற்களித்தான் மணிக்கோலவரைமார்பினன்.

அரக்கு — செந்நிறம், செவ்வி - அழகு, பொலம்போது திகழ்மாது - திருமகள், எழா - எழுந்து, நாளின் - நாள்போல (எ)

பிறைக்கூரெயிற்றுடலரவிற்றிருத்தாள்பெயர்த்தாடுவோன்
குறிப்பாலடைந்தாடல்விசயன்பசும்பொற்கொழுந்தன்னவோர்
வெறிப்பாரிசாதத்தினிழனின்றமடமாதைவிளைவிம்முதார்
அறற்கோதைநீயாரைவிழைவென்னுளாயென்றறைந்தானரோ.

அரவிற்றிருத்தாள் பெயர்த்தாடுவோன் - கண்ணபிரான், வெறி - மணம், விளை-வாசனை, அறல் - கருமணல். (அ)

பரிதிக்குமகளோர்பசுங்கொண்டல்போன்மன்னுபாலாழிமீசர்
விரைகக்குதுளவக்கருங்கொண்டன்மணமெய்தவிழைவேனெனத்
திரையுற்றவமுதூறுசேதாம்பன்மலரன்னசெவ்வாய்திறந்
துரையற்றபொன்னாகொழுந்தன்னவெழினங்கையுரையாடினள்.

பரிதி - சூரியன், துளவக்கருங்கொண்டல் - கண்ணபிரான், விழைவேன் - விரும்புவேன், சேதாம்பன்மலர் - செவ்வல்லிமலர் (௯)

பண்டோயுமழலைப்பசுங்கிள்ளையினமென்றுபாலெய்தவாய்
விண்டாளையம்பொற்றடந்தேரின்மிசைகொண்டுமீண்டெய்தினன்
வண்டாயிரங்கோடியிசைபாடிமுகைவிண்டுமழைமட்டுவார்
தண்டாமரைச்செல்விமுலையானைவிளையாடுதடமார்பினன்

பாலெய்த பக்கத்தில் வந்தடைய, தண்டாமரைச்செல்வி முலையானை விளையாடு தடமார்பினன் - கண்ணபிரான். (௧0)

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

ஏர்முகந்தெடுக்கலாகும்ளமுலைமலராள்கொண்கன்
நீர்முகந்தெழுகார்தோயுநெடுங்கொடித்தடந்தேர் தூண்டிப்
போர்முகங்கடந்துபொன்னம்பொருப்பெனவளர்தோட்பார்த்தன்
கார்முகங்குழையவாங்கிக்காவெரியூட்டினனால்

மலராள்கொண்கன் - கண்ணபிரான், கடந்து - வென்று, பொன்னம்பொருப்பு- மேருமலை, கார்முகம் - வில், வாங்கி - வளைத்து. (௧௧)

அரிவயிறாரத்தேனுண்டாற்றுதண்கானமெல்லாம்
எரிவயிறாரநுங்கியீந்ததுவெண்ணெய்வாரித்
திருவயிறாரமாந்துசெம்மன்மைத்துனற்குத்திண்டேர்
வரிவயிறார்ந்தபாந்தள்வடிககணைத்தூணிவல்வில்

அரி - வண்டு, எரி - அக்கினி, வெண்ணெய்வாரி திருவயிறாரமாந்துசெம்மல்- கண்ணபிரான், பாந்தள்வடிக்கணை - நாகாஸ்திரம். (௧௨)

வீறுசால்வயவிற்பார்த்தன்வெவ்வழலூட்டுகின்ற
நாறிணர்க்காவினுவிநல்கியதிறத்தினாலே
தேறுநீர்நிலமீங்கென்னத்தெரிவருமாடஞ்செய்தான்
மாறிலநமயனென்றோதுமன்பெருந்தச்சன்மன்னோ.

வீறு – பெருமை, ஆவி - உயிர். (௪௩)

வான்பொழிகாலமெல்லாம்வலம்புரிததடக்கைமாயன்
ஊன்பொழிவடிவேலேவருவப்புறவாங்குவைகிக்
கான்பொழியலங்கன்மாலைக்காமர்காளிந்தியோடும்
தேன்பொழிகைதைவேலித்திருநகர்க்கெய்தினானல்.

வான்பொழிகாலம் - மழைகாலம், உவப்புற-களிக்க, வைகி-தங்கி, கான்-வாசனை.

தெளிந்தவாறொழுகுகங்கைத்திருநதிநீரமாந்தி
வளர்ந்தமந்தாரத்தம்பொன்மலர்மழையமரர்தூற்றக்
களங்கனிவண்ணத்தண்ணல்கற்பகக்கொழுந்துபோல
விளங்குகாளிந்திமன்றல்விதியுளியியற்றினானே

நீரம் - நீர், மாந்தி - குடித்து, களங்கனிவண்ணத்தண்ணல் - கண்ணபிரான், மன்றல் - விவாகம். (௪௫)

காளிந்தியை மணஞ்செயத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௯௨௪

ஸ்ரீகிருஷ்ணசகாயம்



இருபத்தெட்டாவது.

## மித்திரவிந்தையை மணம்புணர்த்தியாயம்.

மருவுயிர்ததலர்ந்தமாலைவாள்வசுதேவன்றன்னோ
டொருவயிற்றுதித்தநங்கையுயிர்தவள்வரிவண்டூத
விரையெடுத்தெறிபூங்கோதைமித்திரவிந்தைவையம்
திருவயிற்றொருபால்வைத்தசெம்மன்மேல்விழைதல்செய்தாள்

மருவுயிர்த்து - வாசனைவீசி, விரை - வாசனை, பூங்கோதை - பூமாலை, வையம் திருவயிற்றொருபால் வைத்தசெம்மல் - கண்ணபிரான். (௧)

வரிச்சிறையுவணப்பைம்புள்வலவயினுயர்த்தகார்மேல்
விருப்புறுமிளையாடன்னைவீறுசாலவந்தியாளும்
அரத்தமுண்டொளிருங்கூர்வேலடல்செய்விந்தானுவிந்து
உருத்தெழுசினத்தபாந்தனுயர்த்தகாவலற்குநேர்ந்தார்.

உவணப்பைம்புள் - கருடன், வலவயின் - வலப்பக்கம், கார் - கண்ணபிரான், விந்தானுவிந்தர், இவர்கள் ஜயத்ஸேநனுக்கு வசுதேவன் தங்கையாகிய ராஜாதிதேவியினிடத்துப்பிறந்த புதல்வர்கள், பாந்தனுயர்த்தகாவலன் - துரியோதநன். (௨)

கொவ்வைவாய்பதித்தமுத்தக்கோவையிற்றிகழுமூரல்
வவ்வளைத்தளிர்க்கைமாதினரும்பெறன்மன்றல்வேட்டுக்
கவ்வைநீர்வேலிகாக்குங்காவலர்குழாத்தோடெற்றான்
வெவ்வழனச்சுநாகவெல்கொடியுயர்த்தவேந்தே

முத்தக்கோவையின் - முத்துவரிசைபோல, மூரல் - பல், மன்றல் - மணம். வேட்டு - விரும்பி, கவ்வை நீர்வேலி - உலகம், காவலர் குழாத்தோடு — அரசர் கூட்டத்தோடு, நாகவெல்கொடியுடர்த்த வேந்து — துரியோதநன். (௩)

காரெழில்கவற்றுங்கூந்தற்கைபுனைந்தியற்றாக்காமர்
ஏர்குடியிருந்துவீங்குமிளமுலைக்கொடியனாளை
ஆரமர்கடந்தகூர்வாளரசவைபணிக்கப்புக்கு
வார்மதுககமழும்பைந்தார்மாயவன்கவர்ந்துகொண்டான்.

கவற்றும் - வருத்துகிற, எழில் - அழகு, கார் - மேகம், கைபுனைந்து இயற்றாக் காமர் ஏர் - ஒருவர் கையாற் சிறப்பித்துப் பிறப்பியாதபேரழகு, கடந்த - வென்ற, அரசவைபணிக்க - ராஜசபை நடுங்க. (௪)

மொய்வளைதுளக்குங்காற்றுமுகந்தெறிசிறைப்புட்பாகன்
மௌவலங்குழலினாளைவௌவினனிற்றல்கண்டான்
வெவ்வராவுயர்த்தோனுங்குவிழச்சமம்புரியகில்லான்
தெவ்வடுசிலைக்கைமன்னர்திரளொடுசென்றான்மன்னோ

மொய் - வலி, துளக்கும் - அசைக்கிற, புட்பாகன் - கண்ணபிரான், மௌவல்— முல்லைமலர், வௌவினன் - கவர்ந்து. (முற்றெச்சம்) வெவ்வராவுயர்த்தோன் — துரியோதநன், சமம் - போர், தெவ்வடு - பகைவரைக்கொல்லுகிற, சிலை - வில். (௫)

வெம்மதஞ்செருக்கித்துஞ்சாவெண்பிறைகோட்டுவேழம்
கைம்முகநெடுத்தவேழகரும்பொடுநடக்குமாபோல்
வைம்முகமணிந்தவேற்கண்மாதொடுவடவைகாலும்
செம்முகத்திகிரிமாயன்றேரிவர்ந்தேகினானால்.

துஞ்சா - தூங்காத, முகந்தெடுத்த - வாரியெடுத்த, வேழம் - யானை, கரும்பு. வை - கூர்மை, வடவை - வடவைத்தீ, காலும் - உமிழ்கின்ற (௬)

நடாககரும்பெழுதிநட்டநாகுவேயன்னமென்றோட்
படாக்களியிளமென்கொங்கைப்பவளவாய்மயிலனாளை
விடாக்களிச்சுரும்புண்கோதைவிதியினிற்புனைந்துவேட்டான்
கடாக்களிறழைப்பவந்தகாயழற்றிகிரிமாயோன்.

நாகுவேய் - இளமூங்கில், படா - சாயாத, கடாக்களிறு - கஜேந்திராழ்வான். ()

மித்திரவிந்தையை மணம்புணர்ந்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்.— ௬௯௧

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

# இருபத்தோன்பதாவது.

## சத்தியையை மணம்புரியத்தியாயம்.



எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

குளிறுவெண்டரங்கக்குரவைவான்பசும்பொற்குடுமிமால்வரையினுன்மறுகி
அளறெழக்கடையவிளையமுதன்னவலர்முலைச்சத்தியைதன்னைக்
களிறுமாய்செந்நெற்கழனிசூழ்கிடந்தகோசலநாடுகாத்தளிக்கும்
ஒளிறுவேற்றடக்கைநக்கினைசித்தென்றுரைபெறுமன்னவனுயிர்த்தான்.

குளிறு - ஒலிக்கின்ற, தரங்கம் - அலை, குரவை - கடல், மறுகி - கலங்கி, அளறு - சேறு, மாய் - மறைக்கின்ற, ஒளிறு - பிரகாசிக்கிற. (க)

எழிருங்கடலுங்கூப்பிடப்பரவையெழுந்தெதெள்ளமுதினைவெருட்டி
எழிசைகடந்தமழலையந்தீஞ்சொலிளநகைப்பவளவாய்மகளை
எழிருங்குன்றுமெதிர்பொருதுடையவேந்துமேநாட்கோசலத்திறைவன்
எழ்விடைதழுவுமெறுழ்வலிபடைத்தாற்கீகுதுமெனவுரையிசைத்தான்

கூப்பிட - இரைய, பரவை - பாற்கடல், எழிசைகடந்த, சத்தசுரங்களைவென்ற, எழிருங்குன்று - சப்தகுலாசலங்கள், உடைய - தோற்க, பொருது - போர்செய்து, எழ்விடைதழுவும் - சப்தருஷபங்களையணைக்கிற, எறுழ்வலி - மிக்கவலி. (உ)

செறிதிசைதழுவுகொற்றமேவற்றுறனைதிரளினர்திங்கள்வெண்குடையர்
மறிதிரைதழுவுகுழவிவெங்கதிர்போல்வயங்குநீண்முடியினர்தெய்வ
நறுவிரைதழுவுமாலைதாழ்மார்பர்நாகிளவிடைபுரைதடையர்
இறுவரைதழுவுதிணிபுயத்தரசரெழுவிடைதழுவுவானிறுத்தார்.

கொற்றம் - வெற்றி, தானை - சேனை, குழவிவெங்கதிர் - பாலசூரியன், தெய்வநறுவிரை - தெய்வத்தன்மையுள்ள நல்லவாசனை, நாகிளவிடை - மிகுந்தவிளமை பொருந்திய இடபம் புரை - நிகர்த்த, தழுவுவான் - தழுவ. (ட)

இடியுருமேற்றிற்சிலைத்தெதிர்நடக்குமேழ்விடைதழுவுவானேற்ற
படுகளிச்சுரும்புபடிந்துழக்கிழிந்தபனிமலர்ப்பசுந்தொடைமார்பும்
குடவரைபொருவுதிணிதடந்தோளுங்கூர்நுதிக்கோடுழககலங்கி
வடியிருநெடியகுடுமிவேற்றடக்கைமன்னவர்மதவலியழிந்தார்

உருமேற்றின் — ஆணிடிபோல, சிலைத்து - சத்தித்து, பனி - குளிர்ச்சி, குடவரைபொருவு - அஸ்தமனகிரியை நிகர்த்த, குடுமி - நுனி, வடி - வடித்த. (ச)

வாளைவெம்போர்க்குவருகெனப்பிறழுமழைக்கணார்மனங்கவர்வனப்பின்
வேளையீன்றெடுத்தவேரியந்துளவோன்விற்றிறல்விசயனொடெழுந்து
பாளைவாய்க்கமுகின்பழக்குலைசிதறப்பகட்டிளவராலொடுமறலிக்
காளையங்கயல்பாய்கமழலந்துறைசூழ்கோசலநாடுசென்றடைந்தான்

வாளை - வாளாயுதத்தை, மழைக்கணார் - மாதர், வனப்பு - அழகு, வேளையீன்றெடுத்த வேரியந்துளவோன் - கண்ணபிரான், மறலி - பகைத்து. (ரு)

வெண்டயிருறைத்தகாரிரும்பித்தைவிரைகமழ்முல்லையம்பசுந்தார்
அண்டர்தங்கொழுந்துதெண்டிரைப்பிறந்தவாரமுதன்னவஞ்சாயற்

பணபுருமழலைப்பவளவாயணங்கின்பணையிளவனமுலைதழுவக்
கொண்டலிலேறுரேழுருவுகொண்டோரேழ்கொல்சினவிடைதழீஇயினனால்.

உறைத்த - சிதறின, பித்தை - ஆண்மயிர் (சிகை), அண்டர்தங்கொழுந்து-கண்ணபிரான், கொண்டலின் - மேகம்போல (௬)

திலகவெண்கவிகைமன்னயரவேந்துசெஞ்சிலைவாயகொள்பொற்கோட்டு
மலைபகவிடிக்குமத்தமால்யானைமருப்பொசித்தகார்வண்ணற்
கிலவிதழ்குலிகமூட்டிவைத்தன்னவிளநகைசெய்யவாய்க்கருங்கட்
கலவமாமஞ்ஞைகடுக்குமஞ்சாயற்கதிர்முலைக்கன்னியைக்கொடுத்தான்

திலகவெண்கவிகை மன்னயன் - நக்கினசித்து, செஞ்சிலை - சிவந்தகல் (மாணிக்கம்) பொற்கோடு - பொற்சிகரம், பக - பிளக்கும்படி, கார்வண்ணற்கு - கண்ணபிரானுக்கு, இலவு - முருக்கமபூ, குலிகம் - சாதிலிங்கம, கலவம் - கலாபம், மஞ்ஞை-மயில், கடுக்கும் - நிகாக்கிற. (௭)

குரைதிரைப்பரவையமுதுவாயநிரை செருத்தலானினமும்
விரிநிலாச்சொரியும்வாலுளைப்புரவிவெள்ளமுமழிமதகளிறுந்
திரளுநீள்கொடிஞ்சிமாதேரும்பலபடைத்தெரியல்வேந்தவ
ஒருதனிமூவாவறுகுணப்பெருமானுவகைதருதிருநகாக்கெழுந்தான்

குரை - ஒலிக்கின்ற, பரவை - கடல், செருத்தல் - பால்மடி, ஆனினமும் - பசுக்கூட்டமும், வால்உளை - வெள்ளியபுறமயிர், மூவா - மூதிராத (அழியாத) அறுகுணப் பெருமான் - கண்ணபிரான (௮)

மழைக்கருங்கண்ணுடன்வெருங்கமருகுநமழைமருண்மேனியானெழலும்
தழைத்தகூர்ங்கோட்டுத்திரளிமிலேறுதழுவுவானபடர்ந்திகலழிந்த
புழைக்கைமாலயானைப்புரவலர்நடிபபொருதொறுமபொருதொறுமுடையக்
குழைத்தனன்வரிவிற்குழைத்தண்கானமகொந்தழலூட்டுபொற்குரிசில்.

கமம் - நிறைவு, மழை - மேகம, மழைமருணமேனியான் - கண்ணபிரான், இமில் - முசுப்பு, தழுவுவான - தழுவ, படர்ந்து - சென்று, இகலழிந்த - வலியழிந்த, புரவலர் - அரசர், பொருதொறும - போர்செய்யுந்தோறும, உடைய - தோறக, குழைத்தனன் - வளைததான், குழைத்த தளிர்தத, கானம்கொந்தழலூட்டு பொற்குரிசில்-அருச்சுனன் (௯)

உடைதிரையிடறுவலம்புரிமுழங்கவொளிறுவெண்சங்கினங்கலிப்பச
சுடர்விடுபவளக்கொழுங்கொடி நுடங்கததூசசிறைமடவனம்புகுத
முட்முதிர்தடந்தாணமுள்ளிலைத்தாழைமுருகுவந்தெதிர்கொளமுந்நீர்க்
கடல்விளிம்புடுத்தகன்னிமாநகரங்கருங்கடலவண்ணன்வந்தடைந்தான்,

வலம்புரி - சங்குவிசேடம, கலிப்ப - ஒலிக்க, நுடங்க - அசைய, முடம்-வளைவு, முருகு - வாசனை, முந்நீர்க்கடல் - மூன்றுநீரையுடைய கடல், மூன்றுநீராவன - ஆற்றுநீர், ஊற்றுநீர், வேற்றுநீர் என்பன, நீர்குணம் எனக்கொண்டு, படைத்தல் காத்தல் அழித்தல் என்னு முககுணஙகளையுடைய கடல் எனக்கூறுதலுமுண்டு. (௧௦)

சத்தியபாமையை மணம்புரி யத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௬௪௪.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## முப்பதாவது

## சுபத்திரையைமணம்புரியத்தியாயம்.



தழலும்வெஞ்சினவாட்படைவசுதேவன்றங்கைதண்டுனிமுகில்வயிறு
கிழிபடநிவந்ததண்டலேவேவிக்கேகயநாட்டினுக்கிறைவன்
எழில்வரையகலம்புணர்சுதகீர்த்தியீன்றசெவ்வாய்ப்பசுங்கிள்ளை
மழலையந்தீஞ்சொற்பத்திரைபூவைவண்ணன்மேற்காதல்கூர்ந்தனளால்.

முகில் - மேகம், நிவந்த - உயர்ந்த, தண்டலை - சோலை, அகலம் - மார்பு, பூவை வண்ணன் - கண்ணபிரான்.

(க)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

தெளித்தொளிவிரிக்கும்பச்சைத்திருமணிகுயின்றாலென்னக்
கிளைத்தபைந்துளபவான்செவ்விகேண்மையிற்கேட்டஞான்றே
வளர்த்தபைங்கிளியினம்மென்மழலைகேட்டுவக்குமேனும்
களிப்புயற்கூந்தல்யாழினல்விசைகேட்கிலாளால்,

குயின்றாலென்ன - பதித்தாற்போன்ற, பைந்துளபவான் - கண்ணபிரான், களிப்புயற் கூந்தல் - பத்திரை, யாழ் - வீணை.

(உ)

திகழ்மணிவண்ணன்செவ்விசெவிமுதலுற்றபோதே
நகுமணிதழைந்தபொற்பூணலநதகப்புனையுமேனும்
தகைபடுமொருகாழ்முத்தந்தயங்கிணர்க்கோங்கின்யாணர்
முகிழெனமுகிழ்ந்தகொங்கைமுன்றிலிற்புனைகலாளால்.

மணிவண்ணன் - கண்ணபிரான், செவ்வி - அழகு, செவிமுதல் - செவியில், (முதல் - ஏழனுருபு), காழ் - சரம், யாணர் - அழகு, முகிழ் - அரும்பு, கொங்கைமுன்றிலில் - ஸ்தனப்ரதேசத்தில், புனைகலாள் - தரியாள்.

(ங)

அஞ்சனவண்ணன்செவ்வியஞ்செவிப்பட்டவன்றே
அஞ்செனக்கிடந்தவம்பினுடமர்கடந்தகண்ணிற்
கஞ்சனமெழுதுமேனுமஞ்சனம்புரைபைங்கூந்தல்
அஞ்சுமற்றஞ்செஞ்சாந்தமணிமுலைமெழுதவம்மா,

அஞ்சனவண்ணன் - கண்ணபிரான், அஞ்செனக்கிடந்த - அம்பு - பஞ்சபாணம், அமர்கடந்த - போர்வென்ற, அஞ்சனம் புரைபைங்கூந்தல் - பத்திரை, அஞ்சும் - அஞ்சுவாள்

(ச)

கொத்தளிகொழுதுகஞ்சக்கொழுமுகையனையசெவ்வி
அத்தருகாதனங்கையாக்கமுங்குறிப்புநாடி
முத்தவெண்கவிகைப்பைந்தார்முன்னவன்கருங்காரன்ன
மைத்துனத்தோழற்கிவான்மனத்தினில்வலித்தல்செய்தான்.

நங்கை - பத்திரை, நாடி - கண்டு. கவிகை - குடை, கருங்காரன்ன மைத்துனத் தோழன் - கண்ணபிரான்.

(டு)

பொன்னிணரமார் தூற்றப்புரிவளையலறமுந்நீர்
இன்னமுதனையசாயுலேரிளமுலையினுளை
முன்னவனளித்தல்செய்தான்மூழங்கழல்சான்றதாகக
கன்னியந்துளவுசூடுங்கார்முகில்வண்ணற்கன்றே.

பொன்னிணர் - அழகியபூங்கொத்து, வளை — சங்கு, ஏர் - அழகு, அழல்சான்றதாக - அக்நிசாக்ஷியாக, முகில்வண்ணற்கு - கண்ணபிரானுக்கு. (௬).

மரைமலருறைவோனாதிவானவர்வணங்கியேத்த
நரலையம்புணரிநீர்ந்துநல்லறநிறுத்துநம்பி
சுரியிருங்கூந்தனங்கைதோணலமினிதுமாந்திக்
கரையிறந்தோங்குமின்பக்கடல்கத்தழுந்தினுனல்.

மரைமலருறைவோன் - பிரமன், தாமரையை மரையென்றது முதற்குறைவிகாரம், நரலை - ஒலி, புணரி - பாற்கடல், நீர்ந்து - நீங்கி, தோணலம் - தோட்சுகம். (௭)

முடப்பசுந்தாழையீன்றமுழுமடன்முருகுகான்று
சுடற்படுபுலவுமாற்றுங்கண்ணகன்புரிசைமூதூர்
இடிக்குரன்முரசமார்ப்பவிளமழைக்கொழுந்துபோல்வான்
சுடர்த்தொடியுடுத்தசெங்கைத்தோகையோடெழுந்துசென்றான்

முருகுகான்று - வாசனையைவீசி, புரிசை—மதில், மழைக்கொழுந்துபோல்வான்- கண்ணபிரான், சுடர்த்தொடியுடுத்த செங்கைத்தோகை - பத்திரை. (௮)

பத்திரையை மணம்புரியத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௬௩௪௬.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்

---

முப்பத்தோன்றாவது.

## இலக்கணையை மணம்புரியத்தியாயம்.



எழில்வளர்துளிர்மாமேனியிலக்கணையென்னுநாமத்
தொழுகரித்தடங்கணுளையுயிர்த்தனனுவரிமேய்ந்த
மழைகிடந்துறங்குசோலைமத்திரநாடுகாக்கும்
நிழல்வளர்திங்களன்னநித்திலக்கவிகைவேந்தே.

உயிர்த்தனன் - பெற்றான், உவரி - கடல், மழை - மேகம், நித்திலக்கவிகை-முத்துக்குடை. (௧)

தண்ணறலகத்திற்றோன்றுந்தண்ணிழலுநோக்கியன்றிக்
கண்ணுறலரிதாய்வெய்யகடுவிசைக்கறங்கிற்பொங்கி
விண்ணிடைக்கொட்காநிற்கும்விழுக்கயற்பொறிநீர்வேலி
மண்ணகம்வியப்பச்செய்தான்மணிமுழவனையதோளான்.

அறல் - நீர், கண்ணுறல் - காண்டல், கறங்கின் - காற்றாடிபோல; கொட்டிாநிற்கும் - சுழலாநிற்கிற, கயற்பொறி - மச்சயந்திரம், நீர் - கடல், வியப்ப - அதிசயிக்க.

குடவரையன்றிமற்றைக்கோதைவெள்ளருவிசூடும்
நெடுவரைபொடிக்குமொற்றைநேமியஞ்செல்வன்சூழும்
வடவரைவணக்கினானும்வணக்கருந்தன்மைத்தாய
தடநெடுஞ்சிலையுமொன்றாதந்தனன்பசும்பொற்றாரான்.

குடவரை - அஸ்தமாகிரி, பொடிக்கும் - நொருக்குகிற, ஒற்றைநேமியஞ்செல்வன்- சூரியன், சூழும் - வலம்வருகிற வடவரைவணக்கினான் - சிவபெருமான், சிலை - மலை.

சிலைகடைகுழைத்துச்செய்யசெங்கயல்சிதையவெய்தாற்
கிலமலரன்னசெவ்வாயிலக்கணையுரியளென்றே
மலைமதம்பட்டாலன்னமத்தமாக்களிற்றுமன்னன்
உலகுடைமன்னர்க்கோலையுவப்புறப்போக்கினானால்-

சிலை - வில். குழைத்து - வளைத்து, செங்கயல் சிதைய - மச்சயந்திரம் அழிய, எயதாற்கு - எய்தவனுக்கு, இலமலர் - இலவமலர் என்றே - என்று (௪)

முத்தரிச்சிலம்புபோலமொய்த்திளவெகினமார்ப்பச்
செய்த்தலைக்கமலமாதர்சீறடியழுந்தகாட்டும்
மத்திரநாட்டுமன்னன்மன்னெயிலடுக்கமுழுதூர்க
தத்துநீர்ப்படுசெங்கார்ப்பத்தரணிபர்வந்துநாக்கார்

எகினம் - அன்னப்புள், சீறடி - சிற்றடி, தரணிபர் - அரசர் (௫)

அயின்முகப்பகழிபோலவளிமணிக்குழைமேலோடிக்
கயலெனப்பிறழ்ந்துசெய்யகமலமொசலர்ந்தவுண்கட்
குயிலினக்குயிலாப்பொன்னங்கொழுந்தினைக்கொழுந்தாரோதி
மயிலினைப்புனைந்துசெம்பொன்மாளிகைகொணர்தல்செய்தார்.

அயில் - கூர்மை, பகழி - அம்பு, குயிலா - எழுதவொண்ணாத, ஓதி - கூந்தல், புனைந்து - அலங்கரித்து. (௬)

அருவிபெய்மலயச்செஞ்சாந்தலர்ந்திராரந்தாழ்ந்த
வரைமருளகலத்தப்பிவார்கபுனைாலவீக்கிக்
குரைகடற்சுறவின்கோலக்கொடுங்குழைதுளங்கவார்த்துப்
பொருகயறணித்துமென்றபுரவலர்குழீஇயினாரால்

மலயம் - பொதியமலை, செஞ்சாந்து - செஞ்சந்தனம், ஆரம் - முத்துமாலை, நாலசத்திக்க. வீக்கி - கட்டி, சுறவின்கோலக் கொடுங்குழை - மகரகுண்டலம். (௭)

உலைமுகம்பழுத்தசெம்பொனோடைமாக்களிறுசாய்த்துக்
கொலைமுகம்பழுத்தகூர்வாட்கொற்றவனொருவனெய்வான்
மலையெனக்கிடந்தவல்விலெடுத்தனன்வணக்கலாற்றான்
நிலவுகொப்புளிக்குமுத்தநெடுமுடிவணக்கிநின்றான்.

ஓடை - முகபடாம், சாய்த்து - கொன்று, கொற்றவன் - அரசன், எய்வான் - எய்ய, வணக்கலாற்றான் - வளைக்கமாட்டாதவனாய், வணக்கி - வளைத்து, (௮)

அலங்குசெங்கதிரிற்சூழ்ந்தவணிமணிவலயமின்னப்
பொலங்கிரிகடக்குந்திண்டோட்புரவலனொருவன்போந்து
வலம்படவெடுத்தவார்வில்வணக்கிஞாணேற்றவாற்றான்
இலங்கொளிவிரிக்கும்பொன்ஞாணேற்றினனணிந்துநின்றான்.

அலங்கு - அசையாநின்ற, செங்கதிரின் - சூரியன்போல, பொலங்கிரிகடிக்கும் - பொன்மலையைநிகர்த்த, புரவலன் - அரசன், ஞாண்ஏற்ற - நாணேற்ற. (கூ)

கடற்பெரும்புவனங்காக்குங்காவலனொருவன்வார்வில்
எடுத்துநாணேற்றிமின்னினெரியுமிழ்ந்திலங்கவாளி
தொடுத்தனன்றொடுத்தவம்பின்றொடைநனிவாங்கலாற்றான்
வடித்தபூந்தொடையல்வாங்கிமணிமுடிதிருத்தினானால்

மின்னின் - மின்னலைப்போல, எரி - நெருப்பு, வாளிதொடுத்தனன் - அம்புதொடுத்தான், தொடை - தொடுத்ததை, பூந்தொடையல் - மலர்மாலை, (க0)

சரிந்துதார்புரளவொள்வாட்டடந்துவக்கிரன்வில்வாங்கிப்
பருந்துசூழ்முகத்தவாளிபணைத்ததோள்கழியவாங்கி
விரிந்தநீரகத்திற்றோன்றுமீனதுநிழலைநோக்கும்
இரும்பெருவானைநோக்குமிலக்கமோர்ந்தெய்பகில்லான்.

வாங்கி - வளைத்து, இலக்கம் - குறி, ஓர்ந்து - அறிந்து. (கக)

அள்ளிலையணிந்தவெள்வேலடற்சிசுபாலனெய்த
ஒள்ளழற்பகழியோடியுறுகயலுறாதுவிண்வாய்
கள்ளவிழ்பாரிசாதக்காடலைத்தொழுகுகங்கை
துள்ளுசெங்கயலின்மேலேதொடர்ந்துதாய்வீழ்ந்தன்றம்மா

அள் - கூர்மை, அழற்பகழி - அக்நியஸ்திரம், கயலுறாது - மச்சயந்திரத்திற்படாமல், அலைத்து - அசைத்து, தாய்வீழ்ந்தன்று - தாவிவிழுந்தது. (கஉ)

வில்லிடப்பசும்பொனாரம்விற்கடைகுழையவாங்கி
மல்லனீர்மகதங்காக்குமணிமுடிவேந்தனெய்த
கொல்சினப்பகழிவிண்ணிற்கொட்குமீன்கழியவோடிப்
பல்சுடர்வானமீனின்பாற்படப்பட்டந்ததன்றே.

வில்லிட - ஒளிவீச, விண்ணில் - ஆகாயத்தில், கொட்கும் - திரியாநின்ற, மீன் - மீன்கள் (உடுக்கள்) வானமீன் - நாண்மீன்கள். (கங)

கட்டவிழ்சிலைப்பூந்தாமங்கதிர்நிலாமுடியிற்றுழ
வட்டவார்சிலைகால்கோட்டிமல்லடுதிணிதோள்வீமன்
விட்டவெம்பகழிபொங்கிவிழுக்கயல்பிழைத்துவிண்வாய்
முட்டிவெண்டிங்கள்காழுமுயன்முகங்கிழித்துச்சென்ற.

கோட்டி - வளைத்து, மல் - மற்போர், பிழைத்து - தப்பி. (கச)

எரிமணிக்குழைபொற்றோளினெழுதுசாந்துழுதுமின்ன
அருவரைபுரையுமார்வத்தாரமும்பூணுமொல்க

வரிசிலைதளரவாங்கிவாளரவுயர்த்தோனெய்த
தெரிகணைபொறிமேனூடிச்செவ்வனேயெழுந்தேகிற்றே.

சாந்து - சந்தனம், வரைபுரையும் - மலையைநிகர்த்த, மார்வத்து - மார்பில், ஒல்க- அசையாநிற்க, அரவுயர்த்தோன் - துரியோதநன், பொறி - யந்திரம். (கரு)

கற்பகந்தளிர்த்ததேபோற்கதிர்மணிக்கடகங்கான்ற
பொற்றசெங்கதிர்கள்சூழும்பொங்கெழிற்பொருதோட்கன்னன்
விற்கடைகுழையவாங்கிவிட்டகோல்பொறியின்மேலே
உற்றுறுதாகிச்சென்றதுயரிருவிசும்புபோழ்ந்தே.

கான்ற - உமிழ்ந்த, பொற்ற - பொன்மயமாகிய, கோல்—அம்பு, விசும்பு-ஆகாயம்.

நிழல்புனலகத்துநோக்கிநின்றவவ்விலக்கைநாடி
அழிபெருங்குருதியாடியவிர்தல்போற்பற்பராகக்
குழையொளிதவழவாங்கிக்கொடுஞ்சிலைப்பார்த்தன்விட்ட
முழுவிறற்பகழிசெஞ்சேன்மோந்துகொண்டேகிற்றன்றே.

இலக்கை - லக்ஷியத்தை, பற்பராகம் - பத்மராகம், பார்த்தன் - அருச்சுநன், செஞ்சேல் - செவ்வியமச்சயந்திரம், மோந்துகொண்டு - முகந்துகொண்டு. (கஎ)

திகழ்மணிக்குவட்டின்வீங்கிச்செஞ்சிலைவடித்ததிண்டோட்
டகைமலியரசரின்னதன்மையராகிநின்றார்
அகலிருவிசும்பிற்சூழ்ந்தவள்ளிருட்பிழம்புசித்து
நகுகதிர்ப்பரிதிவட்டநடுவண்வந்துற்றதாங்கே.

மணிக்குவட்டின் - ரத்நகிரிபோல, வீங்கி - பெருத்து, இருட்பிழம்பு - இருட்கூட்டம், சீத்து - அழித்து, நகு - விளங்குகின்ற. (கஅ)

பார்நனைமதத்தயானைப்பரூஉச்சுடர்ப்பணிவெண்முத்தம்
கூர்நுதிக்கோடுகொண்டகொற்றவன்பொற்றதாமம்
வார்மதுத்துளிப்பச்செக்கர்மணிதிருமார்பின்மின்னக்
கார்முகிலென்னச்சென்றுகார்முகம்வணக்கிநின்றான்.

கோடு - கொம்பு, செக்கர்மணி - கௌஸ்துபமணி, கார்முகில் - கரியமேகம், கார்காலத்து மேகம். கார்முகம் - வில். (கக)

விடம்பொதிமிடற்றுப்புத்தேள்வெஞ்சிலையிறுத்தவீரன்
கொடுஞ்சிலைகுழைத்தவாறுங்குழைத்துநாண்கொளீஇயவாறும்
அடுங்கணைதுரந்தவாறுமார்கொலோதெரியக்கண்டார்
நடுங்கயறுணிந்துமண்ணிற்கவிழ்ந்ததுகண்ணிற்கண்டார்.

விடம்பொதி மிடற்றுப்புத்தேள் - சிவபிரான், வெஞ்சிலையிறுத்த - வெவ்வியவில்லையொடித்த, வீரன் - கண்ணபிரான், துணிந்து - அறுபட்டு. (உ0)

ஒளிமணிவிசும்பினெல்லென்றொளித்தகாருவரிமேய்ந்த
துளிமுகிலதிருமாபோற்றுந்துபிதுவைத்தசூழ்ந்து
களிமுகச்சுரும்புமூசாக்கற்பகக்கனகப்பைம்பூ
வெளிமுகம்புதையமொய்த்துவிண்ணவர்சிதறியார்த்தார்

காருவரி - கருங்கடல், துவைத்த - முழங்கின, மூசா - மொய்க்காத, வெளிமுகம்புலந்தய - ஆகாயத்தினிடமறைய, மொய்த்து - நெருங்கி. (உக)

ஆடகப்பசும்பொற்றிண்டேரசெலாங்காணவாய்பொற்
பாடகப்போதுசூழ்ந்தபன்மணிச்சிலம்புபாட
நாடகமயிலஞ்சாயனுகிளவல்லியொல்கிச்
சூடகத்தளிர்ப்பூங்கோதைசூட்டினள்கண்ணற்கன்றே.

பாடகப்போது - பாதம், சூடகம் - கைவளை. (உஉ)

தருமலரமார்தூற்றத்தாக்கணங்கனையாடண்டேன்
சொரிமலர்நறுமென்றொங்கல்சூட்டுதல்கண்டுநோனார்
குரைகடல்வெதும்பவல்விற்கோட்டியகுழகன்றன்மேல்
விரிதிரைக்கடலந்தானேவேந்தர்போர்விளைத்தார்மாதோ.

தாக்கணங்கு - தாக்கிவருத்துவதாகிய தெய்வம், தொங்கல்சூட்டுதல் - மாலைசூட்டுதல், நோனார் - பொறுக்காதவர்களாய், குரைகடல்வெதும்ப வல்விற்கோட்டிய குழகன் - கண்ணபிரான். (உங)

கான்குலாமலங்கல்சூடிக்கடைகுழன்றிருண்டகூந்தற்
றேன்குலாமழலையாளைச்செறிமணித்தேரிற்கொண்டு
நான்குதோளுடையானுகிநம்பிவிற்குழைத்துச்சென்றான்
மான்குழாநடுவட்செல்லும்வள்ளுகிர்த்தரக்குப்போன்றே,

கான் - வாசனை, அலங்கல் - மாலை, குழன்று - சுருண்டு, தேன்குலாமழலையாளை - இலக்கணையை, நம்பி - கண்ணபிரான், தரக்கு-புலி, வள் - கூர்மை, உகிர் - நகம். ()

தேர்விட்டுக்களிறுவிட்டுத்திண்டிறற்பரிமாவிட்டுக்
கார்விட்டுத்திகழ்தடித்திற்கனன்றெறிபடைகள்விட்டுத்
தார்விட்டுமலர்ந்தமார்பிற்றருக்குடைமன்னரெல்லாம்
போர்விட்டுநடப்பவாளிபொழிந்தனன்புயலோடொப்பான்.

பரிமா - குதிரை, தடித்தின் - மின்னல்போல, புயலோடொப்பான் - கண்ணபிரான். (உரு)

பொலமுகடுடைந்ததென்னப்பொருகடற்படுவெண்சங்கம்
அலறவார்முழவுவிம்மவதிர்குரன்முரசமார்ப்பக்
கலுழனின்னமுதுகொண்டுகொண்டகச்செல்லுமாபோல்
சிலைநுதலணங்கைக்கொண்டுசெம்மன்மாநகர்சென்றுற்றான்.

அலற - சத்திக்க, முழவு - மத்தளம், கலுழன் - கருடன், சிலைநுதலணங்கு—இலக்கணை, செம்மல் - கண்ணபிரான். (உசு)

முத்துடைக்கோட்டுவேழமுரிதிரைப்பவளக்கன்றோ
டொத்தவெங்குளம்பிற்பாய்மாவொழுகொளிவயிரக்குப்பை
பித்திகைப்பிணையன்மாலைபெண்மணிபிறகொண்டெய்தி
மத்திரநாட்டுமன்னன்மலர்மகண்மகிழ்நற்கீந்தான்.

கோட்டுவேழம் - கொம்பையுடையயானை, பாய்மா - குதிரை; வயிரக்குப்பை- வச்சிரக்குவியல், பித்திகை - சிறுசண்பகம், பெண்மணி - பெண்மணிகள், மகிழ்நற்கு- கணவனுக்கு. (உஎ)

அளவில்வெங்காதற்பௌவத்தளறெழவழுந்தலுற்ற
இளமயிலன்னசாயலிலக்கணைமன்றலாற்றி
முளையிளமுல்லைமூரன்முருக்கிதழமுதந்துய்த்தான்
தளையவிழ்ந்தடைந்தோர்க்கீறிறனியின்புதருநநதொல்லோன்.

காதற்பௌவத்து - ஆசைக்கடலில், அளறெழ - சேறெழ, மன்றலாற்றி—மணஞ் செய்து, தளையவிழ்ந்தடைந்தோர் - அன்பர், ஈறில் - முடிவற்ற, தனியின்பு - ஒப்பற்ற பேரின்பம். (உஅ)

நெய்ம்முகமணிந்துகாயந்துநிழலுமிழ்ந்தழல்வாய்நேமிக்
கைம்மலரணிந்தசெங்கட்காரணனின்னவாறே
அம்மலர்முருகுவிம்மியகில்வயிரூர்ந்தகூந்தற்
பொம்மல்வெம்முலையினார்தம்புதுமணம்பொருநதினானல்.

நேமி - சக்கரப்படை, செங்கட்காரணன் - கண்ணபிரான். (உகூ)

இதைக்கண்ணை மணம்புரிந்த அத்தியாயம் முற்றிற்று,

ஆகத் திருவிருத்தம்—௬௦௮.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

முப்பத்திரண்டாவது

# நரகாசுரனைக்கொன்ற வத்தியாயம்.

கலிச்சந்த விருத்தம்.

---

வாட்டானையனரகாசுரன்மாயப்பொருதம்மென்
பாட்டாயிரங்களிவண்டறைபைம்பொற்றொடைபுனையா
வேட்டான்பதினாறாயிரம்விரைக்கோதையர்தமைவெஞ்
சூட்டாடரவணைகண்வளர்துளவப்பசுங்கொண்டல்.

வாட்டானையன் - வாட்படையையுடையவன், புனையா - புனைந்து, வேட்டான்- மணஞ்செய்தான், விரைக்கோதையர் - வாசனையுள்ள பூமாலையணிந்தமாதர், துளவப் பசுங்கொண்டல் - கண்ணபிரான். (க)

என்றேதலுநரகாசுரனெனுமவ்விரனையமரில்
கொன்றோர்பதினாறாயிரங்குலமாதரைமலர்மேல்
மின்றோய்கருமுகில்வேட்டதுவிளம்பாயெனவேந்தன்
நன்றோகையினுரைசெய்குறநவின்றான்முனியண்ணல்.

மலர்மேல்மின் - திருமகள், கருமுகில் - கண்ணபிரான், ஓகையின் - உவகை யோடு, முனியண்ணல் - முனிசிரேஷ்டன் (சுகமுனி). (உ)

அழிவெம்மதம்பொழியோங்கலினயிராவதப்பாகன்
மழைவண்ணனையடைந்தன்னை தன்வார்காதணிமகரக்
குழைதன்னொடுபனிமாலைவெண்குடையுஞ்செழுங்கொடியும்
கழிவெஞ்சினநரகாசுரன்கவர்ந்தேகினனென்றான்.

அயிராவதப்பாகன் - இந்திரன், அன்னை - தாய் (அதிதி), மகரக்குழை - மகர குண்டலம். (ந)

வின்னுங்கியதோண்மாயவன்விண்ணந்தனிபுரக்கும்
மன்னன்புகல்வதுகேட்டெழில்வளர்சத்தியபாமை
என்னுங்கதிரிளமாமுலையிணர்ப்பூங்குழலோடும்
பொன்னங்கிரியெனதமோன்றியபுள்ளின்னெருத்திவர்ந்தான்

விண்ணந்தனிபுரக்கும்மன்னன் - இந்திரன், பூங்குழலோடும் - பூங்குழலாளோடும், புள்ளின்னெருத்து இவர்ந்தான் - கருடன் பிடர்மீதேறினன். (ச)

பிளக்கும்பொலமுகடாங்கெனப்பிறழ்சங்கதிர்தரவான்
விளக்குங்கதிர்சூழ்குன்றினைவிரிசெஞ்சிறைக்காற்றால்
துளக்கும்பசும்புள்ளூர்ந்தனன்றுனைவிற்படர்ந்தெழுபார்
அளக்கும்புயலவுணர்க்கிறையரண்முற்றினனன்றே.

கதிர்சூழ்குன்று - மேருமலை, துளக்கும் - அசைக்கின்ற, பசும்புள் - கருடன், துனைவின் - விரைவாக, எழுபாரளக்கும்புயல் - கண்ணபிரான். (ரு)

புயறோய்வரையரண்சிந்திடப்புடைத்தான்பொருகதையால்
வெயிற்றொரியரண்கட்டறவியனேமியின்விழுத்தான்
உயர்நீரரணெறிகாற்றரணுடலும்படையரணோர்
அயில்வாளியினழித்தான்புகுந்தறுத்தான்முரபாசம்

புயல்தோய் - மேகம்படிகின்ற, வரையரண் - மலையரண், எரியரண் - நெருப்பரண், நேமியின் - சக்கரப்படையால், உடலும் - போர்செய்கிற, ஓர் அயில்வாளியின் - ஒருகூர்மையாகிய அம்பினால், முரபாசம் - முரன்பாசவரண். (சு)

மழைமுற்றியநெடுவெற்பரண்மாநீரரண்வானில்
சுழல்காற்றரண்சுடுதீயரண்சுழல்வாட்படையரணோ
டழிவுற்றமைகாணவிழியழல்சிந்தறவெகுளா
முழைவிட்டெழுவயமாவெனமுரன்வந்தெதிர்முனைந்தான்.

காண - கண்டு, வெகுளா - வெகுண்டு, (கோவித்து) முழை - குகை, வயமாவென - சிங்கம்போல, முனைந்தான் - போர்செய்தான். (எ)

புலவுஞ்செறிபலவுங்கமழ்பொருவெம்படைவழங்காக்
கொலைவெஞ்சினவரவூமெனக்கொதித்தாடமருடலும்
மலையஞ்சியதிணிதோண்முரன்மன்றற்றொடைகமழும்
தலையஞ்சையுமுலகுண்டவன்றனியாழியிற்றடிந்தான்.

புலவு - தசை, படைவழங்கா - ஆயுதங்களைப் பிரயோகித்து, அமருடனும்-போர் செய்கிற, மன்றல் - வாசனை, தொடை - பூமாலை, உலகுண்டவன் - கண்ணபிரான், தனியாழியின் - ஒப்பற்ற சக்ராயுதத்தால், தடிந்தான் - அறுத்தான். (அ)

முரன்மாய்தலுமுரன்மைந்தர்கண் முராணுஞ்சனமுதிர்ந்தோர்
எரிகான்றழல்செங்கண்ணினரெழுகாளையர்குழுமா
வரையானெடுமழைகாத்தவம்மழைவண்ணனைவளையாச்
சரமாரியிற்பொழிந்தார்பொருதடக்கைச்சிலைகுழைத்தே.

குழுமா - கூடி, மழைவண்ணனை - கண்ணபிரானை, வளையா - வளைத்து, சரம் - பாணம், மாரியின் - மழைபோல, சிலைகுழைத்து - வில்வளைத்து. (கூ)

மழுவிற்பொருகுலிசத்தினின்மாயாவலந்தழையா
எழுவிற்பணைத்தெழுதோள்வலத்தெழுவீரர்தமெழிலார்
செழுவிற்பொழிசரமாரியுஞ்சிரமுந்துணிசெய்தான்
குழவிப்பிறைபுரைமால்கரிக்கூர்வெண்மருப்பொசித்தோன்,

மழுவின் - மழுவினால், குலிசத்தினின - வச்சிராயுதத்தினால், மாயா - இறவாத, வலந்தழையா - வலிதழைத்து, எழுவின் - எழுத்தூண்போல, பணைத்து - பருத்து, கரிக்கூர்வெண் மருப்பொசித்தோன் - கண்ணபிரான். (க0)

மாலைக்கதிர்வேல்வெம்படைமால்வெஞ்சமமாற்று
தோலக்கடலுடைந்தாலெனவுடைகின்றமைகாணுக்
காலைக்கதழெரிகட்கடைகாலக்கனன்றெரியும்
சூலப்படைநரகாசுரன்சூழ்தானையொடெழுந்தான்.

வெம்படை - வெவ்வியசேனைகள், மால் - பெரிய, வெஞ்சமம் - கொடியயுத்தம், ஆற்று து - செய்யாமல், காணு-கண்டு, காலைக்கதழெரி-பிரளயகாலாக்கினி, கட்கடை-கடைக்கண், கால - உமிழ, கனன்று - ஜ்வலித்து. (கக)

வில்லார்வடிவாளார்சினவேலாருருமிடிக்கும்
சொல்லார்கடையெழுவெங்கனல்சொரிகின்றசெங்கண்ணார்
பல்லாயிரமடற்றானவர்பரிதேர்கரிகடவாச்
செல்லார்மழைகாத்தான்றனைத்தெழித்தாரமர்விளைத்தார்.

கடையெழுவெங்கனல் - பிரளயகாலாக்கினி, கடவா - செலுத்தி, செல் - மேகம், மழைகாத்தான் - கண்ணபிரான். (கஉ)

பச்சைக்கிளிநிறப்பாய்பரிபவளக்குளம்பற்ற
கச்சைக்கருங்களிறெண்பிறைக்கதிர்வெண்மருப்பற்ற
அச்சற்றனபொன்னங்கொடியணிதேர்நறையகிலின்
செச்சைத்தடம்புயத்தான்சினத்திகிரிப்படைதொடவே.

கச்சை - கழுத்திடுகயிறு, நறையகிலின் செச்சைத் தடம்புயத்தான் - கண்ணபிரான். (கந)

விழுந்தார்சிலர்திரைவேலையில்விரியுந்திரைக்கடல்வாய்
அழிந்தார்சிலர்விண்கீறியவகன்குன்றிடைக்கவிழ்ந்தார்

கொழுந்தாரளையனைந்துண்டுமைக்கொழுந்தாமெனத்திகழும்
செழுந்தாரவனிவர்புள்ளினஞ்சிறைக்காலினின்மறுகா.

திரைவேலையில் - அலைகளையுடைய கடலில், மைக்கொழுந்தாமெனத் திகழும் செழுந்தாரவன் - கண்ணபிரான், இவர் - ஏறுகிற, புள் - கருடன் (௧௪)

நடையிற்சில விடையிற்றிகழ்நரகாசுரன்விண்ணோர்
அடையத்தெருமராலுற்றிடவயனண்டகடாகம்
உடையத்தனியுராருவழலுயிர்க்குஞ்படரிலைவேற்
படையைத்தருகருளன்பெரும்பணைத்தோளினிலெறிந்தான்.

விடையின் - இடபம்போல, அடைய - எல்லாம், தெருமராலுற்றிட - மயங்க, அயனண்டகடாகம் - பிரமாண்டகடாகம். உரறு - ஆரவாரித்து, கருளன் - கருடன், பணைத்தோள் - பெருந்தோள். (௧௫)

மறிவெண்டிரைவடவானலமறுகக்கொழுந்தழல்வெம்
பொறிசிந்துபுவருவெந்திறற்புலவுப்படைகருளன்
செறிகுன்றுறழ்தோளுற்றதுசினமாமதகரிமேல்
எரிதண்ணறுமலர்மென்றொடையெனலாயதுமன்றே.

வடவானலம் - வடவைத்தீ, மறுக - கலங்க, சிந்துபு - சிந்தி, மதகரி - மதயானை.

செஞ்சோரியிற்படிகின்றதுசெறியூன்சுவைப்பதுகார்
நஞ்சூறுவதழல்கால்வதுநகும்மின்பொழிகுவதோர்
வெஞ்சூலமதெடுத்தான்மதவெற்பாமெனநடந்தான்
பஞ்சாயுதமுடையான்முனம்படுவெங்கொலையவுணன்.

சோரி - உதிரம், ஊன்-தசை, நகும்-விளங்குகிற, மதவெற்பு-மதமலை, (யானை) பஞ்சாயுதமுடையான் - கண்ணபிரான், பஞ்சாயுதங்களாவன - சங்கு, சக்கரம், கதை, வில், வாள், என்பன, இவற்றுள் வில்லைச்சார்ங்கமென்பர். (௧௭)

பெருகாழியிற்குருதிப்புனற்பெருக்கெண்டிசைபிறங்கக்
கருகார்கலிசுவறச்சிலைகால்கோட்டியகண்ணன்
முருகாயிரம்வரிவண்டுணமுகைவிண்டலர்தண்டார்
நரகாசுரன்முடிவெங்கதிர்நகுநேமியிற்றடிந்தான்.

குருதிப்புனல் - உதிரநீர், கருகார்கலிசுவற - கருங்கடல்வற்ற, முருகு - தேன், நேமியின் - சக்ராயுதத்தால், தடிந்தான் - அறுத்தான். (௧௮)

தகைசானிலமகளவ்வழிதண்டாமரைமயில்சேர்
அகன்மார்வனைப்பணிந்தேத்தினளளிப்பாயினியென்று
நகுதார்முடிநரகாசுரனறைவிம்மியதுடவை
முகைவாயவிழ்திருநாட்டினின்முகக்கும்பொருளளித்தே

தண்டாமரைமயில் - திருமகள், நிலமகள் - பூமிதேவி, அகன்மார்வன் - கண்ணபிரான், துடவை - சோலை. (௧௯)

மந்தாகினியொடுபொங்கொளிமணிவார்கழலலம்பும்
செந்தாமரைபுகழ்பார்மகள்செஞ்சொற்செவிதிளையா

நந்தாவலர்தழைத்தோங்கியநரகாசுரன்மதலைக்
கந்தாதவிழ்துளவப்புயலபயங்கொடுத்தனனால்.

மந்தாகிநி - ஆகாயகங்கை, கழலலம்புஞ் செந்தாமரை - திருவடி, செவிதிளையா—செவியேற்று, நந்தா - கெடாத, வலம் - வலி, மதலை - மகன், (பகதத்தன்) துளவப்புயல் - கண்ணபிரான். (௨௦)

கந்தப்பியகளியானையின்கதிர்மாமருப்பொசிக்கும்
சந்தப்பெருவரைத்தோளவன்சமரின்றலையிமையோர்
சிந்தப்பொருதிறற்றானவர்திலகன்பெருஞ்சிறப்பார்
அந்தப்புரமோர்மாநிதியறைநோக்கினனன்றே.

கந்து - கட்டுத்தறி, அப்பிய - அழித்த, சந்தப்பெருவரைத் தோளவன் - கண்ணபிரான், தானவர்திலகன்—நரகாசுரன், நிதியறை-பண்டாரம் களஞ்சியம், (பொக்கசம்).

வளந்தங்கிருநிலவைப்பினின்மறமன்னவரெல்லாம்
துளங்கப்பொருதவுணர்க்கிறைதோளாற்றலிற்கவர்ந்தோர்
விளங்கும்பதினாறாயிரர்வெண்மாமதிவதனத
திளங்கன்னியர்தவைவேட்டவணிருக்கின்றமைகண்டான்

இருநிலவைப்பு - பெரியநிலவுலகம், மதிவதநம் - சந்திரபிம்பம்போலுமுகம். ()

கழுவுற்றமென்றூசும்புனைகலனும்பலநல்கா
எழிலிற்றிருமாவிற்றிகழிளங்கன்னியர்தம்மைச்
செழுவிற்பொழிதிருமாமணிச்சிவிகைத்தலைசிறப்பால்
மழையிற்பொலிதருமாயவன்மல்லற்பதிவிடுத்தான்,

தூசு - ஆடை., கலன் - ஆபரணம், நல்கா - கொடுத்து, திருமாவின் - திருமகள் போல, சிவிகைத்தலை - பல்லக்கில், மழையின் - மேகம்போல, மல்லற்பதி—துவாரகை.

மால்கூர்ந்தவவ்வயிராவதமரபிற்பிறந்தனதீம்
பால்வெண்ணிறத்தனவானெழுபனிவெண்பிறைமருப்போர்
நால்குற்றனநான்கீற்றிடுமருப்பானனைகவுண்மா
ஆலம்பொழிபகுவாயரவணையான்கவர்ந்தனனால்.

அயிராவதமரபில் - ஐராவதத்தின் சந்ததியில், ஆலம்—நஞ்சு, அரவணையான்—கண்ணபிரான். (௨௧)

கலிவிருத்தம்.

கட்கமழ்ந்ததார்களுலுந்திண்புயம்
மட்பசுங்கொடிக்களித்தமாயவன்
விட்புலச்சிறப்பெய்தமேதகு
புட்கழுத்தினிற்போயினனரோ.

கள் - தேன், மட்பசுங்கொடி - பூமிதேவி, புள் - கருடன். (௨௩)

ஈன்றசெங்கதிர்க்குழவியெய்தல்போல்
தோன்றுவெவ்வெயிற்சுடர்செய்குண்டலம்

ஆன்றபொற்புலாமதிதிக்கிந்தனன்
கான்றகம்பகார்க்கண்ணனென்பவே

செங்கதிர்க்குழவி - பாலசூரியன், பொற்பு - அழகு, அதிதி - காசிபர்மனைவி, கான் - வாசனை. (உசு)

ஆடனேமியானையதண்டுழாய்
சூடுகண்புயந்தோய்மின்னனாள்
பாடல்வண்டொம்பைம்பொற்கற்பகக்
காடுகண்டெங்காமுற்றனளரோ

ஆடல் - வெற்றி, நேமியன் - கண்ணபிரான், ஏய - அழகாகிய, கற்பகக்காடு—கற்பகச்சோலை, காமுற்றாள் - இச்சித்தாள். (உஎ)

காரிருங்குழற்கலவமாமயில்
ஓருஞ்சாயலனுள்ளநோக்கினன்
வேர்பிடுங்கினன்வேரிமாமலர்ப்
பாரிசாதகம்பைம்பொன்மார்பனே

பைம்பொன்மார்பன் - கண்ணபிரான், வேரி - வாசனை. (உஅ)

கள்ளுலாந்துணர்க்காமர்கற்பகம்
கொள்ளனீயெனக்குழுமுவானுளோர்
தள்ளருந்திறல்சாயமாறிலா
வள்ளல்வால்வளைவாய்வைத்தானரோ

கள் - தேன், துணர் - பூங்கொத்து, கொள்ளல் - கொள்ளாதை, என - என்று, குழுமு - கூடின, வானுளோர் - தேவர், திறல்சாய—வலியழிய, மாறிலாவள்ளல்-கண்ணபிரான், வால்வளை - வெண்சங்கு (உகூ)

செய்யபொற்றருக்கொண்டுசெவ்விசால்
ஐயபொற்கொழுந்தன்னமாதொடு
மையவேலைசூழ்மல்லன்மாநகர்
வெய்யபுள்ளின்மேல்விமலனெய்தினன்.

பொற்றரு - பாரிசாதம், செவ்விசால் - அழகுமிக்க, மையவேலை - கருங்கடல், விமலன் - கண்ணபிரான். (௩0)

நாகணைத்துயினம்பிவம்புலாம்
போகிதழ்ப்பசும்பொன்னங்கற்பகம்
பாகின்மென்மொழிப்பவளச்செய்யவாய்த்
தோகையாடவோர்சோலையாக்கினன்.

நாகணைத்துயினம்பி - கண்ணபிரான், வம்பு - வாசனை, போகு - நிறம். (௩க)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

உருவம்பதினாறாயிரங்கொண்டொடாறைத்துகிர்நெடுமாயன்
குரவங்கமழ்ந்துநெறிந்தகடைகுழன்றமுருகுகூட்டுண்டு

வரிவண்டுறையுங்கருங்கூந்தன்மாதர்பதினறுயிரவர்
திருவமணமோர்காலையினிற்சிறப்பவினிதுபுரிந்தனனால்.

முருகு - தேன், கூட்டுண்டு - கொள்ளைகொண்டுண்டு, ஓர்காலையினில் - ஒரே காலத்தில். (௩௨)

காதல்கனியக்கனியநலங்கனிந்தகதிர்மாமுலைக்கனிவாய்
மாதர்மகிழமந்தாரவனங்கடொறுமென்மாதவிப்பூந்
தாதுபடிந்தேன்பந்தர்தொறுந்தனியாடினனுன்மழைகாத்த
சோதையருவிதவழ்பசும்பொற்குடுமிவிலங்கற்குடைநம்மான்.

மழைகாத்த - மழையைத்தடுத்த, விலங்கற்குடை—கோவர்த்தநகிரியாகிய குடை, நம்மான் - கண்ணபிரான். (௩௩)

நம்பால்விழையுநாகணையானம்பால்விழையுமெனநறிய
ஐம்பான்மகளிரெல்லோருமன்பான்மகிழ ரய்வஞ்சிக்
கொம்பால்வகுத்தசிறுமருங்குற்குவளைத்தடங்கண்மடமாதர்
வம்பாற்றிகழுமுலைதழுவிமலராள்கொழுநன்வைகினனால்.

நாகணையான் - கண்ணபிரான், விழையும் - விரும்புவன், ஐம்பால் - ஐந்துபகுப்பி னையுடைய கூந்தல், ஐந்துபகுப்பாவன - முடி, கொண்டை, சுருள், குழல், பனிச்சை, இவற்றுள் - மயிரை உச்சியில் முடிப்பது முடியெனவும், பக்கத்தில் முடிப்பது கொண்டையெனவும், பின்னேசெருகுவது சுருள்எனவும், சுருட்டிமுடிப்பது குழல்என வும், பின்னிவிடுவது பனிச்சையெனவும் கூறுவர். வம்பு - கச்சு, மலராள்கொழுநன்— கண்ணபிரான். (௩௪)

நரகாசுரனைக்கொன்ற வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௧0௧௨

ஸ்ரீகிருஷ்ணசகாயம்

---

முப்பத்துமூன்றுவது.

## உருக்குமிணியூடறீர்த்தவத்தியாயம்



மலர்வீற்றிருந்தமடமாதுமானக்கவரிமருங்கிரட்டக்
குலவத்தொடுத்தமல்லிகைப்பூர்கோதைகமழமந்தார
அலரிற்றவழ்ந்தபசுந்தென்றல்தீங்கொழுந்துமுருகுயிர்ப்ப
இலவுப்பயன்கொண்முற்றத்துநெடியோன்செம்மாந்திருந்தனனால்.

நெடியோன் - கண்ணபிரான், செம்மாந்திருந்தனன் - இறுமாந்திருந்தான், மலர் வீற்றிருந்த மடமாது - திருமகள் (உருக்குமிணி) கோதை - மாலை, அலர் - மலர், முருகு - வாசனை. (௧)

அவிர்முத்தாய்ந்துஞ்செவிகவருமம்மென்மழலைக்கிளிசுமந்தும்
திவவுத்திகழ்யாழ்நரம்புளர்ந்துஞ்சிவந்ததளிர்க்கைசிவப்பூரக்
கவுரியிரட்டுமுருப்பிணிவெண்கதிர்வாண்முறுவன்முகநோக்கி
உவரியமுதுபடக்கடைந்தவுரவோனென்றுங்குரைசெய்தான்.

அவிர் - விளங்குகிற, திவவு - வலிக்கட்டு, உருப்பிணி - உருக்குமிணி, முறுவன் முகம் - நகைமுகம், உவரியமுதுபடக் கடைந்தவுரவோன் - கண்ணபிரான். (௨)

அரிமாசுமந்தவட்டவணையலங்கவரசவீற்றிருக்கும்
திருமால்வேந்தர்பலர்நினதுசெவ்விவிழையவெய்யநூறு
உருமார்த்தனபோன்முழங்குகளிற்றென்றுருடற்றுமமர்வெருவி
விரிமாக்கடலுளமர்ந்தேனைவிழைந்தாயென்கொன்மெல்லியலே.

அரிமா - சிங்கம், அலங்க - விளங்க, மால் - பெரிய, செவ்விவிழைய - அழகை விரும்ப, அமர் - போர், விழைந்தாய் - விரும்பினுய். (௩)

யவர்மற்றெனைவிழைகிற்பாரேற்றூண்மிசைவாழ்க்கையரன்றி
உவவுமதியிற்கிளர்ந்துகவினெழுகுமுகத்தாயெனக்கலங்கிக்
குவவுக்கதிர்மாமுலைசுமந்துகுழைந்தமருங்குற்கொடிகுழைக்கும்
கவரிசோரத்தொடிசோரக்கையாறற்றுவீழ்ந்தனளால்.

ஏற்றூண் - பிச்சையுணவு, மிசை - உண்ணுகிற, உவவுமதியின் - பூர்ணசந்திரன் போல, கவின் - அழகு, குவவு - திரட்சி, கையாறு அற்று - செயலற்று. (௪)

அளிக்குநெகிழ்பூங்குழலணங்கையள்ளியிருகையாலணைக்கும்
துளிக்குங்கண்ணீரொருகையாற்றுடைக்குந்தூநீரொருகையால்
தெளிக்குஞ்சிறிதுதெளிந்ததற்பின்செவ்வாய்திறந்துசிலகிளக்கும்
களிக்குங்கரடக்கடாகளிற்றின்கதிர்வெண்பிறைக்கோடொசித்தானே.

அள்ளி - எடுத்து, கடாக்களிற்றின் கதிர்வெண்பிறைக் கோடொசித்தான்—கண்ணபிரான், கிளக்கும் - சொல்லுவான். (௫)

கொடிவார்புருவங்கூத்தாடக்குருகுபரந்தநெடுவானில்
பொடியார்வளர்நாண்மதிநுதல்வேர்பொடிப்பப்பவளவிதழ்துடிப்பக்
கடியார்குவளைமலர்க்கருங்கட்கடைசேப்பூரப்புலந்துரைக்கும்
வடியாரமுதமென்மழலைமாதர்க்கிவ்வாறியம்பினனால்.

பொடி - பொடித்தல், (அரும்புதல்] வளர்நாள்மதி - பூர்வபக்ஷத்து அஷ்டமீசந்திரன், நுதல் - நெற்றி, வேர்பொடிப்ப - வெயர்வையரும்ப, கடி - வாசனை, சேப்பூர— சிவக்க, புலந்து - ஊடி (பிணங்கி). (௬)

மாதுவடவையழற்கவெனவண்டுஞ்சுரும்புமெழுந்தாற்றும்
கோதைதிருத்திநுதனீவிக்கொழிக்குஞ்சுடர்ப்பூண்கைசெய்யக்
காதுகடந்துகடைசிவந்துகளித்துமதர்த்துக்கருங்குவளைப்
போதுகடந்தவாட்டடங்கட்பூவைகொழுநற்போற்றினளால்.

வடவை - வடவைத்தீப்போலுங் கோபம், அழற்க - அழாதை, அரற்றும் - சத்திக்கிற, கோதைதிருத்தி - கூந்தலைத்திருத்தி, நுதல்நீவி - நெற்றியைத்தடவி, கைசெய்ய - அலங்கரிக்க, கருங்குவளைப்போது கடந்த - கருங்குவளை மலரைவென்ற, பூவை - உருக்குமிணி. (எ)

முற்றத்துறந்துபற்றின்றிமுருகுபருகுமதுகரம்போல்
பெற்றபெற்றவழியருந்துபெரியோரன்றித்திருவுந்திப்
பொற்றகமலத்துலகேழும்பூத்தோய்செல்வக்களிமயக்கம்
உற்றமாக்கணிளையெங்ஙனுணர்வுபடைத்துவிழைகிற்பார்.

முருகு - தேன், மதுகரம் - வண்டு, முற்றத்துறந்து - முழுதும்விட்டு, (இருவகைப்பற்றும் விட்டு) இருவகைப்பற்றுவன, அகப்பற்று புறப்பற்று என்பன, யான் என்பது அகப்பற்று, எனது என்பது புறப்பற்று. (அ)

ஏடுபடும்பூந்துளவமுகிலெல்லாவுலகும்பிறந்துபட
நீடுதடங்கோட்டாலிலைமேனீலப்புயல்போனிமிர்பசும்பொற்
கோடுபிடுங்கித்திகிரிவரைகொன்றுநெடுவானடையவளைத்
தாடுதிரைக்கொத்ததிர்கடலிலார்க்குவெருவியமர்ந்தனையால்.

துளவமுகில் - கண்ணபிரானே, கோடு - கிளை, நீலப்புயல் - நீலமேகம், பசும்பொற்கோடு - மேருமலை, திகிரிவரை - சக்ரவாளகிரி, வானடைய - ஆகாயமெல்லாம், வெருவி - பயந்து. (கூ)

ஆலககருஞ்சேறுமிழ்பகுவாயரவிற்கிடந்தவாமுதே
நீலப்பொருப்பேயருட்கடலேநெடுநீர்வேலியுலகளிக்கும்
மாலைத்திகிரிமழைமுகிலேமணியிலொளியுமலர்மணமும்
போலத்திகழ்வாயெங்குநினைப்புகலார்க்கென்கொல்புகலம்மா.

ஆலம் - நஞ்சு, பகுவாயரவு - ஆதிசேடன், பொருப்பு - மலை, நெடுநீர் - கடல், புகலார்க்கு - புகழாதவர்க்கு, புகல் - சரண், (அடைக்கலம்). (க0)

அண்டமெலாமன்னுயிரெல்லாமகத்தும்புறத்துங்கரந்தமரும
புண்டரிகக்கட்பொருவிலிநின்புகழேயன்றியயலில்லை
பண்டைமறைகள்பறைவதெனிற்பவர்செஞ்சடையோன்மலருறையுள்
கொண்டவொருவனேனோர்நீகுறித்தப்பணிசெய்குநரலரோ.

அண்டம் - உலகம், அகத்தும் புறத்தும்—உள்ளிலும் வெளியிலும், கரந்து—மறைந்து, பொருவிலி - ஒப்பற்றவனே, பறைவது - சொல்லுவது, பவர்செஞ்சடையோன்-சிவபிரான், மலருறையுள்கொண்ட வொருவன் - பிரமன். (கக)

அழியாவுயிர் யாவையுந்தருநாளமர்ந்தகமலமலர்வேட்கை
ஒழியாய்போலவிழுத்தவத்தோருள்ளக்கமலத்துறைசுடரே
மொழியால்வழுத்தற்கெளிதோநின்முழுச்சீரென்னவருள்பெருகி
வழியாவிதழ்த்தாமரைமலர்க்கண்வள்ளலுள்ளமகிழ்சிறந்தான்.

விழுத்தவத்தோர் - பெருந்தவத்தினர், வள்ளல் - கண்ணபிரான். (கஉ)

அலைவாயெழுந்தமணியொழிக்குமஞ்செங்கதிர்கடவழ்ந்தனபோல்
சிலையாரலங்கற்றிருமார்பிற்றேங்கொள்கலவைச்செழுஞ்சாந்தம்
முலையாலெழுதுமடமாதின்முறுவன்மாந்தியின்புற்றான்
மலையாற்பொழியுமழைகாத்தமண்காத்தளிக்குமறைமுதலே.

மறைமுதல் - கண்ணபிரான், அலைவாயெழுந்தமணி - கௌஸ்துபமணி, சிலை- மலை, மடமாது - உருக்குமிணி, முறுவல்மாந்தி - அதராமிர்தமுண்டு, இன்புற்றான்- சுகித்தான். (கஅ)

உருக்குமிணியுட ...ரத்த வதத்தியாயம்-முற்றிற்று.

ஆக திருவிருத்தம்—கOஉரு.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---

## முப்பத்துநான்காவது.

## பிரத்துமனன் மணம்புரி யத்தியாயம்.

பின்னற்றிரையினமிழ்தென்னப்பெருந்தேவியர்மற்றெண்மரொடு
பொன்னங்கொடிபோன்மடக்கிளிமேற்புயல்வாய்ப்பிறழும்புதுமின்போல்
மன்னும்பதினாறாயிரமென்மழலைமடவாரோரோவொருவர்
பன்னற்கரும்பண்புடைப்புதல்வர்பதின்மர்தமையீன்றெடுத்தனரால்.

பின்னற்றிரை - கடல், புயல்வாய்பிறழும் - மேகத்தில் பிரகாசிக்கிற, பன்னற்கு- சொல்லுதற்கு, பண்பு - குணம் (க)

தெய்வக்கமலமலர்துறந்துதெண்ணீர்விதர்ப்பநாடளிக்கும்
வைவேற்றடக்கைமன்னவர்பொன்மனைவந்துதித்தமடமாது
பௌவத்திரையிற்கிளைக்குமிளம்பவளக்கொடிபோல்விளங்குமொரு
கொவ்வைச்செவ்வாயமுதுகுமென்குதலைத்தீஞ்சொன்மகப்பெற்றாள்.

வை - கூர்மை, மடமாது - உருக்குமிணி, பௌவம் - கடல். (உ)

மன்றற்கோதைதிருவயிறுவாய்த்தசாருமதியென்னும்
கொன்றைக்குழலைக்கொழுங்குருதிகுமிழியெழுவேற்கிருதவன்மா
என்றிப்புவனமீரேழுமிசைக்குந்திறன்மன்னவனுயிர்த்த
வென்றிக்களிற்றுவிசாலக்கண்விரிதார்புனைந்துவேட்டனனால்.

மன்றல் - வாசனை, கோதை - உருக்குமிணி, கொன்றைக்குழல்—புதல்வி, இசைக்கும் - சொல்லுகிற, உயிர்த்த - பெற்ற, வேட்டனன் - மணம்புரிந்தான். (ஙு)

தரவுக் கொச்சகக் கலிப்பா.

வார்சிலைக்கையுருக்குமிநல்வரமதனில்வந்துதித்த
ஆரமுதின்மென்சாயலரும்பெறன்மாமகள்வேட்டுச்

சோரிபடிந்துண்டுதசைசுவைத்துநிணம்வாய்பில்கிப்
பேர்விழைந்தவேலரசர்போசகடத்திறுத்தனரால்.

போசகடம் - போஜகடகம், இது நர்மதாநதிக்கருகிலிருக்கிற ஒருபட்டணம், இது கண்ணபிரான் மைத்துனனாகிய ருக்மியென்பவனால் நிருமிக்கப்பட்டது, சோரி-திரம், பில்கி - சிந்தி, விழைந்த - விரும்பின. (௪)

மொய்க்குமிளங்களிவண்டுமுருகுயிர்க்குமலர்த்தாது
விக்குநறுந்தளிபருகுவிரைக்கோதைமணம்வேட்டுச்
செய்க்கமலத்தலரன்னசெங்கணெடுமால்பயந்த
மக்களின்மீனேறுயர்த்தமதவலியுமாங்கிறுத்தான்.

முருகு - வாசனை, தேன். நறுந்தளி - தேன்றுளி, விரை - வாசனை, பயந்த-பெற்ற, மீனேறுயர்த்தமதவலி - ப்ரத்யும்நன். (௫)

கூற்றிருந்துவிளையாடுகுடுமிநெடுவேன்மன்னர்
வீற்றிருந்தமாடத்துவிளைகமழும்பசுந்தேறல்
ஊற்றிருந்தபூங்கொடிபோலொழுகிநிலாவழியுமதிக்
கீற்றிருந்ததனையநுதற்கிளிமொழிசென்றெய்தினளால்

தேறல் - தேன், மதிக்கீற்று - பிறை. (௬)

எழிற்குழையொன்றெல்கியணியெருத்தலைப்பவிருபூங்கு
குழல்பிணையல்புறந்தாழக்குடங்கைநிறைந்தடங்காத
மழைத்தடங்கண்மடமாதுவட்டவாய்த்திகிரிவலம்
தழைத்தபுயமருதோன்றறடம்புயமேநோக்குற்றாள்.

எருத்து அலைப்ப - பிடரிற்பட, பிணையல் - மாலை, தாழ - தொங்க, குடங்கை-உள்ளங்கை, திகிரி - சக்கரப்படை, திகிரிவலம் தழைத்த புயமருதோன்றல் - ப்ரத்யும்நன். (௭)

மெல்லியல்வாளரித்தடங்கண்மீனேற்றுக்கொடியோன்றன்
மல்லியலுந்திணிதடந்தோண்மணிவரையிற்றவழ்தோற்றம்
அல்லியம்பூந்துணருதுமளிநாணிற்றொடுத்துலகம்
கொல்லியவோங்கியகுவளைக்கொழுமலரோபோன்றதால்.

மீனேற்றுகொடியோன் - ப்ரத்யும்நன், தோற்றம் - காட்சி, அளிநாண் - வண்டுநாண், கொல்லிய - கொல்ல, குவளை - நீலோத்பலம். (௮)

எறிக்குநிலாகொழுந்தென்னவெரொழுகுபொறிநுதல்வேர்
உறைப்பவுருத்தொளிர்கின்றவொள்ளொளிமென்னகைமொக்குள்
மறைத்துநறைக்குழறூழமனைழமின்னிற்றிகழ்வாளைக்
குறிப்பறிந்தவிளவேனிற்கோமைந்தன்கவர்ந்தனனால்.

நிலாக்கொழுந்து - பிறை, பொறி - பொட்டு, வேர் — வெயர்வை, மொக்குள்-அரும்பு, நறை - வாசனை, மின்னின் - மின்கொடிபோல, இளவேனிற்கோ மைந்தன்-ப்ரத்யும்நன். (௯)

அள்ளிலைப்பூணணிந்தேர்தும்மம்பகட்டுவைமார்பின்
ஒள்ளிதழ்வெம்முலைமுளரியோங்கெழின்மெல்லரும்புபொர
முள்ளரைத்தாமரைமுகையான்மூவுலகுந்தனிபொருத
கள்ளொழுகுபசுந்தாரான்கலவியினிற்களித்தனனால்

அள்—கூர்மை, பகடு—பெருமை, முளரி—தாமரை, பொர—தாக்க, முள்ளரைத்தாமரை - முகையான் மூவுலகுந் தனிபொருத கள்ளொழுகு பசுந்தாரான்-ப்ரத்யும்நன்.

கரும்புகடைகுழைத்தூறுங்கார்முல்லைமெல்லரும்பால்
இரும்புவனம்பொருதழித்தவெழுவுறழுந்திணிமொய்ம்பன்
விரும்புறவின்னமுதூறும்வெண்டோட்டுப்பனிமுல்லை
அரும்புறழுமுள்ளெயிற்றுட்கநிருத்தனுநிரத்தனனால்.

குழைத்து — வளைத்து, இரும்புவனம் — பெரியவுலகம், பொருது — போர்செய்து, உறழும் — ஒத்த, மொய்ம்பன் — தோள்களையுடையவன், வெண்டோடு - வெண்மையாகியஇதழ், முள்ளெயிற்றுட்கு — கூர்மையாகியபற்களையுடையவளுக்கு. (கக)

செருக்கியவெண்பிறைக்கோட்டுத்திருகுசினமால்யானை
உருககுமிதன்மகனுயிர்த்தவோடரிக்கட்செங்கனிவாய்ப்
புரிக்குழலைத்தயங்குமெழில்பொலியும்வலம்புரிபொறித்த
அரக்கெறிதாமரைமலர்க்கையநிருத்தற்களித்தனனால்.

பிறைக்கோடு — பிறைபோலுங்கொம்பு, மால் — பெரிய, வலம்புரிபொறித்த, வலம்புரிச்சங்கரேகையுள்ள, அரக்கெறிதாமரைமலர் — செந்தாமரைமலர். (கஉ)

என்றலுமாயனைமுனிவுற்றிருக்கின்றேன்மாலயந்த
மன்றலந்தாரவன்மகற்குமகட்கொடைநேர்ந்ததெனைகுணம்
குன்றனையாயெனவேந்தன்கூறுதலுந்தங்கைமனம்
நன்றுவப்பநல்கினனென்றுமுனிவானவில்வான்

முனிவுற்றிருக்கின்றேன் — கோவித்திருப்பவன், மால்பயந்தமன்றலந்தாரவன் மகற்கு — அநிருந்தனுக்கு, மகட்கொடைநேர்ந்தது—மகளைக்கொடுக்கச்சம்மதித்தது, உவப்ப — சந்தோஷிக்க. (கங)

அள்ளிலைவேல்வலனுயர்த்தவநிருத்தன்மணமாற்றக்
கள்ளவிழும்வெண்டோட்டுக்கரும்பனைமீமிசையுயர்த்த
வெள்ளிவரையனையானும்வேதவிழுபொருட்படிவப்
புள்ளுயர்நீள்கொடியானும்போசகடத்திறுத்தனரால்.

வலனுயர்த்த — வலத்திற்றூங்கிய, கரும்பனைமீமிசையுயர்த்தவெள்ளிவரையனையான் — பலராமன், வேதவிழுப்பொருட்படிவப் புள்ளுயர்நீள்கொடியான் — கண்ணபிரான். (கச)

கழுகுசுலவுறநிணம்வாய்கான்றகமழ்கருங்குருதி
ஒழுகுநெடுவேற்றடக்கையுருக்குமிகாதலனுயிர்த்த
புழுகொழுகுகருங்கூந்தற்பொற்கொழுந்தையழல்சான்றாய
அழகொழுகுதிணிதடந்தோளநிருத்தன்வேட்டனனால்.

சுலவுற — சூழ, சான்று — சக்கி, குருதி — உதிரம், உயிர்த்த — பெற்ற, அழல்சான்றாய் — அக்நிசாக்ஷியாய், வேட்டனன் — மணம்புரிந்தான். (௧௫)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

மோடுசான்மன்றலாற்றிமுருகனானுறைபுநாளில்
பீடுசால்பிறைவெண்கோட்டுப்பிணர்ப்படுபனைக்கைநால்வாய்
ஓடைவேய்களிநல்யானையுருக்குமிதன்னோடின்புற்
றூடினான்சூதுவென்றியவப்படையண்ணன்மன்னோ.

மோடு — பெருமை, மன்றல் — விவாகம், முருகனான் — முருகனைநிகர்த்தவன், பீடு — பெருமை, பிணர் — சருச்சரை, நால் — தொங்குகிற, ஓடை — முகபடாம், வென்றி - வெற்றி, அவப்படையண்ணல் — பலராமன். (௧௬)

முள்ளெயிற்றணங்கினனார்முகிழ்முலைக்கோடுபாய
ஒள்ளிணர்கிழிந்தபைந்தாருருக்குமியிருகால்வெல்ல
வெள்ளியங்குன்றம்போலும்விளங்கொளிமேனியானைத்
தெள்ளொளிமுறுவலொன்றச்சிரித்தனன்கலிங்கவேந்தன்.

வெள்ளியங்குன்றம்போலும்விளங்கொளிமேனியான் — பலராமன். (௧௭)

குமுதமென்முகைவாய்விள்ளக்குரூஉச்சுடர்க்கற்றைகாலும்
அமுதவெண்டிங்களென்னவவிரொளிவிரிக்குமேனி
விமலன்மற்றொருகால்வெல்லவென்றனன்யானேயென்னா
உமிழ்கதிர்ப்பரிதிவைவேலுருக்குமியுரைசெய்தானால்.

சுடர்க்கற்றைகாலும்—ஒளிக்கற்றையையுமிழ்கின்ற, அமுதவெண்டிங்களென்னவவிரொளிவிரிக்குமேனிவிமலன் — பலராமன், வெல்ல - வென்றானாக, பரிதி - சூரியன், வை - கூர்மை. (௧௮)

சந்தனப்படப்பைவேலித்தண்பணைவிதர்ப்பவேந்தன்
மைந்தன்மேல்வென்றிநாட்டிமன்னவருரைத்தாராக
வெந்திறன்ஞாஞ்சிறுங்குவிமலனேவென்றானென்னா
அந்தரவாணிமற்றொன்றாயிடையறைந்ததன்றே.

விதர்ப்பவேந்தன்மைந்தன் — ருக்மி, வென்றிநாட்டி - வெற்றியைத்தாபித்து, ஞாஞ்சிறுங்குவிமலன் - பலராமன், என்னா - என்று, அந்தரவாணி — ஆகாசவாணி.()

நீணிறப்பரவைவேலிநெடுநிலம்புரக்கும்வேந்தர்
பான்மையிலாடலுற்றபல்படைத்தொழிலுஞ்சூதும்
ஆனினம்புரந்துகான்சேராயர்நன்கறிவாரென்றாங்
கூனுகுகுடுமிவேற்கையுருக்கு யசிசெய்தானே.

பரவை - கடல், புரக்கும் — காக்கின்ற, படைத்தொழில் - ஆயுதவித்தை, ஆனினம்புரந்து - பசக்கூட்டத்தைக்காத்து, கான்சேர் - காட்டிற்சஞ்சரிக்கிற, ஆயர் - இடையர், ஊன் - தசை, குடுமி — நுனி, அசிசெய்தான் — அவமதித்துச்சிரித்தான். ()

இருட்டறச்சுடருஞாயிறெழுந்துசூழ்பசும்பொற்குன்றம்
வெருட்டியகுவவுத்திண்டோள்வெந்திறலிராமன்சீறிச்

கரைந்தான் - சொன்னான், சூலப்படையிறை - சிவன், செரு - போர், கட்டுரை-உறுதிச்சொல். (உ)

இடியுற்றன்னெடுவான்கிழித்தெழுமேழ்பெருங்குன்றும்
பொடிபட்டனவென்றேளொடுபொருவெஞ்சமர்புரியாப்
பிடிமற்றிவையெனக்கிம்புரிபிறங்கும்பிறைவெண்கோ
டடியற்றிடப்பொருதோடினவடல்வாய்களிறெட்டும்.

சமர்புரியா - போர்செய்து, பொருது - போரிட்டு. (௩)

வளர்திண்புயந்தினவுற்றனவாட்போர்பெறுகலனால்
கிளர்வெள்ளியம்பனிமால்வரைகிழவோயுயர்கொற்றம்
விளையுஞ்சமநினையல்லதுவிளைக்கின்றவரிலையால்
தளராவிறல்கெழுவாளமர்தருவாயெனக்கிளந்தான்.

வெள்ளியம்பனி மால்வரை - கைலாயமலை, சமம்—போர், வாளமர் - வாட்போர்.

அரணீறெழமுனஞ்செற்றவனம்மென்னகைமுகிழா
இருநீர்வரைப்பினிலென்னினுமெறுழ்மிக்கவனெய்தா
வரையானையுந்திரண்டாலெனவளர்ந்தோங்கியபுயத்தாய்
செருவாற்றுவனின்னோடெனச்செவ்வாய்திறந்திசைத்தான்.

அரண்—முப்புரம், எறுழ்—வலி, செருவாற்றுவன்—போர்செய்வேன். (௫)

துன்னுவமர்துன்னப்படுமெனத்தோட்குலம்பணையா
அன்னான்வருமெந்நாளெனவற்றாங்குநின்னடல்சேர்
பொன்னார்கொடிவீழ்வுற்றிடுபோதாமெனப்புகல
மின்னுமெனத்திகழ்வேலினன்விளையாமகிழ்விளைத்தான்.

பணையா—பருத்து, அமர்—போர். (௬)

அனையானெயிலரண்காவல்செயரன்மாமலைமடந்தை
புனைவார்முலைகுழையப்புணர்பொழுதத்துடலசுரன்
மனமோகைசெய்மகள்காணுபுமயலேறினண்மருவத்
தனைநேர்தருமுமையாளருடழையாவுரைதருமால்.

அரண்-மதில், மலைமடந்தை-பார்வதி, உடல்—சண்டைசெய்கிற, காணுபு—கண்டு, அருடழையா—அருள்மிகுந்து. (எ)

சின்னாளினின்கனவின்றலைதிமிரக்கருங்களிற்றின்
மன்னாறுமலர்ப்பூங்கணைமழையிற்பொழிமதனன்
தன்னாண்மையொடுறுபேரெழிறகுமாடவனொருவன்
நின்னாய்நலநுகர்வானவனின்காதலனென்றாள்.

கனவின்றலை - சொப்பனத்தில், திமிரம்—இருள், மழையின்—மழைபோல, நலநுகர்வான—சுகத்தை யநுபவிப்பான். (அ)

தனிவிற்றிறல்வாணாசுரன்றருகன்னியன்னணமே
கனியிற்சுவைகனிமென்மொழிகரும்பன்னவள்கனவின்

பனிமுத்தணிந்திருகுன்றெனப்பணைத்தேந்திய திணிதோள்
அநிருத்தனைமணந்தெவ்வழியகன்றனனெனவிழித்தாள்.

அன்னணமே - அவ்வாறே, பணைத்து—பருத்து. (௯)

என்னருயிர்த்துணைநீயிவணிருந்தென்னைகொலம்ம
பொன்னார்வளைகழல்வுற்றனபுனைபூந்துகில்சோர்வ
கொன்னேநெடுநிலவுத்தழல்கொல்கின்றதுகுலையா
இன்னேயெனதுயிர்தேயுமென்றிசைதநாளழுதுயிர்த்தாள்.

உயிர்த்துணை—உயிர்ப்பாங்கி, நிலவுத்தழல்—நிலவாகிய நெருப்பு, குலையா-குலைந்து

மொழிகுற்றதெனிவ்வாறொருமொயதாரவன்றனைநீ
விழைவுற்றனைபோல்வாய்மனமவிழைவுற்றனையெவனோ
அழிமட்டுமிழ்வனைபூங்குழலறைவாயெனக்கிளந்தாள்
செழுமுத்தெனவிளவாணகைதிகழ்சித்திரரேகை.

விழைவுற்றனை - விரும்பினாய், மட்டு—தேன், பூங்குழல்—விளி, (பூவணிந்த குழலையுடையாளே) கிளந்தாள் - சொன்னாள், வாணகை - ஒளிபொருந்தபல்வரிசை. (௧௧)

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

கள்ளவிழ்கோதைகண்டேன்கனவிலொருவன்றன்னை
அள்ளிலைப்பூணினான்றனம்பகட்டாரமார்பும்
புள்ளுண்ணவிரிந்தபைந்தாரப்பொன்வரைபொருவுதோளும்
ஒள்ளொளிநகையுமாவிபுணடவென்றருகினளால்

கள் - தேன், கள்ளவிழ்கோதை—விளி, பகடு—பெருமை, புள் - வண்டு, பொருவு—நிகர்த்த. (௧௨)

முழுமதிமுகததநங்கைமூவகையுலகின்மூவா
அழகுவீற்றிருந்ததிண்டோளாடவர்தம்மையெல்லாம்
கிழியினிலெழுதிககாட்டகிள்ளையங்கிளவிவாளா
எழுதியபாவைபோலவிருந்தனளென்பமன்றே

முழுமதி - பூர்ணசந்திரன், மூவா - அழியாத, கிழி - எழுதுபடம், கிள்ளையங்கிளவி - கிளிமொழிபோலு மொழியையுடையவள், பாவை - சித்திரப்பிரதிமை. ()

அரவுடனெளியவாடுமஞ்சனவண்ணன்றன்னைத்
திருமணிதெளித்துத்தீட்டிச்சித்திரரேகைகாட்ட
எரிமணியாரந்தாங்கியிணைத்தெழுமுகிழ்மென்கொங்கைச
கருமணிக்கூந்தற்கன்னிகண்டுகெண்களிமீக்கூர்ந்தாள்.

அஞ்சனவண்ணன் - கண்ணபிரான், தீட்டி - எழுதி, சித்திரரேகை - உஷைக்குத்தோழி, இவள் வாணாசுரன் மந்திரியாகிய கபந்தன்மகள், இவள் சித்திரமெழுதுவதில் மிகு சமர்த்தையாதலால் இவளுக்கு இப்பெயர்வாய்ந்தது. (௧௪)

சுறவுயர்கொடியினானைத்துகிலிகைகொண்டுதீட்டி
இறுமருங்கென்னவீங்குமிளமுலைத்தோழிகாட்டச்

மாந்தளிர்குழைவுகூரவழிந்தழுகொழுகுமேனி
ஏந்திழைமுறுவன்மாந்தியிருந்தனன்கரந்துமன்னோ.

பிடி - பெண்யானை, கரந்து - ஒளிகின்ற, வெள்ளான் - நீங்காதவனாய், (முற்றெச்சம்) குழைவுகூர - குழைய, ஏந்திழை - உஷை, முறுவல் - அதராமிர்தம் (வாயெயிறூறியநீர்). (உக)

துவர்ப்பவின்கனிகள்தீஞ்சுவைப்படுமழலைப்பேதை
தவப்பசும்பொன்னங்கொம்பிற்றயங்குமெய்வனப்புமுள்கட்
சிவப்புமென்முறுவற்செய்வலாய்த்திருமலர்விளர்ப்புநெஞ்சத்
துவப்புறுபுணர்ச்சிபுண்ணைப்புணர்ந்தனவாயிலோர்க்கே.

துவர்ப்ப - துவர்க்க, தவ - மிகுதியாக, பொன்னங்கொம்பின் - பொற்கொம்பு போல, தயங்கும் - விளங்குகிற, மெய்வனப்பு - வடிவழகு, விளர்ப்பு - வெளுப்பு, உவப்புறு - களிப்புமிக்க. (உஉ)

நாற்றமுநடையுமற்றநன்றுநற்கன்னிமன்றும்
தோற்றமுங்கண்டவாற்றாற்றுணைபுணர்செவ்விகாட்டும்
ஆற்றல்வேலரசகாணென்றகன்கடைகாப்போரண்மிச்
சாற்றலுங்கன்னிமாடஞ்சார்ந்தனன்வாணன்மன்னோ.

மற்று - அசை, துணை - கணவன், கடைகாப்போர் - வாயில்காப்போர், அண்மி - கிட்டி. (உங)

வாள்விரிபசும்பொன்பூந்தவிசிமுலைகிழித்தசைந்தார்த்
தோள்வரையுறைத்தந்தேறல்சூழ்ந்துணவரிவண்டாட
ஆள்வரக்கொழிக்குமுண்கணமுதுறழ்சாயலோடு
காளைசூதாடல்கண்டுகட்கடைசிவந்தான்மாதோ.

வாள் - ஒளி, தேறல் - தேன், அமுதுறழ்சாயல் - உஷை, காளை - அநிருத்தன்.

களிச்சுரும்பாற்றுகோதைகடைசிவந்தகன்றுநீண்டு
விளர்ப்புறுநீலவுண்கண்வேல்பொரவிழைந்துவைகும்
அளைத்தலையரியேறன்னவரசிளங்குமன்றன்னை
வளைத்தனரடுபோராடவாட்படைவயவர்மன்னோ

களிச்சுரும்பாற்றுகோதை - உஷை, அளை - குகை, அரியேறு - ஆண்சிங்கம், வயவர் - வீரர். (உரு)

கரும்புகால்குழைத்தகாளைகாமருபுதல்வன்வெம்பி
இரும்புசெயுலக்கையொன்றுங்கெடுத்தனனிகலலோடும்
பொரும்புலிப்போத்திற்றுஞ்சுபொழிமதக்களிறுபோல
அரம்பொருநெடுவேன்மள்ளராருயிர்தொலைவுற்றாரால்.

கரும்புகால் குழைத்தகாளை - மன்மதன், காமருபுதல்வன்—அநிருத்தன், வெம்பி - கோபித்து, எடுத்தனன் - எடுத்து, (முற்றெச்சம்) இகலல்—போர்செய்தல், பொரும் - போர்செய்கிற, புலிப்போத்தின் - ஆண்புலிபோல, தொலைவுற்றார் - நீங்கினார். (உசா)

மயிலொடுமோறுகொண்டமாதரஞ்சாயற்கன்னி
கயன்மலைப்பனைநீலக்கண்ணிணைமாரிகாலப்
புயலுறழ்மேனியானைப்பொருளெத்தவுணர்வேந்தன்
அயிலெயிற்றரவின்பாசத்தார்த்தனன்சிறைசெய்தானே.

கன்னி - உஷை, மாரிகால - மழையைக்கொட்ட, புயலுறழ்மேனியான் - அநிருத்தன், அரவின்பாசத்து - நாகபாசத்தால், ஆர்த்தனன் - கட்டினன். (உஎ)

திங்களோர்நான்குதண்ணந்தேனெடுந்தொழுகுபைந்தார்
ஐங்கணைக்கிழவன்பெற்றவரும்பெறற்புதல்வற்காணேம்
எங்குளன்கொல்லோவென்னயாதவர் நாடுங்காலைத்
துங்கயாழ்முனிவன்வந்துசொல்லினன்விளைந்தவாறே

திங்கள் - மாதம், ஐங்கணைக்கிழவன் - மன்மதன், அரும்பெறற்புதல்வன் - அநிருத்தன், நாடுங்காலை - தேடுங்காலத்தில், யாழ்முனிவன் - நாரதன். (உஅ)

தாட்படிதுளவப்பைந்தார்த்தனிமுதல்குமரர்வெள்ளம்
கோட்புலிக்குழாத்திற்பொங்கிக்குரைகழனரலவீக்கி
வாட்படைவிதிர்த்துத்திண்டோள்வலங்கெழுவாணன்றன்மேல்
ஞாட்பினுக்கெழுந்ததூழிநாலெனும்பரவைநாண

துளவப்பைந்தார்த்தனிமுதல் - கண்ணபிரான், புலிக்குழாத்தின் - புலிக்கூட்டம்போல, நரல - சத்திக்க, வீக்கி - கட்டி, விதிர்த்து - அசைத்து, ஞாட்பினுக்கு - போர்க்கு, பரவை - கடல். (உகூ)

மல்லலஞ்சிறப்புவாய்ந்தவால்வளையலறமன்னும்
வெல்கொடிமகரமோங்கவேனிலஞ்செல்வன்றனை
கல்லெனக்கலிக்குநீலக்கடற்புறத்தெழுந்ததோற்றம்
ஒல்லெனவொலிக்கும்வேலையுடைந்ததுபோலுமாதோ.

வால்வளை - வெண்சங்கு, அலற - கோஷிக்க, மகரம்—மீன், வேனிலஞ்செல்வன்—அநிருத்தன். (௩0)

கலிவிருத்தம்,

நாணுறத்தாமெலாநலநதகப்பிறங்கிய
வாணன்மற்குலவுதோண்மாயவன்துணிப்பன
காணியவரையெலாங்கண்ணுறல்போன்றன
கோணைவெங்களிற்றினங்குழுமியாங்கெழுபவே.

பிறங்கிய - விளங்கிய, துணிப்பன - அறுப்பன, காணிய - காண, வரையெலாம்-மலைகளெல்லாம், கோணை - வலி, குழுமி - கூடி (௩க)

பாழிசான்முழுமடற்பனைவலன்னுயரிய
தாழிருந்தடக்கையான்றண்பதிபோன்றுமாங்
காழியந்தேர்கடாயழல்சினந்திருகிய
ஊழிவெம்பரிதிபோலுடன்றெழுந்தனரோ.

பாழி - பெருமை, சால் - மிகுந்த, பனைவலன் றுயரியசாழிருந்தடக்கையான்- பலராமன், பரிதி - சூரியன், உடன்று - கோவித்து. (௩௨)

வெண்டலைப்புணரிபோல்விரைசெலக்கலினமா
மண்டுவெம்படைககடன்மருங்குறவெழுந்தன
எண்டிசைத்தலைவரோடிமையவர்தொழுதெழத்
தெண்டிரைத்துயிலெழுந்திகிரியஞ்செல்வனே.

புணரி - கடல், கலினமா - குதிரை, திகிரியஞ்செல்வன் - கண்ணபிரான். ()

மின்னுநேர்வாட்படைமிளிரவண்டிமிர்துழாய்
இன்னெழின்முகிற்கொழுந்தெழுமுனைங்கெழுதரு
கொன்னவில்படைக்கடற்கொழுந்துபோயவுணர்கோன்
பொன்னெயிற்சோணிதபுரத்தினிலிறுத்ததே.

மின்னுநேர் - மின்னலைநிகர்த்த, துழாயின்னெழின் முகிற்கொழுந்து - கண்ணபிரான், கொழுந்து-கோடி, பொன்னெயில்-பொன்மதில், அவுணர்கோன்-வாணாசுரன்.

புரிவளைமுழக்கினாற்பொலமுகடுடைபடச்
செருவிளைகாதலிற்செலவயர்கொடிப்படை
உருமிளைப்பாறவாரோங்குபொன்னிஞ்சிசூழ்
அருமிளையெறிந்ததாலாழியிற்குழுமியே

வளைமுழக்கினால - சங்கத்தொனியால், செருவிளை-போர்செய்கிற, இஞ்சி-மதில், இளை - காவற்காடு (௩௫)

கலித்தந்தவிருத்தம்.

நூறாயிரம்பரியாயிரஞ்செம்பொற்புகர்முகவெங்
காராயிரமொருபால்வரக்கனல்கட்கடைசுதுவாப்
பாராயிரந்தலைதாங்கியபகுவாயரவென்ன
ஓராயிரம்புயத்தானவனுடன்றானமர்க்கெழுந்தான்.

புகர்முகவெங்கார் - யானை, பாராயிரந்தலைதாங்கியபகுவாயரவு-ஆதிசேடன், அமர்க்கு - சண்டைக்கு. (௩௬)

முரசங்கடலெனவார்த்திடமுகில்போன்முழவிமிழப்
புரிசங்கதிர்தரககட்கடைபுகைகூபகன்னனும்வான்
உருமேறெனக்கும்பாண்டவைமூழிக்கடையுடைக்கும்
அரவக்கடல்பொருதானையொடமர்வேட்கையினெழுந்தார்

ஆர்த்திட - முழங்க, முகில் - மேகம், முழவிமிழ - மத்தளமொலிக்க, அதிர்தர- கோஷிக்க, அரவம் - சத்தம் (௩௭)

ஆர்க்கும்புயல்கிழித்தோங்குநெட்டலகைக்குலமடையக்
கூர்க்குந்தமூழுமிழ்குண்டுகெட்குறுத்தாட்பெரும்பூதம்
பார்க்குந்திசைதொறுந்தோன்றிடப்பாய்வெள்விடையிவராத்
தார்க்கொன்றைதண்ணறவூற்றுசெஞ்சடைவானவனெழுந்தான்.

புயல் - மேகம், நெட்டலகை - நெடும்பேய், வெள்விடை—வெள்ளெருது, இவரா-ஏறி, செஞ்சடைவானவன் - சிவன். (௩௮)

இடிக்குஞ்சினவுருமேறெனவிருங்குன்றகம்பிளக்கும்
வடிக்கும்பனிமலர்த்தார்நெடுவடிவேலவனுயர்வான்
வெடிக்கும்படிவளையார்த்திடவிறன்மஞ்ஞையின்முந்நீர்
பொடிக்குங்கதிரிளஞாயிறுபோலக்கனன்றெழுந்தான்

உருமேறு - ஆணிடி, குன்று - கிரவுஞ்சமலை, வடிவேலவன்-முருகன், மஞ்ஞை-மயில், இளஞாயிறு - பாலசூரியன். (௩௯)

காராடுமின்புரைவாட்டிறற்கண்ணனன்படைக்கடலும்
தாராடுதிண்டோட்டானவன்றானைப்பெருங்கடலும்
போராடினநிணமாந்திடபுள்ளின்குலமுருபுண்
ணீராடினகவந்தக்குலநின்றாடினநெடிதே.

காராடுமின் - மேகத்திலுள்ளமின்னல், புரை - நிகர்த்த, தானவன் - வாணாசுரன், தானை - சேனை, மாந்திய - பருகின, புண்ணீர் - உதிரம், கவந்தக்குலம் - உடற்குறைக்கூட்டம் (௪0)

குருகின்பெயர்புணர்மால்வரைகொன்றோங்கியகொற்றத்
திருகுன்றெனப்பணைத்தேந்தியவெறுழ்தோட்சுடரிலைவேல்
முருகுங்கமழ்முருகுண்டளிமுரல்பூங்கணையவனும்
சிருகுஞ்சினமொடுவெஞ்சரம்சொரிந்தமர்புரிந்தார்

குருகின்பெயர் புணர்மால்வரை - கிரவுஞ்சமலை, கொன்ற - பிளந்த, முருகு-முருகன், தேன். அளி - வண்டு, முரல் - சத்திக்கிற, பூங்கணையவன் - ப்ரதயும்நன், அமர்புரிந்தார் - போர்செய்தார்கள், வெஞ்சரம் - வெவ்வியபாணம் ()

சுழிக்குங்கடுங்குருதிப்புனல்சொரிகின்றதொரலத்தால்
உழக்குந்திறலமர்மேம்படுமுருமொய்ம்பவனொருகால்
குழைக்குஞ்சிலைக்கும்பாண்டனுங்கொலைக்கூபகன்னனுங்கார்
கிழிக்கும்கொடிரதடக்கசரினிற்கிடைத்தாமமடர்த்தார.

குருதிப்புனல் - உதிரநீர், அலத்தால் - கலப்பையால், உழக்கும் - கலக்குகிற-உருமொய்ப்பவன் - பலராமன், கார் - மேகம், கும்பாண்டன் - வாணாசுரன்மந்திரி. ()

மாலைப்பனிமதிவெண்குடைவாணாசுரன்மகனும்
நீலப்புயல்கிழியாவெழுநிழன்மின்னெனத்திசமும்
காலக்கதிர்வேற்சாம்பனுங்கடைநாட்பொழில்கனற்றம்
ஆலப்பகுவாய்வெஞ்சினவரவிற்கனன்றடர்த்தார்.

பனி - குளிர்ச்சி, மதிவெண்குடை - வெள்ளியசந்திரவட்டக்குடை, நீலப்புயல்-நீலமேகம், கிழியா - கிழித்து, நிழல் - ஒளி, பொழில் - உலகம், வெஞ்சின அரவு-ஆதிசேடன். (௪௩)

காற்றுமெனக்கனலாமெனக்கனல்சிந்துகட்பேழ்வாய்க்
கூற்றுமெனவருவாணனைக்குருதிப்புனல்கமழும்

வேற்றானையும்வாட்டானையும்விற்றானையுந்தாரத்தா
னெற்றானிகர்பெருஞ்சாத்தகியினவாளரியனையான்.

பேழ்வாய்க்கூற்று - பெரியவாயையுடையயமன், வேற்றானை - வேற்படை, விற்றானை - விற்படை, வாட்டானை - வாட்படை, தாரத்தா - தாரத்தி, எற்றான் - எதிர்த்தான், சாத்யகி-சத்யகன்மகன், இவனுக்கு யுயுதானனென்றொருபெயருமுண்டு, ஆளரி-நரசிங்கம். (௪௪)

ஓடும்புனன்மந்தாகினிபுடைத்தாலெனவுடைமைச்
சோடும்பிறைக்கதிர்தர்கியகுளிர்வேணியினாவற்
சூடுங்கறைமிடற்றண்ணலுந்தொளைவாயெயிற்றரவத்
தாடுங்கருமுகில்வண்ணனுமமராடினரம்மா.

கோடும் - வளைகின்ற, வேணி - சடை, கறைமிடற்றண்ணல் - சிவபிரான், தொளைவாயெயிற்றரவத்தாடுங் கருமுகில் வண்ணன் - கண்ணபிரான், அமராடினர்-போர் செய்தார்கள். (௪௫)

துளவப்பணிமலர்த்தொடைசூடுந்தனிமுதற்கும்
தளைவிட்டலர்தார்க்கொன்றையந்தார்சூடிகன்னுதற்கும்
விளைவுற்றதுபெரும்போரெனவிண்மொய்த்தவர்விரைவா
றிளமட்டுமிழ்மந்தாரமெல்லிணர்தூயவிவைமேயார்

துளவப்பணிமலர்த்தொடை சூடுந்தனிமுதல் - கண்ணபிரான், தளைவிட்டலர்தார்க்கொன்றையந்தார் சூடுகன்னுதல் - சிவபெருமான், விரைவார் - வாசனைவீசுகிற, மட்டு - தேன், இணர் - பூங்கொத்து. (௪௬)

வேறு.

நீற்றணியணிந்தவனெடுங்கிரிதுரக்கும்
காற்றின்வழிவெங்கணைகடுப்பொடுதுரந்தான்
எற்றையரிமானெனவிறற்களிறுகொன்றோன்
மாற்றினனவ்வாளியைவடிக்கணைதொடுத்தே

நீற்றணியணிந்தவன் - சிவபெருமான், நெடுங்கிரிதுரக்கும்காற்றின்-பெரியமலைகளையலைக்கின்ற ஊழிக்காற்றைப்போல, கடுப்பொடு - வேகத்தோடு, துரந்தான் - செலுத்தினான், எற்றையரிமானென-ஆண்சிங்கம்போல, விறற்களிறுகொன்றோன்-கண்ணபிரான், வடிக்கணை - கூர்மையாகிய அம்பு, வாளி-அம்பு, மாற்றினன்-அறுத்தான்.

தண்ணெனிலவுக்கதிர்தவழ்ந்தசடிலத்தோன்
விண்ணகடுதீயவழல்வெங்கணைதொடுத்தான்
அண்ணலரவிற்றுயிலமர்ந்தகருமேக
வண்ணன்வருணப்படையின்மற்றதுதுணித்தான்.

தண்ணெனிலவுக்கதிர்தவழ்ந்தசடிலத்தோன் - சிவபெருமான், அகடு - வயிறு,
(௩௫) அழல்வெங்கணை - வெவ்விய நெருப்பம்பு, அண்ணலரவிற்றுயிலமர்ந்த கருமேக வண்ணன் - கண்ணபிரான், வருணப்படை - வருணாஸ்திரம், (௪௮)

பழுத்தொழுகுவெங்கொலையபாசுபதமென்ன
வழுத்துபடைசெந்தழலின்வண்ணனனிவிட்டனன்
சுழித்துநறைபாய்துளவுசூடுமுகில்வண்ணன்
அழுற்றநாரணனதம்படையின்மாய்த்தான்.

செந்தழலின்வண்ணன் - சிவபிரான், சுழித்துநறைபாய் துளவுசூடுமுகில்வண்ணன் - கண்ணபிரான், நாரணனதம்படையின் - நாராயணாஸ்திரத்தால். (சகூ)

செருக்குருசிசோய்கணைதெரிந்துதிறல்வல்வில்
அருக்குவளைசாத்தகியடுந்திறலையஞ்சிப்
பொருந்துதிணியுந்துருபொருக்கெனவிழிந்தாங்
கைங்கரனிரிந்தனனமர்க்களன்விரைந்தே.

அடுந்திறல்—கொல்லுகிறவலி, உந்துரு—பெருச்சாளி, பொருக்கென—விரைவாக, இழிந்து - இறங்கி, ஐங்கரன்—விநாயகன், இரிந்தனன் - ஓடினன். (ருO)

அலித்தல்செய்யுமடலம்பினெயிலந்நாள்
வெவச்சிரித்தமலைவில்லியையமயக்காத்
தாவற்றவென்றிகெழுதானவரைமாய்த்தான்
கட்டெரித்திடுசினத்திகிரிமாயன்.

ஆயிர்ப்பை செய்யும் - கொட்டாவியையுண்டாக்குகிற, அடல் அம்பின்-வலியஅம்பினால், எயில் முப்புரம், வெவசசிரிகதமலைவில்லி - சிவபிரான், மயக்கா - மயக்கி, வென்றி - வெற்றி, கவிட்டெரித்திடு சினத்திகிரிமாயன் - கண்ணபிரான். (ருக)

மாடற்சுரும்புழுபசுந்துளவுசூடும்
கோடுற்றசெங்கைமுகில்விற்கடைகுழைப்ப
ஓடற்கமைந்தவமருன்றசுழல்கட்பேய்
ஆடற்கிவர்ந்தணமார்ந்துலவுபேய்கள்

சுரும்பு - வண்டு, பசுந்துளவுசூடும்கோடுற்றசெங்கைமுகில் - கண்ணபிரான். கோடு - சங்கு, ஆரூத்து - வண்டு, ஓடற்கமைந்த - ஓடுதற்காயத்தமாயின (ருஉ)

வானப்பரப்பினில்வயங்குமிருகோட்டுக்
கூனற்பசும்பிறையெனசசிலைகுழைக்கும்
வேனிற்குமன்னனைவெரீஇவரைபறந்த
தானுற்றவேன்முருகனுக்கமடமஞ்ஞை.

வயங்கும் – பிரகாசிக்கிற, இருகோடு - இரண்டுநுனி, கூனல் - வளைவாகிய, சிலை குழைக்கும் - வில்லைவளைக்கிற, வேனிற்குமன்னன்-பிரத்தியும்நன், மடமஞ்ஞை—இளமயில், வரைபறந்தது - மலைக்குப்பறந்தோடிற்று (ருங)

கும்பாண்டன்வென்றிகெழுகூடகனனென்போர்
வெம்பாவமாத்தொழில்விளைத்துவளைமேனி
வம்பார்மலர்த்தெரியல்வள்ளல்படையாலே
தம்பாடவிந்துபொருதானையொடுசாய்ந்தார்.

வெம்பா — வெம்பி, (கோவித்து) அமர்த்தொழில்விளைத்து - போர்த்தொழிலைச் செய்து, வளைமேனிவம்பார் மலர்த்தெரியல்வள்ளல் - பலராமன், படையாலே - அஸ்திரத்தால், பாடுஅவிந்து — பெருமைகுன்றி. (௫௪)

வண்டாடுதாரவுணர்மாளநெடுவல்வில்
கொண்டாழிமாயனொருகொண்டலெனநிற்றல்
கண்டானவற்கெதிர்கடாயினன்மணித்தேர்
தண்டாமவாணனுயர்சாத்தகியைவிட்டே.

வண்டாடுதார் - வண்டுகள் சஞ்சரிக்கிறபூமாலையணிந்த, அவுணர் - அசுரர், மாள - மடிய, கொண்டலென - மேகம்போல, தண்டாமம் - குளிர்ந்த பூமாலையணிந்த, வாணன் - வாணாசுரன், கடாயினன் — செலுத்தினான். (௫௫)

ஐந்நூறுசெங்கரமடற்சிலைகுழைப்ப
ஐந்நூறுசெங்கரமழற்கணைதொடுப்பப்
பைந்நாகபாரமுழுதும்பதைபதைப்பப்
பைந்நாகணைத்துயில்பரம்பொருளொடேற்றான்.

செங்கரம் - செவந்தகைகள், அடற்சிலை — வலியையுடையவில், குழைப்ப - வளைக்க, தொடுப்ப - பிரயோகிக்க, பைந்நாகபாரமுழுதும் - உலகமுழுதும், பைந்நாகணைத்துயில்பரம்பொருளொடு - கண்ணபிரானோடு, ஏற்றான் - எதிர்த்தான். (௫௬)

புள்வாய்கிழித்தபுயல்புட்கொடியின்மேலும்
கள்வாய்மலர்க்கொடிகலந்தவகலத்தும்
தெள்வார்திரைப்புவிதிளைப்புறுபுயத்தும்
வெள்வாள்வலத்தவுணன்வெயகணைபொழிந்தான்.

புள்வாய்கிழித்தபுயல் — கண்ணபிரான், புட்கொடி - கருடத்துவசம், கள்வாய் மலர்க்கொடி - திருமகள், அகலத்தும் - மார்பிலும், திளைப்புறு — தங்குகிற, வெள்வாள் வலத்தவுணன் — வாணாசுரன். (௫௭)

தடக்குஞ்சரத்திடர்தவிர்த்தமணிவண்ணன்
கடக்குஞ்சரத்தொடுகடுத்ததிறல்வாணன்
விடக்குஞ்சரங்களும்விழுச்சிலைகுழைத்துத்
தொடக்குஞ்சரங்களுமறக்கணைதொடுத்தான்.

தடக்குஞ்சரத்திடர்தவிர்த்தமணிவண்ணன் - கண்ணபிரான், கடக்கும் - வெலலுதற்குரிய, சரத்தொடு - பாணத்தோடு, கடுத்த - வேகங்கொண்ட, திறல் - வெற்றி, விழுச்சிலை - பெரியவில் (௫௮)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தழைத்தபைந்துளவமாலைத்தனிமுதனெடியசார்ங்கம்
குழைத்தனன்வாணன்வல்விற்குறைத்தனன்வாவுமான்றேர்
அழித்தனன்பாகன்சென்னியறுத்தனன்பகுவாய்ச்சங்கம்
முழக்கினனெழுதண்டமுகடுகீண்டொழியமன்றோ.

தழைத்தபைந்துளவமாலைத்தனிமுதல் - கண்ணபிரான், சார்ங்கம் - திருமாலின் வில், குறைத்தனன் - அறுத்தான், வாவுமான் - குதிரை, சென்னி - தலை, பகு - பிளந்த, முழக்கினன் - ஒலிப்பித்தான். (௫௯)

வாட்டிறல்வாணனற்றுய்வாளமராழுவநண்ணித்
தோட்டபூஙகூந்தருழத்தூத்துகிலின்றிநிற்பக்
கோட்டலன்வரிவில்வேழக்கோடடிபிடுங்குகொண்டல்
தீட்டருஞ்செவ்விவாய்ந்ததிருமுகங்கோட்டிநின்றான்

வாளமராழுவம் - வாட்போர்செய்கிற போர்க்களம், தோட்ட—இதழ்களையுடைய, தாழ - தொங்க, துகிலின்றிநிற்ப - ஆடையில்லாமல்நிற்க, கோட்டலன் - வளைக்காதவனாய், வேழக்கோடடி பிடுங்குகொண்டல் - கண்ணபிரான், தீட்டருஞ்செவ்விவாய்ந்த - எழுதுதற்கரிய அழகுபொருந்திய, கோட்டி - வளைத்து (௬0)

தொடுசிளப்படையுமின்றித்துனைவயப்புரவிபண்ணி
விடுகொடித்தேருமின்றிவிழுப்பிணக்குவாலின்தோறும்
இடறியுங்குருதிச்செஞ்சேறிழுக்கியுங்களதினீங்கி
வடியிடுநெடுவேல்வாணன்மாநகர்வந்துசார்ந்தான்.

தொடு - வில்லிற்றொடுக்கப்படுகிற, படை - ஆயுதம், துனை - விரைந்துசெல்லுகிற, வயப்புரவி - வெற்றியைத்தருகிறகுதிரை, பண்ணி - அலங்கரித்து, விழுப்பிணக்குவால் - பெரும்பிணக்குவியல், இழுக்கி—வழுக்கி, வடி—கூர்மை. (௬௧)

மூன்றுகான்மூன்றசென்னிபெற்றதுமுழங்குசெந்தீக்
கான்றதுபுவனமூன்றுங்கனற்றுவதாயவெப்பு
வான்றவழ்குடுமிவெள்ளிவயஙகுமால்வரையனுங்குத
தேன்றவழ்துளவப்பைந்தார்ச்செல்வன்மேற்சினாதுவிட்டான்

வெப்புவான்றவழ்குடுமி—முத்தலைச்சூலம், வெள்ளிவயங்குமால்வரையன்—சிவபெருமான், தேன்றவழ்துளவப் பைந்தார்ச்செல்வன்—கண்ணபிரான். (௬௨)

கடற்புனல்சுவறவாய்திக்கனைகடல்கவைஇயஞாலம்
சுடக்கனன்றெழுந்தீயிற்றோன்றுமவ்வெதுப்பின்முன்னே
நடுக்கியகுளிர்வெப்பொன்றுநணிமுறுவலித்துநம்பி
விடுத்தனனுலகமெல்லாம்விதிர்விதிர்ப்பெய்தமன்றே

கவைஇய—சூழ்ந்த, ஞாலம்—உலகம், கனன்றெழுந்தீயின் - சொலித்துக்கொண்டெழுகின்ற நெருப்புப்போல, வெதுப்பு - வெப்பம், குளிர்வெப்பு - குளிர்சுரம், முறுவலித்து - சிரித்து, நம்பி—கண்ணபிரான், விதிர்விதிர்ப்பு—பெருநடுக்கம். (௬௩)

காரழனஞ்சமுண்டகண்ணுதல்கடிதுவிட்ட
கூரழல்வெதுப்புமற்றைக்குளிர்ப்புறுவெதுப்புக்காற்றா
தேரழிற்கமலமாதினிளமுலைபொருததிண்டோள்
ஆரழிற்றிகிரிமாயனடிதொழூஉப்பரவிற்றன்றே.

காரழனஞ்சமுண்டகண்ணுதல்—சிவபிரான், வெதுப்பு—சுரம், ஆற்றாது—பொறுக்கமாட்டாமல், தொழூஉ—தொழுது, ஏரழிற்கமலமாதினிளமுலை பொருததிண்டோள் ஆரழிற்றிகிரிமாயன் - கண்ணபிரான். (௬௪)

விடம்பொழிபடைகளெல்லாம்வேண்டுவமுகந்துகொண்டு
தடஞ்சிறைப்பறவையன்னதயங்குதார்ப்புரவிபூண்ட
கொடிஞ்சியந்தடந்தேரேறிக்குளைகடற்றானைசூழ
மடங்கலேறன்னவாணன்மண்டமர்க்களத்திலுற்றான்.

தடஞ்சிறைப்பறவை - கருடன், தயங்கு - விளங்குகின்ற, தார்-கிங்கிணிமாலை, குளை-ஒலிக்கின்ற, மடங்கலேறு-ஆண்சிங்கம், அமர்க்களம்-யுத்தகளம். (௬௭)

தோமரங்கணிசரிந்தசூலம்வேல்பிண்டிபாலம்
தீமுகத்துமிழுமொள்வாள்சிலையிலதடக்கைசிந்த
மாமரஞ்சிலைகையோச்சநால்வகைச்சிலைகைவீச
தாமரைக்கண்ணன்றன்மேற்சமர்த்தொழில்விளைத்தல்செய்தான்.

ஓச்ச-எறிய, தாமரைக்கண்ணன்-கண்ணபிரான், சமர்த்தொழில்-போர்த்தொழில்.

மான்சுவைத்துகிராமங்கையாழிப்பேலவாணன்றிணிதோள்
நாணெழிதொழிந்தவெம்போரொளிறுதிகிரிதாங்கிக்
கான்குறைத்திடுதல்போலக்களப்படத்துணித்தல்செய்தான்
தேன்சுழித்தொழுகுங்கண்ணஞ்செழுந்துழாயலங்கற்றேவே.

ஒளிறு-ஒளிசெய்கிற, திகிரி - சக்கராயுதம், கான்குறைத்திடுதல்போல-காட்டை வெட்டுதல்போல, களப்பட-போர்க்களத்தில் அறுபட்டுவிழ, துணித்தல் செய்தான்-அறுத்தான், தேன்சுழித்தொழுகுங்கண்ணஞ்செழுந்துழாயலங்கற்றேவு-கண்ணபிரான்

தணிப்பருஞ்சீற்றத்துப்பிற்றானவர்தலைவனாங்கு
வணக்கியசிலைகளோடும்வாங்கியபடைகளோடும்
பணைத்தெழுபஃறோட்கானம்படுகளப்பரப்பின்வீழ்ந்தத்
துணிகுறாயவனைமெய்யத்திச்சொல்லுமம்மழுவலானே

தணிப்பருஞ்சீற்றத்துப்பிற்றானவர்தலைவன் - வாணாசுரன், வணக்கியசிலைகள்-வளைத்தவிற்கள், வாங்கியபடைகள்-எடுத்தஆயுதங்கள், பஃறோட்கானம்-பலதோள்களாகியகாடு, படுகளம்-போர்க்களம், வீழ்ந்தது-விழுந்தது, மழுவலான்-சிவபிரான். (௬௮)

நின்னுடைமாயைதன்னானெடிதறிவழிந்துபல்லோர்
என்னையேனோரைப்பற்றிப்பெருஞ்செல்வந்துய்ப்பார்
உன்னையேபுகல்புக்கோர்மற்றுலப்பில்பேரின்பவீடு
தன்னைநன்கடைவரீறிறனியறநிறுத்தச்சார்ந்தோய்

அறிவழிந்து-மதிகெட்டு, ஏனோரை-மற்றவரை, துய்ப்பர்-அநுபவிப்பார், புகல்புக்கோர் - சரணடைந்தவர், உலப்பில - கெடுதலில்லாத, ஈறிறனியறநிறுத்தச்சார்ந்தோய்-முடிவில்லாத ஒப்பற்றதருமநெறியை நிறுத்தும்பொருட்டு அவதரித்தவனே.

கைப்படுமமுதுவீசிக்கடுநுகர்கசடர்போல
மைப்படுகளத்தேன்மற்றைவானவர்ப்பேணிநின்னை
மெய்ப்படுபெருந்தேவென்றுவிழைகிலார்விழலர்யோகர்
எய்ப்பறநினைத்தநெஞ்சத்தியையநோக்குறுவரெந்தாய்.

கடு—நஞ்சு, நுகர்—உண்ணுகிற, மைப்படுகளத்தேன்—நீலகண்டத்தையுடையேன், விழவர்—வீணர், யோகர்—யோகியர், எய்ப்பு அறநினைத்து—அயர்வறத்தியானித்து, நோக்குறுவர்—கண்டுகொண்டிருப்பார். (௭௰)

பராத்தலைவானீள்பங்கிபனிமுகிலகடுவீரை
தராத்தலைகழல்சூழ்திக்குத்தாழ்குழைசெவிவிண்கொப்பூழ்
விராட்டுருவாயவேதவிழுப்பொருளோபூம்பொய்கைக்
கராத்துயிர்செகுத்தவாதிகாரணனீயேயன்றே

பரா - துதித்தற்குரிய, தலை - சிரம், வான் - ஆகாயம், பங்கி - சிகை, பனிமுகில்-குளிர்ச்சியாகியமேகம், அகடு - வயிறு, வீரை - கடல், தராத்தலை - பூதலம், கழல் - பாதம், தாழ்குழைச்செவி - தொங்குகிறகுண்டலமணிந்தகாது, கொப்பூழ் - உந்தி, கராத்துயிர்செகுத்த - முதலையினுயிரைவாங்கின, ஆதிகாரணன் - முதற்காரணன். (௭௧)

வரமதுதொண்டனேன்முன்வழங்கினேன்கருணைவள்ளால்
பொருசினக்கனகன்காதற்புதல்வனுக்கருள்செய்தென்ன
அருள்செயல்வேண்டுமாலிவ்வடுதிறலாற்குமென்ன
விரியிணர்க்கடுக்கைமாலைவிண்ணவனிறைஞ்சிச்சொற்றான்

வள்ளால் - வள்ளலே, கனகன்காதற்புதல்வன் - இரணியனது ஆசைப்புதல்வனாகியபிரகலாதன், அடுதிறலாற்கும் - வாணாசுரனுக்கும், இணர் - பூங்கொத்து, கடுக்கைமாலை விண்ணவன் - கொன்றைமாலையையணிந்தசிவபிரான், சொற்றான் - சொல்லினான். (௭௨)

வல்விறற்கனகன்மைந்தன்மரபின்வந்துதித்தோர்தம்மைக
கொல்கிலமென்றியாமுங்கொடுத்தனம்வரமாமேரு
வில்லிநீவிளம்புமாறும்விழுமிதென்றுலகங்காக்கும்
அல்லியங்கமலக்கண்ணனருள்சுரந்துரைக்கலுற்றான்

வல்விறற்கனகன்மைந்தன் - பிரகலாதன், கொல்கிலம் - கொல்லமாட்டோம். மாமேருவில்லி - பெரியமேருமலையாகியவில்லையுடையவனே, விழுமிது - மேன்மையானது, உலகங்காக்கும்அல்லியங்கமலக்கண்ணன் - கண்ணபிரான். (௭௩)

இந்நெடுந்தோள்கணான்குமீறிலாவரதமீன்று
மன்னுகவென்றுவெள்வேல்வாணனுக்களித்தல்செய்தான்
கொன்னிளம்பரிதிபோன்றுகுருதிநீர்குடித்தவாழி
மின்னுவிட்டெறிக்குஞ்செங்கைமேலவன்வந்துமன்றே.

ஈறிலா - முடிவில்லாத, மன்னுகவென்று - நிலைபெற்றிருக்கக்கடவனவென்று, அளித்தல்செய்தான் - கிருபைபண்ணினான், கொன்னிளம்பரிதிபோன்று குருதிநீர் குடித்தவாழி மின்னுவிட்டெறிக்குஞ்செங்கை மேலவன் - கண்ணபிரான். (௭௪)

வாளுகிர்நுதியிற்பொல்லாவாட்டிறற்கனகன்மார்வம்
கீளவோர்செம்பொற்றூணங்கீண்டுவந்தெழுந்தசெங்கட்
கோளரியவனிபோற்றுங்குரைகழன்முளரிவானின்
தோளொருநான்கினானைத்தொழுதனன்பரவினானால்

சாற்றினர்சென்றுமுட்டாட்டமரைப்பொருட்டின்வாழும்
கோற்றொடிக்குவவுக்கொங்கைக்கோடுழுமார்பிநாற்கே

கோம்பி—பச்சோந்தி, காணு—கண்டு, ஏற்றிளவரிமாவன்ன—இளமையாகிய ஆண் சிங்கம்போன்ற, எடுக்கலாற்றுர்—எடுக்கமாட்டாதவராய், முட்டாட்டாமரைப்பொருட்டில்வாழும் கோற்றொடிக்குவவுக்கொங்கைக் கோடுழுமார்பினாற்கு-கண்ணபிரானுக்கு.

விம்மிதப்பட்டுமைந்தர்விளம்புசல்கேட்டலோடும்
கைம்மலேயழைப்பவந்தகருணையங்கமலச்செங்கண்
மைம்முகில்வண்ணனேகிமலேயெனக்கிடந்தவோமான்
செம்மலர்முளரியங்கைதீண்டினன்வாங்கினுன்

விம்மிதப்பட்டு - ஆச்சரியப்பட்டு, கைம்மலேயழைப்ப வந்தகருணையங்கமலச் செங்கண்மைம்முகில் வண்ணன் - கண்ணபிரான், ஏமான் - பூந்தி, செம்மலர்முளரி-செந்தாமரைமலர், தீண்டினன் - தீண்டி, (முற்றெச்சம்). (௩)

காண்டொறுங்களிப்புநல்குங்களியமுதனையான்செங்கை
தீண்டலுமமரனுகித்திரைதவழ்பரவைமுந்நீர்
சீண்டெமுபரிதிபோலக்கிளரொளிபுருப்பெற்றுங்கு
நீண்டெழுதண்டகோளிவுறத்தோன்றிநின்றே

காண்டொறுங்களிப்புநல்குங்களியமுதனையான் - கண்ணபிரான், அமரனுகி—தேவனுகி, திரை - அலே, பரவைமுந்நீர் - பரப்பாகியகடல், திலவுற - விளங்க. (௪)

எறிகதிர்க்குழவிஞாயிற்றேர்பெறவிளங்குவானே
அறிகிலான்போலநின்றவமலனியாரையென்ன
நிறையுயிர்தோறுநின்றநினக்குநானுரைப்பதென்றே
மறைதுணிவரியநம்பமன்னன்யானிருகனென்பேன்

குழவிஞாயிறு - பாலசூரியன், ஏர் - அழகு, அறிகிலான்போலநின்றவமலன்—கண்ணபிரான், மறை - வேதம், துணிவரிய - நிச்சயிக்கற்கரிய, நம்ப - நம்பனே (௫)

கல்வினுன்மாரிகாத்துக்கணநிரைபுரந்தசெங்கண்
மல்லலேறனையாய்பைம்பொன்மாரியிற்பொழிந்ததல்லால்
தொல்லைவானகத்துமீனுந்தொடுகடல்மணலுமாற்று
எல்லையவஞ்செஞ்சேதாவீந்தனன்மறைவலார்க்கே.

கல்லினல் - மலேயினல், மாரிகாத்து - மழையைத்தடுத்து, கணநிரைபுரந்த-பசுக்கூட்டத்தை ரக்ஷித்த, பொன் - பொன்னே, மாரியின்-மழைபோல, வானகத்துமீனும்-ஆகாயத்திலுள்ள உடுக்களும், தொடுகடல் - தோண்டப்பட்டகடல், எல்லேய - சங்கையையுடைய, அஞ்செஞ்சேதா - அழகியசெவ்விய நன்றணிமையுள்ளபசுக்கள். (௬)

மன்னியவெள்ளிவெண்ணூல்வலம்படக்கிடந்தமார்பின்
பொன்னிதழ்க்கமலப்பைந்தார்புனையுமோரந்தணளன்
இன்னிளம்புனிற்றுவந்தென்னினநிரைகலந்ததாக
அன்னதோரந்தணுளர்க்கதிந்திலென்வழங்கினேனுல்.

கமலப்பைந்தார்—தாமரைமலர்மாலை, புனையும் - தரித்த, புனிற்றா—ஈன்றணிமையுள்ளபசு, நிரை—பசுக்கூட்டம், வழங்கினேன் - கொடுத்தேன். (எ)

புனிறுசேர்பசுவச்சேதாப் புனலொடுகவர்ந்துசெல்லும்
தனிமறையவனுமற்றைத் தாமரைத்தாரினானும்
எனதெனதென்றுகூறியிறைவனோன்புரிந்தானென்னுக்
கனலெனக்கனற்சிமிக்கென்கடைத்தலைகுறுகினாரே

புனலொடு—தாரைநீரோடு, மற்றைத்தாமரைத்தாரினான் — வேறொருபிராமணன், கனற்சி - கோபம். (அ)

ஆய்மறைக்கிழவமற்றிவ்வானினைத்தன்றுதேற்றா
தாயிதழ்முளரிப்பைந்தாரந்தணற்குதவினேனா
றாயிரமஞ்செஞ்சேதாவளிக்குவனெனவுங்கொள்ளான்
ஆயவெஞ்சீற்றத்தானவ்வந்தணனகன்றுபோயான்.

ஆன்—பசு, அளிக்குவன் - கொடுப்பேன், வெஞ்சீற்றத்தான்—கொடுங்கோவத்தையுடையவனாகி. (௯)

ஏறுறுபுனிற்றுவேட்டதிருவனருளாயென்ன
நீரொடுபெற்றநின்றநெடுமறைக்கிழவன்றானும்
ஆரமுதூறுகற்றாவாயிரப்பதென்றாலும்
கூரழல்வடிவேன்மன்னகொள்கலேனென்றுசென்றான்

ஆரமுதூறு - அரியபாற்சுரப்புள்ள, கற்றா - கன்றையுடையபசு, ஆயிரப்பத்து—பதினாயிரம் (௧௦)

இறப்புவந்தடைந்ததாகவென்னையும்மறலிநோக்கி
அறப்பயன்பெரிதுநெஞ்சத்தறிந்திலையியற்றுபாவத்
திறப்பயனென்னிற்சாலச்சிறிதுபூந்தெரியல்வேந்த
முறைப்படக்கூறல்வேண்டுமுன்னெதுநுகர்வதென்றான்

இறப்பு - மரணம், மறலி — யமன், அறப்பயன் - தருமத்தின்பயன், அறிந்திலை-அறியாமல் (முற்றெச்சம்), இயற்று—செய்த, சாலச்சிறிது—மிகச்சிறிது, பூந்தெரியல்-பூமாலை, நுகர்வது - அநுபவிப்பது. (௧௧)

தீதுமுன்னுகர்வலென்றுசெப்பினன்செப்பலோடும்
ஒதியாய்வீழ்தியென்னவீழ்ந்தனனுலகுக்கெல்லாம்
ஆதிநின்மலர்க்கைதீண்டவவ்வுருத்தீர்ந்தேனென்னுக்
கோதைநீண்முடியிற்றாழ்ந்துகொழும்பொன்னாடெய்தினானால்

தீது - பாவப்பயன், நுகர்வல்—அநுபவிப்பேன், ஒதியாய்வீழ்தி - ஒந்தியாகிவிழக்கடவை, தீர்ந்தேன் - நீங்கினேன், என்னா - என்றுசொல்லி, முடியின் - தலையால் தாழ்ந்து - வணங்கி, பொன்னாடு - சுவர்க்கலோகம். (௧௨)

கார்முகில்வண்ணத்தண்ணல்காதலர்வதனநோக்கி
ஆரழல்வெய்யநஞ்சமருந்திலுந்தீர்ச்சியுண்டாம் ।

ஓருநான்மறைவலாளருறுபொருணுகர்ச்சியொன்றால்
தீர்வதன்றொன்றுச்செவ்வாய்திறந்தனன்கூறினனே.

கார்முகில்வண்ணனத்தண்ணல் - கண்ணபிரான், காதலர்—புதல்வர், வதனம் - முகம், தீர்ச்சி—பரிஹாரம், ஒருநான்மறைவலாளர்—வேதியர், நுகர்ச்சி-அநுபவம், திறந்தனன்- திறந்து (முற்றெச்சம்) (கா௩)

நிருநனுக்கருள்புரியத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௩௧௩௮

ஸ்ரீகிருஷ்ணசகாயம்

---

முப்பத்தேழாவது.

நம்பிமூத்தபிரான் கோகுலமடைந்த வத்தியாயம்.



கலிநிலைத்துறை

கரும்பனைக்கொடிக்காவலன்முல்லையங்கானம்
பொருந்திநந்தகோன்பூங்கழற்றுமரைபோற்று
அரும்புமென்னகையசோதைதனந்துணரசோகின்
றிருந்துசெந்தளிர்ச்சீறடிசென்னியிற்சேர்ந்தான்.

கரும்பனைக்கொடிக்காவலன் - பலராமன், போற்று - வணங்கி, அந்துணர் - அழகியகொத்து, சீறடி—சிற்றடி, சென்னியிற்சேர்த்தான்-சிரத்திற்சேர்த்துக்கொண்டான்.

விளரும்வெள்ளியங்கிரியொடுமாறுகொண்டெழுந்து
வளருநான்மணிணைமணிப்புயம்விழைந்துநன்மாமை
விளருமகோவியர்வெம்முலைமணந்தனன்வரிவண்
டுளரும்பூந்தொடைமார்வனவ்வொருகுழையொருவன்.

விளரும் - விளங்குகிற, மாறுகொண்டு - பகைகொண்டு, இணை—இரண்டு, விழைந்து - விரும்பி, மாமை - பசலை, வரிவண்டுளரும் பூந்தொடைமார்வனவ் வொருகுழையொருவன் - பலராமன். (உ)

மழைக்கணேழையர்மன்றலம்பூங்குருண்மானத்
தழைத்ததாரான முகைத்தளையவிழ்ந்துகுத்ததாதாடிக்
குழைத்தகொம்பினிற்குலவிவாழ்கருங்குயிற்பிள்ளை
அழைப்பவின்னிளவேனில்வந்திறுத்ததையன்றே,

மழை—குளிர்ச்சி, ஏழையர் - மாதர், குருள் - பெண்மயிர், மான - நிகர்க்க, தளை—கட்டு, உகுத்த - சிந்தின, குழைத்த—தளிர்த்த, கொம்பினில் - கிளைகளில், வேனில்—வசந்தகாலம். (௩)

குரவவார்குழற்குறுநுதற்கோவியர்குழாத்தோ
டுருவவொண்சுடர்பரப்பியவொருகுழையொருவன்

விரவுமீனொடுவிரிகதிர்விதுநடக்தென்ன
அரவவண்டிமிரிளமரக்காவுசென்றடைந்தான்.

ஆரவம் - தாவம்பூ, குறுந்தல் - சிறியநெற்றி, ஒருகுழை பொருவன் - பலராமன், மீனொடு - நக்ஷத்ரங்களோடு, விது - பூரணசந்திரன், அரவம் - சத்தம், இமிர் - ஒலிக்கின்ற, (ச)

திரைக்கடற்படுமமுதெனத்திகைத்திசைதெய்வ
மருசகாப்நதிளவமாடொடுசுரும்பினம்பாய்ந்து
விரிக்கும்பூம்பொழில்விளைசருவாருணிநறவம்
கரைக்குமாமதக்களிறனான்பருகினன்களித்தான்.

தெய்வமரு-தெய்வமணம், வாருணிநறவம் - கள், பொழில்-சோலை, பருகினன்- உண்டு, (முற்றெச்சம்) கரைக்கு மாமதக்களிறனான் - பலராமன். (ரு)

விரைசெய்காவினில்விளைமதுத்துளிதெறித்தலதென்ன
முருகுவிம்மியமுளரிவாண்முகம்வியர்ப்புறப்
பொருவின்மாதரோடாடுவான்பூம்புனலாட
வருகவென்றனன் மறிதிரைய முனையைமகிழ்ந்தே.

விரைசெய் - வாசனைவீசுகிற, மதுதுளி-கட்டுளி, முருகு-மீதன், விம்மிய-மிருந்த, முளரி - தாமரைமலர், வாள் - ஒளி, வியர்ப்புற - வேர்க்க, மாதரோடு ஆடுவான்- பலராமன், யமுனையை - யமுனையாற்றை. (சு)

மழைக்கடாக்களிறன்னவன்வருபுனலாடற்
கழைத்தகாலையில்யமுனைவந்தடுத்திலதாக
இழுத்தகூர்நகொடுங்கலப்பையாலீர்க்குதுமெனவண்
டுழக்கிழிந்ததாரவனினைந்துழியொழுகியதால்.

மழைக்கடாக்களிறன்னவன் - பலராமன், ஈர்க்குதுமென - இழுப்போமென்று, வண்டுழக்கிழிந்ததாரவன் - பலராமன், நினைந்துழி - நினைத்தபோது (எ)

கொய்யுநாண்மலர்விரைகமழ்யமுனைகொய்யாத
செய்யபொற்றுணரதமேதந்தொடையொன்றொடுசெறிந்த
நெய்யிருங்குழலிரேவதிகொழுநற்குநெய்யா
ஐயநீலநுண்டுகிலிரண்டளித்ததையன்றே.

கொய்யாத - பறிக்காத, துணர் - கொத்து, இரேவதிகொழுநன் - பலராமன், நெய்யா - நெய்யாத, ஐய - அழகிய, நீலநுண்டுகில் - நுண்ணியநீலவாடை (அ)

கங்கைவெண்டிரைகலந்தெனக்கண்கவரழகு
பொங்குதன்னுருப்பொழிதருநிலவெள்ளிபூப்பக்
கொங்குவிம்மியகுளிர்மலர்க்கொழுங்கரையமுனை
செங்கணேறனான்றிளைத்தனன்கோவியர்செறிய.

பொங்கு - மிகுந்த, கொங்குவிம்மிய - வாசனைமிகுந்த, செங்கணேறனான் பலராமன், திளைத்தனன் - நீராடினான் (கூ)

நாறுகாவதநாற்றிதழ்த்தாமரைவிரிந்து
நாறுதண்டுறைதழுவியநளிபுனற்றடமும்
ஆறுஞ்சோலையுமாய்ச்சியர்நலனுகர்ந்தாறி
ஏறனிருதிங்கள்வீற்றிருந்தனனிப்பால்.

நாறு - பரிமளிக்கிற, புனற்றடம் - நீர்நிலைகள், ஆய்ச்சியர் - கோவியர், நலனுகர்ந்து - இன்பமநுபவித்து, ஏறன் - பலராமன். (௪0)

பலபிரான்கோகுலமடைந்தவத்தியாயம்-முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௧௧௪அ.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்

---

முப்பத்தெட்டாவது

பவுண்டரீகனைக் கொன்ற வத்தியாயம்

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

பாட்டளிகொழுதுபைந்தார்ப்பவுண்டரனென்னும்வேந்தன்
தாட்டுழாயலங்கல்சூடிச்சங்கொடுதிகிரிதாங்கிப்
பூட்டியொண்மணிமற்றென்றுபுட்கொடியுயாத்துவெய்ய
வாட்டிறல்வாசுதேவன்யானெனவைகினனே.

அளிகொழுது - வண்டுகள்கிண்டுகிற, துழாயலங்கல் - துளவமாலை, ஒண்மணி மற்றென்று - வேறொரு உயர்ந்தமணி, புட்கொடி - கருடக்கொடி. (௧)

காசிலக்குருநாட்டேந்தல்கண்ணுதலவனைப்போற்றி
ஏசிலாச்சங்கநேமியிருங்கதைபிறவுமெய்தி
ஆசறவினிதுவாழ்ஞான்றணிமகழுயாழின்வல்ல
தேசுடைமுனிவன்கூற்றாற்சினந்துபோர்கெழுமிநின்றான்

காசுஇல் - குற்றமில்லாத, ஏந்தல் — அரசன், கண்ணுதலவனை — சிவபெருமானை, ஏசுஇலா - பழிப்பில்லாத, ஆசுஅற - குற்றமொழிய, வாழ்ஞான்று - வாழும்நாளில், யாழின்வல்லதேசுடைமுனிவன் - நாரதன், கூற்றால் - சொல்லால். (௨)

செங்கதிர்க்கற்றைகாலுந்திகிரியஞ்செல்வன்யானே
சங்கொடுதழல்வாய்நேமிதாங்குதல்விடுததாலுய்ந்தான்
அங்கவைவிடுகலானேலாடமர்க்கெழுகவென்று
வெங்கடக்களிறட்டாற்குவிடுத்தனன்றூதுமன்னோ.

செங்கதிர்க்கற்றைகாலும் - சூரியனொளிப்பிழம்பைக் கக்குகிற, திகிரியஞ்செல்வன்—திருமால், உய்ந்தான் - பிழைத்தான், விடுகலானேல் - விடானாயின், அமர்க்கு எழுகவென்று - சண்டைக்குவருகவென்று, வெங்கடக்களிறட்டாற்கு - கண்ணபிரானுக்கு. (௩)

சேட்டிளம்பரிதியென்னத்திகழ்வெயிற்குப்பைகாலும்
சூட்டராவணையினனத்தூதுரைகேட்டவோடும்
கோட்டினனிலவுகாலுங்குறுநகையெறிவேற்றானை
ஈட்டமொடெழுந்துமன்னனெயிற்புறத்திறுத்தானன்றே.

சேட்டிளம் பரிதியென்ன - அழகியபாலசூரியன்போல, வெயிற்குப்பைகாலும் - ஒளித்திரளைக்கக்குகிற, சூட்டராவணையினன் - கண்ணபிரான், குறுநகை - புன்சிரிப்பு, கோட்டினன் - செய்தான். (௪)

பாழிசான்முழுவதுங்கொண்டோட்பவுண்டரவாசுதேவன்
ஊழியாரழலிற்சீறியொலிசுடர்ந்தரனைசூழ்ந்த
தோழமைகொண்டகாசிவேந்தொடுஞ்சுடர்ந்தவாய்
ஆழியம்படைகளைதாங்கியமர்க்களங்குறுகினானே.

பாழிசால் - பெருமையமைந்த, ஊழியாரழலின்சீறி - ஊழித்தீப்போலக்கோபித்து, தோழமை - சிநேகம், சுடரும் - பிரகாசிக்கிற, ஆழியம்படை - சக்ராயுதம், அமர்க்களம் - போர்க்களம், குறுகினான் - அடைந்தான் (௫)

பண்ணமைகளிநல்யானைப்பவுண்டரன்வருகைநோக்கி
வெண்ணிலாமுறுவல்கோட்டிவிடுதிவெந்தழல்வாய்கான்ற
ஒண்ணிறநேமியென்றானுதுரைத்தனைவிடுதுமென்றே
மண்ணமைமுழுவதுந்திண்டோண்மாலவன்விடுத்திட்டானால்.

பண்ணமை - அலங்கரிப்பமைந்த, வெண்ணிலாமுறுவல்கோட்டி - வெண்ணிலாப்போலப் புன்சிரிப்புக்கொண்டு, அழல்வாய்கான்ற - நெருப்பைவாயினாற்கக்குகிற, வாய் - நுனி, என்றே - என்றுசொல்லி, மண்ணமைமுழுவதுந்திண்டோள்மாலவன் - கண்ணபிரான். (௬)

உற்றிருந்துதிரமாரியொழுகுசெந்தழல்வாய்நேமி
சீற்றமொடெழுந்துவெய்யசெருத்தொழில்விளையாநின்ற
பாற்றினஞ்சுழலும்வைவேற்பவுண்டரவாசுதேவன்
மாற்றருஞ்சிறப்புவாய்ந்தமணிமுடிதுணித்ததன்றே.

உதிரமாரி - குருதிமழை, சீற்றமோடு - கோவத்தோடு, செருத்தொழில் - போர்த்தொழில், பாற்றினம் - பருந்துக்கூட்டம், வைவேல் - கூர்மையுள்ள வேற்படை, முடிதுணித்தது - சிரத்தையறுத்தது. (௭)

விட்டிருவினையுநீங்கிவேரியந்துளவமாயன்
கட்டெழிலுருவநாடிக்கைபுனைந்திருந்தவாற்றால்
பட்டவெங்களிநல்யானைப்பவுண்டரவாசுதேவன்
வட்டவாய்த்திகிரிதாங்குமாலுருமரீஇயினானால்.

வேரியந்துளவமாயன் - கண்ணபிரான், கட்டெழில் - பேரழகு, கைபுனைந்து - அலங்கரித்து, பட்டம் - நெற்றிப்பட்டம் (முகபடாம்) மாலுருமரீஇயினான் - திருமாலுருப்பெற்றான், (விஷ்ணுசாரூபம்பெற்றான்). (௮)

திங்களைநகுதல்போலத்தெண்ணிலாவிரிக்குமுள்வாய்ச்
சங்கொடுநேமிதாங்குந்தாமரைத்தடக்கையண்ணல்
வெங்கொலைப்பகழிதூண்டிவெல்படையழுவத்தேற்ற
கங்கைநாட்டிறைவன்சென்னிகாசிமாநகரின்வீழ்த்தான்

திங்களை - சந்திரனை, நகுதல்போல - சிரிப்பதுபோல, தெண்ணிலாவிரிக்குமுள் வாய்ச்சங்கொடுநேமிதாங்கும் தாமரைத்தடக்கையண்ணல் - கண்ணபிரான், பகழி - பாணம், தூண்டி - செலுத்தி, அழுவத்து - போர்க்களத்தில், ஏற்ற - எதிர்த்த, வீழ்த்தான் - விழுத்தினான். (௯)

கன்னியம்புரிசைசூழ்ந்தகாசிநாடளிக்குந்தோன்றல்
மன்னவர்மகுடகோடிமணிதொகைபொருதுமின்கால்
கொன்னெடுவாயில்வீழ்ந்தகுலமணிச்சென்னிதந்தை
சென்னியென்றறிந்துமாழ்கிசசெய்கடன்கழித்தான்மன்னோ.

கன்னியம்புரிசை - அழியாத அழகியமதில், தோன்றல் - அரசன, பொருது - பட்டு, மின்கால - ஒளியைக்கக்குகிற, குலமணிச்சென்னி - உயர்ந்ததரத்நமயமாயிருக்கிறசிரசு, மாழ்கி - மயங்கி (வருந்தி) (௧௦)

காய்க்குலைக்கமுகவேலிக்காசிநாடளிக்குந்தோன்றல்
சேய்க்கலந்துணங்கைதூங்குஞ்சமர்க்களத்துநெய்த்தோர்
சாய்க்கமற்றெந்தைசெம்பொற்றேர்முடிதடிந்தான்றன்னை
மாய்க்குவனென்றுமுக்கண்வானவற்பழிச்சினுனல்.

துணங்கைதூங்கு - துணங்கையாடலைச்செய்கிற, துணங்கையாடலாவது - முடக்கியவிருகைபழுப்புடையொற்றியாடல், நெய்த்தோர் - உதிரம், தடிந்தான்றன்னை - அறுத்தவனை, முக்கண்வானவன் - சிவபெருமான், பழிச்சினன் - துதித்தான் (௧௧)

துளிப்புயல்கிழித்தமின்னிற்சுடர்விடுசடிலத்தண்ணல்
வெளிப்படவங்கைகூப்பிவெஞ்சமர்க்களக்கணெந்தை
களிச்சுரும்பாற்றுபைந்தார்கதிர்முடிதுணித்தாற்கொல்ல
அளித்திடோர்வரமென்றேத்தியணிமுடிவணங்கிநின்றான்

துளிப்புயல்கிழித்தமின்னிற்சுடர்விடுசடிலத்தண்ணல் - சிவபெருமான், சமர்க்களக்கண் - போர்க்களத்தில், முடிதுணித்தான் - சிரமறுத்தவன். (௧௨)

மழலைவண்டாற்றுதாரோய்மாரணவினையிற்றென்பால்
அழலினைவளர்த்திமற்றவ்வழலிடைவெதும்பியூழித்
தழன்முனிந்தெழுந்ததேய்ப்பத்தடம்பிறையெயிற்றுப்பேழ்வாய்ச்
சுழல்விழிப்பூதமொன்றுதோன்றும்விண்கிழித்துமன்னே.

மழலைவண்டு - இளவண்டுகள், ஆற்று - ஒலித்தற்கிடமாகிய. மாரணவினையின் - அபிசாரயாகத்தால், வெதும்பி - கோவங்கொண்டு, ஏய்ப்ப - நிகர்க்க, எயிறு - பல், பேழ்வாய் - பெரியவாய். (௧௩)

எழும்பிறையெயிற்றுப்பூதமெழுதருமறைவலோர்க்குத்
தழைந்தபேரன்பிலார்மேற்சார்தரவிடுத்தியாயின்

விழைந்தது முடிக்குமென்றே வெள்ளிவெண்ணிலவுகாலும்
குழந்தைவெண்டிங்கள்சூடுங்குரிசிலாங்கியம்பிச்சென்றான்.

மறைவல்லோர் - வேதியர், சார்தர - செல்ல, விழைந்தது—விரும்பினது, என்று-என்றுசொல்லி, வெள்ளிவெண்ணிலவுகாலும் குழந்தைவெண்டிங்கள்சூடுங்குரிசில்—சிவபெருமான் (௧௪)

கூரழலொழுகுவைவேற்கோவிளங்குமரனங்கே
ஆரழல்வளர்ப்பமற்றவ்வழலின்மேனோர்பசுங்கட்பூதம
ஈரெழுபொழிலுமுன்னேயெரிக்குமென்றிமையோரஞ்சக்
காரெழுமுருவேறென்னக்கனற்சிமிக்கெழுந்துசென்ற.

கோவிளங்குமரன்-இளமையுள்ளராஜகுமாரன், (இளவரசன்) ஈரெழுபொழிலும்-பதினான்குலகங்களையும், முன்னே - இப்பொழுதே, எரிக்கும் - எரிப்போம், கனற்சி-கோபம் (௧௫)

தழைந்தவெஞ்சினத்திற்றந்தைதார்முடி துணித்தானாவி
பிழிந்துணவிடுத்ததம்மேலாடும்பிறங்குவெண்பிறைப்பற்பூதம்
விழைந்தசெங்கமலமாதின்மென்முலைக்கோடுபோழச்
சுழிந்துமட்டொழுகுதாரான்றவரைப்போயசுட்டதன்றே,

தழைந்த - மிகுந்த, வெஞ்சினத்தின் - கொடுங்கோபத்தால், துணித்தான்—அறுத்தவன், விழைந்த - விரும்பின, செங்கமலமாதின் மென்முலைக்கோடுபோழச்சுழிந்து மட்டொழுகுதாரான் - கண்ணபிரான். (௧௬)

கலிநிலைத்துறை

சேதாமடையச்செழுந்தீங்குழலின்றிசைத்தோன்
சூதாடுகாலைச்சுடுகின்றதொர்பூதமூதூர்
போதார்துளவப்புயல்வண்ணபுரத்தியென்றேத்
தாதார்முளரித்திருத்தாணிபுனைந்தாசார்ந்தார்.

சேதா - கற்பசுக்கள், மடைய - சேர, செழுந்தீங்குழலின்றிசைத்தோன் — கண்ணபிரான், போதார்துளவப்புயல்வண்ண - கண்ணபிரானே, புரத்தி - காக்கக்கடவை, முளரித்திருத்தாள் - தாமரைமலர்போலுந்திருவடி. (௧௭)

சேடுற்றஞாயிறொருகோடி திரண்டதேபோல்
பாடுற்றதெய்வப்பரிதிப்படையண்ணல்பார்ப்பச்
சூடுற்றசெந்தீசொரிகட்பெரும்பூதமஞ்சி
ஓடத்துரந்ததழலேமெய்யுருத்ததுமன்றே

சேடுற்றஞாயிறு - பாலசூரியர்கள், (சேடு - இளமை,) பாடு - பெருமை, தெய்வப்பரிதிப்படையண்ணல் - கண்ணபிரான், சூடு - வெப்பம், துரந்தது - துரத்திற்று, உருத்து - கோவித்து. (௧௮)

விண்ணந்திகழப்பொடிக்குங்கதிர்நாணவெம்பி
நண்ணுந்திகிரிப்படையஞ்சிநடந்தபூதம்

கண்ணன்புரத்திற்றனையேவியகாமர்கங்கைத்
தண்ணந்துறைவன்றனதாருயிருண்டதன்றே.

விண்ணம் - ஆகாயம், நிகழ - விளங்க, பொடிக்கும் - தோன்றுகிற, கதிர — சூரியன், வெம்பி - கோபித்து, கண்ணன்புரத்தில் - துவாரகையில், காமர் - அழகு, ஆருயிர் - அரியவுயிர். (௧௯)

குறுத்தாட்பூதங்கொலப்பட்டவக்கொற்றவெள்வேல்
நறைத்தாமமார்பனகர்தீமடுத்தாடனேமி
உறைத்தாய்பிழிவண்டொருகோடியுழக்கவிண்ட
வெறித்தாமரைப்பூங்கொடிகேள்வனேமேயதம்மா.

குறுத்தாள் - குறுகியபாதம், தீமடுத்து - நெருப்புமூட்டி, பிழி - தேன், வண்டொருகோடியுழக்க விண்டவெறித்தாமரைப்பூங் கொடிகேள்வன் - கண்ணபிரான், வெறி - வாசனை, கேள்வன் - கணவன், தாமரைப்பூங்கொடி - திருமகள். (௨௦)

என்றுமுன்மன்னனிளங்கோவியரோர்கனிந்த
பொன்றோர்நிதலைப்புணர்வெம்மூலைப்போகமாந்தி
மின்றோர்ந்திலங்குவிதுமேனியன்வீற்றிருக்கும்
அந்நீர்மைசொல்வாயெனக்கூறினனந்தவித்தான்

ஏர்கனிந்த - அழகுமிகுந்த, நிதலை - தேமல், புணர் - நெருங்கின, போகம்-சுகம், மாந்தி - அநுபவித்து, விதுமேனியன் - பலராமன், விது - சந்திரன் (௨௧)

பவுண்டரனைக்கொன்றவத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருக்கம்—௩௬௯௩.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்

---

முப்பத்தொன்பதாவது.

சாம்பன் மணம்புரிந்தத்தியாயம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஆடமர்கடந்தகுருதிவாட்டடக்கையடனரகாசுரன்றோழன்
காடுறைவாழ்க்கைத்துவிதனென்றுரைக்குங்கடுந்திறற்கவிகுலத்தலைவன்
ஒடைமால்யானைமணிமருப்பொசித்தோனொக்கல்வீற்றிருந்தமாநத்த
நாடுமால்வரைவீழ்த்தழித்தனனைகடற்சார்நகர்கடல்கொளப்பரிந்தழித்தான்.

ஆடமர்கடந்த-வலியபோர்வென்ற, கவிகுலத்தலைவன் - வாநரகூட்டத்துக்கிறைவன், ஓடைமால்யானைமணிமருப்பொசித்தோன் - கண்ணபிரான், ஒக்கல்-சுற்றத்தார்

படுமதஞ்செருக்கிப்படர்சினவயிராவதப்பெரும்பகடுபெண்ணமைந்த
மட்டீண்டப்பிழிந்தயாடுதல்கடுப்பவால்வளைமேனியான்மகிழ்ந்து

கொடிபுரைமருங்குற்குவிமுலைக்கனிவாய்க்குழைபொருகுவளையங்கருங்கட்
சுடரிழையாயர்மாதரோடாடுஞ்சோலைசூழ்குன்றகம்படர்ந்தான்.

செருக்கி - களித்து, பகடு - யானை, பண்ணமைந்த - அலங்கரிக்கப்பட்ட, பிடி - பெண்யானை, கடுப்ப - நிகர்க்க, வால்வளைமேனியான் - பலராமன், கொடி புரைமருங்குல் - கொடிபோலுமிடை, குழை - காதணி, ஆயர்மாதர் - கோவியர். (௨)

சேயுயர்விசும்பின்விளங்குவெண்டிங்கட்செல்வனிற்றிகழ்பவன்றன்மேல்
காயழற்கதிரிற்கடுஞ்சினந்திருகிக்கவுளிழிகடாத்தவெண்பிறைக்கோட்
டாயிரங்களிற்றுவிறல்கெழுதவிதனுச்சினைநெடுமரந்தூர்ந்தும்
மீயுயர்குடுமிமால்வரைபிடுங்கிவீசியும்வெஞ்சமம்விளைத்தான்

சேயுயர் - மிகவுமுயர்ந்த, விசும்பில் - ஆகாயத்தில், வெண்டிங்கட்செல்வனிற்றிகழ்பவன் - பலராமன், கவுள் இழிகடாத்த - கபோலத்தினின்றிழிகின்றமதநீரையுடைய, விறல்கெழு - பலம்பொருந்திய, ஆ - ஆச்சாமரம், சினை - கிளை, தூர்ந்தும் - எறிந்தும், மீயுயர் - மிகவுமுயர்ந்த, மால்வரை - பெரியமலை, குடுமி - சிகரம், வெஞ்சமம்விளைத்தான் - கடும்போர் புரிந்தான். (௩)

பைத்தலைப்பாம்பிற்பாரகமேழும்பணைநெடும்புயத்தினிற்பரிப்போன்
முத்தவெண்முறுவல்வெண்ணிலாவிரிக்குமுளரிவாண்முகத்தினனுகித்
தத்துவெள்ளருவித்தடவரைமுகட்டிற்றழங்கழலுருமுவீழ்ந்தென்னக்
குத்தினன்குருதிநீத்தம்வாய்கான்றுகுரக்கரசிறந்தனன்மன்னோ.

பைத்தலைப்பாம்பு - ஆதிசேடன், பணை - பருத்த, பரிப்போன் - தாங்குவோன், தழங்கு - ஒலிக்கிற, உருமுவீழ்ந்தென்ன - இடிவிழுந்தாற்போல, குருதிநீத்தம் - உதிரவெள்ளம், வாய்கான்று - வாயினுறக்கக்கி. (௪)

எழுஞ்சுடர்கடுக்குமெரிமணிச்செஞ்சூட்டேந்துபாராயிரம்பகுவாய்
முழைஞ்சுகொப்புளிக்கும்விடத்தழல்பரந்துமுகத்தழல்பாய்ந்தும்வெந்தொழிய
ஒழிந்துநின்றதனுற்சேடனென்றுரைக்குமோங்குசீர்ப்பெரும்பெயர்படைத்த
செழுங்கதிர்விரிக்குமொற்றைவார்குழையோன்றிருவளர்துவரைசென்றடைந்தான்.

எழுஞ்சுடர்கடுக்கும் - உதிக்கின்றசூரியனைநிகர்த்த, செஞ்சூட்டு - செவந்தவுச்சிக்கொண்டை, முழைஞ்சு - குகை, ஒற்றைவார்குழையோன் - பலராமன். (௫)

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்

கழைபுனைவரிவிற்காமன்கடல்விளையமுதினாலே
எழுதியதன்னகோலத்திலக்கணையென்னுமாதைத்
தழையுநற்றவத்தினீன்றான்றழலெழவுயிர்க்கும்பேழ்வாய்
ஒழுகுநச்செயிற்றுப்பாந்தளுயரியகொடியான்மன்னோ.

கழை - கரும்பு, புனை - அலங்கரிக்கப்பட்ட, வரிவில் - நீண்டவில், கோலம் - அழகு, உயிர்க்கும் - மூச்செறிகின்ற, பாந்தளுயரியகொடியான் - துரியோதனன். (௬)

எங்கினிச்சேறுநாமென்றிரங்குபொற்குன்றுசூழும்
அங்கதிர்ப்பரிதியண்ணுந்தகல்விசும்பாறுபார்க்கும்

# பத்தாங்கந்தம்.

குங்குமக்குவட்டின்வீங்கிக்குமுதநாறமுதச்செவ்வாய்ப்
பைங்கிளிமழலைமாதின்படாமுலைபணைத்தமாதோ.

சேறம் - செல்லுவோம், பரிதி - சூரியன், விசும்பாறு - ஆகாயமார்க்கம், குங்குமக்குமட்டின் - குங்குமமலைபோல, வீங்கி - பருத்து, பணைத்த - பருத்தன. (எ)

நஞ்சமுமமுதுங்காட்டிநம்மொடுநிகர்க்குமேகொல்
அஞ்சனக்கடன்மறற்றென்னுமையரிபரந்துநீரார்
கஞ்சமுங்கயலும்வென்றுகட்கடைசிவக்குமென்றால்
வெஞ்சிலைப்புருவவல்வில்விழிக்கிணையாவர்சொல்வார்.

நிகர்க்குமே - நிகர்க்குமா, அஞ்சனக்கடல் - கருங்கடல், ஐ-அழகிய, அரிபரந்து-ரேகைகள்படர்ந்து, வெஞ்சிலை - வெவ்வியவில், கஞ்சம் - தாமரைமலர், கயல் - சேல்மீன், கட்கடை - கடைக்கண். (அ)

எழுபெரும்புவிக்குமப்பாலிருளெலாமெழுந்துபொங்கி
முழுமதிதன்னைவந்துமுற்றியதன்மைகாட்டும்
மழைமுகங்கிழிக்குமின்னுமயருநுண்ணுசுப்பிற்பாவை
குழைமுகஞ்சூழ்ந்துதாழ்ந்துகுழன்றுநெய்த்திருண்டகூந்தல்.

எழுபெரும்புவி - பெரிய எழுலகு, முழுமதி – பூர்ணசந்திரன், முற்றிய - வளைத்துக்கொண்ட, மழைமுகம் - மேகத்தின்முகம், கிழிக்கும - பிளக்கிற, மின்னும்—மின்கொடியும், மயரும் - அயர்கின்ற, நுண்ணுசுப்பு – நுட்பமாகியஇடை, குழை—காதணி, சூழ்ந்து - வளைந்து, தாழ்ந்து - நீண்டு, குழன்று – சுருண்டு. (க)

நுடங்குநுண்மருங்குலென்னவுருத்தெழுகுவவுக்கொங்கை
வடிக்கணுங்கண்ணியாக்கமதித்தனன்வதுவைநாட்டிக்
கடற்புவிகாக்குந்தண்ணங்கவிகைமன்னவர்கட்கெல்லாம்
விடுத்தனன்முடங்கல்வெவ்வாய்விடவராவுயர்த்தவேந்தே.

நுண்மருங்குல் – நுட்பமாகிய இடை, உருத்து—கோவித்து, குவவு - திரட்சி, வடி—மாவடுவகிர், ஆக்கம்—பருவம், மதித்தனன்—அறிந்து, வதுவை—விவாகம் (சுயம்வரம்) தண்ணங்கவிகை—குளிர்ச்சியாகியமுத்துக்குடை, முடங்கல்—ஓலை (மணவோலை) வெவ்வாய்விடவரா வுயர்த்தவேந்து - துரியோதநன். (க0)

வரைமுகங்கிழியவீழுமண்டழன்மடங்கலென்னச்
செருமுகத்தேற்றதெவ்வர்திணிதடம்புயங்கள்போழ்ந்து
குருதிகொப்புளிக்குங்கூர்வேற்கோசலநாட்டுவேந்தன்
பொருகடற்பவளச்செவ்வாய்ப்பூவையைக்கருதிப்போந்தான்.

வரைமுகம்கிழிய—மலையிடங்கள்பிளக்க, மண்டு - மிகுதியாகிய, அழல்—நெருப்பு-மடங்கல் - இடி, செருமுகம்—போர்க்களம், எற்ற—எதிர்த்த, தெவ்வர் - பகைவர், போழ்ந்து—பிளந்து, குருதி—உதிரம், பொரு—(கரைமேல்) மோதுகிற, பூவையை—மாதை, போந்தான் - வந்தான். (கக)

அவிழிணர்ப்பொலம்பூந்தும்பையாத்துவாளமரிலேற்ற
புவிபுகழ்மன்னர்செங்கைப்புண்டரிகங்களெல்லாம்

குவிதரநிலவுதூற்றுங்குரைகழல்யாத்தநோன்றாட்
கவிமதங்கடந்தவண்கைக்கன்னிநாட்டிறைவன்வந்தான்.

இணர் - கொத்து, தும்பை—தும்பைமலர்மாலை, யாத்து—சுட்டி (சூடி) வாளமரில், வாட்போரில், புண்டரீகங்கள் - தாமரைமலர்கள், குவிதர - குவிய, குரை - ஒலிக்கிற, கழல் - வீரகண்டை, யாத்த - கட்டின (அணிந்த) நோன்தாள் - வலியினையுடைய பாதம். (௧௨)

உமிழ்கொழுங்குருதியொள்வாளொளிறுமின்பிறழவீசிச்
சமரெதிர்ந்தாடுமன்னர்தாருடைந்தோடச்செம்பொற்
சிமயமொத்தெழுநதுவீங்கிததிரண்டதிண்டோளிற்றூத்தார்
கமழ்நறுத்தூற்றவந்தான்காம்பிலிக்காவன்மன்னன்,

ஒளிறு - விளங்குகிற, சமரெதிர்ந்தாடும் - எதிர்த்துப் போர்செய்கிற, தார்—தூசிப்படை, செம்பொற்சிமயம் - செம்பொன்மலை, வீங்கி—பருத்து, தார் - பூமாலை, நறுதூற்ற—தேனைச்சிந்த. (௧௩)

பாற்றினஞ்சுழலுஞ்செவ்வேற்பற்றலராவியெல்லாம்
கூற்றெனுமெறலிவாரிக்கொள்ளைகொண்டுண்ணுநால்வாய்க்
கீற்றிளநதிங்களன்னகிளரொளிமுத்தவெண்கோட்
டாற்றலங்களிநல்யானையங்கநாட்டதிபன்வந்தான்.

பாற்றினம்—பருந்தின்கூட்டம், பற்றலர்—பகைவர், ஆவி—உயிர், கூற்றெனுமெறலி—யமனெனுபெயர்த்து, நால்வாய் தொங்குகிறவாய், முத்தம் - முத்து, கோடு - கொம்பு, ஆற்றல் - வலி. (௧௪)

செருப்பெறுன்செருக்கிநின்றதிசைககடாககளிற்றின்கொற்ற
மருப்பிறப்பொருதமாபன்வாரணவாசிமன்னன்,
கருப்புமென்மழலைக்கன்னிகதிர்மணிமருப்புவென்ற
அருப்பிளங்கொங்கைவெம்போராட்டுவந்தடைந்தானங்கே

செருப்பெறுன்—போர்கிடைக்கப்பெறுதவனாய், செருக்கிநின்ற - களித்துநின்ற, திசை - திக்கு, கடாக்களிறு—ஆண்யானை, கொற்றம் - வெற்றி, மருப்பிற—கொம்பொடிய, பொருத—தாக்கின, கருப்பு - கரும்பு, அருப்பு—அரும்பு (கோங்கரும்பு) (௧௫)

சிலையொடுபொருதுவென்றுசெக்கர்வானரும்புதிங்கட்
கலையொடுமலையநாடுங்கட்டெழினுதலினார்தம்
முலையொடுபொருதபோலமுகிறவழ்பசும்பொற்கோட்டு
மலையொடுபொருதமார்வன்மாகதன்வந்தான்மன்னே.

பொருது—போர்செய்து, செக்கர்வான் - செவ்வானம், அரும்பு - தோன்றுகிற, திங்கட்கலையொடு - பிறையோடு, மலைய - போர்செய்ய, நாடும் - எண்ணுகிற, கட்டெழில் - பேரழகு, நுதல் - நெற்றி, முகில் - மேகம், கோடு—சிகரம், பொருத - போர்செய்த. (௧௬)

அழிமதவருவிதூவுமண்ணலங்களிற்றினுச்சி
செழுமணிக்குடத்திற்றந்தெய்வமாக்கங்கைத்தூநீர்

தழையுநல்லழகின்வெள்ளந்ததும்புவாண்முகத்தினாளைப்
பொழிமருக்கமழ்பூங்கூந்தற்பூவையராட்டினாரால்.

அண்ணலங்களிறு - அரசயானை, தந்த-கொணர்ந்த, தூநீர் - பரிசுத்தமானநீர், வாள் - ஒளி, மது—தேன், பூவையர் - மாதர், ஆட்டினார்—நீராட்டினார். (௧௭)

பூம்புகைகமழவுண்டபுரிகுழன்முருகுவிம்மு
தேம்பிணையணிந்துநானத்திலகநன்கெழுதிப்பச்சைக்
காம்பெனப்பணைத்ததோளிற்கரும்பொடுவல்லிதீட்டி
ஆம்பல்வாயணங்கினுண்கணஞ்சனந்திருத்தினாரே

புரிகுழல்—கட்டப்பட்டகூந்தல், முருகு—வாசனை, விம்மு—மிகுந்த பிணை—பூமாலை, நானத்திலகம் - கஸ்தூரிப்பொட்டு, பச்சைக்காம்பு - பச்சைமூங்கில், பணைத்த - பருத்த, வல்லி - பூங்கொடி, தீட்டி - எழுதி, ஆம்பல் - செவ்வல்லிமலர். (௧௮)

எழிலெரிபசும்பொன்செவ்வாயிலங்குசெம்பவளநீலக்
குழன்மணிக்கொத்துமுத்தங்கூரெயிறாகவெல்லா
அழகுவீற்றிருந்தநங்கைக்கழகெனவணியணிந்தார்.
மழைமதர்நெடுங்கணைமைமருங்குலின்பாவமீதே.

எழில்—உடம்பழகு, குழல் - கூந்தல், முத்தம்—முத்து, எயிறு - பல், அணி - ஆபரணம், மழை - குளிர்ச்சி, மதர் - மதர்த்த, மருங்குல்—இடை. (௧௯)

உவரியாரமுதத்தேறலூறுமென்மழலைப்பூவைப்
பவளவாய்மடந்தைகூந்தல்பாயிருளென்றுநாடாக்
குவிமுகிழ்பாந்தவண்டுகொழுதுபூங்காவென்றுள்ளத்
தவழ்கதிர்வதனத்திங்கடமீஇயெழிறழைந்ததன்றே.

உவரி - கடல், ஆர் - அரிய, தேறல் - தேன், நாடா - நாடி, கொழுது - கிண்டி, பூங்கா - பூஞ்சோலை, தமீஇ - தழுவி. (௨௦)

தெண்டிரையமுதின்சாயறிருமுகமுருகுவிம்மு
புண்டரிகங்கொலென்றுபுள்ளிமான்பிள்ளையெண்ணு
மண்டிலநிறைந்தமாசின்மதியெனமகிழ்ந்துநோக்கக்
குண்டலங்குலாயமீனிற்குரூஉச்சுடர்கொழித்ததன்றே.

தெண்டிரை - கடல், சாயல் - நிறம், முருகுவிம்மு—வாசனைமிகுந்த, புண்டரிகம்-தாமரைமலர், எண்ணு - எண்ணி, மண்டிலம் - வட்டம், மாசின்மதி - களங்கமில்லாத சந்திரன், குண்டலம் - ஆகாயம், மீன் - நாண்மீன், குரூஉ - நிறம். (௨௧)

தேமருகோதையஞ்செஞ்சீறடிசிறந்ததெய்வத்
தாமரைமலரேசெய்யதளிரெலாமல்லவென்னுக்
காமருசுரும்புமூசக்களியிளமெலிகினம்போல
மாமணிச்சிலம்புபாடுமழலைவீற்றிருந்தமன்னே.

தேமருகோதை - வாசனையுள்ள கூந்தலையுடையாள், அம் - அழகு, செஞ்சீறடி—செவந்தசிற்றடி, செய்யதளிர் - செந்தளிர், காமர் - அழகு, சுரும்பு - வண்டு, மூச—

மொய்க்க, எகினம்-அன்னப்பறவை, மணிச்சிலம்பு - ரத்நச்சிலம்பு (சிலம்பு - காலணிகளிலொன்று.) (உஉ)

கார்க்குழலாகமெல்லாங்கவர்ந்தெழில்கனியவீங்கி
ஈர்க்கிடைபோகலாகாவெதிரெதிர்பணைத்துவீங்கும் |
வார்க்குலமறுத்தகொம்மைவரிமுலையாட்டுசுண்ணம்
போர்க்குமஞ்சுணங்குபோலும்பொற்புவீற்றிருந்ததன்றே.

கார்க்குழல் ஆகமெல்லாம்-கருங்கூந்தலையுடையாளது மார்புமுழுதும், கவர்ந்து-தம்வசமாக்கி, எழில்கனிய - அழகுமிக, வீங்கி - பருத்து, ஈர்க்கு-ஓலையீர்க்கு, இடைபோகலாக - நடுவேநுழையலாகாத, பணைத்து - பருத்து, வார்க்குலம் - உயர்ந்தகச்சு, அறுத்த - கிழித்த, கொம்மை - திரட்சி, வரி - சந்தனக்கோலம், ஆட்டு-திமிர்ந்த, சுண்ணம் - பராகம், போர்க்கும் - மூடின, சுணங்கு - தேமல், பொற்பு - அழகு. (உ௩)

அருப்பிளமுலையஞ்சாயலணிமணிக்கதிர்மென்றோளின்
வரித்தபூங்கரும்பின்பாங்கர்மண்டகத்தவமுந்தோற்றம்
கருப்புவிற்குழையவாங்கிகடற்சுறவுயர்த்தகாளை
சுரும்புநாண்செவ்விவாய்ப்பத்தொடுத்ததுபோலுமன்றே.

அஞ்சாயல் - அழகியநிறம், வரித்த - சந்தனக்கோலமாயெழுதப்பட்ட, பூங்கரும்பின் பாங்கர் - அழகியகரும்பின்பக்கத்தில், வாங்கி - வளைத்து, சுறவுயர்த்தகாளை—மன்மதன், சுரும்புநாண் - வண்டுநாண், செவ்வி - அழகு. (உச)

மழைக்கருங்கண்ணிசெங்கேழ்மாமணித்தொடிகால்கற்றை
நிழற்கதிர்தீட்டுவல்லிநேரெழுந்தெறிக்குந்தோற்றம்
எழிற்கழையன்னமென்றோளெழுதிபகாமவல்லி
குழைப்பதுபோலுஞ்செய்யகுறுமுறிக்கொழுந்துமன்றே.

மழை - குளிர்ச்சி, செங்கேழ் - செந்நிறம், மா - பெரிய, மணித்தொடி — ரத்நவளை, கால் - உமிழுகிற, கற்றை - திரளாகிய, நிழற்கதிர் - குளிர்ச்சியாகியவொளி, தீட்டு - எழுதப்பட்ட, வல்லி - கொடி, நேர் - செவ்வனே, எறிக்கும் - வீசுகிற, தோற்றம் - காட்சி, கழை - கரும்பு, காமவல்லி - கற்பகமரத்திற்படர்கொடி, குழைப்பது—வளைப்பது, முறி - தளிர். (உ௫)

சுனைமுகமவிழ்ந்தபொன்னந்தோட்டுமாமலரேயன்றிச்
சினைமுகநெகிழ்மென்பூவுந்திறப்படச்சேருமாபோல்
புனையிழைமடவார்குழப்பேத்தினுந்தாதுவிம்மு
நனையினுமிருத்துநல்லநறுநுதனடக்கலுற்றாள்.

சுனைமுகம் - சுனையினிடத்தில், (முகம்-ஏழனுருபு , அவிழ்ந்த - விரிந்த, பொன்னந்தோடு - பொன்மயமாகிய அழகியஇதழ், சினைமுலம் - கிளைகளில், நெகிழ்—கட்டவிழ்கின்ற, புனை - அலங்கரிக்கப்பட்ட இழை—ஆபரணம், மடவார் - மாதர், போதுமவர், நனை - பூவரும்பு, நறுநுதல் - அழகியநெற்றியையுடையாள். (உசு)

செழுந்தளிர்மேனிமாதர்திருத்தகவிரித்தல்செய்த
கொழுந்துணருறைப்பப்பூத்தகொப்புளம்போலப்பொற்றுள்

அழுந்துமெல்லரும்புதோன்றவனமெனவொதுங்கித்தீங்தேன்
வழிந்தபூந்தாமநாற்றிவனைந்ததோர்மாடஞ்சார்ந்தாள்.

மேனி - நிறம், உடம்புமாம். திருத்தக - அழகுபொருந்த, கொழுந்தண்ர்—செழுமையாகிய பூங்கொத்து, உறைப்ப - உறுத்த, பூத்த - உண்டான, பொற்றாள் - அழகியபாதம், அனமென ஒதுங்கி - அன்னம்போலநடந்து, தீங்தேன் - இனியதேன், பூந்தாமம் - பூமாலை, நாற்றி - தொங்கக்கட்டி, வனைந்தது - அலங்கரித்ததாகிய. (௨௭)

முட்டியதிங்கள்கான்றமுதுக்களியமுதமூழ்கி
விட்டொளிர்கின்றதென்னவிளங்கியதவளமாடத்
திட்டபூந்தவிசின்வைகுமிருநிலவேந்தர்காண
மட்டவிழ்கோதைசென்றோர்மாலையின்வயங்கினாளால்

முட்டிய - மோதின, (தவழ்ந்த) திங்கள் - சந்திரன், கான்ற - உமிழ்ந்த, விட்டொளிர்கின்றது - ஒளிவிட்டுப் பிரகாசிக்கிறது, என்ன - போல, தவளம் - வெண்ணிறம், பூந்தவிசு - அழகியஆசநம், வைகும் - தங்கிய, இரு - பெரிய; நிலவேந்தர்—பூலோகத்தரசர், மட்டவிழ்கோதை—தேனேடுமலர்கிற பூமாலையணிந்த கூந்தலையுடையவள், மாலையின் - பூமாலைபோல, வயங்கினாள் - பிரகாசித்தாள். (௨௮)

கவளமார்களிநல்யானைக்காவலனொருவன்செர்பொற்
குவடெனப்பணைத்ததோளிற்கோற்றொடியொருகாழ்முத்தின்
அவிரொளிதவழமாதராணைகைநிலவுவந்து
தவழ்வதோவென்னச்செங்கட்டாமரைபரப்பல்செய்தான்.

கவளம்ஆர் - கவளம்வாங்கியுண்ணுகிற, காவலன்—அரசன், செம்பொற்குவடென-செம்பொன்மலைபோல, பணைத்த - பருத்த, கோற்றொடி - வளைவாகிய வளையலணிந்தவள், கோல் - புள்ளியெனினுமாம், ஒருகாழ் - ஒற்றைச்சரம், அவிர் - விளங்குகிற, செங்கட்டாமரை பரப்பல்செய்தான் - நோக்கினான். (௨௯)

வலம்படுகுருதிவைவேன்மன்னவனொருவன்மார்வத்
தலங்கொளிவயிரப்பூணினணங்குசெந்தளிர்க்கைதாங்கும்
இலங்கிதழ்க்குவளைதோன்றவேந்திழைநோக்குநோக்கம்
கலந்ததுபோலுமென்றுகட்கடைதிருப்பினானால்

வலம்படு - வெற்றிதங்கிய, குருதி - உதிரம், வை - கூர்மை, மார்வத்து—மார்பில், அலங்கு - அசைகிற, ஒளி - காந்தி, வயிரப்பூண் - வஜ்ராபரணம், அணங்கு - அழகு, நோக்குநோக்கம் - பார்க்கிறபார்வை, கட்கடைதிருப்பினான் - கடைக்கண் திருப்பிப் பார்த்தான். (௩௰)

கோட்டிளங்களிறனானோர்கொற்றவன்குவளைவென்ற
வாட்டடங்கண்ணிசெக்கர்மணிக்குழையெறிக்குமொண்கேழ்
ஈட்டம்வந்துலவச்செய்யவிளந்தளிர்க்கண்ணிநங்கை
சூட்டினள்கொல்லோவென்னாத்தோட்டடந்துணைந்துநோக்கும்.

கோட்டிளங்களிறனான் - கொம்பினையுடைய இளமைபொருந்தியயானையை நிகர்த்தவன், கொற்றவன்-அரசன், செக்கர்மணி-செம்மணி, (மாணிக்கம்) குழை-காதணி,

எறிக்கும்-வீசுகிற, ஒண்கேழ் ஈட்டம்-அழகிய ஒளித்தொகுதி, உலவ - அசைய, பூமை ந்தளிர்க்கண்ணி - இளந்தளிர்மாலை, தோட்டடம் - தோள்மலை, துனைந்து—விரைந்து.

இத்திறனோக்கிநோக்கியெறுழ்வலியரசர்வைகச்
சித்திரத்தெழுதவொண்ணுத்திருமுகஞ்சிறிதுகோட்டித்
தத்தரியொழுகுசெங்கட்டாமரைபரப்பிநின்ற
மைத்தவார்குழலினுளைவெளவினன்வடிவேற்சாம்பன்.

எறுழ்வலி - மிக்கவலி, கோட்டி - வளைத்து, அரி - ரேகை, செங்கட்டாமரை—செவந்ததாமரைமலர்போலுங்கண், பரப்பி - விரித்து, மைத்த - கறுத்த, வார்—நீண்ட, குழலினுள் - கூந்தலையுடையவள். (டுஎ)

கலிவிருத்தம்.

கோடிவரிவண்டுபடுகோதைபுனையாமுன்
ஓடரிநெடுங்கண்மயிலொப்பவளைவந்துற்
றேறுபடுதாரவனெடுத்தொழிதல்காணு
ஆடரவுயர்த்தவனராவெனவழன்றுன்

வரிவண்டுபடுகோதை - கீற்றுக்களையுடைய வண்டுகள்படிந்தபூமாலை, புனையாமுன் - சூட்டுவதற்குமுன்பு, ஏறுபடுதாரவன் - சாம்பன், காணு - கண்டு, ஆடரவுயர்த்தவன் - துரியோதனன், அழன்றுன் - கோவித்தான் (டுஅ)

கார்முகம்வணக்கியெழுகன்னன்முதல்பொன்னந்
தேரினர்களோரறுவர்தீயெழவிழிக்கும்
போருழுவையன்னவர்கள்போகலினியென்று
சூரினிளவேறனையவேந்தலைவளைத்தார்.

கார்முகம் - வில், வணக்கி - வளைத்து, கன்னன் - கர்ணன், போருழுவையன்னவர்கள் - போர்ப்புலியை நிகர்த்தவர்கள், போகல் - போகாதை, சூரினிளவேறனையவேந்தலை - சாம்பனை. (டுசு)

பூம்பிணையன்மார்பினவர்போகலெனவெவ்வாய்
வேம்பகழிபற்பலவிடுத்தனர்வளைப்ப
வாம்பரியதேரினன்வளைத்தவரிவில்லன்
சாம்பனமர்மேம்படுதருக்கினனெதிர்ந்தான்.

பூம்பிணையல்மார்பினவர் - பூமாலையணிந்த மார்பினையுடைய அரசர், வேம்பகழி-சுடுகின்ற அம்பு, விடுத்தனர் - விடுத்த, வாம் - தாவுகின்ற, பரிய - குதிரைகட்டிய, வரி - நீண்ட, அமர் - போர், மேம்படுதருக்கினன் - மேலானகளிப்பையுடையவன்.

ஈரிருவடிக்கணையினுலெரிபசும்பொற்
றேர்புணர்பரித்தலைகள்சிந்திவிறல்சாயா
ஒரொருவடிக்கணையினுலுவரிமுற்றும்
பார்புகழுமோரறுவர்பாகருயிர்மாய்த்தான்.

வடிக்கணை - கூர்மையாகியஅம்பு, பரித்தலைகள் - குதிரைத்தலைகள், சிந்தி - சிதறடித்து, விறல் - வெற்றி, சாயா - அழித்து, உவரிமுற்றும் - கடல்சூழ்ந்த, பாகருயிர்மாய்த்தான் - பாகருயிரைவாங்கினுன். (டுக)

நாற்றிசையுமுற்றியழனச்சிலையவெள்வேல்
ஆற்றலர்களகூற்றமெனவாடுசமராற்று
ஏற்றுடலும்வெய்யபுலியாப்புறுதல்போலக்
காற்றின் விசைகொண்டுபொருகாளைதனையாத்தார்.

நாற்றிசையுமுற்றி - நாலுதிக்கிலும் வளைந்துகொண்டு, அழனச்சிலைய—சுடுகின்ற நஞ்சூட்டப்பெற்ற இலைவடிவினதாகிய, வெள்வேல் ஆற்றலர்கள்—வெள்ளியவேற்படையையுடைய சமர்த்தர்கள், கூற்றமென - யமன்போல, சமராற்று - யுத்தஞ்செய்து, ஏற்று - எதிர்த்து, உடலும் - போர்செய்கிற, யாப்புறுதல்போல - கட்டுப்படுதல் போல, காற்றின்விசை - வாயுவேகம், யாத்தார்—கட்டினார்கள், பொரு—போர்செய்கிற, காளைதனை - சாம்பனை. (௩எ)

வேறு

தீப்படவிழித்தவெஞ்சீற்றக்கட்செவி
மீப்படவுயரியவேந்தனுதியோர்
பாப்பணைத்துயின்றவன்பயந்தகாளையை
யாப்புறுத்தணிநகரேகினாரோ.

வெஞ்சீற்றம் - கடுங்கோபம், கட்செவி - பாம்பு, மீப்படவுயரியவேந்தன்—துரியோதனன், பாப்பணைதுயின்றவன் பயந்தகாளையை - சாம்பனை, யாப்புறுத்து—கட்டி

வழிந்துதேனுகுதொடைமகதியாழ்பயில்
செழுந்தவனத்திறஞ்சென்றுகூறலும்
கொழும்பிறைக்கோட்டிளங்குஞ்சரங்கள்போல்
எழுந்தனர்யாதவரிகலுக்கென்பவே.

மகதியாழ்பயில்செழுந்தவன் - நாரதன், அத்திறம் - அந்தச்செய்தியை, கொழும்பிறைக்கோட்டு இளங்குஞ்சரங்கள்போல் - கொழுமையாகிய பிறைபோலுங் கொம்பினையுடைய யானைக்கன்றுகள்போல, இகலுக்கு - போர்செய்தற்கு (௩௯)

சிலைத்தொழிலிளையவர்செருக்கிப்போர்க்கெழல்
விளக்கினன்குமரனைமீட்கும்யாமெனு
அலப்படைக்கொற்றவனமுதமூற்றெழு
கலைக்கதிர்மதியெனக்கடிதினேகினான்.

சிலைத்தொழில் - விற்றொழிலையுடைய, இளையவர் - சிறுவர், செருக்கி - தருக்கி, குமரனை - சாம்பனை, மீட்கும் — மீட்போம், அலப்படைக்கொற்றவன் - பலராமன், கலைக்கதிர்மதியென - கலைகளையுடைய ஒளியுள்ளசந்திரன்போல. (௪0)

புகரணிபூணுதற்புழைக்கைமால்கரி
நகரணித்தாமுகிழ்நனைகுடைந்துதா
துகவரிமிடற்றளியுழுமொர்காவிடை
இகலரியேறனணிறுத்திட்டானரோ

புகர் - புள்ளி, அணிபூண் - அணியப்பட்டபூண் - (நெற்றிப்பட்டம்), நுதல்—நெற்றி, புழைக்கை - துவாரத்தையுடைய துதிக்கை, மால்-பெரிய, கரிநகர்-அத்திநபுரம்,

கற்றைவெண்கவரியுங்கதிர்நிலாப்பொழி
கொற்றவெண்குடையும்யாங்கொடுப்பவேத்தியல்
உற்றிடும்யாதவருற்றநன்றெனுச்
சொற்றனரெழுந்தனர்துனைவினேகினும்.

வேத்தியல் - ராஜரிகம், உற்றிடும் – அடைந்த, யாதவர் - இடையர், ஊற்றம்– நிலைபேறு, நன்றெனு - நன்ருயிருக்கின்றதென்று, துனைவின்–விரைவாக, சொற்றனரெழுந்தனர் - சொல்லியெழுந்து. (சஎ)

மறுத்தனருரைத்ததுவல்லேயேகினர்
நெறித்தபூந்தாரினர்நிலைமைநன்றெனு
வெறித்துணர்மராம்புரைவெள்ளைமேனியான்
கறுத்தனன்செய்யகட்கடைசிவந்தவே

வல்லே - விரைவாக, வெறி - வாசனை, துணர் - பூங்கொத்து, மராம்புரைவெள்ளைமேனியான் - பலராமன், கறுத்தனன் - கோவங்கொண்டான் (சஅ

முறம்புரைதழைசெவிமூரிமாநகர்
கறங்குநீர்க்கங்கையிற்கவிழ்க்கும்யாமெனுப்
பிறங்கலையமுனையைப்பெயர்த்தகாவலன்
மறங்கெழுஞாஞ்சிலின்வாங்கினனரோ

முறம்புரைதழைசெவிமூரிமாநகர் - அத்திபுரம், கறங்கும் - ஒலிக்கின்ற, கவிழ்க்கும் - கவிழ்த்துவிடுவோம், பிறங்கலலை - விளங்குகின்ற அலைகளையுடைய, யமுனையைப்பெயர்த்தகாவலன் - பலராமன், மறங்கெழு - வீரத்தன்மையமைந்த, ஞாஞ்சிலின் - கலப்பையால், வாங்கினன் - வளைத்தான். (சகூ)

விரைசெலன்மிதவையின்மிதந்தவெள்ளிவெண்
டிரைதவழ்கங்கையிற்றிருவமாநகர்
வரவொருகுழையினன்வாங்கவாகைவேல்
அரசர்கண்டஞ்சினரதிர்ப்புற்றாரரோ

விரைசெலல் - விரைவாகச்செல்லுகிற, மிதவையின் - தெப்பம்போல, வெள்ளிவெண்டிரை - மிகுவெண்மையாகிய அலைகள், திருவம் - அழகு, ஒருகுழையினன்– பலராமன், வாங்க - வளைக்க, வாகை - வெற்றி, அதிர்ப்புற்றார் - நடுங்கினார்கள். ()

பாம்புயர்கொடியினன்பசியபச்சிளங்
காம்பெனப்பணைத்ததோட்கன்னிதன்னொடும்
சாம்பனையுய்த்தனன்றவளமேனியான்
மேம்படுசேவடிவீழ்ந்திறைஞ்சினன்.

பாம்புயர்கொடியினன் - துரியோதனன், பச்சிளங்காம்பு - பச்சைநிறமுள்ள இளமூங்கில, உய்த்தனன் - கொணர்ந்து, தவளமேனியான் - பலராமன். (ரு)

ஒள்ளொளிநெடுநிலாவுதறுவாலுளைப்
புள்ளியிற்பொன்செய்தார்ப்புரவியீட்டமும்

பிள்ளைவண்டுண்மதம்பில்குமால்கரி
வெள்ளமுஞ்சிறப்பொடுவெறுப்பநல்கினன்.

உதறு - உதறுகிற, வாலுளை - வெண்மையாகியபுறமயிர், புள்ளி - பொட்டு, பொன்செய்தார் - பொன்னாற்செய்யப்பட்ட கிங்கிணிமாலை, பில்கும் - சிந்துகிற, கரிவெள்ளம் - யானைக்கூட்டம் (௬௨)

முருகுலாவகொம்பொடுமுருகனன்னசெங
குருகிவேற்காளையைக்கொண்டுமன்னிய
திருநகர்க்கேகினன்செக்கர்மாமணி
ஒருகுழையுலாவருவுயங்கொண்டோனினன்

முருகுலாவுகொம்பொடு-இலக்கணையோடு, முருகனன்னசெங்குருகிவேற்காளை-சாம்பன், செக்கர்மாமணியொருகுழையுலாவருவுயங்கொண்டோனினன் - பலராமன். ()

புரவலவின்னும் நம்பொன்னஞ்சூட்டெயில்
திருநகர்த்தென்றலைச்சேணிலோங்குறு
விரிதிரைக்கங்கையில்வீழ்த்தல்போன்றுமற்
றொருகுழையவன்வலியுணர்ததுகின்றதால்,

புரவல - அரசனே, (பரிக்ஷித்துமகாராஜனே) இன்னும் - இன்னமும், நம் - உங்களுடைய, பொன்னஞ்சூட்டு எயில் - பொற்சிகரங்களையுடையமதில், தென்தலை - தென்பாரிசம், சேணில் ஓங்குறு - ஆகாயமட்டு முயர்ந்து, ஒருகுழையவன்வலி - பலராமனதுபலத்தை (௬௩)

சாம்பன் மணம்புரி யத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௩௨௭௩.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---

நாற்பதாவது

# பதினாறாயிரந் திருவிளையாட்டுடை யத்தியாயம்.

நாரதர் நிலைமை.

தண்ணந்தாமரைத்தலைவிவீற்றிருந்ததாரகலத்த
தண்ணலெண்ணிரண்டாயிரமரிவையருவப்பக
கண்ணுறுந்திறங்காண்குமென்றமிழ்தினிற்கனியும
பண்ணமைந்ததீம்பாடல்யாழ்ப்பண்ணவன்படர்ந்தான்.

தண்ணந்தாமரைத்தலைவி - திருமகள், தார்—துளவமாலை, அகலத்து - திருமார்பையுடைய, அண்ணல்—கண்ணபிரான், எண்ணிரண்டாயிரம்-பதினாறாயிரம், அரிவையர் - மாதர், உவப்ப - களிக்க, கண்ணுறுந்திறம் - காட்சிதந்தருளும் திருக்கோலத்தை, காண்கும் - தரிசிப்போம், யாழ்ப்பண்ணவன்—நாரதன், படர்ந்தான்—சென்றான்.

வளர்க்குங்கற்பகப்படப்பைவாய்வழிநறுமாந்திக்
களிக்கும்வண்டுபூங்கற்பகக்கொடியெனமறகத்
தளிர்க்குநல்லெழிறயங்கிழையாரொடெவ்வுலகும்
அளிக்குங்கார்முகிலமர்ந்துழியடைந்தனனன்றே

கற்பகப்படப்பைவாய்—கற்பகச்சோலையில், நறு—தேன், மாந்தி—குடித்து, மறுக—மயங்க, தளிர்க்குநல்லெழிறயங்கிழையார் - கோவியர், எவ்வுலகும் அளிக்கும் கார்முகில் - கண்ணபிரான். (உ)

முழுதுணர்ந்தமாமுனிவரன்வருதலுமெழுந்து
கொழுதிவண்டறைகொழுந்தொடையமராகோடீரம
உழுதபூங்கழற்காலினுறெண்டொடிக்கரத்தால்
தொழுதுவந்தவாறென்கொலென்றின்னுரைசொற்றான.

முழுதுணர்ந்தமாமுனிவரன் - நாரதன், கோடீரம் - முடி, (கிரீடம்) அமரர்கோடீரம் உழுதபூங்கழற்காலினன் கண்ணபிரான், இன்னுரைசொற்றான் - இன்சொற் சொல்லினன். (௩)

மறைவழுத்துநின்மலரடிவந்தடைந்தல்லால
பிறவிமாகடலெங்ஙனங்கடப்பதுபிறவாத
சிறியபச்சிளங்குழவியாயாலிலைச்சேக்கை
இறைகொண்முத்தொழிலிறைவவென்றெதிரனன்கன்றான்

மறை - வேதங்கள், வழுத்தும்—புகழ்கின்ற, எங்ஙனம் - எப்படி, சிறியபச்சிளங்குழவியாய் - மிகச்சிறியபாலகனாய், சேக்கை - படுக்கை, இறைகொள் - தங்கின, முத்தொழிலிறைவ - முத்தொழிற்குந்தலைவனே, (முத்தொழிலாவன - சிருஷ்டிஸ்திதிசம்ஹாரங்கள்). (௪)

மீட்டுமற்றொருமெல்லியல்கடிமனையிறப்பச
சூட்டராவணைத்துயின்றவனிங்கிலான்போன்று
நாட்டமின்னருள்பொழிதரநடந்ததெப்பொழுதிங
கீட்டுமாதவவெனவுரையாடல்கேட்டிகந்தான்

மெல்லியல் - கோபிகை, கடிமனை—காவலையுடையவீடு, சூட்டராவணைத்துயின்றவன் - கண்ணபிரான், நாட்டம் - கண், நடந்தது - வந்தது, உரையாடல் - வார்த்தையாடுதல், இகந்தான் - நீங்கினன் (௫)

விரிந்தவெண்டிரைவேலிமண்பொதிந்ததாள்விமலன்
திருந்துமில்லறச்செய்வினைதிறப்படக்காட்டி
அருந்தவத்தினேனடைதொறுமடைதொறுமாங்காங்
கிருந்தவண்ணமற்றெங்ஙனம்வகுத்தியாமிசைக்கேம்.

விரிந்தவெண்டிரைவேலிமண்பொதிந்ததாள்விமலன்—கண்ணபிரான், அருந்தவத்தினேன்—நாரதன், வகுத்து - வகைப்படுத்தி, இசைக்கேம் - சொல்லுவோம். (௬)

கஞ்சநாண்மலர்க்கடவுண்முன்கடவுணீராட்டச்
செஞ்சுடர்ப்பொலஞ்சேவடிசேயுயர்விசும்பின்

துணரகம்பகஞ்சுரிமுகமுழக்கிவிண்டுளக்கிக்
கொணர்கரும்புயல்குழன்றுநெய்த்திருண்டுவார்ந்தொழுகும்
வணரிருங்குழல்வாணுதலொருத்திதன்மனைவாய்
இணர்மணங்கமழிளமரச்சோலைமற்றிழைக்கும்

துணர—பூங்கொத்துக்களையுடைய, சுரிமுகம்முழக்கி—சங்கத்தொனிசெய்து, விண்துளக்கி - தேவலோகத்தைநடுங்கச்செய்து, கொணர் - கொண்டுவந்த, கரும்புயல்—கண்ணபிரான், வணர் - சுரிவு, வாணுதல் - ஒளியையுடையநெற்றி, மனைவாய் - வீட்டில், (வாய் - ஏழனுருபு) இழைக்கும்—உண்டாக்குவான். (௧௨)

விண்ணம்போழ்படவிரைமலர்ச்சேவடிநீட்டிக்
கண்ணகன்புனல்கண்ணுதல்சடைக்கருள்கண்ணன்
வண்ணவார்குழலொருத்திதன்வளமனைப்புறத்துத
தண்ணந்தாமரைதளையவிழ்மணித்தடம்வகுக்கும்

விண்ணம்—ஆகாயம், போழ்பட—கிழிய, விரை-வாசனை, கண்அகன்-இடமகன்ற, புனல் - கங்காநதி, கண்ணுதல்—சிவபெருமான், தாமரைதளையவிழ்மணித்தடம் - தாமரைத்தடாகம். (௧௩)

மாமன்விட்டதோர்மழைமதக்கருங்களிறட்ட
தாமமார்பினன்றளையவிழ்தாமமோடகிற்பூந
தூமஞ்சூடியசுரிகுழலொருத்திதன்மனைவாய்
நாமவெஞ்சினநனைகவுட்புழைக்கைமாநடத்தும்.

மாமன் - கஞ்சன், மழைமதக்கருங்களிறு - குவலயாபீடம்என்னும்யானை, தாமமார்பினன் - கண்ணபிரான், தூமம் - புகை, நாமம்—அச்சம், புழைக்கைமா—யானை. ()

பூத்தபொங்கர்பொங்கெரிபுணப்பொருசிலைவாங்கும்
பார்த்தன்றேர்விடுபாகன்வெணபனிநிலாமுததம்
கோத்தெனததிகழ்கூரெயிற்றொருததிமாநகரின்
றேத்துமின்பொழிசெழுமணிகுயின்றதேரூரும்.

பூத்தபொங்கர்—பூத்தசோலை, (காண்டவவநம்) எரிஉண—நெருப்புண்ண, பொருசிலைவாங்கும் - போர்வில்லைவளைத்த, பார்த்தன் - அருச்சுநன், தேர்விடுபாகன்-கண்ணபிரான், முத்தம் - முத்து, கோத்தென - கோத்துவைத்தாற்போல, திகழ் - விளங்குகிற, கூரெயிறு - கூர்மையாகியபல், நகரின்தேத்து - நகரினிடத்து, மணிகுயின்ற—மணிகள்பதித்த, தேர்ஊரும்—தேர்செலுத்துவான். (௧௫)

பரியுருப்புணர்படுகொலையவுணனைப்படுத்த
கரியவன்கருங்களிக்கயலிரண்டெதிர்கலந்து
பொருவபோன்றகட்பொற்றொடியொருத்திதன்மனைவாய்
உருவவானிலவொழுகுவாலுளைப்பரியுகைக்கும்.

பரியுருப்புணர்படுகொலையவுணன் - கேசி, படுத்த—கொன்ற, கரியவன் - கண்ணபிரான், களிக்கயல் - களிப்பையுடையமீன்கள், பொருவ—போர்செய்வன, பரிஉகைக்கும்—குதிரைசெலுத்துவான். (௧௬)

நெடியமூவெயினீள்பொலம்பொருப்பினுன்முருக்கு
கடவுள்வார்சிலையிறுத்தவன் கருங்கயல்வெருட்டித்
தடநெகிழ்ந்தசெந்தாமரைமலரின்மேனடந்த
வடிநெடுங்கணேர்கொடிமனைவரிசிலைவடிக்கும்.

நெடியமூவெயில் - நெடிய மும்மதில்களை, நீள்பொலம் பொருப்பினுல் - நீண்ட பொன்மலையாகிய வில்லினுல், முருக்கு - அழித்த, கடவுள் - சிவபிரான், வார்சிலையிறுத்தவன் - நெடுவில்லையொடித்தவன் - (கண்ணபிரான்) வடி - மாவடுவகிர், வடிக்கும்-வளைப்பான் (௧௭)

தெழித்துராக்கடைகல்வியுஞ்செந்தழல்சிதற
விழித்துநூக்கிமுழக்கியும்வெருவருவெம்போர்
இழைத்தமல்லர்தம்மெறழ்வலிகடந்தபோரேறனர்
மழைத்தடங்கண்வாள்மனைமற்றொழில்வருத்தும்

தெழித்து - அதட்டி, ராக்கடை - ராஜனி, நூக்கியும் - தள்ளியும், முழக்கியும்-முழங்கியும், இழைத்த-செய்த, போரேறு-கண்ணபிரான் (௧௮)

பொழிந்தசெஞ்சுடர்ப்பொன்னகருறைநர்நெஞ்சம்
விழைந்துநாடியவிழுப்பொருணல்கினேன்விதுப்பூங்
கொழுந்தினல்லெழில்கவற்றியகுறங்கிலொருத்தி
செழும்பொனில்லிடைச்சிருத்தகச்செய்பொருடிருத்தும்.

பொழிந்தசெஞ்சுடர்ப் பொன்னகருறைநர் - தேவர்கள், விழைந்து - விரும்பி, நாடிய - தேடிய, விழுப்பொருள் - மேலானபொருள், நல்கினேன் - கொடுத்தவன்-(கண்ணபிரான்) விதுப்பூங்கொழுந்தின் - அழகியசந்திரகண்டத்தின், நல்எழில்கவற்றிய - நல்லழகைவருத்தின (௧௯)

திரைசெய்தெண்கடலெழுமிளம்பரிதியிற்றிகழும்
விரைசெய்தார்முடிவிண்ணவர்பரவவீற்றிருப்போன்
வரைசெய்மாமுலையொருத்திதன்வளமனைவளாகத்
தரசர்வந்துவந்தடிதொழவரசுவீற்றிருக்கும்.

தெண்கடல் - தெளிவாகியகடல், இளம்பரிதி - பாலசூரியன், விண்ணவர்-தேவர்கள், பரவ - துதிக்க, வளமனைவளாகத்து-வளமாகியவீட்டின் பரப்பில். (௨௦)

விரியும்போதுறைவேதனுஞ்சேவகமுமரனும்
பரியுநெஞ்சொடுபாடியுநாடியுந்தெரிதற்
கரியனுகியவண்ணலோரரிவைதன்மனைவாய்த்
தெரியுஞ்சொற்றிறனமைச்சொடுசெய்வினைதேரும்

போது - தாமரைமலர், உறை - வசிக்கிற, வேதனும்-பிரமனும், அரனும்-உருத்திரனும், பரியும் - விரும்புகிற, தெரிதற்கரியனுகிய வண்ணல் - கண்ணபிரான், அமைச்சொடு - மந்திரியோடு, செய்வினைதேரும்-செய்யவேண்டியகாரியங்களை ஆராய்வான்.

காட்டினண்ணுபுகண்கவர்காஞ்சனவுருக்கொள்
மோட்டுவெந்திறன்முழுவலிமானுயிர்முடியக்

கோட்டுவார்சிலைக்குரிசிலோர்கோற்றொடிமனையின்
வேட்டமாடுவானெழுமிகல்வேற்படைமிடைய.

காட்டில்நண்ணுபு கண்டவர்காஞ்சனவுருக்கொள் மோட்டுவெந்திறல் முழுவலியா னுயிர்முடியக்கோட்டுவார் சிலைக்குரிசில்-கண்ணபிரான், நண்ணுபு-வந்து, காஞ்சனம்-பொன், கோட்டு - வளைத்த, வார்சிலை-நீண்டவில், வேட்டமாடுவான்-வேட்டையாட, மிடைய - நெருங்க, இகல் - வலி. (௨௨)

எழுபொருப்பெனவெழுதருமெழுவிடைசழுவித்
தழுமுற்றெய்திடத்தடமுலையொருத்தியைமணந்த
முழுமுதற்பொருண்முருக்கிதழொருத்திதன்மனைவாய்
மழலைமென்மொழிமக்கடம்மணவினைமன்னும்

எழுபொருப்புஎன - எழுமலைகள்போல, எழுவிடை - ஏழுஇடபங்கள், தழுமுற்றெய்திட - தழுவ, ஒருத்தி-நப்பின்னைப்பிராட்டி, முழுமுதற்பொருள்-கண்ணபிரான், முருக்கு - இலவம்பூ, இதழ் - அதரம், மணவினை - விவாகம். (௨௩)

விரிந்ததாமரைப்பொகுட்டுறைவேதியன்முதலாத்
தெரிந்தநான்மறையந்தணர்தெள்ளிதின்வேட்டுச்
சொரிந்தநல்லவிதுய்ப்பவன்சுருண்டிறைசெறித்துப்
புரிந்தவார்குழலொருத்திதன்மனைமகம்புரியும்

விரிந்ததாமரைப்பொகுட்டுறைவேதியன் - பிரமன், வேட்டு-யாகஞ்செய்து, சொரிந்தநல்ல விதுய்ப்பவன் - கண்ணபிரான், மகம்புரியும் - யாகஞ்செய்வான். (௨௪)

காய்ந்தவெஞ்சினக்கறையணற்பிறையெயிற்றகல்வாய்ப்
பாந்தள்வல்விடம்பாயந்தநீர்த்தடத்துவீழ்ந்தாடும்
ஏந்தலேந்திளவெழின்முலையொருத்தியோடினிது
சாந்தளாவியதண்புனற்றடம்படிந்தாடும்

காய்ந்தவெஞ்சினக்கறையணற்பிறை யெயிற்றகல்வாய்ப்பாந்தள்வல்விடம் பாய்ந்த நீர்த்தடத்துவீழ்ந்தாடும் ஏந்தல் - கண்ணபிரான், கறை - விஷம், பாந்தள் - பாம்பு, (காளியன்) ஏந்தல் - பெரியோன், சாந்தளாவிய - சந்தனக்கலவைகலந்த, தண்புனற்றடம் - குளிர்ந்தநீரையுடைய தடாகத்தில் (௨௫)

சுரும்புகுழ்பசுந்தோட்டிணர்க்கற்பகம்பிடுங்கு
பெருங்கைவேழமோர்பிடிபுணர்ந்தாடுதல்கடுப்பக்
குரும்பைமென்முலைக்கோற்றொடியொருத்தியோடந்தண்
அரும்புவாயவிழிளமரக்காவகத்தாடும்

சுரும்பு - வண்டு, பசுந்தோடு - பசியஇதழ், இணர்-பூங்கொத்து, கற்பகம்பிடுங்கு பெருங்கைவேழம் - கண்ணபிரான், பிடி - பெண்யானை, கடுப்ப-ஒக்க, இளமரக்கா-இளமரச்சோலை. (௨௬)

மழலைவண்டுணமடல்வயிறுடைந்துதேத்திவலைப்
பொழிகருந்துழாய்ப்புயல்கதிர்மின்னொடுபுணர்ந்தாங்

## நாற்பத்தோன்றாவது.

## சிசுபாலனைக் கொன்றவத்தியாயம்



சேட்டிளம்பிறைக்கொழுந்தெனத்திகழ்தருபால்வெண்
கோட்டுவாரணங்கூப்பிடத்துயிலெழுகொண்டல்
மோட்டுமுட்புறமுருக்கின்மொய்யிணரெனவிரிந்த
சூட்டுவாரணங்கூப்பிடத்துயிலெழுந்தனனால்.

சேடு - பெருமை, திகழ்தரு - விளங்குகிற, பால்வெண்கோட்டுவாரணம் - கஜேந்திராழ்வான், பால் - பால்போன்ற, வெண்கோட்டுவாரணம் - வெள்ளைக்கொம்பையுடையயானை, துயிலெழுகொண்டல் - கண்ணபிரான், முட்புறம்-முட்புறத்தையுடைய, முருக்கின்மொய்யிணர் - முருக்கமலரின் நெருங்கினகொத்து, சூட்டு - உச்சிக்கொண்டை, வாரணம் - கோழிச்சேவல். (க)

இனைத்தெனத்துணிந்தெழுதிடாப்பழமறைக்குலங்கள்
அனைத்துமெட்டுதற்கரியதோராநந்தமயமாய்
நினைப்பரும்பரதத்துவமாய்நிறைந்தோங்கு
தனிப்பெருஞ்சுடர்தன்னையேநினைந்தனனிருந்தான்.

எழுதிடா - எழுதிப்படிக்காத, மறைக்குலங்கள் - வேதக்கூட்டங்கள், தனிப்பெருஞ்சுடர் - கண்ணபிரான், நினைந்தனன் - நினைந்து.

கங்கைசேவடித்தாமரையொன்றுமேகலந்த
தங்கதிர்த்திருநகைமுகைமுளரியுமாய்பொன்
செங்கைமாமலர்முளரியுந்தீண்டினமென்றுப்
பொங்குவெண்டிரைப்பூம்புனன்முழுங்கமூழ்கினனால்

நகைமுகமுளரி - நகைமுகத்தாமரை, செங்கைமாமரைமுளரி - கைத்தாமரை, தீண்டினம் என்று - தொட்டோமென்று, பொங்கு - மிகுமகிழ்ச்சியாற்பொங்குகிற.

பொங்குவெண்டிரைபூத்திடுகவுத்துவம்பொழிந்த
அங்கதிர்க்குலந்தவழ்நதெனவருவரைமார்பில்
குங்குமக்கொழுஞ்சாந்தணிதிருத்தினன்குளிர்ந்த
திங்கள்வாண்முகந்தீட்டினன்றிருமணிற்றிலகம்

பொங்குவெண்டிரை - பாற்கடல், கவுத்துவம்—கௌஸ்துபமணி, இதுபாற்கடல் கடைந்தகாலத்தில் அதனிடத்துத்தோன்றின பல அற்புதப்பொருள்களிலொன்று; அங்கதிர்க்குலம் - அழகியகிரணக்கூட்டம், திங்கள் - சந்திரன், வாள் - ஒளி, தீட்டினன்—எழுதினன், திருமணிற்றிலகம்—திருமட்குறி. (உ)

வேலைவெண்டிரைமுகட்டினில்வெங்கதிர்பொடிப்ப
நீலவண்டுசூழ்தாமரைநெகிழ்ந்துதேன்பொழிதல்
போலவீர்ம்புனல்பூந்தொடித்தடக்கையாற்பொழிந்து
காலையாற்றுறுகடனெலாந்திறப்படக்கழித்தான்.

கானமுல்லையுங்கானுலாந்துளவமுங்கஞலித்
தேனுண்வண்டொடுதேனவாங்கற்பகஞ்செறிந்த
பூநறும்பிணைபூமகள்புணர்புயப்பொருப்பின்
வானவில்லெனவான்மருட்டோள்வளைவனைந்தான்.

கஞலி - நெருங்கி, தேனவாம் - தேனையுடையனவாகிய, நறும்பிணை-மணமுள்ள மாலை, புயப்பொருப்பு - புயமலை, வானவில் - இந்திரதநுசு (கக)

அறல்புறந்தருகருங்குழலாய்ச்சியர்மனைத்தூங்
குறிசெறிந்தநெய்பார்த்ததுகிடக்கமற்றுருகு
நறுநெய்பார்த்தனனல்லொளிதுவன்றுகணணுடி
மறுவில்வெண்ணிலாமதிமுகமலரநோக்கினனால்.

அறல் - கருமணல், புறந்தரு - முதுகிடுகிற, தூங்கு - தொங்குகிற, நல்லொளி துவன்று - நல்லவொளிமிகுந்த, மறுஇல் - களங்கமில்லாத, முகமலர - முகமலர்ச்சியுண்டாக. (கஉ)

ஒட்டமைந்தசெம்பொற்கலனொழுகொளியாரம்
ஆட்டுவந்தவாளரவுரியன்னநல்லறுவை
வேட்டவேட்டனவிரையெடுத்தெறிதருதண்பூந்
தோட்டதாமரைத்துணையடிதொழுபவர்க்களித்தான்

ஒட்டமைந்த - உருககியோட்டின, செம்பொற்கலன் - செம்பொன்னுபரணம், வாள் - ஒளி, அரவுரியன்ன - பாம்புசட்டையை நிகர்த்த, நல்அறுவை - நல்லஆடை, விரை - வாசனை, தோட்ட - இதழ்களையுடைய, தாமரைத்துணையடி - தாமரைமலர் போலும் இரண்டுதிருவடி. (கங)

உவவுவெணமதியுருவவொண்குடைமிசையோங்கக்
கவரிகால்செயக்கருங்கடல்வெள்வளைகடுப்பப்
பவளநல்லொளிபழுத்தவெண்குளம்புடைப்பசிய
இவுளிபூண்டதேரொரிமணிததேர்மிசையிவர்ந்தான்.

உவவுவெண்மதி - வெள்ளியபூர்ணசந்திரன், உருவ - உருவினையுடைய, மிசை ஓங்க - மேலேவிளங்க, கவரி - சாமரம், கால்செய - காற்றையுண்டாக்க, வெள்வளை கடுப்ப - வெள்ளியசந்திரனைநிகர்க்க, இவுளிபூண்ட - குதிரைகட்டின, எரிமணித்தேர் மிசை - விளங்குகிற ரத்நமயமாகிய தேரின்மேல், இவர்ந்தான் - ஏறினன். (கச)

குரைசெய்வண்டொடுகொழுங்களிச்சுரும்பினங்கொழுதா
விரைசெய்கற்பகநறுமலர்விண்ணவர்பொழியத்
திரைசெய்வேலையிற்செழுமணித்திரளொளிதிளைக்கும்
அரசிருக்கைசென்றடைந்தனனரசெலாம்வணங்க.

குரைசெய் - ஒலிக்கின்ற, வண்டொடு-கருவண்டுகளுடனே, சுரும்பினம்-தேன் வண்டின்கூட்டம், கொழுதா கிண்டி, விரைசெய் - வாசனைவீசுகிற, நறுமலர்-நல்ல மலர், விண்ணவர் - தேவர், பொழிய - சொரிய, திரைசெய்வேலையில் - அலைவீசுகிற கடலில், செழுமணித்திரள் - செழுமையாகிய ரத்நசமூகம், ஒளிதிளைக்கும் - ஒளியை மிகவீசுகிற, அரசிருக்கை - அத்தாணி, (சிங்காதநம்).

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அழியுமருவிக்கடாயானையழைப்பவருங்காரருள்பெருகி
வழியுமுளரித்திருநோக்கமாநீர்க்கங்கைப்பெருக்காறு
தழையுமெழிற்றாட்செம்முளரிதாழுமாசர்க்கருளிவெயில்
பொழியும்பசும்பொன்வட்டவணைபொலியவரசுவீற்றிருந்தான்.

அழியுமருவிக்கடாயானை யழைப்பவருங்கார் - கண்ணபிரான், அருள்பெருகிவழியுமுளரித்திருநோக்கம் - கண்பார்வை, தாட்செம்முளரி - திருவடியாகியசெந்தாமரை மலர், தாழும் - வணங்குகிற, வெயில்பொழியும்-ஒளிவீசுகிற, பசும்பொன்வட்டவணை-பசும்பொன்னாற்செய்யப்பட்டவட்டவடிவாகிய சிங்காதனத்தில். (௧௬)

வைத்தநெடுவேற்சராசந்தன்வைக்குஞ்சிறையிற்கிடந்தவளிக்
கொத்துமுரலும்பசுந்தெரியற்கொற்றக்கவிகைமுடிவேந்தர்
தூத்தனைத்தலைவந்துடைக்குந்திரைமந்தாகினியின்
தத்துதளிபோன்முத்தமணிதயங்குகழற்காறாழ்ந்தனனால்

வைத்த - கூரமையைப் படைத்த, அளிக்கொத்து - வண்டின்கூட்டம், முரலும்- சத்திக்கிற பசுந்தெரியல் - பசியபூமாலை, கொற்றக்கவிகை - வெற்றிக்குடை, தளி- துளி, முத்துமணி - முத்தாகியரத்னம் (௧௭)

மடங்கலனையபோராற்றன்மடங்கிமகதன்சிறைக்கிடந்த
விடங்கொப்புளிக்குநெட்டிலைவேல்வேந்தர்க்கருளவேண்டுமெனக்
குடந்தம்படுவானவர்மகுடகோடியுழுதபழந்தழும்பு
கிடந்தபசுந்தாட்கமலமலர்கிடையாவிறைஞ்சிக்கிளத்தினனால்.

மடங்கலனைய - சிங்கத்தையொத்த, போராற்றல் - பெருவலி, மடங்கி - அழிந்து, குடந்தம்படு - குடந்தம்பட்டு வணங்குகிற, (குடந்தம் - நால்விரல்முடக்கிப் பெருவிரல் நிறுத்தி நெஞ்சிடைவைத்து நிற்றல்) வானவர் - தேவர், மகுடகோடி-பலமுடிகள்பட்ட, பழந்தழும்பு-பழையவடு, கிடந்த-தங்கின, பசுந்தாள் கமலமலர்-திருவடி, கிடையா-கிடைக்கப்பெற்று, இறைஞ்சி - வணங்கி, கிளத்தினன்-சொன்னான் ()

நடவுங்கலினப்பரித்தானைநறுந்தாரரசர்குறையிரந்து
விடவந்திறைஞ்சுதூதனுரைவிரியாநிற்கும்வேலையின்கண்
பிடவம்புனைந்தவாயர்தவப்பேற்றினனல்யாழ்நரம்பு
தடவந்திறுத்தான்முருகொழுகுதடந்தாமரையோன்றருதோன்றல்.

நடவும் - நடத்துகிற, கலினம் - கடிவாளம், பரித்தானை-குதிரைப்படை, குறையிரந்து - குறைகூறியிரந்து, விட-அனுப்ப, உரைவிரியாநிற்கும் வேலையின்கண்-சொல்விரிக்குங்காலத்தில், பிடவம்புனைந்த - பிடவமலர்தரித்த, (பிடவமலர் - முல்லைநிலத்துப்பூ), நல்யாழ்நரம்பு தடவந்து-அழகியயாழ்நரம்பைவருடிக்கொண்டே, இறுத்தான்-வந்துதங்கினான், முருகொழுகுதடந்தாமரையோன் தருதோன்றல்-நாரதன். (௧௮)

வேறு.

பௌவவெண்டிரையிற்பட்டபல்கரப்பரிதிபோல
எவ்வெலாத்திசையுமொண்கேழெறிப்பவந்தினிதுதோன்றும்

தெய்வயாழ்முனியைச்செய்யாத்திருமொழிகடந்துநின்ற
அவ்வென்சொற்பொருளாவானின்றாங்கணன்கேத்திப்பின்னும்

பௌவம் - கடல், வெண்டிரை - வெண்மையாகிய அலை, பட்ட - தோன்றின, பல்கரம் - பலகிரணங்கள், பரிதி - சூரியன், ஒண்கேழ் எறிப்ப - ஒட்பமாகியவொளி வீச, தெய்வயாழ்முனி - நாரதன், செய்யாத்திருமொழி - வேதம், கடந்துநின்ற—தாண்டிநின்ற, அவ்வென்சொற்பொருளாவான்—கண்ணபிரான், (அகாரவாச்யனாகிய கண்ணபிரான்) நன்குஏத்தி—நன்றாகத்துதித்து (௨௰)

தழைத்தபேருலகின்செய்கைதயங்கநீயறிதியன்றே
அழற்பொலிந்திலங்குகூர்வேலைவரொன்செய்கின்றார்கொல்
விழுத்தவவென்றுசெந்தீவிழுந்தவெஞ்சினத்தபுள்வாய்
கிழித்தவனுலகமுண்டகிளரொளிப்பவளம்விண்டான்

தயங்க - விளங்க, விழுத்தவ - மேலான தவத்தையுடையவனே, செந்தீவிழுத்த வெஞ்சினத்த புள்வாய்கிழித்தவன் - கண்ணபிரான், உலகமுண்ட கிளரொளிப்பவளம் விண்டான் - திருவாய்மலர்ந்தருளினான். (௨௧)

அரம்பொருகுடுமிவைவேலைவராங்கிராசசூயம்
புரிந்திடவேட்கின்றாராற்பொழியருண்முளரிச்செங்கட்
கருங்கடல்வண்ணநீயேகாத்திடல்வேண்டுமென்றே
நாரம்புளர்ந்திசைக்கும்பாடனாரதனவின்றானன்றே

அரம்பொரு - அரத்தினால் அராவப்பட்ட, குடுமி - நுனி, வை - கூர்மை, வேட்கின்றார் - விரும்புகின்றார், பொழியருண்முளரிச்செங்கட்கருங்கடல்வண்ண—கண்ணபிரானே. (௨௨)

சோர்மதுத்தெரியல்வேந்தர்தூதனின்றிசைத்தகூற்றும்
நாரதனவின்றபாட்டுநகைமுகமலர்ந்துகேளா
ஒருநல்லுணர்வின்மிக்கவுத்தவன்வதனநோக்கிக்
கார்முகிற்கொழுந்துபோலுங்காரணன்கடைக்கணித்தான்

சோர்மதுதெரியல் - ஒழுகாநின்றதேனையுடைய பூமாலையைத்தரித்த, கூற்றும்—சொல்லையும், கேளா - கேட்டு, நவின்ற - சொன்ன, தேரும்—ஆராய்கின்ற, உத்தவன்—வசுதேவன் தம்பியாகிய தேவபாகன்மகன், வதனம் - முகம், நீலக்கார்முகிற்கொழுந்து போலும் காரணன் - கண்ணபிரான், கடைக்கணித்தான் - கடாக்ஷித்தான். (௨௩)

பொற்றசெங்கமலமாதின்புணர்முலைபொருதமார்வ
ஒற்றைவெண்கவிகைநீழலுடைநிறைஞாலங்காக்கும்
கொற்றவன்வேள்விக்கேகிற்கொற்றவாகுறிப்புமாங்கே
முற்றுமென்றுரைத்தல்செய்தான்முழுதுணர்காட்சியோனே.

செங்கமலமாதின் - திருமகளுடைய, புணர் - நெருங்கின, பொருத - தாக்கின மார்வ - திருமார்புடையவனே, கொற்றவன் வேள்விக்கேகின் - ராஜசூயயாகத்துச்சென்றால், ஒற்றை—தனிமையான, (ஒப்பற்ற)ஞாலம்—உலகம், கொற்றவர்—(சிறைப்பட்ட)

அரசரது, குறிப்பும் - எண்ணமும், முற்றும் - முடிவுபெறும், காட்சியோன் - அறிவுடையோன், (உத்தவன்). (௨௪)

உவவுவெண்டிங்களன்னவுத்தவனுரைத்ததீஞ்சொல்
செவிமுதன்மடுத்துமாந்தித்திவவுயாழ்முனிவன்றன்னோ
டவிர்கழலரசர்தூதற்கருளினன்விடைவிற்பார்த்தன்
இவர்மணித்தடந்தேர்ப்பாகனெழுந்தனன்வேள்விக்கென்றே.

உவவுவெண்டிங்களன்ன-வெண்மையாகிய பூர்ணசந்திரன்போன்ற, தீஞ்சொல்-மதுரவசநம், செவிமுதல்மடுத்து - செவியிற்கேட்டு, திவவுயாழ் முனிவன்றன்னோடு-நாரதனோடு, அவிர் - விளங்குகிற, கழல் - வீரகண்டை, விடை - உத்தரவு, விற்பார்த்தன் இவர்மணித்தடந்தேர்ப்பாகன் - கண்ணபிரான். (௨௫)

நேமியஞ்சிலம்புமற்றோர்நிழன்மணிச்சிலம்பிற்றோன்றத்
தாமரைமலர்த்தாளொன்றிற்றடங்கடலுலகம்வைத்த
தேமருதுளவத்தாரோன்றீம்புனல்யாறுங்குன்றும்
காமருகழனிநாடுங்கடந்தனன்போயினானால்.

நேமியஞ்சிலம்பு - சக்ரவாளகிரி, நிழல் - ஒளி, தேமருதுளவத்தாரோன்-கண்ணபிரான், கடந்தனன் - கடந்து, தீம்புனல் - இன்சுவையுள்ளநீர். (௨௬)

அரந்தினைப்பிறந்தபொன்போலைதெழிற்றிதலைபூத்த
குரும்பைமென்கொங்கையார்தங்குழாத்தொடுமெய்தினானால்
கருங்கடலமுதினோடுகொண்டகச்செல்லுமாபோல்
இரும்புவியளந்ததாளானிந்திரப்பிரத்தமன்றோ.

அரந்தினைப்பிறந்தபொன்போல் - பொற்பொடிபோல, ஐதெழில்திதலைபூத்த-மிக்கஅழகாகிய தேமல்படர்ந்த, இரும்புவியளந்ததாளான்-கண்ணபிரான், இந்திரப்பிரத்தம்-இந்த்ரப்ரஸ்தம் (பாண்டவர்களுடையராஜதாநி). (௨௭)

நீலமாகடல்போலொற்றைநேமியானெய்தலோடும்
வாலுளைப்புரவித்தானைமறிதிரைக்கடலிற்சூழப்
பால்வளையலறவள்வார்ப்பல்லியந்துவைப்பவல்லே
கால்வளைவரிவிலைவர்களித்தனரெதிர்கொடுற்றார்.

ஒற்றைநேமியான் - ஒப்பற்ற சக்கரப்படையையுடையவனாகிய கண்ணபிரான், வால்உளை - வெள்ளியபுறமயிர், புரவித்தானை - குதிரைப்படை, பால்வளை அலற - வெண்சங்குமுழங்க, பல்லியம் துவைப்ப - பலவகைவாத்தியங்கஒளாலிக்க, கால்வளை-நுனிவளைந்த, வரிவில் - நீண்டவில். (௨௮)

தம்பியரிறைஞ்சநின்றதடஞ்சிலைவிசயன்றன்னை
அம்பகட்டாரமார்பிற்புல்லினனவற்குமூத்த
வம்புலாந்தெரியலாரை[illegible]வணங்கினன்மன்வாக்கெட்டா
நும்பர்பொன்மகுடகோடியுழுகின்றகழலம்மானே.

அம்பகட்டாரமார்பின்-அழகும்பெருமையும் பொருந்திய ஆரந்தங்கியமார்பினால், புல்லினன் - தழுவினான், வம்புஉலாம் - வாசனைதங்கிய, தெரியலார் - பூமாலையையு

டையவர், மனவாக்கெட்டாதும்பர் பொன்மகுடகோடியுழ நின்றகழலம்மான்—கண்ண பிரான். (உக)

புண்டரிகங்கள்பூத்தபுயற்பசுங்கொழுந்துபோல
வண்டுழாய்முருகுதூற்றவந்துமுன்னிற்பப்பெற்றுப்
பண்டைநான்மறையுங்காணுப்பரமனைத்தருமனுங்குக்
கண்டிலனுவகைக்கண்ணீர்கண்ணகநிறைந்துமன்றே.

புண்டரிகங்கள்பூத்த - தாமரைமலர்களைப்பூத்த, புயல் - மேகம், வண்டுழாய்—வள வியதுளவமாலை, முருகுதூற்ற - வாசனைவீச, பண்டைநான்மறையுங்காணுப்பரமன்—கண்ணபிரான். (௩0)

உண்மலிகுற்றமும்மையொருவிநெஞ்சொருப்பட்டீறில்
எண்பிரபத்திநிட்டையேயமாமுனைவர்கா[redacted]
ஒண்மணியாழிக்கையனுருப்புறங்காணலுற்றார்
கண்மழைவாரநிற்றல்கழறலாந்தகைமைத்தாமே

உள்மலி - மனத்தில் நிறைந்திருக்கிற, குற்றமும்மை - முக்குற்றஙகள், அவை—காமவெகுளிமயக்கங்கள், ஒருவி-நீங்கி, நெஞ்சுஒருப்பட்டு—மனங்குவிந்து, ஈறில்—முடிவற்ற, பிரபத்திநிட்டையேய - ப்ரபத்திநிஷ்டையையடைந்த, முனைவர் - முனிவர், ஒண்மணியாழிக்கையன் - கண்ணபிரான், உரு - வடிவு, புறங்காணலுற்றார்—வெளியாகக்கண்டவர், வார—ஒழுக, கழறல் - சொல்லுதல். (௩க)

துளிப்புயல்கீண்டமின்னிற்றோன்றெழின்மடவாருண்கண்
களிக்கயல்கடலிற்பாயுங்காட்சிபோன்மேனியெல்லாம்
திளைப்பவெண்டிரைப்பாலாழிச்சேர்ப்பனள்ளார்செஞ்சோரி
குளித்தநெட்டிலைவேலைவர்கோயில்சென்றெய்தினுல்,

புயல் - மேகம், கீண்ட - கிழித்த, மின்னின் - மின்னலைப்போல, பாலாழிச்சேர்ப்பன் - கண்ணபிரான், நள்ளார் - பகைவர், செஞ்சோரி - செவந்தவுதிரம், ஐவர்கோயில் - பஞ்சபாண்டவருடையமனையை (௩உ)

வெஞ்சரங்கடந்தநீலவிழியிணைகளிப்பநோக்கி
நெஞ்சகத்துவகைவேலைநிறைந்தெழநிலாறகுந்தி
கஞ்சநாண்மலர்த்தாண்மற்றோ[illegible]டல்படிந்திடுதலேய்ப்பக்
குஞ்சரக்கோடுகொண்டகொற்றவன்வணங்கிநின்றான்.

வெஞ்சரங்கடந்த - வெவ்வியபாணத்தைவென்ற, நீலம் - நீலமலர்போன்ற, விழியிணை - இருகண்ணும், உவகைவேலை - சந்தோஷசாகரம், ஏய்ப்ப - நிகர்க்க, குஞ்சரக்கோடுகொண்ட கொற்றவன் - கண்ணபிரான். (௩௩)

பாற்றிரைக்கங்கையல்லாற்படுபுனல்யமுனைவந்து
தோற்றுதல்கடுப்பக்கண்ணன்சூழ்கழற்காலிற்பைந்தேன்
ஊற்றிருந்தொழுகுகோதையுடுத்தமெல்லோதிதாழ
வேற்றிறலைவர்வேட்டவிளங்கிழையிறைஞ்சினுளால்.

பால்திரை - வெள்ளிய அலைகளையுடைய, கடுப்ப - நிகர்க்க, கோதை - பூமாலை, ஓதி—கூந்தல், தாழ - தொங்க, வேற்றிறலைவர் வேட்டவிளங்கிழை-துரௌபதி, இறைஞ்சினள் - வணங்கினள். (௨௪)

காதமோர்நான்குதெய்வக்கடிகமழஞ்செஞ்சாந்து
மாதிரமெட்டுமுட்டமணங்கமழ்மவருமேந்திக்
கோதைவேற்றடக்கையைவர்கோதிலாவழிபாடாற்றத்
தாதுலாங்கானமுல்லைத்தாரவன்மகிழ்வுபூத்தான்.

செஞ்சாந்து - செஞ்சந்தநம், மாதிரம் எட்டும்—திசைகளெட்டும், கோதிலா—குற்றமில்லாத, வழிபாடு ஆற்ற - வழிபாடுசெய்ய, தாதுலாங்கான முல்லைத்தாரவன் - கண்ணபிரான். (௨௫)

உயர்மரச்சோலைவெந்தீயூட்டுஞான்றோம்புமாற்றால்
மயனுவந்திழைத்தசெம்பொன்மண்டபத்தலங்கலாழிப்
புயல்கரும்புயலினன்னபூங்குழற்பவளச்செவ்வாய்க
சயன்மலைப்பன்னகண்ணார்களிகொளவைகினானால்.

தீயூட்டுஞான்று - நெருப்பூட்டுங்காலத்தில், ஓம்புமாற்றால் - காப்பாற்றினதனால், மயன் - தெய்வததச்சன், உவந்திழைத்த - மகிழ்ச்சியோடுசெய்த, அலங்கல் - பூமாலை, ஆழிப்புயல் - கண்ணபிரான், கரும்புயலன்ன - கருமேகத்தையொத்த, கயல்மலைப்பு அன்ன - இரண்டுகெயல்மீன்கள் சண்டைசெய்தாற்போன்ற, வைகினான் - தங்கினான்.

மதிசிலகழிந்தபின்னர்மதியுறழ்கவிகைமன்னன்
அதிர்கடலுலகமுண்டவஞ்சனப்புயலையெய்தி
எதிரிலாவிராசசூயமியற்றுவான்விழைகின்றேனால்
கதிர்மணிவண்ணத்தண்ணல்காத்திடவேண்டுமென்றான்.

மதிசில - சிலமாசங்கள், மதிஉறழ் - பூர்ணசந்திரனையொத்த, கவிகை - குடை, அதிர்கடலுலகமுண்ட அஞ்சனப்புயல - கண்ணபிரான், இயற்றுவான்-செய்ய, விழைகின்றேன் - விரும்புகிறேன். (௨௭)

குன்றுறழ்குவவுத்திண்டோட்கொற்றவன்மாற்றங்கேளா
மன்றலந்துளவமாலோன்மாதிரத்தரசையெல்லாம்
வென்றலாவிராசசூயமேதகப்புரியலாகா
தென்றுசெம்பவளவாய்விண்டினிதுரையியம்பினானால்.

குன்றுஉறழ் - மலையைநிகர்த்த, குவவு - திரட்சியாகிய, மாற்றம்-சொல், கேளா - கேட்டு, மாதிரத்து - திக்குகளிலுள்ள, மன்றலந்துளவமாலோன் - கண்ணபிரான், புரியலாகாது - செய்யலாகாது. (௨௮)

மலர்ப்பசுந்தெரியன்மாலைமார்வமெய்யுணரார்தம்மால்
வெலப்படாவென்னைவென்றாய்மெய்யுரைப்பதனான்மற்றைச்
சிலைத்தொழிலிளைஞராலேதிசையெலாம்வெல்கவென்றான்
கொலைத்தொழிலவுணர்க்கொன்றகூரழற்றிகிரிப்பெம்மான்.

மார்வ - மார்பனே, கொலைத்தொழிலவுணர்க்கொன்ற கூர்ழற்றிகிரிப்பெம்மான்-கண்ணபிரான். (௩௯)

பசியபைந்துளவத்தண்பூம்படலையம்பரமன்றன்னைத்
தசைசுவைத்திலங்குமொள்வேற்றருமனெஞ்சுவந்துபோற்றித்
திசையெலாம்பொருதுவெல்வான்றெம்முனைகடந்துவீங்கி
இசைசுமந்தெழுந்ததிண்டோளிளைஞரைவிடுத்தல்செய்தான்.

பசியபைந்துளவத்தண்பூம்படலையம்பரமன்-கண்ணபிரான், பொருதுவெல்வான்-போர்செய்துவெல்லும்பொருட்டு, தெம்முனைகடந்து - பகைவரைப்போரில்வென்று, இளைஞர் - தம்பிமார். (௪0)

கலிநிலைத்துறை.

மின்னுகருங்கட்சுடர்கான்றெழுவெள்ளெயிற்று
மன்னுந்தழல்வாய்க்கொடுங்கூற்றுமலங்கமற்றத்
தென்னம்புலத்திற்படர்ந்தான்செருவேட்டெழுந்து
பொன்னங்குவட்டிற்பொலிதோட்சகதேவன்மன்றே

சுடர் - ஒளி, கான்று - உமிழ்ந்து, வெள்ளெயிறு - வெண்பல், கொடுங்கூற்று-கொடியயமன், மலங்க - கலங்க, தென்னம்புலத்தில் - தென்றிசையில், படர்ந்தான்-சென்றான், செருவேட்டு - போர்செய்யவிரும்பி, பொன்னங்குவடு - பொன்மலை, (மேருமலை). (௪௧)

நெடுவானரும்புநிலவெண்பிறைக்கோடுசாய்த்த
தடவான்மருப்புத்திகழ்மால்கரித்தானைசூழக்
குடபாலெழுந்தான்குறுகாருயிர்கொன்றுருத்த
அடல்வாணகுலனமர்வெந்திறலாளியன்னான்.

நெடுவான் அரும்பு - நெடிய ஆகாயத்திற்றோன்றுகிற, நிலவெண்பிறைக்கோடு-நிலவையுடைய பிறைக்கொம்பினை, சாய்த்த - வென்ற, தடவான்மருப்பு - பெரியவெண்கொம்பு, மால் - பெரிய, கரித்தானை - யானைப்படை, குடபால் - மேற்றிசை, குறுகார் - பகைவர், உருத்த - கோவித்த, அடல் - வலி, அமர் - போர், வெந்திறல் ஆளியன்னான் - வெல்லிய வலியுள்ள சிங்கத்தையொத்தவன். (௪௨)

சுடர்சூழ்பசும்பொன்னெடுங்குன்றுதுளங்கவீங்கிப்
படுபோர்விழைந்தபசுந்தார்த்தடந்தோள்பணைப்ப
வடபாலெழுந்தானுயர்வானுறமண்டுசெந்தீக்
கடிகாவளைப்பக்கடுவெஞ்சிலைகால்வளைத்தோன்.

துளங்க - சலிக்க, வீங்கி - பருத்து, படுபோர்விழைந்த - இறந்துபடுதற்குரியபோரைவிரும்பின, செந்தீகடிகாவளைப்பக்கடுவெஞ்சிலைக்கால்வளைத்தோன் - அருச்சுனன்.

தாழ்நீர்ப்பரவைதலைப்பட்டவெண்டிங்களனைச்
சூழ்தாரலங்கற்பனிவெண்குடைதோற்றம்வாய்ப்பக்
கீழ்பாலெழுந்தான்முகைபாய்ந்துகிழித்துவண்டு
வீழ்தாதருந்தவிரைவிம்மபைந்தாமவீமன்.

தாழ்நீர்பரவை—ஆழமாகியநீரையுடையகடல், தலைப்பட்ட — தோன்றின, அலங்கல் - பூமாலை, பனி - குளிர்ச்சி, கீழ்பால் — கீழ்த்திசை, முகை - பூவரும்பு, வீழ் — சிந்துகிற, தாது - தேன், விரைவிம்மு - வாசனைமிகுந்த, பைந்தாமம் - பசியபூமாலை. ()

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

எழிலிளம்பரிதிமார்பரேந்தெழிலினோர் மற்றுங்
கழலுமிழ்ந்திலங்குவைவேலரசெலாமரினெஞ்சி
மழலைவண்டுழலும்பைந்தார்மணிமுடிவணக்கவென்று
விழுநிதிக்குப்பைவாரிமீண்டனரமிளிமொய்ம்பர

இளம்பரிதி - பாலசூரியன், அழல் உமிழ்ந்து இலங்கு — நெருப்பையுமிழ்ந்துவிளங்குகிற, வைவேல் கூர்மையாகிய வேலாயுதம், அமரில் - போரில், எஞ்சி - தோற்று, மணிமுடிவணக்க — மணிமயமானகிரீடத்தையணிந்ததலை வணங்க, வென்று—ஜெயித்து, விழுநிதிக்குப்பை - பெரும்பொருட்குவியல், மீளிமொய்ம்பர — வலியதோள்களையுடையவர். (௪௫)

செஞ்சிலைவடிப்பவீமன்கதிரோன்புயர்பசும்பொற்குன்றம
அஞ்சுறப்பணைத்ததிண்டோள்பிடர்பாசற்றறன்னை
வெஞ்சமராமுவதத்தேற்றுவெல்கலாத்தன்மைதேட்டுந
துஞ்சலின்மணிப்பூண்வேந்தன்சூழ்ச்சிமிக்கிருந்தானம்மா.

செஞ்சிலைவடிப்ப - செவ்வியவில்வடிப்பதால், பசும்பொற்குன்றம அஞ்சுற-மேருமலையஞ்சும்படி, பணைத்த - பருத்த, வெஞ்சமராமுவகத்து — வெவ்வியபோர்க்களத்தில், ஏற்று - எதிர்த்து, வெல்கலாத்தன்மை - வெல்லமாட்டாதசெய்தியை, துஞ்சலின் மணிப்பூண் வேந்தன் - தருமன், சூழ்ச்சிமிக்கிருந்தான — மிகுதியாக ஆலோசித்துக் கொண்டிருந்தான். (௪௬)

முத்தவெண்கவிகைமன்னர்முத்துடைக்கோட்டுவேழ
மத்தகம்பிளந்தகூர்வாளமன்னவன்சூழ்ச்சிநாடி
உத்தவனுரைத்ததன்மையுரைகலுற்றனனால்வெய்ய
துத்திவாளரவினூடுஞ்சூழ்கழற்காலம்மானே.

முத்தவெண்கவிகை - வெள்ளியமுத்துக்குடை, கோட்டு - கொம்பினையுடைய, வேழமத்தகம் - யானைமத்தகத்தை, சூழ்ச்சிநாடி - ஆலோசனையைப்பார்த்து, துத்திவாளரவினூடுஞ் சூழ்கழற்காலம்மான் - கண்ணபிரான். (௪௭)

அந்தணர்படிவந்தாங்கியாடமரிரந்துபெற்று
வெந்திறல்விளையும்வெம்போர்வீமனைவிளைப்பினல்லால்
மைந்துவீற்றிருந்ததிண்டோண்மகதர்கோன்கடலந்தானை
சிந்திடப்பொருதுவெல்லுந்திறத்தினர்யாவரென்றான்.

படிவம் - உருவம், வெந்திறல் - வெவ்வியவலி, மைந்து - வலி, கடலந்தானை—கடல்போலுஞ்சேனை, சிந்திட - அழிய, பொருது - போர்செய்து, வெல்லுந்திறத்தினர் - வெல்லுமாற்றலுடையார். (௪௮)

தண்டுறைக்கங்கைபூத்ததாமரைத்தாளினானும்
திண்டிறற்காற்றின்சேயுஞ்செருமலிவரிவிற்செங்கை
அண்டர்கோன்மகனுமற்றாங்கந்தணர்படிவந்தாங்கி
மண்டுபோர்முற்றலாகாமதிட்கிரிவிரசம்புக்கார்.

தண்டுறைக்கங்கைபூத்த தாமரைத்தாளினான் - கண்ணபிரான், திண்டிறற்காற்றின்சேய்—வீமன், அண்டர்கோன் - இந்திரன், செருமலிவரிவிற்செங்கை அண்டர்கோன்மகன் - அர்ச்சுநன், அந்தணர்படிவம்தாங்கி பிராமணவேடம்பூண்டு, கிரிவிரசம் – (1) ஒருபட்டணம், இதுமகததேசத்துக்கு ராஜதாநி, இதைச்சுற்றிலும் கோட்டைகட்டினாற்போல மலைகள்சூழ்ந்திருப்பதனால் இதற்கு இப்பெயருண்டாயிற்று, (2) இந்தப்பெயருள்ளபட்டணம் வேறொன்றுமுண்டு, அதுகேகயதேசத்துக்கு ராஜதாநி, இதில் முதலாவது குசனுடைய நான்காம்புதல்வனாகிய வசுவினாற்கட்டப்பட்டது, அதுதர்மாரண்யத்துக்குச் சமீபததில் மகததேசத்திலிருப்பது. (சுக)

பருந்தொடுகழுகும்வெந்தீப்பசிதணித்தொழுகுகூர்வேல்
அருந்திறன்மகதவேந்தனதிதியர்வரவுநோக்கி
இருந்துழிவிரைவினண்ணியிரந்தனர்விரைதேர்வண்டும்
சுரும்புமொய்த்தரற்றுதண்பூந்தொடையல்சூழ்குவவுத்தோளார்.

பசிதணித்து - பசியாற்றி, அதிதியர் – யாசகர், இருந்துழி - இருந்தபோது, இரந்தனர் - யாசித்தார்கள், விரை - வாசனை, அரற்று - சத்திக்கிற, தண்பூந்தொடையல்—குளிர்ந்தபூமாலை, குவவு - திரட்சி, (௬0)

இறலுறுகின்றபூதவுடம்பினாலிறத்தல்செய்யார்
உறுபுகழுடம்புகோடலுணர்ந்தவருறுதியன்றோ
புறவினுக்காகமற்றோர்பொன்னெடுந்திகிரிவேந்தன்
நிறைபுகுவண்மையின்றுநிலத்தின்மேனின்றதன்றே.

இறலுறுகின்ற - அழிகின்ற, பூதவுடம்பினால் - பௌதிகசரீரத்தால், இறத்தல்செய்யார் – இறவார், புகழுடம்புகோடல் - புகழுடம்புபடைத்தல், உணர்ந்தவர்—விவேகிகள், திகிரி - சக்கரம், நிறை-துலாகோல, (தராசு) வண்மை—கொடையின்பெருமை.

முன்பொருகாலமூரன்முகிழ்த்தவாண்முகத்தனாகி
என்புமற்றொருவற்கீந்தானில்லைகொல்யாங்கள்கேட்ட
தன்பினிலருளவேண்டுமொடமர்கடந்துவெம்பி
மின்பொழிகுடுமியொள்வேல்வேந்தவென்றியம்பினரால்.

மூரல்முகிழ்த்தவாண்முகத்தனாகி - புன்சிரிப்போடுகூடின வொளியுள்ள முகத்தையுடையவனாய், என்பு—உடம்பு, மின்பொழிகுடுமி—ஒளியையுமிழ்கின்றநுனி, ()

சொல்லினுஞ்சொல்லலாகாச்சுடர்விடுதோற்றத்தானும்
நல்லெழிற்றடக்கைவல்வினாண்பொருதழும்பினானும்
மெல்லிணர்விரியன்மாலைவேந்தரென்றறிந்தான்வீங்கு
மல்லனீர்மகதங்காக்குமாலைவெண்குடையான்மன்னோ.

சுடர்விடுதோற்றம் - ஒளிவிடுகின்றகாட்சி, நல்லெழில்தடக்கைவல்வில்நாண்பொருதழும்பு - நல்லழகுவாய்ந்த மலைபோலும் புயத்திலுள்ளவலியவில்லினது நாண்பட்ட

வடு, மெல்லிணர் விரியல்மாலை - மெல்லியபூங்கொத்துக்கள்விரிந்தபூமாலை, மகதங்கா க்குமாலை வெண்குடையான் - ஜராசந்தன் (௫௩)

மூவடிமண்வந்தேற்றோன்முதல்வனென்றறிந்துமீந்த
மாவலிசீர்த்தியின்னமன்னுபுநிலவுமம்மா
யாவரேயானுமாகவீகுதுமிரந்ததென்னுக்
கோவடுகுருதிவைவேற்கொற்றவன்கருத்துக்கொண்டான்.

மூவடிமண்வந்தேற்றோன் - வாமநன், முதல்வன் - முதற்கடவுள், மன்னுபு - மன்னி, (நிலைபெறறு) நிலவும் - விளங்கும், இரந்தது - யாசித்தபொருள், ஈகுதும் - கொடுப்போம், கோவடு குருதிவைவேற்கொற்றவன் - ஜராசந்தன். (௫௪)

பாட்டளிப்படலமூசிப்பருமுகையுழுதுபைந்தேன்
கூட்டுணுமுளரியந்தணகோதையீர்நீவிரின்று
வேட்டதுதருவலென்றான்விரியிருட்பிழம்புசிக்கும்
சேட்டிளம்பரிதிபோலதிகழ்கடிமார்வனுங்கே

அளிப்படலம் - வண்டுக்கூட்டம், மூசி - மொய்த்து, பருமுகைஉழுது - பேரரு ம்புகளைக்கிண்டி, கூட்டுணும் - கொள்ளைகொண்டுண்ணுகிற, முளரியந்தண்கோதை யீர்—அழகும் குளிர்ச்சியுமுள்ள தாமரை மலர்மாலையையணிந்த அந்தணரே, வேட்டது- விரும்பினது, தருவல் - கொடுப்பேன், இருட்பிழம்பு - இருட்கூட்டம், சிக்கும்—அழி க்கின்ற, சேட்டிளம்பரிதி - பெருமையும் இளமையுமுள்ள சூரியன், கடிமார்வன்— விளக்கமாகிய மார்பையுடையவன் - (ஜராசந்தன்). (௫௫)

விரிகடற்றானைமன்னவேட்டதுதருதியாயின்
ஒருவனொடொருவனாகியுடற்றுபோர்தருதிமற்றுச்
செருவிழைந்திறுதநோமென்றுந்தெரிக்கலுற்றனனற்செம்பொன்
தருமுதல்பிடுங்கிவந்தடக்கைமாகளிறன்னோனே

தானை - சேனை, வேட்டது விரும்பினது, உடற்று - செய்கிற, போர்தருதி-போ ர்செய், செருவிழைந்து - போரைவிரும்பி, இறுதம்நாம் - இருக்கிறோம், செம்பொன் தருமுதல்பிடுங்கிவந்த தடக்கைமாகளிறன்னோன் - கண்ணபிரான். (௫௬)

மலர்ந்தபூங்கோதைமாதர்வாளரியொழுகுகண்போல்
உலம்பொருதிணிதோண்மன்னருரங்கிழித்துதிரமூழ்கி
அலங்குநெட்டிலைவேல்வீமனவனிவன்பார்த்தனம்பொன்
இலங்குபூண்மார்வகண்ணனியாமெனக்கூறினனால்.

வார்அரி - ஒளியுள்ளரேகைகள், உரம் - மார்பு, உவம் - திரள்கல், அம்பொன் இலங்குபூண்மார்வ - அழகியபொன்னினாற்செய்யப்பட்டு விளங்குகிற ஆபரணமணி ந்தமார்பையுடைய சராசந்தனே. (௫௭)

கேட்டலுமுறுவல்கோட்டிக்கிளர்ந்தெழுபெரும்போரஞ்சி
ஆட்டுவண்டரங்கவேலையகத்தடைந்தனைநீயந்தண்
எட்டிணரலங்கற்பார்த்தனிளையனலெதிர்ந்துவெம்போர்
வாட்டிறல்வீமனாற்றவல்லனென்றியம்பினானே.

முறுவல்கோட்டி-சிரித்து, ஆட்டு-(காற்றினால்) அசைக்கப்படுகிற, தரங்கவேலை-அலைகளையுடையகடல், வாட்டிறல்வீமன் - வாள்வலியுடையவீமன், ஆற்றவல்லன்-செய்யவல்லவன். (௫அ)

எழுகபோர்க்கின்னேயென்றுவெரியுமிழ்ந்திலங்குமொள்வாள்
உழவனோர்வயிரத்தண்டமுளர்வளிமகற்குநல்கிக்
கழுகுசூழ்கதையொன்றேந்திக்கடைகாலவெந்தீப்
பொழிதரமல்லன்மூதூர்ப்புறத்தமர்க்கெழுந்துபோயான்.

இன்னே - இப்பொழுதே, உளர் - சஞ்சரிக்கிற, வளிமகற்கு - வாயுபுத்திரனாகிய வீமனுக்கு, கதை - தண்டாயுதம், காலவெந்தீ - ஊழித்தீ, மல்லல் - வளம், அமர்க்கு-சண்டைக்கு. (௫௯)

வெளிற்றிலம்பனையினன்னவிறல்கெழுதடக்கைவெங்கட்
களிற்றொடுகளிறுசீறிக்கதிர்மணிமருப்புநெற்றி
குளித்திடப்பொருதல்போலக்கொலைகெழுகதையிற்றாக்கி
அளிக்குலமரற்றுந்தாரார்சமமாற்றலுற்றார்

வெளிற்றுஇல் - வெளிறுதலில்லாத, அம்பனையினன்ன-அழகியபனைமரம்போன்ற, வெங்கண் - கோபக்கண்கள், (கறுகண்மை) சீறி - கோவித்து, மருப்பு - கொம்பு, குளித்திட - அழுந்த, பொருதல் - சண்டைசெய்தல், கொலைகெழு - கொலைத்தொழிலமைந்த, கதையின் - கதையால், அளிக்குலம் - வண்டுக்கூட்டம், அரற்று-சத்திக்கிற, தாரார் - மாலையணிந்தவர், சமம் - போர். (௬0)

ஊழிவாயுருமேறென்னவுடல்சினங்கதுவத்தாக்கும்
பாழிசால்வயிரத்தண்டம்பஃறுணிபடுதலானே
ஆழியங்கதிர்சூழ்வந்தவாடகப்பசும்பொற்குன்றந்
தோழமைகொண்டதோளார்தொடங்கினர்நெருங்குமற்போர்.

ஊழிவாய் - ஊழிக்காலத்தில், உருமேறு அன்ன — இடியேற்றைநிகர்த்த, உடல்-போர்செய்தற்குரிய, சினம்பற்ற - கோவமுள்ள, பாழிசால் - பெருமைமிகுந்த, வயிரக்கதை-வஜ்ரதண்டம், பஃறுணிபடுதலால் - பலதுண்டங்களானதனாலே, ஆழியங்கதிர்-சூரியன், சூழ்வந்த-வலம்வந்த, ஆடகப்பசும்பொற்குன்றம்-பொன்மலை, தோழமை-நட்பு.

கண்ணழல்பொழியவூழிக்காற்றெனக்கடைஞான்றியாவும்
உண்ணியவெழுந்தபேழ்வாயுருகெழுகூற்றமென்ன
மண்ணகமதிரநின்றமால்வரைதுளங்கமற்றை
விண்ணகம்பனிப்பவார்த்துவெஞ்சமம்விளைத்திட்டாரே.

கடைஞான்று - கடைநாளில், உண்ணிய - உண்ண, பேழ்வாய் - பெரியவாய், கூற்றம் - யமன், மால்வரை - பெரியமலைகள், துளங்க - அசைய, விண்ணகம் - மேலுலகம், பனிப்ப - நடுங்க, ஆர்த்து - ஆரவாரித்து, வெஞ்சமம் - கொடியபோர். (௬௨)

எறுழ்வலிநிகர்த்தவாற்றலிகற்சராசந்தன்றன்னை
விறல்கெழுதடக்கைவீமன்வெல்லுமாவிழைந்துநோக்கப்
பிறைபுரைகதிர்வெண்கோடுபிடுங்கியகருங்கார்வண்ணன்
குழுமுறிவிரிபைங்கோடுகொண்டனன்கீண்டானங்கண்.

ஏறழ்வலி - மிக்கவலி, நிகர்த்தவாற்றல் - சமமானதனல், விறல்கெழு - வெற்றி பொருந்திய, வெல்லுமாவிழைந்து - வெல்லும்வழியைவிரும்பி, பிறைபுரை - பிறையைநிகர்த்த, கருங்கார்வண்ணன் - கண்ணபிரான், குழமுறி - சிறுதளிர், பைங்கோடு - பசியகொம்பு. (ருந)

விண்ணென்றுவிலங்கலன்னவீங்கெழிற்றோளாகொன்று
கண்ணென்றுபுருவமொன்றுகருஙகழற்காலொன்றாக
மண்ணென்றுமணிப்பூண்மார்வமகதனைப்பிளந்துமாய்த்தான்
பண்ணென்றுபாடல்வண்டுபயின்றதார்ப்பவனன்றோன்றல்.

விலங்கலன்ன - மலையைநிகர்த்த, மண்ஒன்று - அலங்காரமமைந்த, பவனன்தோன்றல் - வாயுபுத்திரனுகியவீமன் (ருச)

வேறு.

மதமால்கரியின்மருப்பொசித்தமாயனருளால்வலிதழைத்துக்
கதழ்வெஞ்சினவாளரிகீடுக்குங்காற்றின்மதலைபணைக்கரதலால்
பதினாயிரவெங்களிற்றுவலிபடைத்தோனுடலம்பகிர்ந்திடலும்
அதிராச்சிறப்பின்வேள்வியோரைம்பொற்றணர்தூஉய்ப்பராவினரால்.

ஒசித்த - ஒடித்த, வலிதழைத்து - வலிமிகுந்து, அரிகடுக்கும் - சிங்கத்தையொத்த, காற்றின்மதலை - வீமன், பதினாயிரவெங்களிற்றுவலிபடைத்தோன்—சராசந்தன்.

வரையிற்பணைத்ததிணிதடந்தோண்மகதனிடுவெஞ்சிறைக்கிடந்த
பரிதிவடிவாளரசரிருபதினாயிர தெண்ணூற்றவரை
அருளின்விடுத்தான்முருகொழுகுமந்தண்மலர்க்கோட்டைந்தருவும்
குருதிகுமிழியெழவேழக்கோடும்பிடுங்குநெடியோனே

• வரையின்பணைத்த - மலைபோலப்பருத்த, பரிதி - ஒளி, அருளின் - அருளினல், விடுத்தான்—சிறைவிடுத்தான், முருகொழுகுமந்தண் மலர்க்கோட்டைந்தருவும் குருதிகுமிழியெழவேழக்கோடும்பிடுங்கு நெடியோன் - கண்ணபிரான். (ருரு)

வாடுமலங்கற்றோளரசர்வந்துதொழுதுதமதுமுடி
சூடுதுளவங்கருங்கொண்மூத்துணைத்தாட்கமலமலர்புசத
ஆடுதிரைமந்தாகினியினந்தீந்துவலைமுகந்தெறிப்ப
நீடுபொலிவுதழைத்துவகைநெஞ்சந்தளிர்ப்பப்பரவினரால்

அலங்கல் - பூமாலை, துளவக்கருங்கொண்மூ - கண்ணபிரான், துணை - இரண்டு, மந்தாகினி - கங்கை, தீந்துவலை - இனியதுளிகள், உவகை - சந்தோஷம். (ருஎ)

விடையுங்களிறும்பொருவுநடைவெள்வேலரசர்மாசறுதூ
சுடையும்பசுந்தேனுமிழ்தொடையுமொளிர்பொன்முடியுமுருவமதிக்
குடையுங்கொடியுமுடையோராய்க்கொற்றவளையுமடலாழிப்
படையுந்திகழுங்கரத்தானைப்பரவித்தத்தம்பதியடைந்தார்.

விடையும்களிறும்பொருவும் - இடபத்தையும் யானையையும் நிகர்த்த, மாசறு—குற்றமற்ற, மதிக்குடை - சந்திரவட்டக்குடை, கொற்றவளையும் அடலாழிப்படையுந் திகழுங்கரத்தானை - கண்ணபிரானை, பரவி - துதித்து. (ருஅ)

ஆண்டகடற்பாரசாட்சியடையக்கடைக்கணருள்பொழிந்து
மாண்டபெரும்போர்ச்சராசந்தன்மைந்தற்கலங்சன்முடிசுவித்தான்
நீண்டகனகவரைபொருதநெடும்பொற்றடந்தோட்கனகனுரம்
கீண்டுபொருதகரும்புள்வாய்க்கிழித்ததளிர்க்கைசிவந்தோனே.

முடிகவித்தான் - முடிபுனைந்தான், கனகவரைபொருத—பொன்மலையைநிகர்த்த, கனகன் - இரணியகசிபன், உரம் - மார்பு, புள் - பகாசுரன் (சுகூ)

உலருந்தருவுங்குழைப்பவமுதுகவேயிசைத்தவொருவனொடு
மலரும்பொழிநீமடுத்தோனுமற்பூகதுயர்தோண்மாருதியும்
கலிணப்பரித்தேர்கடிதோட்டிக்கலிக்குங்கடல்போல்வெற்றிவளை
அலறநகர்சார்ந்தறத்தின்மகற்சறைந்தார்விளைந்ததிறமன்றே.

குழைப்ப - தளிர்க்க, வேயிசைத்த - வேய்ங்குழலூதின, ஒருவனொடு - கண்ணபிரானொடு, மலரும்பொழிநீமடுத்தோன் - அருச்சுனன், மற்பூகதுயர்தோண்மாருதி—வீமன், அறத்தின்மைந்தற்கு - தருமபுத்திரனுக்கு, விளைந்ததிறம் - நடந்தசெய்தி. ()

பொடிக்குங்குழவிஞாயிறெனப்பொலிவுற்றுந்திக்தடத்துமுகை
வெடிக்குங்கமலமலர்ப்பொருட்டுவிரிஞ்சனொடு மண்படைத்தளித்து •
முடிக்குமுதல்வன்முன்னின்றான் படியாப்பொருளாமறையென்று
வடிக்குங்குடுமிக்கூரிலைவேன்மன்னனையாமகிழ்வுற்றான்

பொடிக்கும் - உதிக்கிற, குழவிஞாயிறென - பாலசூரியன்போல, விரிஞ்சன்—பிரமன், உந்தித்தடத்துமுகைவெடிக்குங் கமலமலர்ப்பொருட்டு விரிஞ்சனொடுமண்படைத்தளித்து முடிக்குமுதல்வன் - கண்ணபிரான், வடிக்குங்குடுமிக்கூரிலைவேல்மன்னன் - தருமபுத்திரன். (எக)

வேறு

இழைக்குவனிராசசூயமெய்திடவேண்டுமென்று
அழைத்தனன்முனிவர்தம்மையகனிலத்தரசர்க்கெல்லாம்
விழுப்பொறிமுடங்கலாங்குவிடுத்தனன்வண்டுகோடி
உழக்கிழிந்தலரும்பைந்தாரொருதனிக்கவிகைவேந்தன்

இராஜசூயம் - இராஜசூயயாகம், இழைக்குவன் - செய்வேன், எய்திடவேண்டும் என்று - வரவேண்டுமென்று, அகனிலம் - இடமகன்றபூலோகம், விழுப்பொறிமுடங்கல் - மேலானமுத்திரையோலைசசுருள், வண்டுகோடியுழக்கிழிந்தலரும் பைந்தாரொருதனிக்கவிகைவேந்தன் - தருமபுத்திரன் (எஉ)

செங்கதிர்க்குழவிமானததிருமணிக்குழைவில்வீசக்
கொங்குடைந்தொழுகுதண்ணங்கோதைதாழ்மகுடமின்னப்
பொங்குளைப்பரிமாபூண்டபொன்னெடுங்கொடிஞ்சித்தேர்மேல்
அங்கண்மாஞாலவட்டத்தரசெலாமிறுத்தவன்றே

கொங்கு—தேன், தண்ணங்கோதை—குளிர்ந்தழகாகியபூமாலை, செங்கதிர்க்குழவி—இளஞ்சூரியன், மான—நிகர்க்க, வில்-ஒளி, தாழ்-தொங்குகிற, ஞாலவட்டம்-பூமண்டலம்.

நுதியழல்வடிவேன்மைந்தர்நூற்றுவர்தம்மோடொற்றைக்
கதிர்மதிக்கவிகைநீழற்கண்ணிலாவரசன்வந்தான்

விதுரன்வந்திறுத்தான்வெற்றிவீடுமன்மேயான்மற்றை
அதிர்கடல்வரைப்பின்மன்னரார்கொலாங்கடைந்திலாதார்.

நுதி - நுனி, ஒற்றைக்கதிர்மதிக்கவிகைகீழ்ற் கண்ணிலாவரசன் - திருதராஷ்டிரன், வீடுமன்மேயான் - பீஷ்மன்வந்தான், அதிர்கடல்வரைப்பின்மன்னர் - ஒலிக்கிற கடல்சூழ்ந்த நிலவுலகத்தரசர். (எச)

மாலைவாய்விளங்குதிங்கண்மாலைவெண்குடையான் வேள்விச்
சாலைவாய்வந்துமொய்த்தார்சதுமறைக்கிழவரெல்லாம்
வேலைவாயமுதமாந்திவிரைகமழ்பாரிசாதச்
சோலைவாயுறையுந்தேவர்தொக்கனர்விசும்பின்மாதோ.

மாலைவாய் - மாலைக்காலத்தில், மாலைவெண்குடையான் - தருமநந்தனன், வேள்விச்சாலைவாய் - யாகசாலையில், சதுமறைக்கிழவரெல்லாம் - வேதியரெல்லாம், வேலைவாய் - பாற்கடலிற்றோன்றின, அமுதம் - அமிர்தம், மாந்தி - பருகி, விரைகமழ் - மணங்கமழ்கின்ற (எரு)

மலர்தலையுலகமேழின்மாண்டகுபொருள்களெல்லாம்
கலனவாம்புரவித்திண்டேர்க்கடுந்திறனருவனுய்த்தான்
அலைவிளைபமிழ்தமென்னவஞ்சுவைபடிசிற்சாலைத்
தலைமையெய்தினனுற்காற்றுத்தருமமழைத்தடக்கையானே.

மலர்தலை - பரந்தஇடம், மாண்டகு - மேன்மைபொருந்திய, உய்த்தான் - கொணர்ந்தான், அலைவிளை - பாற்கடலிலுண்டான, அடிசிற்சாலை - அன்னச்சாலை, தலைமை - முதன்மை, காற்றுதரும் - வாயுவினுற்பெறப்பட்ட, மழைத்தடக்கையான் - வீமன் (எசு)

விரிகதிர்முத்தமன்றிவிளங்கொளிநழைத்தநீலம்
சொரிவதுகடுப்பவண்டுசூழ்தருமுளரிப்பைந்தார்
அருமறைக்கிழவர்தம்மையருச்சனைபுரிதல்செய்தான்
செருவிழைபரிதிவைவேற்றிறற்சகாதேவன்மன்னே.

முத்தம்—முத்து, நீலம்—நீலமணி, சொரிவதுகடுப்ப—பொழிவதுநிகர்க்க, முளரிப் பைந்தார் அருமறைக்கிழவர்—வேதியர், செருவிழை—சண்டையைவிரும்புகிற, பரிதி வைவேல்—ஒளியுங்கூர்மையுமுள்ளவேல் (எஎ)

விண்ணெடுமுகடுகீண்டவிரைமலர்க்கமலபாதம்
அண்ணலங்கமலவீட்டிலந்தணன்விளக்கநின்ற
கண்ணன்மாமறைநூல்கற்றகாட்சிசாலந்தணாளர்
தண்ணறுமுளரியன்னதாண்மலர்விளக்கினுனல்.

விரை—வாசனை, அண்ணலங்கமலவீட்டிலந்தணன்-பிரமன், விளக்க—கழுவ, காக்ஷிசால்—அறிவுமிகுந்த, முளரியன்ன - தாமரைமலர்போன்ற, விளக்கினன்-கழுவினன்

அதிர்கடன்ஞாலவட்டத்தரசெலாங்கொணர்ந்துகற்றைக்
கதிர்மணித்திரளும்பொன்னுங்காண்டகக்குவித்தல்செய்யும்

நிதியறைக்கிறைமைபூண்டாழனின்மணிச்சுடிகைநெற்றிக்
கொதியழனச்சுநாகக்கொடிவலனுயர்த்தகோவே.

அதிர் - ஒலிக்கின்ற, ஞாலவட்டம் - பூமண்டலம், குவித்தல்செய்யும்—குவிக்கிற, நிதியறை—களஞ்சியம், நிழன்மணிச்சுடிகைநெற்றிக்கொதியழனச்சு நாகக்கொடிவலனுயர்த்தகோ—துரியோதநன். (எக)

பழுக்கும்வெங்கொலைவேற்றெவ்வர்பகட்டெழின்மார்வம்போழ்ந்து
விழுகொடுநிணம்வாய்ப்பில்கிமின்னெனப்பிறழும்வெள்வேல்
முழுக்கரும்புயறேய்செங்கைமுருகவிழ்பசுந்தார்க்கன்னன்
வழக்கமேற்கொண்டுநின்றான்வான்பொருண்முகந்துமன்றே

தெவ்வர்—பகைவர், பகடு—பெருமை, விழு – மேன்மை, பிறழும் – பிரகாசிக்கிற, முழுக்கரும்புயல்-மிகக்கருமையாகிய மேகத்தின்றன்மை (கொண்ட), முருகு—தேன், வழக்கம் - பொருள்வழங்குதல், வான்பொருள்—பெரும்பொருள். (அ0)

காசிபன்பரத்துவாசன்கண்ணுவன்மயித்திரேயன்
கோசிகன்பரசுராமன்கோதமன்வாமதேவன்
மாசறுவியாதனாதிமாதவக்கிழவரோடு
பூசல்வண்டாரற்றுதாரான்புரிந்தனனிராசசூயம்.

மாசறு - குற்றமற்ற, வியாதனாதிமாதவக்கிழவர்—வேதவியாசன் முதலாகிய பெருந்தவத்தினர், பூசல்வண்டு அரற்றுதாரான் - தருமபுத்திரன். (அக)

நெருப்புறழ்தோற்றஞ்சான்றநெடுந்தவக்கிழவர்தொன்னூற்
பரப்பெலாந்தெளியக்கற்றபழமறையந்தணாளர்
திருத்தகுகொற்றவேந்தர்திரண்டபேரவையின்முன்னம்
அருச்சனைபுரிதல்யார்க்கென்றரசுளத்தெண்ணினனால்.

நெருப்புஉறழ்—நெருப்பையொத்த, தோற்றஞ்சான்ற—காட்சிமிகுந்த, நெடுந்தவக்கிழவர்—பெருந்தவத்தினர், தொன்னூல்பரப்பு—பழையநூற்பரப்பு, (பரப்பு – விஸ்தீர்ணம்), கொற்றம்—வெற்றி, திருத்தகு – அழகுபொருந்திய, பேரவை – பெருஞ்சபை, அரசு—தருமநந்தனன். (அஉ)

மற்பழுத்தேந்துதிண்டோண்மன்னவன்குறிப்புநாடி
முற்படப்பூசையாற்றன்முருகுலாம்பசும்பொற்கோட்டுக்
கற்பகங்கொணர்ந்துவந்தகண்ணனுக்கன்றேயென்னுச்
சொற்புகன்றுரைப்பான்முற்றுந்துணிசகாதேவனங்கே.

மற்பழுத்து—மற்றொழிலில்மிகுந்து, திண்டோள்மன்னவன் – தருமபுத்திரன், குறிப்பு—எண்ணம், நாடி—நோக்கி, (அறிந்து) முருகு – வாசனை, உலாம் – வீசுகிற, பசும்பொற்கோடு—பசும்பொற்கிளைகளையுடைய, கற்பகம்—கற்பகமரம், என்னு - என்று. ()

பூப்பவன்றானும்பூவாப்பொழிலெலாம்பூத்துநின்று
காப்பவன்றானுமூழிக்கடையினிற்கனலுந்தீயால்
தீப்பவன்றானுமாயர்தேமொழிமாதர்செங்கை
கூப்பிடத்தூசுவாரிக்குளிர்மரத்திவர்ந்தகோவே.

பூப்பவன்றானும்—படைப்பவனும், பூவா—படைத்து, பொழிலெலாம்—உலகமெங்கும், பூத்துநின்று - வியாபித்துநின்று, தீப்பவன்றானும் - சுட்டெரிப்பவனும், ஆயர். தேமொழிமாதர் செங்கைகூப்பிடத் தூசுவாரிக்குளிர்மரத்திவர்ந்தகோ-கண்ணபிரான்.

உலகெலாங்கண்ணனன்றியொன்றிலையுணருங்காலைக்
கலவமாமயிலெருத்திற்கவின்கனிந்தொழுகுமேனி
மலர்துழாயலங்கன்மாலைமாயனுக்காற்றுபூசை
அலர்தலையுலகுக்கெல்லாமாற்றியபூசையாமால்.

கலவம்—கலாபம், (தோகை) எருத்தின் - பிடர்போல, கவின் - அழகு, கனிந்து—முதிர்ந்து, ஒழுகும்—ஒழுகாநின்ற, மேனி—திருமேனி, மாயனுக்கு—கண்ணபிரானுக்கு, ஆற்று - செய்கிற, அலர்தலை - பரந்தஇடம் (அஇ)

என்னவுமுவகைமீதூர்ந்தின்னெழிற்பவளச்செங்கால்
அன்னமுமயிலுமன்னவாய்வளைதுணைவியோடு
மன்னவனெழுந்துசெய்யாள்வரிமுலைகிழித்தபைந்தார்க்
கன்னியந்துளவினானைக்கைதொழூஉப்பழிச்சல்செய்தான்.

உவகை - மகிழ்ச்சி, மீதூர்ந்து - மிகுந்து, மன்னவன் - தருமன், வரி - சந்தனக்கோலம், பைந்தார்க்கன்னியந்துளவினானை—கண்ணபிரானை, கைதொழூஉ—கைகூப்பி வணங்கி, பழிச்சல்செய்தான். - தோத்திரமபண்ணினான். (அகூ)

எழுந்திறுமாந்துவிம்மியிணைமணிக்குடத்தின்வீங்கிக்
குழைந்தநுண்மருங்குறைக்குங்குவிமுலைத்தலைவிநின்று
பொழிந்தபொற்கலசநீராற்பொழிமதுக்கமழுந்தெய்வச்
செழுந்துழாய்க்கொண்டல்செம்பொற்சேவடிகழீஇயினானே.

இறுமாந்து - நிமிர்ந்து, மணிக்குடத்தின் - ரதநகும்பம்போல, பொற்கலசம்—பொற்குடம், செழுந்துழாய்க்கொண்டல் - கண்ணபிரான், கழீஇயினான்—கழுவினான்

நாமவேற்றடக்கைவேந்தனல்வினைப்பயனென்சொல்கேன்
மாமறைமுடிவினின்றவலம்புரிததடக்கைமாயன்
காமருகடவுட்கங்கைக்கடும்புனல்பூத்தபொற்றாட்
டாமரைவிளக்குநீர்சம்புவிற்றாங்கினானால்.

நாமவேற்றடக்கைவேந்தன் - தருமநந்தனன், நல்வினைப்பயன்—புண்ணியம், வலம்புரி - பாஞ்சஜந்யம், காமர் - அழகு, கடவுள் - தெய்வத்தன்மை, பூத்த - தந்த, சம்புவின் - சிவபிரான்போல. (அஅ)

கருங்கடல்சிவப்பத்தோன்றுங்கதிர்மணிகிடந்தமார்பின்
திருந்தொளியாரம்பூட்டித்தேங்கமழ்கலவைபூசிச்
சுரும்புசூழ்தொடையல்சூட்டிச்சுடர்ந்தபொன்றுடைசாத்தி
அருந்தவம்பழுத்தவேந்தனண்ணலைவழிபட்டானே.

கதிர்மணி - கௌஸ்துபமணி, கலவை - கலவைச்சந்தநம், தேங்கமழ் - வாசனைவீசுகிற, சுரும்பு—வண்டு, தொடையல் - பூமாலை, அண்ணல் - கண்ணபிரான், அருந்தவம் பழுத்தவேந்தன் - தருமபுத்திரன். (அகூ

நெறித்தபூங்குவளைமேனிநெடியவன்றனக்குப்பூசை
முறைபடப்புரிதனோக்கிமுனிவருமுவகைபூத்தார்
அறத்துறையொழுகுசெங்கோலரசருமகிழ்ச்சிகூர்ந்தார்
திறற்சிசுபாலனோனான்சிவந்தனன்பெரிதுஞ்செங்கண்.

நெறித்தபூங்குவளைமேனிநெடியவன் - கண்ணபிரான், உவகைபூத்தார் - சந்தோஷித்தார்கள், அறத்துறை - தருமமார்க்கம், ஒழுகு - நடக்கிற, திறல்–வலி, நோனான்–பொறாக்காதவனாகி. (௯௦)

நெடுமறைக்கிழவர்வைகநீணிலவலயங்காக்கும்
முடிகெழுவேந்தர்வைகமுற்படவழிபாடாற்றல்
படுநிரைபுரப்பாற்கேகொல்பார்த்திவன்செயனன்றென்று
விடுசுடுமுறுவலூறவெகுண்டனனெழுந்துநின்றான்.

நிரைபுரப்பான் - பசுக்கூட்டத்தைக்காப்பவன், (கண்ணபிரான்) நெடுமறைக்கிழவர்-வேதியர், நீணிலவலயங்காக்குமுடிகெழுவேந்தர் - அரசர், வைக-இருக்க, பார்த்திவன்–தருமபுத்திரன், சுடுமுறுவல் - கோவச்சிரிப்பு (௯௧)

இலைப்பசுந்தெரியன்மாலையிளையவனிசைத்தகூற்றால்
நலத்தகுமுதுநூற்கேள்விநல்லறக்கிழவனெஞ்சம்
கலக்கமுற்றனன்கொலம்மகாலமார்கடப்பரென்னாச்
சிலைத்தழும்பணிதிண்டோளான்றீயனகிளக்கலுற்றான்.

இலைப்பசுந்தெரியல்மாலையிளையவன் - சகாதேவன், இசைத்தகூற்றால்–சொன்ன சொல்லால், நலத்தகுமுதுநூற்கேள்விநல்லறக்கிழவன் - தருமபுத்திரன். (௯௨)

நாட்டவோர்குலனுமின்றிநண்ணியகுணமுமின்றி
வேட்டவாறொழுகுகின்றான்வெள்ளைமுள்ளெயிற்றுப்பேழ்வாய்ச்
சூட்டராவரசுதாங்குதொன்னிலத்துயர்ந்தானென்று
கேட்டவாநன்றுமெய்ந்நூற்கேள்வியிற்சிறந்ததன்றே.

குலன் - குலம், வேட்டவாறு - இச்சைவழியே, வெள்ளைமுள்ளெயிற்றுப்பேழ்வாய்ச்சூட்டராவரசு - ஆதிசேடன், கேட்டவாநன்று - கேட்டவிதம் நன்றாயிருக்கின்றது.

நன்றுதீதென்றுநாடானிலத்துறைவான்யாங்கும்
பொன்றலில்வேதமின்னும்புரிந்தொருங்குணர்கில்லான்
குன்றுகானுறைவார்வேட்குநகுணன்பசுப்புரப்போன்பித்தர்
மன்றநன்கன்னமேற்போர்வழுத்திறையிவன்வேறுண்டோ.

பொன்றலில் - அழிவில்லாத, யாங்கும்–எங்கும், புரிந்து-விரும்பி, ஒருங்கு–முழுதும், குன்றுகான், உறைவார்-மலையிலுங் காட்டிலும்வாழ்பவர், புரப்போன்-காப்பவன்.

நக்கவெண்முல்லைசூடிநரந்தமுமகிழுநாறு
மைக்குழலாயர்மாதர்வரிமுலைதழுவுதூர்த்தன்
முக்குறும்பெறிந்தமூவாமுழுத்தவமுனிவர்தம்மின்
மிக்கவனாகவந்துவிளைந்ததுவிழுமிதாமால்.

பாழிசால்கரும்பனைபுரைபாழியந்தடக்கைக்குழி யானையின்சுடர்மணி நெடுமருப் பொசித்தோன் - கண்ணபிரான், (குழி - முகபடாம்) ஒளிறு - விளங்குகிற, ஆழியால்- சக்ராயுதத்தால். (௬0௦)

சமரெதிர்ந்தவேற்றரியலர்கதிரெழச்சாய்ந்த
திமிரமாமெனத்திசைத்திசையிரிந்தனராகக்
கமழலந்துணர்க்கற்பகநறுமலர்தூவி
அமரரார்த்தனரந்தரதுந்துபியதிர்ந்த

சமர்—போர், தரியலர் - பகைவர், கதிரெழ - சூரியனுதிக்க, சாய்ந்த - அழிந்த, திமிரம் - இருள், இரிந்தனர் - ஒடினார், அமரர் - தேவர், ஆர்த்தனர்-ஆரவாரித்தார்கள்.

உருள்பொலங்கொடிந்தேர்ச்சிசுபாலனதுடலின்
திருள்பிளந்தெழுமெரிகதிர்ப்பரிதிபோற்சோதிந்
திரளெழுந்ததுதிரண்டபேரவையெலாங்காண
அருள்பொழிந்துலகளிப்பவன்றளடைந்ததுவே.

பொலங்கொடி - பொற்கொடி, பரிதி - சூரியன், சோதித்திரள் - ஒளிப்பிழம்பு, பேரவை - பெருஞ்சபை, அருள்பொழிந்துலகளிப்பவன் - கண்ணபிரான், (௬0௨)

மறத்தினுற்றிருமறுப்பொலிமார்பினுன்றன்னைப்
பிறப்புமும்மையினினைத்தலாற்பிறங்கழல்வாய்கான்
றெறித்தசெஞ்சுடராழியாலிறந்தவவ்வேந்தல்
நெறித்தபூந்தொடைநேமியஞ்செல்வனைநேர்ந்தான்.

திருமறுப்பொலிமார்பினுன் - கண்ணபிரான், (மறு - மச்சம், இதனை ஸ்ரீவத்ஸம் என்பர்வடநூலார்) பிறப்பு மும்மையில் - மூன்றுபிறப்பில், அவ்வேந்தல்-அந்தஅரசன், (சிசுபாலன்), நேமியஞ்செல்வன் - கண்ணபிரான், (௬0௩)

எத்திறத்தினுமிலங்கொளிவிரிமணிச்சூட்டுத்
துத்திநாகணைத்துயில்பராற்பரனையுண்ணினைப்போர்
முத்தராகுவர்முத்துடைமூரிவெண்கோட்டு
மத்தமால்களிற்றரசவென்றருந்தவன்வழங்கும்.

இலங்கொளிவிரிமணிச் சூட்டுத்துத்திநாகணைத்துயில்பராற்பரன்-கண்ணபிரான், (சூட்டு-உச்சிக்கொண்டை, துத்தி - படப்புள்ளி,) மூரி - வலி, அருந்தவன் - சுகமுனி.

எழுபுலப்பகையெறிந்தமாதவரும்வேதியரும்
மழைமதக்களிற்றரசருமனமகிழ்சிறப்பச்
செழுநிலக்கணண்டிசையெலாந்தெள்ளொளிநிலவு
பொழிதனிக்குடைப்புரவலன்பூசனைபுரிந்தான்.

புலப்பகை - ஐம்புலப்பகை, ஐம்புலன்களாவன - சத்தம், பரிசம் - ரூபம், ரசம். கந்தம்என்பன, இவற்றிற்செல்லும்பஞ்சேந்திரியங்களனக்கொள்ளலுமாம், பஞ்சேந்திரியங்களாவன - மெய்வாய்கண்மூக்குசெவியென்பன, எறிந்த-வென்ற, செழுநிலக்கணண்டிசையெலாந்தெள்ளொளிநிலவுபொழிதனிக்குடைப்புரவலன்-தருமபுத்திரன்.

சூட்டராவணைத்துயில்பவனுந்தியங்கமலம்
காட்டுமந்தணன்கடுக்குமவ்வேதியரோடு
வேட்டதண்மதிவெண்குடைப்பெருவிறல்வேந்தன்
மோட்டுவெண்டிரைமுழங்குமந்தாகினிபடிந்தான்.

சூட்டராவணைத்துயில்பவன் - கண்ணபிரான், உந்தியங்கமலங்காட்டுமந்தணன்-பிரமன், கடுக்கும் - நிகர்க்கின்ற, வேட்ட - யாகஞ்செய்த, தண்மதிவெண்குடைப்பெருவிறல்வேந்தன் - தருமபுத்திரன் (கoசு)

கள்ளவிழ்ந்தபூங்கற்பகத்திருந்தகாவலனோ
டெள்ளவீற்றிருந்தெண்டிசைவளாகமுநிழற்றும்
வெள்ளிவெண்குடைவேந்தனல்விடையளித்தனனால்
வள்ளிதழ்ப்பொலந்தார்முடிமன்னவர்க்கன்றே

கள்ளவிழ்ந்தபூங்கற்பகத்திருந்தகாவலன் - இந்திரன், எள்ள - இகழும்படி, வெள்ளிவெண்குடைவேந்தன் - தருமபுத்திரன், நிழற்றும் - நிழலைச்செய்கின்ற, விடையளித்தனன் - விடைகொடுத்தான் (கoஎ)

உகந்துபாந்தளங்கொடியினனல்லதையொருவரு
நிகந்தமுட்டியசெழும்புகழ்மன்னரெல்லோரும்
அகந்தழைத்தெழுமுவகையரதிர்திரைப்பரவை
முகந்தகாரெனமுரசொலிகறங்கவேகினரால்

பாந்தளங்கொடியினனல்லதை - துரியோதனன்றவிர, (பாந்தள்-பாம்பு,) திகந்தம் - திக்குகளின்முடிவு, உவகையர் - மகிழ்ச்சியையுடையவர், அதிர் - ஒலிக்கிற, திரை-அலை, பரவை-கடல், முகந்த - மொண்டுகொண்ட, கார்-மேகம், கறங்க - சத்திக்க.

என்றிசைத்தலுமன்னனல்விருநிலவேந்தர்
நன்றுவப்பொடுநடந்திடநச்சராவுயர்த்தோன்
ஒன்றுநெஞ்சகமுவக்கிலன்போயவாறென்னே
மன்றகூறெனமாதவனுரைக்கலுற்றனனே

மன்னன் - பரிக்ஷித்து, நச்சராவுயர்த்தோன் - துரியோதனன், உவக்கிலன் - மகிழ்ந்திலன், மாதவன் - சுகமுனிவன் (கoஅ)

துளங்குவெள்ளிடைதுளும்புதண்புனலெனத்தோன்ற
விளங்குதண்புனல்வெள்ளிடைப்பரப்பெனக்காட்டும்
வளங்கொண்மண்டபமயனினிதிழைத்ததுவயங்கு
பளிங்கிற்செய்ததுபன்மணிகுயின்றதொன்றுளதால்.

துளங்குவெள்ளிடை - ஒளிபொருந்தியவெற்றிடம், மயன் - தெய்வத்தச்சன், இனிதிழைத்தது - நன்றாகச்செய்தது, பன்மணிகுயின்றது—பலமணிகளிழைத்தது ()

விழுச்சிறப்புடைவியனிலாப்பரப்பெனவிளங்க
இழைத்ததண்புனலிடையெழுமாகரச்சுடரைத்
தழைத்ததோட்டறுகாமெனத்தகைபெறவளர்க்கும்
உழைக்கருஞ்சிறுகற்றினமுழையுழைநோக்கும்.

நிலாப்பரப்பு - நிலாமுற்றம், மரகதச்சுடர் - மரகதத்தொளி, அறுகாமெண - அறுகம்புல்லாகுமென்று, சிறுகற்றினம்-சிறுகன்றின்கூட்டம், உழையுழை-இடந்தோறும்.

தெள்ளுநீரெனத் திகழ்தருதிருநிலத்திலங்கு
வெள்ளிவெண்கதிர்நித்திலம்விரியல்வெண்கோட்டு
முள்ளரைச்செழுமுளரிநாண்முகிழெனமுற்றுக
கள்ளுண்வேட்கையிற்களியிளஞ்சுரும்பினங்களுணும்.

விரியல் - மாலை, கோடு - இதழ், முளரி - தாமரை, நாண்முகிழ் - புதிய அரும்பு, களுணும் - மொய்க்கும். (கக௨)

பட்டகாரிருளபருகுசெம்பதுமராகக்கதிர்
விட்டிலங்கியசெங்கதிரோமிசைத்தவழ்ந்த
கட்டவிழ்ந்தசெந்தோட்டபங்கமலமற்றென்றுப்
பெட்டசெனுசொடுபெயர்தருமடவனப்பிள்ளை

காரிருள் - மிக்கஇருள், பருகு - அழிக்கிற, பதுமராகம் - நவமணியிலொன்று, செங்கதிர் - செவ்வொளி, தோட்ட - இதழ்களையுடைய, பெட்ட - விரும்பின, மடவனப்பிள்ளை - இளமைபொருந்திய அன்னக்குஞ்சு (கக௩)

பொழியுமொண்கதிர்நீலமென்போதியனீலக்
கொழுமலர்க்குலமாமெனக்கொய்வதற்கெய்து
மழலைமையமையர்குழுவெலாமதாதசக்கங்கருங்கண்
நிழலுமொண்ணுறநீலமென்றங்காநீட்டும்

நீலம் - நீலமணி, கருங்குவளைமலர், மையமையர்-மாதர், குழு-கூட்டம், நிழல்-சாயை.

இன்னதன்மையவிலங்கொளிமண்டபங்டுவண
மன்னும்வாளரிசுமந்தசாமணியணைபொலியப்
பின்னல்வெண்டிரைப்பெருநிலவேந்தாவாதிறைஞ்ச
மன்னுநக்கவன்மன்னவன்வீற்றிருந்தனனால்

அரிசுமந்தவேதார்மணியணை - சிங்காதனம் பின்னல்வெண்டிரை - கடல், மின்னு - மின்னல், நக்க - பரிகசித்த, மன்னவன - தருமபுத்திரன் (கக௫)

அச்சணங்குவேலிளையருமரும்பவிழ்துளவப்
பச்சைமேகமும்பாங்குறவிருந்தபார்த்திவனை
நச்சராவலனுயரியநனைகவுட்பருஉத்தாட்
கச்சமால்களிற்றரசனுங்காணியவெழுந்தான்

அச்சு - உயிர்களை, அணங்கு - வருத்துகிற, இளையரும் - தம்பிமாரும், அரும்பவிழ்துளவப்பச்சைமேகமும் - கண்ணபிரானும், பார்த்திவனை-தருமபுத்திரனை - நச்சராவலனுயரியநனைகவுட்பருஉத்தாட்சகச்சமால்களிற்றரசனும் — துரியோதநனும், காணிய-காண. (கக௬)

கருவிவானெனக்கவினுநங்கண்ணன்வைகுதலான்
உருவமாமணியுலப்பிலவொளித்தலானுடைக்கும்

துன்னுசாலுவற்றொலைத்தமைகேட்டிமற்றென்று
முன்னைநான்மறைமுற்றியமுழுத்தவன்மொழிவான்.

குஞ்சரநகர்-அத்திநபுரம், எழ்-எழுறுப்புக்கள், அவை-கால்நான்கு, கையொன்று-கொம்பிரண்டு. மா - யானை, மாமருப்பொசித்தோன் - கண்ணபிரான், தொலைத்தமை-கொன்றமை, முழுத்தவன் - சுகமுனிவன். (௧௨௨)

சிசுபாலனைக் கொன்றவத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௧௩௮௬

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

நாற்பத்திரண்டாவது.

## சாலுவனைக் கொன்றவத்தியாயம்.

எழுசீராக்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஊழிவெங்கனல்போலுருகெழுசீற்றத்தொளிறுவாட்படைசிசுபாலன்
தோழன்வெற்புறழ்தோட்சாலுவனென்பான்சுரும்புசூழ்தாமரைதுறந்து
வாழிநல்வளத்தவிதர்ப்பநாடுதித்தமாழைமென்னோக்கியையலங்கல்
ஆழியான்கவர்நாளடுசமமாற்றியழிந்தனன்யாதவர்க்கன்றே

சீற்றம் - கோவம், ஒளிறு - பிரகாசிக்கிற, வெற்பு-மலை, உறழ் - ஒத்த, சுரும்புசூழ்தாமரைதுறந்துவாழிநல்வளத்தவிதர்ப்பநாடுதித்தமாழைமென்னோக்கி - உருக்குமிணி, சமமாற்றி, யுத்தஞ்செய்து. (௧)

அழிதருதிறத்தான்முனிவுமீதூர்ந்தவடுதிறற்சாலுவன்சுரும்பு
கொழுதியபசுந்தார்யாதவர்மரபுகோறுமென்றின்னிளந்தேறல்
வழிதருகடுக்கைப்பசுந்தொடைபுனைந்தவார்சடைவள்ளலைநினைந்து
புழுதிவாய்மடுத்துப்பன்னிருதிங்கள்புரிந்தனனருந்தவமன்றே.

அழிதருதிறத்தால் - தோற்றதன்மையால், முனிவுமீதூர்ந்த - கோவமதிகரித்த, யாதவர்மரபு - ஆயர்வம்சம், கோறும் - கொல்வோம், தேறல் - தேன், கடுக்கை-கொன்றை, இன்னிளந்தேறல்வழிதரு கடுக்கைப்பசுந்தொடைபுனைந்த வார்சடைவள்ளல்-சிவபெருமான், புழுதி - மட்பொடி. (௨)

எரியுமிழ்கணிச்சியிமையவன்வெளிப்பட்டென்னைநீவிழைந்ததென்றியம்ப
விரிதலைவிசும்பும்பரவைமாநிலனும்வெலப்படாவெருவருசெலவின்
ஒருபெருவிமானம்வேண்டுமென்றுரைப்பவுவந்தனன்மயனையவ்வாறு
புரிபுநல்கெனலுமுருகெழுவிமானம்புரிந்தவனளித்தனனன்றே

எரியுமிழ்கணிச்சியிமையவன் - சிவபெருமான், விழைந்தது - விரும்பினது, விரிதலைவிசும்பு-விரிந்தஇடத்தையுடைய ஆகாயம், (விண்ணுலகத்தார்) பரவைமாநிலன்-கடல்சூழ்ந்தமண்ணுலகம், (மண்ணுலகத்தார்) வெருவருசெலவின் - அச்சத்தையுண்டாக்குகிற செலவினையுடைய, புரிபுநல்கு - செய்துகொடு. (௩)

அரும்புவெண்டிங்களணிந்தவனம்பினழற்படுபுரத்தினைநகைப்ப
இரும்பினிற்புனைந்ததெழிரும்பொழிலும்பைப்பினிற்படர்குவதாய
இருந்தெழில்விமானமிவர்ந்தனன்செருக்கிச்செருவிழைதானையோடெழுந்து
கருங்கடல்வேலித்துவரைசென்றிறுததான்காலவேற்சாலுவன்கடிதே.

அரும்புவெண்டிங்களணிந்தவன் - சிவபெருமான், அம்பின் - அம்பினால், அழற்படுபுரம் - திரிபுரம், நகைப்பது - சிரிப்பது, இரும்பினிற்புனைந்தது - இரும்பினாற்செய்யப்பட்டது, எழிரும்பொழில் - பெரியவுலகு, படர்குவது - செல்லுவது, இவர்ந்தனன் - ஏறி, செருவிழை - போரைவிரும்புகிற, தானை - சேனை (௪)

பன்மலர்ப்படப்பைபறிந்தும்வெண்கோட்டுப்பசிளமதிமுதுகுரிஞ்சு
பொன்மதிற்குடுமிகொண்டுநாற்றிசையும்பொழிந்தசெந்தூளியாற்கரந்தும்
மின்முகங்கிழித்துவிளங்குகார்தவழும்வியன்சினைமரம்பலதூர்ந்தும்
கன்மழைசொரிந்துங்கறங்கிடிவீழ்த்துங்கலக்கினன்றுவரைமாநகரம்

படப்பை - சோலை, வெண்கோட்டுப்பசிளமதி - இளம்பிறை, முதுகு - புறம், குடுமி - உச்சி, கொண்டும் - இடித்தும், கரந்தும் - மறைத்தும், கார்தவழும் - மேகங்கள் தவழ்கின்ற, வியன்சினை - பெருங்கிளை, கறங்கு - ஒலிக்கின்ற. (௫)

மூவெயில்கலக்கக்கலங்கியவுலகின்முதுநகர்கலக்குறல்காணு
நாவலம்பசும்பொனுடைசூழ்நெற்றிநனைகவுட்கரிமருப்பொசித்த
காவலனுயிர்த்தகடற்சுறவுயாத்தகாளையேமுதலியகுமரர்
பூவணியிலங்குகுடுமிநீடிலைவேற்போர்பொருதானையோடெழுந்தார்.

மூவெயில் - மும்மதில் (முப்புரம்) இவைசங்கமபட்டணங்கள், இவற்றுள் ஒன்று இரும்பினாலும் ஒன்று வெள்ளியினாலும் ஒன்றுபொன்னினாலும் செய்யப்பட்டன, காணு - கண்டு, நாவலம்பசும்பொன் - சாம்புநதம், ஓடை - முகபடாம், கரிமருப்பொசித்தகாவலன் - கண்ணபிரான், உயிர்த்த-பெற்ற, சுறவுயர்த்தகாளை - பிரத்தியும்நன்.

அருப்புநாளலங்கலமரரோடவுணராடியவடுசமங்கடுப்பச்
செருக்கொடுமறவியிருபெருஞ்சேனைத்திரளுமாடமர்த்தொழில்விளைப்ப
வரைத்தலைபொடிக்குங்கதிருள்பிளந்துமாற்றல்போன்மகரவெல்கொடியோன்[தான்
பொருப்புறழ்திணிதோட்சாலுவன்புணர்த்தபுணர்ப்பெலாம்பொருக்கெனத்தொலைத்

அருப்பு - அரும்பு, நாள் - புதிய, அலங்கல் - மாலை, அடு - கொல்லுகிற, சமம் - யுத்தம், கடுப்ப - நிகர்க்க, மறலி - பகைத்து, வரை - உதயகிரியில், பொடிக்கும் - தோன்றுகிற, கதிர் - சூரியன், மகரவெல்கொடியோன் - பிரத்தியும்நன், புணர்த்த - செய்த, புணர்ப்பு - மாயம். (௬)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கொய்சுவற்புரவிமேலுங்கூந்தலம்பரித்தேர்மேலும்
மையிருங்குன்றமன்னமழைமதக்களிற்றின்மேலும்
பெய்கழலிளையர்மேலும்பெய்தனனப்புமாரி
ஐயபூந்தெரியன்மாலையங்கணைக்கிழவன்மன்னோ.

மாற்றம் - சொல், கேளா - கேட்டு, அமர் - போர், காரென - மேகம்போல, கல்லென - மலைபோல, கவினும் - அழகுசெய்கிற. (௧௯)

நெடும்பனைத்தடக்கையானைநிலவுமிழ்பிறைவெண்கோடு
பிடுங்கிவெஞ்சினத்தபுள்வாய்பிளந்தவனுகைத்தவேகத்
தடஞ்சிறைப்பறவையன்ன நலைமைசாலியலவாய
கடுஞ்செலவிவுளித்திண்டேர்கதுமெனக்கடாயினானே.

நெடும்பனைத்தடக்கையானை நிலவுமிழ்பிறைவெண்கோடு பிடுங்கிவெஞ்சினத்த புள்வாய்பிளந்தவன் - கண்ணபிரான், உகைத்த - செலுத்தின, கடுஞ்செலவு - வேகமான செல்லுகை, இவுளி - குதிரை, கதுமென - விரைவாக, கடாயினன் - செலுத்தினான்-

நாலிருபகழிதூண்டிநலத்தருபசும்பொற்றிண்டேர்ப்
பால்கெழுபுரவிநான்கும்படுத்துவெம்பாகற்கொன்று
கோலுமிழ்வரிவிற்சிரிக்கொடிமுரறணிர்துவெய்ய
சாலுவன்கடலந்தானைத்தலைவனைத்தலைகொய்தானால்.

நாலிருபகழிதூண்டி - எட்டுப்பாணங்களையேவி, பால்கெழு - வெண்ணிறம்பொருந்திய, படுத்து-கொன்று, கோல் - பாணம், துணித்து - துண்டித்து (௨௧)

சாம்பனுங்குருதிவைவேற்சாத்தகியென்னநின்ற
தேம்படுதாரினானுஞ்செஞ்சிலைகுழைத்தமோடும்
தூம்புடைத்தடக்கைவேழந்துளிமதனகவிழ்ந்ததிண்டேர்
வாம்பரிவெள்ளமாய்ந்தவாட்படைமறிந்தவன்றே

குழைத்தவோடும் - வளைத்தலும், தூம்பு - தொளை, வேழம் - யானை, வாம்-தாவுகின்ற, மாய்ந்த - மடிந்தன. (௨௨)

இன்னணமிருபத்தேழ்நாளிருஞ்சமநடந்ததாக
அந்நிலையறத்தின்மைந்தனாற்றியவேள்விகாத்து
மன்னியபசுந்தார்மாயன்வால்வளைமுழக்கம்விம்மத்
துன்னினன்முந்நீர்வேலித்துவரைமாநகரமன்றே

இன்னணம்-இவ்வாறு, இருஞ்சமம் - பெரும்போர், அறத்தின்மைந்தன் - தருமபுத்திரன், ஆற்றிய - செய்த, வால்வளை - வெள்ளியசங்கு, விம்ம - அதிகரிக்க. (௨௩)

மாற்றலர்வளைந்தவாறுமாற்றருந்தறுகட்சீற்றத்
தேற்றரிமாவினன்னயாதவர்பொருதவாறும்
பாற்றிரைபடிந்தபச்சைப்பசும்புயல்வண்ணனோக்கிக்
காற்றெனக்கலினமான்றேர்களத்திடைக்கடாவினானால்.

மாற்றலர் - பகைவர், தறுகண் - அஞ்சாமை, சீற்றம் - கோவம், ஏற்றரிமாவினன்ன - ஆண்சிங்கத்தைநிகர்த்த, பாற்றிரை - வெள்ளியஅலைகள், பச்சைப்பசும்புயல்வண்ணன் - கண்ணபிரான், கலினமான் - கடிவாளம்பூண்டகுதிரை. (௨௪)

தாப்புலிப்போத்தினின்றசாலுவனுலகமெல்லாம்
காப்பவன்பசும்பொற்றிண்டேர்கடாயதாருகன்மேற்காய்ந்து

பூப்போலத்தமபோர்வேட்டுப்புழுங்கிவாய்புகைத்துவெய்ய
தீப்பொலிகுமிக்கூர்வேற்சினப்படைதெரிபுவிட்டான்.

தா - தாவுகின்ற, புலிப்போத்து—ஆண்புலி, வேட்டு - விரும்பி, குமி — நுனி, தெரிபு - தெரிந்து. (உ௫)

மாறடுதிகிரிப்பெம்மான்மண்டுவெஞ்சினத்தவொள்வேல்
நூறுநூறாகிவீழநூறினனுனிக்கூர்ங்கோட்டு
தாறடுமாய்களிற்றின்சீற்றச்சாலுவன்மார்பின்மேலும்
வீறுயர்விமானமேலும்வெங்கணைவெய்துதூர்த்தான்

மாறு - பகைவர், அடு - கொல்லுகிற, திகிரிப்பெம்மான்—கண்ணபிரான், நூறுநூறாகி—பொடிப்பொடியாகி, தாறு - அங்குசம் (குத்துக்கோல்) (உ௬)

இடித்ததிரசனியேய்ப்பவிருங்கணைபொழிந்துமுந்நீர்
குடித்தெழுஉங்கமஞ்சூற்கொண்டற்கொழுந்தெனத்திகழ்கின்ற
வடித்தபூந்துளவமாயன்வாங்கியவரிவில்வீழத்
தொடிக்கரத்தெய்துவெய்யசொற்பலசோறலுற்றான்

அசனியேய்ப்ப - இடியையொக்க, முந்நீர் - கடல், கமஞ்சூல் - நிறைவாகியகருப்பம், கொண்டற்கொழுந்தெனத் திகழ்கின்ற வடித்தபூந்துளவமாயன் - கண்ணபிரான், சோறலுற்றான் - சொல்லத்தொடங்கினான் (உ௭)

என்னுயிர்த்துணைவன்கொள்வானிருந்தபொற்கொடியைவவ்வி
மின்னுயிர்த்தொளிரும்வெய்யவேலவன்றனைத்துமித்தாய்
உன்னுயிர்க்கிறுதிசெய்யாதொழிகுவனல்லேனென்றுத்
தன்னுயிர்க்கிறுதிசூழ்ந்தசாலுவன்பிதற்றினானால்

என்னுயிர்த்துணைவன் - என்னுயிர்போலுந்தலைவன், (சிசுபாலன்) கொள்வான்- கவர, பொற்கொடியை—ருக்மிணியை, வவ்வி - கவர்ந்து, துமித்தாய் - அறுத்தாய், இறுதி - முடிவு (உ௮)

வெளிற்றுரைவிடுதியென்றுவெயிலுமிழ்பூணுடைநெற்றிக
களிற்றுவெண்கோடுகொண்டகதிர்மணிவண்ணன்புண்ணீர்
குளித்ததோர்கதைகைத்தாங்கிக்கொம்மெனவடித்தல்செய்தான்
ஒளித்தனனேற்றுவெம்போருடன்றவில்லுழுவன்மன்னோ.

வெளிற்றுரை — அறியாமையோடுகூடினசொற்கள், விடுதி - விடக்கடவை, மணிவண்ணன் — கண்ணபிரான, கொம்மென - விரைவாக, ஒளித்தனன் - மறைந்தான்.

தேவகிவிடுத்தோனுகச்சென்றுமற்றொருவனண்ணி
எவுமிழ்வரிவிற்செங்கையிகல்வசுதேவன்றன்னைத்
தாவுறுகலினமான்றேர்ச்சாலுவன்பிணித்துவௌவிப்
போவதுபுரிந்தான்கண்ணபோற்றெனப்புகன்றுநின்றான்.

ஏ - அம்பு, இகல் - வலி, பிணித்து - கட்டி, வவ்விப்போவது புரிந்தான்-கவர்ந்து சென்றான், கண்ண—கண்ணபிரானே, போற்று - காப்பாற்று. (௩௰)

அடுகளத்தின்விழுந்தவத்திரனதாக்கைகின்றுமொருசோதிவிண
சுடர்தரக்கடிதெழுந்துசெக்கரொளிசொரிமணிச்சுடிகைவெய்யவாய்
நெடுநிலப்பொறைதவிர்ப்பவந்ததனிநேமிமாயனடிநேர்ந்ததே
மடைதிறந்தொழுகுநச்செயிற்றரவின்மகுடபந்திமிசைமேயநீர்

அடுகளம் - போர்க்களம், சுடர்தர - பிரகாசிக்க, செக்கர்ஒளி - செவ்வொளி, சுடிகை - உச்சி, மகுடபந்தி – முடிவரிசை, நிலப்பொறைதவிர்ப்பவந்ததனிநேமிமாயன்– கண்ணபிரான். (௯)

முன்னவன்பொருதிறத்தலகன்டுசினமூளவெண்டிரைமுகந்தகார்
மின்னுநக்கவடிவாள்விதிர்ந்திகல்விடூரதன்சமர்விளைத்தலும்
கன்னியந்துளவுசூடுகண்ணனழல்காலுகொற்றநெடுநேமியால்
அன்னவன்றலைதடிந்தனன்கடவுளலர்பொழிந்தமரர்வாழ்த்தவே

முன்னவன் - தமையன், கார் - மேகம், மின்னு - மின்னல், நக்க - பரிகசித்த, வடிவாள் - வடித்தவாட்படை, விதிர்த்து - அசைத்து, சமர்விளைத்தலும் - போர்செய்தலும், கடவுள் - தெய்வத்தன்மை, தடிந்தனன் - அறுத்தான், நேமி - சக்ராயுதம். ()

தந்தவக்த்ரனைக்கொன்ற வத்தியாயம் முற்றிற்று
ஆக திருவிருத்தம்—௧௪௨௮.
ஸ்ரீக்ருஷ்ணசகாயம்

---

நூற்றுப்பத்துநாலாவது.

நம்பிமூத்தபிரான் தீர்த்தயாத்திரைசெய்த வத்தியாயம்.

வேறு

வாய்ந்தசெம்முளரிவலஞ்சுழியுந்திமடுவினின்மலர்ந்ததேயன்றிச்
சாந்தளறெடுத்துப்பாய்நகபூணாகத்தடத்திலுங்கிளைக்குமாபோலத்
தேந்துளியுறைப்பநெகிழ்ந்தபூங்கமலச்செழுமலர்ப்பொகுட்டாசிருக்கும்
ஏந்திழைகொம்மைவரிமுலைமுயங்குமேந்தலவண்டுவரைசென்றிறுத்தான்.

செம்முளரி - செந்தாமரைமலர், உந்தி - நதி, ஆகத்தடம்—வக்ஷஸ்தலம், கிளைக்குமாபோல - உண்டாவதுபோல, தேமதுளிஉறைப்ப - தேன்றுளியுறுத்த, பொகுட்டு-பொகுட்டில், (கர்ணிகையில) ஏந்திழை - திருமகள், கொம்மை - திரட்சி, வரி - சந்தனக்கோலம், முயங்கும் - தழுவுகின்ற, ஏந்தல்—கண்ணபிரான். (௧)

நளியிருமுந்நீருடுத்தமாநிலமுநானிலம்பொறுத்தவாளரவும்
நெளியமாகடலந்தானைவந்தீண்டநெய்ம்முகங்கமழும்வேலைவர்க்
களையுறையரவமுயர்த்தவனொடுபோரடுத்திடநடுநிலையமைந்த
வளைமருண்மேனியொருகுழையொருவன்வண்புனலாட்டின்மேலெழுந்தான்.

முந்நீருடுத்த—கடல்சூழ்ந்த, நானிலம்பொறுத்தவாளரவு—ஆதிசேடன், ஐவர்-பஞ்சபாண்டவர், அளை—புற்று, அரவமுயர்த்தவன்—துரியோதநன், வளைமருண்மேனியொருகுழையொருவன் - பலராமன், புனலாட்டு - தீர்த்தயாத்திரை, (௨)

கலை - சாஸ்திரம், அகலம் - விஸ்தாரம்; காய்ந்து - கோபித்து, உறழ் - ஒத்த, குவவு—திரட்சி, உலகொழுக்கு — உயர்ந்தோராசாரம், இறவாவண்ணம் — அதிக்ரமிக்காமல், புனிதம் - பரிசுத்தம், பன்னிருதிங்கள்காறும் — பன்னிரண்டுமாசம்வரைக்கும்.

மலைக்கும்வெஞ்சீற்றப்பொல்லாவற்கலனென்னும்வெய்யோன்
அலைக்கும்வந்தெம்மையெல்லாமறங்கடையவனையெய்தாக்
கொலைக்களப்படுத்தல்வேண்டுங்கொங்குநலாய்முருகுவிம்மிச்
சிலைக்கவின்பெற்றபைந்தார்ச்செம்மலென்றியம்பினாரால்

மலைக்கும் - போர்செய்கிற, வெஞ்சீற்றம் - வெவ்வியகோபம், வெய்யோன்—கொடியோன், அறங்கடையவனை - பாவியாகியஅவனை. அலைக்கும் - வருத்துகிறான், கொலைக்களப்படுத்தல்வேண்டும் - கொல்லவேண்டும், கொங்கு - வாசனை, முருகு—தேன், விம்மி—மிகுந்து, சிலைக்கவின்—வில்லழகு, செம்மல்—செம்மலே, (பெரியோனே). ( )

பொருவிலாஞானவொள்வாள்பூமுகமழுங்கவெட்டி
இருவினைக்காடுசாய்த்தவிருந்தவர்வதனம்போலாகி
அருள்பொழிகமலக்கண்ணானன்னதுபுரிவமென்றுத்
திரைவிளைபவளச்செவ்வாய்திறந்தனன்கூறுமாங்கே.

பொருவிலா—ஒப்பில்லாத, பூ—பிரபஞ்சவாசனை, இருவினை—நல்வினைதீவினை, இருந்தவர்—பெருந்தவத்தினர், வதனம்—முகம். (௧௦)

தந்தையேயவர்தங்காதற்றநயராய்த்தோன்றமென்று
முந்தையாரணங்களெல்லாமொழிந்ததிறத்தாற்சூதன்
மைந்தனைசூதனென்றமரபுளிநாட்டல்செய்தான்
அந்தமினலத்ததொன்னூலரில்தபக்கிளக்குமாறே

தநயர்—புதல்வர், முந்தை—பழமை, ஆரணங்கள்—வேதங்கள், மரபுளி—மரபினால், அரில்தப—குற்றமற, கிளக்குமாறு - சொல்ல. (௧௧)

கலிவிருத்தம்.

இலங்குவாட்படையில்வல்லன்காதலன்
அலங்கன்மாலையமாரவென்றபோர்
வலங்கெழீஇயவன்வற்கலனென்பவன்
விலங்கலாமெனவீங்கெழிற்றருளினன்

காதலன்—மகன், அலங்கல்—அசைதல், வலம்கெழீஇயவன்—வெற்றியடைந்தவன், விலங்கல்ஆம்என - மலையென்றுசொல்லும்படி (௧௨)

செய்யபங்கியன்றீப்பொழிகண்ணினன்
மையினால்வகுத்தன்னவண்ணத்தினன்
கையிலங்கியகட்டழலெஃகினான்
ஒய்யெனக்கனன்றுற்றனனங்கரோ.

செய்யபங்கியன் — செவந்தசிகையையுடையவன், *மையினால்வகுத்தன்ன—அஞ்சனத்தினாற்படைத்தாற்போன்ற, வண்ணத்தினன் - நிறத்தையுடையவன், எஃகினான்-வேற்படையையுடையான், ஒய்யென - விரைவாக, கனன்று - கோபித்து (௧௩)

கிளைத்தபூந்தெரியல்வேம்பணிவழுதிகிளர்கமண்டலுவின்மால்சேலாம்
வளைத்தபொன்னிஞ்சிமாடமார்மதுரைவளநகரினிதாநண்ணினனால.

இளைத்தவெண்டிங்கள் - பிறை, எரிமருளீர்ஞ்சடைக்கடவுள் - சிவபெருமான், முளரிப்பொருட்டுறைமுதல்வன்பிரமன்வழுதி - பாண்டியன், இஞ்சி - மதில். (௩க)

கடற்சுறவுயர்த்தகாமனிற்கவினுங்கடுந்திறல்விசயன்கைத்தனுவால்
அடிப்பவஞ்ஞான்றுமழவிடைப்பாகனழலவிர்புரிசடைக்காட்டில்
பொடித்தவெண்டிங்கள்பொழியமுதளாவுபூந்திரைக்கங்கையின்வார்ந்து
வடித்ததீந்தமிழ்தண்டுறைதொறுமணக்கும்வையைமாநதிப்புனல்படிந்தான்.

சுறவுயர்த்த - மீனக்கொடியையுடைய, காமனின் — மன்மதன்போல, கவினும்— அழகுசெய்கிற, விசயன் - அருச்சுனன், தநு - வில், மழவிடைப்பாகன் — சிவபெருமான், பொடித்த - தோன்றுகிற, வெண்டிங்கள்பொழி—வெள்ளியசந்திரன்பொழிந்த, அமுது - அமிர்தம், கங்கையின் - கங்காநதிபோல, வார்ந்து - ஒழுகி. (௩உ)

திண்டிறலரக்கன்பஃறலைசிதறச்செஞ்சிலைவளைத்தொருநீலக்
கொண்டலங்கொழுந்திற்றிகழ்பவன்பசும்பொற்குரைகழற்றாட்டுகண்மலைந்து
கண்டவர்பிறவிக்கருங்கடல்கடப்பக்கதிர்மணித்திரளொடுத்தெறியும்
வெண்டலைப்புணரிக்கருங்கடல்விளங்குமேதகுசேதுவினடைந்தான்.

திண்டிறலரக்கன் - ராவணன், நீலக்கொண்டலங்கொழுந்திற்றிகழ்பவன்—ஸ்ரீராமபிரான், தாட்டுகள் - ஸ்ரீபாததூளி. (௩௩)

கதிரொடுபனிவெண்மதிபுகாதோங்குகடிமதிளிலங்கைகட்டழித்த
மதவலிமலர்த்தாள்வைப்பினிற்றேன்றுமல்லன்மந்தாகினிகடுப்ப
முதிர்கொளம்பவளக்கிளைசுழித்தெறிந்துமுழுநிலாநித்திலம்வரன்றி
அதிர்கருங்கடல்வெண்டிரைதவழ்ந்தாடுமணிதிகழ்சேதுவிற்படிந்தான்.

கதிர் - சூரியன், மதவலி - ஸ்ரீராமபிரான், தாள்வைப்பு - திருவடியிடத்தில், நித்திலம் - முத்து, வரன்றி - வாரி (௩௪)

அமுதமூற்றிருந்ததடங்கடல்பருகியமுதுவேறமைப்பதுகடுப்பத்
தமிழ்தருகடவுட்குறுமுனிவிழையுஞ்சண்பகவனத்தினிற்றவழ்ந்த
கமழலந்தென்றற்கொழுந்தெதிர்கொள்ளக்களிவிளைந்தொழுகுதெள்ளமுதக்
குமிழிபாய்திங்கட்பசுங்கொழுந்திடறுகோடுயர்குலாசலமடைந்தான்.

குறுமுனி - அகத்தியர், திங்கட்கொழுந்து - பிறை, கோடு - சிகரம், குலாசலம்—குலமலை, (பொதியமலை). (௩ரு)

இடுமணலெக்கர்மீமிசைச்செங்காலிளவனஞ்செறிவதுகடுத்தும்
முடமுதிர்தடந்தாண்முள்ளிலைத்தாழைமுகந்தெர்றுமுருகுவாயுறைக்கும்
மடல்கிளைத்தெழுதல்போன்றுமாமேனிமலர்தரவாணிலாத்தவழ
விடுசுடர்வெயிலாரொருகுழையொருவன்விரிபுனற்பொருநையாடினனால்.

மணலெக்கர் - மணல்மேடு, கடுத்தும்-நிகர்த்தும், முடம்-வளைவு, முருகு—தேன், ஒருகுழையொருவன் - பலராமன், பொருநல் - தாமிரபருணியாறு. (௩சு)

பொன்னவிர்குன்றம்பொருதமால்யானைப்புணர்நெடுமருப்பினின்றுக்க
நன்னிலத்தரளமணிசிதர்ந்தென்னநளிமணற்குன்றினிற்பாய்ந்து
மன்னியமுடவெண்டாழைமெல்லரும்பின்மருங்கெலாமன்றலூற்றிருந்த
கன்னியம்புன்னைமென்முகைகளுலுங்கன்னியந்துறைபடிந்தனனால்.

பொருத - நிகர்த்த, உக்க - உதிர்ந்த, தரளமணி - முத்து, மன்றல் - வாசனை, கன்னி - குமரியாறு. (௯௭)

ஒழுகொளியிருக்குஞ்செம்மணிக்குப்பைமேயாங்கிரும்பணடவிதழைத்த
எழில்வளர்நாகபோகமீமிசைவாநிலங்கொளிமரகதங்கிளைத்துத்
தழையுமாபோலப்பொதியவிழ்விரிசெந்தாமரைக்கண்ணருள்பெருகிப்
பொழிதருதுளவப்புயல்வளாநந்தபுரத்துவந்தடைந்தனனன்றே.

பணடவி - படக்காடு, செம்மணி — மாணிக்கம், நாகபோகம் - ஆதிசேஷனது உடம்பு, துளவப்புயல்—திருமால், வளர்—கண்வளர்கின்ற, அநந்தபுரம்—திருவநந்தபுரம்.

தனிமுதலவற்குத்தற்பமாய்த்தாங்குதணப்பில்சீரலப்படையொருவன்
மதிகதிர்விரிக்கும்வெள்ளிமால்வரையும்வயங்குபொற்கொடுமுடிவரையும்
எதிருயர்வில்லாவின்பவீடளிக்குமின்னிசைகேட்டுவந்திறைஞ்சும்
யதுகிரிபராவியிறைவனாரணனையிருங்கழல்பராவிமேயினனால்.

தற்பம் - சயநம், தணப்பு - நீக்கம், அலப்படையொருவன் - பலராமன், எதிர் உயர்வுஇல்லா - சமாநாதிகரஹிதமான, இசை - கீர்த்தி, யதுகிரி - திருநாராயணபுரம், (யாதவமலை). (௯௯)

வழுத்தருமலைநாடிகந்துகோகன்னம்வலங்கொடுவலவயிற்செந்தீ
விழித்தபாம்புயர்த்தவெந்திறல்வேந்தும்வீழ்மணிசசரும்பினம்பாய்ந்து
கிழித்தபூந்தொடையல்வீமனுங்கிடைத்துக்கிளைத்தெழுமருப்பிளங்கரிபோல்
பழுத்தவெங்கொலைகதைகொடுமலையும்படிகளப்பரப்படைந்தனனால்.

இகந்து - கடந்து, வலவயின் — வலப்பககம், பாம்புயர்த்த வெந்திறல்வேந்து—துரியோதநன், கிடைத்து - சந்தித்து, மலையும் - போர்செய்கிற. (௭0)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கருகுழைததடங்கட்செவ்வாய்க்காதலங்கொடிக்குப்பைம்பொன்
விரிகுழைநெடுமந்தாரம்வேரொடுகொணர்ந்துநல்வேய்
வளைகுழைந்துருகவூதுமாலொடுநின்றவைவர்
ஒருகுழையொருவன்றன்னையூழ்முறைவணக்கஞ்செய்தார்,

கருகு - கறுத்த, உழை - மான், வேய் - வேய்ங்குழல், ஒருகுழையொருவன்—பலராமன். (௭௧)

வெருவருசெலவின்வீரர்வெஞ்சமம்விளைத்தனோக்கி
ஒருவனேசெயலின்மிக்கானொருவனேவலியின்மிக்கான்
இருவிருநிகரேயாற்றுமிருஞ்சமமொழிகவென்னுக்
குருமணியிமைக்குமொற்றைக்குழையினனுரைத்தல்செய்தான்.

## நாற்பத்தைந்தாவது.

## குசேலற்கருள்புரி யத்தியாயம்.



கலி நிலைத் துறை.

பாயும்வல்லிருள்பருகுமொண்கதிர்மணிச்செஞ்சூட்
டாயிரந்தலையலர்த்துபாம்பணைத்துயிலகற்றிக்
காயும்வெஞ்சினக்கட்செவித்தலையினின்றாடும்
மாயனன்பினன்குசேலனென்றுளனொருமறையோன்.

செஞ்சூட்டு - செவந்தவுச்சிக்கொண்டை, ஆயிரந்தலையலர்த்துபாம்பு - ஆதிசேடன், அணை - சயனம், துயில் - யோகநித்திரை, காயும்வெஞ்சினக்கட்செவி—காளியன்.

எனைத்தொன்றாயினுமெதிர்ந்தநுமசைந்துவண்டிரைக்கும்
புனத்துழாய்முகில்பொன்னடிகருதுமம்மறையோன்
மனைக்கிழத்திவெம்பசியினுல்வாடியமுகஞ்சாள்
பனித்தகண்ணினள்பவளவாய்திறந்தனள்பகர்வாள்.

மசைந்து - உண்டு, வண்டிரைக்கும்புனத்துழாய்முகில்-கண்ணபிரான், பனித்த-நீர்துளித்த, திறந்தனன் - திறந்து. (உ)

பொன்பிறங்கியபுணர்முலைதிருமகள்கொழுநற்
கன்பனுகியுமகன்றிலைவறுமைமற்றன்றே
மின்பிறங்கியவிழுமணிமார்பினுற்கண்டு
மன்பெரும்பொருள்வாரினைவருகெனவருத்தாள்

பொன் - தேமல், கொழுநற்கு - நாயகனுக்கு, மின்பிறங்கியவிழுமணிமார்பினன், கண்ணபிரான், வாரினை - வாரிக்கொண்டு (௩)

வடித்தநான்மறையந்தணன்மாயனைக்காணின்
கொடுப்பதென்னெனக்குறுநுதலறவர்பாற்கொடுவந்
திடித்தபாசவலிரந்தவெண்டுகில்பொதிந்தீந்து
நடத்தியென்னலுநசையிலன்மென்மெலநடந்தான்.

வடித்தநான்மறையந்தணன் — குசேலன், குறுநுதல் - சிறியநெற்றியையுடையவள், (அவன்மனைவி) அறவர் - தர்மிஷ்டர், பாசவல் - பச்சையவல், இரந்த - யாசித்த, பொதிந்து - முடிந்து, நசையிலன் - நிராசையன். (௪)

தெரியுநான்மறையின்னமுந்தெரிவுறக்காண்டற்
கரியனுகியவரக்கிதழ்முளரியஞ்செங்கட்
கரியவன்றனைக்காணுறக்கடுகுபேரன்பு
விரியவேகினன்விழுப்பெருங்கோயின்மேயினனுல்.

தெரியுநான்மறையின்னமுந்தெரிவுறக்காண்டற்கரியனுகிய வரக்கிதழ்முளரியஞ்செங்கட்கரியவன்—கண்ணபிரான், ஏகினன் - சென்று. (௫)

மன்னர்மன்னவர்மணிமுடித்திரன்பொருதக்க
பொன்னிவர்ந்தொளிர்பொற்கடைமுன்றிறந்தேகிக்

கன்னியந்துழாய்க்கருமுகிலொருகனித்துவர்வாய்
அன்னமென்னடையரிவையோடிருந்துழியடைந்தான்.

பொருது—தாக்கி, உக்க - உதிர்ந்த, கன்னியந்துழாய்க்கருமுகில்—கண்ணபிரான், துவர் - பவளம். (கூ)

உருகுகாதலன்பைப்பயவொல்கினன்வருதல்
முருகுவிம்முசெம்முளரியஞ்செங்கணேநோக்கி
எரிபொன்சேக்கைநின்றெழுந்தெதிர்சென்றிவண்வருக
வருகவென்றுபொன்மார்புறத்தழீஇனன்மகிழ்ந்தான்.

ஒல்கினன் - அசையாநின்று, முருகுவிம்முசெம்முளரியஞ்செங்கணன் - கண்ணபிரான். (எ)

களித்தசெங்கயற்கருங்கண்மாமாதுவெண்கவரி
வளைத்தளிர்க்கையாலிரட்டமாமணியணையிருத்தி
இளைத்திசாலவென்றிளநிலாவொழுகுநூன்மார்பின்
அளிக்குலஞ்செறிசெய்யதாரணிந்துபாகளித்தான்.

வெண்கவரி - வெண்சாமரம், இரட்ட - அசைக்க, மாமணியணை - சிங்காதனத்திற்கு கிறரத்நாசநம், அளிக்குலஞ்செறிசெய்யார் - பூமாலை. (அ)

பயிற்றுநான்மறைக்குரவனம்மனையவள்பணியால்
வெயிற்குவெம்பியகானிடைவிராய்தரற்கேகிப்
புயற்கசைந்தோருபொதும்பரினிரவுநாமிருந்த
தயர்த்திபோலுமென்றளவளாயுசாவினனன்றே.

பயிற்றுநான்மறைக்குரவனம்மனையவள்பணியால்—சதுர்வேதங்களையும் நமக்குக் கற்பித்த ஆசாரியன்மனையாளது ஏவலால், விராய்தரற்கு—விறகுகொணர்தற்கு, புயல்—மேகம், (மழை) அசைந்து - வருந்தி, பொதும்பர் - சோலை, அயர்த்திபோலும்—மறந்தனைபோலும், அளவளாய் - கலந்து (கூ)

முளைத்தவெண்ணிலாமுறுவல்வாண்முகத்தினனாகி
அளிப்பமற்றெனக்கென்கொடுவந்தனையன்ப
ஒளிப்பதென்னைநீயுதவுகென்றுள்ளாரக்கூட்டும்
தளிர்க்கையாற்றுகில்வாங்கினன்றனிமறைமுதலி

முறுவல் - சிரிப்பு, வாள் - ஒளி, அளிப்ப—வொடுக்க, தனிமறைமுதலி - கண்ணபிரான். (கo)

பொருள்விழைந்திவன்போற்றலனமையொருபொழுதும்
திருவிழைந்திவன்றிருமனைக்கிழத்திசெல்கென்ன
வரவுவந்தனன்மற்றிவற்களித்துமென்றள்ளி
விரைகமழ்ந்தபூந்துளவினன்பாசவன்மிசைந்தான்.

விழைந்து - விரும்பி, திருமனைக்கிழத்தி - மனையவள், விரைகமழ்ந்தபூந்துளவினன் - கண்ணபிரான், பாசவல் - பச்சையவல், மிசைந்தான் - உண்டான். (கக)

வாட்ட நண்ணிடைவடவரைக்குவடெனப்பணைத்த
மோட்டிளங்கதிர்முலைசுமந்தொழுகியதீம்பால்
ஊட்டுபேயினுள்ளுயிர்பிழிந்துண்டகார்வண்ணன்
மீட்டும்பாசவன்மிசைவதற்கெடுப்பவுள்விழைந்தான்.

வடவரை - மேருமலை, குவடு உச்சி, கார்வண்ணன் - கண்ணபிரான், மிசைவதற்கு - உண்பதற்கு, உ விழைந்தான் - திருவுளத்தில்விருப்பங்கொண்டான். (கஉ).

ஊர்ந்சகாதவினொருமூறையருந்திய திறத்தால்
ஏந்தலிந்திரனெனக்கருஞ்செல்வமெய்தினனால்
மாந்தன் மற்றினியென்றுசெம்மலர்க்கரம்பிடித்தாள்
பூந்துழாய்வரைமார்பகமகன்றிலாப்பூவை.

கடுஞ்செல்வம் - பெருஞ்செல்வம், மாந்தல் - உண்ணுதை, பூந்துழாய்வரைமார்பகமகன்றிலாப்பூவை - ருக்மிணிபிராட்டி. (கங)

தடநெகிழ்ந்தசெந்தாமரையவள்குறிப்பறிந்து
விடுசுடர்ப்பனிவெண்ணகைமுகிழ்த்தருள்சுரந்து
மடைதிறந்தசெவ்கண்ணினான்மறையவன்றனக்கு
விடைபுரிந்தனன்வீறுசால்வேதியனெழுந்தான்

தடநெகிழ்ந்தசெந்தாமரையவள் - பிராட்டி, குறிப்பு - நினைப்பு, நகைமுகிழ்த்து - புன்சிரிப்புக்கொண்டு, அருள்சுரந்துமடைதிறந்தசெங்கண்ணினான் - கண்ணபிரான், விடைபுரிந்தனன் - விடைதந்தருளினன். (கச)

அம்பவுய்ந்தனமுய்ந்தனமரும்பொருளெய்தி
மம்மர்கூர்தரமறக்குவனமைமெனமதித்தே
மும்மைசாலுலகளித்தருண்முளரியஞ்செங்கட்
செம்மனல்கலன்செல்வமென்றுவந்தனன்சென்றான்.

மம்மர் - மயக்கம், கூர்தர - மிக, மறக்குவன்—மறப்பான், மும்மைசாலுலகளித்தருண்முளரியஞ்செங்கட்செம்மல் - கண்ணபிரான், நல்கலன் — கொடுத்திலன். (கரு)

களித்தவண்டினங்கனலவாய்விரிந்துதண்டேறல்
துளித்தநாண்மலர்ச்சோலையுஞ்சுடர்மணித்தொழுகி
தெளித்தெனத்திகழ்தீம்புனல்வாவியுஞ்செறிந்து
பளிக்குமண்டபம்பல்குதன்மனையகம்படர்ந்தான்.

கனல - நெருங்க, தேறல் - தேன், நாள் - புதிய, வாவி - தடாகம், படர்ந்தான்— சென்றான். (கசு)

தெளிநிலாக்கதிர்சிந்தியவெள்ளிவெண்மாடம்
முளையிளம்பிறைதவழவிண்முகடுகீண்டோங்கி
அளகைகாவலனருநிதியுறைதிறந்தென்ன
வளமலிந்தவம்மனையகநோக்கினன்மயர்ந்தான்.

முளை - தோன்றுகிற, விண்முகடுகீண்டு - ஆகாயமுகட்டைக்கிழித்து, அளகைகாவலன் - குபேரன், அருநிதியறை - களஞ்சியம், மயர்ந்தான் - மனந்தளர்ந்தான். ()

விலகிவில்லுமிழ்மீன்குழாத்தொள்ளொளிவிரிக்கும்
கலைநிறைந்தவெண்மதியெனக்கவின்வழிந்தொழுகு
திலகவாணுதற்சிற்றிடைத்தெரிவையர்செறிய
இலகுபூணணிந்தில்லவள்வருதல்கண்டயிர்த்தான்.

மீன்குழாத்து - நக்ஷத்திரக்கூட்டத்தில், கலைநிறைந்தவெண்மதி—பூர்ணசந்திரன், கவின் - அழகு, தெரிவையர்—மாதர், செறிய—நெருங்க, அயிர்த்தான்—சந்தேகித்தான்.

பதியைநோக்கினன்பதிதொறும்பதிதொறுங்கிடந்த
நிதியைநோக்கினனேரிழைமடப்பிணைமருட்டும்
புதியநோக்கொடுபோதருமனையவள்வதன
மதியைநோக்கினன்மால்செயலிதுவெனவலித்தான்

பதி—மனை, இடம், நிதி—பொருள், பிணை—பெண்மான், நோக்கு—அழகு, போதரும்-வந்த, வதநமதி - பூர்ணசந்திரன்போன்ற, முகம்வலித்தான் — மனவுறுதிகொண்டான்.

பெறலருந்திருப்பெற்றம்வெண்பிறைமருப்பொசித்த
இறைகருணைகடலிருநிலம்பொதிந்ததாட்கமல
மறவியொன்றிலன்மாட்சிசால்பெருநலமாந்தி
அறநிரப்பின்றளவிலாத்தனிநெறியடைந்தான்.

பெறலரு - பெறுதற்கரிய, திரு - செல்வம், வெண்பிறைமருப்பொசித்தஇறை—கண்ணபிரான், மறவி - மறப்பு, ஒன்றிலன் - சிறிதுமில்லாதவனாய், பெருநலம்மாந்தி-பேரின்பமநுபவித்து, அளவிலாததனிநெறியடைந்தான்-முத்திநெறியையடைந்தான்.

குசேலருபாக்கியானியத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௧௪௱௪.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்

---

நாற்பத்தாறவது

## சமந்தபஞ்சகத்திற்சென்றவத்தியாயம்.



அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

பரிதிவாளரவுதீண்டப்படுவதோர்காலநண்ண
அரசர்செங்குருதிநீராலடுபற்பரசுராமன்
தரைபுகழ்தடமதாக்குஞ்சமந்தபஞ்சகத்திற்றண்டேன்
சொரிதொடையாசர்வெள்ளந்தொக்குடனடைந்ததன்றே.

பரிதிவாளரவுதீண்டப்படுவதோர்காலம் - சூரியகிரகணகாலம், நண்ண—வர, சமந்தபஞ்சகம்—ஐந்துதிரமடுக்கள், தொக்கு—கூடி. (௧)

முளைத்தவெண்முறுவற்செவ்வாய்முகிழ்முலைமாதரீட்டம்
கிளைத்தசெம்பவளவல்லிக்கிளையெனப்பரந்துசூழ

வளைக்குலமலறநீலமாகடலெழுந்ததேபோல்
களிச்சுரும்பாற்றுபைக்தார்க்கண்ணனும்போயானங்கண்.

முளைத்த - அரும்பின, முறுவல் - பல், முகிழ் - தாமரையரும்பு, ஈட்டம் — கூட்டம், வளைக்குலம்அலற - சங்குக்கூட்டம்சத்திக்க, அரற்ற - சத்திக்கிற (௩)

ஆவியேயனையளாயவசோதையுமாவிபூத்த
காவியுங்கயலும்வெல்லுகடைக்குழையெறிந்தவுண்கட்
கோவியர்குழாமுமொண்கேழ்க்குங்குமக்கலவைச்சாந்தும்
நாவியுங்கமழ்ந்துசெல்லநடந்தனளந்தக்காலம்.

ஆவி - உயிர், தடாகம், காவி—நீலோத்பலமலர், குழாம்—கூட்டம், நாவி—கஸ்தூரி.

அங்கதிர்மழுவலாளனுக்கியதடமுன்போலக்
குங்குமச்சாந்துதோய்ந்துகுருதியின்றன்மைகாட்டத்
திங்கள்வாண்முகத்துச்செவ்வாய்த்திகவியர்குழாத்தினோடும்
கங்கைநீர்பூத்ததாளான்கடவுணீராடினனால்.

மழுவலாளன் - பரசுராமன், கங்கைநீர்பூத்ததாளான் - கண்ணபிரான், கடவுள்-தெய்வத்தன்மை. (௪)

கொடிபுனைகொடிஞ்சிமான்றேர்க்குருகுலத்தரசும்வெய்ய
இடிமுழங்கோடையானையதுகுலத்தரசரீண்டிப்
படிபுகழ்தெய்வநன்னீர்படிந்தொருபசும்பொற்கோட்டுக்
கடிமலர்ச்சோலைநீழல்கலந்துடனிறுத்தபோதா.

கொடிஞ்சி - மேன்மொட்டு, மான் - குதிரை, படி - உலகம், கோடு - கிளை, கடி-வாசனை. (௫)

புவிபுகழ்நந்தகோபற்போர்வசுதேவன்கண்ணுற்
றுவகைமீக்கூரவங்காளெங்கெழின்மருதிறுத்த
தவழ்பசுங்குழவிபோடியாடவந்தாதரிந்தி
அவிழ்தொடையணிந்தமார்வமழுந்துறத்தழீஇக்கொண்டானே

கண்ணுற்று - கண்டு, உவகை - மகிழ்ச்சி, மீக்கூர - அதிகரிக்க, மருதிறுத்தவழ்பசுங்குழவி - கண்ணபிரான். (௬)

கோல்வளையசோதைவந்துகுறுகலுமுலகமுண்டோர்
ஆலிலைப்பள்ளிதுஞ்சுமஞ்சனக்குழவியுண்ணைப்
பால்சுரந்தூட்டுசெம்பொற்படாமுலைச்சாந்துதோயச்
சேலொடுபொருதவுண்கட்டேவகிபுல்லினளால்.

கோல் - புள்ளி, வளைவு—குறுகலும் - சமீபித்தலும், உலகமுண்டோராலிலைப்பள்ளிதுஞ்சுமஞ்சனக்குழவி - கண்ணபிரான், படா - சாயாத, சாந்து - சந்தனக்குழம்பு, பொருத - போர்செய்த. (௭)

சுரும்புசூழ்பனிமென்முல்லைத்தொடையணிநந்தகோனும்
அரும்புவெண்டாளமூரலசோதையுமுவப்பநண்ணி

இரும்பனைக்கொடியினனுமேடவிழ்கமலச்செங்கட்
கரும்புயல்வண்ணத்தானுங்கைதொழுதிறைஞ்சிநின்றார்.

சுரும்பு - வண்டு, தொடை - மாலை, தாளம் - முத்து, மூரல் - பல், உவப்ப — சந்தோஷிக்க, இரும்பனைக்கொடியினன் - பலராமன், ஏடவிழ்கமலச்செங்கட்கரும்புயல்வண்ணத்தான்—கண்ணபிரான். (௮)

குன்றெதிர்நிற்றலாகாக்குங்குமத்தோளினாரை
அன்றெதிர்காணப்பெற்றவசோதையுநந்தகோனும்
சென்றெதிர்முளரிவென்றசெய்யகண்களிக்குமுற்றாக்
கன்றெதிர்சுரவைபோலக்களித்துளமுருகினாரால்

குன்றெதிர்நிற்றலாகாக்குங்குமத்தோளினார் — ஸ்ரீக்ருஷ்ணபலராமர்கள், முளரி—தாமரைமலர், சுரவை - பாற்பசு (௯)

வெயிலுமையுறியலாகாவிரிமலாககாவினீழல்
கயலெனக்களிக்குமுண்கண்பாப்பினர்கருங்கட்டோகை
மயிலெனநின்றவாயர்மாதர்சங்குழைவெல்லாம்
புயலெனநின்றசெங்கட்பொருவிலிபுல்லினனே

காவினீழல் - சோலைநிழல், தோகை - கலாபம், புயலெனநின்றசெங்கட்பொருவிலி - கண்ணபிரான் (௧௦)

கஞ்சனைகொன்றபின்னைகாய்நதெழுவந்தோடு
வஞ்சினைச்சிருவாட்போர்விளைத்தனமிருந்திட்டேமால்
வஞ்சிநண்மருங்குனல்லீர்மறந்தனிர்கொல்லோவென்னச்
செஞ்சுடர்விரிக்குந்தெய்வத்திகிரியஞ்செல்வன்செப்பும்

விளைத்தனம் - விளைத்து, வல்லி—கொடி, செஞ்சுடர்விரிக்குந்தெய்வத்திகிரியஞ்செல்வன்—கண்ணபிரான். (௧௧)

இருத்துநாமெம்குழுங்களிடத்திலுமிருக்கின்றோமால்
உரைப்பின்மற்றும்மைநீங்கியுறைந்தையுண்டுகொல்லோ
அருப்பிளமுலையீரென்றுவரும்பவிழ்பசும்பொற்கோட்டுக்
தருக்கொடுதந்தநம்பிதன்னிலைதெரித்தான்மாதோ

அரும்பவிழ்பசும்பொற்கோட்டுத்தருக்கொடுவந்தநம்பி—கண்ணபிரான், (கோடு—கிளை, தரு - கற்பகக்தரு, பாரிசாதம்) தெரித்தான் - அறிவித்தான். (௧௨)

அளித்தளித்துலகமீளவமைத்தருளிறைவனின்று
தெளித்தலுநெஞ்சந்தேறித்தெருமாலுழத்தறீர்ந்து
களிக்கயல்பொருதுவென்றுகடைசிவந்தகன்றகண்ணார்
தளிர்க்கரங்கூப்பிச்செவ்வாய்த்தத்தையிற்கிளக்கலுற்றார்.

அளித்தளித்துலகமீளவமைத்தருளிறைவன்—கண்ணபிரான், தெளித்தலும்—தெளிவித்தலும், தெருமாலுழத்தல்தீர்ந்து - மயங்குதலொழிந்து, தத்தையின் - கிளிமொழிபோல, கிளக்கலுற்றார் - பேசத்தொடங்கினார்கள். (௧௩)

களிமதக்களிறுமாய்த்தகண்ணனைக்கண்ணினோக்கி
அளவறுஞானாநந்தமருவமென்றறைவதென்னே
இளநிலாநகைத்துச்செவ்வாயின்னருள்பொழியுஞ்செங்கட்
டொளிமணியுருவிற்றென்னாவுணர்ந்துணர்ந்துருகாநின்றார்.

களிமதக்களிறு - குவலயாபீடமென்னும்யானை, அருவம் - உருவில்லாதது. ()

சதுமறையிறுதியினுஞ்சழக்கறத்தெரிகலொல்லா
முதிர்பெருஞானாநந்தமூர்த்தநம்விடக்குக்கண்ணுக்
கெதிர்தரவென்னேயென்னேயென்றிறும்பூதெய்தாவாங்
கெதுதவமிழைத்தேமென்னாவேங்கினரவசமுற்றார்.

சதுமறையிறுதி - வேதாந்தம், சழக்கு - குற்றம், மூர்த்தம் - திருவுரு, விடக்குக் கண்ணுக்கு - மாம்ஸசக்ஷுவுக்கு, இறும்பூது - ஆச்சரியம், எய்தா - அடைந்து. ()

அவிழ்ந்தபூந்துணர்தூய்த்தாழ்ந்தவமரர்பொன்மகுடகோடி
தவழ்ந்தசெங்கதிர்கள்பொங்குந்தனிமணியுழுதுமாடல்
உவந்தவாளரவின்செஞ்சூட்டொளிர்மணிகிழித்துஞ்செக்கச்
சிவந்ததாட்குழகன்பூசைசெய்தனன்செய்தவர்க்கே.

பூந்துணர் - பூங்கொத்து, சிவந்ததாட்குழகன் - கண்ணபிரான், செய்தவர்க்கு— முனிவருக்கு. (௨௨)

அழற்பொலிந்திலங்குகூர்வேலடல்வசுதேவனுற்ற
விழுத்தவர்தம்மைத்தாழ்ந்துவினையினால்வினையையெல்லாம்
ஒழித்திடும்வண்ணநீவிருரைமினோவெனவினாவ
முழுப்பெருமுனிவர்மூரன்முகிழ்த்தனர்மொழியலுற்றார்

விழுத்தவர் - பெருந்தவத்தினர், தாழ்ந்து - வணங்கி, மூரல்முகிழ்த்தனர்—புன்னகைசெய்து. (௨௩)

விரைகமழ்துளவினானைமெய்ப்பொருளென்றுநாடி
அருவினையெறிதல்செய்யாதவனேயார்மகவென்றெண்ணி
இருவினைவினையினான்மற்றெறிந்திடல்வினைததல்கங்கைத
திருநதிவிடுத்தோராறுசென்றடைந்தாடல்போலும.

விரைகமழ்துளவினான் - கண்ணபிரான், எறிதல்செய்யாது - வெல்லாமல். ()

வியனிலமன்னதக்கவினைப்பயன்விழையாதாற்றின்
மயலறுமற்றபோதுமாண்டமெய்யுணர்வுதோன்றும்
உயர்வறவுயர்ந்தவுண்மையுணர்வுவந்துற்றகாலை
இயலிருவினையினீட்டமிரியுமென்றியம்பினாரே

விழையாது - விரும்பாமல், ஆற்றின் - செய்தால், மயல் - மயக்கம், இருவினையினீட்டம் - இருவினைத்தொகுதி, (நல்வினை தீவினை). (௨௫)

வாவியங்கமலமெல்லாம்வந்துபோர்க்குதவினாலும்
காவிமுன்னிற்கலாற்றாக்கட்டழகுடையவுண்கட்

தேவகிகொழுநன்றேவர்திரண்டவிமுகந்துமாந்த
ஆவியின்முனிவர்தம்மோடருமகமாற்றினானால்.

காவி - நீலமலர், தேவகிகொழுநன் - வசுதேவன், அவி - அவிர்ப்பாகம், முகந்துமாந்த - வாரியுண்ண, ஆவியின் - உயிர்போல, மகம் - யாகம் (உ௬)

கறையணற்பாம்பினுடுக்கணண்ணனைப்பராவியொள்ளவல்ல
விறல்கெழுவிதுரன்சென்றான்வெவ்வராவுயர்த்தோனாதி
நொறில்வயப்புரவித்திண்டேர்நூற்றுவர்நடந்தாரமற்றை
அறன்மகனாதியாயவைவருமரிதிற்சென்றார்

பராவி - துதித்து, வெவ்வராவுயர்த்தோன் - துரியோதனன், நொறில் - விரைவு, அறன்மகன் - தருமபுத்திரன் (உ௭)

கறுத்தெதிர்நடந்தயானைக்கரிகிலாககழுமுவெண்கோ
டிறுத்தமராடுமல்லர்கசிடியெனநடந்தவேந்தல்
நறைக்கொடித்தளவுசூடுநாதர்கோனெனநடந்த
அறற்குழல்சோதைக்காபாலருஞ்சிறப்பாற்றினானால்

கறுத்து - கோவித்து, எதிர்நடந்தயானை - குவலயாபீடம், வெண்கோடிறுத்து - வெண்கொம்பையொடித்து, அமராடுமல்லர் - போராடினமல்லர், (சாணூரன்முஷ்டிகன்) ஏந்தல் - கண்ணபிரான், அறல் - கருமணல் (உ௮)

கண்ணிணையிமைகாதுன்னனைக்கண்ணேகாதல்செய்தார்
எண்ணின்மற்றுமக்கியார்கணிழைத்ததையெவன்கொலென்றுத்
தண்ணறாப்பில்குமௌவற்றாரவன்வதனநோக்கி
எண்ணலார்க்கடந்தகாவாளிவசுதேவன்சொல்வான்

இழைத்தது - செய்தது, எவன்கொல் - யாதோ, நறா - தேன், பில்கும் - சிந்துகிற, மௌவல - முல்லைமலர், தாரவன் - மாலையையுடையவன், எண்ணலார் - பகைவர் ()

கரைகருமாமதத்தயானைக்கஞ்சனான்முன்னரின்னற்
பெருக்கின்வீழ்ந்துதவிசெய்யப்பெற்றிலமினனர்ச்செல்வச
செருக்கினாற்செய்வதொன்றுநேர்கிலமம்மவென்று
உருக்கமைந்தொளிசெய்செம்பொனுலப்பிலவழங்கினானால்,

இன்னல்பெருக்கு - துன்பவெள்ளம் உலப்பில - அளவில்லாதன, உருக்கு-உருக்குதல், வழங்கினான் - கொடுத்தான் (௩0)

உகுபசுங்குருதியொள்வேலுக்கிரசேனனுங்கரு
நகுதருதளவப்பைந்தார்நந்தகோனுவந்துகொள்ளப்
புகைமுகந்தன்னதூசுபுவிவிலைகொண்டபொற்பூண்
அகலிருவிசும்புவிற்குமாரமோடுபகரித்தான்.

நகுதரு - விளங்குகிற, தளவப்பைந்தார் - பசியமுல்லைமலர்மாலை, உவந்து - மகிழ்ந்து, தூசு - ஆடை, உபகரித்தான் - கொடுத்தான். (௩௧)

நேசமொடளித்தநெய்யாப்பொற்றாகின்முதனிலாவு
தூசுநல்லணியும்பொன்னுஞ்சுடர்மணித்தொகையும்வாரிக்

காய்சினவரவின்றுத்திக்கணபணமகுடத்தாடு
மாசிலாமணியைநந்தன்மனத்திடைப்பொதிந்துசென்றான்

செய்யா - செய்யாத, பொற்றுகில் - பொன்னுடை, நிலாவு - விளங்குகிற, காய்வசிரனவின்றுத்திக்கணபணமகுடத்தாடும்மாசிலாமணியை - கண்ணபிரானை. (௩௨)

காமருவேனினீங்கிக்கார்தலைப்படுதலோடு
மாமயில்குழீஇயபோலமைவிலைபெறவாட்கட்
டேமொழிமாதர்ஊட்டச்செழும்புயலெழுந்தோபோல்
தாமரைக்கண்ணன்முநீர்தழுவுமாநகர்சென்றுற்றான்

காமர் - அழகிய, வேனில் - கோடை, கார் - கார்காலம், தலைப்படுதலோடும்-தொடங்குதலோடும், குழீஇயபோல - கூடிருந்தாற்போல, மை - அஞ்சனம், புயல் - மேகம், முந்நீர் - கடல். (௩௩)

சமந்தபஞ்சகத்திற்சென்றவந்தியாயமுற்றிற்று
ஆகத்திருவிருத்தம்—கஙஉ௦.
ஸ்ரீகிருஷ்ணசகாயம்

---

நாற்பத்தேழாவது.

## இறந்தகுழவிகளைக்கொணர்ந்தவத்தியாயம்.

கைதொழவடைந்தசெங்கட்கண்ணனையொருகாற்றாக்கி
மைதொழுநிறநம்வள்ளன்மறைக்கொழுந்தாகுமென்று
செய்தவக்கிழவரனறுசெப்பியவண்ணமுன்னி
மெய்திகழறிவுசாலும்விறல்சுகதவனசொல்வான்

மைதொழுநிறநம்வள்ளல - கண்ணபிரான, மறைக்கொழுந்து - வேதமுடிவாகிய பொருள், செய்தவக்கிழவா - முனிவர், அறிவுசாலும் - அறிவுநிறைந்த (௧)

விண்ணிடையொலியுங்காற்றினூறும்வெங்கனலிதன்பால்
ஒண்ணிறவொளியுநீரினுழைந்துறுஞ்சுவையுமோங்கு
மண்ணிடைமணமுநீயேமற்றனைமகனென்றென்று
தண்ணான்மெய்ப்பொருளென்றெண்ணுமறிவுதந்தருளவேணும்

ஊறு - பரிசம், கனல் - நெருப்பு, நீரினுழை - நீரில், சுவை - ரசம், அணணல் - பெருமை. (௨)

அண்டமுமவற்றுணின்றவாருயிர்க்கொகையுமற்றும்
எண்டருமமரர்யாருமிறைவர்மூவருமொருங்கு
பண்டருமறையினேடிப்பார்க்கினின்னுடைமையாவர்
தொண்டரேமெமக்குவாளாத்தூயறிவுதவல்வேண்டும்.

நேடி - தேடி, இறைவர்மூவர் - பிரமவிஷ்ணுருத்ரர்கள், தூயறிவு - பரிசுத்தமானவுணர்வு (௩)

மோட்டிளங்குரும்பைவென்றமுலைசுரந்தொழுகுதீம்பால்
ஊட்டிளமுறுவன்மாந்தியுவந்தனள்பெரிதுமுள்ளம்.

தீட்டருஞ்செவ்வி - எழுதுதற்கரியஅழகு, செகுமக - கொல்லப்பட்டமக்கள், வார - ஒழுக, உவந்தனள் - மகிழ்ந்தாள். (௧௦)

உடைதிரைவேலைஞாலமுண்டவனுண்டபைம்பொன்
தடமுலையுண்ணப்பெற்றதவத்தின்வெஞ்சாபநீங்கிச்
கடவுளராகிமன்றற்கற்பகத்தருவினீழல்
அடைகலுற்றனரான்மற்றவ்வறுவருமுவகைகூர்ந்தே,

உடைதிரைவேலைஞாலமுண்டவன் - கண்ணபிரான், கடவுளர்—தேவர், மன்றல்—வாசனை, உவகைகூர்ந்து - களிப்புமிகுந்து. (௧௧)

இறந்த குழவிகளைக் கொணர்ந்தத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௧௮௯௫.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்

---

நாற்பத்தெட்டாவது.

## சுபத்திரை மணமுரைத்த வத்தியாயம்.

கலிவிருத்தம்

என்னலுமணிக்கழைபிசைந்தமுகிறநகை
மின்னிகர்சுபத்திரையைவென்றிகெழுபார்த்தன்
நன்மணம்விழைந்ததுநவின்றருள்கவென்றே
மன்னவனுரைப்பமறைமாதவன்வகுப்பான்.

கழையிசைத்தமுகில் - கண்ணபிரான், மணம்விழைந்தது - மணஞ்செய்தது, மன்னவன் - பரிக்ஷித்து, மறைமாதவன் - சுகமுனிவன். (௧)

ஆயிரமணிச்சுடிகையண்ணலரவேந்து
மாயிருநிலத்தினில்வளங்கொள்புனலெல்லாம்
தோய்தரவெழுந்துதழறம்முபடையொன்னார்
சாயவில்வணக்கியதனஞ்சயனடைந்தான்.

ஆயிரமணிச்சுடிகையண்ணலரவு - ஆதிசேடன், தழல்தும்மு—நெருப்புச்செறிந்த படை - ஆயுதம், ஒன்னார் - பகைவர், சாய - இறக்க (௨).

கன்னியுயர்பொன்னியொடுகங்கைமுதலாகப்
பன்னியநதித்துறைபடிந்துகடல்வண்ணன்
மன்னியசெழுந்துவரைமாநகர்மருங்கோர்
பொன்னெழுகுசாரல்வரைபோயினிதுபுக்கான்.

கன்னி - கந்யாகுமரி, பொன்னி - காவிரி, கடல்வண்ணன் - கண்ணபிரான், மருங்கு - பக்கம், (சமீபம்) பொன்னெழுகுசாரல் - ரைவதமலைச்சாரல். (௩)

அத்தலையமர்ந்துறைபருந்தவர்களெல்லாம்
முதநெறிதடந்திரைமுழங்குதுறையாடா
மத்தமதயானையெனவந்தடையும்வல்வில்
வித்தகனைநண்ணினர்விளைந்ததுகிளப்பார்.

அத்தலை - அவ்விடத்தில், ஆடா—ஆடி, (மூழ்கி) வல்வில்வித்தகனை—அருச்சுநனை.

தோடணிசெவிப்புனைசுபத்திரையைமுன்னோன்
ஆடரவுயர்த்திடுமவற்குதவநாடும்
நீடுபுகழ்வில்வலநினக்குதவவெண்ணும்
கோடுயர்தருப்புவிகொணர்ந்தபுயலென்றார்.

முன்னோன் - தமையன், ஆடரவுயர்த்திடுமவற்கு - துரியோதநனுக்கு, உதவ—கொடுக்க, நாடும்—எண்ணுகிறான், கோடுயர்தருப்புவிகொணர்ந்தபுயல்- கண்ணபிரான்.

அவ்வுரைசெவிப்படவுமம்மென்முகைவிள்ளும்
மவ்வல்கமழ்வார்குழன்மழைக்கண்மடமானை
எவ்வகைமணப்பதெனவெண்ணினனிருந்தான்
வெவ்வமர்கடந்தவரிவில்விசயன்மாதோ

மவ்வல் - முல்லைமலர், மடமானை - சுபத்திரையை, கடந்த - வென்ற, வெவ்வமர்- கொடியபோர். (சு)

வண்ணவளைமாதினைமணக்குநெறியென்னென்
றெண்ணினனிருந்தவனிரும்பெரியமுக்கோற் !
பண்ணவருருக்கொடுபடர்ந்தனன்மலர்ததார்க்
கண்ணனுறைகின்றதொருகன்னிநகரத்தே..

எண்ணினனிருந்தவன் - எண்ணியிருந்தவன், முக்கோற்பண்ணவர் - திரிதண்டசந்நியாசியர், உருக்கொடு - வேடம்பூண்டு, படர்ந்தனன் - சென்றான். (எ)

அறிந்தனனிருந்துமிகலாளரியனை த்
துறந்தவனடைந்தனனெனத்துளிமதுச்சோர்
நறுந்துளவமாலைபுனைநம்பிகிளையோடும்
செறிந்தடிபணிந்துயர்சிறப்பின்வழிபட்டான்.

அறிந்தனனிருந்தும் - அறிந்திருந்தும், இகலாளரியனை - அருச்சுநனை, துளிமதுச்சோர்நறுந்துளவமாலைபுனைநம்பி - கண்ணபிரான், கிளை - உறவினர், (அ)

பிள்ளையளியுண்ணநறைபில்கியமலர்த்தார்
வள்ளலதுகைதவமனைத்தும்வுறிதேனும்
உள்ளலனிலாச்சொரிபுமோர்குழையணிந்த
வெள்ளைவளைவண்ணனும்விரும்பிவழிபட்டான்.

நறைபில்கிய - தேனைச்சிந்துகிற, கைதவம் - வஞ்சனை, உள்ளலன் - நினைத்திலன், ஓர்குழையணிந்தவெள்ளைவளைவண்ணன் - பலராமன். (கூ)

அண்ணல்வசுதேவன்மெய்யறந்தலைமணந்தோய்
நண்ணுமதியித்தலையினன்குமதியென்று

உண்ணெகிழ்வுபூசனையுவப்பினுடனுற்ற
விண்ணரசுதந்தவன்விருப்பினொடுமேயான்,

அறந்தலைமணந்தோய்—துறவறத்தைப்பூண்டவனே, இத்தலையில்—இவ்விடத்தில், நான்குமதி - நாலுமாசம், நண்ணு - இரு, என்று - என்றுசொல்லி, விண்ணரசுதந்தவன் - அருச்சுநன். (௧௦)

மின்னெனவிளங்குமணிமேகலைமிழற்ற
அன்னமெனநூபுரமலம்பவிளையாடும்
நன்னயசுபத்திரையைநச்சிலையவேற்கட்
கன்னியைமறைந்தொழுகுகாளையெதிர்கண்டான்.

நூபுரம் - சிலம்பு, அலம்ப - சத்திக்க, மறைந்தொழுகுகாளை - அருச்சுநன். ()

அண்டமுழுதாளிதருமாடல்வரிவிற்கைக்
கொண்டலனையான்வரைகுலுங்கவளர்தோளும்
மண்டலநிறைந்தமதிவாண்முகமுநோக்கா
வெண்டரளவாணகையும்வேல்விழிகளித்தாள்

அண்டமுழுதாளி - இந்திரன், தரும் - பெற்ற, ஆடல்வரிவிற்கைக்கொண்டலனையான் - அருச்சுநன், நோக்கா - நோக்கி, வெண்டரளவாணகை - சுபத்திரை (௧௨)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கிளைத்தசெந்தளிர்ப்பூஞ்சோலைகிளரெரியெழுந்துபொங்கி
வளைத்துணநெடியசாபம்வளைத்தவன்மாணுருக்காண்
களிக்கயலன்னவுண்கட்கன்னிகன்செய்யமேனி
தளிர்க்கவின்வாடவந்துதளிர்த்ததுகாமவெந்தீ.

(சாபம் - வில்), கிளைத்தசெந்தளிர்ப்பூஞ்சோலைகிளரெரியெழுந்துபொங்கிவளைத்துணநெடியசாபம்வளைத்தவன் - அருச்சுநன், (பூஞ்சோலை—காண்டவவநம்) மாணுரு—மாட்சிமைப்பட்டவுருவம். (௧௩)

பொருதடஞ்சிலைக்குப்பார்த்தன்பொருவிலானேனுஞ்செய்ய
திருமலர்நெடுங்கட்பேதைதிருமுகத்தெழுதிவைத்த
இருபெருஞ்சிலைக்குமாரனிருகடைகுழையவாங்கும்
ஒருபெருஞ்சிலைக்குஞ்சாலவுரனழிந்துருகுமம்மா.

பொரு - போர்செய்கிற, பொருவிலான் - ஒப்பில்லாதவன், எனும் - ஆயினும், எழுதிவைத்த - மைதீட்டிய, மாரன் - மன்மதன், உரன் - வலி. (௧௪)

அங்கலுழ்மேனிமற்றோரணங்கினைமணஞ்செய்கிற்பான்
வெங்கயல்பொருதுவென்றவில்வலான்மெல்லென்சாயற்
கொங்கவிழ்கோதைமாதர்குழைபொருதலைக்குமுண்கட்
செங்கயல்பொருதற்காற்றான்றெருமரலெய்திச்சாம்பும்,

அங்கலுழ்—அழகொழுகாநின்ற, மற்றோரணங்கு—துரோபதை, கொங்கு—வாசனை, குழை - காதணி, சாம்பும் - வாடுவான். (௧௫)

பிறையிளங்குழவிபோலப்பிறங்குமுத்தாரம்பூணுன்
துறவினர்படிவங்கொண்டுதோன்றியவரிவிற்றோன்றல்
மறுவறுமதியமன்னமதிமருள்வனப்புவாய்ந்த
நறுநுதன்முறுவன்முத்தநகையெழநலிவான்மாதோ

துறவினர் - சந்நியாசிகள், படிவம் - வேடம், மறு - களங்கம், வனப்பு - அழகு, நலிவான் - வருந்துவான் (கசு)

நறவுவாயுறைக்குந்தண்ணளினமுமதியுங்கூடி
உறவுகொண்டெழுந்ததேபோலுமாசனைபுடையுஞ்செவ்வி
முறுவல்வாண்முகத்தினாளைமுகந்தனன்கொண்டுபோகப்
பெறவந்தார்காலநோக்கிப்பெட்பொடுமவைகினானல்

நறவு - தேன், நளினம் - தாமரை, மதி - சந்திரன், செவ்வி - அழகு, முகந்தனன் கொண்டுபோக - எடுத்துக்கொண்டுபோக, பெட்பொடு - விருப்பத்தோடு. (கஎ)

போந்தமீதுயர்ந்தவென்றிப்புரவலனெதிராய
வேந்தெலாந்திரண்டோராதெய்வவிழாவணிகாண்டற்கேகக்
கூக்தலம்பரித்தேர்க்கண்ணன்குறிப்பறிந்திருந்தபார்த்தன்
மாந்தளிர்மேனியாளைவெளவினன்போயினான்மன்னோ.

போந்தமீதுயர்ந்தவென்றிப்புரவலன் - பலராமன், குறிப்பு - எண்ணம், வெளவினன்போயினான் - கவர்ந்துசென்றான். (கஅ)

நில்லெனப்புகன்றுபொங்கிநெருப்பெழவிழித்துச்சூழ்ந்த
தொல்லெயிற்கடைகாப்பாளர்தொலையவெஞ்சிலைகால்கோட்டிப்
பல்லுளைப்புரவித்திண்டேர்பாகின்மென்மழலை தூண்ட
மல்லலந்தெழுந்தோனான்மணிநகர்வல்லைசென்றான்

புகன்று - சொல்லி, கடைகாப்பாளர் - வாயில்காப்போர், கோட்டி - வளைத்து, பாகின்மென்மழலை - சுபத்திரை, தூண்ட - செலுத்த (க௯)

கலிநிலைத்துறை

மழையொன்றுமின்னுக்கொடியன்னவம்மாதைவஞ்சித்
துழையொன்றுபார்த்தனுடன்கொண்டுநடந்தவண்ணம்
குழையொன்றணிந்தகுருதிப்படைவள்ளல்கேளா
அழலொன்றுவெங்கணரவென்னவழன்றுமிக்கான்

மழை - மேகம், குழையொன்றணிந்தகுருதிப்படைவள்ளல் - பலராமன். (௨0)

விடப்பாழிவாய்வெவ்வரவக்கொடிவேந்தனுக்கே
கொடுப்பானிருந்தகுவளைத்தடங்கண்ணினாளை
எடுப்பான்கொல்வஞ்சித்திகற்பார்த்தனென்றேங்குநீலக்
கடற்பார்கலங்கச்செழுந்தாமரைக்கண்சிவந்தான்.

விடப்பாழிவாய்வெவ்வரவக்கொடிவேந்தனுக்கே - துரியோதனனுக்கே, கொடுப்பான் - கொடுக்க (௨க)

சீறற்கயாவுந்தெரிந்தோய்நறுந்தேங்கொடாரான்
ஊறுற்றகன்னியுறற்கெங்குரியாள்கொலென்று
மாறற்றதெய்வமணிவண்ணன்முன்மல்குசீற்றம்
௬ மாறற்றமைந்தவுரைகூறினனாற்றினுல்.

சீறற்க - கோவியாதை, மாறற்ற - ஒப்பற்ற, தெய்வமணிவண்ணன் - கண்ணபிரான், சீற்றம் - கோவம். (௨௨)

நிழலுற்றவொற்றைக்குழையானெடுநீலமேகத்
தெழிலுற்றமாயன்கொடைப்பாலனயாவுமுய்ப்பக்
குழையுற்றபொன்னங்கொழுந்தன்னவக்கொம்பனாளை
விழைவுற்றபார்த்தன்விதியான்மணமாற்றினுல்.

நிழல் - ஒளி, ஒற்றைக்குழையான் - பலராமன். (௨௩)

சுபத்திரைமணமுரைத்தவத்தியாயம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௩௫௯௩.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

நாற்பத்தோன்பதாவது

மிதிலைக்குச்சென்றவத்தியாயம்.



அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மதிதவழ்குடுமிமாடமறுகுசூழ்மிதிலைமூதூர்
எதிரிலாச்சுருதிதேவனென்னுநான்மறைவல்லோனும்
ததைமலராலங்கல்வெள்வேற்சனகனுங்கமலச்செங்கட்
கதிர்மணிவண்ணற்கன்புகனிந்தனர்வைகினரே,

குடுமி - சிகரம், மறுகு - வீதி, செங்கட்கதிர்மணிவண்ணற்கு—கண்ணபிரானுக்கு.

கசிந்துநெஞ்சுருகுவாரைக்கண்டருள்புரியவேண்டி
அசும்புபொன்னுடையம்மானரக்கிதழ்முளரிபூத்த
பசும்புயற்கொழுந்துபோலப்பழமறைமுனிவரோடும்
விசும்புவீழ்திருவிற்றுயமிதிலைமாநகரமேயான்.

அசும்புபொன்னுடையம்மான் - கண்ணபிரான், முளரி - தாமரை. (௨)

பொருகடல்புலம்பமுல்லைப்புலத்தினில்வளர்ந்தநீலக்
கருமுகின்முருகுவிம்முகமலமுமொத்தசெங்கண்
அருண்மழைபொழிந்துதோன்றவகங்கனிந்துருகுமன்பர்
இருவருமுவகைமீதூர்ந்தெழுந்தனரெதிர்கொண்டாரால்.

முல்லைப்புலத்தினில்வளர்ந்தநீலக்கருமுகில் - கண்ணபிரான்.

என்மனையடைதல்வேண்டுமென்மனையடைதல்வேண்டும்
தொன்மறைமுதல்வமுற்றத்துறந்தவர் துணைவவென்றுப்
பொன்மதின்மிதிலைவேந்தும்புரையறுமறைவலானும்
பன்மலர் தூவிப்பல்காற்பணிந்தனர்பராயினுரே,

மறைமுதல்வ - வேதமுதல்வனே, புரை - குற்றம் (௪)

முத்தொழினடாத்தற்காகமூவுருக்கொண்டு நிற்கும்
பைத்தவாளரவப்பள்ளிப்பாற்கடற்பரமனுங்க.
எத்தகையவர்க்குந்தோன்று திலங்குமீருருக்கொண்டாங்கண்
அத்தகையிருவரில்லுமடைந்தன னருளின்மன்னே.

அரவப்புள்ளி - சர்ப்பசயநம், பாற்கடற்பரமன் - கண்ணபிரான் (௫)

பரவியும்பணிந்துமின்னம்பழமறைகாண்டற்கெட்டா
ஒருதனிமுதல்வனம்பாலுறுவதற்கம்மயாமுன்
புரிதவமென்கொலென்னுப்பொருவிலாச்செல்வராய
இருவருமுற்றவோகையாவரேயம்பற்பாலார்

ஒருதனிமுதல்வன் - கண்ணபிரான், ஓகை - மகிழ்ச்சி. (௬)

உள்ளமுமுரையுஞ்செல்லாதோங்கியபரமாநந்த
வெள்ளமாய்நின்றதோன்றல்விரிதிரைக்கஙகைவெள்ளம்
துள்ளியகமலப்பொற்றுள்சுழித்துமட்டொழுகுமந்தண்
வள்ளிதழ்ப்போது தூவிவாழ்த்தினர்வணங்கலுற்றார்.

உள்ளமுமுரையும் - மனமும்வாக்கும், பரமாநந்தவெள்ளமாய்நின்றதோன்றல்- கண்ணபிரான். (௭)

இருபிறப்பாளனேற்றவிலைமலர்கனிநீர்கொண்டு
புரிதலுற்றனனுற்பூசைபூம்புகையெடுத்துத்தெய்வ
விரைகமழ்மலருஞ்சாந்தும்விழுச்சுவையமுதுங்கொண்டு
வரையெனத்திரண்டதிண்டோண்மன்னவன்வழிபட்டானல்.

இருபிறப்பாளன் - வேதியன், இலைமலர்கனிநீர் - பத்ரம்புஷ்பம்பலம்தோயம்.

வழிபடுமறைவல்லோனும்வாங்குவிற்றடக்கைவேந்தும்
அழிவில்பேரின்பமெய்தவருள்புரிந்தாழிவேலிச்
செழுநகரடைந்தான்றெய்வத்திருமறைவழுத்தநின்ற
முழுமணிவண்ணனென்னமுனிவரன்மொழிந்தான்மாதோ.

தெய்வத்திருமறைவழுத்தநின்றமுழுமணிவண்ணன் - கண்ணபிரான். (௮)

மிதிலைக்குச்சென்ற வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௩௫௭0.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

# ஐம்பதாவது

## சுருதி கீதையுரைத்த வத்தியாயம்.

---

கலிவிருத்தம்.

உரைகடந்தவொருதனிச்செல்வனைத்
தெரியநான்மறைசெப்புவதெங்ஙனம்
விரியமற்றிதுவிள்ளுதல்வேண்டுமென்
றரசுகேட்பவருந்தவன்கூறுவான்.

உரைகடந்தவொருதனிச்செல்வன் - கண்ணபிரான். (க)

கண்ணகன்றகடற்புவிகாத்தருள்
அண்ணலானையரசமற்றன்னது
நண்ணிமுன்னரநாரணர்தங்கடேத்
தெண்ணுமீர்ந்தமிழ்யாழ்முனிகேட்டதால்.

கண்ணகன்றகடற்புவிகாத்தருளண்ணல் - கண்ணபிரான். (உ)

சனகனாதிதபோதனர்க்கிறிலா
வினையெறிந்துவிளங்குசனந்தன
முனியெடுத்துமொழிந்திடப்பட்டதால்
இனிதுகூறுதும்கேன்றியம்பினான்.

வினையெறிந்து - வினையைவென்று. (ங)

உயர்நலத்திற்றருமுலகேழுமுண்
டயிலெயிற்றவரவணைமீமிசைப்
புயலெனத்துயில்பூமகள்கொண்கனைத்
துயிலெழுப்பினதொன்மறைவாழ்த்தின.

உலகேழுமுண்டயிலெயிற்றவரவணைமீமிசைப்புயலெனத்துயில்பூமகள்கொண்கன்—கண்ணபிரான். (ச)

வியக்குஞ்செல்வவிரைமலர்மெல்லியல்
நயக்குமார்பநளினமலர்ந்துபார்
பயக்குமுந்திப்பரமவிம்மன்னுயிர்
மயக்குமாயையின்மாற்றிடவேண்டுமால்.

விரைமலர்மெல்லியல்—திருமகள், நயக்கும்—விரும்புகிற. (ரு)

முடியுமாரமுமொய்கதிர்ப்பட்டமும்
தொடியுஞ்செஞ்சுடர்தூற்றுபொன்னுகல்போல்
படியுநீருங்கனலும்பவனமும்
நெடியமானமுநின்னலதில்லையால்.

படி—பூமி, பவனம்—வாயு. (சு)

திருந்துநின்கதைத்தெள்ளமுதத்தினைப்
பரிந்துநாளும்பருகுவதல்லது
வருந்தியைம்பொறிவாடுறவீழ்சரு
கருந்துவார்கொலறிஞர்களாழியாய்.

ஐம்பொறி—பஞ்சேந்திரியம், வாடுற—வாட (௭)

பகைத்துநாடுநர்பற்றுமாறற்றனை
அகத்துநாடுநராயவிருவரும்
நிகர்த்துன்சேவடிநீழல்வந்துற்றனர்
மிகுத்தநின்னிலைவிள்ளவல்லேங்கொலோ.

நாடுநர்—நினைப்பவர், நிகர்த்து—ஒத்து. (௮)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மடலவிழ்கமலம்பூத்தமழைமுகிலனையாய்மற்றுன்
றிடமலரனையசெம்பொற்றுணிபூலடைந்தாரன்றே
விடமுமிழ்கனற்கட்பேழ்வாய்வெருவருமுருவக்கூற்றின்
அடுதிறல்வெகுளிவேகத்தாயுன்பூழ்கலாரோ

கூற்று—யமன், வெகுளி—கோவம். (௯)

விட்டலர்பசும்பொற்றோட்டுவேரியங்கமலத்தோனும்
எட்டிநின்னிலைமையின்னும்பற்றெனத்தெரிகறேற்றான்
வட்டவாய்த்திகிரிச்செங்கைவள்ளலவ்விரிஞ்சனீனப்
பட்டவர்தெரிகிற்பார்கொல்பார்க்கினின்னிலைமையம்மா.

கமலத்தோன்—பிரமன், இற்று—இத்தன்மைத்து. (௧௦)

புனிதமற்றுன்னையல்லாப்பொருள்பரப்பிரமமன்றால்
எனமவடுத்துரைப்பதல்லாலீதொருடேதாற்றமென்றித்
தனிமுதலாகிநின்றசச்சிதானந்தமூர்த்தி
நினைவருஞ்சுடரேநின்னைநிகழ்த்துமாறறிகிலேமால்.

புனித—பரிசுத்தனே, நிகழ்த்துமாறு—புகழும்வழி. (௧௧)

என்றனமறைகளம்மவிம்முறைமறைகளெல்லாம்
நன்றறிவியாதனல்யாழ்நாரதனவிலக்கேட்டு
மன்றமற்றெனக்குச்சொற்றன்மானவேலரசவென்றுத்
தன்றுணையின்றிநின்றதபோதனன்சாற்றினனே.

தன்றுணையின்றிநின்றதபோதனன்—சுகமுனிவன். (௧௨)

சுருதிகீதையுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௧௫௮௨.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## விருகாசுரனைக் கொலைபுரி யத்தியாயம்.



இரப்புறுமிறைவற்றாழ்வோரிருநிதியெய்துமாறும்
திருப்புணரிறைவற்றாழ்வோர்செம்பொருள்விழையாவாறும்
விரித்திடவேண்டுமென்றுவிரிதிரைப்பரவைமுந்நீர்
வரைப்பெலாம்புரப்போன்கூறமாதவன்வழங்கலுற்றான்.

இரப்புறுமிறைவற்றாழ்வோர் - சிவனைச்சேவிப்போர், திருப்புணரிறைவற்றாழ்வோர்-திருமாலைச்சேவிப்போர், விழையா-விரும்பாத. (க)

தருமனிவ்வண்ணங்கேட்பத்தழைந்தவீட்டின்பம்யாவர்க்
கருள்செயல்விழைந்துநின்றேமாங்கவரடையப்பட்ட
பொருளெலாங்கவர்வம்யாமேபுரவலவென்றுசெங்கட்
கருமுகிலன்னகண்ணன்கனியிதழ்விண்டுசொன்னான்.

புரவல-அரசனே, கவர்வம்-க்ரஹிப்போம். (உ)

ஆதலானழிவொன்றின்றியதிசயமாகின்ற
மேதகுபரமானந்தமேவுமாவிழைந்துநின்ற
தீதிலாவுணர்வினார்பாற்செறியுமவ்வெறுக்கையாவும்
தாதுலாந்துளவத்தாமத்தற்பரனகற்றுவானே,

அதிசயம் - மேன்மை, வெறுக்கை-செல்வம், விழைந்து - விரும்பி. (ங)

புயலுறழ்கவிகைமன்னபொருவிலாத்தனிவீட்டின்பம்
வெயில்பொழிமணியினோடுவெண்டிரைக்கடலிற்றோன்றும்
குயில்புணர்கொழுநனீவான்குன்றெனப்பணைத்தகொங்கை
மயிலியற்பாகத்தண்ணல்வளர்பொருள்வழங்குமாதோ.

புயல்-மேகம், உறழ்-ஒத்த, கவிகை-கொடை, பொருவிலா-ஒப்பில்லாத, வெண்டிரைக்கடலிற்றோன்றுங்குயில்-திருமகள், மயிலியல்பாகத்தண்ணல்-சிவபிரான். (ச)

அரவணைத்துயிலுமம்மானளிக்கலான்விரைவின்யார்க்கும்
வரைமயின்மருவுபாகனுகலான்வண்டுண்கொன்றை
விரைகமழ்வேணியீசன்விழைந்ததுவிரைவினலரும்
ஒருகதையுரைக்குதுங்கேளொற்றைவெண்கவிகைவேந்தே.

அரவணைத்துயிலுமம்மான்-திருமால், வரைமயில்-பார்வதி, விரை-மணம். (ரு)

கலிவிருத்தம்.

விரைந்துவிருகாசுரன்விளங்குதனதாகம்
அரிந்துபகலாறெரியழற்றலைசொரிந்தான்
கருந்தலையறுப்பவருகண்ணுதல்விலக்கா
வரந்தருதும்வேட்டதுவழங்கெனமொழிந்தான்.

ஆகம் - உடம்பு, கண்ணுதல் - சிவபிரான், விலக்கா - விலக்கி

துப்பிளெடுமுத்தலைசுருட்டுகடல்சுற்றும்
இப்புவியின்வானினெவர்சென்னிமிசையேனும்
முப்புரமுருக்குதிறன்முக்கணிறையென்கை
வைப்பினவர்சாவுறவரந்தருதியென்றான்.

துப்பு - பவளம், முப்புரமுருக்குதிறன்முக்கணிறை - சிவபிரான். (எ)

அன்னதுகளிற்றுரிவையண்ணலுமளிதமோதம்
என்னவதுசேர்தரவிளம்பிறைபுனைந்தான்
சென்னிமிசையேதனதுசெய்யகரம்வைப்பான்
உன்னியெழுமுக்கணிறையோடினன்விரைந்தே.

களிற்றுரிவையண்ணல் - சிவபிரான், சேர்தர - பரிசிக்க, வைப்பான் - வைக்க, உன்னி - நினைத்து (அ)

அளித்திடும்வரத்தினையழித்திடநயந்தேதன்
குளித்திடுகடுக்கையொடுதூநிலவெறிக்கும்
இளைத்தமதிவேணியரனெவ்வுலகுமோடிக்
களிக்குதவிரலிக்கொடியின்காயிடைகரந்தான்

கடுக்கை - கொன்றைமலர்மாலை, இளைத்தமதி பிறை. (கூ)

சிந்தவமுதததுவலைதிங்கண்முடிவைத்தோன்
வந்துபுகல்புக்கிடலும்வாளவுணன்முன்னம்
உந்துதிரைவேலியுலகுண்டமணிவண்ணன்
அந்தணரொழிற்குமரனாகியெதிருற்றான்

புகல்புக்கிடலும் - சரணடைதலும், வாளவுணன் - விருகாசுரன். உந்துதிரைவேலியுலகுண்டமணிவண்ணன் - திருமால் (க0)

வாட்டிறல்விளங்கவுணர்மன்னனைவழங்கா
ஓட்டமெவனென்னவவனுற்றதுகிளப்பக்
கிட்டரியவெண்முறுவல்செய்துகைபுடைத்துச்
சூட்டரவமீமிசைதுயின்றபுயல்சொல்லும்.

அவுணர்மன்னன் - விருகாசுரன், வழங்கா - அழைத்து, எவன் - யாது, கிளப்ப- சொல்ல, சூட்டரவமீமிசைதுயின்றபுயல் - திருமால். (கக)

வாய்விரியருக்கமலர்மாலைதலைசூடாக
காயழல்பரந்தசுடுகாடெழிலரங்காப்
பேயொடுநடிக்குமொருபித்தனுரைமெய்யோ
ஆய்மறைசொறக்கவுரையாசுறுதலுண்டோ.

அருக்கமலர் - எருக்கம்பூ, சூடா - சூடி, அரங்கா - ஆடிடமாக. (கஉ)

மின்னெழுகொற்றவடிவேலுழவமற்றுன்
சென்னிகரம்வைத்ததுதெளிந்திடுதலன்றே

நன்னிலைமையித் திறமுறுதியெனத் தன்
மன்னிய தடக்கை தலைவைத்தவுணன் மாண்டான்.

மின்றெழுகுகொற்றவடிவேலுழவ - அரசனே, நாடுதி - பரீக்ஷி. (௧௩)

நன்றெனமகிழ்ந்தமரர்நாண்மலர்பொழிந்தார்
வென்றிமழுவாளனும்வியந்தனனடந்தான்
மன்றல்கமழ்தண்டுளவமாயனுமகன்றான்
என்றுமுனிபுங்கவனெடுத்தனனிசைத்தான்

வென்றிமழுவாளன் - சிவபிரான், வியந்தனன் - அதிசயித்து, மன்றல்கமழ் - மணம் வீசுகிற, தண்டுளவமாயன் - திருமால் (௧௪)

விருகாசுரனைக்கொன்ற அத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — [illegible].

ஸ்ரீகிருஷ்ணசகாயம்

---

2-வது.

## பிருகுமுனிசென்ற அத்தியாயம்

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

முருகுலாமலரினன்கொல் முளரியங்கண்ணினன்கொல்
உருகெழுமழுவலான்கொலுயர்பரம்பொருளாவானென்
றருமறைமுனிவர்தேவரைந்தவித்துயர்ந்தவாற்றற்
பிருகுமாமுனிவன்றன்னைப்பெட்பொடுவினாதல்செய்தார்.

முருகுலாமலரினன்கொல் - பிரமனோ, முளரியங்கண்ணினன்கொல் - திருமாலோ, உருகெழுமழுவலான்கொல் - சிவனோ, ஐந்தவித்து - ஐம்புலன்களைவென்று, பெட்பொடு - விருப்பத்தோடு. (௧)

மூவரின்முற்குணத்துமுழுமுதல்யாவனென்ன
ஓவறவினிதிறைய்வலுடன்றுமற்றேனோர்சாவம்
ஏவினன்றோரின்யாமுமெளியமோவுரைமினென்றாத்
தேவுமெய்த்தவக்குன்றன்றான்சென்றனன்விரைந்துமனனோ

மூவரில் - திரிமூர்த்திகளுக்குள்ளே, முற்குணத்து - சத்துவகுணத்தையுடைய, முழுமுதல் - முழுமுதற்கொருள், ஆய்வல் - ஆராய்வேன் (௨)

அந்தணன்மலர்மேலானையடைந்தனன்வணங்காநிற்பத்
தந்தையைவணங்காநிற்றறக்கதேயென்னக்கட்டமச்
சிந்துபுநினக்குக்கோயிநீர்கெனச்சினந்துசெப்பிக்
கொந்தழன்மழுவலாளன்குளிர்வரைச்சாரல்சார்ந்தான்.

அந்தணன்மலர்மேலானை - பிரமனை, தக்கதே - தக்கதோ, சிந்துபு - சிந்தி. (௩)

சார்ந்தனனன்னகாலேத்தழல்வணனுமையாள்கொங்கை
ஆர்ந்தனனின்பந்துய்க்குமமைதியென்றறிந்தன்னோர்க்குப்
பேர்ந்திருகுறியும்வீழப்பெரிதுரைத்தகறலோடும்
ஓர்ந்துமுக்கணனழைப்பவொய்யெனப்பெயர்த்தும்வந்தான்.

தழல்வணன் - சிவபிரான், இருகுறி - ஆண்குறிபெண்குறி, ஒய்யென - விரைவாக.

உற்றவிம்மறைவலோனம்முடன்பிறப்பென்றவெவ்வாய்ப்
புற்றரவணிநம்பிதானீர்ந்தோற்புல்லுவாறுறலுந்தீண்டேல்
நிற்றிநீதூய்மைநீத்தாயென்னலுந்தீச்செந்தீ
நெற்றியிற்கணடிறந்துநீடழலுற்றின்றான்.

வெவ்வாய்ப்புற்றரவணிநம்பிரான் - சிவபிரான், நீதம்தான் - பிருகுமுனி, புல்லுவாறுறலும் - தழுவசசெல்லலும், தூய்மைநீத்தாய் - அபரிசுத்தன். (௬)

மாதவனடுக்குறாதுவளாகழறவொருவிரற்கண
வேதுறுசெந்தீயவிவிழித்தழலசெகுத்துமற்றும்
ஓதுநான்மறையோரோபாருறுமுயர்பிராமணியதெய்வம்
ஆதனீயொழிகவென்றுவறைந்தனன்சடுகிச்சென்றான்

மாதவன் - பிருகுமுனி, விழித்தழலசெகுத்து - சிவனதுகண்ணெருப்பைவென்று.

அறங்கரைநாவினான்போயலம்புபாலாழிவந்து
பிறந்தவின்னமுதின்சாயற்பிறைநுதலரிவைவாழைக
குறங்கின்மேறசென்னிவைததுகவகொண்டலங்கொழுந்துபோல
உறங்குமப்பரமன்மார்பிலுதைத்தனனென்பமன்னோ.

அறங்கரைநாவினான் - பிருகுமுனி, அலம்புபாலாழிவந்துபிறந்தவின்னமுதின் சாயற்பிறைநுதலரிவை - திருமகள், குறங்கு - தொடை. (எ)

தடங்கடலுலகமுண்டதனிமுதலெழுந்துமின்னின்
சுடர்ந்தபொற்றொடிசூழ்செங்கைத்துணைமலர்கூப்பிநீவந்
தடைந்தமையறிந்திலேனயானருமறையந்தணாள
கிடந்ததுபொறுத்தியென்றுகேண்மையினியம்பினானல்.

தடங்கடலுலகமுண்டதனிமுதல் - திருமால், மின்னின்சுடர்ந்தபொற்றொடிசூழ் செங்கைத்துணைமலர்கூப்பி - கைகுவித்து. (அ)

ஒருநிலைபெறறவுள்ளத்துயர்முனித்தலைவமற்றுன்
மருநிலைபெறறபொற்றாமரையடிபட்டவாறறால்
திருநிலைபெற்றதாலென்செய்யதார்மார்வமென்றான்
தருநிலைபெற்றவானந்தாழ்ந்தபொற்றாளம்மானே.

ஒருநிலைபெற்றவுள்ளத்துயர்முனித்தலைவ - பிருகுமுனிவனே, மரு - வாசனை, திரு - அழகு; மார்வம் - மார்பு, தருநிலைபெற்றவானந்தாழ்ந்தபொற்றாளம்மான் - திருமால்.

கண்டனன்முனிவன்றெய்வக்கங்கையங்கரையினெய்தி
விண்டனனிகழ்ந்தவெல்லாம்விழுத்தவக்கிழவர்கேளா

ஒண்டிறலாழியானேயுயர்பரம்பொருளாமென்னக்
கொண்டனர்கொண்டுநெஞ்சங்குழைந்தனர்பராவினரே.

நிகழ்ந்தவெல்லாம் - நடந்தசெய்தியாவும், விண்டனன் - சொன்னான், விழுத்த வக்கிழவர் - முனிவர், கேளா - கேட்டு, ஒண்டிறலாழியானே - திருமாலே. (௧0)

பிருகுமுனிசென்ற வத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௧௬0௬

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

53—வது.

## இறந்தபக்களைத்தந்த வத்தியாயம்.



விரைசெய்பூந்துளவத்தண்டார்விண்ணவன்விளையாட்டின்னும்
உரைசெயவொன்றுகேட்டியொலிகடலுலகந்தாங்கும்
வரைசெய்தோண்மன்னவென்றுவாண்முகமலர்ந்துவாரித்
திரைசெய்தெள்ளமுதுங்கைப்பத்திருமுனிசெப்பலுற்றான்.

விரைசெய்பூந்துளவத்தண்டார்விண்ணவன் - திருமால், வரைசெய் - மலைபோன்ற, வாரி - பாற்கடல், திரை - அலை, கைப்ப - கசக்க, திருமுனி - சுகமுனிவன்.

மோதுவெண்டரங்கவேலைமுற்றியதுவரைமூதூர்
ஓதுநான்மறைவலாளனொருவன்வந்துதித்தபோதே
காதலங்குழவிமாயக்காவலன்கடைக்கொண்டேகி
ஆதகாதறனேயென்னவழுதழுதரற்றினானால்.

வெண்டரங்கவேலை - வெள்ளியஅலைகளையுடையகடல, முற்றிய - சூழ்ந்த, உ த்தபோதே - பிறந்தபொழுதே, மாய - இறக்க, காவலன் - அரசன், கடை - வாயி

இளம்பசுங்குழவியோரெட்டிறந்துபாடெய்தவிவ்வா
றுளங்கசிந்துருகிமீட்டுமொன்பதாங்குழவிதுஞ்ச
வளங்கெழுவேந்தன்கொற்றவாய்தலிற்கொணர்ந்துசென்று
துளங்கியமறைவலாளன்சோர்ந்தனன்புலம்புவானால்.

இறந்துபாடெய்த - இறந்துபடுதலையடைய, குழவி - குழந்தை, துஞ்ச - இற கொற்றவாய்தலில் - வெற்றியையுடையவாசற்படியில், துளங்கிய - மனந்தளர்ந்

அல்லலுற்றழுங்குகின்றவந்தணன்வதனநோக்கி
மல்லலங்குழவியிங்ஙன்மாய்ந்திடாவண்ணங்காப்ப
வில்வலாரில்லைகொல்லிவ்வியனகர்ப்பரப்பிலென்னப்
பல்லுளைப்புரவித்திண்டேர்ப்பார்த்தனுங்கியம்பினனே.

அல்லலுற்று - துன்பமடைந்து, அழுங்குகின்ற - வருந்துகின்ற, வதனம் - ( மாய்ந்திடாவண்ணம் - இறவாதபடி, வியன் - பெரிய, என்ன — என்று, பார்த்

அருமறையந்தணனவ்வுரைகேட்டலோடும்
ஒருகுழையொருவன்றன்னினோங்கலான்மாரிகாத்த
விரைமலர்த்தாரினானின்விலவலாய்கொல்லோசெங்கட்
குரிசினீயென்றுநெஞ்சங்குழைந்தனன் கூறினானே.

ஒருகுழையொருவன்றன்னின் - பலராமனினும், ஓங்கலான்மாரிகாத்தவிரைமலர்த்தாரினானின் - கண்ணபிரானினும், குரிசில் - அரசனே, குழைந்தனன்—குழைந்து.

அலப்படையவனுமல்லனதிர்புயன்மாரிகாப்ப
மலைக்குடையெடுத்துநின்றமணிநிறமாலுமல்லன்
நலத்தகுமறைவலாளனானிகல்விசயன்மற்றென்
சிலைத்தொழில்காண்டியென்றுசெம்மாந்துரையாடலுற்றான்.

அலப்படையவன்—பலராமன், அதிர்புயன்மாரிகாப்பமலைக்குடையெடுத்துநின்றமணிநிறமால் - கண்ணபிரான். (௬)

எழில்வளர்குழவிதோன்றினினியுயிர்காப்பல்காவா
தொழிவனேலழிவின்மூழ்கியுள்ளுயிர்துறப்பலென்று
மழலைவண்டுழலுந்தாரோன்வஞ்சினமுரைப்பக்கேட்டாங்
கழுகுரலந்தணாளனகன்மனைகுறுகினானால்

காப்பல் - காப்பேன், உயிர்துறப்பல் - உயிர்விடுவேன், வஞ்சினம் - சபதம், அழிவின்மூழ்கி - தீப்பாய்ந்து (௭)

அங்கமோராறுந்தேர்ந்தவந்தணனன்பின்வேட்ட
கொங்குடைந்தொழுகுமன்றற்குழல்கருக்கொண்டுபத்தாந்
திங்கள்வந்துற்றதாகச்செம்மனீகாதியென்று
வெங்கொலைபழுத்தபோர்வில்விசயனுக்கியம்பினான்.

அங்கமோராறும் - வேதாங்கங்களாறும், அன்பின்வேட்ட - அன்போடுமணஞ்செய்த, கொங்குடைந்தொழுகுமன்றற்குழல் - மனையாள், கருக்கொண்டு - கர்ப்பங்கொண்டு, செம்மல் - அரசனே. (௮)

ஏர்கனிந்தொழுகுமாதினீற்றறைமருங்குமுற்றும்
ஆரமர்கடந்துவெம்பியடுசரக்கூடமாக்கிக்
கூருறுபகுவாய்வெய்யகூற்றமுங்குலுங்கியஞ்சக
கார்முகங்குழைத்துநின்றுகாத்தனன்பார்த்தன்மாதோ

ஈற்றறை - பிரசவவீடு, கடந்து - வென்று, சரக்கூடம்—அஸ்திரங்களாற்செய்யப்பட்டபின்னல்வீடு, கூற்றமும் - யமனும், கார்முகங்குழைத்து - வில்வளைத்து. (௯)

வேணவாத்தழைந்துமொய்த்தவெண்ணகைக்குமுதச்செவ்வாய்ப்
பூண்முலைமாதரெல்லாம்பொம்மெனப்பொருமியேங்க
மாணெழில்கனிந்தபேதைமாதிளவயிறுவாய்த்த
காண்வருகுழவிதானுங்காண்கலாக்கரந்ததன்றே,

மாணெழில் - பேரழகு, வயிறுவாய்த்த - பெற்ற, கரந்தது - மறைந்தது. (௧௦)

கூற்றுயிர்வாரும்வண்ணங்கொடுஞ்சிலைகுழையவாங்கிக்
காற்றுறழ்கலினமான்றேர்க்காளைநீகாத்தவாற்றால்
தோற்றியகுழவிமெய்யுந்தோன்றலதொளித்ததேயென்
றாற்றவுநகைமற்றவ்வந்தணனரற்றினானே.

காற்றுறழ் - காற்றையொத்த, கலினம் - கடிவாளம், மான் - குதிரை, மெய்யும்—உடம்பும், அரற்றினான் - கதறினான். (கக)

விற்றிறனன்றுகாப்பவில்வலாரிலைகொலென்னும்
சொற்றிறனன்றுகாத்ததொழிலுநன்றம்மவென்னாப்
பற்றலர்பரவுநோன்றாட்பார்த்தனைப்பலகானோக்கிக்
கற்றுணர்மறைவலாளன்கரைந்தனன்கலுழ்ந்தானன்றே.

பற்றலர் - பகைவர், பரவும் - துதிக்கின்ற, நோன் - பெருமை, கலுழ்ந்தான்—அழுதான். (௧௨)

அலைகுறுநதுயரிற்றாழ்ந்தவந்தணன்குழவியீரேழ்
உலகமுந்தேடிக்காணுதொள்ளழற்புகுவலென்று
மலைகொலாமெனவீங்கிவனப்புவீற்றிருநதவாரபொற்
சிலைகுலாந்திண்டோட்பார்த்தன்செந்தழல்வளர்த்தானுயகே.

அலைகுறும் - அலையாநின்ற, துயரில் - துன்பக்கடலில், தாழ்நத - மூழ்கின, அழற்புகுவல் - தீப்பாய்வேன், என்னு - என்று (௧௩)

பாட்டிளஞ்சுரும்புமூசபனிமலர்க்கானஞ்செந்தீ
ஊட்டியகுரிசின்மற்றுங்கொள்ளழற்புகுவானிற்பக்
காட்டுவங்குழவிதன்னைக்காண்டிநீயென்றுகண்ணன்
கோட்டினிற்செய்தேர்மேற்கொண்டனன்போயினானல்.

சுரும்புமூசு - வண்டுகள்மொய்க்கிற, பனிமலர்க்கானம் - காண்டவவநம், செந்தீயூட்டியகுரிசில் - அருச்சுநன், கோட்டினின் - தந்தத்தால். (௧௪)

ஆழிமால்வரையினப்பாலடரிருட்பிழம்பிற்செல்லா
ஆழியந்தடநதேர்பூண்டவலஙகுளைப்புரவிநிற்ப
ஆழியைவிடுத்தான்செஞ்சூட்டாயிரந்தலையநாகத்
தாழிவாய்த்துயிற்சிநீத்தவாயிரஞ்செஙகணம்மான்

ஆழிமால்வரை - பெரிதாகியசக்ரவாளகிரி, அடர் - செறிநத, இருட்பிழம்பு—இருட்கூட்டம், செல்லா - செனறு, ஆழி - உருள், ஆழி - சக்ராயுதம், செஞ்சூட்டாயிரந்தலையநாகத்தாழிவாய்த்துயிற்சிநீத்தவாயிரஞ்செஙகணம்மான் - கண்ணபிரான். (௧௫)

ஒள்ளழற்பரிதிகோடியுட்கும்வாளொளியநேமி
அள்ளிருட்பிழம்புநக்கியலர்கதிர்க்கற்றைதூற்றப்
புள்ளியகலினமான்றேரபொருக்கெனப்பறநதுபொங்கு
வெள்ளிவெணடரஙகமாடுவிரிகடலிறுத்ததன்றே.

பரிதிகோடி - கோடிசூரியர்கள், உட்கும் - அஞ்சும்படியான, வாள்ஒளிய—மிக்கவொளியையுடைய, நேமி - சக்ராயுதம், நக்கி - அழித்து, பொருக்கென - விரைவாக,

வெள்ளிவெண்டரங்கமாடு - மிருவெண்மையாகிய அலைகளையாகின்ற, இறத்தது - தங்கிற்று. (கரு)

கலிநிலைத்துறை.

பின்னல்வெண்டிரைப்பெரும்புறக்கடன்முகட்டிடையே
மன்னுசெங்கதிர்மணிமுடியாயிரங்கவித்த
பன்னகத்தின்மேற்பணைப்புயமெட்டொடுங்கிடந்த
கன்னியந்துழாய்க்கருங்கடல்கண்டனர்தொழுதார்.

பன்னகத்தின்மேல் - பாம்பின்மேல், (பாம்பு - ஆதிசேடன்), பணை - பருமையாகிய, கன்னியந்துழாய்க்கருங்கடல் - கண்ணபிரான் (கஎ)

துளும்புசெஞ்சுடர்மருடமுங்கொடியும்வார்குழையும்
வளங்கொண்மால்வரைமார்புசேர்கவுத்துவமணியும்
கிளர்ந்தபேரொளிமன்செய்க்கிடந்தவப்பெருங்கார்
தெரிந்தநல்லமுதுகுத்தெனவின்மைசெப்பும்

துளும்புசெஞ்சுடர் மருடமுங்கொடியும்வார்குழையும் வளங்கொண்மால்வரைமார்பு சேர்கவுத்துவமணியும்கிளர்ந்தபேரொளிமன்செய்க்கிடந்தவப்பெருங்கார் - கண்ணபிரான், உகுத்தென - சிந்தினாற்போல. (கஅ)

மலைகுலாவியமாணெழிற்றோளினீர்மற்றெம்
கலைகளாகியநும்மையான்காண்பதுகருதி
அலைகுலாவியவகனிலவரைப்பினுங்குதித்த
குலவுகூரெழிற்குழவிகளிவ்வுழிக்கொணர்ந்தேம்

மலைகுலாவிய - மலைபோன்ற, கலைகள் - அம்சங்கள், காண்பதுகருதி - காணவேண்டுமென்பதையெண்ணி, நிலவரைப்பில் - பூலோகத்தில், இவ்வுழி - இவ்விடம்.

நறையுயிர்த்தபூந்தாரினிர்களிகடன்ஞாலப்
பொறைதவிர்த்துநீர்வம்மினென்றின்னுரைபுகலா
மறைவடித்தவன்மாணெழிற்குழவிகள்பத்தும்
எறிதிரைக்கடறுயின்றருளிறையவனீந்தான்

நறையுயிர்த்த - தேனைச்சிந்துகிற, வாசனைவீசுகிற பைந்தாரினிர் - பசியபூமாலையையணிந்தவரே, ஞாலப்பொறைதவிர்த்து - பூபாரத்தையொழித்து, புகலா - சொல்லி, மறைவடித்தவன் - பிராமணன், எறிதிரைக்கடறுயின்றருளிறையவன் - திருமால்.

முழுமுதற்பொருண்முளரியஞ்சேவடிவணங்கி
மழைமதக்கரிமணிமருப்பொசித்தமாதவனும்
எழுவெனப்பணைத்தேந்துதோள்விசயனுமீளாக்
குழவிபத்துமக்குலமறையவற்கவட்கொடுத்தார்.

முழுமுதற்பொருள் - திருமால், முளரி - தாமரைமலர், மழைமதக்கரிமணிமருப்பொசித்தமாதவன் - கண்ணபிரான். (உக)

உன்னுகின்றவக்குழவிகளெய்தலுமுயிர்த்தோர்
துன்னுகின்றபேர்மகிழ்ச்சியைச்சொலவெவர்வல்லார்

மன்னுகின்றநம்மாயவன்மகம்பலவியற்றி
மின்னுகின்றநன்னிதித்திரள்வேதியர்க்களித்தான்.

உயிர்த்தோர் - பெற்றோர், மகம் - யாகம் (உஉ)

வேலைமாநிலமெல்லியலரும்பொறைதீர
ஆலமன்னவாளரசொடுபொரவிளையாடு
நீலமேனியனீர்விளையாட்டுவந்தனனால்
கோலவார்குழற்கோதையர் குழாத்தொடுமணந்தே.

வேலை - கடல், மாநிலமெல்லியல் - புதேவி, பொறை - பாரம், ஆலம் - விஷம், பொர - போர்செய்ய, நீலமேனியன் - கண்ணபிரான், கோலவார்குழற்கோதையர்குழாத்தொடுமணந்து - மாதர்கூட்டத்தோடுகூடி, உவந்தனன் - விரும்பினான். (உங)

இறந்தமகனைத் தந்த வத்தியாயம்-முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—கஅஉக.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்

---

ஐம்பத்துநான்காவது

## புனல் விளையாட்டத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

போர்விளையாடுசூர்வேற்புரவலகேட்டியென்னுஞ்
சீர்விளையாடுபொற்பூந்திருப்புணர்மார்வத்தண்ணல்
கார்விளையாடுதண்ணங்காடுசூழ்மதுரைமூதூர்
நீர்விளையாடுவண்ணநிகழ்த்துவன்முனிவன்மாதோ.

புரவல - அரசனே, கேட்டி—கேட்கக்கடவை, சீர்விளையாடுபொற்பூந்திருப்புணர் மார்வத்தண்ணல் - கண்ணபிரான், கார்விளையாடு - மேகங்கள்தவழ்கின்ற, நிகழ்த்துவன் - சொல்வானயினான். (க)

கலிவிருத்தம்.

எவ்வமற்றுறையெண்ணிரண்டாயிரம்
கொவ்வைவாய்ச்செழுங்கோதையரின்புற
ஒவ்வொருத்தருக்கொவ்வொருகாந்தனாச்
செவ்விவாய்ப்பத்திகழ்ந்தனன்செங்கணன்.

எவ்வம் - குற்றம், எண்ணிரண்டாயிரங்கொவ்வைவாய்ச்செழுங்கோதையர் — பதினாறுயிரங்கோவியர், காந்தனா—கணவனாக, செவ்விவாய்ப்ப—அழகுபெற, செங்கணன்— கண்ணபிரான், திகழ்ந்தனன் - விளங்கினான். (உ)

காந்தண்மெல்விரற்காரிகையாரொடும்
பாந்தண்மேற்றுயில்பண்ணவன்பல்பிடிக்

கூந்தன்மாவொடுகுஞ்சரமெய்தல்போல்
சாந்தளாவுதடத்தடைந்தனரோ.

காந்தள்மெல்விரற்காரிகையார்—கோவியர், பாந்தண்மேற்றுயில்பண்ணவன்—கண்ணபிரான், பிடி—பெண்யானை, குஞ்சரம்— ஆண்யானை, சாந்து—சந்தனக்குழம்பு, அளாவு-கலந்த, தடத்து - வாவியில் (௫)

ஞாலமீதுநடந்துபன்மன்னொடு
நீலமேகநெடுங்கடலாடல்போல்
சேலுலாவுகட்டேவியர்தம்மொடு
கோலிவாவிகுடைந்தனன்மாயவன்.

கோலி - கூடி, சூழப்பெற்று ஞாலம் - பூமி, சேலுலாவு - கயல்மீன்போன்ற.

வாங்குகோலமருங்கினர்வாய்ந்த
ஓங்குநூபுரத்தாலினமாமெனப்
பாங்கர்மேவிப்படர்நடைகாண்டலும்
ஆங்குநாணியகன்றனவன்னமே

வாங்கு - வளைந்த, கோலம் - அழகு, மருங்கினர் - இடையையுடையவர், நூபுரத்தால் - காற்கிலம்பொலியால், பாங்கர் - பக்கத்தில், படர் - நடக்கிற. (௬)

பூவின்மென்கரத்தான்முனம்புள்ளடும்
காவிவண்ணன்வருவதுகண்டுகொல்
தாவிநன்மலர்சார்ந்துறைபுட்குலம்
வாவிவிட்டுமறைந்தனவல்லையே.

புள்ளடுங்காவிவண்ணன் - கண்ணபிரான், வல்லை-விரைவாக, புட்குலம்-பறவைக்கூட்டம். (௭)

வேறு

அல்லியந்தாமரையாவிசுற்றினர்
பல்லியம்பற்பலர்பாடல்யாழ்பலர்
முல்லையங்குழல்பலர்முழக்கினார்புகழ்
மல்லடுபுயத்தனைவழுத்தினாரரோ.

அல்லி - அகவிதழ், அம் - அழகு, தாமரையாவி தாமரைத்தடாகம், பல்லியம்—பலவகைவாத்தியம், யாழ் - வீணை, குழல் - வேய்ங்குழல், மல்லடுபுயத்தனை — கண்ணபிரானை. (எ)

மந்தரகிரிதருமலையினான்முனம்
அந்தரமழைதடுத்தாண்டவாண்டகை
எந்திரநீரொடுதிலகுதோகையர்
சுந்தரத்தனவரைதூவினானரோ.

மந்தரகிரிதருமலையினால் - கோவர்த்தநகிரியால், அந்தரமழைதடுத்தாண்டவாண்டகை - கண்ணபிரான், எந்திரம் - சிவிறி, (நீர்வீசுந்துருத்தி) தனவரை - தனமலை. தூவினன் - சொரிந்தான். (அ),

விரைதருசிவிறிநீர்மின்னனார்தன
வரைதருமாற்றின்மாமாயன்றனைநீர்
நிரைதருமழைக்கெழினிறத்தினன்றியும்
உரைதருதொழிலினுமுவமையாயினான்.

விரைதரு - வாசனைவீசுகிற, சிவிறிநீர்—எந்திரநீர், தனவரை - தனமலை, தருமாற்றின் - பொழியுந்தன்மையால், மழைக்கு - மேகத்துக்கு (௯)

மங்கையர்துகிலுறமாயனங்கையால்
குங்குமச்சிவிறிநீர்கொண்டங்கெற்றலும்
அங்கரவல்குலினழகுதோற்றலால்
நங்கையர்வாவியினணிமூழ்கினார்

துகில் - ஆடை, எற்றலும் - வீசுதலும் (௰)

நீரிடைக்குளித்தெழுமேயமங்கையா
வேரியங்குழலினின்றுறைமேவலால்
ஓரொழுகினம்பொழிந்துருகவென்றெழு
காரின்மேற்பொழிவதாரைகாட்சிபோன்மரோ.

தாரை—நீர்த்தாரை, உருகவென்று—வருகனைவென்றுகருதி, எழுகாரின்மேல்—சத்தமேகங்களின்மேல், காட்சி - தோற்றம் (௧௧)

தொண்டைவாயினர்முகந்தோற்றல்பூந்தடம்
அண்டர்கோனடைதலுமதிசயம்பெறக்
கண்டுசேதாம்பனீள்காவிபூத்தெழு
புண்டரிகங்களும்பூத்தபோலுமே

தொண்டை - கொவ்வைக்கனி, அண்டர்கோன் - கண்ணபிரான், சேதாம்பல், செவ்வல்லிமலர், காவி - நீலமலர், புண்டரிகங்கள் - தாமரைமலர்கள் (௧௨)

மாககருங்கண்ணியர்வளைந்தவண்குழற்
றேக்கமழ்மலர்மணிசிதறவாடலால்
காக்களின்மரங்களுங்கமழும்வல்லியிற
பூக்களும்பூஞ்சுனைபூத்தபோலுமே

வளைந்த - சுற்றிய, தேக்கமழ் - தேன்பரிமளிக்கிற, காக்களின் - சோலைகளின்—வல்லியிற்பூக்கள் - கொடிப்பூக்கள் (௧௩)

மாக்கரும்புயல்புயமகிழ்ந்துநோக்குமவ்
வேற்கண்மங்கையர்முகம்விளங்கன்மீனமார்
பாற்கடனம்பியைப்பார்க்குமாசையால்
சேற்கணங்களுமலர்சேர்தல்போலுமே.

மாககரும்புயல் - கண்ணபிரான், பாற்கடனம்பியை - கண்ணபிரானை, சேற்கணங்கள் - சேல்மீன்கூட்டங்கள். (௧௪)

விரைதருதாரினான்விளங்குதோளிணை
குறைதருபுனலவர்குடைந்துநோக்கலால்

திரைமிசைமாதரிற்சிதைந்துளேமென
வரையிசைக்குவளைபோய்மலர்தல்போலுமே.

விரைதருதாரினான் - கண்ணபிரான், துளைதரு - ஒலிக்கிற, குடைந்து - முழுகி, சிதைந்துளேம் - அழிந்துள்ளோம், வரையிசை - மலையின்மேல், குவளை - நீலமலர். ( )

பங்கயவாவிநீர்படிந்தபாவையர்
குங்குமமான்மதங்கரைந்துநீரளாய்ப்
பொங்குநீர்செந்நிறம்பொருந்துசோணையும்
கங்கைபுக்கயமுனைபுகுதல்போலுமே.

பங்கயவாவி—தாமரைத்தடாகம், மான்மதம்—கஸ்தூரி, அளாய்—கலந்து, சோணை—சோணாநதி, யமுனை - காளிந்திநதி. (கசு)

கழையணிதோளினர்காமுற்றவ்வழிக்
குழகனையணைத்தனர்தழுவியவகையால்
எழிலியைப்புணர்ந்துமின்னியைந்ததென்னத்
தழுவினர்வாசநீர்தாமுறந்தாவினர்.

கழையணிதோளினர்—மூங்கிலைப்போலும் அழகியதோளையுடையமாதர், காமுற்று—விரும்பி, குழகனை — கண்ணபிரானை, தழுவி - கூடி, எழிலி—மேகம், புணர்ந்து—கூடி.

குருதிவேற்கண்ணினார்குங்குமத்தகர்
பொருதிறன்மாயவன்புயத்திற்றாவுதல்
வருகதிர்நீலமால்வரையின்மீதிளம்
பரிதியின்கதிர்க்குழாம்பாய்தல்போலுமே.

குருதிவேற்கண்ணினர் — கோவியர், தாவுதல் - இறைத்தல், நீலமால்வரை—பெரியநீலமலை, இளம்பரிதி - பாலசூரியன். (கஅ)

கன்னியர்தூயவணிகலனணிமேனிமேல்
பொன்னவிரணியினர்பொழிதல்வாசநீர்
மின்னினங்களுநனிமிடைந்துமேகமேல
துன்னுவெண்டாரைநீர்சொரிதறோற்றுமே.

பொன்னவிரணியினர்—கோவியர், மிடைந்து-நெருங்கி, தோற்றும்—காணப்படும்.

நீளொளிப்புயத்தினீர்நிறைந்தகவகையாள்
தாளினிற்றவழ்ந்துநற்றகைபெற்றுளன
வாளினிற்பொலிவிழிவாணிப்பேர்நதி
தோளினிற்காண்வரத்தோற்றல்போலுமே.

தகை - பெருமை, வாணிப்பேர்நதி - சரசுவதிநதி. (உ0)

களிதருகண்ணியர்கரையின்மீதுறத
தெளிதருபுனற்றுளிசிதறல்பூங்குழல்
தளிதருமுகிற்கணஞ்சார்ந்துதண்ணிலா
ஒளிதருமுத்தினமுகுத்தல்போலுமே.

களிதருகண்ணியர் - கோவியர், தளி—துளி, முகில்கணம் - மேகக்கூட்டம், உகுத்தல் — சிந்துதல். (௨௧)

இன்னணம்புனல்விளையாடியின்னகைக
கன்னன்மென்றனையசொல்லியருங்கண்ணனும்
வன்னநுண்டுகின்மலர்மாலைசாந்தெழிற
பொன்னணிமணியணிபுனைந்துவைகினார்.

இன்னகைக்கன்னன்மென்றனையசொல்லியர்—கோவியர், வன்னம்-நிறம், அழகு, நுண்டுகில் — மெல்லியஆடை. (௨௨)

வெண்ணகைமடநதையர்விளஙகுநல்லெழிற்
கண்ணனையருள்பொழிகமலக்கண்ணனை
அண்ணலையேநினைநதழிவிலாநெறி
நண்ணினாரதிறனைவிலுவாமரோ.

வெண்ணகைமடநதையர் — கோவியர், அழிவிலாநெறி - முததிநெறி. (௨௩)

தரவுகொசசகக்கலிப்பா.

பள்ளததினிற்பாநதுபாய்புனல்போன்முன்னமளை
கள்ளத்தினுண்டநங்கள்கண்ணனுழைபோய்ததிரும்பா
உள்ளத்தராகியொப்பிலுருவமடவார்விரக
வெள்ளத்தினுள்ளழுந்திமெலிநதுசிலவிளம்புவரால.

அளை - வெண்ணெய், விரகவெள்ளததில் — காமசமுததிரததில். (௨௪)

மன்றலெறிநறுந்துளவமதுமாலைவேட்டுருகித
தென்றலுழுவைப்போததாற்றெருமாலுற்றாமெனவே
கன்றுகொடுகனியுதிர்ததகண்ணனெழில்காதலிததோ
அன்றிலெழிற்குலமெல்லாமயர்நதுறஙகாதார்ப்பதுவே

மன்றவெறி - வாசனைவீசுகிற, வேட்டு - விரும்பி, உழுவைப்போதது—ஆண்புலி

பண்ணீர்மைகொண்டசெய்யபவளவிதழ்வாய்மலராள்
எண்ணீர்மைகொண்டிலகுமிருகடைக்கணுமெலிியேம்
உண்ணீர்மைகொண்டதனியொருமுகிலையுண்ணினைததோ
கண்ணீர்மைசிந்தநனிகரைகின்றிகழறாயே.

|பண்ணீர்மைகொண்டசெழும்பவள விதழ்வாய்மலராள், எண்ணீர்மை—கருத்து, முகிலை - கண்ணபிரானை, கண்ணீர்மைசிநத — கண்ணீரும் அஞ்சநமும்சிந்த, நனி—மிகுதியாக, கரைகின்றி - கரைகிறாய், கழறாய் — சொல்வாய். (௨௫)

ஆரமணியீங்கெறிவாயணிவளைக்கைபோகநிற்பாய்
நீரதனினவியாதநெடுந்தழலையுள்ளமைப்பாய்
ஈரமுறுவெண்மதியமெழுமிரவினிளிதுறங்காய்
வாரிதியேயெங்களைப்போன்மாயனையேன்வேட்டனையே.

ஆரமணி - முத்துமணி, ஆரம்அணி, அணிவளைக்கைபோக - அணிந்தவளையல் கைசோர, அழகியசங்கு—ஒழுங்காகப்போக, நீரதனினவியாதநெடுந்தழல்—வடவைத்தீ, காமாக்கினி. (உஎ)

கூறாய்கொன்மலைநீயுங்கோகநகைசேர்புயலின்
வீறாரும்புயக்குவட்டின்மேவமனம்வைத்தனையோ
மாறாதுசாந்தெறிந்துமாமழைக்கணீருவி
ஆறாகியொழுகுபரிசையாமேனிறந்திலமே.

கோகநகை-திருமகள், புயல்-மேகம், குவடு-மலை, சாந்து-சந்தனம், பரிசு-தன்மை.

கண்ணனெனுங்கருணையலைக்கார்கடலைக்காணாமல்
எண்ணமிகயாக்கைநனியிளையாதயருமெங்களைப்போல்
தண்ணெனுநீர்கடலாந்தலைமகனைக்காணாமே
வண்ணநதிகாணீரும்வற்றிமெலிவுற்றீரோ

யாக்கை - உடம்பு, தலைமகன் - கணவன், வண்ணம் - அழகு. (உகூ)

காதலருந்தேமாவின்றளிரருந்துங்கோகிலமே
ஓதுநசையுற்றோர்களுனைவெறுப்பாருளரோலும்
கோதறுதிகழ்கழையிசைத்தகொண்டலொப்பதுகூவுதலான்
காதல்பெறநினக்கென்னைகைம்மாறுசெய்குவமே.

கோகிலம் - குயில், நசை—ஆசை, கோதறுதிகழ்கழையிசைத்தகொண்டல்—கண்ணபிரான், கைம்மாறு - பிரதியுபகாரம். (ஙo)

நந்தாதுவளியருந்துநாகணையின்மீதுதுயில்
கொந்தார்நறுந்துளவக்குரிசிலுடன்கூடினையோ
சந்தாடவியின்மிசைமேற்றவழ்ந்துவருந்தண்ணெனுஞ்சீர்
மந்தாநிலம்மெனுங்கால்வருந்துதனின்னீர்மைத்தோ

நந்தாது - கெடாமல், வளி - காற்று, கொந்தார்நறுந்துளவக்குரிசில் - கண்ணபிரான், சந்தாடவி - சந்தனக்காடு, மந்தாநிலம் - தென்றல், கால் - காற்று. (ஙக)

மூரனிலவாலந்தண்முகமதியான்மோகவிருள்
சேரும்வகையேயெமக்குச்செய்தகன்றமாயவனை
ஈரமதியேநீயுமெய்தமதியுண்ணினைந்தோ
காரிருள்கால்சீக்கவருகலையிழந்துவாடுவதே.

மூரல் - நகை, நிலவால் — சந்திரிகையால், ஈரம் - குளிர்ச்சி, மதி - அறிவு, கால் சீக்க - வேரோடழிக்க. (ஙஉ)

போதிருக்கும்புரிகுழலாள்புகழ்ந்துபுணர்மான்மருவும்
தூதுரைக்கவந்தனையோதோயானீங்கும்மையெனும்
தீதுரைக்கவந்தனையோசெங்காலமடவனமே
ஏதுரைக்கவந்தாய்நீயியம்புதியென்றோதினரால்.

போது - தாமரைமலர், போதிருக்கும்புரிகுழலாள் - திருமகள், மால் - கண்ணபிரான், தோயான் - புணரான். (ஙங)

கலிவிருத்தம்.

கொத்தலர்ந்தமகாழுங்தொடைப்பூங்குழற்
றத்தைமென்மொழியார்தவமென்சொல்கேன்
மத்தவெங்கரிமாய்த்தவம்மாயனை
இத்திறன்புகன்றெய்தினர்முததியே

தத்தை - கிளி, மத்தவெங்கரிமாய்த்தவம்மாயன் - கண்ணபிரான். (௩௪)

நண்ணுமுத்திமாறு மந்தனைச்சொலின்
வண்ணமுற்றமணிநிறவண்ணனைக்
கண்ணனிற்கண்டுங்கல் நதுங்கபூறியும்
உண்ணினைத்தும்வீட்டாங்கலரிதுகொல்

மால் - திருமால், மணிநிறவண்ணனை - கண்ணபிரானை, கபூறியும் - வார்த்தையாடியும், வீட்டோங்கல் — முத்தியடைதல் (௩௫)

நல்லறந்துருவாகியநாயகன்
மல்லுற்றவறம்பொருள்வாழ்வுடன்
இல்லறந்தினர்க்கின்பமுமுணடெனச்
சொல்லுற்றனன்போன்றுதுலங்கிறேன்

நல்லறத்துருவாகியநாயகன் — கண்ணபிரான் (௩௬)

பாரினமேற்பகைபாறப்சுநதுழாய்
வேரியந்தொடைவிண்ணவன்வேட்டவா
ஈரெணாயிரரெனறுசொலெண்ணெடுமை
சேருநூற்றிருநான்குதெரிக்கினே

பாற்ற - ஓட்டுகிற, பசுந்துழாயவேரியந்தொடைவிண்ணவன் — கண்ணபிரான், வேட்டவர் - மணஞ்செய்தவா, ஈரெணாயிரர் - பதினாறுயிரவர். (௩௭)

மன்னுமொவ்வொருமங்கையரைந்தொடைந
தென்னுந வெழிமலைய்நபுதல்வரைப்
பொன்னகர்ப்புலவோர்புகுநதாரெனப்
பன்னுதெண்டிரைப்பாரிலளித்தனா

ஐந்தொடைந்து - பத்து, பொன்னகர் - பொன்னுலகம், புலவோர் - தேவர், புகுந்தார் - அவதரித்தார், அளித்தனர் - ஈன்றார்கள் (௩௮)

அரசகூறுமரிவையர்தங்களில
பெருமைசேர்ந்துபிறங்குமுதன்மையோர்
உருவமார்ந்தவுருக்குமணிப்பெயர்த்
திருவனுண்முதற்செப்புமவ்வெண்மரே.

அரிவையர் - மாதர், பிறங்கும் - விளங்குகிற, திருவனள் - திருமகளைநிகர்த்தவள்

கண்ணனல்கியகாதலர்தம்மினற்
பண்ணமைந்தபரிதிகழ்மாரதர்

அண்ணலம்மலரைங்கணைவேண்முதல்
எண்ணிரண்டொடிரண்டெனவென்பவே.

நல்கிய - பெற்ற, காதலர் - புதல்வர், மலரைங்கணைவேள் - மன்மதன் (பிரத்தியும்நன்). (௪௰)

கலிநிலைத்துறை.

அன்னமைந்தருக்கருமெய்யர்கூறினைங்கணைவேள்
பன்னரும்புகழ்சேர்நிருசதனற்பானு
மன்னுநல்லெழிற்காங்கிமான்சாமபன்மேல்வருஉதன்
பொன்னங்குன்றெனப்புயப்பிரகபானு பட்கரனே.

ஐங்கணைவேள் - ப்ரத்யும்நன் (௪௧)

அருணனற்கவிசேவபானுப்பெயராசன்
விருகன்சித்திரபானுவென்மித்திரவிந்தன்
மருமலர்த்தொடைமித்திரனெனச்சுரகேசவன்
இருநிலத்தவர்புகழுநிர்க்குரோதனென்றிசைப்பார்.

மரு - வாசனை, மலர்த்தொடை - பூமாலை, இருநிலத்தவர்-பெரியநிலவுலகத்தவர்.

தோடுவாய்விரிபூங்கணையவனொடு தோன்றல்
மாடநீணகர்மாதுலன்மகண்முலைமணந்து
பீடுசேர்பதியையிரங்கரிவலிபெறுஞ்சீர்
ஆடல்சாலநிருத்த, னையளித்தனனன்றே

தோடு - இதழ், மாதுலன் - மாமன், பீடு - பெருமை (௪௨)

ஐயதாரணியநிருத்தனளித்தருளாசன்
வையமேம்புகழ்வச்சிரன்வச்சிரனெனும்பேர்ச்
செய்யதாமரைக்கண்ணிணுனொருவனுந்தெரிக்க
வெய்யசாவத்திக்குய்த்தனன்விளிவுறாதன்றே

ஐய - அழகிய, விளிவுறாது - இறவாமல் (௪௩)

வாரிசூழ்புவிமுழுவதுங்காத்தழிமதுப்பாய்
தாரினனெழில்வச்சிரனளித்தருடசயன்
காரினேர்கொடைத்தடக்கையான்கயல்விழிமடவார்
ஏரினன்மதனெனுஞ்சிறைபிரதிவாகென்ப.

வாரி - கடல் மது - தேன், தாரினன்-மாலையையுடையவன், ஏரினன்-அழகன்.

பிரதிவாகுவென்றுரைதருமெய்யரினன்பெறுஞ்சேய்
இரதிநாதனுமேககறுமெழிறிகழிறையோன்
காதிசாமுகக்களிற்றினன்கலியிருள்காயும்
வரதிவாகரன்மானவேற்சுவாகுமன்னவனே

உரைதரு - சொல்லப்பட்ட, சேய் - புதல்வன், இரதிநாதன் - மன்மதன், கலி-வறுமை, மானம் - பெருமை. (௪௫)

தேங்கொடாரினன்சுவாகுநற்றவத்தருள்சிறுவன்
ஓங்குமந்தாரத்தடம்புயனுக்கிரசேனன்

வாங்குவிற்கையம்மன்னவன்மதலைவாளரவம்
தாங்குமிந்நிலம்புரந்தருடருசதசேனன்.

தேம் - தேன், வாங்கு - வளைந்த, மதலை - புதல்வன், வாளரவம் - ஆதிசேடன்.

இன்னவாறாசல்லறத்தினராயினராயக்
கன்னியந்துழாய்க்கருமுகின்மரபினிற்பிறந்தார்
மன்னர்மன்னவயாதவர்யாவருமதிக்கின்
பொன்னிருட்டகத்துறைதரும்புலவர்தங்குழுவே.

கன்னியந்துழாய்க்கருமுகில் - கண்ணபிரான், பொன்னிருட்டகத்துறைதரும் புலவர் - தேவர், குழு - கூட்டம். (௪அ)

வேறுவேறெடுத்தெதுகுலவேந்தர்பேர்விளம்ப
ஆறுகோடியாண்டாயினுமறைவதற்கரிதால்
மாறுநீங்கியமன்னவவொன்றுமேன்மருவு
நாறுகோத்திரமாயதவ்வெதுகுலநுவலின்.

மாறுநீங்கிய - ஒப்பற்ற, நுவலின் - சொல்லின் (௪௯)

ஆன்றசீர்ச்சேகயாதவரளப்பிலரவருக்
கூன்றநல்லறிவோதுவிக்குயர்கருங்குரவோர்
மூன்றுகோடியும்பதினொருநூறுமுன்மருவ
என்றவெண்பதுமெட்டுமென்றிசைக்குமெண்ணினரால்.

ஆன்ற - விஸ்தாரமான, அளப்பிலர் - அளவில்லாதவர், குரவோர் - ஆசாரியர்.

நோற்றிருந்தயனரன்றுதி நுவலவுமெட்டா
தூற்றிருந்தியோகியருளத்துவட்டெழுமமுதன்
போற்றிருந்தவர்புங்கவர்புவியினர்காண
வீற்றிருந்தனன்றுவரையினெங்கணும்விளங்க.

நுவலவும் - சொல்லவும், புங்கவர் — தேவர் (௫௧)

கொன்பொருந்தயிற்கொற்றவகுரைகடற்புவிமேல்
தன்பெருங்கதைத்தெள்ளமுதத்தினைததவத்தால்
அன்பினஞ்செவியகமடுத்தருந்தினரழியா
இன்பமெய்துவாரெனதுகுலத்துதித்தனனிறையோன்

கொன் — அச்சம், குரை - ஒலிக்கின்ற. (௫௨)

இன்னமாக்கதைகேட்குநரிசைக்குநரெவரும்
மன்னவேட்டனவேட்டனயாவையுமருவி
மின்னுமாமணிவேலைசூழ்விபுலம்வீற்றிருந்து
பின்னுமால்பரந்தாமமேபெறுகுவர்மாதோ.

இசைக்குநர்—சொல்லுவோர், வேட்டன—விரும்பின, வேலை—கடல், விபுலம்-பூமி.

புனல் விளையாட்டத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௧௧௬அ௨.

பத்தாங்கந்தம் முற்றிற்று.

ஸ்ரீ கிருஷ்ணசகாயம்.

---

# பதினொன்றாங்கந்தம்.

## முதலாவது

## இருப்புலக்கை பெற்ற வத்தியாயம்.



எண்டரப்பெரிதாகியயாதவர்குலனும்
மண்டுவெஞ்சமம்விளைத்துயிர்மடிதரப்புணர்த்துப்
பண்டைநீணெறிப்படர்தாக்குறித்தனன்பரவை
வெண்டிரைக்கடனிலப்பொறைதவிர்த்தருள்விமலன்.

மண்டுவெஞ்சமம்—மிருதியாகியகொடியயுத்தம், மடிதர—மடிய, பண்டைநீணெறி—பழையதாகியபெரியமார்க்கம், படர்தர - நடக்க, குறித்தனன் - திருவுளம்பற்றினன், பரவை - பரப்பு, நிலப்பொறை - பூபாரம். (க)

தாதலர்ந்தசெந்தாமரைநறுமலர்மணந்த
கோதைசேர்தடமார்பினன்குறிப்பறிந்தாங்குக்
காதிகாதலன்முதலியமுனிவரர்களிவண்
நீதமென்முருகுடைந்தபூங்காவின்வந்துற்றார்.

தாதலர்ந்தசெந்தாமரைநறுமலர்மணந்தகோதைசேர்தடமார்பினன் — கண்ணபிரான், குறிப்பு - எண்ணம், காதிகாதலன் - விசுவாமித்திரன். (உ)

கண்ணன்காதலர்கழைசுளிகடாக்களிறனைய
தண்ணந்தாமரைச்சாம்பனைச்சூற்கொள்பெண்ணுருவா
மண்ணிமாதவர்மருங்குபோய்மற்றிவள்பெறுவ
தெண்ணியோதுமின்யாவையுந்தெரிந்தநீரென்றார்.

காதலர் - புதல்வர், கழை—மூங்கில் (குத்துக்கோல்), சுளி—கோவிக்கிற, மண்ணி—அலங்கரித்து. (ங)

விரித்தகட்டுரைகேட்டலும்விழுத்தவமுனிவர்
சிரித்துமின்னுமிழ்செம்மணிச்சூட்டுவாளரவம்
பரித்தபாரினில்யாதவருயிரெலாம்பருகும்
இருப்புலக்கையொன்றுயிர்க்குமென்றெடுத்திசைத்தனரால்.

மின்னுமிழ்செம்மணிச்சூட்டுவாளரவம் - ஆதிசேடன், பரித்த - சுமக்கின்ற, உயிர்க்கும் — பெறுவாள். (ச)

உரைப்பருந்திறற்சாவம்வந்தெய்தலுமுயிர்த்த
இருப்புலக்கைகண்டென்செய்துமெனமனங்கலங்கி
விரைப்பசுந்துணர்வேந்தனுக்குணர்த்திமற்றதனை
அரத்தினுற்பொருததிர்திரைக்கடலிலிட்டனரால்.

உரைப்பருந்திறல்சாவம் - சொல்லுதற்கரிதாகியவலியசாபம், விரை - வாசனை, துணர் - பூங்கொத்து, பொருது - அராவி. (ரு)

வட்டவெண்டிரைவாரிவீழ்நுண்பொடியனைத்தும்
விட்டலர்ந்தவாட்கோரையாய்விளைந்தனவெய்ய
கட்டழற்பொறிகதுவுவாளரம்பொரவரிதா
இட்டகூர்நுதியிரும்பைமீன்விழுங்கியதன்றே.

வட்டவெண்டிரைவாரி - வட்டவடிவாகியவெள்ளிய அலைகளையுடையகடல், அரம்பொரவரிதா இட்டகூர்நுதியிரும்பு – கழுந்து. (சு)

விற்றடக்கையோர்வேட்டுவன்வலையகப்பட்ட
மற்றம்மீனினைக்குறைத்தலுமாங்கதன்வயிற்றின்
உற்றகூர்நுதியிரும்புகண்டொள்ளிதென்றுவந்து
புற்றராவெனப்புழுங்குவெங்கணைமுகத்தமைத்தான்.

குறைத்தலும் – அறுத்தலும், ஒள்ளிது – அழகிது, உவந்து - சந்தோஷித்து, கணைமுகத்து – அம்பின்நுனியில். (எ)

இருப்புலக்கைபெற்ற வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—எ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

இரண்டாவது

## வசுதேவற்கு நாரதர் தத்துவமுரைத்தவத்தியாயம்.



அன்னநாளினிலழல்சுடப்பசும்பொன்வார்ந்தன்ன
இன்னரம்புளர்யாழ்முனிவருதல்கண்டெதிர்போய்
மன்னர்மன்னவன்மானவேற்றிறல்வசுதேவன்
பொன்னந்தாதுதாழ்போதுதூய்ப்பணிந்தனன்புகல்வான்.

வார்ந்தன்ன - ஒழுகினாற்போன்ற, இன்னரம்புளர்யாழ்முனி - நாரதன், மானம்— பெருமை, (க)

அரிதுமானிடயாக்கைபெற்றிடல்பெறும்யாக்கை
எரியுமின்னெனவிறந்திடுமிறந்திடாமுன்னம்
மரகதப்பசும்பாசடைத்துளவநாண்மாலைக்
கரியவன்றனக்கன்பரைக்காண்டலோவரிதே.

எரியும் - பிரகாசிக்கிற, மரகதப்பசும்பாசடைத்துளவநாண்மாலைக்கரியவன்றனக்கு - கண்ணபிரானுக்கு. (உ)

விரிதிரைத்துயின்மெய்ப்பொருள்வெளிப்படுஞான்று
வருதிநீயொருமதலையாயென்றதையல்லால்
தருதியாலுயர்தருநெறியென்றுகேட்டிலனால்
அருளவேண்டும்வீடுறுதிறனெனமுனியறைவான்.

விரிதிரைத்துயில்மெய்ப்பொருள் - கண்ணபிரான், வீடுறுதிறன் — மோக்ஷமடையும்நெறி. (௩)

மனுகுலத்தொருமதியெனத்தோன்றியவிடபன்
தநயர்நூற்றுவர்தங்களிற்கவிமுதலாக
வினையினீங்கியவிழுத்தவமுனிவரொன்பதின்மர்
சினவுவேற்றிறனிமிமகமயற்றழிச்சேர்ந்தார்

மதி — சந்திரன், தநயர் - புதல்வர், மகமயற்றழி - யாகஞ்செய்யுமிடம். (௪)

கலிவிருத்தம்

புவிமீதுவணங்கிமகமபுரிவோன்
பவவேர்தெறுபாகவதர்க்குரிய
தவமாநெறிதான்மொழிவீரெனலும்
நவயோகியரோதினர்நல்லறனே.

மகம்புரிவோன் - யாகஞ்செய்பவன், (நிமி) பவவேர் - பிறவிவேர், தெறு—கல்லுகிற, நவயோகியர் - ஒன்பதுமுனிவர். (௫)

மதமாகரிமுன்சொலவந்தருள்கார்
கதையார்நறையுண்டுகொருத்தொடுபல்
விதமாகும்வினைப்பயன்விட்டெழில்சேர்
பதநாளும்வணங்குநர்பாகவதர்.

மதமாகரிமுன்சொலவந்தருள்கார் - திருமால், (கண்ணபிரான்) நறை — தேன், எழில்சேர்பதம் - அழகுபொருந்தியதிருவடி, வணஙகுநர் - தொழுவோர். (௬)

அறைகின்றசராசரம்யாவுமெழில்
நிறைகின்றவுருத்திருநேயமுறும்
இறையென்றறிகின்றவிலங்குமுளத்
துறைகின்றவருத்தமபாகவதர்.

சராசரம் - ஜங்கமஸ்தாவரங்கள், (இயங்கியற்பொருள் நிலையியற்பொருள்) திரு-திருமகள், இறை - இறைவன். (௭)

நிகரின்றிவளர்ந்தநெடுந்திருமால்
பகருந்தனிபத்திமைபாகவதர்
புகரொன்றியபுந்தியர்பேதையருள்
நகலொன்றியநட்பிகல்வான்கருணை.

பத்திமை - பக்தி, புகர் — குற்றம், புந்தியர் - புத்தியையுடையவர். (௮)

எண்ணும்முறையின்னனவன்னவர்பால்
நண்ணும்படிசெய்யுநலத்தினர்தாம்
தண்ணந்துணர்துன்னியதாமமணி
திண்ணம்புயசெப்புறுமத்திமரே.

இன்னன - இத்தன்மையன, தாமம் - மாலை. (௯)

துதிபெற்றமலர்த்துளவோன்வடிவாய்
வதிவுற்றவுருக்களின்மாத்திரமே
இதமுற்றுறைகின்றனனென்றுதொழும்
விதமுற்றவர்மேவுபிராகிருதர்.

துதிபெற்றமலர்த்துளவோன் - கண்ணபிரான், உருக்கள் - வடிவங்கள். (௧௦)

அறமார்மனையாரொடுமன்புசெயும்
திறமாரெழின்மேவுசிறார்களொடும்
இறையோன்பொருள்யானெனதென்பதற
உரைவோர்களுமுத்தமபாகவதர்.

சிறார் - மக்கள். (௧௧)

தருமாலைமலர்த்துளவததணியார்
உருமாலைநிகர்த்திடுமொள்ளொளிசேர்
திருமாலைவழுத்துநர்செய்யினவினை
அருமாலையொழித்தவரார்வதுகேள்.

உருமாலை - கண்ணபிரானை, அருமாலை - அரியமயக்கத்தை. (௧௨)

கருமத்தையியற்றுகருத்தருளத்
தருண்முற்றவழுக்கறுமற்றவுடன்
உரமுற்றறிவுற்றிடுமுற்றிடினோர்
பிரமத்தொடுமொன்றுவர்பின்னமறார்.

அழுக்கு - களங்கம், உரம் - வலி, அறிவுற்றிடும் மெய்யுணர்ச்சிதோன்றும், ஒன்றுவர் - பொருந்துவர். (௧௩)

பிழையுற்றமனதொடுபேதைமையால்
விழைவுற்றுவிகன்மம்விளைத்தவர்கள்
தழைவுற்றசமன்படர்தள்ளவுளம்
குழைவுற்றுவருந்துவர்கும்பிதொறும்.

பேதைமை - அறியாமை, விழைவுற்று - விரும்பி, சமன்-யமன், படர்-கிங்கரர், கும்பிதொறும் - நரகந்தோறும். (௧௪)

வேறு.

மங்கைபாகனைவாணிகணவனைப்
பொங்குநோன்புபுரிகுநராயினும்
அங்கவர்க்குளமரிறைமாயனென்
றங்கணேத்துநராய்பயன்கொளவரே.

மங்கைபாகன் - சிவபெருமான், வாணிகணவன் - பிரமன், இறை - இறைவன், ஏத்துநர் - துதிப்பவர். (௧௫)

போற்றுகின்றபுனிதமறைமுறை
ஏற்றுகின்றங்கியற்றல்கருமமாம்

சாற்றுகின்றமறைமுறைசார்ந்திடா
தாற்றுகின்றதறையின்விகன்மமே.

புனிதமறை - பரிசுத்தமாகியவேதம், மறைமுறைசார்ந்திடாது - வேதவிதியைச் சாராமல், ஆற்றுகின்றது - செய்வது. (௧௬)

ஒருகருமமுமுள்ளுவதாற்றிடா
தரிதின்வைகலகன்மமென்றுருமால்
கருமமாற்றுழிக்கார்நிறவண்ணனன்மேல்
புரியுமன்பிலதேற்புகரெய்துமே

உள்ளுவது - நினைப்பது, ஆற்றுழி - செய்யுமிடத்து, கார்நிறவண்ணன் — கண்ணபிரான், புகரெய்தும் - குற்றத்தையடையும் (௧௭)

உழுதுவண்டுறைதாருரவோய்புவி
முழுதுமுண்டமுதல்வனைமெய்யன்பின்
தொழுதுதூயதொழில்புரிவோரொரு
பழுதுமின்றிப்பயன்பெறுவாரரோ.

தார் - பூமாலை, உரவோய் - அறிவுடையோனே, புவிமுழுதுமுண்டமுதல்வனை — கண்ணபிரானை. (௧௮)

என்றியோகியர்கூறவிறையவன்
மன்றமாணிசையான்மக்களுய்யுமா
றொன்றுபோரவதாரமுளங்கொள
நன்றுகூறுமெனவுநவின்றனர்.

இறையவன் - நிமி, மாணிசையால் - பெருங்கீர்த்தியோர்கள். (௧௯)

அலகிலாவறிவாயவரும்பொருள்
உலகெலாமுடலாகவுமுறைந்
திலகுபேர்விராட்டென்னவுமுத்தொழில்
குலவுமும்மையுருவமுங்கொண்டதே.

அலகிலா - அளவில்லாத, உறைந்து - வியாபித்து, இலகு — விளங்குகிற. (௨௦)

பூவினுள்புணர்புங்கவன்றன்கலை
மேவுபூசுரர்மிக்கமறைபயில்
நாவினார்நரநாரணரென்பவர்
தாவிலாததவம்புரிந்தார்முனம்.

பவினுள்புணர்புங்கவன் - திருமால், கலை — அம்சம், தாவிலாத — கெடாத. ()

தவமியற்றுதல்கண்டுசதமகன்
அவமியற்றவரம்பையர்தம்மொடு
நவமலர்ப்பொழினண்ணினனண்ணலும்
உவமையற்றமுனிவருணர்ந்தரோ.

சதமகன் - இந்திரன், அவமியற்ற - இடையூறுசெய்ய, நவம் - புதுமை. (௨௨)

உருவமார்ந்தவுருப்பசியாதியாம்
அரிவைமாரைப்படைப்பவரம்பையர்
பொருவிலாவவர்பொற்பினைக்காண்டலும்
பெருகுகாதலிற்பேதுற்றுப்போயினார்.

உருவம் – அழகு, அரிவைமாரை - மாதரை, பொற்பு - அழகு, பேதுற்று–துன்பமடைந்து. (உங)

பூணினோடுபொருந்துமரம்பையர்
நாணினோடுநடந்தபினல்லெழில்
ஏணினோடுமிருந்தபுரந்தரன்
பாணினோடுதொழுதுபராயினன்.

ஏண் - பெருமை, பாண் – இசைப்பாட்டு. (உச)

எவர்களேனுந்தவநின்றியற்றுழி
அவர்களேயுமைத்தம்மனதெண்ணினோர்
பவமுறார்பகைநீக்குவரென்னின்யார்
அவனிமேனுமக்கும்மனுர்செய்வமே.

இயற்றுழி – செய்யுமிடத்து, பவமுறார் - பிறவார், அனுர் - துன்பம். (உரு)

கலிநிலைத்துறை.

என்றுகூறியமுனிவரனவலினிசைப்போர்
ஒன்றுமூருவிற்றோன்றலாலுருப்பசியெனும்பேர்
நின்றநேரிழைமுதன்மடவாரொடுநெடிய
குன்றின்வார்சிறைகொய்தவன்குறுகினனகரம்.

ஊருவில் – தொடையில், நெடியகுன்றின்வார்சிறைகொய்தவன்–இந்திரன். ()

நாவியன்னவேதார்நறைகமழ்நறைக்கருங்கூந்தற்
காவியன்னகட்கதிர்முலைத்திருமகள்காந்தன்
ஆவியன்னமீதுயரியவந்தணன்றனக்குத்
தூவியன்னமாயுரைத்தனன்றன்மறைதோன்ற.

நாவி–கஸ்தூரி, நறை – வாசனை, காவி – நீலமலர், திருமகள்காந்தன் - திருமால், ஆவியன்னமீதுயரியவந்தணன் - பிரமன், தூவி–சிறகு. (உஎ)

மீனமாகியுமேதினியெடுத்தவன்பிறைக்கோட்
டேனமாதியாயிச்சையிற்பலவுருவியைந்து
மானவேலவமாலுலகளித்திடும்வகைநூ
றூனகோடியாண்டறையினுமடங்குவதரிதே.

ஏனம் – வராஹம், மானம் – பெருமை, மாலுலகு – பரமபதம், அறையினும்–சொல்லினும். (உஅ)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கேழ்கிளர்வெண்மைசெம்மைகிளரொளிப்பசுமைமற்றும்
சூழ்சுடர்க்கருமையென்றுசொல்லியவண்ணநான்கும்

ஊழிதோறடைவினெய்தியுலகெலாங்காணத்தோன்றும்
வாழிநான்மறைக்குமெட்டாவலம்புரித்தடக்கையானே.

கேழ்கிளர்-நிறம்விளக்குகிற, வண்ணம்-நிறம், வலம்புரித்தடக்கையான் — திருமால்.

ஓதியவண்ணததாதியூழியிற்பிரமசாரி
கோதறுமுருவமெய்திக்குலவுவன்மாயனென்னைப்
பேதவெவ்வினையொன்றாதுபெட்பொடுகருதும்யோகர்
ஏதவெம்பிறவிசேராரின்பொடுநீடுவாழ்வார்

கோதறும் - குற்றமற்ற, குலவுவன் - விளங்குவன், பேதம் - வேற்றுமை, ஒன்றாது - பொருந்தாது, பெட்பொடு - அன்போடு, ஏதம்-துன்பம், ஆதியூழி-முதல்யுகம்.

ஏழிருபுவனமுண்டோனிரண்டெனவியம்புகின்ற
ஊழியின்வேள்விசெய்வார்க்குருவமுற்றுறைவனந்நாள்
ஆழிசூழ்புவியின்மாந்தருமகமுறையியற்றிச்
சூழிமால்வேழங்காத்ததோன்றலைவழுத்துவாரே.

ஏழிருபுவனமுண்டோன் — திருமால், இரண்டெனவியம்புகின்றவூழி — இரண்டாம்யுகம், உருவமுற்று - திருவுருக்கொண்டு, உறைவன் - தோற்றுவன், ஆழி—கடல், சூழிமால்வேழங்காத்ததோன்றலை - திருமாலை. (௯௰௧)

பொன்னவிராடைமாயன்புகாறுமூன்றாமூழி
மன்னியகாலஞ்செங்கோன்மணிமுடிவயங்குவேந்தர்
சின்னமோடுறைவனந்நாட்டிருமறுமார்பினானைத்
துன்னுநாண்மலர்கடூவித்தொழுதனர்வழுத்துவாரே

அவிர் - பிரகாசிக்கிற, புகாறு - குற்றமற்ற, மூன்றாமூழி - மூன்றாம்யுகம், சின்னம் - அடையாளம், (௯௰௨)

கருதருங்கலியினம்மகார்முகிற்கொழுந்துபோலும்
திருமகள்கொழுநனுமகீர்த்தனஞ்செய்யும்யோகர்
மருவுவொருவீடென்னின்வழங்கியகலியினன்றாய்
ஒருதிருவுகமுமில்லையுரைக்கினிங்கரசமன்றே.

கார்முகில் - கரியமேகம், ஒரு - ஒப்பற்ற, வீடு - முத்தி. (௯௰௩)

எனவிவைநிமியென்றோதுமிலங்குவேலரசுகேட்ப
வினையறுதவத்தின்மிக்கோர்விளம்பினர்விசும்பிற்போயார்
புனைமதிக்கவிகைச்செங்கோற்புரவலவென்றுகூறி
நனைமலர்த்தொடையனல்யாழ்நாரதன்மீட்டுஞ்சொல்வான்.

அரசு - அரசன், விசும்பு - விண்ணுலகு. (௯௰௪)

பொழிமழைபருவநூறுபொய்ப்பவெவ்வழலின்வெம்பி
ஏழுபரித்தேரோன்காலுமெரிமணிக்குப்பைபாய்ந்து
நிழலறக்கிடந்துகாய்ந்தநெடுநிலம்பிளக்குமெங்கும்
மழுமணிச்சுடிகைச்சேடன்முகத்தழல்கனற்றுமன்றே.

பொய்ப்ப - இல்லையாக, எழுபரித்தேரோன் - சூரியன், காலும் - உமிழ்கின்ற, முழுமணி - மாணிக்கம், சுடிகை - உச்சி. (௩௫)

நிலவியவண்டம்யாவுநீறெழப்பாந்தள்வெந்தீ
உலவைவந்தெறியச்சிந்துமுமுறிமற்றொருநூறாண்டு
மலையொடுபொருதயானைமல்லலந்தடக்கைமானக்
கலிகெழுகருவிவானங்கல்லெனப்பொழியுமம்மா.

நீறெழ - தூளியெழ, பாந்தள்வெந்தீ - ஆதிசேடன்முகாக்கினி, உலவை - காற்று, சிந்து - கடல், உறி - வற்றி, மான - நிகர்க்க. (௩௬)

எற்றுநீர்பரந்துகோப்பவிறந்திடும்பூதமைந்தும்
மற்றிறவாதுநின்றமாயையின்றலைவன்றன்னைப்
பெற்றனைமதலையாகப்பெறவதென்பேறுசொல்லாய்
முற்றுநீருலகங்காக்குமுந்நவெண்கவிகைவேந்தே.

இறவாது - அழியாமல், மாயையின்றலைவன் - திருமால், மதலை—பிள்ளை, பேறு—பயன், முற்றும் - வளைந்த, நீர் - கடல், கவிகை - குடை. (௩௭)

பொறிமடமயிலிற்றோன்றும்பூதனையுயிருந்திங்கட்
குருநுதற்பவளச்செவ்வாய்க்கோவியர்முல்லைமெல்லென்
முறுவலுமாந்துசெங்கண்முகிலைநின்மகனென்றுள்ளல்
இறுதியுமுதலுமில்லாவிறைறயெனத்தெளிதிமேலோய்.

பொறி - புள்ளி, முறுவல் - அகராமருதம், மாந்து - பருகின, செங்கண்முகிலை—திருமாலை, உள்ளல் - நினையாதை, இறை - இறைவன். (௩௮)

தாறுமாய்களிநல்யானைக்தடமருப்பொசித்தான்றன்னை
மாறுகொண்டெழுந்துபொங்கிமண்டமர்கடந்துவெல்வான்
சீறினர்நினைத்துவைவேற்றிறற்சிசுபாலனுதி
ஈறிலாநெறிசென்றுற்றாரெனையரென்றுரைப்பல்யானே.

தாறு - அங்குசம், யானைத்தடமருப்பொசித்தான் - கண்ணபிரான், மாறுகொண்டு - பகைகொண்டு, அமர் - போர், கடந்து - வென்று, வெல்வான்—மேம்படும்பொருட்டு, எனையர் - எத்தனைபேர், ஈறிலாநெறி - முடிவற்றநெறி, முத்திப்பதம். (௩௯)

அல்லியங்கமலம்பூத்தவஞ்சனப்புயலிற்றோன்று
மல்லலைத்தெழுந்ததிண்டோண்மாயனைக்கண்ணிற்கண்டு
புல்லியுமோந்துமன்புபூத்துளங்களிப்பப்பெற்றாய்
சொல்லருநெறிநீசேர்தல்சொல்லவதென்சுடர்செய்வேலோய்.

அல்லி - அகவிதழ், அஞ்சனப்புயல் - நீலமேகம், மல் - மல்லர், அலைத்து - கொன்று, சொல்லருநெறி - முத்திப்பதம். (௪௦)

தரவுக்கொச்சகக்கலிப்பா.

என்றுமுதுமறைதெளிந்தயாழ்முனிவனோதலும்
வென்றிவயிரப்படையோன்விதுவணிநீள்செஞ்சடையோன்

மன்றறிணிமரைமலரோன்மலர்தலைவான்வந்தூற்றுக்
கன்றுகொடுவிளவெறிந்தகார்வண்ணற்போற்றினரால்.

யாழ்முனிவன் - நாரதன், வென்றிவயிரப்படையோன் - இந்திரன், விதுவணிநீள் செஞ்சடையோன் - சிவன், மன்றறிணிமரைமலரோன் - பிரமன், மலர்தலை - விரிந்த இடம், வான் - ஆகாயம், கன்றுகொடுவிளவெறிந்தகார்வண்ணன் - கண்ணபிரான். ()

உந்துதிரைசூழ்முந்நீருலகின்வன்பொறைதவிர்த்தாய்
ஏந்துதலையிட்டவொருநூற்றிருபாணுண்டகன்ற
எந்தைநின திருவுளமேலெய்துனது தாமமென
முந்தைகெழுநான்மறையின்முதல்வனைமுன்பெற்றகன்றார்.

உந்து - (காற்றினால்) தள்ளப்படுகிற, திரைசூழ்முந்நீர் - அலைகளையுடையகடல், உலகின்வன்பொறை - வலியபூமிபாரம், திருவுளமேல் - திருவுள்ளமாயின், தாமம் - பரந்தாமம், முந்தைகெழுநான்மறையின்முதல்வன் - கண்ணபிரான். (சஉ)

வசுதேவற்கு நாரதர்தத்துவமுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—சஉ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்

---

மூன்றாவது

உத்தவர் தத்துவம்விறு வத்தியாயம்.



கலிவிருத்தம்

களங்கனிவண்ணனைக்கண்டுகாதல்கூர்
வளங்கொளும்வானவர்வணங்கிப்போயபின்
விளைந்ததுமவ்வழிவிண்டுராதனுக்
குளங்கொளமுனிவரேனுதினனரோ

களங்கனிவண்ணனை - கண்ணபிரானை, காதல்கூர் - அன்புமிகுந்த. (க)

மருவிரிதுளவணிமாயனேவலால்
கருதருநிலமுறுகம்பமாதியாற்
பொருவலியாதவர்பொன்றவெவ்விளை
தருபலநிமித்தமுஞ்சார்ந்தவாங்கணே.

நிலமுறுகம்பம் - பூகம்பம், (பூமியதிர்ச்சி) பொன்ற - இறக்க, பலநிமித்தம்—பல கெட்டகுறிகள். (உ)

கண்ணுறுதீயனநிமித்தங்கண்டன
அண்ணலங்கடற்றுறையாடுவோமெனுத்
தண்ணறுந்துளவணிதலைவன்சாற்றினன்
எண்ணிலாயாதவரெழுதன்மேயினார்.

தீயனநிமித்தம் - துர்நிமித்தங்கள், கண்டன - காணப்பட்டன, கடற்றுறையாடுவோம் - கடற்றுறையில்மூழ்குவோம், தண்ணறுந்துளவணிதலைவன் — கண்ணபிரான்.

அவ்வழிமால்கருத்தறிந்தவுத்தவன்
செவ்வழிப்படர்தரச்சிந்தையுற்றனை
இவ்வழிநிற்பிரிந்திறையுமுய்கலேன்
உய்வழியென்னையுமுடன்கொண்டேகுவாய்.

செவ்வழி - பரந்தாமம், படர்தர - செல்ல, இவ்வழி - இவ்விடத்தில், நிற்பிரிந்து—உன்னைப்பிரிந்து, இறையும் - அற்பமும், உய்கலேன் - பிழைக்கிலேன். (௪)

பைத்தவெவ்வராமிசைப்பதம்வைத்தாடிய
வித்தகவென்றுமுன்வீழ்ந்துபோற்றுறும்
உத்தவனுளங்கொளவுரைத்தன்மேயினன்
தத்துவநெறிமுறைதலைவனுங்கரோ.

பைத்தவெவ்வரா - காளியன், பதம் - திருவடி, தலைவன் - கண்ணபிரான். (௫)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஊற்றினிற்களிறுதுஞ்சுமொளியினிற்பதங்கமாயும்
நாற்றத்தின்வண்டுவீயுஞ்சுவையின்மீனுசமெய்தும்
எற்றதோரிசையினாலேயிறக்குமாலசுணங்கல்வி
ஆற்றலிற்புலன்களைந்துமடக்கிடல்வேண்டுமென்றே.

ஊற்றினின் - பரிசத்தால், களிறுதுஞ்சும் - யானையிறக்கும், ஒளியினின் - ரூபத்தால், பதங்கம்மாயும் - விட்டிலிறக்கும், நாற்றத்தின்—கந்தத்தால், வண்டுவீயும்—வண்டு இறக்கும், சுவையின் - ரசத்தால், மீன்நாசமெய்தும் - மீனிறக்கும், இசையினாலே—சத்தத்தால், அசுணம் இறக்கும் - அசுணப்பறவையிறக்கும், கல்வியாற்றலின் — கல்வியறிவின்வலியால். (௬)

ஐயமிலறிவினாலேயழிவின்றியகண்டமாகி
மெய்யெனும்பொருளாமெம்மைமேவுவான்கானனீர்போல்
வையகமாதியாயவழங்கியவுலகமெல்லாம்
பொய்யறுபகுதிநின்றுபோந்தவென்றெண்ணல்வேண்டும்.

ஐயமிலறிவு - சந்தேகமற்றமெய்யறிவு, பகுதி - மூலப்பிரகிருதி, போந்த — உண்டாயின. (௭)

கண்ணுறுபவற்றினாலுங்கருதநுமானத்தாலும்
எண்ணியுட்டெளிவுபெற்றிங்கேதமாமிவைகளென்றும்
நண்ணுநற்குணங்களென்றுநாடுதலொழிந்தியாவும்
தண்ணறைதுளித்ததாரோய்சமமெனக்காணல்வேண்டும்.

கண்ணுறுபவற்றினாலும்—பிரத்தியக்ஷப்பிரமாணத்தாலும், கருதநுமானத்தாலும்—கருதலளவையாகிய அநுமானப்பிரமாணத்தாலும், ஏதம் - குற்றம். (௮)

இனிவருமேழாநாளின்யாதவர்பொருதுமாய்வர்
பனிவருகடலுமிந்தப்பதியினைமறைக்கும்வெய்ய

துனிவருகலியும்பூமான் றுயருறப்பொருதுமென்ன,
தனிவருமரசுமாழ்கச்சாற்றினன்மாயப்பெம்மான்.

பொருது - சண்டைசெய்து, மாய்வர் - மடிவார், இந்தப்பதி—இந்நகரம், துனி-அச்சம், பூமான் - பூமிதேவி, அரசு - உத்தவன், மாழ்க - மனமயர, மாயப்பெம்மான்-கண்ணபிரான். (௯)

என்றலும்பிரிவிற்கஞ்சியேங்கினன்குருவைநீங்கித்
துன்னியகாட்சியானுஞ்சொல்லநுமானத்தானும்
நன்றுளந்தெளிதலெங்ஙனைவின்றருளெனமுன்போற்றி
ஒன்றமுத்தவற்குநம்மானொருகதையுரைக்கலுற்றான்.

காட்சி - ப்ரத்யக்ஷப்ரமாணம், நம்மான் - கண்ணபிரான் (௧0)

உத்தவர் தத்துவமறிந்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௫௩.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்

---

நான்காவது.

## ஆசிரியனை யுரைத்த வத்தியாயம்.



தீதிலன்மகிழுந்தத்தாத்ரேயனென்றுலகமெல்லாம்
ஓதவதூதவேடத்தொருவனையதுமுன்கண்டு
நீதிசெய்யறம்பொன்காமநினைந்திலைசிறிதுமின்பம்
ஏதினிலடைகின்றாய்நீயெனமுனியிசைக்கலுற்றான்.

அவதூதவேடம் - சந்நியாசிவேஷம், யது - யயாதிபுத்திரன், பொன்—பொருள்.

தரைபுனல்கனல்கால்வானந்தபனன்வெண்டிங்கள்வாரி
வரையுறையரவுமான்கான்வருகரிபதங்கமீனம்
முரலளிகணைசெய்கின்றோன்மொய்குழற்குமரிதேனீ
உரைதருபுறவுவேசியூன்கவரன்றிஞகம்.

கால்—காற்று, தபனன்—சூரியன், வரையுறையரவு—மலைப்பாம்பு, பதங்கம்—விட்டில்.

உறைந்தநூற்சிலம்பிமைந்தனூதுவண்டெடுத்தகீடம்
சிறந்தனவிவைநான்காறுஞ்சிந்தையிற்குருவென்றாக்கி
மறந்தருமிஃதுதீதாமற்றிதுநன்றாமென்றிங்
கறிந்திலனின்பமுற்றேனவ்வகையரசகேண்மோ.

கீடம் - புழு, ஊதுவண்டு - குளவி, நான்காறு—இருபத்துநான்கு, மறம்—பாவம்.

கலிநிலைத்துறை.

பரிவின்வெட்டினுங்கல்லினும்பயன்பொறுத்தளித்தும்
புரியுநல்வகைமாறெதிர்பொருதிடாதசலத்

தருவிநீரடவிக்கனிமுதலியவளித்தும்
இருதிறத்தையுமெனக்கறிவித்ததித்தரையே.

பரிவு - துன்பம், கல்லினும் - தோண்டினும், பொறுதது - தாங்கி, மாறெதிர் பொருதிடாது - விரோதமாயொன்றுஞ்செய்யாது, அசலம் – மலை, அடவி – காடு, அளித்தும் - கொடுத்தும், இருதிறம் - இரண்டுவகை, தரை - பூமி. (ச)

களிகொளும்முருநினைக்கினுங்காண்கினுநலஞ்சேர்ந
தெளிகொளும்பெயர்வழுத்திலுமன்னவருளத்தை
அளிகொளும்புனிதம்பெறவாககலுமருந்தண
டெளிவுமப்புவினிடத்தினின்றறிநதனன்றெரிக்கின்.

வழுத்தினும் - சொன்னாலும், புனிதம்பெற - பரிசுத்தமடைய, அப்பு - நீர், தெரிக்கின் - தெரிவிக்குமிடத்து (ரு)

இருந்திராகமொடியம்பருவெறுப்பறவெறிந்து
பொருந்துகின்றனயாவையும்பொசிப்பதுமெவரும்
விரைந்துவந்தனுகாவகைவீற்றிருப்பதுவும்
திருந்துகின்றநற்காந்தியும்பெற்றனன்றீயின்.

இராகம் - விருப்பு, அனுகாவகை - கிட்டாதவகை, காந்தி - ஒளி. (சு)

வளர்ந்தகாதல்வெவ்விருப்படைந்தாரெவரினும்
தெளிந்தயோகியருயிர்க்கவையில்லெனத்தெரிந்தேன்
விளைந்தவாசமும்விளம்புநற்கந்தமுமேவி
அளைந்துவந்துமக்குணம்பெறாதநிலமென்றறிந்தேன்.

காதல் - ஆசை, வெவ்விருப்பு - நிராசை, வாசம் - தீநாற்றம், நற்கந்தம் - நறுநாற்றம், அளைந்து - கூடி, அநிலம் - காற்று. (எ)

கண்ணகன்றிடம்டத்துளவான்கடத்துளவான்
எண்ணநின்றனபோகவொன்றாயியைந்ததனால்
பண்ணுகின்றதன்மாயையிற்பற்பலபடைப்பாய்
நண்ணுகின்றவும்பிரமமொன்றுருவெனவறிந்தேன்.

கண் - இடம், அகன்றிடம்–விசாலித்த, வான்–ஆகாயம், கடத்துளவான்–கடாகாசம், ஒன்றாயியைந்ததனால்-அம்பதமாயொன்றாயினமையால், மாயையின்-மாயையால்

உறைவுறாவிடனின்றெனவுறையும்வாறொன்றால்
குறைவுறாவகைகண்டதிற்கூறுமொன்றாலும்
மறைவுறாதொருகுறையுமன்னுதுமற்றெங்கும்
நிறைவுறாதுவைகாதெனநினைந்தனன்பிரமம்.

உறைவுறாவிடனின்றெனா - வியாபிக்காதவிடமில்லையென்னும்படி, கண்டதின்–கண்டதுபோல, மன்னுது - பொருந்தாமல், வைகாது - தங்காது. (அ)

அருவமாமறிவானவனுக்கைகள்பலவும்
ஒருவனுகியேயுறைகுவனென்பதையுணர்ந்தேன்

பரிதிவானவனொருவனேயாய்ப்பலகடத்தின்
மருவுநீர்தொறுநிழல்பலவாயுறன்மதித்தேன்.

அருவம் - வடிவின்மை, ஆக்கைகள் - சரீரங்கள், உறைகுவன்—வசிப்பான், பரிதி வானவன் - சூரியன், பலகடத்தில்மருவுநீர்தொறும் — பலகுடங்களிலிருக்கிறநீர்களி லெல்லாம், நிழல் - சாயை, (௧0)

திங்களுமொடாறும்வளர்தலுந்தேய்தலுநெரிக்கின்
அங்கண்மாநிலம்விளக்கும்வெண்கதிர்க்குணமதனால்
தங்குமோராறுவகைவிகாரங்களுந்தமியேன்
இங்குநாடினனுடற்கலாலுயிர்க்கிலையெனவே.

திங்கள் - சந்திரன், அங்கண் - அழகியவிடம், வெண்கதிர் - வெண்மையாகிய கிரணம், (நிலா) அறுவகைவிகாரங்கள் - காமக்ரோதலோபமோஹமதமத்ஸரங்கள்.

விளங்குமெய்ப்பொருளாக்கைமேவினுமதன்குணங்கள்
உளங்கொடெண்ணினப்பொருட்கிலையென்பதுமோர்ந்தேன்
களங்கமென்பதுமதிக்கிலைகருதுமக்களங்கம்
வளங்கொள்பூமியின்சாயையென்பாரதைமதித்தேன்.

மெய்ப்பொருள் - அழியாப்பொருள், (பிரமம்) உளங்கொடெண்ணின் - மனத் தினால் ஆலோசித்தால், அப்பொருட்கு - அந்தப்பிரமப்பொருட்கு, ஓர்ந்தேன் - அறிந் தேன், களங்கம் - கல்மஷம், பூமியின்சாயை - பூமியின்நிழல். (௧௨)

நிறைவினொடொறுங்குறைவறவமைந்தயனீர்வந்
தறையுநீடிரைகூடினுமதன்குணமடையா
துறையும்வாரிகம்பீரமுற்றெறன்பதையுணர்ந்திங்
கிறைவயானுமக்குணங்களையுவந்திமைந்தனனால்.

அமைந்து - அமையப்பெற்று, அயல்நீர் - ஆற்றுநீர் ஊற்றுநீர் வேற்றுநீர்கள், நீடிரை - நெடியஅலைகள், அறையும் - சத்திக்கிற, வாரி - கடல், கம்பீரம்—பெருமை, உவந்து இயைந்தனன் - மகிழ்ந்து அடைந்தேன், (௧௩)

உற்றவுற்றவைமுயற்சியினுயங்கிடாதுண்ணும்
குற்றமற்றுநீண்மலையராவென்பதைக்குறித்திங்
கற்றமற்றநல்லறிஞருக்கிதுவழக்கென்னப்
பெற்றபெற்றனமுயற்சியற்றருந்தினன்பெரியோய்.

உயங்கிடாது - வருந்தாமல், உண்ணும் - புசிக்கும், மலையரா - மலைப்பாம்பு, அறி ஞர் - ஞானியர் (௧௪)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

**மடந்தையர்மொழியுங்கானமுங்கேட்டுமன்னவன்மகண்முலைமணந்தான்**
**கடந்திரிகலையின்கோடுபெற்றுயர்ந்தகருதருந்தவனெனல்கேட்டுப்**
**படர்ந்திளமறிமான்வேட்டுவன்பாடும்பண்செவிமடுத்தவன்வலைமேல்**
**கிடந்தனகண்டும்வெவ்விசைகேளேன்கேட்டன்மாறுமகீர்த்தனமே.**

மடந்தையர் - மாதர், கானம் - பாட்டு, மணந்தான் - தழுவினான், கடம்திரி—காட்டில்திரிகின்ற, கலையின்கோடுபெற்றுயர்ந்தகருதருந்தவன் - கலைக்கோட்டுமாமுனி, இளமறிமான் - மான்கன்று, வேட்டுவன் - வேடன், பண் - இராகம், செவிமடுத்து—கேட்டு, வெவ்விசை - விருப்பத்தைத்தருகிற இராகத்தை, கேட்டல்—கேட்பது, ஹரிநாமகீர்த்தநமே - ஹரிநாமசங்கீர்த்தநமே. (கரு)

துதிதருவயவர்படுகுழிப்படுத்துந்துகளறுபிடியையுள்ளுவந்து
மதகரிதழுவிவயவர்கைவசமாய்வயங்குதல்கண்டுமட்டொழுகும்
ததைமலர்க்குழலார்தனகிரிதழுவித்தணப்பரிதாய்மதன்வசமாய்
விதலையின்மனமாய் மயக்குறுமென்னவிடுத்தனன்புணர்ச்சிமற்றன்றே.

வயவர் - வேடர், படுகுழி - படுபள்ளம், படுத்தும் - வீழ்த்தியும், பிடியை-பெண்யானையை, உள்ளுவந்து - மனமகிழ்ந்து, மதகரி - மதயானை, மயங்குதல் - மயக்கமடைதல், மட்டு - தேன், ததை - நெருங்கின, தனகிரி - மலைபோலுந்தனம், தணப்பு—பிரிவு, விதலை - நடுக்கம். (கசு)

ஒளிகொளும்விளக்கின்றீப்பிழம்புணராதுணவுகொலெனவெதிர்சூழா
விளிவுறும்பசியசலபமுன்கண்டுவெய்யதித்தொழிலெனக்கருதித
தெளிவுகொண்முனிவராயினுங்காணிற்சிந்தைதன்வயங்கொளீஇக்கவற்றிக்
களிகொளுங்கருங்கண்மடந்தையருருவங்கருத்தொடுகொண்கிலனம்மா.

தீப்பிழம்பு - நெருப்புத்திரள், சூழா - சூழ்ந்து, விளிவுறும் - இறக்கின்ற, சலபம்-விட்டில், வயங்கொளீஇ - வசப்படுத்தி, கவற்றி - கவலையுண்டாக்கி, மடந்தையர் உருவம் - மாதர்வடிவு. (கஎ)

வஞ்சநெஞ்சினராய்த்தூண்டிலின்வனைந்தவண்சுவையூண்பெறவடைந்து
துஞ்சுதலடைந்தமீன்குழுக்கண்டுதுன்னுமைவகையெனும்வாயுப்
பஞ்சரமென்றுற்றுடலுறைவதற்காபசிக்கனறணிப்பதற்கன்றி
அஞ்சுவையிவையென்றவாவினுளலம்வந்தருந்துதலொரீஇயினனடிசில்.

தூண்டிலில் - தூண்டில்முள்ளில், வனைந்த - கோத்த, துஞ்சுதலடைந்த - மரணமடைந்த, குழு - கூட்டம், ஐவகைவாயுப்பஞ்சரம்—பஞ்சவாயுக்களின்கூடு, பசிக்கனல்-பசியாகிய - நெருப்பு, அஞ்சுவை - நல்லசுவை, அவாவினுள் அலம்வந்து-ஆசையிற்சிக்கிச்சுழன்று, ஒரீஇயினன் - நீங்கினேன். (கஅ)

வண்டினஞ்சிறிதுசிறிதெனவலருமலர்தொறும்வருமுருகுவப்பால்
உண்டனதிரிதல்கண்டனன்யானுமுறைக்கினித்தொழிலழகிதென
எண்டருநகரின்மனைதொறுங்குறுகியெனதொருகரமிசையையம்
கொண்டனன்சிறிதுசிறிதெனவுவந்துகொள்கலத்தேற்றிடாதன்றே.

முருகுஉவப்பால் - தேன்விருப்பத்தால், குறுகி—சென்று, ஐயம்—பிக்ஷை, கொள்கலம் - பிக்ஷாபாத்ரம், ஏற்றிடாது - ஏற்காமல். (கக)

ஒருமரைமலரேயுவந்துமென்முருகுண்டுறைதருமொருசுரும்பிரவின்
விரியிதழ்குவியம்மலரகப்பட்டுவிளிந்ததுகண்டொருநாளும்
கருதியநகரினொருமனையுறைந்துமடிசுவையுணவுவந்தருந்தேன்
மருமலர்மகுடகோடிகளிடறுமலர்புரைதருபதயுகத்தோய்.

மரைமலர் - தாமரைமலர், சுரும்பு - வண்டு, விளிந்தது - இறந்தது, கடிசுவை யுணவு - மணமுள்ளசுவையுணவு, உவந்தருந்தேன் - மகிழ்ந்துண்ணேன், மரு-வாசனை, மலர்புரைதரு - தாமரைமலரைநிகர்த்த, பதயுகத்தோய் — இரண்டுபாதங்களையுடைய வனே. (உ0)

கலிநிலைத்துறை.

முந்தவேயொலியாதியினொருகுண முன்னிப்
பந்தமோடிடருற்றிறந்தனபலவென்னின்
ஐந்துசேர்குணங்களுமொருங்காசையினடைந்தோர்
உய்ந்துபோநெறியுண்டுகொலோமதித்துரைக்கின்.

ஒலியாதியின் - சப்தாதிகளால், பல - பலசீவர்கள், ஒருங்கு - ஒருசேர, உய்ந்து போநெறி - பிழைக்கும்வழி, உண்டுகொலோ - உண்டோ. (உக)

பம்பிருப்பொறிவழிமனம்பரந்துறாதடக்கி
அம்புசெய்ததன்கோணறத்திருத்துவானவன்போல்
வெம்புமைம்புலன்வழிமனம்வேட்குதல்வெறுத்துக்
கம்பமில்லறிவாம்பொருளறிந்தனன்கருத்தால்.

பம்பு - பரவுகிற, பொறிவழி - பஞ்சேந்திரியங்களின்வழியே, பரந்துறாது—படராமல், கோண் - கோணல், வேட்குதல் - விரும்புதல், கம்பம் - சலநம், அறிவாம்பொருள் - அறிவுருவாகியபொருள் (பிரமம்). (உஉ)

தாயுந்தந்தையும்வேற்றொருநகர்வயிற்சார்நாள்
நேயமாமதன்மணத்திறநேர்தரநிகழ்த்த
மேயசீருறவோர்க்குணவருத்துதல்வேண்டித்
தூயதாமெழிற்குமரிநெற்குத்துதறுணிந்தாள்.

நகர்வயின் - நகரில், நேர்தர - சம்பவிக்க, குமரி - கன்னிகை. (உங)

பெரியகைவளையார்ப்பவர்கேட்கினிப்பேதை
உரைசெய்நல்குரவுற்றவளென்பரென்றுணர்ந்தாங்
கரியகைவளைகழற்றினணெற்றுவைத்ததனால்
கருதும்வெவ்வுரைவருங்கொலென்றுறுங்குழுக்கடிந்தேன்

—கவளையார்ப்பு - கைவளையலின்சத்தம், அவர் - அவ்வுறவினர், நல்குரவுற்றவள்-வறுமையடைந்தவள், நெற்றுவைத்தநனால் - நெற்குத்தினதனால், உறுங்குழுக்கடிந்தேன் - மிகுந்தசங்கபரித்யாகம்பண்ணினேன். (உச)

துன்றிவைத்ததண்டேனுஞ்திழந்துசூழ்ந்தெடுப்ப
ஒன்றுமற்றவரானுயிருலந்தமையுணர்ந்து
நன்றறிந்துபற்றெறிந்தவர்க்கொன்றையுநாளைக்
கென்றுவைப்பதுமிகையெனத்தெளிந்தனனிறையோய்.

துன்றிவைத்த - சேர்த்துவைத்த, உயிருலந்தமை - உயிர்நீங்கினதை, பற்றெறிந்தவர்க்கு - பற்றுவிட்டவர்க்கு (ஞானியர்க்கு), மிகை - குற்றம். (உரு)

நீணிறக்கொடுவேட்டுவன் படுத்தநீள்வலைவாய்த்
தூநிறப்பெடைபார்ப்பினந்துயர்தல்கண்டணுகித்
தானுமுற்றதினொருபுறவிறந்ததுதன்னால்
ஊனமுற்றீடுமெனத்தமர்கேண்மையீங்கொழிந்தேன்.

வேட்டுவன் - வேடன், படுத்த - கட்டின, நீள்வலைவாய்—நீண்டவலையில், பார்ப்பு இனம் - கூட்டமாகியகுஞ்சுகள், துயர்தல் - துன்புறுதல், அணுகி - கிட்டி, ஊனம்—குற்றம், தமர் - சுற்றத்தார், கேண்மை - நட்பு. (உசு)

கலிவிருத்தம்.

சோதிமாடந்துவன்றுமிதிலைவாழ்
பேதையாமொருபிங்களையென்பவள்
ஓதுவேட்கையொருவுதனன்றெனக்
கோதிலாக்குருவானமைகூறுவாம்.

சோதி - ஒளி, மாடம் - மாளிகை, துவன்றும் - நெருங்கின, வேட்கையொருவுதல் - ஆசையைவிடுதல், கோது - குற்றம். (உஎ)

பேசுகின்றவப்பிங்களையென்பவள்
வேசிதோய்நலன்விற்கும்விரகினள்
ஆசையாம்பொருணல்குநல்லாடவர்
பூசுசாந்தப்புயம்புணர்வாழ்க்கையாள்.

தோய்நலன் - புணர்ச்சியின்பம், விரகினள் - உபாயத்தாள், ஆடவர் - புருடர், சாந்தம் - சந்தநம். (உஅ)

இன்னவண்ணமிரும்பொருளீட்டுநாள்
சொன்னவண்ணம்பொருடந்துதோய்பவர்
மன்னும்வண்ணமொர்மாடைவராமையால்
அன்னவண்ணநடையளயர்ந்தனள்.

ஈட்டுநாள் - சம்பாதிக்குங்காலத்தில், தோய்பவர் - புணர்வோர், அயர்ந்தனள்—அயர்ந்தாள், மாடை - அரைவராகனெடைப்பொன். (உகூ)

மறுகினூடுவருபவர்யாரையும்
பெறுகநீபொருளென்றுறுபெட்பொடு
குறுகியீந்துடன்கூடுவரோவெனச்
சிறுகுநுண்ணிடைபார்த்துளந்தேம்புமே.

மறுகினூடு - தெருவில், உறுபெட்பொடு - மிகுவிருப்போடு, குறுகி - கிட்டி, ஈந்து - கொடுத்து, சிறுகு - சிறுத்த, உளம்தேம்பும் - மனம்வாடுவாள். (௩0)

நேசமாய்நெடுமாடநிலைவுகும்
ஆசையாம்வளியாங்குநின்றுந்தலால்
வாசவார்குழன்மீளுமறுகுறும்
ஊசலாடுபவரையுமொக்குமே.

ஒருவி - நீங்கி, உவப்புற்றாள்—சந்தோஷித்தாள், தெருண்டு—தெளிந்து, வென்றி—வெற்றி. (௩எ)

அன்றிலூன்கவர்ந்தந்தரத்தேகுழித்
துன்றும்மார்புட்டுரந்துபறித்தலும்
ஒன்றவ்வூனையொழிந்துவப்புற்றதால்
என்றுமோர்பொருளெய்திடருற்றிலேன்.

அன்றில் - கிரவுஞ்சம், ஊன் - தசை, அந்தரத்து - ஆகாயத்தில், எகுழி - போகும்போது, ஓர்புள் - ஒருபறவை, துரந்து - துரத்தி, பறித்தலும் - பிடுங்குதலும், உவப்புற்றது - மகிழ்ந்தது (௩அ)

சுற்றின்மேவத்தொகுசிதலைபுரி
புற்றின்மேவும்புயங்கமென்றோர்ந்தபின்
உற்றியானுஞற்றேனென்றமர்தொறும்
மற்றுளோர்செய்மதிக்குகைவைகுவேன்.

சிதலை - செல், (கறையான்) புயங்கம் - பாம்பு, ஓர்ந்தபின் - அறிந்தபிறகு, உஞற்றேன் - செய்யேன் (௩௯)

நண்ணிதாசசில்சிலம்பியிழைக்குநூல்
மன்னியேயுறைந்துண்பதைநாடியான்
எண்ணிலாவுயிர்தந்தவையேய்ந்துமற்
றண்ணுமோர்பொருளேயென்றுணர்ந்தனன்.

சிலம்பி - சிலம்பிப்பூச்சி, இழைக்கும்—உண்டாக்குகிற, நாடி—கண்டு, எண்ணிலா—கணக்கற்ற, உயிர்தந்து - சீவர்களைப்படைத்து, அவையேய்ந்து - அவற்றுள்ளேவசித்து, உண்ணும் - உண்டுவிடும், ஓர்பொருள் - பிரமப்பொருள். (௪0)

மானமோடவமானமடைந்திடா
தூனநீங்கியுவந்தசிறுவனைத்
தேனுலாந்தொடையோய்முனந்தேர்ந்ததால்
யானுமோகையுற்றேனவையுற்றரோ.

ஊனம் - குற்றம், உவந்த - மகிழ்ந்த, தேர்ந்ததால் - தெளிந்தறிந்தேனுதலால், ஓகையுற்றேன் - மகிழ்ந்தேன், (௪௧)

அன்பினுயினுமாசையினுயினும்
வன்பயத்தின்வயிரத்தினுயினும்
நன்பெருந்திருநாதனையேநினைந்
தின்பமவ்வுயிரெய்துவதென்பதை.

வயிரம் - தீராப்பகை, திருநாதனையே—லக்ஷ்மீநாதனையே, எய்துவது—அடைவது.

ஈங்கறிந்தனன்யானுற்றெடுத்தொரு
பாங்கர்வைத்துப்பரிவிற்பறந்தயல்
நீங்கும்வண்டைநினைந்தபசும்புழு
ஆங்குவண்டுருவாயதுகண்டரோ.

ஒருபாங்கர் - ஒருபக்கம், பரிவின் - அன்போடு. (௪௩)

வாக்கினைக்கடந்தோங்கிமற்றெங்கணும்
நீக்கமின்றிநிறைந்தவவ்விண்டுவை
ஊக்கமுற்றுணர்தற்கிடனாகலின்
ஆக்கையுங்குருவாயதரசனே.

நீக்கமின்றி - நீங்குதலில்லாமல், விண்டுவை—திருமாலை, ஊக்கம்—மனவெழுச்சி, ஆக்கையும் - உடம்பும். (௪௪)

மடல்விரித்தமரைமலாவைகுமவான்
சடமனைத்தையுந்தந்துழுவந்திலன்
இடாறுகுமென்றெண்ணினன்மானுட
உடல்படைத்தபினேகையுற்றான்முனம்.

மரைமலர்வைகுவோன் - பிரமன், சடம் - உடம்பு, இடா - துன்பம், நகை - சந்தோஷம். (௪௫)

மாந்தர்யாக்கையிமமாநிலத்தெய்துதல்
வேந்தர்வேந்தமிகவரிதாயினும்
காய்ந்தகண்ணமன்கைப்பட்டிருககுமென்
றாய்ந்துசீலத்தமர்தனன்றாகுமே.

மாந்தர்யாக்கை மானுடதேகம், எய்துதல் - அடைதல், நமனை - யமன், காய்ந்த கண் - கோவக்கண், ஆய்ந்து - ஆராய்ந்து, சீலத்து - நல்லொழுக்கத்தில். (௪௬)

உறக்கமும்விழிப்புமுறுதன்மைபோல்
பிறக்கும்யாக்கையிறததன்மெய்பெட்பொடும்
இறக்கும்யாக்கையுமேய்ந்துபிறத்தலின்
துறக்கவேண்டுமெய்யாசையைச்சூழ்ச்சியோய்.

பெட்பொடும் - விருப்பத்தோடும், எய்ந்து - பொருந்தி, துறக்கவேண்டும் - விடவேண்டும். (௪௭)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

இத்திறமெதுவென்பானம்மெழிற்குலத்திறைவன்கேட்ப
அத்திரிபுதல்வனென்னவறைதருதவத்தின்மிக்கோன்
சித்துருவாயதததாத்திரேயன்முன்செப்பினனென்
றுத்தவற்காழிமாயனுவந்துரையாடினனால்.

இத்திறம் - இவ்வாறு, சித்துருவாய - அறிவுருவாகிய. (௪௮)

ஆசிரியரை யுரைத்த வத்தியாயம்-முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௧0௭.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

போற்றுகீழாணிபோல்வான்புகாறுகுரவனுங்குற்
றேற்றுமேலாணிபோல்வானியைந்தநற்குணமாணுக்கன்
மாற்றருஞ்சந்திபோலும்வழங்கியவுபதேசச்சொல்
தோற்றியவங்கிபோலுந்தோன்றுநல்லறிவுமாதோ

குரவன் - ஆசாரியன், புகர் - குற்றம், மாணுக்கன் - சீடன், சந்தி - பொருத்து, அங்கி - நெருப்பு, மேலாணிகீழாணி - சிக்கடைகோலின்மேல்கீழ்நுனிகள். (௬)

அரும்பயனொன்றுசிலருள்ளானெனின்வினைவிளைத்தல்வேண்டும்
தரும்பயனடையவேண்டிச்சாற்றியமகங்களாதி
வரும்பலவினைபுரிந்துசெய்வோன்வான்மிசைப்போகந்துய்த்துப்
பெரும்பலன்றொலைந்தகாலைப்பிறந்திறந்தயர்தறிண்ணம்

உள்ளான் - நல்லோனாதவன, வினைவிளைத்தல்வேண்டும் - கர்மம்செய்யவேண்டும், மகங்களாதி - யாகமுதலியவை, பலவினை - பலகருமம், வான்மிசை - விண்ணுலகத்தில், போகந்துய்த்து - இன்பமநுபவித்து, தொலைந்தகாலை—முடிந்தவிடத்து, திண்ணம் - நிச்சயம் (௭)

அறிவுறும்போகமவேண்டியருவினையிழைத்துவான்போய்க்
குழைபுகவரமகைமாதர்குவிமுலைப்போகமாந்தல்
எறிதிகழரசனுல்லாளேற்றமெய்யேருகள்வோர்
உழையுறுகாரிற்பாலூணிரந்தருந்தல்போலும்.

இழைத்து - செய்து, குழை - காதணி, மாந்தல் - அநுபவித்தல், ஊண்—உணவு.

பொன்னகாப்பாகம்வேண்டிப்பொருந்துநல்வினைசெய்மாந்தர்
துன்றுபற்பலவாமானமாச்சொல்லுமாதீசனில்லை
உன்னினென்றுரைப்பரோராருமபர்கோனாதியானோர்
என்னெறிமேலவலஞ்சியியற்றினாரியங்குவாரே

பொன்னகா - பொன்னுலகு, (சுவர்க்கலோகம்) நல்வினை - சற்கருமம், ஓரார்—அறியார், உமபர்கோன் - இந்திரன், இயங்குவார் - சஞ்சரிப்பார். (௯)

என்றலுமொன்றுதானேயாவுமென்றுரைத்துப்பின்னர்
ஒன்றுமென்னெவலஞ்சியுஞற்றுவரும்பரென்றாய்
நன்றுளந்தெளியவீதுநவின்றருளென்னவேந்து
மன்றலந்துளவத்தெம்மான்வழங்கினன்விளங்கமன்னோ.

உஞற்றுவர் - செய்வர், மன்றலந்துளவத்தெம்மான் - கண்ணபிரான். (௧0)

மாயையாமுபாதியாலேவழங்கினபலவல்லாமல்
தூயவாமணியிற்பொன்போற்றுலங்குமெவ்வுலகுமாகி
மேயதோர்பொருளேயாகும்வினையினுற்பேதமாகிக்
காயமேதாமென்பார்கள்கலங்குவர்வெருக்கொண்டம்மா.

உபாதி - அவஸ்தை, மேயது - வியாபித்திருப்பது, ஓர்பொருளே - ஒப்பற்றபிரமப்பொருளே, பேதமாகி - வேறுபட்டு, வெருக்கொண்டு - அஞ்சி. (௧௧)

நித்தியமுத்தனென்றுநித்தியபத்தனென்றும்
தத்துவந்தெளிந்தோர்சொல்லுந்தன்மையாதென்றுகேட்கின்
உத்தவவுரைக்குதுங்கேளொப்பின்றியுயர்ந்தவீசன்
முத்தனுஞ்சீவனென்பானெமொழிந்தவப்பத்தனுமே.

தத்துவந்தெளிந்தோர் - உண்மையுணர்ந்தவர், (ஞானியர்) ஈசன் - இறைவன்.

சீவனுமீசன்றானுஞ்செப்பியவாக்கைதோறும்
மேவுவருபாதியாலேவிழைந்தநல்லின்பதுன்பம்
தாவிலாச்சீவனுண்ணுஞ்சார்ந்துண்ணுந்தன்மைவெய்யோன்
பூவுலவாவிநீருட்பொருந்திநின்றசைதல்போலும.

உபாதியாலே - அவஸ்தையாலே, உண்ணும் - அநுபவிப்பான், வெய்யோன் - சூரியன், ஆவிநீருள் - தடாகநீரில், தாவிலா - கெடுதலில்லாத. (கங)

கலந்தனனுகருஞ்சீவன்கனவுகண்டிருக்கின்றானும்
மெலிந்தெநன்று நுகராவீசன்விழித்தினிதிருக்கின்றானுப்
நலந்தரும்வித்தையென்றுநலிவுறுமவித்தையென்றும்
வலந்தருமெமதுமாயைமருவுடலிரண்டுண்டாமால்.

நுகரும் - அநுபவிக்கிற, வித்தை - ஞானம், அவித்தை - அஞ்ஞானம். (கச)

அவித்தையாமுடலமும்றாளவறுபிறவிசேர்வார்
பவித்திரவித்தையென்னப்பகர்தருமுடலமுற்றோர்
புவித்தலத்தரசவீட்டிற்பொருந்துவர்புகன்றோர்தன்மை
நவிற்றின்மாவித்தையென்னுநலந்திகழுடலமுற்றோர்.

பவித்திரம் - பரிசுத்தம், வீட்டில் - முத்தியுலகில் (கரு)

கூறிருவினையினொன்றார்கொடுங்கதைகொண்டுமோதிச்
சீறினர்வைதுளோர்க்குஞ்சிறப்புநன்கியற்றினோர்க்கும்
மாறறுசமனேயாகிமவுனமுற்றிருப்பர்மற்றோர்
ஆறறியர்சதம்மையறிந்திடார்வருந்துவாரே.

இருவினையினொன்றார் - இருவினையிற்பொருந்தார், கதை - தண்டாயுதம், சீறினர் - கோவித்து (முற்றெச்சம்). (கசு)

என்னிடத்தன்புசெய்யாதியற்றியவினையினோரும்
உன்னுபல்வினைகள்யாமேயுஞற்றுவமெனச்செய்வோரும்
நன்னயக்காமமில்லாநாரியர்ப்புணர்ந்துளோரின்
துன்னுமைப்பசுக்காத்தோரிற்றுயருவர்பயன்பெறாரே.

வினையினோர் - கர்மிகள், உஞற்றுவம் - செய்வோம், நாரியர்ப்புணர்ந்துளோரின் - மாதரைக்கூடினவர்போல, மைப்பசுக்காத்தோரின் - காராம்பசுவைக்காப்பாற்றினவர்போல, துயருவர் - துன்புறுவர். (கஎ)

மன்னுமைம்புலனுமாய்த்துமருவியமனத்தையென்றும்
என்னிடத்திருத்தல்வேண்டுமிருத்தலிங்கரிதாமென்னின்

சொன்னநல்வினைசெய்தாலுந்துகளுறுபவைசெய்தாலும்
பன்னறுமன்பினந்தப்பயனெமக்களித்தனன்றே.

மாய்த்து - வென்று, துகள் - குற்றம். (கஅ)

அளிசெயுமனத்தராகியைம்புலனடக்கியென்றும்
ஒளியொடுபுனிதமேன்மையுலப்பருஞ்சமனுற்றுள்ளம்
தெளிவுறுபெரியோர்தம்மைச்சேரினல்லன்புகூரும்
களிதருமன்புகூரிற்கலக்குநல்லறிவுதானே.

அளி - கிருபை, புனிதம் - பரிசுத்தம், உலப்பரும் - கெடுதலில்லாத, சமனுற்று-ஒருநிகரனவாகக்கருதி. (கக)

இயம்புமெம்மிடத்தினன்பிங்கியற்றுதலெங்ஙனென்னின்
நயஞ்செயெஞ்சரிதங்கேட்டனவிற்றுதலுமம்போற்றல்
பயன்றருமெமதுகோயிற்பணிவிடைமுதலசெய்தல்
வயந்தரும்பொறுமையுண்மைமரீஇயெமைவழுத்தலாமே.

நயம்செய் - நன்மைசெய்கிற, சரிதம் - சரித்திரம், நவிற்றுதல் - சொல்லுதல், நாமம்போற்றல் - நாமகீர்த்தநம்செய்தல், வயம்தரும் - வெற்றியைத்தருகிற, மரீஇ-பொருந்தி. (உ0)

பரிதிசெந்தழல்வான்பூமிபசுவருமதிதியன்பர்
விரிபுனல்வளிதன்னாக்கைவிளம்புபல்லுயிர்களென்ன
உரைதருபதினொன்றின்பாலுவப்பொடெம்பூசையாற்றின்
இருவினைச்சிமிழ்ப்புநீங்குமன்பனீடெய்துமன்றே.

பரிதி - சூரியன், செந்தழல் - அக்கினி, வான் - ஆகாயம், அதிதி - விருத்தினன், யாசகன். அன்பர் - பக்தர், வளி - காற்று, தன்ஆக்கை — தனதுடம்பு, பல்லுயிர்கள்—பலசீவர்கள், உவப்பொடு — அன்போடு, ஆற்றின் - செய்தால், இருவினைச்சிமிழ்ப்பு—இருவினைக்கட்டு. (உக)

தினகரனிடத்துப்பூசைசெய்வதுமறையிற்போற்றல்
அனலிடையாற்றுபூசையாகுதிமுறையிற்பெய்தல்
நினைவருவானிற்பூசைநெஞ்சினுட்டியானஞ்செய்தல்
இனிதுறுதரையிற்பூசையந்திரமெழுதியேத்தல்.

தினகரன் - சூரியன், அனலிடை - அக்கினியில், ஆகுதி - அவி, தரை - பூமி, யந்திரம் — சக்கரம். (உஉ)

ஆதிதரும்பசுவிற்பூசைதொழுதுபுல்லுதவறன்னும்
அதிதிதன்னிடத்துப்பூசையகமகிழ்ந்தடிசினல்கல்
மதிதருமன்பர்பூசைமருவுதந்தமர்போற்காணல்
ததைமலர்ப்புனலிற்பூசைதருப்பணம்புரிதலாமே.

புல்லுதவல் - புல்லுண்பித்தல், அடிசினல்கல் - அன்னமிடல், தமர் - உறவினர், தருப்பணம்புரிதல் - தர்ப்பணஞ்செய்தல். (உங)

சங்கொடு திகிரிவில்வாடரித்தவெம்வடிவுபெற்ற
பொங்கெழிலுருக்கண்ணடிபூசைசெய்வதுவுநன்றாம்
கொங்கலர்சோலைவாவிகுளங்களுண்டாக்கலுனும்
மங்குலினுதவுவேந்தேமருவுமெம்பூசையாமே

திகிரி - சக்கரம், வடிவு - உருவம், கொங்கு - வாசனை, தேன் மங்குலின் - மேகம்போல, உதவு - கொடுக்கிற (உச)

பேசியவளியிற்பூசைபிராணனைக்காத்தலாகும்
காசிறம்முடலிற்பூசைகலன்றுகில்புனைதலாகும்
மாசில்பல்லுயிரிற்பூசைவழங்குதம்முயிரேபோல
ஆசறுமுயிரின்கூட்டமனைத்தையும்புரத்தலாமே,

வளியிற்பூசை - வாயுபூசை, காசில் - குற்றமில்லாத, கலன் - ஆபரணம், துகில்—ஆடை, புனைதல் - அலங்கரித்தல், மாசில் - குற்றமில்லாத, ஆசறும் - குற்றமற்ற, புரத்தல் - காப்பாற்றல் (உரு)

நண்ணியவன்பினாலேநயந்தெனையடைதல்போல
எண்ணுசாங்கியத்தினாலுமெண்வகையோகத்தாலும்
பண்ணுறதவத்தினாலும்பகர்வருவிரதத்தாலும்
மண்ணகத்துறைவோரெம்மைமருவுதற்கெளிதன்றம்மா

நயந்து — விரும்பி, சாங்கியம் - மூவகையோகத்திலொன்று, மூவகையோகங்களாவன - சாங்கியயோகம், காரகயோகம், அமாஸ்கயோகம் என்பன், எண்வகையோகம் - எண்வகையாகியயோகவுறுப்புக்கள், அவையாவன - இயமம், நியமம், ஆசநம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தியானம், தாரணை, சமாதியென்பன, இவற்றுள் இயமவகையாவன — கொல்லாமை, மெய்கூறல், கள்ளாமை, பிறர்பொருள்விரும்பாமை, இந்திரியமடக்கல், என்பன. நியமவகையாவன—தவம், தூய்மை, தத்துவநூலாராய்ச்சி, மனக்களிப்பு, தெய்வவழிபாடு என்பன. ஆசநவகையாவன — சுவஸ்திகம், கோமுகம், பத்மம், வீரம், கேசரி, பத்திரம், முக்தம், மயூரம், சுகம் என்பன இவற்றுள்சுவஸ்திகமாவது தொடைக்குமுழங்காலுக்கும் நடுவே இரண்டுள்ளங்காலையுஞ்செலுத்தி யிறுமாந்திருத்தல், கோமுகமாவது — சகநபக்கத்தில் இருகாற்பாட்டையுமாறவைத்து அவ்விருகாற்பெருவிரலைக் கைப்பிடித்திருத்தல்; பத்மமாவது - இருதொடைமேலும் இரண்டுள்ளங்காலையுமாறித்தோன்றவைத்தல், வீரமாவது - வலத்தொடையில் இடக்காற்பரட்டைச்சேர்த்து இறுமாந்திருத்தல், கேசரியாவது பீஜத்தின்கீழ்ச்சீவநியிடத்துப் பரட்டைவைத்து இடமுழங்கையை முழங்காலில்வைத்து அங்குலிவிரித்து நாசிநுனியைப்பார்த்திருத்தல், பத்ரமாவது - பீஜததின்கீழ்ச்சீவநியிடத்து இருகாற்பரட்டையும்வைத்து அவ்விரண்டுகாலையும் இருகையாலிறுகப்பிடித்து அசையாதிருத்தல், முக்தமாவது - இடக்காற்பரட்டாற்சீவநியையழுத்திவலக்காற்பரட்டின்கீழழுந்தாவிருத்தல், மயூரமாவது - முழங்கையிரண்டும் உந்திப்புறத்திலழுந்த நிலத்திற்கையூன்றிக் காலைநீட்டித்தலைநிமிர்ந்திருத்தல், சுகமாவது - சுகமும்திடமும் எவ்வாறிருக்கின் எய்துமோ அவ்வாறிருத்தல், பிராணயாமமாவது — பிராணவாயுவைரேசகபூரககும்பகஞ்செய்தல், பிரத்தியாகாரமாவது — உபாதியையொழித்து உண்ணோக்கல், தாரணையா

வது - கண்டம், இதயம், நெற்றி, கபாலம், நாபி, இவற்றுள்ளே ஒன்றில் சதாகாலமும் சிந்தைவைத்திருத்தல், தியானமாவது - ஐம்புலனடக்கியோகஞ்செய்தல், சமாதியாவது - இந்திரியமுதலியதததுவசேட்டைகட்கேதுவாயாக்கையுள்ளேநின்று அவற்றோடு கூடினும் அவற்றிற்பற்றின்றியிருக்கும் ஆன்மாவாகிய தன்னைத்தான்காண்டல், இன்னும் இவற்றின் விரிவெல்லாம் யோகநூல்களிற்காண்க. (உக)

சொல்லுநற்றவரைச்சேரிற்றுகளில்போன்புவந்து
புல்லுமென்றுரைத்ததல்லாற்பொருந்துதம்புந்தியாலே
வல்லையினன்புசெய்துவந்தெமையடைந்துளோர்கள்
அல்லலிங்கொழிந்துநின்றோரளப்பிலாரதைநாங்கேண்மோ.

நற்றவரை - நல்லதவத்தோரை, துகளில் - குற்றமில்லாத, புல்லும் - அடையும், புந்தியாலே - அறிவினாலே, வல்லையின் - விரைவாக, அளப்பிலார் - அளவில்லாதவர்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மாவலிமுதலாவழங்குதானவரும்வண்புகழ்வீடணன்முதலாத்
தாவிலாவலிசேரரக்கருமகஞ்செய்தவத்தினர்மருவெழின்மடவார்
கோவியர்முதலாமடந்தையர்குழுவுங்குஞ்சரஞ்சாம்பவான நமான்
காவில்வாழ்கவியின்றலைவனேமுதலாக்கருதரும்பற்பலவிலங்கும்.

தானவர் - அவுணர், வீடணன் - விபீஷணன், மகம் - யாகம், எழில்மடவார்—அழகுள்ளமாதர், (சபரி, கூனி), குஞ்சரம் - கஜேந்திராழ்வான், கவியின்றலைவன் — சுக்ரீவன், விலங்கு - மிருகம் (உஅ)

அருச்சுனன்முதலாநந்தமர்குழுவுமமரரும்யமுனையின்கரைசேர்
உருச்சுனையடைகாளிங்கனேமுதலாமுரகரும்பறவையுமுரைக்கும்
திருக்கிளர்வனிகர்பின்னவர்வேடர்செப்பரும்பூரியர்முதலாத்
தரைத்தலத்தமர்ந்தமாக்களுமாவார்சாற்றினீங்கின்னமும்பலரே.

நந்தமர்குழுவும் - நமதுஉறவினர்கூட்டமும், அமரரும் - தேவரும், உரு—அழகு, காளிங்கன் - காளியனென்னும் பாம்பு, உரகர்—நாகர், பறவை—சடாயு, வேடர்—குகன் முதலானோர், தரைத்தலத்து - பூதலத்தில், சாற்றின் - சொன்னால். (உகூ)

பொற்புறுமதுரைப்பதியினின்முன்யாம்போயபின்கோவியர்யாரும்
பற்பலயுகமேயொருகணமாகப்பரிவொடுமெம்மையேநினைந்து
சொற்பலநதியுங்கடலினையடைந்துசொல்லியநாமரூபத்தை
முற்பகலொழித்தபோற்றமைமறந்துமுன்னுமெந்தமையடைந்தனரால்.

பொற்பு - அழகு, பரிவொடும் - அன்போடும், நாமரூபம் - பெயர்உருவம் (௩௦)

உரைப்பதுமுரைப்பக்கேட்பதுமினிவேறொன்றிலையெனவுளத்துணர்ந்து
திரைப்பணிக்கடல்சூழ்புவிமுதலுலகாச்சேர்ந்துநூல்படத்துருவாகி
இருப்பதுபோலவெங்கணுமிருக்குமெம்மையேநினைந்தனையாகி
விரைப்பசுந்துணர்த்தாருத்தவநீயும்வெவ்வினையொழிதிமற்றின்றே.

திரை - அலை, பனி - குளிர்ச்சி, எங்கணும் - எவ்விடத்தும், விரைப்பசுந்துணர்த்தார்—வாசனையும்பசுமையுமுள்ள பூங்கொத்துக்களாற்புனையப்பட்டமாலை, தூல்படம்—தூலாடை. (௩க)

மாயையென்றுரைக்கும்வித்தினிற்பிறந்துமருவுமுக்குணப்பாரரையின்மேல்
மேயவிந்தியவோர்பதுசினைவிடுத்துவேட்கையாம்வேர்பலவுடைத்தாச்
சேயுயர்ந்திரண்டுவினைப்பயன்பழுத்துச்சீவனேடீசனென்றுரைக்கும்
தூயபொற்பறவையிரண்டுடனிருப்பத்துலங்குமாலாக்கையாந்தருவே.

முக்குணம் - மூன்றுகுணங்கள், அவை—ராஜஸம், தாமஸம், ஸாத்விகம் என்பன. பாரரை - பரியஅடிமரம், பதுசினை - பத்துக்கிளை, வேட்கை - ஆசை, சேயுயர்ந்து—மிகவுமுயர்ந்து, பயன் - பலன், (பழம்) சீவனேடீசன் - சீவான்மாவும் பரமான்மாவும்.

சொல்லிருவினையின்பயனெனும்பழத்தைத்தோற்றுறசீவனும்பறவை
புல்லிநின்றருந்துமீசனும்பறவைபொசித்திடாதுணர்ந்துகொண்டிருக்கும்
நல்லெழிற்குருவான்ஞானவாட்டிநவிற்றுடற்றருவறத்தடிந்தால்
மல்லுயர்புயத்தோய்பிறிந்திடுபொன்றும்வரம்பிலாவின்பமும்வருமே.

நல்லெழில் - மிக்கஅழகு, ஞானவாட்டி—ஞானமாகிய வாளாயுதத்தைத்தீட்டி, தடிந்தால் - வெட்டினல், பிரிந்திடு - பிரிந்து, வரம்பிலா - எல்லையில்லாத. (௩௩)

ஞானகன்ம முரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—கச0

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

ஆறாவது

## குணவிகார முயிர்க்கில்லையென்ற வத்தியாயம்.

தரவுக்கொச்சகக்கலிப்பா.

வளர்ந்துவருகுணமூன்றுமனத்தைநனிதொடர்ந்திருக்கும்
தளர்ந்துமனமுந்தொடர்ந்துசாற்றுகுணத்தொடுமிருக்கும்
உளர்ந்துநறையளிநுகர்தாருத்தவனேயொண்புலத்தால்
விளைந்தகுணத்தொடுமனத்தைவெவ்வேறுபிறித்தறியின்.

நனி - மிகுதியாக, உளர்ந்து - ஊர்ந்து, நறை—தேன், தார்—பூமாலை, புலத்தால்—அறிவினல். (க)

உத்தமமென்றுரைக்கும்வினையுண்டாஞ்சத்துவத்தெனவும்
மத்திமமென்றுரைக்கும்வினைவயங்குமிராசதத்தெனவும்
வித்தகனேயதமவினைவிளைகுறுந்தாமதத்தெனவும்
இத்தகையகுணமூன்றினியலும்வினையொருமூன்றும்.

சத்துவத்து - சாத்விககுணத்தில், இராசதத்து - ராஜஸகுணத்தில், வயங்கும்- விளங்குகிற, தாமதத்து - தாமஸகுணத்தில். (உ)

அறைந்தவினையொருமூன் றுமரியகுணமிரண்டுமதி
நிறைந்தபுகழ்ச்சத்துவந்தானீங்கியபினீங்குறுமால்
சிறந்துசெறியருஞ்சுரத்திற்சேர்ந்துவளர்கிளையிடத்துப்
பிறந்தவெரியவைவையெரித்தபினையாங்குக்கரப்பதுபோல்

மதி - அறிவு, சுரத்தில் - பாலைநிலத்தில், எரி - நெருப்பு, கரப்பது - மறைவது.

என்றலுமுக்குணத்தினொடுமியங்குமனதொடுநீங்கா
தொன்றியுறையுயிர்பிரிதலிங்குடலொழிப்பதெவ்வாறோ
நன்றுணரும்படிவகுத்துநவிற்றெனவுத்தவன்வினவத்
தொன்றுதொடுமறைப்பொருளாந் தூயவனுங்கிதுசொல்லும்.

இயங்கும் - சஞ்சரிக்கிற, ஒன்றி - பொருந்தி, உறை - வசிக்கிற, நவிற்றென- சொல்லென்ன, தொன்றுதொடுமறைப்பொருளாந் தூயவன் - கண்ணபிரான். (ச)

வன்னமலரோன்மருங்குவந்துசனகாதியர்கள்
சொன்னபடியேயீதுசொல்லுதியாலெனவினவ
என்னையயனுள்ளிருணீக்கெனநினைந்தானினைத்தலுமே
அன்னவுருவுற்றவண்யாமடைகுற்றேமடைதலுமே.

வன்னமலரோன் - பிரமன், அன்னவுரு - அன்னவடிவு. (ரு)

மாமலரோனுயிடைக்கண்மருவினர்களெல்லோரும்
ஏமவெகினத்துருவமெய்தியநீயார்கொலென
நாமமறிவுருவாகிநண்ணுபொருளொன்றேயாம்
காமருடலைக்கருதிற்றிவணென்னக்கழறலுமே.

மாமலரோன் - பிரமன், ஆயிடை - அவ்விடத்தில், ஏமம்-பொன், எகினம்-அன்னம், காமர் - அழகு. (சு)

தோற்றுருவமவ்வெல்லாந்துலங்குமைந்துபூதமல்லால்
வேற்றுருவமொன்றேனும்விளம்பினிலையாகலினுன்
ஏற்றவெகினத்துருவமெய்தியநீயார்கொலெனச்
சாற்றுற்றவம்மொழிக்குத்தருபயனொன்றுற்றிலதே.

இவ்வெல்லாம் - இவையாவும். (எ)

என்றுமுனங்கூறியவவெழிலாருமலரயனோ
டொன்றுமுருவத்தோர்களுவப்பினொடுகடாயிறைஞ்ச
அன்றுபுனற்பால்பிரிக்குமன்னவுருவாகியயாம்
வென்றிதிகழ்வெள்வேலோய்மீட்டுமிவைசெப்பினமால்.

எழிலாரும் - அழகுமிகுந்த, மலரயன் - பிரமன், உவப்பினொடு - அன்போடு, கடாய் - வினவி, இறைஞ்ச - வணங்க. (அ)

வழுத்துபெருங்குருவானுமருவதுபோகத்தானும்
தழைத்துவரும்பேதைமையைத்தள்ளியொன்றாய்ப்பாராமே

பழித்தவிருஞ்செயல்பொருந்திப்பற்பலவாக்கண்டிருப்போர்
விழித்திருந்துங்கனவுகனிமேவினரைப்போலுவரே.

அநுபோகம் - அநுபவம், பேதைமை - அறியாமை. (௯)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சித்தமுஞ்சித்தத்துதித்தமுக்குணனுஞ்சீவனுக்காகையாற்றெரிக்கின்
சத்துவகுணத்திற்சாக்கிரமுண்டாஞ்சாற்றியகனவிராசதத்தான்
மற்றவையவத்தையிரண்டலான்மூன்றாமவத்தையுந்தாமதத்தாகும்
இத்தகையவத்தைமூன்றையுமடையாதிடைவிடாதுயிரறிந்திருக்கும்,

தெரிக்கின் - தெரிவித்தால், சாக்கிரம் - சாக்கிராவஸ்தை, இது ஆன்மா மும்மலத்தைந்துதத்துவங்களோடுகூடிப்புருவமத்தியிலிருக்கும்நிலை, கனவு—சொப்பனம், மூன்றாமவத்தை - சுழுத்தி (௧0)

சாற்றியகுணமுமாக்கையுமனமுந்தானலவென்பதையறிந்தால்
போற்றியவாக்கையுடனிருப்பதுவும்போவதுமறிந்திடாராகி
ஏற்றதம்புயமேற்றுகில்கழிவதுவுமிருப்பதும்வெண்ணறைபருகி
மாற்றருமதத்தினறிந்திடாதொழுகுமாக்களைப்போலுவர்மாதோ

தான் - ஆன்மா, துகில்—ஆடை, கழிவது - நழுவுவது, வெண்ணறை—கள். (௧௧)

பானனனென்னுஞ்செருக்கறவெறிந்தோன்யாக்கையோடுறையினும்யாக்கை
தானெனதெனமுன்னிழைத்தவெவ்வினைதான்றருபயன்றொலைதருங்காறும்
போனகமருந்திப்பொன்றியபின்னர்ப்புகலுடலொன்றையும்பொருந்தான்
ஊனுடலடைந்தவுறக்கமறறுறைவோருறுவரோவொருகனவுரைக்கின்.

செருக்கு - அகங்காரமமகாரங்கள், அறவெறிந்தோன் - முழுதும்வென்றொழித்தவன், உறையினும் - இருப்பினும், தொலைதருங்காறும் - ஒழியுமளவும், போனகம்—சோறு, பொன்றியபின்னர் - இறந்தபிறகு, ஊனுடல் - மாமிசசரீரம், உறுவரோ—அடைவரோ, கனவு - சொப்பனவஸ்தை. (௧௨)

கலிவிருத்தம்

சொல்லினதியிற்றோன்றியசீவனுக்
கல்லல்செய்குணமில்லையறிவினென்
றெல்லையற்றவிருந்தவர்தம்முளம்
வல்லையுற்றுவருட்டினனமுன்னமே.

அல்லல் - துன்பம், இருந்தவர்—பெருந்தவத்தினர், வருட்டினன்—வசிகரித்தேன். (௧௩)

துங்கமாதவர்சொல்லியவெண்வகை
அங்கமாகியயோகநன்காற்றினர்
எங்குமாகியிருந்தவெம்பாலுறல்
சிங்கவேறனையாயினிச்செப்புதும்.

துங்கம் - பரிசுத்தம், மாதவர் - பெருந்தவத்தினர், எண்வகையங்கம்—எண்வகை யோகவுறுப்புகள், அவை இயமநியமாதிகள், ஆற்றினர் - செய்தவர், சிங்கவேறு—ஆண் சிங்கம். (௧௪)

குணவிகாரமுயிர்க்கில்லையென்றவத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௧௫௪.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## ஏழாவது

## யோகசித்தியுரைத்த வத்தியாயம்.



அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஏர்பெறுநியமத்தோடியமமாசனங்களென்றே
பேர்பெறும்பிராணாயாமம்பிரத்தியாகாரமென்றே
தார்பெறும்புயத்துவேந்தேதாரணைதியானமென்றே
சீர்பெறுஞ்சமாதியென்றேசிறக்குமட்டாங்கயோகம்

என்றே - என்று, ஏர் - அழகு, தார்பெறும் - பூமாலையணிந்த, சிறக்கும் - சிறந்து விளங்கும். (க)

திருந்தியயோகநூலிற்செப்புமாசனத்துச்செவ்வே
இருந்தலைவற்றுமூக்கினெழினுனிகண்ணினோக்கி
விரிந்தவைம்புலனுமாய்த்துவிளம்புபூரகமுன்னாகப்
பொருந்தியபிராணாயாமம்புகரறப்புரிதல்வேண்டும்

செவ்வேயிருந்து - நேராயிருந்து, அலைவு அற்று - சலனமற்று, மூக்கினெழினுனி— அழகியநாசிநுனி, கண்ணின் - கண்ணினால், மாய்த்து - கொன்று, புகரற - குற்றமற, பூரகம் - வாயுவைவெளியேசெல்லாமல் உள்ளேநிறைத்தல் (உ)

பூரகங்கும்பகஞ்சீர்பொருந்திரேசகங்களாயும்
சீருறுரேசகாதிதிகழ்விபரீதமாயும்
பேருறுபிராணாயாமம்பிரணவத்தொடுமோர்திங்கள்
ஏருறவியற்றின்வாயுவினிதவன்வயமதாமே

விபரீதம் - ஒன்றையொன்றுபுணர்தல், பிரணவத்தொடும் - ப்ரணவோச்சாரணத்தோடும், திங்கள் - மாசம், வயமதாம் - வசமாகும். (ங)

வசம்வரினிடாவினோடுவயங்குபிங்கலையைமூட்டி
அசைவறநடுவிலுற்றங்கவிர்சுழுமுனைமேற்போகின்
பசியநற்கதலிப்பூப்போற்பணிபுறுமிதயமாகி
இசைதருகமலமேவாவெழில்பெறவலர்த்துமக்கால்

வசம்வரின் - வசப்பட்டால், இடா - இடை, (இடைநாடி) பிங்கலை - முந்நாடிகளுளொன்று, சுழுமுனை - முந்நாடிகளொன்று, கதலிப்பூ - வாழைப்பூ, அலர்த்தும்— விரிக்கும். (ச)

அலர்ந்தவம்மலர்மேலன்பர்க்கருள்சுரந்தொழுகுகண்ணும்
நலந்தருமுகமும்வாயுநான்கெனும்புயமும்பொன்சேர்ந்
திலங்குசெம்மணிதாழ்மார்புமெழிற்றொடிபுனைசெங்கையும்
துலங்குபொற்றாளுமாகத்தோன்றுமெம்முருவநாடி.

பொன் - திருமகள், செம்மணி - கௌஸ்துபமணி. (ரு)

கண்ணும்யாமென்றும்வேறுநாடியதாங்கொலென்றும்
எண்ணிடாதொன்றுபட்டாங்கிருப்பரேற்றுபமூன்றின்

கண்ணூருரின்பமென்னுங்கரையிலாக்கடலேயாழ்வர்
அண்ணலேயோகசித்தியநுமூன்றுமவையுங்கேண்மோ.

இருப்பரேல் - இருப்பாராயின், முத்தாபம் - ஆதியாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் என்பன. இவற்றுள் முன்னையது தன்னால்வருந்துன்பம், இடையது தெய்வத்தால்வருந்துன்பம், பின்னையது பிறவுயிர்களால்வருந்துன்பம், இவைதாபத்ரயம் எனப்படும். (சு)

அறைதருமணிமாவென்றுமரும்பெறன்மகிமாவென்றும்
விறலுறுலகிமாவென்றும்வீறுயாபிராத்தியென்றும்
நிறைபிராகாமியஞ்சேர்நிலவுமீசத்துவஞ்சொல்
மறுவறுசிறப்பின்மிக்கவசித்துவங்கரிமாவென்றும்.

அறைதரு - சொல்லப்பட்ட, அரும்பெறல் - பெறுதற்கரிய, விறல் - வெற்றி, வீறு - மேன்மை, நிலவும் - விளங்குகிற, மறுவறு - குற்றமற்ற. (எ)

நலங்கிளர்சித்தியெட்டுநவிலுறுமுதன்மையாநம்
இலங்கியயோகசித்தியின்னுமீரைந்துண்டோதின்
துலங்கியவேற்றுத்தீவிற்றோன்றுமெம்முருவகாடி
இலங்கறுவகைவிகாரமேவிடாவாக்கைசேர்தல்.

நவிலுறு - சொல்லப்பட்ட, முதன்மை - தலைமை, ஈரைந்து - பத்து, அறுவகை விகாரம் - காமக்ரோதலோபமோஹமதமாத்ஸரியங்கள். (அ)

புவிபுகழ்றிவின்மிக்கோய்புரையறும்யோகததானே
செவியினைவானிற்சேர்த்திச்சேய்த்துளமொழிகடேர்ந்தும்
சவிதிகழ்சவிதாவின்கட்டன்னிருகண்ணைவைத்து
நவையறத்தூரத்தெங்குநண்ணுருயாவுங்காணல்.

புரை - குற்றம், வானில் - ஆகாயத்தில், சேய்த்துள - தூரத்திலுள்ள, தேர்ந்தும் - அறிந்தும் (கேட்டும்), சவிதிகழ் - ஒளிவிளங்குகிற, சவிதா - சூரியன், நவையற - குற்றமற. (கூ)

அற்றமின்மனத்தின்வேகமடைந்திருதிசையிற்சேறல்
உற்றநல்லிலிங்கமென்னவுரைதனுவோடும்புக்குக்
குற்றமில்லாகாயத்திற்குலவுதமக்குவேண்டின்
உற்றிடலரம்பைமாரோடினிதுவந்தாடலன்றே.

'அற்றமில் - முடிவில்லாத, மனத்தின்வேகம் - மனோவேகம், இருந்திசையிற்சேறல் - பெரியதிக்குகளிற்செல்லுதல், இலிங்கமென்னவுரைதநு - லிங்கசரீரம் (சூக்ஷ்மசரீரம்) குலவுதல்—விளங்குதல், உவந்தாடல் - மகிழ்ந்துவிளையாடுதல். (௧0)

சிந்தையிற்றிகழ்முக்காலச்செய்கையுந்தெளிதலின்பம்
வெந்துயரடையாதுற்றல்வேறுளோர்சித்தமோர்தல்
அந்தமுற்றம்பனுதியரியதம்பனங்கணுட்டல்
புந்தியின்வரும்பத்தும்போகசற்சித்தியாமே.

முக்காலச்செய்கை - த்ரிகாலவர்த்தமானம், சிந்தையின் - மனத்தினால், வேறுளோர்சித்தமோர்தல் - பிறர்கருத்தையறிதல், தழற்றம்பனம் - அக்நிஸ்தம்பனம். (௧௧)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

இணையறுமணிமாவாவதுமுனஞ்சொலெண்வகையோகங்களிழைத்தோர்
அணிபெறுபரமாவணுவெனவெம்மையகத்திடைநினைத்தணுவாதல்
தணிவறுமகிமாவாவதுமகத்தாய்ச்சாற்றுமிங்கெமைநினைவுற்றோர்
மணியெழுவனையமல்லுயர்புயத்தோய்மகத்தெனமருவுதன்மாதோ.

இழைத்தோர் - செய்தவர், அணு - மிகநுட்பமாகியவுரு, மகத்து-மிகப்பெரிது.

மருவியலகிமாவாவதுலகுவாய்மனத்தெமைநினைத்தலாதல்
உரைதருபிராத்தியாவதிந்தியங்களுறும்புலனெனவெமைநினைத்தோர்
விரவுதல்பிராகாமியமகத்தோடுவீறுயர்சூத்திரமாகிப்
புரைதபவெங்குமிருப்பமென்றெம்மைப்புந்தியினினைத்தவர்விளங்கல்.

லகு-இலேசு, புலன்-விஷயங்கள், சூத்திரம் - சூட்சுமவான், (நூலாங்குவிட்டபோல்)
புரைதப - குற்றங்கெட (௧௨)

எழுவகைப்பிறப்பினுயிர்க்குழுவியக்குமியம்பருங்காலத்திலுருவாய்
விழுமியவுளத்திலெமைநினைவுற்றோர்விளம்புமீசத்துவம்பெறுவார்
மொழிதருமவத்தைமூன்றையும்பொருந்தாமுழுமுதலாயறிந்திருக்கும்
அழிவறுதுரியனெனவெமைநினைந்தோரடைகுவர்வசித்துவமன்றே.

எழுவகைப்பிறப்பு-தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பன, உயிர்க்குழு - சீவராசி, விழுமிய - மேலான, அவத்தைமூன்று - ஜாக்ரஸ்வப்நஸுஷுப்திகள், துரியன் - துரியநிலையிலுள்ளவன் (௧௩)

கருதருங்காமமென்றுமுன்னுனக்குக்கழறுநற்சித்தியாதென்னின்
அருவமாயறிவாயாநந்தமயமாயாகுவனெனவெமைநினைந்து
விரைகமழ்நறுந்தாருத்தவயோகம்விதித்தவாறினிதுறவிழைந்தோர்
பொருவிலவ்வாறேயாநந்தமயமாய்ப்பொருந்தியீற்றிருப்பர்தாமன்றே.

கழறும் - சொல்லப்பட்ட, விரை - வாசனை, கமழ் - பரிமளிக்கிற, நறுந்தார்-அழகியபூமாலை, விழைந்தோர் - விரும்பினவர், பொருவில் - ஒப்பில்லாத. (௧௪)

எவ்வகையெவையேயியைந்தெமைமனத்திலிடைவிடாதன்பொடுநினைந்தோர்
அவ்வகையவையேயடைந்துவப்படைவாரகம்புறநடுவும்யாமென்ன
மௌவலந்தொடையானுத்தவன்றனக்குவழங்கினனெனச்சொலிமீட்டும்
தெவ்வலர்புகழும்விண்டுராதனுக்குத்தெரிக்கலுற்றனன்சுகமுனிவன்.

இடைவிடாது - சதாகாலம், உவப்படைவார் - மகிழ்வடைவார்கள், அகம்புறம்- உள்வெளி, மௌவலந்தொடையான் - முல்லைமலர்மாலையையுடையவன், தெவ்வலர்- பகைவர், விண்டுராதன் - பரிக்ஷித்து. (௧௫)

யோகசித்தியுரைத்தவத்தியாயம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௧௭௦.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

# எட்டாவது
## விபூதியுரைத்தவத்தியாயம்.

கலிவிருத்தம்.

வெளியுமுள்ளும்விமலனீயாயினும்
தெளிகலாரொ ருயோகமுஞ்செய்கலார்
எளியர்தாமுனையெங்ஙனஞ்சேர்வதென்
றொளிகொள்வேற்படையுத்தவனோதினான்.

விமலன் - மலரஹிதன், தெளிகலார் - தெளிந்திலார், எங்ஙனம் - எவ்வாறு. (க)

அநகனன்னதுகேட்டறைகின்றனன்
நினைவருஞ்சமனேர்ந்திலனாகிநீ
வினவும்வண்ணம்விசயனுங்கேட்பயாம்
னைவுவேலவசெப்பினமுன்னமே.

அநகன் - பரிசுத்தன், (கண்ணபிரான்) சமன் - சமபாவம், நேர்ந்திலனாகி - அடையாதவனாகி, விசயன் - அருச்சுனன். (உ)

நீதிமுத்தொழிலும்மவைசெய்வதும்
பூதத்துள்ளுயிரும்பலபூதமும்
ஏதமற்றயாமாதலினெம்முரு
ஓதின்முற்றமுரைக்கடங்காதவே

முத்தொழில் - ஸ்ருஷ்டிஸ்திதிஸம்ஹாரங்கள், ஏதமற்ற - குற்றமற்ற, உரைக்கு - சொல்லுக்கு. (ங)

பொறியடங்கவடக்கியபுட்சியில்
அறையுமுள்ளத்தவர்களுமெம்முரு
அறியும்வண்ணம்யாமானவிபூதியுள்
குறைவிலோய்சிலகூறுதுங்கேட்டியால்.

பொறி - பஞ்சேந்திரியங்கள், அவையாவன - மெய், வாய், கண், மூக்கு, செவி, என்பன. இவற்றை முறையே - த்வக்கு, ஜிஹ்வா, சக்ஷு, க்ராணம், சுரோத்ரம் என்பர் வடநூலார், புட்சி - அறிவு, அறையும் - சொல்லுகிற, எம்முரு - எமதுவடிவம், விபூதி - செல்வம், (ஐசுவரியம்). (ச)

வண்மையாமகத்துக்கும்வயங்குமோர்
திண்மையாமகத்தாகவுஞ்சேர்ந்தியாம்
நுண்மையாயபொருளினுவலரு
முண்மையாமுயிராகவுமுற்றனம்.

மகத்து - பெருமை, வயங்கும் - விளங்குகிற, திண்மை - வலி, நுண்மை - நுட்பம், நுவலரு - சொல்லுதற்கரிய, உற்றனம் - பொருந்தியிருக்கி (ரு)

அந்தமுற்றவெழுத்திலகாரம்யாம்
மந்திரத்தின்மறைசொல்பிரணவம்

கபிலப்பெயர்சேர்ந்தவன் - கபிலனென்னும்பெயரையுடையவன், பகரும்—சொல்லப்படுகிற, படைப்போர் - சிருஷ்டிசெய்யவல்லவர், வித்தகம் - அறிவு, தக்கன் - தக்ஷப்ரஜாபதி, முத்திறப்புரந்தீத்தழுக்கண்ணன் - சிவன். (கக)

விரியுநால்வருணத்தினில்வேதியர்
வருணநாமவ்வருணத்தினுன்கென
உரைசெயாச்சிரமத்திஞெடுக்கமாய்
புரையிலாச்சிரமம்புகல்வீரயாம்

நால்வருணம் - பிரமக்ஷத்திரியவைசியசூத்திரர், வேதியர்வருணம் - ப்ராஹ்மணவர்ணம், நான்கென உரைசெயாச்ரமம் - நான்கென்றுசொல்லப்படுகிறநிலைகள், ஒடுக்கமாம்புரையிலாச்சிரமம் - மனமொழிமெய்களொடுங்குதற்குக்காரணமாகிய குற்றமற்றநிலை, அதாவது - துறவு, (ஸந்யாஸம்). (க௨)

அரியநான்மறையந்தணர்தங்களின்
பிருகுநாம்பலபேசுறுமாநதரின்
மருவுபார்புகழ்மன்னவன்விண்ணவர்
கருதுசேனைத்தலைவரிற்காங்கெயன்.

பிருகு — ப்ருகுமுநி, மாந்தர்—மக்கள், பார் - உலகம், விண்ணவர்—தேவர். கருது-நினைக்கிற, சேனைத்தலைவர் - சேநாதிபதிகள், காங்கெயன் -கங்காபுத்ரன், (முருகன்)

தருணமங்கையரிற்சதரூபையாம்
புருடரிற்சுவாயம்புவெனப்புகல்
உருவநன்மனுவேந்தனுடுக்களின்
இருவிசும்பினிலங்கியதிங்களே

தருணம்—பருவம், சதரூபை—ஸ்வாயம்புவமநுவின்மனைவி, இவள்பிரமதேவனால் முதலில்படைக்கப்பட்டபெண், உருவம் - அழகு, இருவிசும்பு - பெரிதாகியஆகாயம், இலங்கிய - விளங்கிய, திங்கள் - சந்திரன் (கச)

கண்ணகன்றநதிகளிற்கங்கையாம்
தண்ணிருந்தசலநிலயங்களின்
மண்ணகழ்ந்தவனைப்புழவாரிதி
விண்ணுயர்ந்தசிகரியின்மேருவே

கண் அகன்ற - இடம்பரந்த, தண் - குளிர்ச்சி, சலநிலயங்கள் - நீர்நிலைகள், மண் அகழ்ந்து - பூமியைத்தோண்டி, வாரிதி - கடல், சிகரி - மலை. (கரு)

வினைகடந்துயர்வேதியர்தம்முழை
மனையொடன்புசெய்வோர்களின்மாவலி
புனிதநல்லொளிபுல்லினரிற்பெரும்
பனிகடந்தபரிதியஞ்செல்வன்யாம்

கடந்து - வென்று, வேதியர்தம்முழை - வேதியரிடத்தில், மனையோடு - மனையாளோடு, அன்பு - பத்தி, புனிதம் - பரிசுத்தம், நல்லொளிபுல்லினர் - மிக்கவொளியுடையவர், பனிகடந்த - பனியைவென்ற, பரிதியஞ்செல்வன் - சூரியன். (கசு)

மாசிலாக்கவிஞோரின்வண்சுக்கிரன்
தேசுசேர்பகவானெனுந்தேவரின்
வாசுதேவன்வழுத்துநல்லன்பரின்
ஆசிலாதசீயாமென்றறிதியால்.

மாசிலா - குற்றமில்லாத, தேசு - ஒளி, வழுத்து - துதிக்கப்பட்ட, ஆசு-குற்றம்.

அடக்கருமவைதம்மலரும்பொறி
நடக்கவூற்றமனநவைநீங்கிய
படைக்கலத்திற்பகர்பெருங்கார்முகம்
கடக்கருங்கபட்டிற்கலியாமரோ

அடக்கருமவை - பொறிகள், நவை-குற்றம், படைக்கலம்-ஆயுதம், கார்முகம்-வில்.

மல்லலூற்றவவியின்மன்னுவியெனப்
புல்லலூற்றதருப்பையிற்பூருதை
சொல்லலூற்றமியாகத்திற்றுணிவுடன்
அல்லலற்றமனத்தையடக்கல்யாம்.

மல்லல் - வளம், அவி - ஹவிஸ்ஸு, ஆவியெனய் - பசுநெய், குசை - தருப்பையில் சிறந்தவொருவகைத்தருப்பை, அல்லல் - துன்பம் (௧௯)

விரதமானவைதம்மன்விளங்கிய
விரதமோருயிர்க்கிறிழையாமையாம்
வரதயாம்மறைவானவைதம்மினில்
சரதமாகச்சரிதமவுனமே

இறிழையாமை - கொல்லாமை, வரத - காதற்பெருகிலுடையவனே, சரதம்-உண்மை, மவுனம - பேசாநிலை (௨௦)

சாற்றுகின்றதவத்தினியமம்யாம்
போற்றுகின்றதாதுக்களிற்பொன்னணி
ஆற்றுகின்றயாகங்களினன்பொடும்
ஏற்றுகின்றபிரமவியாகமே.

நியமம் - யோகவுறுப்பெட்டனும் இரண்டாவதுறுப்பு, தாது - லோஹம், நனி-மிகுதி, பிரமவியாகம் - ப்ரஹ்மயாகம், (வேதமோதல்). (௨௧)

தரவுக்கொச்சகக்கலிப்பா.

தயித்தியரினல்லறிவுசார்பிரகலாதனியாம்
இயக்கர்களின்மந்திரியரமெழிற்பிரமசாரியரின்
நயக்குமுளத்துத்தவகேனுஞ்சனற்குமாரனென்றும்
மயக்கறுநற்பிதிர்கடமின்மருவரியமாயாமே.

தயித்தியர் - அசுரர், பிரகலாதன் - இரணியகசிபன் புத்ரன், மந்திரி-குபேரன், சனற்குமாரன் - பிரமன்மாநஸபுத்ரருளொருவன், அரியமா - அரியமன், (பிதிர்தேவதைகளிலொருவன்). (௨௨)

பறவைகளின்யாங்கருடன்பன்மாவின்யாமடங்கல்
கறவையெனுநிரைகளின்யாங்கடவுளராப்பரிகளின்யாம்
சுறவமெறிதிரைக்கடலிற்றோன்றுபரிகரிகடமின்
மறவைநுனிநாற்கோட்டுமதவயிராவதம்யாமே.

பன்மா - பலமிருகங்கள், மடங்கல் - சிங்கம், கறவையெனுநிரை - கறவைப்பசு, கடவுளரா - காமதேனு, பரி - குதிரை, சுறவமெறிதிரைக்கடலிற்றோன்றுபரி - உச்சைசிரவம், மறவைநுனிநாற்கோடு - கோவர்த்தையும் கூரியநுனியையுடையநான்கு கொம்புகளையுமுடைய ஐராவதம் - (இந்திரன்யானை). (௨௩)

அரவுகளின்வாசுகியாமரவரசராயவரின்
பரவுபலமணித்தலையிற்பார்பரித்தசேடன்யாம்
விரவுபலதருக்குழுவின்விளங்குகிளையரசுருயாம்
புரவுபுரியரசமுதற்புகல்பவரிலயன்யாமே

அரவுகளில் - பாம்புகளில், அரவரசர் - நாகராஜா, பாரபரித்த - உலகத்தைச்சுமக்கிற, சேடன் - ஆதிசேடன், தருக்குழு-மரக்கூட்டம், அரசுரு-அரசமரத்தினுருவம், புரவுபுரி - காத்தற்றொழிலைச்செய்கிற, அயன் - பிரமன், முதற்புகல்பவரில் - முதன்மையாகச்சொல்லப்பட்டவருள் (௨௪)

அழிவுசெய்யுநாடிமுதற்பரமகாலநாண்டுருயாம்
விழையுமிருதுவினிளவேனிலெனுமிருதுவும்யாம
தழைவுபெருமதிகளின்யாந்தனுமதிநன்னாட்களினில்
மழைநிகருங்குடைக்கரத்தாய்வழங்கபிசித்தெனுநாளே

நாடி - எட்டுநிமிடங்கொண்டகாலம், (காலநுட்பம்) ஆண்டு - வருடம், இருது - பருவம், இளவேனில் - இளவேனிற்பருவம், (சித்திரைவைகாசியென்னுமிரண்டுமாசகாலம்) மதி - மாசம், தநுமதி - தநுர்மாசம், (மார்கழிமாசம்) நாள் - நக்ஷத்ரம், அபிசித்து - ஒரோட்டுநக்ஷத்திரம். (௨௫)

அரசயுகநான்கினிலுமாதியுகமாவதியாம்
பரவரியவியாதனியாம்பராசரமாமுனிபுதல்வன்
பொருதிறல்சேர்வீரர்களிற்புகன்றவெழிலருச்சுனன்யாம்
பெருகுசுகிகளிற்சுகியாம்பெலவானிற்பெலவான்யாம்

ஆதியுகம் - க்ருதயுகம், வியாதன் - வேதவியாசன். (௨௬)

நவையறகந்திருவர்களினலஞ்செய்விச்சுவாவசுயாம்
புவனமுழுதும்புறமும்பொருந்தியவானத்தொலியும்
பவனினறப்பரிசமுஞ்சேர்பாவகனினெழிலுருவும்
அவனியினிலருமணமுமப்புவினிலிரதமும்யாம்.

வானத்தொலியும் - ஆகாயத்திற்சத்தமும், பவனினறப்பரிசமும் - வாயுவிற்பரிசமும், பாவகனிலெழிலுருவும் - அக்னியில்ரூபமும், அவனியினிலருமணமும்-பூமியில் கந்தமும், அப்புவினிவிரதமும் - நீரில்சுவையுங், (சுவை - ரசம்). (௨௭)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சூடர்நவமணியிற்பதுமராகமும்போய்த்துன்னுதற்கரிதெனுஞ்சாத்தின்
கேடலருவலிசேர்இமயமால்வரையுங்கிம்புருடரியமானும்
உடைதிரைப்புனல்வாழுயிரினின்மகரமொருவமுமுழுதிம்பெறுவோரா
விடலருவிவசாயநகரின்மலர்மேல்விளங்கியவிமலையும்யாமே.

நவமணி - நவரத்நம், சாரம் - பாலைவனம், மகரம் - மகரமீன், ஊதியம் - பயன், மலர்மேல்விளங்கியவிமலை - திருமகள் (௨௮)

மருவியமாயைமகத்தகங்காரமதிபொறிபுலன்றனைமுதல
தரைபுனல்கனல்கால்வான்முதலெல்லையுஞ்சாற்றுநாமாயினுமதருநர்
திருவருளெழுசீர்திகழ்வளமபொறுமைதெரிவமெய்கொடைதிறம்யாந்த
அரசவெங்குறைபுமவனைவாரமற்றறிதியெனக்கலைப்பிரிவெனவே

மகத்து-மகத்தத்துவம், அகங்காரம்-அகங்காரதத்துவம், எங்கலை—எமதுஅம்சம்

சுருக்கினம்மொழறுரைத்ததையன்றிசொல்லுமெம்விபூதியைமுழுதும்
விரித்துமுற்றுரைப்பவேண்டுமேமெமகரும்விளம்புதலரிதிலைவெயல்லாம்
உரைத்திடுமெமதுவடிவெனமாயனுமவற்குரைத்தனனென்றுத்
திருத்தகுமுனிவனரசனுக்கெனியத்தெரித்தனன்வஞ்சலைதெரிக்கும்

சுருக்கினம் - சுருக்கி, (முற்றெச்சம்) வேண்டுமேல் - வேண்டுமாயின், என்று— என்று, திருத்தகுமுனிவன் - சுகன், அரசு - பரீக்ஷித்து, தெரித்து - தெரிவித்து. ()

விபூதியுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்—௨00.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்

---

## ஒன்பதாவது

## வருணாச்சிரம முரைத்த வத்தியாயம்.

கலிவிருத்தம்.

என்னவுமுதத்தவனிறைஞ்சியெம்முழை
மன்னியவன்பொடுவருணநான்கினோர்
உன்னியதமவினையுஞற்றனன்றென
முன்னவவுரைத்தனைதொகுத்துமுன்னமே.

இறைஞ்சி - வணங்கி, எம்முழை - எம்மிடத்தில், மன்னிய - நிலைபெற்ற, தம வினை—தமதுதொழில், உஞற்றல்—செய்தல், முன்னவ—முதல்வனே, (கண்ணபிரானே)

அவ்வகைவருணவாச்சிரமமன்பொடும்
இவ்வகைவருவர்வந்தியற்றுதம்வினை

செய்வகையிவையெனத்தெரித்தியென்றனும்
மௌவலந்தொடைபுனைமாயன்கூறுமால்.

இயற்று - செய்கிற, தெரித்தி - தெரிவிப்பாயாக, மௌவலந்தொடை - முல்லை மலர்மாலை, மாயன் - கண்ணபிரான் (௨)

எண்ணியமுதலெனுமுகத்தின்யாவரும
நண்ணியஞானமன்னவத்திறேனுங்குவா
தண்ணறுந்தொடையமாயத்தருமமானயர்
வெண்ணிறவிடையுருவெடுத்துமேவுமேவ

முதலெனும்யுகத்தில் - கிருதயுகத்தில், ஓங்குவர் - உயர்வர், வெண்ணிறவிடை யுரு - வெள்விடையுருவம், (விடை - எருது) (௩)

உரைத்தனனான்மறை முழுதமொன்றெனத்
தெரித்திடும்பிரணவமாகிச்சேர்தமால்
அருத்திசெயிரண்டெனவறைந்தவூழிவாய்
விரித்திடும்பெயர்விராட்டென்றுமெய்ம்முறை

பிரணவம் - ஓங்காரம், அருத்தி - அன்பு, இரண்டெனவறைந்த ஊழிவாய் - த்ரேதாயுகத்தில் (௪)

உலவியவுயிர்ப்பினிற்றொடுத்தமாமறை
குலவியமுகம்புயங்குறங்குதாளினில்
நிலவியமுறைமுறைபிறப்புத்தொழில்
நலனுறுவருணமோர்நான்குந்தோற்றின.

உலவிய - இயங்குகிற, உயிர்ப்பினில் - சுவாசத்தில், குறங்கு - தொடை (௫)

உத்தவிரண்டெனுமுகத்திறுதியின்
இத்திறமுதித்தவெம்முருவமாகிய
சித்திரவிராட்டெழில்சேர்முகத்திடை
தத்துவஞானமுந்தயங்கத்தோன்றிற்றால்

இரண்டெனுமுகத்திறுதியில் - இரண்டாம்யுகத்தின் ஆரம்பத்தில், இத்திறம் - இவ்வாறு, உதித்த - தோன்றின, சித்திரம் - ஆச்சரியகரமாகிய, விராட்டு - விராட்டுருவத்தின், எழில் - அழகு, தயங்கி - விளங்கி (௬)

அல்லலிலிருபிறப்பாவதும்மதற
கொல்லுநற்கருமமுமிதயத்துற்றெழ
இல்லினராவதுமியைந்தநன்மமும்
வல்லையிற்சகனமேல்வந்துதோற்றின.

அல்லலில் - துன்பமில்லாத, இருபிறப்பு - த்விஜத்வம், ஒல்லும் - பொருந்திய, நற்கருமம் - சத்க்ருத்யம், இதயத்து - இருதயத்தில், இல்லினர் - இல்வாழ்க்கையர், வல்லையில் - விரைவில், சகனமேல் - தொடையில். (எ)

வனத்திடைச்சேறலும்வனத்திற்செல்லுநர்
நினைத்தனசெய்ததருமெனநிகழ்த்திய

விளம்புநற்பதம்பெற்றுயர்குவரென்னவிண்ணவர்பொறுமையால்விரைந்தாங்
குளங்கனிந்துருகுமனேயவளாதியுருவினராகிமுன்றடுப்பார் .
வளம்பெறுமராசவவ்வகையறிந்துவருமிடர்கடிந்தெதியாகிக்
களங்கமின்மனத்திற்றுறவறமியற்றல்கடனெனவுரைப்பர்கற்றுணர்ந்தோர்.

விண்ணவர் - தேவர், இடர்கடிந்து - துன்பத்தையொழித்து, களங்கமல் - கல்மஷமில்லாத, துறவறமியற்றல் - துறவறத்தைச்செலுத்தல், கடன்—முறைமை ()

தரவுக்கொச்சககக்கலிப்பா.

அதிவருணச்சிரமியெனவடைந்தமுனிதிறங்கூறின்
விதிசவுசாசமநமுதல்வேண்டுதல்வேண்டாமையிலான்
பதிதருறும்பட்டத்தனுகான்பாவனைப்போன்மகிழ்ந்துறைவான்
எதிர்மருவியெவரேனுமெவையளிப்பாரவைபெறுவான்

அதிவருணச்சிரமி - வர்ணாசிரமங்களைக்கடந்தவன், சவுசம் - சுசித்வம், ஆசமநம்—முக்குடிநீர், வேண்டுதல்வேண்டாமை - விருப்புவெறுப்பு, பதிதர் - பாவிகள் (௧எ)

உற்றவினவறத்தினெனென்றுரைப்பவொருகுறிஇன்னமிலான்
எற்றிடினுமெறிந்திடினும்பின்னனைவைதிடினும்
மற்றவரைவெகுண்டுரையான்வழுவருமுணவேற்பதற்குச்
செற்றமறும்படிமுயற்சிசெய்தாலுஞ்செய்குவனல்

ஈனமிலான் - குறியில்லாதவன், எற்றிடினும் - அடித்தாலும், எறிந்திடினும்—
வெட ... னாலும், வெகுண்டுரையான் - கோவித்துப்பேசான், செற்றம்- கோபம (௨அ)

பயம்புரியான்பயமடையான்பழியான்மற்றொருவரையும்
நயம்புரிந்ததருமமிவைநவையிவையென்றுளதேரான்
இயம்புபெயர்தேகியெனவிருந்தாலுந்தனுவிறப்பின்
வயம்புரியுமரசவவன்வழங்கியவெந்தமராவான்.

பயம்புரியான் - அச்சமுண்டாக்கமாட்டான், பயமடையான் - அஞ்சான், பழி
யான் ... நிந்தியான், ஓரான் - கொள்ளான், தநு - உடம்பு (௨௯)

துறந்தவருக்குரியனவாஞ்சொல்லுமுயிர்க்கிதஞ்செயலும்
மறந்தவிடயங்களினுமனஞ்செலுத்தாதுறைகுவதும்
நிறைந்தபுகழுத்தவனேகெடுங்கானமடைந்தோர்க்குப்
பிறங்குதவம்புரிவதுவும்பிரமவிசாரமுமுரித்தே.

நயம் - நன்மை, மறந்த - விட்ட கானம் - வநம், பிறங்கு - விளங்குகிற, விசாரம்-
ஆரா ... சி. (௩0)

இல்லறத்திலிருந்தவருக்கெவ்வுயிர்களிடத்தினிலும்
நல்லவழிபுரிகுவதுநாயகர்பூசையுமுரிய
சொல்லுகுருசேவையொடுதொல்பிரமசரியமுநூல்
ஒல்லுமுபநயனவினையுற்றவருக்குரித்தாமே.

நாயகர் - கடவுளர், குருசேவை - குருதரிசநம், உபநயநவினை—பூணூற்சடங்கு.

அருமுனிவர்தாம்பிரமமானாலும்வெய்யவினை
மருவவருமோகாதிவந்தணுகாவெவ்வுலகும்
விரவுபுகழாசவவர்விளம்புமுடல்விழுமளவும்
பிரமவிசாரத்திருப்பர்பின்னமறவெனவுரைத்தான்.

மோகாதி - மோகமுதலியவை, அணுகா - அணுகி, விரவு - பொருந்திய, பின்னமற - வேறுபாடற (௩௨)

வருணாசிரம முரைத்த வத்தியாய முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் — ௩௨.

ஸ்ரீ கிருஷ்ண சகாயம்

---

பத்தாவது

## இயம நியமாதி யுரைத்த வத்தியாயம்.

கலிவிருத்தம்

இத்திறத்தனவெட்டியமன்னமும
பத்தியும்பகர்தற்கருஞானமும்
புத்தியிற்பொருந்தப்புகலென்றுமவ
வுத்தவற்கருணமாதவனோதினன்

இத்திறத்தன - இவ்வகையான தருமங்கள், பகற்தற்கரும் - சொல்லுதற்கரிய, புகல் - சொல்லக்கடவை. (௧)

அருமையாமறியாகியவெம்முறை
ஒருமையாயநல்லன்பொடுநூற்றிய
கருமம்யாவெதனினும்மதுகாண்கினற்
றருமமாமெனச்சாற்றுவர்மேலவர்.

எம்முறை - எம்மிடத்தில், உஞற்றிய - செய்த. (௨)

சுகத்தின்மேம்படச்சொல்லியஞானமாம்
மகத்தினானன்மகபதியாயயாம்
அகத்துமேவுவமாகவாராதிக்கின
நிகழ்த்துநித்தியனாகுதிநீயரோ

மகத்தினால் - யாகத்தினால், மகபதி - யஞ்ஞாதிபன், ஆராதிக்கின் - பூசித்தால், நிகழ்த்தும் - சொல்லப்பட்ட, நித்தியன் - சாசுவதன், ஆகுதி - ஆவாய். (௩)

மொழியுங்காலமோர்மூன்றினுநதான்றனி
வழியுந்தேமலர்மாலையொன்றாய்நடு
ஒழியுமுள்ளமயக்கினுரகமாய்த
தழையும்வெம்பயமுந்தால்போலுமே.

காலமோர்மூன்று - முக்காலங்கள், மயக்கின் - மயக்கத்தில், உரகம் - பாம்பு.

அன்னவாறருமாயையினடு
இன்னலாம்படைப்பாயதல்லாதினி
துன்னுவோற்குப்பிரமமுமொன்றென
மன்னுகாலமோர்மூன்றும்வயங்குமே

அடு - வருத்துகிற, இன்னல் - துன்பம், வயங்கும் - பிரகாசிக்கும். (௬)

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தருமன்முன்னியமநியமநற்றபசுசமம்தம்வேள்விதக்கிணைமெய்
உரைதனந்தியாகஞ்சவுரியம்வித்தையூதியம்பண்டிதன்மூர்க்கன்
தெரியுநல்வழிதீவழியருந்தனவான்றெரித்திரனீசுரனீசன்
மருவுறுங்குணமகுணம்புகலென்றுவணங்கலுங்காங்கெயன்வருத்தான்.

தக்கிணை - தக்ஷிணை, தியாகம் - கொடை, சவுரியம் - சூரத்துவம், ஊதியம்—லாபம், தெரித்திரன் - தரித்திரன், குணம் - நற்குணம், அகுணம் - தீக்குணம், காங்கெயன் - பீஷ்மன். (௬)

அன்னவனிசைத்தவாறுனக்கிசைப்பவாசகீகேட்டிமுன்னருஞ்சீர
மன்னியவியமநியமமென்பனதாம்வருமுயிர்க்கிதஞ்செயன்மவுனம்
பன்னுநம்பூசைசபதபம்புனிதம்பகருமெய்பொறைமுதலியவாம்
உன்னியசமமுன்மனத்தினையடக்கலுறுந்தமமாந்தியமடக்கல்.

இசைத்தவாறு - சொல்லியவண்ணம், இசைப்பம் - சொல்லுவோம், கேட்டி—கேட்பாயாக, இதம் - நன்மை, பொறை - பொறுமை. (எ)

கலிவிருத்தம்.

தகைசெய்கின்றதவமெனச்சொல்வது
புகர்செய்காமம்விடுப்பதுபுந்தியின்
மகமெனப்படுகின்றதுமற்றெமக்
ககமகிழ்ந்துபயனளித்தாற்றலே.

தகை - பெருமை, புகர் - குற்றம், ஆற்றல் - செய்தல் (அ)

தாவிலாதநற்றக்கிணையாவது
பூவினோர்க்கருள்பொற்கொடையன்றுசொல்
ஆவிவேறென்றயர்வுறமாந்தருக்
கோவிலாப்புகழ்ஞானமுதவலாம்.

தாவிலாத - கெடுதலில்லாத, பூவினோர்க்கு—பூமியிலுள்ளவர்க்கு, பொற்கொடை—பொன்கொடுத்தல். (௯)

பெருமையாயதனமெனப்பேசுதல்
தருமமாகுந்தரையிற்றவறிலா
உருமையாயதியாகமென்றோதுதல்
கருமமோடுவெங்காமம்விடுப்பதே.

தரையில் - பூமியில், தவறு - குற்றம், உருமை - உரிமை, கருமம் - தொழி

சாற்றுகின்றசவுரியமாவதிங்
காற்றலுற்றமனத்தையடக்குதல்
ஏற்றமுற்றநற்சத்தியமென்பது
சீற்றமற்றுவேதாந்தந்தெளிவதே.

ஆற்றல் - வல்லமை, ஏற்றம் - உயர்வு, சீற்றம் - கோபம். (கக)

வித்தையாவதுவேதம்விடுத்தொரு
புத்தியாகப்பொருந்துதல்பொற்புறும்
உத்தவாமிகுபூதியமாவதெய்
பத்தியாமெனவேதம்பகருமே

பொற்புறும் - அழகுமிகுந்த, உத்தவா - உத்தவனே, பூதியம் - லாபம். (கஉ)

தரவுக்கொச்சகக்கலிப்பா.

பந்தமொடுசொல்வீடுபகுத்தறிவோன்பண்டிதனும்
அந்தமிலான்மாவாக்கையானென்பானேமூர்க்கன்
நந்தலிலெந்நூலறிதனல்லநெறிநெறிதான்
புந்தியொடுநிவர்த்தியிலாப்பொய்ந்நூல்பார்த்தறிவதுவே.

பந்தம் - பிறவிக்கட்டு, வீடு - மோக்ஷம், பகுத்தறிவோன் - பிரித்தறிபவன், நந்தலில் - கெடுதலில்லாத, எந்நூலறிதல் - எமதுநூலையறிவது. (கங)

நல்லகுணஞ்சேர்தருவோனவையிறனவானும்
சொல்லுமகிழ்வில்லானேதுகளாருந்தரித்திரனும்
மல்லலுறுமீசனென்பான்வழங்குபுலத்தாசையிலான்
அல்லலுறுமாசைதனையடைகுறுவோனநீசனே.

நவையில் - குற்றமில்லாத, துகளாருந்தரித்திரன் - குற்றமுள்ளதரித்திரனுவான், மல்லல் - வளம், புலத்து - சப்தாதிவிடயங்களின்மேல், அல்லல் - துன்பம். (கச)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

குணம்பேதகுணமென்னக்குறிப்பதேயகுணமாகும்
கணமுறுகுணமீதென்றுநகருதினகுணமீதென்றும்
மணமிகுதாமமார்பமனத்திடைமதித்திடாமை
இணையறுகுணமதாகுமென்னவும்வேந்துசொல்லும்.

குணம் - நற்குணம், அகுணம் - தீக்குணம், குறிப்பதே - நினைப்பதே, கணம் - கூட்டம், மணமிகுதாமமார்ப - உத்தவனே, மதித்திடாமை - எண்ணுமை. (கரு)

இயமநியமாதியுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—உ௱சஎ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

## பதினொன்றாவது

## மனத்தொருமைப் பாடுரைத்த வத்தியாயம்.



அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஒளிதருகுணங்களென்ற முறும்பழியகுணமென்றும்
தெளிதருகினதுவாக்காஞ்சுருதியுந்தெரிக்குமென்றால்
நளிதருகுணகுணந்தானுடிடாதிருப்பதெங்ஙன்
அளிதருகமலக்கண்ணனைவை புறமடியேனுள்ளம்.

ஒளிதரு - ஞானத்தைததருகிற, உறும்பழி - மருந்தநிந்தை, சுருதி - வேதம், தெரிக்குமென்றால் - தெரிவிக்குமாயின், நளி - பெருமை, நாடிடாதிருப்பது - ஆராயாதிருப்பது, எங்ஙன் - எப்படி, அளி - கருணை, ஐயுறும் - சந்தேகிக்கும். (க)

உற்றவையுறவக்கியுனதுரையமுதுதன்னால்
பற்றறமிழுதையாயுபணியின்வெவ்விடதநின்மூழ்கப்
பெற்றிடுமெனதுநெஞ்சம்பிழையறநினைத்தியென்று
கொற்றவன்கூறநம்மான்கூறினன்றெரியமாதோ

உற்றஐயுறவு - உண்டானசந்தேகம், உனதுரை அமுதுதன்னால் - உன்சொல்லாகியஅமிர்தத்தால், இழுதை - பொய், பணியின - பாம்பின், நினைத்தி - திருவுளம்பற்றக்கடவை, கொற்றவன் - உத்தவன், நம்மான் - கண்ணபிரான். (உ)

நலந்தருஞானயோகநவையிலாப்பத்தியோகம்
பலந்தருகருமயோகம்பகருமிம்மூன்ற முன்னே
வலந்தருமாந்தருய்யவகுத்தனமிவையேயன்றிக்
கலந்தருமார்பநன்மைகாட்டவொன்றில்லைமாதோ

நவை - குற்றம், மாந்தர் - மக்கள், உய்ய-பிழைக்க, கலந்தருமார்ப - உத்தவனே, (கலம் - ஆபரணம்). (ந)

ஒழிந்தவர்தமக்குஞானயோகமுமுறைக்குமாசை
தழைந்திடாராகியாவுந்தவிர்ந்திடாதெமதுகாதை
மொழிந்திடல்கேட்கன்முன்னமுயன்றநற்றவத்தினோர்கரும
விழைந்திடும்பத்தியென்னவிளமபியோகமுநன்றுமால்.

ஆசைதழைந்திடாராகி - ஆசைவிருத்தியடையாதவராகி, தவிர்ந்திடாது - ஒழியாமல், காதை - சரித்திரம், முன்னம் - முற்பிறப்பில், விழைந்திடும் - விரும்பப்படுகிற, பத்தியென்ன - பக்தியைப்போல. (ச)

காமமொடுறைந்தமாந்தர்கருமயோகத்தின்வாழ்வார்
தீமையுநலனுமின்னோர்சேர்வர்மற்றவருக்கில்லை
மாமகமுதலகன்மம்வரும்பயன்விழையாதாற்றின்
நாமநற்குணத்தோடைந்தாய்நண்ணிடார்ஞானஞ்சேர்வார்.

மாமகம்முதலகன்மம் - பெரியயாகம்முதலாகியதொழில்கள், பயன்விழையாது ஆற்றின் - பலாபேக்ஷயில்லாமற்செய்தால், நாமம் - அதிசயித்தற்குரிய, நற்குணத்தோடு - நற்குணத்தோடுகூடி, ஐந்து - ஐம்புலவாசை. (ரு)

பேதமற்றிருந்தஞானம்பிறந்திடுமளவுமெஞ்சீர்
நீதியுற்றிருந்தமாந்தர்நிகழ்த்துதல்கேட்குங்காறும்
ஓதுநைமித்திகந்தோடுற்றநித்தியகன்மங்கள்
ஏதமற்றியற்றல்வேண்டுமிறையவவியல்பின்மாதோ.

பேதம்அற்றிருந்த ஞானம் - அபேதஞானம், பிறந்திடுமளவும் - உண்டாகும்வரைக்கும், கேட்குங்காறும் - கேட்குமளவும், நைமித்திகம் - நிமித்தத்தாலாயது (திருவிழாமுதலியவை), நித்தியகன்மம் - சாதாரணம்செய்யும்பூசனை, ஏதமற்றியற்றல்வேண்டும் - குற்றமறச்செய்யவேண்டும், இறையவ - உத்தவனே (௬)

தேவருமாந்தராகிச்சேரவேணவாக்கூர்வாரால்
காவலவெனிலுமாந்தர்கருதுசம்பிரமவீட்டும்
மேவவேண்டுவரோவென்னினிவ்விலைவருமென்றேவேண்டார்
நாவில்வீடொன்றறிகிற்பார்சமன்விரைந்துறுமுனன்றோ.

மாந்தராகிச்சேர - மக்களாயடைதற்கு, வேணவாக்கூர்வார்—வேண்டியஆசைமிகுவார், காவல - அரசனே, (உத்தவனே) மேவவேண்டுவரோ - அடையவிரும்புவாரோ, நாவில் - கெடுதலில்லாத, வீடொன்று - மோக்ஷமடைய, சமன் - யமன் (௭)

எறிந்திடுமரத்தின்வாழும்பெருஞ்சிறைப்பறவையப்பால்
பறந்திடநினையாதாகிற்பயக்குமோர்நன்மையுண்டோ
துறைதருநாளென்னுங்கூர்வாளரிதரக்கன்றுமாக்கை
உறைந்துயர்நெறியினெட்டாவுயிர்க்குநன்றுறுங்கொலம்மா.

எறிந்திடும் - வெட்டப்பட்ட, இருஞ்சிறை - பெரியசிறகுகளையுடைய, பயக்கும்- உண்டாவதாகிற, உண்டோ - உளதோ, அரிதர - அறுக்க, யாக்கைஉறைந்து—உடம்பில்தங்கி, உயர்நெறியினெட்டா — மோக்ஷமார்க்கத்திலுயர்ந்துசெல்லாத, உயிர்க்கு— உயிர்களுக்கு, நன்று—நன்மை, உறுங்கொல் - உண்டாமோ. (௮)

மானிடயாக்கையென்றுமருவரும்பஃறிபெற்றும்
ஊனமில்குரவன்சொல்லாமோடமுய்ப்பவனொடெய்தீர்
ஆனதோரநுகூலக்காலனுகவும்பிறவிவேலை
தாணுழிதரவெணுகாணறன்னைக்கொல்வனன்றே

பஃறி - தெப்பம், (மரக்கலம்) ஊனமில் - குற்றமில்லாத, குரவன்சொல்—ஆசாரியவசநம், உய்ப்பவன் - செலுத்துவோன், அநுகூலக்கால்— அநுகூலமாகியகாற்று, பிறவிவேலை - பிறவிக்கடல். (௯)

பொன்னுலகடைவான்காதல்புரிகலீர்பொருவில்வீடு
துன்னுதிர்தருதுமென்றுசொற்றலுமேட்டைகூரார்
மன்னுமேகாந்தம்பற்றிமருவினவர்க்குவேறு
கொன்னுறுதிமையென்கொல்குணமெனன்கொல்குறிக்கினம்மா.

பொன்னுலகு - சுவர்க்கலோகம், அடைவான் - அடைய, காதல்புரிகலீர்—இச்சைசெய்கிலீர், பொருவில்—ஒப்பில்லாத, ஏட்டைகூரார்-ஆசைமிகார், ஏகாந்தம்—தனிமை, குறிக்கின் - ஆலோசித்தால். (௧௦)

மனத்தொருமைப்பாடுரைத்த வத்தியாயம்-முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௨௫௭.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## பன்னிரண்டாவது

# தேசகால முரைத்த வத்தியாயம்.



தருமநற்பொருள்சொல்காமஞ்சார்தருபாக்குச்செய்யா
விரிதருவேத நூலால்விதித்ததங்கருமமன்பால்
வருணமாச்சிரமர்செய்யின் மருவுவர்குணத்தின்வண்மை
புரையுறுவினைசெய்வாரேற்பொருந்துவர்குணமன்றே.

தருமம் - அறம், காமம் - இன்பம், சார்தருபாக்கு - அடைய, செய்யா - ஒருவராற்செய்யப்படாத, (அபௌருஷேயமாகிய) ஆச்சிரமர் - ஆசிரமமுடையார், புரை-குற்றம். (க)

வருணமாச்சிரமந்தந்தம்வருவினைபுரியுங்காலைத்
தெரிவுறுதேசகாலஞ்செழும்பொருள்கருத்தாயோர்
கருமமந்திரங்களென்னக்கழறுமிவ்வாறின்பாலும்
அரசநற்புனிதம்பொல்லாவசுத்தமுண்டறியற்பால.

புரியுங்காலை - செய்யுங்காலத்தில், மந்திரங்கள்-வேதமந்திரங்கள், கழறும்-சொல்லப்படுகிற, புனிதம் - தூய்மை (பரிசுத்தம்). (உ)

அந்தணர்க்கன்புசெய்யாவரசினிதுறையுநாடு
வந்துறுபகையைநீக்கிமாநிலங்காவல்செய்யா
வெந்திறல்வேந்துசேருமேதினியெமதுதொண்டை
நிந்தைசெய்பதகர்வாழுநெடுநகர்மூன்றுந்தீய.

அந்தணர்க்கு - வேதியரிடத்து, அரசு - அரசன், காவல்செய்யா - காவாத, வெந்திறல்வேந்து - வெவ்வியவலியமைந்தஅரசன், தொண்டை-தொண்டினை, (அடிமைத்தொழிலை) பதகர் - பாவிகள், தீய - தீயன. (ங)

கருங்கலைக்காட்டின்வைகாக்கண்ணகலுடுங்கையான்
நெருங்கலைப்புனறுவாதநிலனும்வெவ்வுவரினூர்ந்தே
இருங்கலைமதிபோல்வெண்மையெய்தியநாடுந்தீய
அருங்கலைமுழுதுந்தேரெம்மடியர்சேரிடனன்றாமே.

கருங்கலை - கருமையாகியமான், (க்ருஷ்ணம்ருகம்) கண்ணகல் - இடமகன்ற, கையான்-ஒழுங்காக, நெருங்கலை-நெருங்கியஅலைகள், தூவாத - தெறிக்காத, புனல்-நீர், உவரின்ஆர்ந்து - உவர்ச்சுவைபொருந்தி, இருங்கலைமதி - பெரியகலைகளையுடைய சந்திரன், தேர் - தேர்ந்த. (ச)

இவ்வினைக்கின்னகாலமியல்பெனவிதித்ததல்லால்
வெவ்வியகாலந்தானும்விதித்திடுஞ்சூதகாதி
கவ்வியகாலந்தானுங்கலகமாங்காலந்தானும்
செவ்வியநெறிசேர்வேந்தேசெப்புறுபுனிதமன்றே.

சூதகாதி-சூதகம்முதலிய, (சூதகம்-தீட்டு), புனிதமன்று-பரிசுத்தமானவையன்று

செப்பியபொருள்களெல்லாந்தேசகாலத்தினாலும்
தப்பருஞ்சுசியினோடேசாற்றியவசுசிசேரும்
அப்பொருட்கரியசத்தியந்தணர்வசனந்தெண்ணீர்
ஒப்பருந்தபனனாதியுரைத்திடும்விதியினான்றால்.

சுசி - சுத்தம், அசுசி—அசுத்தம், தெண்ணீர்—தெளிவாகியநீர், தபநன்—சூரியன்.

சீதநீர்படிதலானுஞ்செழும்பொருளுதவலாலும்
மேதகுதவத்தினாலும்விளம்பருங்கருமத்தாலும்
ஓதுமெம்பட்டத்தினன்புற்றுறைதலினானீங்காக்
காதல்கூரரசசொல்லுங்கருசுகர்புனிதந்சேர்வார்

சீதம் - குளிர்ச்சி, படிதல் - மூழ்குதல், உதவல் - கொடுத்தல், எம்பட்டத்தில்—எமது திவ்யதேசத்தில் (எ)

நிந்தையில்வினையின்றூய்மைநிகழ்த்திடிற்பயன்வெஃகாது
தந்திரமறைசொல்லாற்றாற்றரைமிசைமுறையினாற்றல்
மந்திரசுத்தியென்னவழங்கியவாறிதீதாகின்
அந்தமந்திரத்தினல்லவருமபொருளறிதலாமே

நிந்தையில் - பழிப்பில்லாத, தூய்மை - பரிசுத்தம், நிகழ்த்திடின் - சொல்லுமிடத்து, பயன்வெஃகாது - பயனைவிரும்பாமல், மறைசொல்லாற்றால் - வேதங்கள்சொல்லும்வழியே, தரைமிசை - பூமியின்மேல், முறையினாற்றல் - கிரமமாகச்செய்தல். ()

தெரிவுறுமரபுநான்குஞ்செப்புறுநிலைகணான்கும்
மருவியகுணத்தினோடேமறுத்திடுமதனைச்சொல்லின்
ஒருவழிக்குணமென்றேதலொருவழியகுணமாகும்
புரைதருமகுணந்தானும்புகலொருவழியினன்றாம்.

மரபு - வருணம், நிலைகள் - ஆசிரமங்கள், புரைதரும் - குற்றத்தைத்தருகிற. ()

தேசுறுமறையோர்க்கேற்றல்செப்புநற்குணமென்றாலும்
ஆசறுநிதியம்பெற்றோர்க்கத்தொழிலகுணமேயாம்
பூசுரர்தமக்குவேள்விபுரிவித்தல்குணமென்றாலும்
மாசறுமரசராயோர்க்கச்செயலகுணமாமே.

தேசுறு - ஒளிமிகுந்த, ஆசறுநிதியம் - குற்றமற்றசெல்வம், பூசுரர் - பூதேவர், (பிராமணர்) மாசறும் - குற்றமற்ற, அகுணம் - தீக்குணம். (௧௦)

சொல்லியதுறவுபூண்டோர்சுரிகுழலாரைச்சேரின்
அல்லல்செயகுணமாகுமாயினுமனைவிமாரை
இல்லறமியற்றுகிற்போரியம்பியநாளிற்றோய்தல்
நல்லநற்குணமேயாகுநான்மறைதெரித்தவாற்றால்.

சுரிகுழலாரை - மாதரை, இல்லறமியற்றுகிற்போர் - இல்லறம்நடத்துவோர். ()

பற்றறுகுணத்தினேடுபழுதறுகுணனுஞ்சொல்லின்
குற்றமினிவிர்த்தியல்லாக்கொடுநெறியடைந்தார்க்கல்லால்
சொற்றிடுநிவர்த்தியென்னுந்தூநெறியடைந்துளோர்க்கு
மற்றவைவருவவில்லைமன்னவவுரைக்கின்மாதோ,

பற்றறுகுணம் - ஆசையற்றகுணம், குற்றமினிவிர்த்தியல்லாக்கொடுநெறி - ப்ரவ்ருத்திமார்க்கம்), தூநெறி - பரிசுத்தமானமார்க்கம். (கஉ)

அமரர்தமுலகுவேள்விக்கரும்பயனென்றவேதம்
இமையவர்புகழ்வேள்வியியற்றனெஞ்சியையவேண்டிக்
குமரவிம்மருந்தருந்திற்கொழுங்கனிதருதுமென்னுந்
தமரினர்போலல்லாதகரும்பயன்சழக்கில்வீடே.

அமரர்தமுலகு - தேவலோகம், இமையவா - தேவா, குமர - சிறுவனே, தமரினர் - உறவினர், சழக்கில் - குற்றமில்லாத. (கங)

மன்னுநல்வேள்விசெய்யின்மறுமையினடையும்பேறு
பொன்னுலகென்றுசொல்வார்புனைவியமலமென்றன்னம்
கொன்னுறுகுணதரார்போல்வார்க நியபயன்வெஃகாமல்
அன்னநல்வேள்விசெய்யினரும்பயனுறிவில்வீடே

மறுமை - மறுபிறப்பு, பேறு - பயன், புனைவிய - மலரைப்ய, பலம்—பழம், என்னும் - நினைக்கிற, வெஃகாமல் - விரும்பாமல் (கச)

இருள்படுகாட்டினூடேயிருந்துழல்சிதடராயோர்
தெருள்படுநகரந்தானோசேரதறிகலார்போல்
மருள்படுகாமமுன்னிவருவினைமுயலாநிற்போர்
பொருள்படுநலஞ்செய்வீட்டிற்புகுமதறிகலாரே

சிதடராயோர் - குருடரானவா, தெருள்படு - தெளிவுபொருந்திய, அதர் - வழி, மருள் - மயக்கம் (கரு)

தூமத்தான்மூடுங்கண்ணோர்சூழ்ந்தண்மையிருந்துஞ்சாலைச்
சேமத்தான்மூடுமோமத்தீயினைத்தெரிகலார்போல்
காமத்தான்மூடுநெஞ்சக்கருமத்தோருலகமாயை
நாமத்தான்மூடுமுள்ளத்தம்மைசன்கறிகலாரே

தூமத்தால் - புகையால், அண்மை - சமீபம், சாலை—யாகசாலை, உலகமாயைநாமத்தால் - பிரபஞ்சமாயையென்னும்பெயரினல். (கசு)

பழுதறவளியிற்ரேன்றும்பரமமாமணுவின்கூட்டத்
தெழுமொலிவீற்றுவீற்றுவெழுந்தெனமனமுண்டாக்கும்
விழுமியவெழுத்துநாளுவேதமமுதலவாகும்
தொழுதகுமவையுமொன்றேசொற்றிடுந்துணிந்துபார்க்கின்.

வளி - காற்று, பரமமாமணு - பரமாணு, வீற்றுவீற்று - வெவ்வேருக, விழுமிய—சிறந்த, சொற்றிடும் - சொல்லும் (கஎ)

இன்னணமிலிங்கசரீரமேயுடலத்தெய்தலுநீங்கலுமல்லால்
மன்னியபுருடன்றனக்கவையின்றான்மற்றவன்சுயம்பிரகாசன்
துன்னிடுஞ்சடனச்சடத்துருவாகிச்சொற்பலவாம்பிரகிருதி
பன்னுபற்பலவாந்தன்மைமற்றுரைக்கிற்படைத்தகத்துவங்களாவனவே.

இன்னணம் - இவ்வாறு, பிரகிருதி - மூலப்பகுதி, பன்னு - சொல்லப்படுகிற.

போற்றுநீணதிம்பாற்பொங்குவெந்தழல்போற்பொருந்தியபற்பலபலம்போல்
சாற்றுமோர்கணத்துக்கொருகணமாக்கைதரைமிசைநாசமுற்றிருக்கும்
தோற்றுமோர்புருடன்சொல்லியவுடல்சேர்தொகுவினைபொருந்தலெவ்வாறேல்.
ஆற்றுநீரலையந்நீருறுமரத்தினருகிழலடைந்தவாறுமால்.

பலம் - பழம், கணம் - க்ஷணம், ஆக்கை - உடம்பு. (௬)

பொருந்தியயாக்கைபுணர்ந்தவவ்வினையப்புருடனுக்கில்லைமற்றென்னின்
வருந்தியிங்கிவ்வாறறிவதெனவென்னின்மதியுறவறிந்தவர்க்கன்றித்
தருந்துயர்போகத்துற்றிடுவிருப்புத்தவிர்ந்தொழியாதிகலரச
திருந்தறிவில்லோர்யாக்கைதாமென்றேதினந்தினம்பிறந்திறந்துழலவார்

மதியுற - அறிவிற்பொருந்த, துற்றிடு - புகுந்த, தவிர்ந்தொழியாது - விட்டுநீங்காது, இகல் - வலி. (எ)

தத்துவமுறைத்த வத்தியாயம்-முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - உ௮௨.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

பதினொன்காவது

நிந்தைபொறுத்த வத்தியாயம்.

கலிவிருத்தம்.

வய்யவர்செகுக்கினும்வெகுண்டுபலநிந்தை
செய்யினுமதிக்கினிவைசேர்கனவுபோன்மால்
பொய்யெனமனத்தொடுபுகன்றிடர்பொறுக்கின்
மையலறுமென்னவிறைமன்னவன்வழங்கும்.

வெய்யவர் - கொடியவர், செகுக்கினும் - கொன்றாலும், வெகுண்டு - கோவித்து, இடர் - துன்பம், இறை - கண்ணபிரான், மன்னவன் - உத்தவன். (௧)

ஒறுக்கும்வகையொன்னலருடற்றுபடைமெய்புக்
கறுக்கும்வகையாற்றினுநினன்பரறிஞர்க்கு
வெறுக்கும்வகைசெய்யவரும்வெய்யபலநிந்தை
பொறுக்கும்வகையெவ்வகைபுகன்றருள்செயென்றான்.

ஒறுக்கும்வகை - தண்டிக்கும்வகையாக, ஒன்னவர் - பகைவர், உடற்று - வருத்துகிற, படை - ஆயுதம், மெய் - உடம்பு, அறிஞர்க்கு - ஞானியர்க்கு. (உ)

அவந்திபுரியுற்றுறையுமந்தணன்முன்முனியா
துவந்திடர்பொறுத்தகதையொன்றுளதுனக்குத்
துவந்தவினைபோகவதுசொல்குதுமெனக்கண்
சிவந்தெழுபணித்தலைநடித்தபுயல்செப்பும்.

முனியாது - கோவியாமல், துவந்தவினை - தொடர்பாகியவினைப்பயன்கள் (இருவினைப்பயன்கள்), கண்சிவந்தெழுபணித்தலைநடித்தபுயல் - கண்ணபிரான். (௩)

அந்நகரின்வாழுமறையோனளகையாளு
மன்னவனெனப்பொருள்வருந்திநனியீட்டித்
தன்னையடைவுற்றவறிஞோர்தமரினோருக்
கின்னலறவொன்றுமுதவானினியம்பான்

அளகையாளும்மன்னவனென-குபேரன்போல, ஈட்டி-சம்பாதித்து, வறிஞோர்-வறியர், தமர் - சுற்றத்தார், இன்னலற - துன்பமொழிய (௪)

உற்றமனையாளொடுமுவந்தனசெவிட்டப்
பெற்றபுதல்வர்களுநனிபெட்பினொடனியான்
செற்றமொடும்வெவ்வியசினத்தொடுமுழந்து
குற்றமொடுமிக்கதிகொண்டுறையுநாளின்.

உவந்தன - விரும்பினவை, பெட்பினுடன் - விருப்பொடு, செற்றம் - நீராக்கோவம், உழந்து - வருந்தி (௫)

கள்ளர்களினுமுறைகாவலவருளும்
கொள்ளுமுறையென்றமுழுகுடிதமரினோடும்
நள்ளிருளினில்லினதிநண்ணழவினானும்
உள்ளபொருள்யாவுமொழிவுற்றிடவயர்ந்தான்

காவலவன் - அரசன், நள்ளிருள் - நடுராத்திரி, இல்லினதிநண்ணழல் - வீட்டிற் பற்றியெரிந்தநெருப்பு (௬)

அயர்ந்தவனரும்பொருளடைந்திடும்இடத்தும
வியந்துநனிகாத்தவைவிருப்பினுறைபோதும்
நயந்தபொருள்போம்வழியுநண்ணுமிடரென்று
உயர்ந்தவுரவோர்களினுளந்தெளிவுகொண்டான்,

வியந்து-மகிழ்ந்து, நயந்த-விரும்பின, என்று-என்று, உயர்ந்தஉரவோர்களின்-உயர்ந்தஞானிகள்போல. (௭)

அறைந்தநிதியாதியவசத்தெனவவ்வாசை
மறந்துமெய்யறிந்துமகிழ்கொண்டமறைவல்லோன்
துறந்தமுனிவேடமொடுதொன்னகர்திரிந்தான்
நிறைந்தபதியோர்கணமுநிந்தைசெயமாதோ.

நிதியாதிய - பொருள்முதலானவை, அசத்தென-பொய்யென்று, மெய்யறிந்து-உண்மைப்பொருளையுணர்ந்து, பதியோர்கணமும் - ஊரார்கூட்டமும், (௮)

கண்டுசிலர்கன்னலொடுகந்தைகள்பறிப்பார்
தண்டுசிலர்கைக்கொடுதருக்கொடுமகைப்பார்
உண்டுசிலவஞ்சமிவனுள்ளமிசையென்று
மண்டுசினமொன்றுசிலர்வைதனரொறுப்பார்

கன்னல் - கமண்டலம், அகைப்பார் - அடிப்பார், வைதனர் - வைது, ஒறுப்பார்-வருத்துவார். (௯)

மோனமெனவுற்றதெவனீமொழிதியென்பார்
ஈனிவனென்றுசிலர்மிச்சில்களிறைப்பார்
போனபொருளொன்றுமெய்புழுங்கியிவன்வேடத்
தானதுகரக்கநிதியையமிலையென்பார்.

எவன் - யாது, மிச்சில்கள் - எச்சில்கள், போன - போயின, கரக்க - மறைக்க, ஐயம் - சந்தேகம். (௰)

கவ்வைநெடுவேலையிலைகாசினியர்வெய்யோர
இவ்வகையறிந்தவனியற்கையறியாமே
அவ்வியமனத்தினொடடைந்தவுரியற்றத
திவ்வியமுனிக்கரசுசிந்தையொடுசெப்பும்

கவ்வை - ஒலி, வேலை - கடல், காசினியர்-உலகத்தார், வெய்யோர்-கொடியவா, அவ்வியம் - பொறாமை, அஞர் - துன்பம் (௧௧)

வேறு

நிந்தையேமுதலாயநிகழ்த்திடா
சிந்தையேய்மனங்கற்பனைசெய்யுமே
மைந்தையேயுமனமடங்காவழி
ஐந்தையேயும்புலனெனுங்கடங்குமே.

நிகழ்த்திடா - செய்து, கற்பனை - மாறுபாடு, மைந்தை-பலத்தை, (திண்மையை) ஐந்தையேயும்புலன் - ஐம்புலன். (௧௨)

நல்லசத்துவஞானமுதலிய
ஒல்லுகிற்குமுபாயத்தொடுங்கிற
சொல்லுகிற்குமனத்தைத்துணிபொடும்
வெல்லுகிற்பதுவேவென்றியாகுமே.

ஒல்லுகிற்கும் - இசைந்த, (கூடுமான) வெல்லுகிற்பதுவே - வெல்லுவதே, வென்றி - வெற்றி. (௧௩)

வளங்கொண்ஞானவழக்குந்தவமுநல்
உளங்கொடானமுதலருளாதியாம்
களங்கமற்றகருமநல்வெண்மையாய்
விளங்குசத்துவத்தின்வினையென்பரே.

தானம் - கொடை, சத்துவத்தின்வினை - சத்துவகுணத்தின்தொழில். (௧௪)

உவந்துபோகமுஞற்றியநல்வினை
சிவந்தராசதத்தின்செயலென்பரால்
அவந்தரும்வினையாவுங் கருமையாய்
நிவந்ததாமதத்தின்னிகழ்கன்மமே

உ ஞற்றிய—செய்த, நல்வினை—ஸத்கர்மம், அவம்—பயனின்மை, நிவந்த—அதிகரித்த.

இன்னணங்குணத்தின்வினையாவையும்
பன்னுகின்றருநெஞ்சுபடைத்திடும்
சொன்னவல்வினை சூழ்ந்ததுபோன்மலால்
உன்னுகின்றவயிர்க்கவையில்லையே

பன்னுகின்ற - சொல்லுகிற, சூழ்ந்ததுபோன்ம் - வளைந்ததுபோலும். (௧௯)

எங்குமேமொழியிடருறுமாமனம்
தங்குமேமாநிலைபுற்றெனச்சாற்றிடின்
நங்கையாள்பெறுகாவலன்முன்மனம்
அங்கண்ஞாலம்வியப்பவடக்கினேன்

சாற்றிடின்—சொன்னால், நங்கையாள்பெறுகாவலன்- மெய்மன், வியப்ப—அதிசயிக்க.

பகைவர்மற்றிவர்பற்றுடையாரிவர்
நகைவருத்தினாவெய்யவர்வேண்டினோ
அகலவற்புறுமன்புசெய்தாரெனப்
புகல்வர்சற்றும்பொருந்தறிவின்மையோர்.

பற்றுடையார்—அன்புடையார், அற்புறும்—அன்புமிகுந்த, புகல்வர்—சொல்லுவர்.

உயிரெனச்சிலவுற்றிடுமுண்மையும்
அயர்வொழித்தவொன்றுமெய்வாக்கையும்
வெயிறழைத்தநீரென்னவெம்பூததாய்ச்
செயிர்தழைத்தலிறசெப்பினென்றுமே.

ஒன்று - பிரமம், எவ்வாக்கையும்—பூதவுடம்பும், வெயிறழைத்தநீரென்ன—கானற்சலம்போல, செயிர் - குற்றம். (௨௰)

உண்மையாயவுயிருக்குவகைசெய்
வண்மையாந்துதிநிந்தனைமற்றில
திண்மையாயவுடற்கவைசேரினும்
எண்மையாவமியம்பினென்றுகையால்.

உவகை - சந்தோஷம், துதி - தோத்திரம், திண்மை - வலி, எண்மை—எளிமை.

எண்ணுநிந்தைசெய்வோரையென்செய்குதும்
கண்ணிற்கைப்படிற்கையையென்செய்வதே
தண்ணுறுஞ்செழுந்தாலுற்றெயிறுறின்
பண்ணமைந்தவப்பல்லையென்செய்வதே.

தால் - நாக்கு, எயிறு - பல். (௨௧)

இன்னதன்மையிசைத்தங்குளத்தொடும்
பன்னுநின்தபலவும்பொறுத்தவன்
தன்னையெங்கிழமைப்பொருடானென
உன்னியுண்மையினொன்றுபட்டானரோ.

இசைத்து - சொல்லி, கிழமைப்பொருள் - உரிமைப்பொருள். (உஉ)

என்றுகண்ணனிசைத்தலுமுத்தவன்
ஒன்றுநிந்தையுவந்துபொறுக்குவன்
நன்றுநன்றினியென்றுநலந்திகழ்
மன்றல்செய்தமலர்ப்பதம்போற்றினான்.

மன்றல் - வாசனை. (உங)

செம்மைநங்கதைத்தேறலருந்தினர்
தம்மைநன்குணர்தன்மையினல்வரு
வெம்மைநிந்தைபொறுத்துவிருப்புடன்
மும்மையற்றுமுயங்குவர்முத்தியே

தேறல் - தேன், முயங்குவர் - அடைவார் (உச)

நிந்தைபொறுத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௩0௯.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்

---

பதினைந்தாவது

## குணங்கலத்த லுரைத்த வத்தியாயம்.

பவந்தருமுக்குணத்தின்பயனையோர்ந்
தவந்தருமற்றவையென்றறிந்தலால்
துவந்தவல்வினைத்தோற்றம்விடாதெனச்
சிவந்தபூமகட்சேர்ந்தவன்செப்புமால்.

பவம் - பிறவி, ஓர்ந்து - அறிந்து, அவம் - பயனின்மை, துவந்தம் - தொடர்பு, சிவந்தபூமகட்சேர்ந்தவன் - கண்ணபிரான் (க)

ஞானமேமுதலாகியநல்வினை
ஆனபோதருஞ்சத்துவமென்பரால்
மானமாதர்தமாசையின்வைகுவோன்
ஈனமோங்குமிராசதனென்பவே.

வைகுவோன் - தங்கியிருப்பவன். (உ)

துஞ்சல்வெஞ்சினஞ்சோம்புகொலைமுதல்
வஞ்சவல்வினைவந்துடன்வைகுழி

எஞ்சலில்லையெனச்சொற்றமகுணம்
நெஞ்சகின்றநிகழ்ந்தனவென்பவே.

துஞ்சல் - தூங்குதல், எஞ்சல் - குறைதல். (௩)

சத்துவத்தொடுசாற்றுமிராசதம்
ஒத்திருக்கினுளத்திலறம்பொருள்
சித்தமன்புறுமின்பந்தெளிவினால்
முத்தியென்னமொழிந்தவைமுன்னுவார்.

முன்னுவார் - நினைப்பார். (௪)

தாமதத்தொடுசத்துவஞ்சார்ந்தவர்
தீமைசெய்திடுஞ்சேரலர்ச்செற்றிடின்
பூமலர்த்திருப்புங்கவனல்லறம்
வீமமுற்றிங்கியற்றுதுமென்பரால்.

சேரலர் - பகைவர், செற்றிடின் - வென்றால். (௫)

ஓங்குராசததாமதத்துற்றவர்
தீங்கினும்பொருள்சேர்ந்துபலன்பெற
வாங்குநீர்த்திரைவையகமேலறம்
நீங்கலாதநெடுவினைசெய்வரே.

வாங்குநீர்த்திரை — கடல். (௬)

இறக்குங்காலத்திராசதமுற்றவர்
பிறக்குங்கான்மனுடப்பிறப்பாகுவர்
அறத்தின்மேவருஞ்சத்துவராகின்மேல்
சிறக்குந்தேவரெனத்திகழ்வார்களே.

இராசதமுற்றவர் - ராஜஸகுணத்தையடைந்தவர். (௭)

சாகுங்காலைத்தமோகுணஞ்சார்ந்திடின்
சேகுசேர்நரகத்திடைச்சேர்வரால்
மோகமூன்றுகுணமுமுன்னுறெனின்
ஏகமாகுவரெம்மிற்பிறிந்தரோ.

சேகு - பழமை, ஏகம் - ஒன்று. (௮)

கூறுமூன்றுகுணமுமொன்றாயெழில்
மாறுசெய்பவர்மாய்ந்துவளர்ந்திகழ்
ந்திறில்செல்வமியைவினெழிற்பொருல்
வேறொர்கோயில்விளக்குவமென்பரால்.

மாய்ந்து - இறந்து. (௯)

தாமமார்பநற்சத்துவமுற்றவர்
காமமற்றுக்கருமமியற்றுவார்

நாமநல்வினைநற்பலன்முன்னியே
சேமமாரும்ராசதர்செய்வரே.

தாமமார்ப - உத்தவனே, (தாமம் - பூமாலை) முன்னியே - நினைத்தே. (கo)

வெய்யதாமதமாங்குணமேவினர்
செய்யுநல்லறந்தீமையென்றோர்தரும்
துய்யசிந்தையரன்றித்துகளறா
ஐயமற்றங்களுதினமாற்றுவார்

ஓர்தரும் - அறிந்த, துய்யசிந்தையர் - பரிசுத்தமான மனத்தையுடையவர், துகளற - குற்றமற. (கக)

பிணங்கிநின்றவிப்பெற்றியமுக்குணம்
இணங்கிநின்றெமதேவலியற்றமால்
மணங்கடந்தமதுமலர்த்தாரிஞய்
குணங்கடந்தவரேமுதநிகூடுவார்.

பிணங்கி - மாறுபட்டு, பெற்றிய - தன்மையையுடையனவாகிய, இணங்கி-பொருந்தி, மணங்கடந்தமதுமலர்த்தாரிஞய் - உத்தவனே, குணங்கடந்தவரே - குணத்தை வென்றவரே. (கஉ)

குணங் கலத்தலுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—நகஅ

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## பதினாறவது

## பூசனையுரைத்த வத்தியாயம்.

கலிநிலைத்துறை

இன்னவாறறியாதவராயினுமெவரும்
மன்னவாறலைநீர்மலராதிகண்மருவித
துன்னவாவொடுபூசனைசெய்தெமைதொழினே
அன்னவாசைகடுய்த்தபின்னும்மெமையடைவார்.

துன்னவாவொடு - மிக்கஅன்போடு, துய்த்தபின்னும் - அநுபவித்தபின்னும்.

என்றுகூறலும்வருணவாச்சிரமர்களிணர்த்தார்
மன்றலோதியர்பின்னவர்வழுத்துமவ்வகைமுன்
கொன்றைவேணியனாதன்முதலினர்குறித்தார்
நன்றுகூறெனுமரசனுக்கரிந்தமனவிலும்.

என்றுகூறலும் - என்றுசொல்லுதலும், இணர்த்தார்மன்றலோதியர்-மாதர், கொன்றைவேணியன் - சிவன், அரசனுக்கு - உத்தவனுக்கு, அரிந்தமன் - கண்ணபிரான், நவிலும் - சொல்லுவான். (உ)

இலங்குவைதிகந்தாந்திரிகமிச்சிரமென்னப்
பலங்கொள்பூசனைமூவகையாமெனப்பகர்வார்
நலங்குபூசனைக்கேற்றவர்செய்திடத்தணிவார்
வலங்கொள்வேதமந்திரங்களிற்செய்தல்வைதிகமே.

இலங்கு - விளங்குகிற, பலங்கொள் - பயன்றருகிற, ஏற்றவர் - தகுந்தவர், வலங்கொள் - உறுதியைக்கொண்ட. (ங)

குற்றமற்றதாந்திரிகபூசனைச்செயல்குறிக்கின்
உற்றபஞ்சராத்திரவைகாநசமுறையுஞற்றல்
முற்றுணர்ந்தவர்முழுமறையாகமமுயறல்
சொற்றமிச்சிரபூசனையெனத்துலங்கிடுமே.

பஞ்சராத்திரவைகாநசம் - பஞ்சராத்ரமும்வைகாநசமும், (இவ்விரண்டும்வைஷ்ணவாகமங்கள்), உஞற்றல் - செய்தல், முயறல் - முயற்சிசெய்தல். (ச)

மணம்பொருந்தியசந்தனம்வாலுகம்வனப்பார்
புணம்பொருந்தியமணிமுதன்மணிபலதாருக்
கணம்பொருந்தியலோகநல்லோவியங்கவினகல்
குணம்பொருந்தியமனமெனக்கூறுமெட்டிடதும்.

வாலுகம் - வெண்மணல், வனப்பு - அழகு, பணம்பொருந்தியமணி—மாணிக்கம், தாரு - மரம், லோகம் - பொன்வெள்ளிமுதலியன, ஓவியம் - சித்திரம், கவின்—அழகு.

பூசைசெய்வரப்பூசனையிருவகைத்தாமால்
பேசினவ்வகைசாற்றிடுந்திரமெனப்பெறுமால்
தேசுதங்கிடுமறையினுவாகனஞ்செய்து
மாசிலுத்தியாபனஞ்செயல்சரமெனவகுப்பார்.

தேசு - ஒளி, உத்தியாபநஞ்செயல் - விரதஞ்செய்து முடித்தல். (சு)

உரைத்தசீர்செயாவாகனமுத்தியாபனத்தால்
விரித்தபூசனையன்றிநிச்சலும்விழைவிருப்பால்
தெரித்தமந்திரத்தான்முறைமுறைசெயும்பூசை
தரைத்தலத்தினிற்றிரமெனுந்தனிப்பெயர்சாரும்.

ச்சலும் - நாடோறும், விழைவிருப்பால் - மிகுவிருப்பத்தால், தரைத்தலத்தினால — பூமியில். (எ)

புனிதராகியுள்ளன்பொடுபூசனைக்கேற்ற
இனியபல்பொருளியைந்திரண்டெட்டுபசாரத்
தனக்பூசனைகாமமற்றுற்றுவராயின்
வினையினென்றிடார்வீடவர்க்களிக்குதும்விழைவால்.

புனிதராகி - பரிசுத்தராகி, இரண்டெட்டுபசாரம் - ஷோடசோபசாரம், (பதினாறுபசாரம்), அநகம்-பரிசுத்தம், காமமற்று - நிஷ்காமியமாக, விழைவால் - சந்தோஷத்தோடு, அளிக்குதும் - கொடுப்போம். (அ)

ஆசையுற்றவர்பூசனையாற்றினுமவர்தாம்
நேசமுற்றனவழங்குவதினைத்தனபொசித்தோர்
பேசுமுத்தியும்பெறுகுவர்பிறங்கிவையல்லால்
பாசிலைக்கொடுபழிச்சினும்பலனினிதளித்தும்

பொசித்தோர் - அநுபவித்தவர், பாசிலைக்கொடு - பச்சிலையால்அர்ச்சித்து, பழிச்சினும் - துதித்தாலும். (க)

ஆரியந்தமிழாதிமற்றவாவெழுத்தாம்
சீரியங்கியபதத்தொடையாற்றிருமகள்சேர்
வேரியந்துழாய்விமலவென்றெநதமைவிளம்பின்
மாரியஞ்சுகைம்மன்னவவுரிக்குதுமகிழ்ந்தே.

திருமகள்சேர்வேரியந்துழாய்விமல — லக்ஷ்மீநாதனே, மாரியஞ்சுகைமன்னவ-உத்தவனே, ஆரியம் - வடசொல். (கo)

நிகரின் மன்னவநேசமுறவெறமக்கிவணிலவ
நகரினிற்றவாததிருவிழா நடத்திடுநலத்தோர்
மகரவாரிசூழ்மாநிலத்திலுமறுமையினும்
புகரிலும்பரும்புகழ்தரப்போகமுற்றுறைவார்.

நிலவ—நிலைபெற, தவா—நீங்காத, மகரவாரி - மகரமீன்களையுடையகடல், புகரில்-குற்றமில்லாத, உம்பரும் - மேலுலகத்திலும் (கக)

பூசனையுரைதத வததியாயம முறறிறறு

ஆகத திருவிருத்தம—௩௨௯.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்,

---

பதினேழாவது

## நைம்மிசமடைந்த வத்தியாயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருததம.

ஆக்கையும்புலனுமன்றாலசைவுறுமனனுமன்றால்
வீக்குறும்வினைசேர்மன்றவெவ்வகங்காரமன்றால்
போக்குறும்புந்தியன்றாற்பொருளெனவிவ்வாறெல்லாம்
நீக்கிமற்றறிவுதானேநித்தியப்பொருளென்பாரால்.

ஆக்கை - உடம்பு, புலன் - ஐம்புலன், வீக்குறும் - பந்தப்படுத்துகிற, நித்தியப்பொருள் - சாசுவதப்பொருள். (க)

இப்பியேயிரசிதம்போலிலங்குறுதன்மைத்தென்ன
ஒப்பிலாப்பிரமந்தானேயுலகுபோற்றோற்றிற்றென்று

செப்புமுன்னுணர்வினாலேதேர்ந்துகொண்டிருப்போர்தம்மைத்
தப்பிலாஞானயோகத்தலைவரென்றியம்புவாரே. *

இப்பி - முத்துச்சிப்பி, இரசிதம் - வெள்ளி (௨)

கலிநிலைத்துறை.

எங்குமாய்நிறைந்திலங்கிய ஞானவாரிதியின்
பொங்குதெண்டிரை நுரைவரும்புற்புதமெனவே
அங்கண்மாநிலத்தொடக்கத்தவுலகங்களனைத்தும்
தங்கிநின்றெழும்வேறுவேறறிவிலர்சாற்ற.

ஞானவாரிதி - ஞானக்கடல், புற்புதம் - நீர்க்குமிழி. (௩)

மறிந்துதோன்றியதிரைநுரைகுமிழிமற்றனைத்தும்
சிறந்துதோன்றுமந்நீரலாற்றெரிக்கின்வேறிலைபோல்
குறைந்துதோன்றியவுலகங்களனைத்தையுங்குறிக்கின்
நிறைந்துதோன்றுமப்பரமலாலிகழ்ந்ததவொன்றிலையால்.

மறிந்து - மடங்கி, பரம் - பரம்பொருள். (௪)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

ஆதியுநடுவுமற்றவந்தமுந்தானென்றாயும்
ஓதியநடுவிற்பல்பூணுருவொடும்பெயர்வேறுறாத
தீதறவிளங்கும்பொன்னிற்செகதுருநடுவினுற்றுப்
பேதமினடுவுமுன்னும்பின்னுமேபிரமம்வைகும்

அந்தம் - முடிவு, பூண் - ஆபரணம், பொன்னின் - பொன்போல, பேதமில்—வேற்றுமையிலாத, வைகும் - இருக்கும் (௫)

மனமெனுமரசனும்மேன்மருவுகற்பனைகளாகிப்
புனைவுறுபெயருலோகம்பொருந்துதல்குறித்தலாது
நினைவுறுபரமானந்தநித்தியப்பொருளுக்காதி
வினைநடுவந்தமென்னவிளம்பலோர்தன்மைத்தன்றால்.

புனைவுறு - அலங்கரிக்கப்படுகிற, கற்பனைகள் - கற்பிக்கப்பட்டவைகள். (௬)

உன்னின்யாமன்றிமற்றொன்றில்லையாலுரவோயென்னத்
தன்னிலையறியுமாறுதாமரைக்கண்ணன்கூற
மன்னுமெய்ம்மயிர்சிலிர்ப்பமாமலர்க்கண்ணீர்வார
இன்னதென்றியம்பலாகாவின்பமாகடலுளாழ்ந்தான்.

உரவோய் - அறிஞனே, வார - ஒழுக, இன்பமாகடல் - பேரின்பக்கடல். (௭)

வழுத்தருந்தகையவின்பவாரியினழுந்திமூழ்கும்
பழுத்தவன்புடையோன்செய்யாப்பழமறைப்பொருளான்கங்கை
சுழித்தலையெறியும்பொற்றாட்டுணைமலர்க்கமலப்போதில்
விழிப்புனல்பாய்ந்துபாயவீழ்ந்தனனிறைஞ்சினானால்.

இன்பவாரி - ஆநந்தசாகரம், பழுத்தவன்புடையோன் - உத்தவன், செய்யாப்பழமறைப்பொருளான் - கண்ணபிரான், கங்கைசுழித்தலையெறியும்பொற்றாட்டுணைமலர்க்கமலப்போதில் - திருவடியில் (அ)

கலிவிருத்தம்.

சேயதாட்டாமரைசென்னிசூடிய
தூயனையருந்தவர்சூழல்சேர்கென
மாயவன்பணித்தனன்மறுக்கவல்லனோ
போயினனிருகணீர்பொழியுமன்பினான்.

சேய - செம்மையாகிய, தூயனை - உத்தவனை, அருந்தவர்சூழல் - நைமிசாரணியம், பணித்தனன் - கட்டளையிட்டான் (௯)

நீக்கருமன்பினனேமியானைப்பின்
நோக்கினனோக்கினனோக்கி மானமையான்
ஆக்கினன்சிந்தையுளமரவையனை
வாக்கினிற்றுதித்தனன்மறுகியேகினான்.

நேமியானை - கண்ணபிரானை, மேன்மையான் - உத்தவன், அமரவையனை—தேவர்கோனை. (௧௦)

அணிதிகழ்நைம்மிசாரணியத்தன்பினில்
தணிவிலவ்வுத்தவன்சார்ந்தநன்மைசெம்
மணிபுனைமன்னமுன்வழங்கினேமெனாத்
துணிவுறசுகமுனிசொல்லினனரோ.

அணிதிகழ் - அழகாகவிளங்குகிற, செம்மணிபுனைமன்ன - பரீக்ஷிந்நரேந்திரனே.

நைம்மிசமடைந்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௩௪௦.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

பதினெட்டாவது

## தன்னுடைச் சோதிக்கெழுந்தருளிய வத்தியாயம்.

என்றலுமன்னவனிசைததசாபத்தி
ஒன்றியயாதவருற்றதன்மைநீ
மன்றமாதவவினிவழங்குவாயெனப்
பொன்றியவாறவட்புகறன்மேயினான்.

சாபத்தி - சாபாக்நி, மாதவ - கண்ணபிரானே, பொன்றிய - இறந்த, புகறல்மேயினான் - சொல்லத்தொடங்கினான். (௧)

மண்ணினும்வானினுமருவுற்பாதமற்
றெண்ணிலகண்டனமீங்குவைகிடல்

நன்ஞெருகன்னலுநயக்கொணுதெனக்
கண்ணனுத்தவனெகழறினனரோ.

உற்பாதம் - துர்நிமித்தம், கன்னல் - கடிகை, வைகிடல் - தங்குதல், நயக்கொணுது - விரும்பலாகாது, கழறினன் - சொன்னன். (௨)

கோதையரின்னிளங்குமரர்வெறுப்பினர்
ஏதமிக்கரிடத்தொருங்குவைகுற
வேதியர்க்கரும்பொருள்வெறுப்பகல்கிற
தேதமில்லவரொடும்விரிவல்லைபோ.

கோதையர் - மாதர், வெறுப்ப - வெறுக்கும்படி, ஏதமில்லவரொடும் - குற்றமில்லாதவரோடும், வல்லை - விரைவு (௩)

பாமகட்காரியம்பகரும்பேர்பெறு
காமர்வண்ணதிகடல்கலக்குமோர்துறை
நாமநன்னீரிடைநயந்துதோய்தரின்
தீமையற்றிடுமெனச்செல்வன்செப்பினன்.

பாமகட்கு - கலைமகளுக்கு, ஆரியம்பகரும்பேர் - சரசுவதி, காமர் - அழகு, நதி-சரசுவதிநதி, கடல்கலக்கும் - கடலைச்சங்கமிக்கிற, நயந்து - விரும்பி, தோய்தரின் - மூழ்கினால், செல்வன் - கண்ணபிரான் (௪)

திங்களுற்றவமுனஞ்செய்துநீங்கறப்
பொங்கொளிசேர்பிரபாசம்போம்பொருட்
டங்குறையந்தணர்க்காக்கநீணிதி
மங்குலின்வழங்கினர்வழிப்பட்டாரரோ.

திங்கள் - சந்திரன், பிரபாசம் - ஒருபுண்ணியதீர்த்தம், ஆதில்சந்திரன்மூழ்கித்தன் சாபநீங்கப்பெற்றனன். (௫)

தேரினிற்சிலர்சிலர்சினக்கடாமழைக்
காரினிற்சிலர்சிலர்கவனவாம்பரித்
தாரினிற்சிலர்சிலர்தயங்கமேவினர்
சீரினிற்சிறந்தவர்சிவிகையேறினர்.

சினக்கடாமழைக்கார் - யானை, கவனம் - வேகம். (௬)

குடவளையலறவெண்கூந்தன்மாத்திரள்
உடைதிரையெனவெழுந்துழைதொறீண்டமா
கடலொடுகடல்பொரக்கலக்குங்காட்சிபோல்
மிடல்கெழுதார்ப்படைவெள்ளஞ்சென்றதால்.

குடவளையலற - குடம்போலுஞ்சங்குகள்சத்திக்க, உழைதொறு - இடங்கடோறும், ஈண்ட - நெருங்க, மிடல் - வலி. (௭)

விரைசெலுமிவுளிமேல்வேந்தர்சூழ்வரக்
குருதிவேலரசிளங்குமரரீட்டமோ

டொருதனியாழியானுலகம்போற்றிய
திருமறுமார்பனுஞ்செலவயர்ந்தனன்.

இவுளி - குதிரை, ஈட்டம் - கூட்டம், ஆழியான் — திருச்சக்கரப்படையினால், போற்றிய - காப்பாற்றின, திருமறுமார்பனும் - கண்ணபிரானும், செலவயர்ந்தனன்— சென்றான். (௮)

வரையினிற்பொலிதருமத்தயானையும்
திரையினிற்பொலிதருபரியுந்தேர்களும்
விரைவினிலுடன்வரவீரரோடுநல்
நிரையினிலேறியந்நீத்தநீங்கினார்.

வரையினில் - மலைபோல, திரையினில் - அலைகள்போல, பரி - குதிரை, நிரை— தெப்பம், நீத்தம் - வெள்ளம். (௯)

ஏர்பெறுபேர்பிரபாசமென்றசொல்
சீர்பெறுதலத்திடைச்சென்றவாணியின்
பேர்பெறுநதிகடல்பெயருமோர்துறை
தார்பெறுபுயத்தவர்தலைப்பட்டாடினார்.

வாணியின்பேர்பெறுநதி—சரசுவதிநதி, (வாணி - சரசுவதி), தலைப்பட்டு—கலந்து, ஆடினார் - மூழ்கினார். (௧௦)

போந்துநீர்படிந்தவப்புகழினாரெலாம்
ஏய்ந்தநல்விரதமுற்றிருந்தகாலையின்
பாந்தளினடித்தவப்பரமன்மாயையால்
மாந்தினர்மதுப்பலமயங்கினாருளம்.

பாந்தளினடித்தவப்பரமன் - கண்ணபிரான், மாந்தினர் — பருகினார், மது - கள்

கூடினர்மதுக்களிகொற்றமேம்படச்
சூடினர்சுரும்புணத்தொடுத்தபைந்தொடை
ஆடினரார்த்தனராயுதங்களால்
வீடினரெனவெகுண்டமர்விளைத்தனர்.

மதுக்களி— கள்ளுண்டகளிப்பு, சுரும்பு - வண்டு, பைந்தொடை—பசியபூமாலை, வீடினர் - இறந்தார். (௧௨)

கண்ணன்முனல்கியகாமன்றன்னொடும்
தண்ணறுந்தொடைபுனைசாம்பனேற்றனன்
அண்ணலங்களிற்றினனக்குரூரன்முன்
நண்ணினன்சமர்செயநலஞ்செய்போசனே.

கண்ணன்முனல்கியகாமன் - ப்ரத்யும்நன், ஏற்றனன்—எதிர்த்தான், சமர்—யுத்தம்.

தீத்திரள்பொழிதருசெய்யதாமரை
நேத்திரத்தானநிருத்தனீணிலம்
காத்தினிதளிப்பவன்கருத்தையோர்கிலன்
சாத்தகிதன்னொடுசமருக்கேற்றனன்.

நேத்திரத்தான் - கணகளையுடையவன், நீணிலம்காத்தினிதளிப்பவன்கருத்தை - கண்ணபிரானது திருவுளத்தை, தூர்கிலன் - அறியாதவனாய், சமருக்கு - போர்செய்தற்கு, எற்றனன் - எதிர்த்தான். (கச)

இத்திறமுன்னவரிளையர்மைத்துனர்
ஒத்துறைமருமகருவந்தமாமலர்
புத்திரர்தாதையர்புழுங்கித்தங்களிற்
மத்தவெங்களிறெனமலைந்திட்டாரரோ

மாதுலர்—மாமன்மார், தாதையர்—தந்தையர், மலைந்திட்டார்—போர்செய்தார்கள்

உள்ளுறவுஞ்சினத்தமொழியளிமொழ
வின்னருந்தனிமுதல்விலக்கவும்வழி
எள்ளினர்புணர்ப்பறியாதயாதவர்
தள்ளினர்தழலுறுபதங்கதன்மையார்

தனிமுதல் - கண்ணபிரான், எள்ளினர் - இகழ்ந்தார், புணர்ப்பு - மாயம், பதங்கம் - விட்டில் (கசு)

முன்னவரிவரிவர்முதியர்மாதுலர்
பின்னவரிவரிவர்பெரியர்தாதையர்
என்னவுங்கொண்ணிலர்யாருமீறுசெய்
ஒன்னலரெனநினைந்துருத்துடன்றனர்

ஈறுசெய் - முடிவுசெய்கிற, (கொல்லுகிற) ஒன்னலர் - பகைவர், உருத்து—கோவித்து, உடன்றனர் - செய்தார்கள். (கஎ)

பல்லுளைப்புரவியும்பருமயானையும்
வில்லுடைத்தேர்களும்வேறுவேறுசேர்
சொல்லுடைவெற்பெனத்துணிபட்டாரினை
எல்லுடைப்படைகளாற்றவெற்பிபோ

உளை - புறமயிர், பருமம் - ஏகா, (யானைமுதுகின்மேலிடுந்தவிசு) வில் - ஒளி, வெற்பென - மலைபோல, துணிபட்டு - அறுபட்டு, எல் - ஒளி, படைகள்—ஆயுதங்கள்.

காரகங்கிழிக்குமின்கடுக்கும்வாளினல்
போரகத்திறந்திடாப்பொருநர்யாவரும்
பாரகஞ்சூழ்கடற்பரப்பினுமெழும்
ஏரகத்தார்பொருதிறந்திட்டாரரோ

காரகம்கிழிக்கும் - மேகத்தைப்பிளந்துதோன்றுகிற, மின்கடுக்கும் - மின்னலையொத்த, பொருநர் - போர்வீரர், பார் - பாறை, கடற்பரப்பு - பூமி, ஏர் - அழகு, அகத்தார் - மனமுள்ளவர், பொருது - போர்செய்து. (கஅ)

துன்றிருங்கிளையினஞ்சுழல்வெங்காலுற
ஒன்றொடொன்றுரிஞ்சியாங்குழுத்தழீச்சுட
நின்றவவ்வனத்தினீறுகிநீங்கல்போல்
பொன்றினர்யாதவர்புனிதன்மாயையால்.

துன்று - நெருங்கின, இருங்கிளை-பெருஞ்சுற்றம், சுழல்வெங்கால்உற-கொடிய சுழற்காற்றடிக்க, உருத்த - சினத்தெழுந்த, யாதவர் - ஆயர், பொன்றினர் - இறந்தார்கள், புனிதன் - கண்ணபிரான். (உ0)

முருகுறழ்காளையர்முனையின்மாய்தல்கண்
டொருகுழையொருவன்மூதுலகஞ்சேர்தர
விரிசினையாலிலைதுயின்றமேலவன்
அரசினன்னிழலிடையடைந்துவைகினன்

முருகு - கந்தன், உறழ் - ஒத்த, முனையில் - யுத்தகளத்தில், மாய்தல் - மாய்தல், ஒருகுழையொருவன்—பலராமன், விரிசினையாலிலைதுயின்றமேலவன்—கண்ணபிரான், அரசின் - அரசமரத்தின். (உ௧)

கலிநிலைத்துறை

பாட்டாயிரம்வண்டுறைபங்கயப்போதின்மீது
வேட்டாயிரஞ்செங்கதிர்வெய்யவன்சூழ்தலேபோல்
சூட்டாடரவந்தொழுதேத்தநடித்ததூய
தாட்டாமரைமேன்மறைநூபுரந்தாழ்ந்திலங்க

வண்டுறை - வண்டுகள்தங்குகிற, பங்கயப்போதின்மீது - தாமரைமலரின்மேல், வேட்டு - விரும்பி, ஆயிரஞ்செங்கதிர்வெய்யவன் - சூரியன், சூட்டாடரவந்தொழுதேத்தநடித்ததூயதாட்டாமரைமேல் — உச்சிக்கொண்டையையுடையகாளியன்வணங்கித்துதிக்கநடஞ்செய்ததாமரைமலர்போன்றதிருவடிகளில், மறைநூபுரம் - வேதமாகிய சிலம்புகள், தாழ்ந்துஇலங்க - தங்கிவிளங்க. (உஉ)

நன்காட்டுகின்றகளபந்துறுநான்குதோளும்
பொன்காட்டுகின்றமணிமார்வமும்பொற்புவாய்ந்த
தென்காட்டுகின்றவடவெற்பெழில்சேர்ந்துகாட்ட
மின்காட்டுகின்றகருமாமுகின்மேனிகாட்ட

களபம் - கலவைச்சந்தனம், துறு - பூசப்பட்ட, பொன் - திருமகள், மணி—கௌஸ்துபமணி, பொற்பு - அழகு, தென் - அழகு, வடவெற்பு - மேருமலை, கருமாமுகில்-பெரியகரியமேகம். (உ௩)

பஞ்சாயுதமும்பகர்தேவுருக்கொண்டுமேவ
அஞ்சாரனீலவரைசூழ்ந்தவிராழிவெய்யோன்
எஞ்சாதகாந்தியெனவேமணிச்செம்பொனுடை
மஞ்சாயொளிருந்திருமேனிவயங்கமாதோ.

பஞ்சாயுதம் - ஐம்படை, அவை, சங்கசக்கரகதாகட்கசார்ங்கங்கள், தேவுரு-தெய்வவுரு, வெய்யோன் - சூரியன், செம்பொனுடை — பீதாம்பரம், மஞ்சு—அழகு (உ௪)

கோலப்பிறையுங்கொழுஞ்செஞ்சுடர்கொண்டதேவு
நீலக்கடலினிலவிற்றிகழ்கின்றதென்னப்

பாலுற்றவேலைப்படுசெம்மணிப்பைம்பொனாரம்
மாலைத்துளவத்தொடுமால்வரை மார்பின்மின்ன.

பாலுற்றவேலைப்படுசெம்மணி - கௌஸ்துபமணி. (உ௫)

இணையுற்றுயர்ந்தகதிரோரையிரண்டுபாலும்
அணியுற்றசெந்தாமரையாமெனநாளுமேவித
துணியுற்றுடல்வெம்மறுவாய்மதிதோற்பவென்ற
மணியுற்றமகரக்குழைவாண்முகம்வாய்ந்தமாதோ

இணை - இரண்டு, அணி-அழகு, துணி-துண்டு, மறு-களங்கம், குழை-காதணி, வாள் - ஒளி. (உ௬)

பொன்னுடையுற்றகுறங்கொன்றினிற்பொற்புவாய்ந்த
மின்னாரணிசேரொருதாண்மலர்மேவவைத்தாங்
கன்னாண்மலர்த்தாளமரேசரடைந்துவாழ்த்தத்
தன்னேருருவைத்தனிநோக்கித்தயங்கினானே

குறங்கு - தொடை, பொற்பு - அழகு, தாண்மலர் - திருவடித்தாமரைமலர், அமரேசர் - நித்யசூரிகள் (உ௭)

தேனென்றதண்ணந்துளவோன்றவர்செப்புசாபம்
தானென்றிநிற்பத்தகைசெய்துமயக்கலாலே
கானென்றவேடன்சரனென்பவன்காட்டின்மேய
மானென்றுதாளிலொருவாளிவழங்கினானால்

தேனென்ற தண்ணந்துளவோன்-கண்ணபிரான், தவர்-துர்வாசர், தகைசெய்து-தடைசெய்து, கான் - காடு, வாளி - அம்பு (உ௮)

மொழிகின்றவாளிவிடுத்தநல்லைமுன்சென்றுகண்டாங்
கழிகின்றநெஞ்சத்தினனாகியயர்ந்துதாரை
பொழிகின்றகொண்டலெனநின்றுபுலம்பிநீத்தம்
வழிகின்றகண்ணனடிவீழ்ந்துவழுத்தினானே.

வாளிவிடுத்து - அம்பையெய்து, நல்லை - விரைவாக, தாரை - நீர்த்தாரை, கொண்டலென - மேகம்போல, நீத்தம் - பெருக்கு (உ௯)

கண்ணாகநினைக்கடலேகவினோங்குநீல
வண்ணாவனசமலர்மேலவன்மங்கைபாகன்
விண்ணோரியாநினையெங்ஙனம்வேட்டணுகி
எண்ணாதியற்றும்பழியேன்றெளிந்தேத்துமாறே.

கவின் - அழகு, வனசமலர்மேலவன்-பிரமன், மங்கைபாகன்-சிவன், விண்ணோர்-தேவர்கள், ஏத்துமாறு - துதிக்கும்விதம் (௩௦)

என்னுஞ்சரனையெதிர்நோக்கியிரங்கலென்னின்
மன்னும்முலகினுயிரெங்கும்வதிந்துளேன்மற்
றுன்னின்னுறைந்துவினைசெய்யவுஞற்றினேன்யான்
பொன்னின்றிலங்குமுலகெய்துதிபோதியென்றான்.

இரங்கல் - இரங்ாதை, என்னில் - என்னிடத்தில், வதிந்துளேன் - தங்கியிருக்கிறேன், உஞற்றினேன் - செய்தேன், பொன்னின் நிலங்குமுலகு - பொனனுலகு.

அவ்வாறிசைத்தவநந்தன்கழல்சூழ்ந்துபோற்று
வெவ்வாளிவிட்டோன்மிடல்யாக்கையினோடுமேவி
எவ்வானவருமிறும்பூதடைந்தேத்தநாளும்
செவ்வாந்தவஞ்செய்பவர்சேர்நெறிசென்றுசேர்ந்தான்.

அநந்தன்—கண்ணபிரான், வெவ்வாளிவிட்டோன்-சரனென்னும்வேடன், மிடல்—வலி, இறும்பூது - ஆச்சரியம், ஏத்த - துதிக்க, செவ்வாந்தவஞ்செய்பவர்சேர்நெறி—முத்தியுலகு (௩௨)

கலிவிருத்தம்.

மண்ணியமேசரொடுமருவுதாரகன்
கண்ணனையவ்வழிக்காண்குறுனெவண்
நண்ணினனைனத்துழாய்நாற்றந்தேர்ந்துதேர்ந்
தண்ணலச்சுதனைவந்தடிவணங்கினான்.

மண்ணிய - அலங்கரித்த, தாரகன்—பாகன், துழாய்நாற்றம்—துளவமணம், அண்ணல் - பெருமை, அச்சுதனை - கண்ணபிரானை (௩௩)

தேடினனெங்கணுநின்னைக்காண்கலேன்
வாடினன்றிகைத்தனன்வழியுந்தேர்கலேன்
கூடினனிறைதடிகுளிர்ந்ததுள்ளமும்
மூடியதுயரிருண்முற்றும்போயதால்.

தேடினன் - தேடினன், திகைத்தனன் - திகைத்தேன், வழியுந்தேர்கலேன்—வழியுமறியகிலேன். (௩௪

திசைகளுந்தெரிந்தனவென்றுசெப்புழி
இசைதரும்புட்கொடியியைந்துநேரலர்
தசையுறுபடைக்கலஞ்சாரத்தேரும்வான்
றிசையெழத்தாரகன்வியந்துநோக்கினான்

புட்கொடி - கருடக்கொடி, நேரலர் - பகைவர், படைக்கலம் - ஆயுதங்கள், வியந்து - அதிசயித்து (௩௫)

காமருதேரவன்கைவிதிர்ப்பவான்
மாமணிவண்ணனைவலங்கொண்டேகலும்
தாமரைக்கண்ணருடலையவைகிய
தேமறைச்சிலம்படிச்செல்வன்செப்புமால்.

கைவிதிர்ப்ப - கைநடுங்க, வான்மாமணிவண்ணனை - கண்ணபிரானை, வலங்கொண்டு - ப்ரதக்ஷிணஞ்செய்து, தாமரைக்கண்ணருடலையவைகியதேமறைச்சிலப்படிச்செல்வன் - கண்ணபிரான். (௩௬)

தேவகிகொழுநனைச்சென்றுசேர்ந்திவண்
கோவடைந்ததுதிவேற்கொற்றயாதவர்

கொச்சைமக்களிற்பலகோலங்கொடுநின்
மெய்ச்செயலிற்றெனவிளம்பவல்லனோ

அச்சுதன் - அழிவற்றவன், அநந்தன் - முடிவற்றவன், நிச்சலும் - நாள்தோறும், கழறும் - சொல்லும். (சரு)

நிலைபுறவறநெறிக்குழ்ந்தவிரோ
குலைபுறச்செய்குநர்க்குறிக்கினின்னின்யாா
மலரவனரனொடிவருந்தியின்னணம்
தலையினிறைஞ்சினன்சரணிற்றாழ்ந்தனன்.

அறநெறி - தருமமார்க்கம், குலைபுறச்செய்குநர் - கெடச்செய்வோர், குறிக்கின்- யோசிக்குமிடத்தில், நின்னின் - உன்னிலும், மலரவன் — பிரமன், அரன் - சிவன், இறைஞ்சினன் - வளைத்து, சரணில் - திருவடியில், தாழ்ந்தனன் - வணங்கினான். ()

மனமகிழ்ந்தருள்பெறீஇவணங்கிவான்மிசைப்
புனைமுடிவிண்ணவர்புதியதேறல்பாய்
பனிமலர்சொரிந்துபல்லியந்துவைப்புறத்
தனிமுதலுயர்பரந்தாமமெய்தினன்

விண்ணவர் - தேவர், தேறல் - தேன், பனி - குளிர்ச்சி, பல்லியம் - பலவகைவாத்தியங்கள், துவைப்புற-முழங்க, தனிமுதல்-ஒப்பற்றமுதற்பொருள் (கண்ணபிரான்).

குண்டலம்வெயிலெனக்குலவுவாண்முக
மண்டலமதியெனமாயனேகுதல்
விண்டலநிறைந்தெழுவிரிஞ்சனாதியர்
கண்டனர்சிலர்சிலர்கண்ணிற்கண்டிலர்

வெயில் - சூரியன், மதி - சந்திரன், மாயன் - கண்ணபிரான், விண்டலம் — ஆகாயம், விரிஞ்சனாதியர் - பிரமன்முதலானோர். (சசு)

தற்பரஞ்சுடர்மகத்தயனகுகாந்திய
நற்பதக்கேகுதனயந்துபோற்றினர்
அற்புதமடைந்தடைந்தமரர்யாவரும்
பொற்புறுந்தத்தமபதியிற்போயினா

நற்பதக்கு - நல்லபதவிக்கு (பரந்தாமத்துக்கு), அற்புதமடைந்து—ஆச்சரியமடைந்து, பொற்பு - அழகு, பதி - இடம். (சஎ)

தாங்கருந்துயர்மொழிசாற்றக்கேட்டலும்
தேங்கமழ்தார்வசுதேவன்றேவகி
ஆங்குறைபுக்கிரசேனாதியர்
ஏங்கினரவணடைந்தெரியின்மூழ்கினர்.

தேம் - தேன், வாசனை-ஏங்கினர் - அழுது, எரியில்மூழ்கினர்—தீப்பாய்ந்தார்கள்.

காவியுக்கமலமுங்கயலுமன்னகட்
டேவியரனைவருந்தீயின்மூழ்கினர்

சொல்லுநல்வளநிகழ் துவரைசூழ்ந்தநீர்
ஒல்லெனவொலித்துவந்துறமறைந்ததால்
செல்லுறழ்மாதவன்சிறந்தகோயிலை
மல்லலந்திரைக்கடன்மறைத்ததில்லையே.

**துவரை** - துவாரகை, செல்லுறழ்—மேகத்தையொத்த, மாதவன்—கண்ணபிரான், சிறந்தகோயிலை திருமாளிகையை. (ருகா)

அண்டரும்புகழுமக்கோயிலின்னமும்
தெண்டிரைக்கடலிடைச்சிறந்துதோற்றுமால்
மண்டமர்கடந்தவென்மன்னவன்னது
கண்டவர்பிறவியைக்காண்குறுரரோ.

அண்டரும் - தேவரும், மண்டு - மிகுந்த, அமர்கடந்த - போரைவென்ற, பிறவியைக்காண்குறுர் - பிறவார் (ருஎ)

கருமுகிலனையவர்கண்ணன்பின்றொடர்ந
திருவிசும்பியகியவிசையுமெய்ம்மையும்
தருமமும்பொறைபுந்தவமுந்தானமும்
மருவினதவனியின்மறஞ்செய்வெங்கலி.

**கருமுகிலனைய** — நீலமேகம்போன்ற, அக்கண்ணன் — அந்தக்கண்ணபிரான், **இசை** - கீர்த்தி, அவனியில் - பூமியில், மறஞ்செய்வெங்கலி—பாவஞ்செய்தற்குரியகொடுங்கலி, மருவினது - பொருந்திற்று (ருஅ)

காலமும்பிறிதொடுகலப்புமற்றுயர்
சீலமுமானவன்செய்கையிந்திர
சாலமுமவைகளுந்தானாகூத்தினர்
கோலமுமல்லதொன்கூறல்வேண்டுமோ

சீலமும் - ஒழுக்கமும், கோலமும் - வேடமும். (ருகூ)

இகலுறுமரசவிக்காதையாமமு
தகமொளிதரவுவந்தருந்தருந்தவர்
புகலருமொருபதம்பொருந்துவாரெனச்
சுகனெனுமுனிவரன்சொல்லினனரோ.

இகல் - வலி, காதை - சரித்திரம், ஒளிதர - பிரகாசிக்க, புகலருமொருபதம்—பிரமபதம். (சு0)

தன்னுடைய சோதிக்கெழுந்தருளிய வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—சOO

பதினொன்ருங்கந்தம்-முற்றிற்று.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

# பன்னிரண்டாங்கந்தம்.

## முதலாவது

## கலிதன்மமுரைத்த வத்தியாயம்



அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மருவலர்புகழும்வேலாய்மகதநாடாளுமன்னன்
திருமதிக்குலத்துவேந்தன்றிறற்சராசந்தன்மைந்தன்
தரையிலேந்தருவேபோலத்தருஞ்சகதேவனென்னும்
புரவலன்மரபின்வந்துபுரஞ்சயனுதிக்குமன்றே.

மருவலர் - பகைவர், மதிக்குலம்—சந்திரகுலம், புரவலன்—அரசன், மரபு—வம்சம்.

அன்னவன்கலியின்காலத்தவனிகாத்துறையுநாளம்
மன்னவன்றனக்கன்பாயமந்திரிசுனகனென்பான்
பொன்னவிர்மகுடச்செங்கோற்புரவலனவனைவீட்டித்
தன்னெழின்மதலையாளத்தாரணிகொடுக்குமன்றே.

அவனி - பூமி, வீட்டி - கொன்று. (உ)

சொல்லுமவ்வமைச்சனல்குந்தோன்றலைத்துவக்கியைவர்
எல்லைமற்றொருநூற்றேடிரண்டிலாநாற்பதாண்டு
நல்லுலகாள்வரப்பானந்திமாநந்தியென்னும்
வில்லினரிறுதியாகமேதினிபுரப்பர்பல்லோர்.

துவக்கி - தொடங்கி, ஒருநூற்றேடிரண்டிலாநாற்பதாண்டு— நூற்றுமுப்பத்தெட்டுவருடம், மேதினி - பூமி, புரப்பர் - காப்பர் (ங)

வேந்தர்தம்வேந்தனாகவிறல்செய்மாநந்திபுல்ல
வாய்ந்தநல்லெழில்சேர்வேளாண்மரபினளொருத்திபெற்ற
நாந்தகவுழவன்யாருநவில்பற்பதியென்றோதும்
ஏந்தன்மன்னவரைச்செற்றங்கிருநிலம்புரக்குமன்றே.

விறல்செய் - வெற்றியடைந்த, புல்ல - புணர, நாந்தகவுழவன்—வாள்வீரன், நவில்-புகழ்தற்குரிய, ஏந்தல் - அரசன், இருநிலம் - பெரியநிலவுலகம். (ச)

இவனுமோர்பரசுராமனென்றுலகேத்தும்வண்ணம்
கவனவாம்பரியின்றானைக்காவலர்குழுவையெல்லாம்
அவனிமீதமரிற்கொல்லுமன்னவன்றொடங்கிவேந்தாய்ப்
புவனிமேற்புரவுபூண்போர்பின்னவர்போலுவாரே.

கவனம் - வேகம், வாம் - தாவுகின்ற, பரியின்றானை - குதிரைப்படை, காவலர் குழு - ராஜசமூகம், அமரில் - போரில், புரவுபூண்போர் — காவற்றொழில்பூண்பவர், பின்னவர் - சூத்திரர். (ரு)

பின்னர்தம்வேந்தராதிபிறங்குதெண்டிரையின்மேவு
கொன்னவிலெயிற்றுப்பேழ்வாய்க்கூற்றுணவினிதினூட்டித்

துன்னியசேனைகாப்போர்துலங்குபொன்னடைப்பைதாங்கி
மன்னியதொழும்புசெய்வோர்மாகிலங்காப்பர்மாதோ.

பிறங்கு - விளங்குகிற, கொன் - அச்சம், நவில் - செய்கிற, எயிறு - பல், பேழ்வாய் - பெரியவாய், கூற்று - யமன், அடைப்பை - வெற்றிலைப்பை, தொழும்புசெய்வோர் - அடிமைசெய்வோர். (சு)

வெல்லருயவனர்கள்ளர்வேசரியீட்டகதாமேல
சொல்லருநிதிகளீட்டுந்தொழிலினர்மறவர்பின்னோர்
அல்லுறழ்கோதைமாதராநியாங்காங்கெய்தி
மல்லலம்புவிமானின்றமயர்வுறவாழுவாரே.

வேசரியீட்டம் - கழுதைக்கூட்டம், அல்லுறழ்கோதை - இருள்போன்றகூந்தல், புவிமான் - பூமிதேவி, மயர்வுற-மயங்க. (எ)

அரும்பழியுறுதெய்வத்தரசுபாலங்குற்றமுறும்
பெரும்பழியியற்றக்கூசார்பிணியினுற்சோரர்தம்மால்
வருந்துவர்வறுமையெய்திமன்னரான்மயங்கிநிற்பார்
பொருந்தலில்புன்மைக்காகப்புழுங்கினர்கலங்குவாரால்

பெரும்பழியியற்ற - பெரியநிந்தையாகியகாரியத்தைச்செய்ய, கூசார் - நாணார், வறுமை - தரித்திரம் (அ)

கடக்கருவலிமைசான்றகலியெனுங்காலத்தாசை
அடக்கரிதாகியுண்மையருள்பொறைபுனிதமாயுள்
உடற்குறுதிண்மையுந்தியுற்றிடுநினைவுபார்மேல்
நடக்குறுதருமமெல்லாநாட்குநாட்குறையுமம்மா

கடக்கரு - வெல்லுதற்கரிய, சான்ற - மிகுந்த, பொறை - பொறுமை, புனிதம்- சுத்தம், ஆயுள் - வயது, திண்மை - பலம், புந்தி - புத்தி (கூ)

கலிவிருத்தம்.

விரியுநூன்முறைதமவீரமாற்றிடார்
உரியதோர்குருகுலவாசமுற்றொரு
புரையிலாநியமத்தாற்புகன்றிடார்மறை
பிரமசாரியரறம்பிழைத்துவாழ்வரே.

தம - தம்முடைய, வீரமாற்றிடார் - வீரத்தன்மையைச்செலுத்தார், குருகுலவாசம் - ஆசாரியாசிரயம், புரை - குற்றம், அறம்பிழைத்து - தருமநெறிதவறி, (க0)

உள்ளுவந்தில்லறமுற்றுளோர்மகம்
எள்ளலிலன்பொடுமியற்றிடாரவை
வள்ளிதழ்மலர்த்தொடைமன்னராற்றினும்
கள்ளொழுக்காய்நிதிகருதிச்செய்வரால்

உள்ளுவந்து - மனமகிழ்ந்து, மகம் - யாகம், எள்ளலில் - இகழ்ச்சியில்லாத, ஆற்றினும் - செய்தாலும், கள்ளொழுக்காய் - கள்ளநடையாய். (கக)

வந்தவெங்கலியினின்மறைவலோர்மறை
சிந்தைசெய்யார்தமசெயலுஞ்செய்கலார்
சுந்தரமுப்புரிதுலங்குநூலினல்
அந்தணரிவரெனவறியவாழ்வரே.

சிந்தைசெயார் - சிந்தியார், சுந்தரம் - அழகு (கஉ)

சொல்லியகலியெனுங்காலந்தோன்றினிங்
கில்லறந்துறந்தனரேய்ந்தகாட்டுழைச்
செல்லினுமவர்வனஞ்சேர்ந்தவூணலால
நல்லனநாட்டுணவெனநயப்பரே.

துறந்தனர் - விட்டு, காட்டுழை - வனத்தில், ஊண்—உணவு, நயப்பர்—விரும்புவர்.

துறந்தவர்துறவறந்துணிந்துஞற்றிடார்
சிறந்துசெந்துகிலினுஞ்சேர்ந்ததண்டினும்
நிறங்கிளர்கன்னலினுநீத்திவண்
உறைநதவரிவரெனவுலவுவாரரோ.

உஞற்றிடார் - செய்யார், செந்துகில் - காவிவஸ்திரம், கன்னல் - கமண்டலம், நீத்து - துறந்து (கச)

முதற்பெருந்தவெனுமுகுந்தன்பூசனை
அதர்ப்படவாற்றிடாரரியமாமறை
விதத்தொடுமுரணியவிரியுமாகம
மதத்தொடுமருவுவர்மாக்களென்பவே.

முகுந்தன் - திருமால், அதர்ப்பட - நெறிப்பட, ஆற்றிடார்—செய்யார், முரணிய-மாறுபட்ட. (கரு)

இந்நிலத்துயர்குலமியைந்துளோர்களும்
மன்னுபின்னவரறமருவிவைகுவார்
பின்னவாதமதறம்பிழைத்துநான்மறை
பன்னுநம்மிறைவனைப்பழிச்சிவாழ்வரால்.

பின்னவர் - சூத்திரர், பழிச்சி - துதித்து. (கசு)

ஒழிவறுபுகழுடையுயர்குலத்தரும்
இழிகுலத்தவருழையேவல்செய்குவார்
பழியுறுதொழில்பரிந்திழைத்தும்பாருளோர்
அழிபொருளடைவதற்காசைகூருவார்.

இழிகுலத்தவருழை - இழிசாதியாரிடத்தில், பரிந்து இழைத்தும் - வருந்திச்செய்தும், கூருவார்—மிகுவார். (கஎ)

நெறியுடையறிவிலரெனினுநீணிதிச்
செறிவுடையாளரைச்சேர்ந்துசேர்ந்தநல்

அறிவுடையாரெனவறைவரன்னவர்
குறியுடைமொழியையுங்குணமிக்கென்பரால்.

நீணிதிச்செறிவுடையாளரை—பெரும்பொருட்பெருக்கமுடையவரை—(செல்வரை).

நாயகனிருக்கவுநங்கைமார்பிறர்
ஏயநல்லழகுகண்டேக்கற்றன்னவர்த்
தோய்தரநினைகுவர்துணிந்துமாந்தரும்
சேயிழையார்பிறர்ச்சேரவெண்ணுவார்.

நங்கைமார் - மாதர், தோய்தர - புணர, சேயிழையார் - மாதர். (௧௯)

மைந்தர்தம்மாமியர்மாமனூர்சொலச்
சிந்தையுண்மகிழ்ந்துதீங்கெனினுஞ்செய்குவார்
தந்தையர்தாயர்சொற்சார்ந்துகேட்கலர்
நிந்தனைபுரிகுவர்நிலத்தினென்பவே.

மைந்தர் - மக்கள், நிந்தனைபுரிகுவர் - பழிப்பர். (௨0)

நிறைபொருளுடையரெந்நிந்தைசொல்லினும்
முறையுறவழக்கெனமொழிந்துபோற்றுவார்
வறுமைமிக்குடையர்வாய்வழங்குநன்மொழி
அறமொழியெனக்கொளாரதனையெள்ளுவார்.

நிறைபொருளுடையர் - பெருஞ்செல்வர், போற்றுவார் - வணங்குவார். எள்ளுவார் - இகழ்வார். (௨௧)

உயர்பயனுவதிங்குதரத்தூண்பெறல்
மயிர்நனிவளர்ப்பதேவனப்பென்றன்னுவார்
புயல்வளங்கரத்தலிற்பொலிவழிந்ததம்
பயிர்வளங்கரிந்திடப்பசியின்வைகுவார்.

உதரம் - வயிறு, வனப்பு - அழகு, புயல் - மேகம், வளங்கரத்தலின் - மழைபெய்யாமையால், கரிந்திட - கருகிப்போக. (௨௨)

வெங்கலிமுதிர்வுறவிரியின்மாந்தர்கள்
இங்கியல்யாண்டிருபத்தின்மேலிரார்
மங்கையரேழெனும்பருவம்வந்துறின்
பொங்கெழிற்புதல்வரைப்புவியினல்குவார்.

மங்கையர் - மாதர், ஏழெனும்பருவம் - ஏழுவருடம், நல்குவார் - பெறுவார், ()

விதைபயிர்முதலியவிளையுள்குன்றுமால்
மதிவலிகுறைவுறுமாக்கள்யாவரும்
முதிர்வுறுபலன்பெறுமுன்னமேயகாய்
புதிதுறுகொழுந்திலைபூக்கொய்துண்பரே

விளையுள் - விளைவு, மதி - அறிவு, பலன் - கனி. (௨௪)

கடும்பசியடைகுவர்கரந்துகங்குலின்
படும்பொருளெங்கெனப்படர்ந்துபற்றா
விடும்புகழெதிகளும்வீடொன்றுரிவரோ
குடும்பமுற்றுறைவதேகுணமென்றுன்னலார.

கரந்து - ஒளித்து, கங்குலில் - இரவில், படர்ந்து—சென்று, எதிகளும்—சந்நியாசிகளும், வீடொன்றுர் - முத்தியடையார். (உ௭)

தள்ளருஞ்சிறப்புடைத்தலைவர்தமமற்
றுள்ளுறைமனைவியருவந்தியற்றலர்
எள்ளுநர்வெரூஉச்சிறிதியையந்தியற்றவார
விள்ளருவெறுமையரெனின்வெறுப்பரா

உவந்து-மகிழ்ந்து, இயற்றவார்—செய்யவர், எள்ளுநர்—இகழ்பவர், வெரூஉ—அஞ்சி.

கிட்டியபுனிதநீரகெழுமிவைகுதல்
விட்டதினன்பிலராகிவேறுசெய்
பட்டநன்னதிகளேபழுதிலாருமென
றுட்டெளிந்தவரவருழுதிகூறவார்

புனிதம்—பரிசுத்தம், கெழுமி—பொருந்தி, வைகு[illegible], பட்டம்—குளம்.

காக்களுங்குறுகுநற்கனிகளாதிய
நாக்குறுஞ்சுவைப்பொருணலனுநகுன்றுமால்
மாக்களுங்குறுகுவர்வயநகுதம்முருக்
கோககளும்யாடெனக்குறுகுமென்பவே

காக்களும் - சோலைகளும், நறுகும் - பயன்குறையும், கோக்களும் - பசுக்களும், யாடு - ஆடு. (உ௮)

கலிதன்மமுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்— ௯உஅ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்

---

## இரண்டாவது
## கற்கியவதார முரைத்த வத்தியாயம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

ஊன்னுநான்மறையும்வருணமுநான்காயுரைத்தவாச்சிரமமுமொழிய
இன்னவாறெவருமறந்தபத்தீங்கீங்கிழைத்திடுங்கலியுகத்தீற்றின்
மன்னுநான்முகனையரனையீங்குதவிமாநிலங்காத்தளித்தழிக்கும்
அன்னமாமாயன்பரியுருவாகியறத்தினைநிறுத்துவனன்றே

அறம்தப - தருமங்கெட, இழைத்திடும் - செய்கிற, கலியுகத்தீற்றில் - கலியுக முடிவில், பரியுருவாகி - குதிரைவடிவாகி (க)

தண்டலையுடுத்துநீள்வளஞ்செறியுஞ்சம்பளக்கிராமத்தின்றேத்தவ்
வண்டரும்புகழுமருந்தவப்பேருமந்தணர்குலத்தினரியத்தால்
விண்டுவின்பெயரோடிசைக்குறம்பெயர்சேர்வேதியன்வதிவனுங்கவன்பால்
பண்டைநான்மறையுங்காணரும்பரமன்பரியவதாரமுற்றிடுமே.

தண்டலையுடுத்து - சோலைகளால் சூழப்பெற்று, சம்பளக்கிராமத்தின்றேத்து-சம்பளக்ராமத்தினிடத்தில், அண்டரும் - தேவரும், தவப்பேறு - தவப்பயன், பரியவதாரம் - கற்கியவதாரம். (உ)

அவ்வுருவெடுத்தவாழியான்வேதத்தடைதருநற்பரியிவர்ந்து
தெவ்வடுகுருதிவாள்கரத்தேந்தித்தீங்குசெய்கரவடரெனவே
கவ்வையங்கடல்சூழ்காசினிபனிப்பக்காவல்செய்தரசராயுறையும்
அவ்வியமனத்தோர்யாரையுமறுத்தாங்கறனிலைநிறுத்துவனன்றே

ஆழியான் - திருமால், இவர்ந்து - ஏறி, தெவ்அடு - பகைவரைக்கொல்லுகிற, கரவடர் - கபடர், கவ்வை - ஒலி, பனிப்ப - நடுங்க, அவ்வியம் - பொறாமை. (ங)

ஆங்கறநிறுத்துமாயவன்றடமார்பணிவனமாலையின்காற்றுத
தீங்கருமேனிதைவரப்பெற்றோர்தெளிவுறுசிந்தையராவார்
வாங்குவிற்றடக்கைமன்னவவந்நாண்மாநிலமேமற்பிறவாராதாம்
ஓங்குறுமாதாயுகத்தினுக்கேற்றவொளிபெறுகுணத்தராயுதிப்பார்.

வனமாலை - துளவமாலை, தைவர-தடவ, வாங்கு-வளைந்த, ஆதியுகம்-க்ருதயுகம்.

ஆதியாமுகம்வந்தணையுறுங்காலதருக்கனுமதியுமந்தணனும்
ஓதுமோர்பூசநாளிலுற்றுறைவாருரைப்பருந்தவம்புரிந்திருக்கும்
தீதிலாத்திங்கண்மரபுளானெனுஞ்சீர்சிறக்குந்தேவாபியுமருவா
மீதுலாம்பரிதிமரபின்மன்னவனும்விளங்குதம்மரபினைவிளைப்பார்

அருக்கன் - சூரியன், மதி - சந்திரன், அந்தணன் - குரு, திங்கள்மரபு - சந்திரவமிசம், மருவா - பொருந்தி, பரிதிமரபு - சூரியவமிசம் (ரு)

அந்தணர்முதலாமூழியினீங்காதருந்தவமியற்றியன்புவார்
வந்துறுமிரண்டாமூழியின்மகிழ்வான்மன்னருமாதவம்புரிவார்
நந்தலின்மூன்றாமூழியினலஞ்சேர்நாய்கருநற்றவம்புரிவார்
நொந்துறுகதியிற்பின்னவர்தாமுநொடிப்பருநதவமியற்றுவரால்

முதலாமூழியில்-க்ருதயுகத்தில், இரண்டாமூழியில் - த்ரேதாயுகத்தில், நந்தலில்-கெடுதலில்லாத, மூன்றாமூழியில் - துவாபரயுகத்தில், நாய்கரும் - வைசியரும், பின்னவர் - சூத்திரர், நொடிப்பரும் - சொல்லுதற்கரிய. (சு)

தேன்றருதொடையாய்முதலெனுமூழிசேர்தரினறமெனும்வெள்ளே
றூன்றிடுநான்குபாதமுமிரண்டாமூழியிலொருபதம்வாங்கி
மூன்றெனமொழிவார்மொழிந்திடுமூழிமூன்றினிலிரண்டுதாளுன்றும்
ஏன்றிருங்கலியிலொருபதமூன்றுமிலங்குமித்தரையிசையன்றே

முதலெனுமூழி - முதல்யுகம், வெள்ளேறு - வெள்விடை, ஒருபதம் - ஒருகால், தாள் - கால். (எ)

அறமெனும்வெள்ளேறொருபதமூன்றினவனியிறொருபதமகற்றும்
நிறைதருதருமமொருபதநீங்கிநிலமிசையொருபதநிறுத்தும்
தெறுகொலைவைரம்பொய்கடுஞ்சோகஞ்செப்புமிந்நால்வகையனவாம்
மறமிகுநான்குதாளுடைத்தாகிமருவியதீங்குறமாதோ.

அவனி - பூமி, தெறுகொலை - வருத்துகிறகொலைத்தொழில், வைரம் - கடுங்கோலம், சோகம் - துக்கம். (அ)

நாடொறுங்கொடுமைநனிதவாடாத்துநாமவெங்கொடுங்கலியீற்றின்
கேடுறுகொலைசேர்தருமநான்காகக்கிளைத்தியதாண்முழுதூன்றப்
பீடுறுகருணையுண்மைநற்புனிதம்பெருந்தவமென்றுநான்கடியும்
நீடுறுபுகழ்சேர்தருமமிந்நிலமேனிறுத்திடாதொளித்திடுமன்றே.

நனிதவ - மிகவும்அதிகமாக, நாமம் - அச்சம், பீடு - பெருமை, அடி - கால். (கூ)

கலிவிருத்தம்.

பன்னுமன்னர்பலர்நமன்கூற்றராம்
என்னதென்னதென்றெண்ணிடத்தாசையால்
துன்னுவெஞ்சமரிற்றொலையாரென
நன்னிலப்பெண்ணகைத்துரையாடுமே.

நமன்கூற்றராய் - யமாபசராய், நன்னிலப்பெண் - பூமிதேவி. (க0)

வாசமாய்நமன்வாயதுபார்த்திடார்
ஓசைசீக்கடலுற்றறுமொக்குள்போல்
பேசமாயுடற்பிண்டமெய்யாமென
ஆசைமாகடன்மூழ்கியழுங்குவார்.

மொக்குள் - குமிழி, மாயுடல் - நசிக்கின்றவுடம்பு, அழுங்குவார் - வருந்துவார்.

இளமையும்வண்மையெழிலிக்குவாகுவும்
நளனும்யயாதியென்றோதுநன்னூலுணர்
உளனும்வீமனுமுற்றநன்னீதியும்
வளனுமேவுமவ்வெவ்வமன்னனும்

வண்மை - கொடை, எழில் - அழகு (கஉ)

மகுடம்வேய்ந்தெழுமாநிலங்காத்தருள்
நகுடனுங்கயனுநவிலண்டரீள்
முகடளப்பமுளைத்தபெரும்புகழ்
சகரனுந்திறல்சார்ந்தசையாதியும்.

முளைத்த - தோன்றின. (கங)

கனகனுங்கனகப்பெருங்கண்ணனும்
அநகவெள்ளிவெற்பேந்துமரக்கனும்
இனையராதிமற்றேனையராக்கையும்
வினையின்வீந்தனவென்றுவிளம்பினன்.

கனகன் - இரணியகசிபன், கனகப்பெருங்கண்ணன் - இரணியாக்ஷன், அகம்—பரிசுத்தம், வெள்ளிவெற்பேர்ந்துமரக்கன் - ராவணன். (கச)

அசைவில்சிந்தையரசவிங்கோதினர்
இசையினுலிங்கிருந்தனரன்றியூன்
தசையுடம்பொடுதங்கினரில்லையால்
விசயவுள்ளம்விளங்கிடக்கேட்டியால்.

அசைவில் - சலநமில்லாத, ஓதினர்—சொல்லப்பட்டவர், இசையினுல்—புகழோடு, விசய - வெற்றியுடையோனே. (கரு)

எண்ணிலாவைராகமெய்துமென்
றண்ணல்வாட்கையரசரையோதினன்
விண்ணினோரும்விரும்புமமுதமாம்
கண்ணன்மாக்கதையேகளிசெய்யுமே.

வைராகம் - வைராக்கியம், எய்தும் - உண்டாகும், அண்ணல் - பெருமை, விண்ணினோரும் - விண்ணுலகத்தாரும், களிசெய்யும் - மகிழ்ச்சியுண்டாக்கும். (கசு)

தீயவெங்கலிசேரும்வ்வூழியின்
தூயனெங்குந்துலங்குவன்சொல்லுநர்
நேயனற்புதனுயநெடியவன்
மாயன்கீர்த்தனத்தால்வருமுத்தியே.

தூயன் - பரிசுத்தன், துலங்குவன் - விளங்குவன், சொல்லுநர் - புகழ்வோர். ()

கோவினுலுயர்குணங்களினுலும்இப்
பூவினுலும்பொருபலவாறுஞ்சேர்
தாவிலாப்பழிசாற்றிடிற்றீர்ந்துபோம்
நாவினுலுரையார்நரகெய்துவார்

கோவினுலும் - அரசனுலும், இப்பூவினுலும் - இவ்வுலகத்தாலும், பொரு—ப்பார் செய்கிற, பலவாறும் - பலவானவற்றாலும். (கஅ)

தானத்தாலுந்தவங்களினுலுநன்
மோனத்தாலுமுனமகலாப்பழி
ஞானத்தார்தொழுதேத்துநவையிலா
வானத்தான்பெயர்வாழ்த்திடத்தீருமே

நவையிலா - குற்றமில்லாத, வானத்தான் - பரமாகாயத்தையுடையவன், ஞானத்தார் — ஞானியர். (கக)

கற்கியவதாரமுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—சசஎ.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

மூன்றாவது

## பிரளய முரைத்த வத்தியாயம்.



எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

முடிபுனையாசபிரளயமுரைக்கின்மொழிசருநித்தியமெனவும்
நெடுநிலமுதலமூவுலகிறப்புநிலவுநைமித்திகமெனவும்
படிமுதலுலகம்படைத்தவனெழியப்படர்வுறுபாகதமெனவும்
அடலுறுமாத்தியந்திகமெனவுமறைதருநால்வகைததாமே

படிமுதல் - பூமிமுதல், பாகதம் - ப்ராக்ருதம் (க)

நேரலர்பரவுநெடுமுடியரசநித்தியப்பிரளயமென்றல்
பாருறை மாந்தர்முதற்சராசரங்கள்பார்த்தறியாவகைப்பெருக்காம்
நீருறுதீயிற்கணங்கணங்கழியுநின்றிறந்திறந்துவேறாதல்
சீருறுமயன்மற்றுறங்குழிமுதலாச்சேர்பிரளயங்களைத்தெரிப்பாம்.

நேரலர் - பகைவர், பரவும் - துதிக்கிற, கணம் - க்ஷணம். (உ)

ஆயிரமுறைநான்கூழிவந்தடையினருமறையந்தணன்றனக்கு
மேயவோர்பகலப்பகலுளேழிரண்டாய்விளம்புறுமனுக்களுங்கழிவார்
ஏயவப்பகலினீற்றினிலரசவிப்புவிமுதலமூன்றுலகும்
தூயநீர்ப்பெருக்குற்றிறந்திடுமந்நாள்சொன்மகலோகமுற்றுறைவார்.

அருமறையந்தணன் - பிரமன். (ங)

அவ்வுலககன்றுபுகழ்சனலோகத்தடைகுவர்பிரளயப்பேரே
வெவ்வியநைமித்திகமெனவிதிப்பார்விளம்புமப்பகலளவிரவாய்த்
திவ்வியதினத்தாலாண்டுநூறிறக்கிற்றிகழயன்போம்பிரளயப்பேர்
பவ்வவெண்டிரைப்பார்பரிததவேலரசபகர்சருபாகதமாமே.

இறக்கின் - கழிந்தால், அயன் - பிரமன், போம் - இறப்பன், பவ்வம் - நுரை, வெண்டிரை - வெள்ளியஅலை, பரித்த - தாங்கின. (ச)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

கார்மழைபருவநூறுகரந்திடக்கதிர்வெய்யோனல்
பார்புனல்சிறிதுமின்றிப்பசையறப்பிளக்குஞ்சேடன்
சீர்தருமுகத்தின்றீயாற்சேர்பொருள்யாவுந்தீய
ஓர்தருமண்டந்தானுமுலந்துநீறாகுமன்றே.

கார்மழை - கரியமேகம், பருவநூறு - நூறுவருடம், கரந்திட - மழைபெய்யாதொளிக்க, அண்டந்தானும்-விண்ணுலகும், உலந்து—அழிந்து, நீறாகும்-பொடியாகும்.

விடந்திகழ்தீயினண்டம்வேமியல்விளம்பின்வெய்ய
கொடுந்தழல்பட்டுநீறாக்கோமயபிண்டம்போலாம்
அடைந்திடும்பருவநூறுங்கதிர்நெடுங்காற்றக்காற்றால்
உடைந்துமுன்னீறாகண்டமுற்றிடுமெனுக்களாயே.

தீயின் - தீயினால், அண்டம் - உலகம், வேமியல் - வேகின்றவிதம், கோமயபிண்டம் - சாணியுண்டை, நீறுகண்டம் - பொடியானவுலகம். (கூ)

மன்னுமக்காலினாலுவண்ணமாமங்குலீண்டித்
துன்னுதோசச்சிற்றுறைசொரிதரவெங்குநீராய்
முன்னுறுமணமுன்போகமுதுநிலம்புனலாமாயும்
அன்னநீர்ச்சுவைமுன்போகவழல்புகுந்தடங்குமன்றே.

அக்காலின் - அந்தக்காற்றினால், நாறுவண்ணம் - பலநிறம், மங்குல் - மேகம், ஈண்டி - நெருங்கி, தோசசின் - தோசச்சுப்போல, மணம் - கந்தம். (எ)

ஆரழலுருமுன்போக நிலனிலடங்குமக்கால்
சேருறுமூறுபோகச்சேணுறுஞ்சிறந்தசேணும்
பேருறுமொலிமுன்போகப்பிறங்ககங்காரத்தொன்றும்
ஏருறுகுணங்கண்மூன்றுற்றியையகங்காரமொன்றும்.

அநிலனில் - வாயுவில், ஊறு - பரிசம், சேணை—ஆகாயம், அகங்காரத்து—அகங்கார தத்துவத்தில், ஒன்றும் - அடங்கும். (அ)

மருவுறுமகானினொன்றும்வழங்கியமகானும்வந்தாங்
குரைதருபகுதியுட்புக்கொளியுமாற்பகுதிதானும்
புரையறுபுருடனோடுபோதமாயநாதியாகிப்
பெருகொளியாகிவைகும்பிரமத்தினடங்குமன்றே

மகானில் - மஹத்தத்துவத்தில், பகுதி - மூலப்பிரகிருதி, புருடன் - ஆன்மா, பிரமத்தில் - பிரமப்பொருளில் (கூ)

இன்னணந்தோற்றமாறேயியைந்தனயாவும்போகத்
துன்னியபிரளயப்பேர்சொல்பிராகிருதமாகும்
மன்னவபிரமமொன்றேவயங்குநித்தியமாங்காண்கின்
பின்னயிவாதஞானப்பிரளயங்கூறுவாமால்.

இன்னணம் - இவ்வாறு, தோற்றமாறே - உண்டாகும்விதமாகவே, போக—அழிந்தொடுங்க, வயங்கும் - விளங்கும். (கய)

சேலமாய்ச்சேலத்துற்றசித்திரம்பலவானூல்போல்
ஞாலமேமுதலவாகிநவையறுமுயிர்களாகிக்
காலமாய்க்கருவியாகிக்காரணமாகியொன்றாய்
மூலமாயழிவொன்றின்றிமுதன்மையாம்பிரமமென்றே

சேலம் - ஆடை, ஞாலம் - உலகம், நவை - குற்றம். (கக)

விண்ணெழுபரிதிதன்னால்விளைந்தனமழைவெய்யோனை
மண்ணிடைநின்றுபார்க்கும்வயங்குவெஞ்சுடர்க்கூறாய
கண்ணுறன்மறைத்தல்போலக்கருதரும்பொருளினானே
நண்ணகங்காரந்தேருநற்பொருண்மறைக்குமாதோ.

பரிதி - சூரியன், மழை - மேகம், வெய்யோனை - சூரியனை, கண்ணுறல்—காண்டல், கருதரும்பொருள் - பிரமம், நற்பொருள் - பிரமம். (கஉ)

கருமபுயனீங்கவெயயோன்கண்ணிடைத்தனுதகூறுய்
அரும்பொளிபொருந்தவொன்றுயவிருமவ்வாறுபோலப்
பெரும்பொருளகந்தைநீங்கிற்பேசுதன்கூறுய்த்தன்பால்
திரும்புயிர்பிறிந்தொன்றுகத்திகழ்ந்திடுந்தேரின்மாதோ.

கரும்புயல - கரியமேகம், அரும்பொளி - தோற்றுகின்றவொளி, அவிரும் – பிரகாசிக்கும், பெரும்பொருள் - பிரமம், திரும்புஉயிர்பிறிந்து–மோகத்தினின்றும்பிரிந்தவுயிர், திகழ்ந்திடும் - விளங்கும், ஒன்றுக - பிரமமாக (கக)

அறிந்திடுஞானவாளாலகந்தையாம்வனத்தைவீட்டி
நிறைந்திடும்பிரமமாகிநித்தியமாவர்வேறுய்ப்
பிறந்திடுமுயிருங்காணுர்பின்னமாய்ப்பிறிந்துநீங்கி
இறந்திடும்பொருளுங்காணுரேகமென்றிருப்பரன்றே.

வனத்தை - காட்டை, வீட்டி - வெட்டி, நித்தியமாவர் - பிரமப்பொருளாவர்.

மணிபுறுதொடையலொன்றேநாகமாய்விளைந்தவாபோல்
தடையுறுமாயைநீங்கிதற்பரமாவாராய்ந்தோர்
விடலருஞானயோகவித்தகவிவேகதறிவ்வா
றடைதருபிரளயப்பொருத்தியந்திகமென்றுமே.

தொடையல் - பூமாலை, நாகம் - பாம்பு, தற்பரம் - பிரமம். (கரு)

இன்னதொன்னூலமாயனிலங்கவதாரமாகி
மன்னுநாராயணப்பேரமருவியமுனிவன்கூற
நன்னரம்புளர்ந்துபாடுநாரதமுனிவன்றேர்ந்து
முன்னமெந்தாதைகேட்பமுழுவதுந்தெளித்தான்மன்னே.

நாராயணப்பேர்மருவியமுனிவன்–நாராயணமுனிவன், எந்தாதை–எமதுதந்தை.

தாதையென்றுரைக்கும்வேதத்தலைவனுள்ளுவப்பமேவி
ஓதினனெமககவ்வண்ணமுறைதந்தனனினக்கென்றோது
காதையைச்சவுனகாதிகருதருந்தவத்தோர்கேட்பச்
சூதனுநைமிசப்பேர்சொல்வனத்திருந்துகூறும்.

தாதையென்றுரைக்கும்வேதத்தலைவன்–வேதவியாசமுனிவன், உள்உவப்ப–மனமகிழ.

பிரளய முரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—சஈச.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

நான்காவது

## பரீட்சித்து வீடுபெற்றவத்தியாயம்



கலிவிருத்தம்.

பிறத்தலுமிறத்தலும்பேசிஞக்கைகள்
உறத்தகுமுண்மையாயுற்றநல்லுயிர்க்
கறத்துறையரசவக்குணங்களின்மையால்
இறத்தன்மற்றுனக்கில்லையென்றுவைகுவாய்

ஆக்கைகள் - சரீரங்கள், அறத்துறை - அறநெறி, வைகுவாய்—இருக்கக்கடவை.

அல்லதுமைந்தர்களாயும்வைகினை
சொல்லுமிவ்வுலகினிற்றுலங்குதாதையர்
நல்லெழிற்புதல்வராய்நயந்துதிப்பரென்
றெல்லையில்சுருதிகளியம்புகின்றவால்.

வைகினை - இருந்தாய், துலங்கு - விளங்குகிற, தாதையர் - தந்தையர், நயந்து—விரும்பி, உதிப்பர் - பிறப்பார். (உ)

தாதையர்மைந்தர்களாகிச்சார்வதிங்
கோதுபீசாங்குரமுற்றதன்மையாம்
பேதமாமரந்தொறும்பிறங்குதீயெனப்
பூதமாமுடன்றொறும்பொருந்துஞ்சீவனே.

ஓது - சொல்லப்பட்ட, பீஜாங்குரமுற்றதன்மை - பீஜாங்குரநியாயம்க்கநூலிற்காண்க. (ங)

உறங்குழிக்கனவிடையொருவன்றன்றலை
கறங்கெனச்சுழல்பவர்கையிற்கொய்தெழ
மறநகிளர்வேலவமரணங்காண்கையால்
இறந்திடுமாக்கைநீயென்றுமல்லையே.

உறங்குழி - தூங்கும்போது, கறங்கென - காற்றாடிபோல (ச)

கடத்துறைவானுமக்கடமுடைக்கின்வான்
இடத்தொடுமொன்றுபட்டிருக்குமாறுபோல்
சடத்துறையுயிருமச்சடந்தணக்கினீங
கடக்கரும்பரத்திஞென்றாகிவைகுமே.

கடத்துறைவானும் - கடாகாசமும், வான் இடத்தொடும் - மஹாகாசத்தோடும், சடத்துறை - உடம்பிலிருக்கிற, தணக்கில் - நீங்கிஞல், பரத்தில் - பிரமத்தில். (ரு)

மாயையான்மனமெழுமனத்திஞலுடல்
நேயமோடடைதருநிகழ்ந்தவாக்கையால்
மேயசீவனுக்குமோர்வினைக்கட்டுண்டெனத்
தூயநூலுணர்பவர்சொல்லுவாரரோ.

மேய - பொருந்திய, வினைக்கட்டு - வினைப்பிணிப்பு, தூயநூலுணர்பவர்—ஞானசாத்திரமறிபவர், (ஞானியர்). (சு)

சொற்றருதயிலநூன்றொலையுமட்டுமே
விற்றருதீபமென்பெயர்விளங்குமால்
பெற்றிடுமுக்குணம்பிறங்குமவ்வள
வுற்றிடுமாக்கையென்றுரைவழக்கமே.

தைலநூல்தொலையுமட்டுமே—எண்ணெயும்திரியும்முடியும்வரைக்குமே, வில்தரு—ஒளியைக்கொடுக்கிற, பிறங்குமவ்வளவு - விளங்குகிறவரைக்கும். (எ)

வினைத்திறம்பொருந்தியமெய்யைமெய்யென
நினைத்திடலன்றிநீங்கலாநிலை
நுனித்துணரறிவிடைநுவலும்பொன்றென
மனத்தைவைத்துறைகுதிமன்னர்மன்னனே

மெய்யை - உடம்பை; நினைத்திடல் - நினைக்காதே, நுவலும்—சொல்லப்பட்ட.

யாவரும்நரக்கிலரெடுத்தவாக்கையே
சாவதுநினையளிதவ்வைதாமரைப்
பூவிரிகருமுகில்போலுமாதவன்
சேவடிபடர்தியாற்றெளிந்துகேள்வியோய

கருமுகில்போலுமாதவன் - கண்ணபிரான். (௮)

தீக்கனல்கட்செவிதிருகுஞ்சீற்றமோ
டாக்கையிற்கதுவுமற்றதுநினைத்திடேல்
போக்கறுதனிமுதல்பூவைவண்ணனை
நீக்கமொன்றின்றிநினைதல்செய்தியால்

கட்செவி - பாம்பு, சீற்றம் - கோபம், கதுவும்—பற்றும், போக்குஅறு—அழிவற்ற, தனிமுதல் - ஒப்பற்றமுதற்பொருளாகிய, பூவைவண்ணனை - கண்ணபிரானை. (௧0)

அரவுவாய்பொழிந்தநஞ்சாக்கைசேரினென்
ஒருதனிமுதல்வனையுளத்தினுள்ளுணர்ந்
திருவிசும்பேக்கறுமீறிலின்பமாம்
பெரியதோரோதம்பெறுதியென்றனன்.

அரவு - பாம்பு, ஒருதனிமுதல்வனை - கண்ணபிரானை, இருவிசும்பு—பெரியவிண்ணுலகத்தார், ஏக்கற - ஏமாக்க, ஈறிலின்பமாம்—முடிவற்றவின்பமாகிய, பெரியதோர் ஓதம் - பெரியதாகிய ஒப்பற்றபிரமக்கடல். (௧௧)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மண்ணியமணியிற்றோன்றுமரிதவன்குணங்களெல்லாம்
புண்ணியம்போலத்தோன்றும்புங்கவனுரைப்பக்கேட்டுக்
கண்ணுறும்பிறவிவேலைகடந்தனனுய்யப்பெற்ற
அண்ணல்பேரின்பவேலையலையிடைக்குளித்தான்மன்றே.

மண்ணிய-கழுவின, (சாணைபிடித்த) மணியின் - ரத்நம்போல, மாதவன்-கண்ண பிரான், புண்ணியம்போலத்தோன்றம்புங்கவன்-சுகமுனிவன். பிறவிவேலை - பிறவிக் கடல், பேரின்பவேலையலையிடை-பேராநந்தக்கடலினலையில், குளித்தான்-மூழ்கினன்

விழிபொழிகருணை நன்னுல்வெவ்விய பிறவிமாசு
கழுவினைநின்னையிங்குக்காட்டியதவமற்றென்றே
முழுதுணர்முனிவவென்றுமுருகவிழ்கமலப்பொற்றாள்
தொழுதனன்சென்னிசூடச்சுகனகன்றேகினுனேல்.

பிறவிமாசு-பிறவிக்குற்றம், என்று - என்று, முருகு-தேன், கமலசனை, சென்னி-தலை.

என்றுநல்லுணர்வுவாய்ந்தவிருந்தவமுனிவர்போற்று
மன்றலந்துளவுருமரகதக்குன்றம்போல
நின்றவன்கமலபாதநினைந்துளமுருகிர்ந்தசூதன்
நன்றெடுத்துரைத்துமீட்டுநடந்தனன்விற்றினுமேனை.

மரகதக்குன்றம்போலநின்றவன் - கண்ணபிரான், நவிற்றினன்-சொன்னன். ()

துறந்தநன்முனிவர்சூழச்சுகமுனிபோயபின்னர்
சிறந்தநன்மனத்தையொன்றாக்குகழுமால்கழலிற்சேர்த்தி
அறந்தருவேந்தர்வேந்தனரியசோர்காட்டமேபோல்
நிறந்தலையெறிநீர்க்கங்கைகரைமேயிருந்திட்டானேல்.

மால் - திருமால், கழல் - திருவடி, காட்டம் - காஷ்டம் (மயானம்) (௧௫)

கலிநிறைதன்மையாளுங்கலந்ததண்ணளியினனும்
அலர்கதிர்மதியிற்றோற்றுமரசினைத்தீண்டநாடி
மலர்தலையுலகங்காணவழங்குதக்ககனென்றோதும்
கொலைமலிநச்சுநாகங்கொதித்தழுன்றெய்திற்றன்றே.

தண்ணளி - கிருபை, அலர்கதிர் - விரிந்தவொளியையுடைய, அரசு - அரசனை, (பரிக்ஷித்து) தீண்டநாடி - தொடங்கினைத்து, மலர்தலை - விரிந்தஇடத்தையுடைய, தக்ககன் - தக்ஷகன், நச்சுநாகம்-விஷமுள்ளபாம்பு, கொதித்தழுன்று-மிகவுங்கோவித்து

கூற்றுறழ்தக்ககன்வெற்கொற்றவன்றனைத்தீண்டின்
மாற்றுவனின்னெனயென்றோர்மறையவனெழுந்துசெல்ல
ஆற்றிடையவனைக்கண்டவரவும்யாங்கடைதியென்னச்
சாற்றருமறைவலோனுந்தன்னிலைகிளத்தல்செய்தான்.

கூற்றுஉறழ் - யமனைநிகர்த்த, மறையவன் - வேதியன், ஆற்றிடை - வழியில், கிளத்தல்செய்தான் - சொல்லினன் (௧௭)

கேட்டலும்வெகுளிநாகங்கிளந்தவவ்வாறுநஞ்சம்
மீட்டிடவல்லையேலிவ்விடத்தினைமீட்டியென்ன
மோட்டுநீண்மரமொன்றுறுகுமுதலொடுங்கரிந்துசாயச்
சூட்டழனஞ்சுபேழ்வாய்சொரிந்திடத்தீண்டிற்றன்றே.

மீட்டிடவல்லையேல் - திருப்பவல்லையாயின், மீட்டி - திருப்பக்கடவை, முதலொடும் - அடியோடே, சூட்டு - உச்சிக்கொண்டை. (௧௮)

தேமழைபொழியுந்தண்ணென்செழுந்தருநீழல்வானோர்
பூமழைபொழியவீடுபொருந்தினன்புதல்வனென்னும்
மாமழைபொழியுமும்மைமதக்களிறனையான்பைம்பொன்
ஆமழைபொழியுஞ்செங்கையரசுசெய்திறஞ்சொல்வாமால்

தேமழைபொழியும் - மலர்மழையைச்சொரிகிற, வானோர் - தேவர்கள், வீடுபொருந்தினன் - வீடடைந்தான், புதல்வனென்றுமாமழைபொழியுமும்மைமதக்களிறனையான் - ஜநமேஜயன். (உ௫)

பரிட்சித்துவீடுபெற்ற வத்தியாயம்-முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௬அ௬௯.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

ஐ ந் த ா வ து

சர்ப்பவேள்வி யுரைத்த வத்தியாயம்.

கலிநிலைத்துறை.

விடமீட்பவந்தமறையோன்றனைமீட்டுவெம்பும்
அடுசீற்றநாகமரசன்றனைக்கீண்டமொறு
வடிவாட்டடக்கைச்சனமேசயன்கேட்டுவையம்
கடைநாட்கனற்றுங்கனலாமெனக்காய்ந்தழன்றான்.

விடமீட்பவந்த - விஷத்தைத்திருப்பவந்த, கடைநாள் - ஊழிகாலத்தில், கனற்றும் - எரிக்கிற, கனலாமென - ஊழிகாலநெருப்புப்போல. (க)

மண்ணுந்திசையுந்தொழுதேத்தியமாலைசேர்ந்து
விண்ணுந்திகழுஞ்சுடர்மாமதிபோல்விளங்கும்
தண்ணங்கவிகைச்சனமேசயன்பாந்தள்வெந்தீ
உண்ணும்படிமற்றொருவேள்வியுஞற்றினனே.

மாலை - பூமாலை, கவிகை - குடை, பாந்தள் - பாம்பு, உஞற்றினன்—செய்தான்.

மைவ்வேலைஞாலத்துயரந்தணர்வந்துசூழத்
தெவ்வோடவென்றதிறன்மன்னவனுற்றுகின்ற
அவ்வேள்விவெய்யதழலின்றலையாலமூறும்
வெவ்வாயரவம்பலவந்தனவீழ்ந்தெரிந்த.

மைவேலை - கருங்கடல், தெவ்வோட - பகைவரோட, திறல்—வலி, ஆற்றுகின்ற-செய்கிற, ஆலம் - விஷம். (௩)

எரிகின்றகாலத்தெரிவீழ்ந்திடவின்னுமென்னோ
வருகின்றதில்லைவடிநாண்மதுவாய்நெகிழ்ந்து

சொரிகின்றமன்றற்றொடைமாலைமிடைந்ததிண்டோள்
அரசன்றனைத்தீண்டடுசீற்றவரவமென்றான்.

எரி - யாகாக்கினி, வடி - வடித்த, நாள் - புதிய, மது - தேன், மன்றல் - வாசனை, அடுசீற்றம் - கொல்லுதற்குரியகோபம் (ச)

புயலுற்றசெங்கைப்புகலோனுரைகேட்டபோதும்
செயலுற்றவேள்விமறையந்தணர்மேற்சொன்ன
வெயிலுற்றகூர்வேல்விறல்வேந்தனைநீங்கிநாகம்
வயிரப்படையோற்புகல்புக்கதன்னவென்றார்

புயல் - மேகத்தின்றன்மை, (கொடைக்குணம்) நாகம் - தக்ஷகன், வயிரப்படையோன் - இந்திரன், புகல்புக்கது - சரணடைந்தது (ரு)

யாழ்கொன்றதீஞ்சொலரம்பைகையராடலின்பந்
சூழ்கின்றபொன்னகர்தன்னைநின்றமர்க்காரசியுல்
வாழ்கின்றகொற்றத்திறையோனொடும்வருநாகம்
வீழ்கின்றதிவ்வேள்விசொன்னலோடெனவுரைத்தான்

யாழ்கொன்ற - யாழோசையையென்ற, மகசாலையில்வாழ்கின்றகொற்றத்திறையோனொடும் - இந்திரனொடும், எவனோ - யாகாகாரணம். (சு)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

வைம்முகமணிந்தவொள்வாள்வச்சிரப்படையிறையும்
பைம்முகமணிந்தத்திப்பவிறலைப்பாந்தள்வேந்தும்
மெய்ம்முகங்கரிந்தியவீழ்கமற்றின்னேயென்று
நெய்ம்முகந்தந்தனனர்நீனெரிமுகத்திற்பெய்தநர்.

வைம்முகமணிந்தவொள்வாள்வச்சிரப்படையிறைவன் - இந்திரன், பைம்முகமணிந்தத்திப்பவிறலைப்பார்தள்வேர்து - தக்ஷகன், இன்னே - இப்பொழுதே, எரிமுகத்தில் - யாகாக்கினியில், பெய்தார் - சொரிந்தார்கள் (எ)

தண்ணறுந்தருவினீழறனியரசிருக்கும்வானத்
தண்ணலுமண்ணனன்பாலடைந்தவாளரவின்வேந்தும்
கண்ணகல்விசும்பினின்றங்கவிழ்ந்தாவுற்றகாலை
விண்ணவர்குரவன்வல்லைமேயினன்விலக்கினானல்.

தண்ணறுந்தருவினீழறனியரசிருக்கும்வானத்தண்ணல் - இந்திரன், அரவின்வேந்து - தக்ஷகன், கண்அகல் - இடமகன்ற, விண்ணவர்குரவன் - பிருகற்பதி. (அ)

முன்னமுதுண்டசாலம்மொழிதரும்பருவாய்நாகம்
அன்னதுதன்னையெங்ஙனாழல்வீழ்த்திமாய்த்தல்
மன்னவர்மன்னமுன்செய்வல்வினைவந்துநல்கும்
இன்னலுமூப்புநோயுமிறப்பதற்கேதுவாமே

இன்னல் - துன்பம், நோய் - வியாதி. (கூ)

அவரவர்வினைகளேமற்றவரவர்க்கழிவுசெய்யும்
கவர்படுநாவினாகக்கணங்களைக்கனலின்மாய்த்தல்

உவர்படுவேலைஞாலத்தற்றோரறன்கொலம்ம
எவரிவைதுணிந்துசெய்வாரிறைவவென்றியம்பினனே,

கவர்படு - பிளவுபட்ட, நாகக்கணங்களை - பாம்புக்கூட்டங்களை, கனலின்-நெருப்பினால், மாய்த்தல் . கொல்லுதல், உவர்படுவேலை - உவர்ச்சுவையுள்ளகடல்சூழ்ந்த, ஞாலத்து - உலகத்தில், அறன்கொல் - தருமமோ. (க0)

ஆனதன்வேள்விநீக்கியடையலர்பரவும்வைவேற்
பூநறுந்தெரியன்மன்னன்பூசனைபுரிந்துபோற்ற
வானவர்மகுடகோடிமணிததழும்பிருந்தபொற்றாள்
ஞானநன்மறைவலாளனன்றுவந்தேகினனால்

அடையலர் - பகைவர், பரவும் — துதிக்கிற, நறுந்தெரியல் — மணமுள்ளமலர்மாலை, வானவர்மகுடகோடிமணித்தழும்பிருந்தபொற்றாள் ஞானநன்மறைவலாளன்—ப்ருஹஸ்பதி (கக)

அழலும்வாளரசர்க்கெல்லாமுற்கதிர்ப்பரிதிபோன்றும்
பொழிகதிர்மணியிற்செய்தபூங்கழலிலங்குநோன்றாள்
நிழலுறுமன்னர்க்கெல்லாநிழன்மதிபோன்றும்வையம்
முழுவதும்புரத்தல்செய்தான்முத்தவெண்கவிகைவேந்தே.

பரிதி - சூரியன், நோன்றாள் - வலியதாள், அழலும் - கோவிக்கிற (பகைக்கிற) நிழல்மதி - குளிர்ச்சியையுடையசந்திரன், புரத்தல்செய்தான் - காத்தான். (கஉ)

ஆழியானன்பர்நாளும்யாமெமதென்றுபாரார்
எழொடேழுலகமாதியெவைகளுமொன்றாய்நோக்கி
வாழிமால்பாதஞ்சேர்வாரென்றலுமகிழ்ச்சிகூர்ந்து
சூழுமாதவரெல்லோருஞ்சூதனைப்புகழ்ந்துசொல்வார்

ஆழியானன்பர் - விஷ்ணுபக்தர், ஒன்றாய்நோக்கி - சமமாகப்பார்த்து. (கந)

வேதமோர்நான்கதாகமெய்த்தவவியாதன்முன்னர்
ஓதினன்முனிவர்க்கென்னவுரைத்தனைசுருக்கியாங்குக்
கோதிலாச்சுருதிநூலுங்குலவியபுராணநூலும்
சூதமாமுனிபரக்கச்சொல்கெனச்சோறலுற்றான்

கோதிலா - குற்றமில்லாத, பரக்கச்சொல்கென - விரிவாகச்சொல்லுகவென்று கேட்க, சோறலுற்றான் - சொல்லத்தொடங்கினன். (கச)

சர்ப்பவேள்வியுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—ருOரு.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

———

## ஆறுவது

## வேதநான்[illegible] வகுத்த வத்தியாயம்.



தண்ணறுங்கமலத்துற்றசதுமுகனிதயமென்னும்
விண்ணிடையெழுந்தநாதம்விளங்கியபிரணவப்பேர்
நண்ணிமுன்றுறந்துளோருநாடினர்மொழியினன்றோர்
எண்ணறும்பரமானந்தமெய்துதற்கேதுவாமால்

தண்ணறுங்கமலத்துற்றசதுமுகன் - பிரமன், நாதம் - ஒலி, துறந்துளோரும்— துறவிகளும், நாடினர் - நாடி. (க)

மந்திரமறைகளாதிமறுத்தபுநூல்கட்கெல்லாம்
முந்துறுதன்மைத்தாகிமுதன்மையாய்க்குணமேனோர்மூன்றும்
தந்துறுமகாரநற்சீர்சார்ந்துறையுகாரத்தோடு
நந்தலின்மகாரமென்னநவிற்றமூன்றெழுத்தின்வைகும்.

மறுத்தபு - குற்றத்தைநீக்குகிற, அகாரம் - அகாரம், உகாரம்—உகாரம், மகாரம்-மகாரம், நவிற்று - சொல்லப்பட்ட (உ)

மூன்றெனவெழுத்தினுற்றமொழிப்பிரணவத்தினின்றும்
தோன்றினவுயிர்மெய்யென்னச்சொல்லியவெழுத்தின்கூட்டம்
ஆன்றவவ்வெழுத்தின்மேலயன்முகநான்கினின்றும்
என்றிடுமறைகணான்காயெய்திடப்பயந்தான்மன்னே.

ஆன்ற - அகன்ற அயன் - பிரமன், பயந்தான் - கொடுத்தான். (ங)

ஆங்குவந்துதித்தவேதமனைத்தையுமலரின்மேலான்
நீங்கறுபுதல்வரோதச்செப்பினனவருந்தத்தம்
ஓங்கெழிற்புதல்வர்தங்கட்குரைத்தனரின்னவாறே
வாங்குதெண்டிரைசூழ்பார்மேல்வயங்கினபெரிதுமாதோ.

மலரின்மேலான் - பிரமன், புதல்வர் - புத்திரா - (ப்ராஜாபதிகள்), வாங்குதெண்டிரை - கடல், வயங்கின - விளங்கின (ச)

கலிவருங்காலத்தாயுள்கருதிடிற்குறையுமென்று
நிலைபெறவேண்டிமூன்றாய்நிலவியவுகங்கடோறும்
அலருறையயன்முன்கூறுமாரணமலைகடம்மை
மலைவறச்சுருக்கிமேலோர்வகைபெறவழங்கினரால்.

நிலவிய - நிலைபெற்ற, அலருறையயன் - பிரமன். (ரு)

மழகளிறன்னவிந்தமனுவுறைகாலமென்னச்
சுழல்வுறுமிருபத்தேழாந்துவாபரயுகத்தின்மேவும்
முழுமறைவகுத்தல்செய்தான்முற்றுணர்வசிட்டன்சேயாம்
பழுதறுசத்திபெற்றபராசரமுனிவன்மாதோ.

மழகளிறன்ன - யானைக்கன்றைநிகர்த்த, சேய் - புதல்வன். (சு)

வயங்கெழுபுகழ் சர்வைவச்சுதனெனுமனுவேந்தற்று
நயங்கெழுமூழிநான்காநடந்தனாலேழிலகு
முயங்கியகலிநான்கேழாமுறையவெங்கலியின்காலம்
துயங்குமிக்கலிக்குமுன்போந்துவாபரந்தன்னின்மாதோ.

வயம்கெழு—வெற்றிபொருந்திய, முயங்கிய—பொருந்திய, துயங்கும்—சோர்தற்குரிய.

பராசரமுனிவனல்கும்பண்ணவன்வியாதன்றேரின்
அராவணைதுயிலுமம்மானருங்கலையாகுமன்னோன்
புராதனநான்குவேதப்பொருப்பிலொவ்வொருகைம்மொண்டு
தராதலந்தனளிறன்காச்சாற்றினன்வகுத்துமாதோ.

நல்கும் - பெற்ற, அராவணைதுயிலுமம்மான்—திருமால், கலை—அம்சம், மொண்டு—முகந்து. (அ)

இருந்தவமுனிவர்காளிங்கினிவருமூன்றூழி
பொருந்தினன்வேதநன்னூல்புகாறப்பிறிப்பான்பூமேல்
திருந்தியபுகழ்த்துரோணன்சேயெனவுதித்துநாளும்
அருந்தவம்புரிந்துமேவுமச்சுவத்தாமனன்றே.

ஊழி - யுகம், புகாற - குற்றமற, பூமேல் - பூமியின்மீது, சேயெனவுதித்து—புதல்வனாகப்பிறந்து. (௯)

திருக்தகுவேத நான்காச்செப்பியவியாதன்முன்னும்
இருக்கெனுமறையைபயன்பாலிசைக்தனன்பயிலற்கன்னோன்
தரித்தனன்பழுதின்றாகிசார்ந்தவர்க்குரைப்பவந்நூல்
பரித்தமாணக்கராலேபரம்பரைவிளங்கிற்றன்றே

பயிலற்கு - பயிலமுனிவனுக்கு, மாணக்கர் - சீடர் (௧0)

மன்னியவிரண்டாம்வேதம்வருத்தவம்முனிவியாதன்
உன்னருந்தவஞ்செய்வைசம்பாயனற்குரைப்பக்கற்றுங்
கன்னவன்றானுமன்பால்யாஞ்ஞவற்கியனையாதிப்
பன்னுமாணக்கரோதப்பயிற்றுவித்துறையுநாளில்.

மன்னிய - நிலைபெற்ற, உன்னரும் - நினைத்தற்கரிய, பயிற்றுவித்து—கற்பித்து

விடலருவினையின்கட்டால்வெவ்வியபிரமகத்தி
அடைதலின்மறைநூல்கற்றயாஞ்ஞவற்கிகனையாதிப்
புடையுறும்வழிபாடாற்றிப்பொருந்துமாணக்கர்தம்மைத்
தொடருமிப்பாவநீவிர்தொலைததிடுந்தவத்தினென்றான்.

வினையின்கட்டு - கர்மபந்தம், ஆற்றி - செய்து, தவத்தின் - தவத்தினால். (௧௨)

குரவனுங்கிசைத்தல்கேட்டகோதின்மாணக்கர்தம்முள்
அரியநற்றவத்தின்மிக்கயாஞ்ஞவற்கியனென்பேர்சேர்ந்
துரைசெய்மாணக்கன்செய்தாலன்றியேயேனையோரால்
புரியுமிப்பாவம்போகாதென்றலுங்குரவன்சொல்வான்.

குரவன் - ஆசாரியன், இசைத்தல் - சொல்லுதல், புரியும் - செய்த. (௧௩

சிந்தையுண்மகிழ்ந்தியானேதீர்க்குவனேனையோரால்
வந்தவிப்பாவம்போக்கும்வல்லமையில்லையென்று
நிந்தனைசெயநின்றுயானிகழ்த்திடவுணர்ந்தவேதம்
தந்திவணுழிதியென்றான்றடாதினிதுமிழ்தல்செய்தான்.

தடாது - தடுக்காமல், உமிழ்தல்செய்தான் - உமிழ்ந்தான். (கச)

அன்னவனுமிழ்ந்தவேதமாங்குநின்றிலங்கநோக்கிப்
பன்னுதித்திரியென்றோதும்பறவையினுருவமெய்தி
மன்னியமுனிவர்சில்லோர்மருவினாருந்துமாற்றுல்
பின்னருமறைநூல்பெற்றபேர்தயித்திரியமாமே.

இலங்க - விளங்க, தித்திரி - ஓர்பறவை (கடு)

அருமறையுமிழ்ந்துபோயவருந்தவமுனிவன்வான்போய்
விரிகதிரெல்லோன்றன்னைவிருப்பொடுவணங்கிவாழ்த்தி
ஒருமறையடியேனோதவுரைத்தியென்றியம்பலோடும்
துரகதவுருவாய்வெய்யோன்சொற்றனன்மறைமற்றன்றே.

வான் - ஆகாயம், எல்லோன் - சூரியன், துரகதவுருவாய் - குதிரைவடிவாகி. ()

கலிநிலைத்துறை.

காசிலம்மறைகண்ணுவன்முதலியோர்கற்றோர்
வாசிநல்லுருவாய்முனம்வெய்யவன்வகுத்துப்
பேசநின்றதாலம்மறையுரித்தெனப்பெற்றோர்
தேசுறும்பெயர்வாசிதனேயராத்திகழ்ந்தார்

காசில் - குற்றமில்லாத, வாசி - குதிரை, வெய்யவன் - சூரியன். (கஎ)

சீர்தழைந்தமூன்றுமறைதிகழ்சுமுனிக்கும்
ஏர்தழைந்தநான்காமறைசுமந்துவென்பவற்கும்
பேர்தழைந்திடும்புராணமென்றுதைக்கும்பெட்பால்
பார்தழைந்துறப்பரம்பரையம்முனிபகர்ந்தான்

சீர் - சிறப்பு, ஏர் - அழகு, தாதை - தந்தை, பெட்பால் - விருப்பத்தோடு, பார்—பூமியிலுள்ளார். (கஅ)

நிகரிலுன்மறைதெரித்தவவ்வியாதன்முன்னிலமேல்
புகலுமொன்பதிற்றிரட்டியாப்பொருந்தியபுராணம்
அகலுந்தத்துவப்பரப்புரைத்திடன்முதலாகப்
பகருமையிருவகையுடைத்ததிவட்பகர்வாம்.

நிகரில் - ஒப்பில்லாத, ஒன்பதிற்றிரட்டி - பதினெட்டு, அகலும் - விசாலித்த, ஐயிருவகை — பத்துவிதம். (கக)

பூதமிந்தியமுதலியபடைப்பினைப்புகறல்
கோதிலாதவித்தின்வழிவித்துறுங்குணம்போல்
பேதமாகியசராசரம்பிறப்பனபேசல்
ஓதுசீவன்மற்றவற்றுக்கிவ்விலெனவுரைத்தல்.

புகறல் - சொல்லுதல், கோதிலாத — குற்றமில்லாத, இவ்வில்லெண—இவையில்லை யென்று, பேதம் - வேற்றுமை. (௨௦)

ஞாலமீதுமாலவதரிததருள்வகைநவிற்றல்
கோலமேவியமனுமுதற்றேவரைக்கூறல்
காலமூன்றுமரசரையிவரெனக்கழறல்
சீலமேவுமம்மன்னவர்சரித்திரந்தெரிதல்.

நவிற்றல் - சொல்லுதல், கோலம் - அழகு, கழறல் - சொல்லுதல், தெரித்தல்—தெரிவித்தல் (௨௧)

ஏயநால்வகைப்பிரளயமியம்புதலெழிலசேர்
மாயையாலருமுயிர்கடிறமொருவகைவழங்கல்
மேயமற்றவற்றிருப்பிடமும்விளங்கறிவாய்த
தூயகாரணமாம்பொருடெரிதரச்சாறல்.

இயம்புதல் - சொல்லுதல், எழில் - அழகு, சாறல் — சொல்லுதல். (௨௨)

சொன்னவையிருவகையிலக்கணத்தொடுதொக்கு
முன்னுகின்றமாபுராணமறப்புராணங்கள்
பன்னுமிவ்வகையிலக்கணத்தாற்பதினெட்டாய்
மன்னுகின்றனமாபுராணப்பெயர்வகுப்பாம்

தொக்கு — கூடி, முன்னுகின்ற—முந்துகின்ற, நினைத்தற்குரிய, பன்னும்—சொல்லப்பட்ட, மன்னுகின்றன - நிலைபெற்றிருக்கின்றன (௨௩)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

பிரமமாம்புராணம்பற்பம்பீடுசால்வைணவஞ்சீர்
மருவுபேர்சைவமென்றேவழங்குநூலிலிங்கநீர்சூழ்
தரைசொல்காருடநல்வைணமைதயங்கியநாரதீயம
பரமபாகவதமண்ணோர்பகர்தருமாக்கிநேயம்.

பீடுசால் - பெருமைமிகுந்த, நீர்—கடல், தயங்கிய - விளங்கிய. (௨௪)

காசறுகாந்தமின்பங்கந்துறுபவுடிகம்பார்
பேசியபுகழ்சேர்கின்றபிரமகைவர்த்தநன்னூல்
மாசறுமார்க்கண்டேயம்வாமநம்வராகமச்சம்
தேசுறுகூர்மஞ்சீலந்திகழ்பிரமாண்டமாமால்

காசறு — குற்றமற்ற, மாசறு - குற்றமற்ற, தேசு — ஒளி. (௨௫)

இத்தகைப்புராணமூவாறியலும்பாகவதம்பற்பம்
பொய்த்தலில்வராகம்வைணவத்தொடுபுகல்காருடம்
மெய்த்தநாரதியமென்பவிளம்புசாத்திகநூலாமால்
கத்தலுமார்க்கண்டேயங்கருதுபௌடிகம்பிரமம்.

இத்தகை — இத்தன்மையவாகிய, சாத்திகம் - சாத்விகம். (௨௬)

பிரமகைவர்த்தமிக்கபிரமாண்டம்வாமனஞ்சீர்
பெரியாசதநூல்காந்தம்பேசுமாக்கினேயஞ்சைவம்

விரியுமச்சியமிலிங்கம்வீறுறுகமடமென்னத்
தெரிதருதாமதப்பேர்சிறந்தநூலென்பர்மேலோர்

கமடம் - கூர்மம். (உஎ)

என்றுணர்சூதன்கூறவியற்றருந்தவத்தோரெல்லாம்
நன்றவன்றுரைத்தவாறநன்றெனவியந்துகாலம்
வென்றுயர்மார்க்கண்டேயன்விழுத்தவம்புரிந்தவண்ணம்
மன்றநீதெரித்தியென்னவதுதனுரைசெய்வானல்.

இயற்றரும் - செய்தற்கரிய, வியந்து - புகழ்ந்து, விழுத்தவம் — மேலானதவத்தை, புரிந்தவண்ணம் — செய்தவிதம், வதுதனுரைசெய்வான் - வகுத்துச்சொல்வானுயினன்: (உஅ)

வேத நான்காகவகுத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் — நிகக.

ஸ்ரீ நிருஷ்ண சகாயம்

ஏழாவது

# மார்க்கண்டேயர் தவமுரைத்த வத்தியாயம்.

கலிவிருத்தம்

மாற்றரும்பெருந்தவமார்க்கண்டேயன்முன்
ஆற்றினனயுதமொடயுதமாண்டிருஞ்
சீற்றமோடடைசெகசிதையுஞ்செங்கண்வெங்
கூற்றையுங்கடந்தனன்கூறுமாயருள்

மாற்றரும் - நீக்குதற்கரிய, ஆற்றினன் - செய்தான், அயுதமொடயுதமாண்டு— இருபதினுயிரவருடம், சீற்றம் - கோபம், கூற்றையும் — யமனையும். (க)

அன்னவன்சீலநல்லழுகுகண்டெழிற்
பொன்னவிர்மதிசடைப்புனிதன்போதினுன்
தன்னுதென்புலத்தினர்சுரருந்தவர்
மன்னுமற்றேனையர்மனம்வியந்தனர்

சீலம் - ஒழுக்கம், பொன்னவிர்மதிச்சடைப்புனிதன் - சிவன், போதினுன்-பிரமன், தென்புலத்தினர் — பிதிரர், சுரர் - தேவர். (உ)

ஆதிமாமனுமுதலறுவர்காலம்போய்
நீதியேழாமனுக்காலநேரிலான்
ஓதுபூம்பத்திரையென்னுமொண்பெயர்ச
சீதநீர்நதிக்கரைசேர்ந்துவைகினுன்

நேரிலான் - நிகரில்லாதவன், சீதநீர் - குளிர்ச்சியாகியநீர்.

உடுத்தவண்டுடுத்தபோதுறையுஞ்சேயிழை
காதலன்சேவடிகருதிநாண்மலர்த்
தாதெறிந்தொழுகுறுதண்ணெனூற்றிடை
மாதவம்புரிந்தனன்மார்க்கண்டேயனே

உடுத்த - சூழ்ந்த, போது - தாமரைமலர், ஒழுகுறு - ஒழுகாநின்ற, ஆற்றிடை-யாற்றில். (௪)

அன்னவனருந்தவமகற்றுவாயெனப்
பொன்னகர்மன்னவன்புகலப்போயினன்
மன்னெழிலரம்பையர்மருங்குசூழ்வர
இன்னிளவேனிலஞ்செல்வனென்பவே

அகற்றுவாய் - கெடுப்பாய், பொன்னகர்மன்னவன் - இந்திரன், மருங்கு-பக்கத்தில், இன்னிளவேனிலஞ்செல்வன் - மன்மதன் (௫)

எததிசையும்புகழிமயமால்வரை
உததரபக்கநின்றொழுகன்மேயபூம்
பத்திரைநதியில்வேள்படர்ந்துமோகினன்
மெய்த்தவம்புரிந்துறைவிமலன்றன்னையே

வேள் - மன்மதன், படர்ந்து - சென்று, மெய்த்தவம்புரிந்துறைவிமலன்றன்னை-மார்க்கண்டேயனை. (௬)

கூனல்யாழின்னிசைக்குயில்குடைந்திடும்
கானுலாந்தண்மலர்களுநெருங்காவெலாம
தேனுலாம்வண்டொடுசெறிந்துபாணசெய
வேனிலான்வருதலின்வேனிலுற்றதால்

கான் — வாசனை, களுலும் - நெருங்கின, காவெலாம் - சோலைகள்யாவும், செறிந்து—நெருங்கி, பாண்செய—இசைபாட, வேனிலான்—மன்மதன், வேனில்—வசந்தருது.

கொங்கைமென்முகிழினர்குலைறந்தசாயலர்
அங்கலுழ்மேனியராமடநதையர்
பொங்கெழில்வேனிலிற்பூத்தகொம்பென
மங்குறேய்தண்டலைமருங்குமேயினர்

முகிழினர் - அரும்பையுடையவர், அம்கலுழ் - அழகொழுகாநின்ற, மங்குல்-மேகம், தண்டலை - சோலை (அ)

கொந்தவிழ்கோதையுங்குழலுஞ்சோர்தர
இந்திரவில்லெனவெறிக்குங்காஞ்சிசூழ்
அந்துகில்சோர்தரவந்தணாளன்முன்
மந்தமாருதத்தொடுவந்துதோன்றினர்.

கொந்து - பூங்கொத்து, கோதை - மாலை, அவிழ் - மலர்கின்ற, குழலும் - கூந்தலும், சோர்தர - நழுவ, இந்திரவில் - இந்திரதனுசு, (வானவில்) காஞ்சி - இடையணிவகைகளிலொன்று, (அரைப்பட்டிகை) அந்துகில் - அழகியஆடை. (௯)

அயிலெனப்பிறழ்ந்துசேந்தரிபரந்தகண்
வெயின்மணிக்குழைபொருதலைப்பமெல்லென
மயிலெனமருங்குலாய்மலர்க்கொம்பாமெனக்
குயிலொடுமாறுகூய்க்குலவினார்சிலர்.

அயில்என - வேல்போல, சேந்து - செவந்து, அரி - இரேகை, வெயில் - ஒளி, குழை - காதணி, மருங்குலாய் - பக்கத்துலாவி. (க0)

சில்லரிச்சிலம்பொடுசெம்பொற்கிங்கிணி
மெல்லெனமிழற்றிடமிளிர்பொன்மேகலை
ஒல்லெனவொலிசெயவொல்கிமென்மலர்
அல்லியங்கோதையராடினார்சிலர்.

சில்லரி - சிலபருக்கைக்கற்களையுடைய, சிலம்பு - நூபுரம், மிழற்றிட - ஒலிக்க, மிளிர் - விளங்குகிற, ஒல்கி - அசைந்து, மேகலை - மாதர்இடையணியினொன்று. (கக)

ஓடரிக்கண்ணியரொளிபொன்னூபுரம்
சூடியகலையொடுசிலம்பத்தோகையின்
ஆடலுநயந்திலனமுதவின்னிசைப்
பாடலுநயந்திலன்றவஞ்செய்பண்ணவன்.

ஓடரி - ரேகைகள்படர்ந்த, கலை - மேகலை, சிலம்ப - ஒலிக்க, தோகையின் - மயில்போல. (கஉ)

தொடுத்தமென்மலையஞ்சுரும்புநாண்கமழ்
கடித்தொடையேந்துதோள்கழியவாங்கினன்
அடக்கருமைம்பொறியவித்ததூயன்மேல்
விடுத்தனன்பூங்கணைவேனில்வேந்தனே.

சுரும்பு - வண்டு, கமழ் - மணக்கின்ற, கடித்தொடை - வாசனையையுடையபூமாலை, வாங்கினன் - வளைத்து, அடக்கருமைம்பொறியவித்ததூயன் - மார்க்கண்டேயன், வேனில்வேந்தன் - மன்மதன் (கங)

தொலைவுறப்பாழிவாய்த்தூணிப்பல்கணை
மலையும்வெஞ்சரம்பொருமாரன்மாட்டினன்
பலமலர்பூத்ததோர்பழுமரத்தையொத்
தலர்பொறியவித்தநல்லறிவன்றோன்றினான்.

தூணி - அம்புக்கூடு, மலையும் - போர்செய்கிற, வெஞ்சரம் - கொடியபாணம், பழுமரம் - ஆலமரம், அலர்பொறியவித்தநல்லறிவன் - மார்க்கண்டேயன். (கச)

மாயனைவழிபடூஉமாதவத்தர்பால்
தீயநம்மாணைதாய்ச்சேர்கலாதெனாத்
தூயசெஞ்சடையவற்றொலைப்பப்பூங்கணை
எயதன்வடுனியெண்ணிமாழ்கினான்.

நம்மாணை - நமது ஆக்கினை, தாய்ச்சேர்கலாது - தாவிச்செல்லாது, தூயசெஞ்சடையவற்கொலைப்ப - சிவனை நம்தாற்பிசுக (வெல்ல) வடு - தழும்பு, மாழ்கினான் - மயங்கினான். (கடு)

துளக்கிலனரிவன் றவமென்ற சூழினவ
கனிச்சுரும்பார்த்து தார்க்கர்மமேகினன்
விளைததனைத் தெரித்தனன் விரிக்கவானுல
களிப்பவன்கதிர்முடியனை தகிட்டானரோ.

துளக்கிலன் - சலனமில்லாதவன், ஏகினன்-போய், வானுலகளிப்பவன்-இந்திரன்.

வேறு.

அரிதாகற்றவமாற்றுவானெனா
உரைசாலன்னவன்முன்னமேறுமேதன்
விரைசேர்தாமரைவென்றசெங்கணர்
நராநாராயணர் நண்ணினாரரோ

ஆற்றுவான் - செயவான், விரை - வாசனை (கஎ)

உற்றாரென்னைவிழைந்ததந்தாதெனச்
சொற்றாரமற்றவர் சொற்றசொற்கொளாப்
பெற்றேனும்மருள்பேறென்வேறெனாப்
பொற்றாள்சென்னிபுனைந்திறைஞ்சினான்

என்னைவிழைந்தது - விரும்பினதுயாது, கொளா - கொண்டு, பேறு - பயன்.

வேறு

கடையுறுபிரளயங்காணவேண்டுமால்
மடைதிறந்தினநறவொழுகுமன்றலந்
தொடையலிரென்றலர்தூற்றிப்பூங்கழல்
அடிதொழவாங்கவரருள்செய்தேகினார்

நறு - தேன், மன்றலந்தொடையலிர் - வாசனையுள்ளபூமாலையணிந்தவரே, அலர்— மலர்கள். தூற்றி - தூவி. (கக)

வேலையம்புவிமகள்விரைசெய்கற்பகச்
சோலையங்கிளியெனத்தோன்றிப்பைந்துழாய்
மாலையம்புயத்தனைவணங்கிவைகிய
காலைவந்தெறிபெருங்காற்றெழுந்ததால்.

வேலை - கடல், புவிமகள் - பூமிதேவி, பைந்துழாய்மாலையம்புயத்தனை - திருமாலை, எறி - வீசுகிற. (உ0)

வெடிப்பவான்முகமெண்சுமந்தவீங்கெழிற்
படத்தவாளரவமும்பதைபதைப்பமீத்
தடித்தொளிதிசைதிசைதவழச்சூழ்ந்தெழுந்
திடித்ததிர்கருமுகிலேழும்பெய்தவால்.

மண்சுமந்தவீங்கெழிற்படத்தவாளரவமும் - ஆதிசேடனும், தடித்து - மின்னல், கருமுகில் - கருமேகம். (உக)

செறிகதிர்மதிவலந்திரியுமாநிலம்
மறிதரவானகமடங்கவெற்புவேர்
பறிதரவுயிரெலாமிறந்துபாழ்பட
எறிதிரைக்கருங்கடலெழுங்கோத்தவே.

கதிர்மதி - சூரியசந்திரர்கள், வெற்பு - மலைகள், வேர்பறிதர - வேர்பெயர, கோத்த - பெருகின. (உஉ)

மருவருநற்றவமார்க்கண்டேயன்மற்
றொருவனுக்குறுபொருளொன்றுங்கண்டிலன்
வெருவரவெளிமுகடிடையவீங்கிய
முரிதிரைக்கருங்கடல்வயிற்றுள்ளாழ்ந்துமால்

மருவரு - அடைதற்கரிய, வெருவர - அச்சம். (உங)

எழுமெறிதிரையொடுமெழுமெழுந்திடை
விழுமுரிதிரையொடும்வீழுமவீழ்ந்துதன்
முழுவலிகெடவலைமொத்துணுடுள்ளழிந்
தழுமவன்மறுக்கம்யாரறையகிற்பரே

முரிதிரை - உடைகின்றஅலை, மொத்துணுடு - அடிபுண்டு, உள்ளழிந்து - மனமழிந்து, மறுக்கம் - மயக்கம். (உச)

மழலையஞ்சுரும்பொடுவரிமிடற்றதேன
உழுநறுந்துழாய்புனையொருவனவ்வழிப்
பழுமரப்பாசிலைப்பள்ளிமேற்பசுங்
குழவியாய்க்கண்வளர்கோலநோக்குமால்.

மழலையஞ்சுரும்பொடுவரிமிடற்றதேன்உழுநறுந்துழாய்புனையொருவன் — திருமால், பழுமரம் - ஆலமரம், பாசிலை - பச்சிலை, பள்ளி - சயனம், கோலம்—அழகு. (உரு)

கரையழிந்தொழுகுமோர்கங்கைபூத்தமெல்
முருகவிழ்சேயிதழ்முளரித்தாமமலர்
இருகையிலெடுத்தணைத்திதழ்வைத்தங்ஙனம்
பெருவிரலமுதுணும்பெற்றிபார்க்குமால்.

கங்கைபூத்த—கங்கையைத்தந்த, சேயிதழ்முளரி—செவந்தஇதழ்களையுடையதாமரைமலர், (செந்தாமரைமலர்) இதழ்வைத்து—திருவதரத்தில்வைத்து, பெற்றி-தன்மை.

அகலும்வந்தணுகுநல்லங்கைபற்றிடும்
நகுதருசேயிதழ்நளினம்பூத்ததோர்
முகிலிளங்கன்றெனக்கிடந்தமுன்னவன்
புகலருவயிற்றிடைப்புகுமற்றென்பவே.

நகுதரு - விளங்குகிற, சேயிதழ்நளினம்—செந்தாமரைமலர், முகிலிளங்கன்றென— மேகத்திளங்கன்றுபோல, கிடந்தமுன்னவன் - திருமால். (உஎ)

மல்லலந்துழாயவன்வயிறறிலோர்புடை
பல்லுயிர்ப்பகுதியும்பரவைஞாலமும்
செல்லொடுமதிதவழ்செம்பொற்குன்றமும்
கல்லெனவதிர்கருங்கடலுங்காணுமால்.

மல்லலந்துழாயவன் - திருமால், பரவை - கடல், செல்லொடு - மேகங்களோடு, மதி - சந்திரன், செம்பொற்குன்றமும் - மேருமலையும். (உஅ)

இந்திரன்முதலியரிருந்தவத்தினர்
சந்திரமௌலிசெஞ்சலசமேலவன்
கொந்தவிழ்துளவணிகொற்றவாழியான்
முந்தகட்டொருபுடைமொய்ப்பக்காணுமால்.

சந்திரமௌலி - சிவன், செஞ்சலசமேலவன் - பிரமன், கொந்தவிழ்துளவணி கொற்றவாழியான் - திருமால், அகடு - வயிறு. (உகூ)

நண்ணிமுன்னிருந்துயர்நற்றவம்புரி
அண்ணலங்கடவுளாற் றடைகரைப்புறம்
கண்ணனைக்குளிர்ப்புறக்காணுங்கண்டெவந்
தெண்ணருங்கற்பமாங்கினிதிருக்குமால்.

அண்ணல் - பெருமை. (ஙூ0)

இந்நிலைநிகழ்வுழியெரிபொன்னாழியான்
மன்னியமாயையைவல்லைமாற்றலும்
அந்நிலைகணகிலணம்மவோவெனு
மெய்ந்நிலைவேதியன்வியப்புற்றனனரோ.

நிகழ்வுழி - நடக்குங்காலத்தில், எரிபொன்னாழியான் - திருமால், வல்லை - விரைவாக, மாற்றலும் - நீக்கலும், வியப்புற்றான் - அதிசயித்தான். (ஙூக)

உடைத்தவெண்டிரையிடையொளிர்பொற்கொம்புபோல்
பொடித்தவளிளமுலைபொரவுடைநதலர்
மடற்பசுந்தண்டுழாய்மாயன்மாயையார்
கடக்குநரென்றுளங்களியவேத்தினன்.

உடைத்தவெண்டிரையிடையொளிர்பொற்கொம்புபோல்பொடித்தவள் - திருமகள், பொர - பட. (ஙூஉ)

புரியுமாங்கவன்றவநோக்கிப்பொன்பிறழ்
வரைமகள்வழுத்தலும்வரமளித்திட
விரிதலைவிசும்பிடைவிடையிவர்ந்துலாம்
எரிமருளீர்ஞ்சடையிறைவனெய்தினன்

வரைமகள் - பார்வதி, விடையிவர்ந்து - இடபத்தின்மீதேறி, எரிமருளீர்ஞ்சடையிறைவன் - சிவபிரான். (ஙூங)

பிறைபொழியிளநிலாப்பெருகுசெஞ்சடை
இறைவன்வந்திறுத்தலும்யாதுந்தேர்ந்திலான்

நிறைதவனிருந்துழிநிலவுவான்பொருப்
புறைபவன்மற்றவனுளத்தொடுற்றனன்.

பிறைபொழியிளநிலாப்பெருகுசெஞ்சடையிறைவன்—சிவபிரான், நிலவுவான்பொருப்புறைபவன் - சிவபிரான். (௯௪)

மன்னியவலம்புரித்தடக்கைமாயனை
உன்னினனிருந்தநல்லுணர்விஞனிலெ
தென்னெனவிழித்தலுமிமயமால்வரைக்
கன்னியோர்பாகனைக்கண்டிறைஞ்சினன்.

இமயமால்வரைக்கன்னியோர்பாகனை - சிவபெருமானை. (௯௫)

வேறலெமாயனுநானும்வேட்டதென
ஆறறியந்தணவென்னநின்னருட்
பேறலான்மற்றுநான்பெறுவதென்னெனாத்
தேறுநீர்தவழ்சடைச்செல்வன்கூறுவான்

வேறலெம் - வேறானவரல்லேம், வேட்ட நான் - விரும்பினதியாது, தேறுநீர்தவழ்சடைச்செல்வன் - சிவபிரான். (௯௬)

இறப்பொடுநிகழ்வெதிரென்னுமும்மையாம்
சிறப்புறுகாலநல்லறிவுநீசாகுதி
அறப்பெருந்துணையெனுமன்பநின்புகழ்
மறப்பறநிச்சலுமுலகின்வைகுமால்.

நிச்சலும் - நாள்தோறும், இறப்பு — இறந்தகாலம், நிகழ்வு — நிகழ்காலம், எதிர்— எதிர்காலம், உலகில்வைகும் - உலகத்திலநிலைபெற்றிருக்கும். (௯௭)

சொன்னலம்பெறமொருபுராணஞ்சொல்லுதி
என்னலுமடிமலரிறைஞ்சியேத்திட
மின்னவிர்சடைமுடிவிமலனேகினன்
மன்னினன்றவத்தொடுமார்க்கண்டேயனே.

மின்னவிர்சடைமுடிவிமலன் - சிவபிரான். (௯௮)

மார்க்கண்டேயர் தவமுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௫௯௧.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்

---

## எட்டாவது

## சூரியன் கதியுரைத்தவத்தியாயம்.



வேறு.

மையறுதவத்தர்முதன்மற்றெழுவகைத்தாய்ச்
செய்யகதிரோன்வருதல்செப்பினைசுருக்கி
வெய்யவன்விபூதிகள்விரித்துரைசெயென்னும்
தூய்யமுனிவர்க்குரியசூதமுனிசொல்வான்.

மையறு - குற்றமற்ற, வெய்யவன் - சூரியன். (க)

எழ்வகையாயாவரெனினெவ்வமறமான்மாத
தாழ்விலுருவாயவடதட்டநிலையையாளும்
சூழ்வருபதங்கனருகின்றுமுனிவர்கள்
கேழ்விரவுபூணொளிகிளைத்தவரமாதர்.

எவ்வம் - குற்றம், வடதட்டநிலையை - மேருமலையை, பதங்கன் - சூரியன், கேழ்விரவு - ஒளிபொருந்திய பூண் - ஆபரணங்கள் ஒளிகிளைத்த - ஒளிவிரிந்த. (உ)

காமரிசையாழுடையாக்கருவர்நாகர்
நாமமுறிராக்கதர்கவினுறிடுமியக்கா
ஏமமுறுமிவ்வகையரெய்துமதிதோறும்
வாமமொடுமேவுவர்வகைக்கொருவராயே.

காமர் - அழகு, மதிதோறும் - மாசந்தோறும். (ங)

எல்லவர்கள்பன்னிருவரென்றுருவர்யாரும்
சொல்லும்வகையெய்யவகையெனிற்சுடர்செய்வெய்யோன்
ஒல்லும்வகைதாமெருருமருக்குமதிதோறும்
நல்லபெயர்வேறுறநயந்துளவுமாதோ,

வெய்யோன் - சூரியன், (ச)

மீதார்செழும்பரிமேடமதிமேவித
தாதாவெனும்பெயரதனைழுந்துலவுமந்நாள்
போதாரயன்றருபுலத்தியனுமானேர்
மாதாமெனச்சொல்கிருததலையுமாதோ.

மேடமதி - சித்திரைமாசம், போதாரயன் - பிரமன். (ரு)

சுந்தரம்விளங்கயருதும்புருவெனச்சொல்
கந்திருவனும்மெழில்கலந்தபிலமீது
வந்தபணிநாதனெனும்வாசுகியும்வீற்றாய்
எந்தநிலமும்புகழுமேதியெனவேசொல்.

சுந்தரம் - அழகு, பிலமீது - பாதாளலோகத்தில். (சு)

கலிநிலைத்துறை.

கேடிலாதசிராக்கனுமாகிருத்தெனனும்
ஆடன்மேவியவியக்கனுநகதொழிலாற்றி
நீடுமேதரொடுமபொருந்துவர்சிகழ்ந்துளைகாசி
பீடுசேர்பெயர்தரிகளிவெருந்தலைப்பசுதுமால்.

ஆடல் - வெற்றி, ஆற்றி - செய்து, பீடுசேர் - பெருமைபொருந்திய. (௭)

அரியமாவெனும்பெயர்க்கதிரோனடைந்தியநடும்
தெரியுநான்மறைப்புலகனுஞ்சிறுநுதற்கருகட்
புரையிலாதநல்லெழிற்புகழ்ப்புஞ்சிகத்தலையும
உரியயாழ்பயினரதனொருமுமுராவோனும்.

கதிரோன் - சூரியன், [illegible], புரையிலாத - குற்றமில்லாத, உரவோனும் - ஞானவானும், (௮)

அசசமாரயில்சேர்பிரசிகத்யெனறையும
செச்சையார்புயதசரகனுமுரகரிறறைத
கச்சரனுமோகனும்யச [illegible]
பச்சைமாப்பரித்தேரினனொடுபடர்குவரால்

அயில் — வேல், உரகரில் - நாகர்களில், பச்சைமாப்பரித்தேரினனொடும் — சூரியனொடும், படர்குவர் - செலலுவர் (௯)

ஆனிததிங்களின்மித்திரனெனும்பெயரனோசேர்
பானுப்பெற்றிடுமத்திரியெனப்பசர்தவனும்
வானத்துற்றுறைமேனகையெனும்பெயர்மாதும்
தேனுற்றின்னிசைமூன்றரதாசுநக்கயாவும்

பாநு - சூரியன், திங்களில் — மாசத்தில், [illegible]-அழகுபொருந்திய, தேன்-வண்டு.

தயங்குநன்மணியுரகரிற்றகககனும்வான்
இயங்கரக்கரிற்பவுருடேயனெனுமறையும
வயஞ்செய்தோஙகிரதசசுவனப்பெயர்வாய்ந்த
வியந்தசிருடையியக்கனுமேவுவரன்றே

தயங்கும் - பிரகாசிக்கிற, உரகர் - நாகர். ஔறையும் - அரசனும், வயஞ்செய்து- வெற்றியடைந்து. (௧௧)

ஆடித்திங்களின்வருணனென்பெயர்கதிரடையும்
நாடிததொன்மறைநவிற்முறுவசிட்டனுநதிம்பால
ஓடித்தண்மதுப்பாய்குழலரமபையுமுவப்பால்
பாடிப்பண்பயிலூருவென்பெயர்படைத்தவனும்

கதிர் - சூரியன், உவப்பால் - சந்தோஷத்தால் (௧௨)

நாகர்தங்களிற்சுக்கிரனெனநவில்பவனும்
சேகில்சித்திராச்சுவனனுஞ்செப்பிராக்கதனும்

வேகவெங்களிறெனுஞ்சகச்சன்னியவேந்தாம்
மாகமன்னியவியக்கனுமருவுவர்மகிழ்ந்தே.

நாகர் - நாகராஜர்கள், நவில்பவனும் - சொல்லப்பட்டவனும், சேகுஇல் - பகையில்லாத, வேகவெங்களிறு - வேகத்தையுடையகொடியயானை, மாகம்மன்னிய - விண்ணுலகத்தில்நிலைபெற்ற, இயக்கனும் - யக்ஷனும். (௧௩)

சிங்கமாமதியிந்திரனெனக்கதிர்சேரும்
அங்கிராவெனுமருந்தவக்கிழவனுமறலார்
மங்குனேர்குழற்பிரமிலோசைப்பெயர்மாதும்
பொங்கிராகயாழ்விச்சுவாவசுப்புரவலனும்.

சிங்கமாமதி - ஆவணிமாசம், அறல் ஆர் மங்குல்-நீருண்டமேகம், புரவலனும்-அரசனும்.

எழினிறைந்தலர்புத்திரப்பெயராவிறையும்
மொழிசெய்கின்றவெவ்வரக்கரிற்சரியனுமுருக்கின்
தழைசெய்கின்றதாரியக்கரிற்சுரோகனுந்தத்தம்
தொழில்செய்கின்றனராய்ச்சுடரோனொடுஞ்சுழல்வார்.

எழில் - அழகு, அலர் - பரந்த, அரவிறையும் - நாகராஜனும், மொழிசெய்கின்ற-சொல்லப்பட்ட, முருக்கின்தழைசெய்கின்றதார் - முருக்கிலையாற்றொடுத்தமாலை, சுடரோனொடும் - சூரியனோடும். (௧௫)

கன்னிமாமதிவிச்சுவாவெனும்பெயர்க்கதிரோன்
மன்னியேகுவன்மாதவப்பிருகுவுமலர்வாழ்
அன்னநேர்நடையகமிலோசைப்பெயரணங்கும்
நன்னர்யாழ்பயிலுக்கிரசேனநல்லோனும்

கன்னிமாமதி - புரட்டாசிமாசம், கதிரோன் - சூரியன், மன்னி - நிலைபெற்று, மலர் - தாமரைமலர், அணங்கும் - தெய்வப்பெண்ணும், நன்னர்யாழ்பயில் - அழகாகியவீணைவாசித்தலைப்பயின்ற. (௧௬)

சங்கபாலனுமுரகர்கந்தலைவனுந்தருக்கார்
வெங்கணன்வியாக்கிரனெனுமரக்கர்சொல்வேந்தும்
துங்கமேயவர்சாரணனென்றசொல்சுடர்சேர்
திங்கள்வாண்முகத்தியக்கனுஞ்செய்வர்தந்தொழிலே.

உரகர்தந்தலைவனும் - நாகராஜனும், தருக்கு - செருக்கு, துங்கம் - பரிசுத்தம், சுடர்சேர் - ஒளிபொருந்திய, திங்கள் - சந்திரன். (௧௭)

நல்லசெங்கதிர்நவிறுவட்டாவெனுநாமம்
மல்லல்துலாமதியினிற்பெற்றெழும்வானோர்
சொல்லுறுஞ்சமதங்கியென்றுரைதொழுகுலனும்
அல்லுறுங்குழற்றிலோத்தமையாமெனுமணங்கும்.

நல்ல - அழகாகிய, செங்கதிர்-சூரியன், மல்லல்-வளம், துலாமதி, ஐப்பசிமாசம், வானோர் - தேவர், சொல்லுறும் - புகழ்தற்குரிய, அல்உறும் - இருள்மிகுந்த, (மிகக்கறுத்த) குழல் - கூந்தல். (௧௮)

இசைவடித்தயாழ்த்திரிதராட்டிரப்பெயரியைந்த
விசையமுற்றொளிர்விஞ்சையர்க்கிதமுறுவேந்தும்
வசையகற்றியகம்பலாச்சுவனெனவழங்கும்
திசைபரப்பொளிச்செம்மணிசேரரவரசும்

இசைவடித்த - இராகத்திற்றேர்ந்த, யாழ் - வீணை, விசயம் - வெற்றி, வசையக ற்றிய - பழியையொழித்த, செம்மணி - மாணிக்கம், அரவரசும் - நாகராஜனும். (௧௯)

ஏதநீங்கியவரக்கரிலெறுழ்வலிப்பிரமா
பேதனும்பெயர்பெற்றிடும்புகழ்ப்பெரியோனும்
தாதுலாந்தொடையியக்கரிற்றனிச்சதசித்தென்
றோதுநாமனுந்தந்தொழிலியற்றுவருவந்தே.

ஏதம் - குற்றம், எறுழ்வலி—மிக்கவலி, தாதுலாந்தொடை — மகரந்தத்தையுடைய மலர்மாலை, நாமனும் - பெயரையுடையவனும் (௨0)

விண்டுவாம்பெயர்விருச்சிகமதியத்தின்மேவும்
பண்டைநான்மறைக்கோசிகமுனிவனும்பண்சேர்
தொண்டைவாயினளரம்பையுந்துலங்குவிஞ்சையரில்
அண்டமீதுயர்சூரியவற்சனுமரசும்.

விருச்சிகமதியத்தில் - கார்த்திகைமாசத்தில், தொண்டைவாயினள்—கொவ்வைக் கனிபோலும் அதரத்தையுடையவள், அண்டம் - ஆகாயம் (௨௧)

அரவவேந்தரிலச்சுவதானுநல்லணிதார்
விரவுதோண்மதாபேதனும்விறலிராக்கதனும்
பரவுசத்தியசித்தெனுமியக்கர்தம்பதியும்
இரவியோடுதத்தந்தொழிலியற்றியேகுவரால்.

அணி - ஆபரணம், தார் - பூமாலை, விரவு - பொருந்திய, விறல் - வெற்றி, இயக் கர்தம்பதி - யக்ஷராஜன், இரவியோடு - சூரியனோடு. (௨௨)

அருணவெங்கதிர்தனுமதித்திவச்சுவாவாம்பேர்
கருணைதங்கியவருமறைதெளிந்தகாசிபனும்
தருணவெம்முலையுருப்பசியெனுந்தளிரியலும்
இருநரம்புளரிசைதருசேனனென்பவனும்.

தநுமதி - மார்கழிமாதம், தளிரியல் - பெண், இருநரம்புஉளர்—பெருமைவாய்ந்த ...பவருடுகிற. (௨௩)

பணிகடம்மின்மாசங்கனென்பெயர்படைத்தவனும்
தணிவில்வித்தியுஞ்சத்துருவெனும்பெயர்தழைந்த
இணையில்வெவ்வியவரக்கனுந்தாக்கியனெனும்பேர்
அணியிலங்கியவியக்கனுமாங்கியங்குவரால்.

பணிகடம்மில் - பாம்புகளில், இணையில் - ஒப்பில்லாத, அணி - அழகு. (௨௪)

மகரமென்றுசொல்வயங்கியமதியின்மார்த்தாண்டன்
பகவனென்பெயர்பெறுகுவன்பன்னுநான்மறைதேர்ந்

தகமகிழ்ந்தருந்தவஞ்செயுமாயுவுமயிலோ
டிகல்பயந்தகட்பூருவசத்தியென்பவளும்.

மகரமென்றசொல்வயங்கியமதி - தைமாசம், மார்த்தாண்டன் - சூரியன், அயிலோடு - வேற்படையோடு, இகல்பயந்த - பகைகொண்ட. (உ௫)

அரிட்டநேமியாம்விஞ்சையர்க்கரசனுமுடலம்
சுருட்டராவரசாயகார்க்கோடனுந்தொலையா
இருட்டினேர்நிறப்புற்சனும்மிக்கவருணனும்
உருட்டுநேமியொன்றுடையதேரினனெனுமுறுவார்.

உடலம்சுருட்டு - உடம்பைச்சுருட்டுகிற, அராவரசாய - நாகராஜனாகிய, உருட்டு நேமியொன்றுடையதேரினன் - சூரியன் (உ௬)

மாற்றருஞ்சுடர்வெய்யவன்கும்பமாமதியில்
ோற்றுகின்றபூடாவெனும்பெயர்பொருந்துவனால்
சீற்றநீங்கியகோதமனெனுஞ்செழுந்தவனும்
ஏற்றநல்லெழில்சேர்கிருதாசியென்பவளும்.

மாற்றருஞ்சுடர்வெய்யவன் - சூரியன், கும்பமாமதியில் - மாசிமாசத்தில், சீற்றம் - கோவம், எற்றம் - உயர்வு, நல்லெழில் - மிக்கஅழகு (உ௭)

விஞ்சைவல்லவிண்ணவர்களிற்சுசேனனும்வேந்தும்
நஞ்சுமிழ்ந்தவாய்நாகரின் ரஞ்சயனும்
மஞ்செனப்பொலியரக்கரில்வாதனும்வனப்பார்
எஞ்சலில்வலிச்சதசிரவியக்கனுமியைவார்.

விண்ணவர்களில் - தேவர்களில், மஞ்செனப்பொலி - மேகம்போலவிளங்குகிற, எஞ்சலில் - குறைவில்லாத. (உ௮)

பானுவான்பிரசன்னியனெனும்பெயர்பரித்து
மீனமாமதிமேவுவன்பரத்துவாசப் ர்
ஞானமாதவமுனிவனுநவில்விசுவாசி
ஆனபூவையுஞ்சேனசித்தெனுமடலோனும்.

பானு - சூரியன், வான் - மேன்மை, பரித்து - தாங்கி, மீனமாமதி - பங்குனி மாசம், அடலோனும் - வலிமிகுந்தவனும். (உ௯)

ஆடல்சேரயிராவதனெனுமரவரசும்
ஏடலாந்தொடையியக்கரில்வாசனென்பவனும்
கேடிலாவலியரக்கரிற்கிருதவுங்கெழுமி
நீடுசூரியன்றேரொடுநிலவுவரன்றே.

ஆடல் - வெற்றி, அரவரசும் - நாகராஜனும், ஏடலாந்தொடை—இதழ்களையுடைய பூமாலை, கெழுமி - சேர்ந்து, நிலவுவர் - விளங்குவர். (௩0)

இன்னவாறிருவகைக்குழுவாமுருவெடுத்துப்
பன்னுநான்மறைகாண்பருமாயனும்பரமன்

மன்னுயிருலகளிக்குவன்கதிரவான்மற்றைத்
துன்னுவோரிருமூவர்தந்தொழில்களுஞ்சோறும்.

இன்னவாறு - இந்தப்பிரகாரம், குழு - கூட்டம், உலகளிக்குவன் - உலகத்தைக் காத்தருள்வன், இருமூவர் - அறுவர், சோறும் - சொல்லுவோம். (௩௧)

மாயனுங்கதிர்வானவன்றிருமுனர்மருவித்
தூயநான்மறைசொல்லிநின்றிருந்தவர்துதிப்பார்
மேயசீரமங்கையர்வானடம்விளைப்பார்
நேயமாயநல்விஞ்சையரின்னிசைநிரைப்பார்.

கதிர்வானவன்—சூரியதேவன், திருமுனர்மருவி—சந்நிதிமுன்னேசென்று, தூய—பரிசுத்தமாகிய, இருந்தவர் - பெருந்தவத்தினர், வான் - மேன்மையாகிய, நடம்விளைப்பார் - நடனம்செய்வார்கள் (௩௨)

பகர்ந்தநாகரத்தேரினைமுறைமுறைபரிப்பார்
புகழ்ந்திராக்கதர்மாதவன்வந்திதம்புகல்வார்
திகழ்ந்தபூணணிவெற்பெனத்திரள்புயநாக்கர்
மகிழ்ந்துபற்றுவாரிரதமுன்வளைமணித்தாம்பு.

அத்தேரினை - அந்தச்சூரியரதத்தை, முறைமுறை - க்ரமக்ரமமாக, (வரிசைவரிசையாக) பரிப்பார் - தாங்குவார், வந்திதம் - தோத்திரம், புகல்வார் - சொல்லுவார், திகழ்ந்த - விளங்குகிற, பூண் அணி - ஆபரணமணிந்த, வெற்பென—மலைபோல, வளை—தொடுத்த, மணித்தாம்பு - அழகியவடக்கயிறு. (௩௩)

தழைத்தபேரொளிநவமணிதமனியத்தழுத்தி
இழைத்ததேர்மிசைப்பானுவுக்கெதிர்முகமாகி
வழுத்துவார்புகழ்வாலகில்லியர்மனத்தன்பு
பழுத்தசீர்பெறுமறுபதினாயிரர்பணிந்தே.

தழைத்த - மிகுந்த, நவமணி - நவரத்நம், தமனியத்து - பொன்னில், இழைத்த—செய்யப்பட்ட, பானுவுக்கு - சூரியனுக்கு, வழுத்துவார்—தோத்திரஞ்செய்வார்கள். ()

இந்தவெங்கதிர்க்கடவுளைமுதலெழுவரையும்
உந்தியொன்றுடைத்தேரவனுதயமாங்காலை
அந்தியென்றுசொல்பொழுதினுநிச்சலுமன்பால்
சிந்தைசெய்திடிற்றினஞ்செயும்பவந்தினந்தீரும்.

வெங்கதிர்க்கடவுள் - சூரியன், உந்தியொன்றுடைத்தேரவன் - சூரியன், உந்தி—தேருருளை, உதயமாங்காலை—உதிக்கும்போது, நிச்சலும்—நாள்தோறும், பவம்—பாவம்.

சூரியன் கதியுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௬0௪

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## ஒன்பதாவது

## பாயிரமுரைத்த வத்தியாயம்.



அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தாரணிமாதுஞ்செய்யதாமரைமாதுஞ்சேரும்
காரணிமேனிநம்மான்கலைகளின்கலைகளாலே
சீரணிவயிராசப்பேர்திகழுருவாதியான
பேரணிபடிவமாகிப்பெரிதருள்புரிந்தவாறும்.

தாரணிமாதும் - பூமிதேவியும், செய்யதாமரைமாதும் - திருமகளும், காரணி மேனிநம்மான் - கண்ணபிரான், (திருமால்) கலைகளின்கலைகளாலே - அமிசாமிசங்களாலே, படிவமாகி - உருவமாகி. (க)

நாரதமுனிதன்தோற்றநலம்பெறவுரைத்தவாறும்
பாரதராயவைவர்பார்புரந்தோம்புமாறும்
மாரதர்களத்தின்மாயமண்டமர்முடித்தமாயன்
நீரதிர்பரவைசூழுநெடுநகரடைந்தவாறும்.

பாரதராயவைவர் - தருமன்முதலியஐவர், பார் - பூமி, புரந்தோம்பு ஈறும்-காத்திரக்ஷிக்கும்விதமும், களத்தில் - யுத்தபூமியில், மாய - மடிய, மண்டு அமர்முடித்த-மிக்க போரைமுடிவுசெய்த, நீர்அதிர்பரவை - நீர்சத்திக்கிறகடல். (உ)

மாற்றருஞ்சிறப்புவாய்ந்தமாலவனுவிகாப்ப
வேற்றிறல்விண்டுராதன்விளங்கிவந்துதித்தவாறும்
பாற்றினஞ்கழலுங்கூர்வாட்பாண்டவர்வனத்திலேகிப்
போற்றுறும்பெருமைசாலும்பொன்னுலகடைந்தவாறும்.

மாலவன் - கண்ணபிரான், ஆவிகாப்ப - உயிரைக்காக்க, விண்டுராதன் - பரிக்ஷித்து, பாற்றினம் - பருந்தின்கூட்டம், பெருமைசாலும் - பெருமைமிகுந்த. (ந)

விளம்பெழில்விண்டுராதன்விளங்கிவந்துதித்தவாறும்
வளந்திகழ்வனத்திலன்னோன்மருவிவெஞ்சாபமேவித்
தெளிந்துறுமுனிவர்சூழதிருநதிக்கங்கையெய்திக்
களங்கனிவண்ணன்றன்னைக்கருதினனிருந்தவாறும்.

அன்னோன் - அவன், (பரிக்ஷித்து) சாபமேவி - சாபமடைந்து, களங்கனிவண்ணன் - கண்ணபிரான், கருதினன் - கருதி. (ச)

தூயநல்லறிவுவாய்ந்தசுகமுனியரசுகூற
மாயவனிலைமையெல்லாமன்னவன்கேட்டவாறும்
வேயிசைவடித்தோன்பாதம்விரும்பியன்பியற்றுமாறும்
ஏயதத்துவங்களெல்லாமியன்முறையுதித்தவாறும்.

வேயிசைவடித்தோன் - கண்ணபிரான், அன்பியற்றுமாறு-அன்புசெய்யும்விதம்.

மணிநிறமாயனுந்திமலரயனுதித்தவாறும்
அணிமுதலாயகாலத்தளவையையறைந்தவாறும்

இணையறுசனகனுதியிருந்தவர்பிறந்தவாறும்
பணைமருப்புடையாண்கேழல்பாரெடுத்தளித்தவாறும்

மணிநிறமாயன் - திருமால், அயன் - பிரமன், அறைந்த - சொன்ன, இணையறு-ஒப்பற்ற, இருந்தவர் - பெருந்தவத்தினர், பணைமருப்பு - பெருத்தகொம்பு, ஆண்கேழல் - ஆண்பன்றி, பாரெடுத்தளித்தவாறும் - பூமியையெடுத்திரக்ஷித்தவிதமும். (௬)

அருத்தியுற்றறையும்வானோராதியருதித்தவாறும்
கருத்தமன்மாயனையகபிலனையளித்தவாறும்
திருத்தியயோகநன்னூறெறித்தருள்கபிலன்சீர்சால்
உருத்திகழன்னையுள்ளமொளிபெறத்தெருட்டுமாறும்.

அருத்தி - ஆசை, வானோர் - தேவர், அளித்தவாறும் - பெற்றவிதமும், தெரித்தருள் - தெரிவித்தருளின, சீர்சால் - சிறப்புமிகுந்த, அன்னையுள்ளம் - தாயின்மனம், தெருட்டுமாறும் - தெளிவிக்கும்விதமும். (எ)

மரீசியேமுதலினோர்தம்மரபினையிசைத்தவாறும்
அராவணிசடிலன்றக்கனருமகமழித்தவாறும்
நராதிபன்றுருவனென்பானற்பதமடைந்தவாறும்
தராபதிபிருதுமன்னன்சரித்திரந்தெரித்தவாறும்.

இசைத்த - சொன்ன, அராவணிசடிலன் - சிவன், மகம் - யாகம், நராதிபன்-அரசன், தராபதி - அரசன். (அ)

பிரசநாண்மாலைவேணேர்பிராசீனன்பிருகச்சாய
அரசர்தாழாவிர்த்தானியறிவுறவறைந்தவாறும்
புரசைமாகளிநல்யானைப்புரவலனன்னோனீன்ற
தரைசொல்சீர்ப்பதின்மராயோர்தக்கனைத்தந்தவாறும்.

பிரசம் - தேன், நாண்மாலை - புதியமலர்மாலை, வேணோர் - மன்மதனைநிகர்த்த, அரசர்தாழ் - அரசர்வணங்குகிற, புரசை - யானைகழுத்திடுகயிறு, புரவலன் - அரசன், தரைசொல் - உலகத்தார்புகழ்கின்ற. (௯)

தோடவிழலங்கன்மாலைச்சுவாயம்புமனுமுனீன்ற
ஆடலஞ்சிலைக்கைமைந்தனவனியேழ்காத்தவாறும்
நாடகம்புரந்தசெங்கோனரபதிபரதன்கான்போய்ப்
பாடகத்தொடர்ச்சிபோன்றபழவினைபாற்றுமாறும்.

தோடு - இதழ், அவிழ் - விரிகின்ற, அலங்கல்மாலை - அசைதலையுடையபூமாலை, ஆடலஞ்சிலை - வெற்றியுமழகுமுள்ளவில், அவனியேழ் - எழுலகும், நாடகம்புரந்த-நாட்டைக்காத்த, நரபதி-நராதிபன், கான்-வனம், பாற்றுமாறும்--அழிக்கும்விதமும்

நாவலந்தீவின்வண்மைநலம்பெறநவின்றவாறும்
காவலர்காத்ததீவெழ்கடலளவுரைத்தவாறும்
பூவுலகாதிமேலேழ்பொருந்துலகிசைத்தவாறும்
தாவருந்தபனன்செல்லுந்தன்மைமற்றிசைத்தவாறும்.

நாவலந்தீவின்வண்மை-ஜம்புத்தீவின்வளம், நவின்ற-சொன்ன, காவலர்-அரசர், இசைத்த - சொன்ன, தீர்வுறு - ஒழிவுற்ற, தபநன் - சூரியன். (கக)

கீழுலகுரைத்தவாறுங்கிளர்நரகிசைத்தவாறும்
ஆழிகைத்தரித்தோன்பேர்கூறசாமிளனுயர்ந்தவாறும்
தாழ்பெறுமகிலரூபன்றகைபெறுகுரவனாக
ஏழுயர்களிநல்யாகேனயிந்திரனடைந்தவாறும்.

ஆழிகைத்தரித்தோன் - திருமால், பேர்கூறு - திருநாமத்தையுச்சரித்த, அகில ரூபன் - விசுவரூபன். (கஉ)

கருத்துறீஇக்காக்குமாயன்கவசநன்கிசைத்தவாறும்
உருத்தனன்வரவேந்தானுமுறைபெறுமகிலரூபன்
விருந்திராசுரனென்போனைவீட்டினனெனிரித்தவாறும்
அருத்திசெய்மறைவலோரவ்வல்வினையகற்றுமாறும்

கருத்துறீஇ-மனத்திற்பொருந்தி, மாயன்கவசம்-விஷ்ணுகவசம், உருத்தனன்-கோவித்து, வரவேந்து - மேலானஅரசர், வீட்டினன் - கொன்று, அருத்தி-அன்பு.

சித்திரகேதுமன்னன்செய்திறனுரைத்தவாறும்
மத்தவெங்களிறுபோலுமருந்துவாராதியாய
வித்தகர்பிறந்தவாறும்விழைபுஞ்சவனமென்றேதும்
உத்தமவிரதமன்பாலுஞற்றுதலுரைத்தவாறும்.

மத்தவெங்களிறு - கொடியமதயானை, வித்தகர் - விவேகிகள், விழை - விரும்பப் படுகிற, விழை-விரும்பப்படுகிற, உஞற்றுதல்-செய்தல், புஞ்சவனம்-கருப்பங்கொண்டமூன்றுமாதத்தில் செய்யப்படுவதாகியவோர்கருமம், (விரதம்) (கச)

திறற்சிசுபாலன்வீடுசேர்ந்தமைதெரித்தவாறும்
மறக்கரிபோன்றவெற்றிமருவுவாட்கனகன்மார்வம்
அறத்துணைமாயனுயவாளரிகீண்டவாறும்
உறத்தகுவருணநான்கோருஞற்றறமுரைத்தவாறும்

திறல் - வலி, மறக்கரி - கோவத்தையுடையயானை, கனகன் - இரணியகசிபன், ஆளரி - நரசிங்கம், கீண்ட - கிழித்த, மார்வம் - நெஞ்சு, வருணநான்கோர்-நால்வகை வருணத்தார், உஞற்றறம் - செய்தற்குரியதருமம். (கரு)

இல்லறமியற்றுவோர்பேறென்னெனுந்தருமற்கன்பால்
நல்லனகதியுண்டென்னுநாரதனவின்றவாறும்
மல்லலஞ்சிறப்புவாய்ந்தமனுக்களைமனுக்கள்காலத்
தொல்லுணர்தன்மைமாயனுதிப்பதையுரைத்தவாறும்.

பேறு - பயன், மல்லல் - வளம், ஒல்லுணர்தன்மை - விரைவிலறியுந்தன்மை, மாயனுதிப்பதை - திருமால்அவதரிப்பதை. (கசு)

களிற்றரசுரைப்பவாவிகாத்துமாலளித்தவாறும்
துளித்திரையுத்திவெற்பாற்சுதையெழக்கடைந்தவிண்ணோர்க்

களிக்கடலன்னமாயனமுதனைவளித்தவாறு
ஒளிப்புறவுணர்ப்போரிலும்பர்வென்றயு...ரும்.

களிற்றரசு - கஜேந்திராழ்வான், உரைப்ப - அழைக்க, ஆவிகாத்து - உயிரைக் காத்து, துளித்திரை - துளித்தலையுடையஅலை, உததி—கடல், (பாற்கடல்) வெற்பால்-மந்தரமலையால், சுதையெழ—அமிர்தம்தோன்ற, விண்ணோர்க்கு—தேவர்களுக்கு, அளி க்கடலன்ன - கருணைக்கடல்போன்ற, உம்பர் - தேவர். (கஅ)

பாகினுமினியசொல்லாள்பங்கினன்பராவிவேட்ட
மோகினியுருவமாகிமுகுந்தன்முன்றோற்றவாறும்
மாகளிறனையவைவச்சுதன்முதன்மனுக்களோடும்
சேகறமன்னகாலஞ்சேருநர்த்தெரித்தவாறம்.

பாகினுமினியசொல்லாள்பங்கினன் - சிவபிரான், பராவி - துதித்து, வேட்ட—விரும்பின, மாகளிற அனைய - பெரியயானையைநிகர்த்த, சேகறு அறும் - பகையற்ற.

வாமனவுருவமாகிமாவலிமகற்சென்றற்ற த
தாமரையனையசெங்கட்டற்பரன்வளர்ந்தவாறும்
நா..கள்கொழுநற்குற்றநலந்திகழ்மாலைக்காலம்
பூமக..புணருமாமால்போற்றமீனுயவாறம்.

மகம் - யாகம், வாமனவுருவம் - குறளுருவம், தாமரையனையசெங்கட்டற்பரன்—திருமால், நாமகள்கொழுநன் - பிரமன், மாலைக்காலம் - இராக்காலம், பூமகள் - திருமகள், புணருமா - புணருமாற (க௯)

இரவிதன்குலத்துமன்னனிளன்கதையுரைத்தவாறும்
தரைசொல்லையாகிசெய்யுஞ்சரித்திரஞ்சாற்றமாறம்
புரிதருமன்பின்மிக்கான்புகலம்பரீடன்றன்னை
அரவணைமாயனேவவாழிகாத்தளித்தவாறம்

இரவி - சூரியன், தரைசொல்—உலகம்புகழ்கின்ற, புரிதரும்—செய்கிற, அரவணை-சர்ப்பசயனம், மாயனேவ - திருமால்செலுத்த, ஆழி - சக்ராயுதம். (உ0)

கருதுசீர்மனுமுன்பெற்றகாவலனிக்குவாகு
மரபின்மாந்தாதாவென்னுமன்னவன்பிறந்தவாறும்
விரைசெய்தார்ப்புயத்தான்மெய்ம்மைமேவரிச்சந்திரப்பேர்ப்
பொருவிலான்புருடமேதம்புகரறப்புரிந்தவர்றும்.

காவலன் - அரசன், இக்குவாகு - இக்ஷ்வாகு, விரைசெய்தார் - வாசனைவீசுகிற பூமாலை, மெய்ம்மை - சத்தியம், பொருவிலான் - ஒப்பில்லாதவன், புருடமேதம்—நரமேதம், புகரற - குற்றமற. (உக)

தாதுகுமலங்கல்வெள்வேற்சகரனென்றுரைக்கும்வேந்தன்
மேதகுபுரவிவேள்விவிரும்பினனிழைத்தவாறும்
பாதலமிறந்தளோர்க்காப்பகீரதன்பணிந்துடல்கால்
மாதவமுயன்றுகங்கைமாநதிகொணர்ந்தவாறும்.

தாதுஉகும் - மகரந்தம்சிந்துகிற, அலங்கல் - பூமாலே, மேதகு - மேன்மையாகிய, புரவிவேள்வி - அசுவமேதயாகம், இழைத்த - செய்த, பாதலம்-பாதாளலோகம், இறந்துளோர்க்கா - மூதாதைகள்பொருட்டு. (௨௨)

வேந்தர்தம்வேந்தனுயமித்திரசகனென்றேனும்
ஏந்தல்கன்மாடபாதனெனும்பெயரடைந்தவாறும்
மாந்தளிரனையமேனிமலர்மகள்கொழுநன்வந்து
சாந்தணிந்தோங்குதிண்டோட்டயாதற்குதித்தவாறும்.

ஏந்தல் - அரசன், மலர்மகள்கொழுநன்-திருமகள்கணவன், (திருமால்) சாந்து-சந்தனம்.

செய்யபங்கயநேர்கண்ணன்றேவர்தஞ்செல்லறீர்ப்பான்
வெய்யவெங்கானிலேகிவிழுத்தவர்க்கபயநல்கி
ஐயிருதலையினனையமர்க்களத்தடர்த்தபின்னர்
வையகமுழுதுங்காத்துறைகுந்தமேயவாறும்.

செய்யபங்கயநேர்கண்ணன் - திருமால், செல்லல் - துன்பம், தீர்பபான்-தீர்க்க, வெய்யவெங்கானிலேகி - மிகக்கொடியவனத்திற்சென்று, விழுத்தவர்க்கு - பெருந்தவத்தினோர்க்கு, அபயம்நல்கி - அபயந்தந்து, ஐயிருதலையினனை - ராவணனை, அமர்க்களத்து - யுத்தகளத்தில், அடர்த்தபின்னர் - கொன்றபிறகு. (௨௪)

விட்டசெங்கதிர்களீரைஞ்ஞூறுடைவிமலன்போற்ற
மட்டவிழலங்கன்மாலைமனுமகன்வழியிற்றோன்றி
எட்டெனுந்திசையுங்காத்தாங்கிலங்குநல்லறிவுவாய்ந்த
நெட்டிலைவேற்கைவேந்தனிம்மரபுரைத்தவாறும்.

விட்டசெங்கதிர்களீரைஞ்ஞூறுடைவிமலன்—சூரியன், போற்ற—வணங்க, மட்டு—தேன், வாசனை, அவிழ் - விரிகிற, வழியில் - வமிசத்தில், எட்டெனுந்திசையுங்காத்து - அஷ்டதிக்கிலுள்ளவரையுங்காத்து. (௨௫)

சந்திரன்றாரையென்னுந்தையலைமணந்துபெற்ற
புந்திதன்மதலைசெங்கோற்புரூரவாப்புகழ்செய்யாறும்
கொந்தவிழலங்கன்மார்வன்கோசிகன்பிறந்தவாறும்
அந்தமில்பரசுராமனவதரித்தருளுமாறும்.

தையலை - பெண்ணை, மணந்து - கூடி, புந்தி - புதன், மதலை - பிள்ளை, புகழ்செய்யாறும் - புகழ்படைத்தவிதமும், கொந்துஅவிழ்அலங்கல் — பூங்கொத்துமலர்கின்ற பூமாலை, கோசிகன் - விசுவாமித்திரன், அந்தமில் - முடிவில்லாத. (௨௬)

மன்னவன்யயாதியிந்தமாநிலம்புரந்தவாறும்
பன்னுமம்மரபின்வண்சீர்ப்பரதன்வந்துதித்தவாறும்
அன்னவன்மரபிலைவராதியர்பிறந்தவாறும்
எந்நிலத்தவரும்போற்றுமெதுமரபுரைத்தவாறும்.

புரந்தவாறும் - காத்தவிதமும், பன்னும் - சொல்லப்பட்ட, அன்னவன்மரபில்— அவன்வமிசத்தில், ஐவராதியர்—ஐவர்முதலானோர், எந்நிலத்தவரும்—எவ்வுலகத்தாரும்.

மகபதிமலரோன்முக்கண்வானவன்வழுத்தமாயன்
புகல்வசுதேவனென்னும்புரவலர்க்கரசும்பொற்பால்
திகழ்மதிவதனச்செவ்வாய்த்தேவகியென்னுமாதும்
அகமகிழ்ந்தன்புகூரவவதரித்தருளுமாறும்.

*மகபதி - இந்திரன், மலரோன் - பிரமன், முக்கண்வானவன் - சிவபெருமான், வழுத்த - துதிக்க, மாயன் - திருமால், புரவலர்க்கரசு - ராஜாதிராஜன், பொற்பால்- அழகினால், திகழ்—விளங்குகிற, மதிவதனம்—பூர்ணசந்திரன்போன்றமுகம், அன்புகூர— அன்புஅதிகரிக்க. (௨அ)

மாதவர்சாபந்தன்னுன்மனமருள்சாம்பனென்போன்
ஓதிருப்புலக்கைபெற்றாங்குவரிநீரிட்டவாறும்
பூதலத்தரசர்போற்றும்புகழ்வசுதேவன்கேட்ப
நாதனையறியுமன்புநாரதனவிற்றுமாறும்.

மனமருள் - மனமருண்ட, ஓது — சொல்லப்பட்ட, உவரி - கடல், நாதனை— இறைவனை (௨௯)

தத்துவமுரைத்தியென்றுதாண்மலர்வணங்கிநின்றாங
குத்தவன்கேட்பக்கண்ணனுளங்தெளிவுறுத்தவாறும்
பைத்தலையுரவிலாடும்பசும்புயறனுதாமம்
மெய்த்தவவமரர்போற்றவிருப்புடனடைந்தவாறும்.

உளம்தெளிவுறுத்தவாறும் - மனதெளிவித்தவிதமும், பைத்தலையரவிலாடும்பசும்புயல் - கண்ணபிரான், தாமம் - பரந்தாமம், அமரர்போற்ற - தேவர்கள்வணங்க. ()

நினைவுறுகலியின்காலநிகழ்செயலுரைத்தவாறும்
வினையுறுபிரளயஞ்சேர்விதமெடுத்துரைததவாறம்
முனிவறுவிண்டுராதன்முத்திபெற்றுயர்நதவாறம்
அனையவன்மதலைபாந்தளருமகமாற்றமாறும்.

நிகழ்செயல் - நடக்குஞ்செய்தி, விண்டுராதன் - பரிக்ஷித்து, அனையவன்மதலை— அவன்மகன், பாந்தள்அருமகமாற்றுமாறும - அரியசர்ப்பயாகஞ்செய்தவிதமும். (௩௧)

நன்மறைவியாதனென்னுநற்றவக்கிழவனுய்ந்து
தொன்மறைபுராணநன்னூல்சுருக்கினன்சொற்றவாறும்
முன்மறைமார்க்கண்டேயன்மொழிபிரளயங்காணுறும்
வின்மறைவில்லாவெய்யோன்விபூதியுற்றியம்புமாறும்.

நற்றவக்கிழவன் - நல்லதவவுரிமையுள்ளவன், ஆய்ந்து - ஆராய்ந்து, சுருக்கினன் சொற்றவாறும் - சுருக்கிச்சொன்னவிதமும், பிரளயங்காணுறும் - பிரளயங்கண்டவிதமும், வில் - ஒளி, வெய்யோன் - சூரியன். (௩௨)

உரைத்தனனுணர்ந்தவாறிங்கொளிபெறுதவத்தின்மிக்க
அருத்தியுற்றுறையுமாசிலந்தணரேயிக்காதை
தெரித்திடுபதின்ஞன்றாயதிதிதுவாதசியிற்கேட்போர்
மிருத்துவைக்கடந்துமேலாம்வீடுபெற்றுவப்பர்மாதோ.

ஒளி - புகழ், அருத்தியுற்றுறையும் - ஆசைகொண்டுவாழ்கிற, அந்தணரே - அழகியந்தட்டிக்கையுடையவரே, இக்காதை - இந்தச்சரித்திரம், பதின்ஞன்றாயதிதி—ஏகாதசி, மிருத்துவைகடந்து - யமனைவென்று, மேலாம்வீடுபெற்றுவப்பர் - மேன்மையாகியமுத்தியடைந்துமகிழ்வர் (௩௩)

*பாயிர முரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௩௩௭.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்.

---

## பத்தாவது

## புராணவளவை யுரைத்த வத்தியாயம்.



கலிநிலைத்துறை.

புகன்றவொன்பதிற்றிரட்டியாம்புராணநல்லளவை
பகர்ந்திடிற்பதினாயிரம்பிரமமாம்பற்பம்
அகன்றவைம்பத்தையாயிரமாயதிவுறத்தும்
திகழ்ந்தசொற்றொடைவைணவத்தளவையைதெரிக்கின்.

புகன்ற - சொல்லப்பட்ட, ஒன்பதிற்றிரட்டியாம்புராணம் - பதினெண்புராணம், பகர்ந்திடின் - சொன்னால். (க)

சாற்றுமூவிருபத்துமூவாயிரஞ்சாரும்
ஏற்றசைவமெண்மூன்றினாயிரமியைந்திருக்கும்
போற்றுபாகவதம்மெனசசொல்லுமிப்புராணம்
ஆற்றல்சேர்ந்தசொற்றொடைபதினெட்டினாயிரமே.

சாற்றும்—சொல்லப்பட்ட, எண்மூன்றினாயிரம்—இருபத்துநாலாயிரம், ஆற்றல்—உறுதி.

நாரதீயமென்றுரைதருநவையறுநன்னூல்
சீரின்மேம்படுமிருபத்தையாயிரஞ்சேரும்
ஏரினன்மிகுமாக்கினேயப்பெயரியைநூல்
பாரினோர்புகழ்பதினையாயிரத்துநானூறே.

நவையறு - குற்றமற்ற, சீரின் - சிறப்பினால், ஏரினால் - அழகினால், பாரினோர்—உலகத்தார். (உ)

மருவுசொற்பெறுமார்க்கண்டேயப்பெயர்மதிநூல்
விரவுமொன்பதினாயிரமுற்றிடும்விரிநத
தரைசொனல்லறஞ்சாற்றியபௌடிகததனிநூல்
உரைசெயேழிரண்டாயிரத்தோடுமைஞ்ஞூறே.

மதிநூல் - அறிவுநூல், தரை—உலகத்தார், சொல—புகழ்கின்ற, நல்லறஞ்சாற்றிய—நல்லதருமங்களைவிதித்த. (ஈ)

பேசுநல்லறிவுறுத்தியபிரமகைவத்தம்
ஆசிலாப்பதினெட்டினாயிரமெனவறைவார்
தேசுலாவியவிலிஙகமென்றுரைத்திடுந்திகழ்நூல்
மாசிலாப்பதினொன்றினாயிரமெனவருமே

பேசு - சொல்லப்பட்ட, நல்லறிவுறுத்திய - நல்லஞானத்தையுண்டாக்குகிற, ஆசிலா—குற்றமில்லாத, அறைவார்—சொல்லுவார், தேசு — ஒளி, திகழ் — விளங்குகிற, மாசிலா - குற்றமில்லாத (ஔ)

நற்றவத்தினர்க்கிதஞ்செயும்வராகமாநன்னூல்
சொற்றிடினிருபத்துநாலாயிரதொகையாம்
கற்றுவல்லவர்நாடொறும்புகழுநற்காந்தம்
உற்றவெண்பத்தோராயிரத்தொடுமொருநூறே.

நற்றவத்தினர்க்கு - நல்லதவஞ்செய்வோர்க்கு, இதம் - நன்மை, சொற்றிடின்—சொன்னால். (சு

வாமனம்பதியினாயிரத்தொகைபெறவயங்கும்
நாமநன்னெறிக்கூர்மமென்றரைபெறாணினூல்
ஏமமன்னியவெழிற்பதினேழினாயிரமாம்
ஆமரும்புகழ்மச்சமீரேழினாயிரமே.

வயங்கும் - விளங்கும், நாமம் - பெயர், நன்னெறி - நன்மார்க்கம், ஏமம் - இன்பம், மன்னிய - நிலைபெற்ற, ஆமரும்புகழ் - அருமையானபுகழுண்டாகிய. (எ)

நீதிதுன்றகாருடமெனும்பெயர்திகழ்நன்னூல்
ஓதுகின்றபதமொன்பதினாயிரமுறுமால்
வேதநுண்பொருள்வெளிப்படச்சொல்பிரமாண்டம்
கோதறும்புகழாறிரண்டாயிரங்குலவும்.

நீதிதுன்று - நீதிசெறிகின்ற, வேதநுண்பொருள் - வேதத்தின் நுண்ணியபொருள், கோதறும் - குற்றமற்ற, குலவும் - விளங்கும். (அ)

உண்ணயங்கொளவுரைத்தநூலெலாம்பதிற்றிரண்டும்
எண்ணுறுந்தொகைநான்குநூறாயிரமிவையும்
நண்ணுறும்பதினெட்டிலுமவின்றவிநன்னூல்
தண்ணறுந்துளவணிபரனசதுமுகற்குரைத்தான்.

தண்ணறுந்துளவணிபரன - திருமால், சதுமுகற்கு - பிரமனுக்கு. (௯)

உந்திநாண்மலருதித்துறைசதுமுகற்குவப்பால்
இந்தநூலினையிசைத்ததென்காரணமென்னின்
அந்தமாகிமற்றிடையினுவானமாமதனுல்
சிந்தைசேருந்வெந்துயர்தவிர்ந்திடவிதுதெரித்தான்,

உந்திநாண்மலருதித்துறைசதுமுகற்கு - பிரமனுக்கு, உவப்பால் - விருப்போடு, வெந்துயர் - வெவ்வியதுன்பம், தவிர்ந்திட - நீங்க, இதுதெரித்தான் - இதனைத்தெரிவித்தான். (௧௦)

இன்னநற்கதைகேட்குநரெழுதுநரிசைப்போர்
பின்னல்வெண்டிரைப்பார்புகழ்பெருந்திருவினராய்
மன்னுகினறவராகியும்வல்வினைமருவார்
நன்னலந்தருமால்பரந்தாமநண்ணுவரால்.

இசைப்போர் - சொல்லுவோர், பெருந்திருவினராய் - பெருஞ்செல்வராய், மால் - திருமால், பரந்தாமம் - பரமபதம் (௧௧)

புகன்றவிக்கதைகேட்குநர்பூசுரராயின்
அகந்தெளிந்தறிவடைந்வராசர்மற்றாயின்
திகழ்ந்தசெங்கதிராமெனப்பகையறத்திகிரி
மகிழ்ந்துமாநிலமுழுவதுமோச்சுவர்மாதோ.

பூசுரர் - பிராமணர், அகம் - மனம், திகழ்ந்த - விளங்குகிற, செங்கதிராமென - சூரியன்போல, திகிரி - ஆஜ்ஞாசக்ரம், ஓச்சுவர் - செலுத்துவர். (௧௨)

வணிகராமெனின்வளந்தருமளகைமன்னவன்போல்
தணிவிலாநிதிபெறுகுவர்சாறுறுபின்னவரேல்
பணிகொடேசல்விடுபான்மைபோற்பாவவெங்குழுவிட்
டணியினுஞ்மிகுந்தவனியில்விளங்குவரன்றே.

அளகைமன்னவன் - குபேரன, தனவலாநிதி - குறைவில்லாதசெல்வம், பின்னவிமேல் - ருத்திரராயின், பணி - பாம்பு, கொள் கொண்ட, தோல்விடுபான்மைபோல் - தோலுரிக்குந்தன்மைபோல, அணியினுன்மிகுந்து - அழகாற்சிறந்து, அவனியில் - பூமியில். (கரு)

பழுதிலிப்புராணத்தினிலொருபதமேனும்
எழுதினோர்கதையிசைக்குநர்கேட்குநரெவரும்
தொழுதகுந்திருமங்கையின்னருணனிசுரப்ப
முழுநலத்தினராகிநன் முத்திபெற்றுறைவார்.

பழுதில் — குற்றமில்லாத, ஒருபதமேனும் - ஒருசொல்லாயினும், திருமங்கை — திருமகள், நனிசுரப்ப - மிகுதியாயுண்டாக. (கசு)

கலிவிருத்தம்

இனைய நூல்கேட்குநர்யாதுவேண்டினும்
மனநிறைவுந்தளிக்கவாமறைகள்வாழ்வோர்
வினையறுதென்புலமேயமேலவா
முனிவரர்விஞ்சையாமுதலினோகவே

மனநிறைந்து - மனமகிழ்ந்து, அளிக்கவா - கொடுப்பார், வாழ்வோர் — இவர்.

கனைத்துவண்டியாதுபாய்க்கண்ணன்மாகதை
மனத்துறவுநர்மகிழ்ந்துகேட்கா
வினைதிருகற்றுறமெய்ம்மையாதியா
நினைதருணபெற்றிவண்நீடுவாழியே

கனைத்து - ஒலித்து, வண்டிமிர - வண்டுகள்பாடுகிற, துழாய - துளவமாலை, மனத்துறவுநர் — நெஞ்சிற்பொருந்தசொல்லுவோர், வினைத்திருக்குஅற்று — வினையின்மாறுபாடொழிந்து, மெய்ம்மை - உண்மை, இவண் - இவ்வுலகில், நீடுவாழி — நீடுவாழ்வாராக (கஎ)

புராணவளவையுரைத்த வத்தியாயம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் — ௬௫.

பன்னிரண்டாங்கந்தம்-முற்றிற்று.

ஸ்ரீமதபாகவதபுராணம்-முற்றிற்று

திருவிருத்தமுழுதொகை—சகூ௭0.

ஸ்ரீகிருஷ்ணசகாயம்

---

அபியுக்தரொருவர்செய்த

நேரிசைவெண்பா.

நம்பனென்றுங்கும்பனென்றுங் காளியொட்டக்கூத்தனென்றும்
தும்பமுனியென்றும்பேர்கொள்வாரோ—அம்புவியில்
மன்னுவலர்புடைசூழ் வாழ்குடந்தையாரியப்பன்
அந்நாளிலேயிருந்தக்கால்